உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சுத்தசைவராகிய பரஞ்சோதிமாமுனிவர்

மொழிபெயர்த்தருளிய

# திருவிளையாடற்புராணம்

இஃதுடன்

திருவிளையாடற் போற்றிக்கலிவெண்பா, திருவாலவாய்த்தேவாரப் பதிகங்கள், மதுரைப்பதிற்றுப்பத்தந்தாதி, திருவாலவாய்த் திருப்புகழ் முதலியனவுஞ் சேர்க்கப்பட்டதை,

ஸ்ரீ ல ஸ்ரீ

## ஆறுமுகநாவலரவர்கள்

மாணாக்கரின் மாணாக்கருமாகிய,

யாழ்ப்பாணம்,

## நா. கதிரைவேற்பிள்ளை அவர்கள்

பரிசோதித்த பிரதிக்கிணங்க,

இதன்விலை  ரூபா— 10



சென்னை:

பூமகள்விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

1913.

சிவமயம்.

# படலவகராதி.



படலவகராதி முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

நூலாசிரியராகிய

# பரஞ்சோதிமாமுனிவர் வரலாறு.



திருமறைக்காடு என்னுஞ் சைவக்ஷேத்திரத்தி லேறக்குறைய 800 வருஷங்களுக்கு முன்னர் சைவவேளாளர் மரபிலவதரித்தருளிய பரஞ்சோதிமுனிவர் என்பவரொருவரிருந்தனர். இவ ரிளம் பருவத்திலேயே சிவநேசம் வளரப்பெற்றுக் கல்வி அறிவு ஒழுக்கங்களிற்சிறந்து விளங்குவாராயினர். இவருக்கு உலக வின்பத்திலிச்சையொழிந்து துறவறத்தில் விருப்ப முண்டாயி னமையால் சைவப்பெரியோர்களையடைந்து, அவர்களுக்குச் சுசுரூஷைசெய்து ஞானநூல்களை யோதிவந்தனர். இவரது தவமுயற்சிக்கு க்ஷேத்திரயாத்திரை முக்கியமாக விருந்தது. பல தலங்களையுந் தரிசித்துக்கொண்டு ஆங்காங்குப் பெரியோர்களது அநுக்கிரகத்தைப் பெற்றுவருகையில் எல்லாக் கலைகளையும் யதாவத்தாக வுணர்ந்து ஞானதேசிகராய்த் திருவாலவாயின்கண் வீற்றிருந்தருளினர். அப்போது ஸ்ரீ மீனாட்சியம்மையார் ஒருநாள் அவரது கனவின்கட் டோன்றி, ஓ குழந்தாய்! "எம்மோடு கூடிய அழகரது திருவிளையாடலைப்பாடு" என்று திருவாய் மலர்ந்தருளினர். உடனே விழித்து அத்திருவருளைச் சிந்தித்துத் தமக்குத் தரிசனந் தந்தருளிய சிவசத்தியையே "சத்தியாய்" என்று முதல்தொடங்கிக் காப்புச் செய்யுள்கூறி, முறையே மற்றைவிஷயங்களைத் தொடங்கி, (உமையோடுகூடிய அழகன் என்னும் பொருளைத்தரும்) சோமசுந்தரக் கடவுளது திருவிளையாடல்களைப் பகுளமாகப் பாடி முடித்துத் "திருவிளையாடற்புராணம்" என்று பேரிட்டு யாவரும் வியக்கும்படி ஸ்ரீ மீனாட்சிசுந்தரேசுவரர்களது திவ்யாநுக்ரகத்தால் சுவாமி சந்நிதானத்தில் அரங்கேற்றி வெளிப்படுத்தியருளினர்; அன்றியும், இச்சைவப்பெரியோர் "திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பா, மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி" முதலிய பிரபந்தங்களுஞ் செய்து

வெளிப்படுத்தினரென்க. இச் சிவஞானச் செல்வரது திருவிளையாடற்புராணம் ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகளது பெரிய புராணத்துடன் இனமாய்ச் சேர்ந்துவிளங்கும் பெருமை பெற்றிருக்கின்றது. இவ் விருபுராணங்களும் சைவத்துக்கு இரண்டுகண்ணுயுள்ளன. ஆசாரிய பக்தியையும், நாயன்மார்களது பக்தியையும், பெரியபுராணம் அடியார்களுக்கு விளைவித்தல்போல ஸ்ரீ சிவபெருமானிடத்து அன்பை விளைவிக்குநூல் இத் திருவிளையாடலேயாம். இவ்வரியநூலைச் சைவர்களது தவப்பயனுய்த்தோன்றி யருளிச்செய்த பெரியோனது திருவடிகளைச்சிந்தித்து யாம் உய்வோமாக.

திருச்சிற்றம்பலம்.

---

உ

கணபதிதுணை.

## பரஞ்சோதிமாமுனிவர்

அருளிச்செய்த

மதுரை யறுபத்துநான்கு திருவிளையாடற்

# போற்றிக்கலிவெண்பா.

காப்பு.

நாற்றிக்கும் போற்று நதிமதுரைச் சொக்கரையாம்
போற்றிக் கலிவெண்பாப் போற்றிசெயச்—சீற்றமதன்
றைக்குஞ் சரமுகத்தான் சாயவிழித் தோனுதவு
கைக்குஞ் சரமுகத்தான் காப்பு.

நூல்.

பூமேவு கற்பகநா டாளும் புரந்தரனுர்
தீமை விருத்திரனைச் செற்றபழி போமாறு
பொற்கமலந் தோய்ந்து விமானமிசைப் பூசிப்ப
நற்கருணை செய்த நலம்போற்றி—நற்றவத்தோ
ரீசனுர்ச் சாத்து மெழின்மலரைக் கால்சிதைத்த
வாசவனுர் வெள்ளானை மண்ணிழிந்து—பூசனைசெய்
தல்லற் படுசாபந் தீர வருள்சுரந்த
மல்லற் கருணை வளம்போற்றி—நல்வணிகன்
கண்டுவெந்து கூறக் கனவினருட் சித்துருவங்
கொண்டுவெந்து காடெறிந்து கோநகரங்—கண்டிடெனக்
கொத்தலு நிம்பக் குலசேகரனையெதிர்
சித்தரா யாட்கொண்ட சீர்போற்றி—பத்தி
மலையத் துவசன் மகந்தன்னின் மூன்று
முலையுத் தமியாய் முளைத்துக்—கலைமுழுதுங்
கற்றுமுடி சூடிக் கயற்கண்ணி வெங்கலியைச்
செற்றுலகை யாண்டிருந்த சீர்போற்றி—கொற்றமணித்
தேரேறி யெட்டுத் திசைவென்று நந்திகணப்
போரேறி வென்றெதிர்க்கும் போதிலொரு—வாரேறு
கொங்கை மறைந்தமதிக் கொம்பைமணஞ் செய்துமுடி
மங்கலஞ் செய்த வளம்போற்றி—யங்கனக
மன்றாடல் வேட்டவிரு மாதவர்க்கும் வெள்ளிமன்று
ணின்றாடிக் காட்டு நிலைபோற்றி—குன்றமென
முன்ன மலைபசித்தீ மூளுங் குறள்வீரற்
கன்னமலை யீந்த வருள்போற்றி—பின்னுமவன்
வெய்யபசிக் கன்னக் குழியுநீர் வேட்கைக்கு
வையையுந் தந்த வரம்போற்றி—யையைதனை

# போற்றிக் கலிவெண்பா.

யீன்றாள் கடலாட வேண்ட வெழுகடலுஞ்
சான்றா வரநிறுத்துந் தாள்போற்றி—வான்றாழ
வாழுமலை யத்துவச மன்னனைக்கூஉய்த் தேவியொடு
மாழி படிவித்த வருள்போற்றி—வேள்விவரு
வில்வளைக்கை நங்கை விரலுக் கிரகுமரச்
செல்வனைப் பெற்ற திறம்போற்றி—செல்வனுக்கு
மன்றன் முடித்து வளைசெண்டு வேல்கொடுத்து
வென்றிமுடி சூட்டும் விறல்போற்றி—வன்றிறல்வேல்
வேலை சுவற விடுத்துக் கிரகுமரன்
ஞாலம் புரந்த நலம்போற்றி—வேல்வலக்கைச்
சேயனைய வுக்ரன் றிகிரியெறிந் திந்திரன்போர்
சாயமுடி சிந்து சயம்போற்றி—யாயவரி
வண்டலம்பு தார்க்குமரன் மேரு மணிமுடிமேற்
செண்டெறிந்து வைப்பெடுத்தச் சீர்போற்றி—பண்டொருநா
ளாறறிய வந்தணருக் காதி மறைப்பொருளைத்
தேற விரித்த திறம்போற்றி—யீறடைந்த
தென்னன் குமரன் றிருமுடிக்கு வாணிபராய்
நன்மணிகள் விற்ற நலம்போற்றி—நன்னகர்மேல்
வென்றி வருணன் விடுத்த கடல்பருகத்
துன்றுமுகி னான்மேவுஞ் சூள்போற்றி—கன்றியவன்
வான்மாரி யேழும் விடுப்பமழை நான்கும்போய்
நான்மாட மான நலம்போற்றி—தேனிதழி
வைத்த முடிமறைத்து மாடநக ரெங்கெங்குஞ்
சித்தரா யாடியருள் சீர்போற்றி—சித்தராய்
மன்னவன் கைக்கரும்பை வாங்கிக்கல் யானைக்குத்
தின்ன வளித்த திறம்போற்றி—தென்னவன்மேல்
வெங்க ணமணர் விடுத்த களிற்றைநர
சிங்கசரந் தொட்டெய்த சீர்போற்றி—தொங்குதிரை
மூப்பிளைய காளை முலையுண் குழவியெனக்
கோப்பருவங் கொண்ட குணம்போற்றி—மாப்பெரியோர்
தேறு நடந் தன்னையொரு தென்னன் றனக்கிரங்கி
மாறிநடஞ் செய்த மலர்போற்றி—யாறடைந்தோர்
வஞ்சி யுயிரிழப்ப நாடு மறப்பழியை
யஞ்சி வெளிசெய்த வறம்போற்றி—வஞ்சமனத்
தாயைப் புணர்ந்தமகன் றந்தை தனைவதைத்த
தீயபழி தீர்த்தவருட் சீர்போற்றி—தாயனைய
வாசான் மனைவிதன்மே லாசைவைத்த மாணவனைக்
கூசாமற் கொன்ற கொலைபோற்றி—மாசமணர்
வல்வித்தை செய்துவிடு வன்னஞ்ச வாளரவைக்
கொல்வித்த நல்ல குணம்போற்றி—வல்லமணர்
கூரியகோட் டாவை வரவிடுப்பக் கொல்லேற்றால்
வீரியஞ் சாய்த்த விறல்போற்றி—தாரணியில்
வெந்திறல்வேன் மீனவன்முன் மெய்க்காட்டிட் டன்புடைய

மந்திரியைக் காத்த வளம்போற்றி—நொந்திரந்த
கொற்கையர்கோ வேந்தன் குறையிரப்பச் சித்தராய்ப்
பொற்குவைவை தந்த புகழ்போற்றி—நற்குவளை
மையேற்ற வாட்கண் வணிகமட வார்க்குவளை
கையேற்றி மாலேற்றுங் கைபோற்றி—மைதீரப்
பட்டமங்கைப் பாறையுறு நீத்தாறு பைந்தொடியார்க்
கட்டசித்தி யீந்த வருள்போற்றி—கட்டவிழார்த்
தாரார்க் கரையிரவிற் ருழ்திறந்து காப்படைத்துச்
சீரார் விடைபொறித்த சீர்போற்றி—யாரானை
மூண்டுபொருந் தென்னன் முனைப்போர்க்குத் தண்ணீர்தந்
தாண்ட கருணை யரம்போற்றி—யீண்டயன்மால்
உன்மனத்துக் கெட்டான் வடிவெடுத்துப் பொன்னனையா
ணன்மனையிற் சென்ற நடைபோற்றி—தென்னனெதி
ராயிர வாம்பரிக்கோ ராடவனை யோடையினில்
வீய வலந்திரித்த வேல்போற்றி—தூயவள
மொல்கு மடியார்க் குலவாத் தனிக்கோட்டை
நல்குங் கருணை நலம்போற்றி—நல்வணிகன்
மாமனென வந்து வழக்குரைத்து ஞாதியர்பாற்
சேமநிதி வாங்கியருள் சீர்போற்றி—கோமகனை
யாட்டிய வன்பழிதீர்த் தாண்டச் சிவலோகங்
காட்டி யருள்கருணைக் கண்போற்றி—பாட்டிசைக்குப்
பாண னடிமையெனப் பாடி விறகெடுத்த
நாண மிலாத நடைபோற்றி—பாணனுக்குச்
செந்தமிழாற் றீட்டுந் திருமுகத்தைச் சேரனிடைத்
தந்தருளிச்செய்த தனம்போற்றி—வந்திறைஞ்சி
யற்பொழியு மாரிவெள்ளத் தாழ்ந்திசைக்கும் பாணனுக்குப்
பொற்பலகை யிட்டபுகழ்போற்றி—கற்றதனுன்
மாட்சிபெறு பாடினியை வாதுக்குத் தோற்றுடன்
ருேட்சுமையாத் தாங்குவித்த சூள்போற்றி—காட்சிபெற
மாயாமல் வெஞ்சுரத்து வல்லேனக் குட்டிகட்குத்
தாயாய் முலைகொடுத்த தாய்போற்றி—வீயாத
வேனமிரண் டாறனையு மீராறு மந்திரியா
மீனவனுக் கீந்த விறல்போற்றி—மானவலி
யெய்த்தெளிய ஞன விரும்புட் குபதேசம்
வைத்துவலி தந்த வரம்போற்றி—சித்தநெகிழ்
பத்தியினுற் சூழ்ந்துவழி பாடுசெய்யு நாரைக்கு
முத்தி கொடுத்த முறைபோற்றி—சித்தரணி
கோளரவு நான்மாடக் கூடலை யாலவாய்
வாளகிரி போல்வளைந்த மாண்போற்றி—கோளமரிற்
சுந்தரப்பே ரம்பெய்து சோழன் கடற்சேனைக்
கந்தரா டீந்த வருள்போற்றி—செந்தமிழ்நூ
லாய்ந்தவர் கல்வி யளந்தறியும் பொற்பலகை
யீந்த கருணை யிசைபோற்றி—வேந்தனிடைச்

சொற்சுவையாற் பாட லெடுத்துத் தருமிக்குப்
பொற்கிழி தந்த புகழ்போற்றி—நக்கீரன்
மெய்வெந் தழற்கண்ணால் வெந்தோடை வீழ்ந்தோனைக்
கைதந்தே றிட்ட கரைபோற்றி—மைதவிர
வேதமுறுங் கீரற் கியற்றமிழைத் தென்மலய
மாதவனாற் றேற்றுவித்த மாண்போற்றி—போதணிந்த
மங்கல மண்டபத்து வந்தூமன் சங்கத்தார்
சங்கையறத் தேற்றுந் தமிழ்போற்றி—சங்கையாய்ப்
போனவிடைக் காடன்பின் போய்ப்பாடல் கேட்டரசன்
மானநிதி நல்குவிக்கு மாண்போற்றி—மீன்மகனாய்ச்
செங்கையொரு நான்குடைய திண்மீன் பிடித்துவலை
மங்கையை வேட்ட மணம்போற்றி—துங்கமறை
யான்றதிரு வாதவூ ரந்தணருக் கைந்தெழுத்தின்
மூன்றுபொரு ளேற்று முறைபோற்றி—தேன்றதும்பும்
வேம்புநறுந் தாரான்முன் வெவ்வாய் நரித்திரளை
வாம்பரியாத் தந்த வரம்போற்றி—வாம்பரிக
ணின்ற பரிக ணிணம்பிடுங்கி யூளையிட்டுத்
தின்று நரியாகுஞ் செயல்போற்றி—யன்றொருத்திக்
காளாய் முதுகி லடிபட்டு மண்சுமந்து
தாளாண்மை செய்த சயம்போற்றி—கோளமணர்
வீறுகெடக் கூனிமிர்த்து வெப்பொழித்துப் பாண்டியனை
நீறுபுனை வித்த நிலைபோற்றி—சீறமண
ரங்கனமும் வேகவதி யாறுந் தமிழறிய
லெங்கழுவி லேற்றும் விறல்போற்றி—யங்கொருத்தி
மன்றற்குச் சான்றாக வன்னி கிணறிலிங்க
மன்றழைத்துக் காட்டு மருள்போற்றி—யன்றிறைவ
னாற்றிய வாட லறுபத்து நான்கனையுஞ்
சாற்றிய தென்முனிவன் றாள்போற்றி—சாற்றிய
வண்ணங்கேட் டர்ச்சித்த மாமுனிவர் தாள்போற்றி
தண்ணங் கயற்கண்ணி தாள்போற்றி—யண்ணலருள்
போற்றி மதுரைநகர் விண்ணிழிந்த பொற்கோயில்
போற்றி கருணைமுகப் போது.

திருவிளையாடற் போற்றிக்கலிவெண்பா முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருவாலவாய் என்கிற மதுரையில்

எழுந்தருளியிருக்கும்

கடவுளது

# திருவிளையாடற்புராணம்.

காப்பு.

சத்தி யாய்ச் சிவமாகித் தனிப்பர
முத்தி யான முதலைத் துதிசெயச்
சுத்தி யாகிய சொற்பொரு ணல்குவ
சித்தி யானைதன் செய்யபொற் பாதமே.

(இ-ள்.) சத்தியாய்-சத்தியாகியும், சிவமாகி-சிவமாகியும், தனிப்பரமுத்தியான - ஒப்பற்ற பரமுத்திசொரூபமாகியும் விளங்கும், முதலை - முதற்பொருளை, துதிசெய - துதிசெய்வதற்கு, சித்தியானைதன் - யானைமுகங் கொண்டிருக்குஞ் சித்தி விநாயகருடைய, செய்யபொற்பாதம் — செவ்வியபொன்போன்ற திருவடிகள், சுத்தியாகிய-பரிசுத்தமாகிய, சொற்பொருள் - சொல்லையும் பொருளையும், நல்குவ-பிரஸாதிப்பன். எ—று.

(விநாயகர்துதிக்குக்காரண முணர்த்துவது.)

நூலாசிரியர் தாம்தொடங்கிய விந்நூல் முட்டின்றி யினிது முடியும்பொருட்டு, மேற்செய்யுளைக் கூறினாரென்க. விநாயகக்கடவுளை யொருகாரியந்தொடங்குவோர், முதற்கண்வழிபடவேண்டியதெனவும் அங்ஙனம் வழிபடாதபோது அவர் தொடக்குங் காரியம் தடைபடத்தக்கதெனவும், அவ்விநாயகக்கடவுளுக்கு, ஸ்ரீ சிவபெருமான் பூர்வம் வரமருளிச்செய்தனரென்க. அவ்வரம் தம்மையீறாகவுந் தொடருமாற்றலுடைய வாய்மைப் பாடுடையதென்பதைத் தா

மியற்றிய திரிபுரசங்காரகாலத்தில் வெளியாக்கின ரப்பெரியபெருமானென்றறிக. திரிபுர சங்காரகாரியம் தாம் தொடங்குவதன்முன்னர், விநாயகக்கடவுளைச்சிவபிரான்வழிபடாமையால் அது விநாயகமூர்த்தியால் விக்கினஞ்செய்யப்பட்டதென்க. இதனை "முப்புரமெரிசெய்தவச்சிவனுறைரதமச்சதுபொடிசெய்த வதிதீரன்" என்னுஅமுதவுரை வெளிப்படுத்தியவாறறிக. தம்மைநினையாதவர்களுக்குவிக்கினங்களையுண்டுபண்ணுகின்றவர் என்பதுவிளங்கவே விக்கினேசுவரர்என்னுந் திவ்யநாமந்தாங்கினர் மூத்தபிள்ளையாரென்க. தம்மைநினைத்தவர்களுக்கு விக்கினங்களைப் போக்குபவரென்பதும் அதற்குப்பொருளாம். எங்ஙனமெனின், மாதாவினது கர்ப்பவாசஞ்செய்து பிறத்தலாகிய துர்வாசமின்றி அநசூயையென்னுந் தாயினதுபுஷ்பாஞ்சலியினின்றுஞ் சிசுவாகக் கீழேகுதித்து விளையாடிய (சிவனாரது அமிசாவதாரமூர்த்தியாகிய) முனிவரைத் துர்வாசர் என்று உண்மை நூல்கள் கூறுமுறைமை கண்டறிக. துர்வாசஞ்செய்யாதவரைத் துர்வாசரென்றதுபோல, விக்கினங்களைத்தடுப்பவரை விக்கினேசுவரரென்றிடுதலமைந்தவாறறிக. சிவனார்பிதாவும், விநாயகர் புத்திரருமாயிடுதல் நூல்வழக்காகவும், பிதாவுக் கிடர்விளைத்தல் பிள்ளைக்கியையுமா றெங்ஙனமெனின், நன்றுகடாயினாய். பிதாபிள்ளையென்றது அருளுடகமென்றறிக. விநாயகர்என்ற திவ்யநாமத்தானே தனக்கொரு நாயகரில்லாதவரென்று பெறப்படும் அர்த்தவைபவ முணர்ந்தார்க்குச் சிவனுக்குப் பிள்ளையுண்டென்பதும், விநாயகருக்குப் பிதாவுண்டென்பதுமாகியஇரகசியம் வெளிப்படுமென்க. "மைந்தர்மனைவியில்லா னெவனவன் சஞ்சலமிலான் முத்திதரும் பரசிவனெனத்தகுமே" என்ற மேலோர் திருவாக்கினை யீண்டுய்த்துணர்க. பூவும்-பூவினதுநிறமும், பூவினதுமணமும்போலச் சிவமும், சிவபத்தினியும், சிவகுநுவுமெண்ணப்படுதல் சைவநூற்றுணிவாகையால், அவர்மாட்டுயர்வு தாழ்வுகள் கற்பித்தல் கூடாதென்க. பூ-பூவின்வண்ணம், பூவின்மணம் என்பவற்றின் சம்பந்த முணர்ந்தார்க்குப் பிதா-மாதா-புத்திரன் என்று சிவசக்தி கணபதிகளைக் கூறுமுறைமை யொரு விரோதத்தையும் பயவாதென்க. ஒரு பொருளே மூன்றாகப் பிரஸ்தாபிக்கப் படுதலுயிர்கண்மாட் டுண்டாகத் தக்கபயனை யுத்தேசித்தே யாகையால் அதுபரப்பிரயோசனங் குறித்ததென்றாயிற்று. தன் பொருட்டொன்றும் பிரஸ்தாபிக்கப்படு மேதுவில்லாதது அப் பரம்பொருளென்னுந் துணிபினையதென் றுணர்வார்க்குப் பிதாவுக்குப் பிள்ளையிடர் விளைத்தல் யாங்ஙனமென்றெழு மாசங்கைக்கெளிதினிறையுண்டாகிநலந்தருமென்க. "இமைப்பொழுது முபகார மல்லாலொன்றை

யியக்காநிர்க்குணக்கடலே" என்றதுமீண்டுப் பிரமாணமாயதென் க. இதனால், பிதாவாயிருந்ததும் பிள்ளையாயிருந்ததும்இரண்டுதனித்தபொருள்களல்லவென்று துணிவது மரபாயினவாறறிக. உலகில் மாதா, பிதா, பிள்ளையென்று விவகார முண்டாயிருத்தல் மூன்று சரீரங்களிலுங் கன்மத்துக்கீடாக மூன்றுயிர்களுலாவு மிருப்பு நோக்கியாம். சிவசத்திகணபதிகள் தனித்தனி மூன்றுயிர்களல்ல. நின்மல சேதனமாகிய வொன்றுதானே மூன்றுயிருத்தலே மேலே பூ-அதன்வண்ணம் - அதன்மணமென்பவற்றால் விளக்கியதே போதும், சச்சிதாநந்தமென்பதும் இதுவேயாம். பிதாவாயிருந்தநுக்கிரகித்ததும், பிள்ளையாயிருந் திடர்விளைத்ததும், உயிர்களது பிரயோசனங்கருதியென்று வெளிப்பட்டமையால், பிதாவாகிய சிவன் பிள்ளையாகிய கணபதிக்கு அருளியதும், பிள்ளையாகிய கணபதி பிதாவாகிய சிவனுக்கிடர்விளைத்ததும்நாடகமென்பதேசித்தம். கணபதியை வழிபட்டோர்க்கு இன்பமும், வழிபடாதோர்க்குத் துன்பமும் பிராப்தமாயிடுதலைத் தெரிவித்தலே யிதன்முடிவாயிற் றென்றறிக.

என்னை? கணபதியையே முதலில் வழிபட வேண்டியதற்காவசியகமெனின்? கூறுதும். வேதம் பிரமாணம். அதிற்போந்த பிரமேயம் சிவம். இச்சிவத்தை முதலிடைகடைகளிலவ்வேதம் பிரகாசப்படுத்துகின்றது. உபக்கிரமத்தில் ஓம் என்று தொடங்கியது. ஓம் என்பது பிரணவம் என்று பெயர்பெறும். இதன்சொரூபமே விநாயகக்கடவுளென்பதாம். வேதத்தின் முதலெழுத்து விநாயகரது சொரூபமாதலே அவரது திருமுகமண்டலந்தானேயுணர்த்தும். அதனையே யானைமுகமென்று கூறுவர் பெரியோரென்க. பிரணவத்தின் வரிவடிவை முதற்கண்ணறிந்திடல் மரபாதலால், வாசகமாகிய வதன்வாச்சியப்பொருள் கஜாநநமூர்த்தியென்பது சித்தித்தது. இதுபற்றியே கணபதியை முதலில் வணங்க வேண்டியது என்னும் மரபை யுலகங் கைக்கொண் டநுட்டித்து வருகின்றது. இதனையே கணபதியாகிய வவருக்குச் சிவபிரான் அருளினரென்று உண்மை நூல்கள் கூறியபடியாம். சிவ சூநுவாகிய விவர் பிரணவமுதல்வராயினரெனின், அப்பிரணவஞ்சிவனையுணர்த்துமாறின்றேயெனின், கஜமுகக் கடவுளைத் தம்மில் வேறாக வுடையராகாத சிவபரஞ்சுடர் அப்பிரணவத்துக்கு வேறு பொருளாயிடுதல் சாலாதென்க. இச்சிவபரஞ்சுடரையே ஓங்காரப்பொருளென்று வேதங் கூறியதென்க. "அஸ்து ஸதாசிவோம்" என்றதே அதுவாம். இச் சிவத்தோடபேதமாய்ச் சத்தியென்று விளங்கும் (விநாயகரது) தாயைஉமை என்று வேதங்கூறி "உமாஸஹாயம்" என்றுசிவத்தைத்துதிக்கும். அ-உ-ம்

என்னும் பிரணவம் உம என்றபோது உ-ம்-அ என்றுதிரிந்துவிளங்கும். இதனால் விநாயகரும், சிவமும், சத்தியும் பிரணவமாகியபிரம சொரூபிகளாயிடுதலமையும். அப்பிரமம், இம்மூவரோடுமபேதமாய் விளங்குஞ் சுப்பிரமணியம் என்னுந்தெய்வநாமந்தாங்கி "ஸுப்ரஹ்மண்யோம்" என்று மூன்றுதரம் வேதங்கூற விளங்காநிற்கும். பிரமம் என்று வேதங்கள்கூறும் பொருள் சுப்பிரமணியக் கடவுளென்றே துணியப்பட்டமையால், தந்தையாகவும்,தாயாகவும், மக்களிருவராகவுஞ் சிவபரஞ்சுடரொன்றே நாடகமியற்றி யுயிர்களைக்காத்தருளு மியல்பினதாயிற்றென்க. இதனால், விநாயகரை வழிபடுதல் சிவபரஞ்சுடர் முதலிய யாவரையும் வழிபடுதலாகவுங் கொள்ளப்படுமென்க. இவ்வுண்மை வெளிப்படவே"சித்தியானை" என்றுவிநாயகக்கடவுளை வழிபட்டா ரிந்நூலாசிரியரென்க. யானை யென்றமையால், பிரணவ சொரூபியென்பது சித்தித்தது. சித்திவிநாயகர் என்பதுதலவிநாயகரது, திருநாமமாகிய வாறறிக. எடுத்தகாரியம் இனிது சித்திக்கச்செய்யும் விநாயகரெனலு மொன்று.—விரிக்கிற்பெருகும்.

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

# மதுரைக்காண்டம்.

## பாயிரம்.

### வாழ்த்து.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மல்குகவேதவேள்வி வழங்குகசுரந்துவானம்
பல்குகவளங்களெங்கும் பரவுகவறங்களின்ப
நல்குகவுயிர்கட்கெல்லா நான்மறைச்சைவமோங்கிப்
புல்குகவுலகமெல்லாம் புரவலன்செங்கோல்வாழ்க. (௧)

### நூற்பயன்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திங்களணிதிருவால வாயெம்மண்ண
றிருவிளையாட்டிவையன்பு செய்துகேட்போர்
சங்கநிதிபதுமநிதிச் செல்வமோங்கித்
தகைமைதருமகப்பெறுவர் பகையைவெல்வர்
மங்கலநன்மணம்பெறுவர் பிணிவந்தெய்தார்
வாழ்நாளுநனிபெறுவர் வானாடெய்திப்
புங்கவராயங்குள்ள போகமூழ்கிப்
புண்ணியராய்ச்சிவனடிக்கீழ் நண்ணிவாழ்வார். (௨)

## கடவுள்வணக்கம்.

### சிவபெருமான்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வென்றுளேபுலன்களைந்தார் மெய்யுணருள்ளந்தோறுஞ்
சென்றுளேயமுதமூற்றுந் திருவருள்போற்றியேற்றுக்

(௧) நான்மறைச்சைவம் என்றது, வேதம் - உடலும், ஆகமம் - உயிருமாதலின். இதனை "வேதாந்தத்தெளிவாஞ் சைவசித்தாந்த" மென்னுஞ் சிவப்பிரகாசச் செய்யுளானுணர்க.

(௨) திருவிளையாட்டு - இப்பெயர் தன்னை யுணர்த்துதற்குத் தானமாகிய நூல்மேனிற்றலால். தானியாகுபெயர். சங்கநிதி - சங்கவடிவாகவும், பதுமநிதி - தாமரைவடிவாகவு முள்ள நிதிகள். இவை எடுக்க எடுக்கக் குறைபடாத் தன்மையன. வந்து - செய வெனெச்சத்திரிபு.

குன்றுளேயிருந்துகாட்சி கொடுத்தருள்கோலம்போற்றி
மன்றுளேமாறியாடு மறைச்சிலம்படிகள்போற்றி. (௩)

**சிவசத்தி.**

மேற்படி - வேறு.

சுரும்புமுரல்கடிமலர்ப்பூங் குழல்போற்றியுத்தரியத் தொடித்தோள்போற்றி, கரும்புருவச்சிலைபோற்றி கவுணியர்க்குப்பால்சுரந்த கலசம்போற்றி, யிரும்புமனங் குழைத்தென்னை யெடுத்தாண்டவங்கயற்க ணெம்பிராட்டி, யரும்புமிளநகைபோற்றி யாரண நூபுரஞ்சிலம்புமடிகள்போற்றி. (௪)

**பரசிவம்.**

கலிநிலைத்துறை.

பூவண்ணம்பூவின்மணம்போலமெய்ப்போதவின்ப
மாவண்ணமெய்கொண்டவன்றன்வலியாணைதாங்கி
மூவண்ணறன்சந்நிதிமுத்தொழில்செய்யவாளா
மேவண்ணலன்ஞன்விளையாட்டின்வினையைவெல்வாம். (௫)

**சிற்சத்தி.**

அண்டங்களெல்லாமணுவாகவணுக்களெல்லா
மண்டங்களாகப்பெரிதாய்ச்சிறிதாயினுனு
மண்டங்களுள்ளும்புரம்புங்கரியாயினுனு
மண்டங்களீன்றுடுணையென்பரறிந்தநல்லோர். (௬)

---

(௩) மன்று - வெள்ளியம்பலம்.

(௫) மெய் - போதம் - இன்பம் - உண்மை, அறிவு, ஆனந்தம். எனவே, சச்சிதாநந்தம் என்பது பொருள். வலியாணை - சத்தி வல்லமை. மூவண்ணல் - மூன்று அண்ணல், பிரமன் - விட்டுணு- உருத்திரன். சந்நிதி - சத்திசங்கற்பரூபம். முத்தொழில்-சிருஷ்டி, திதி, சங்காரம். வாளாமேவண்ணல் - தத்துவங்களையும், தத்துவக் கர்த்தாக்களையுங் கடந்துநின்ற பரசிவம். வாளா - இடைச்சொல். இது, சும்மாவென்னும் பொருள்மேல் நின்றது. வெல்வாம்-உளப்பாட்டுத்தன்மைப் பன்மை வினைமுற்று. என்னைபடிப்போரையுங் கேட்போரையுந் தன்னெடுபடுத்திக்கூறலின்.

(௬) பெரிது, சிறிது-என்பவற்றிற்கு அளவையை, தோன்று வினைமுதலாகக்கொள்க. உள், புறம்பு - இவை உயிர்களின்மேல் நிற்றலால், இடவாகுபெயர்கள். துணை - பண்பாகு பெயராய்ப் பண்பின்மேல் நின்றது.

### சோக்கலிங்கமூர்த்தி.

கலிவிருத்தம்.

பூவிஞயகன் பூமகஞயகன்
காவிநாயக ஞதிக்கடவுளர்க்
காவிநாயக னங்கயற்கண்ணிமா
தேவிநாயகன் சேவடியேத்துவாம். (எ)

### அங்கயற்கண்ணம்மை.

அறுசீரடி ஆசிரியவிருத்தம்.

பங்கயற்கணரியபரம் பரனுருவேதனக்குரிய படிவமாகி, யிங் கயற்கணகனுலக மெண்ணிறந்தசராசரங்களீன்றுந்தாழாக், கொங் கயற்கண்மலர்க்கூந்தற் குமரிபாண்டியன்மகள்போற் கோலங்கொ ண்ட, வங்கயற்கணம்மையிரு பாதப்போதெப்போது மகத்துள் வைப்பாம். (அ)

### சபாநாதர்.

உண்மையறிவானந்த வுருவாகியெவ்வுயிர்க்கு முயிராய்நீரின், றண்மையனல் வெம்மையெனத் தனையகலாதிருந்துசரா சரங்களீ ன்ற, பெண்மையுருவாகியதன் ஞனந்தக்கொடிமகிழ்ச்சி பெருக யார்க்கு, மண்மையதாயம்பலத்து ளாடியருள்பேரொளியை யகத் துள்வைப்பாம். (கூ)

---

(எ) ஆவிநாயகன் என்றது—பிரமன்முதலிய தேவர்கட்கெல் லாஞ் சுதந்தரமின்மையும், தனது சுதந்தரசத்தியால் குண்டலிசத் தியின் வழியாய்ப் பிராணனுய் நின்று, அக்கரங்களைக்கொண்டுமூர் த்திகளைச் செலுத்துந் தன்மையுந் தோன்றற்கு. ஆவிநாயகன், தேவிநாயகன் என்பவை, ஒருபொருண்மேல் வந்த பலபெயர்கள். தேவி-விளையாட்டுடையவள்.

(அ) பங்கயன் - என்பத னிறுதியில் தொக்குநின்ற வும்மை திருமால்மேனிற்றலால், இறந்ததுதழீஇய எச்சம். கொங்கை என் பது - கொங்கய் எனப்போலியாயிற்று. அகம் - உள்ளிடம். இது மனத்தின்மேனிற்றலால் இடவாகுபெயர்.

(கூ) ஆகி, ஆய், என வேறு பலவடுக்கிய வினையெச்சங்கள், பெருகவென்னும் வினையெச்சத்தின் முடிபாகிய, ஆடியென்னும் எச்சத்தின் முதனிலையைத் தனித்தனி கொண்டன. தன்ஞனந் தக்கொடி - சிவகாமவல்லி. தான் - சிவம். ஆனந்தம் - காமம். கொடி - வல்லி. யார்க்கும் என்றது—விஞ்ஞானகலர், பிரளயா கலர், சகலர் என்னும் மூவகையணுக்கட்கும் என்றபடி.

### சோமசுந்தரக்கடவுள்.

சடைமறைத்துக்கதிர்மகுடந் தரித்துநறுங் கொன்றையந்தார் தணந்துவேப்பந், தொடைமுடித்துவிடநாகக் கலனகற்றிமாணிக் கச் சுடர்ப்பூணேந்தி, விடைநிறுத்திக்கயலெடுத்து வழுதிமருமக னாகி மீனநோக்கின், மடவரலைமணந்துலக முழுதாண்ட சுந்தரனை வணக்கஞ்செய்வாம். (௧௦)

### தடாதகைப்பிராட்டியார்.

செழியர்பிரான்றிருமகளாய்க் கலைபயின்றுமுடிபுனைந்து செங் கோலோச்சி, முழுதுலகுஞ்சயங்கொண்டு திறைகொண்டுநந்திகண முனைப்போர்சாய்த்துத், தொழுகணவற்கணிமணமா லிகைசூட்டித் தன்மகுடஞ் சூட்டிச்செல்வந், தழைவுறுதன்னரசளித்த பெண்ணர சியடிக்கமலந் தலைமேல்வைப்பாம். (௧௧)

### வெள்ளியம்பலவாணர்.

பொருமாறிற்கிளர்தடந்தோ ளொருமாறன்மனங்கிடந்தபுழுக்கமாற
வருமாறிற்கண்ணருவிமாறுதுகளிப்படையமண்ணும்விண்ணு
முருமாறிப்பவக்கடல்வீழ்ந்தாசலெனத்தமொறியுழலுமாக்கள் [ம்.
கருமாறிக்கதியடையக் கான்மாறிநடித்தவரைக் கருத்துள்வைப்பா

### தக்ஷிணாமூர்த்தி.

கல்லாலின்புடையமர்ந்து நான்மறையாரங்கமுதற் கற்றகேள் வி, வல்லார்களுல்வருக்கும் வாக்கிறந்தபூரணமாய் மறைக்கப்பா லா, யெல்லாமாயல்லதுமா யிருந்ததனையிருந்தபடி யிருந்துகாட்டி ச், சொல்லாமற் சொன்னவரை நினையாமனினைந்துபவத் தொடக் கைவெல்வாம். (௧௩)

### சித்திவிநாயகக்கடவுள்.

உள்ளமெனுங்கூடத்திலூக்கமெனுந்தறிநிறுவியுறுதியாகத்
தள்ளரியவன்பென்னுந்தொடர்பூட்டியிடைபடுத்தித்தறுகட்பாசக்

---

(௧௦) மீனநோக்கின்மடவரல்—மீனாட்சி. மீனம் - மீன். நோக்கு - கண்.

(௧௨) புழுக்கமாற என்றது-பாதநூற்றுறையிற் சென்ற பாண் டியன், அதனாற்றன்கால்கள் வருந்தியபோலச், சிவபெருமான்திரு வடியும் வேசற்று வருந்துமேயென்று மனம் புழுங்கினமையை.

(௧௩) நான்மறை-இருக்கு, எசுர், சாமம், அதர்வணம். ஆறங் கம்-சந்தசு, கற்பம், வியாகரணம், சிக்ஷை, சோதிஷம், நிருத்தியம். நால்வராவார்-சனகர், சனந்தரர், சனாதரர், சனற்குமாரர்.

(௧௪) ஊக்கம் - மனவெழுச்சி. அன்பென்றது - சிவபுண்ணிய மேலீட்டால் நாளுக்குநாள் முறுகிவளரும் பேரன்பை.

கள்ளவினைப்பசுபோதக் கவளமிடக்களித்துண்டுகருணையென்னும்
வெள்ளமதம்பொழிசித்தி வேழத்தைநினைந்துவருவினைகடீர்ப்பாம்.

**சுப்பிரமணியக்கடவுள்.**

கறங்குதிரைக்கருங்கடலுங் காரவுணப்பெருங்கடலுங் கலங்கக்கார்வந், துறங்குசிகைப்பொருப்புஞ்சூ ருரப்பொருப்பும்பிளப்ப மறையுணர்ந்தோராற்று, மறங்குலவுமகத்தழலு மவுணமடவார்வயிற்றினழலுமூள, மறங்குலவுவேலெடுத்த குமரவேள் சேவடிகள் வணக்கஞ்செய்வாம். (கரு)

**சரஸ்வதியம்மை.**

பழுதகன்றநால்வகைச்சொன் மலரெடுத்துப்பத்திபடப் பரப்பித்திக்கு, முழுதகன்றுமணந்துசுவை யொழுகியணிபெற முக்கண்மூர்த்திதாளிற், றொழுதகன்றவன்பெனுநார் தொடுத்தலங்கல்சூட்டவரிச் சுரும்புந்தேனுங், கொழுதகன்றவெண்டோட்டு முண்டகத்தாளடிமுடிமேற் கொண்டுவாழ்வாம். (கசு)

**திருநந்திதேவர்.**

வேறு.

வந்திறையடியிற்றாழும் வானவர்மகுடகோடி
பந்தியின்மணிகள்சிந்த வேத்திரப்படையாற்றாக்கி
யந்தியும்பகலுந்தொண்ட ரலகிடுங்குப்பையாக்கு
நந்தியெம்பெருமான்பாத நகைமலர்முடிமேல்வைப்பாம். (கஎ)

**திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.**

கடியவிழ்கடுக்கைவேணித் தாதைபோற்கனற்கண்மீனக்
கொடியனைவேவநோக்கிக் குறையிரந்தனையான்கற்பிற்
பிடியனநடையாள்வேண்டப் பின்னுயிரளித்துக்காத்த
முடியணிமாடக்காழி முனிவனைவணக்கஞ்செய்வாம். (கஅ)

**திருநாவுக்கரசுநாயனர்.**

அறப்பெருஞ்செல்விபாகத் தண்ணலைந்தெழுத்தாலஞ்சா
மறப்பெருஞ்செய்கைமாறா வஞ்சகரிட்டநீல

---

(கசு) நால்வகைச்சொல்-பெயர், வினை, இடை, உரி. நால்வகைமலர்-கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ. மலர் - என்பதினிறுதி முற்றும்மையும், முழுது என்பதினிறுதி முற்றும்மையும், தொக்கன. சுவை எட்டு - வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, காமம், அவலம், உருத்திரம், நகை. தொடுத்த - இதில் அகரவீறு தொகுத்தல். (கஅ) முனிவன் - மௌனநிலையுடையவன் என்னும் வடசொற்றிரிபு.

(ககூ) அறப்பெருஞ்செல்வி என்றது-சிவபிரானருளிய இருநாழிநெற்கொண்டு முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்த்தமையின்.

நிறப்பெருங்கடலும்யார்க்கு நீந்துதற்கரியவேழு
பிறப்பெனுங்கடலுநீத்த பிரானடிவணக்கஞ்செய்வாம். (கக)

### சுந்தரமூர்த்திநாயனுர்.

அரவகலல்குலார்பா லாசைநீத்தவர்க்கேவீடு
தருவமென்றளவில்வேதஞ் சாற்றியதலைவன்றன்னைப்
பரவைதன்புலவிதீர்ப்பான் கழுதுகண்படுக்கும்பானு
ளிரவினிற்றூதுகொண்டோ னிணையடிமுடிமேல்வைப்பாம். (உ0)

### திருவாதவூரடிகள்.

எழுதருமறைகடேரு விறைவனையெல்லிற்கங்குற்
பொழுதறுகாலத்தென்றும் பூசனைவிடாதுசெய்து
தொழுதகைதலைமேலேறத் துளும்புகண்ணீருண்மூழ்கி
யழுதடியடைந்தவன்ப னடியவர்க்கடிமைசெய்வாம். (உக)

### தண்டியடிகள்-மற்றைநாயன்மார்.

வேறு.

* தந்தைதா ளொடும்பிறவித் தாளெறிந்துநிருத்தரிரு தாளைச் சேர்ந்த. மைந்தர்தாள்வேதநெறிசைவநெறி பத்திநெறிவழாதுவாய் மெய், சிந்தைதானரனடிக்கே செலுத்தினராய்ச் சிவானுபவச்செல் வராகிப், பந்தமாந் தொடக்கறுத்த திருத்தொண்டர்தாள் பரவிப் பணிதல்செய்வாம். (உஉ)

### முதநூல்வழி.

வேறு.

அண்ணல்பாற்றெளிந்தநந்தி யடிகள்பாற்சனற்குமார
னுண்ணிறையன்பினுய்ந்து வியாதனுக்குணர்த்தவந்தப்
புண்ணியமுனிவன்சூதற் கோதியபுராணமூவா
றெண்ணியவிவற்றுட்காந்தத் தீசசங்கிதையின்மாதோ. (உங)

### நூல்செய்தற்குக்காரணம்.

அறைந்திடப்பட்டதாகு மாலவாய்ப்புகழ்மையந்தச்
சிறந்திடும்வடநூறன்னைத் தென்சொலாற்செய்தியென்றிங்

---

(உ0) வீடு - இச்சையை விடுதல். ஈங்கு மோட்சத்தையுணர்த் தி நின்றது. வேதம் - தானியாகுபெயர். கழுதும் - என்பதிலுள்ள வுயர்வுப்பொரு ளும்மைதொகுத்தல்.

(உக) அறுகாலங்களாவன - விடியல், உச்சி, எற்பாடு, மாலை, யாமம், வைகறை.

(உஉ) தாள் - வேர். ஈண்டு பிறவிக்கேதுவான வினையின்மே னின்றது. சிவானுபவச்செல்வம் என்றது - சோகம் பாவனையை. பந்தமாந்தொடக்கு - இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

(உச) புகழ்மை - புகழ்ச்சி. இஃது, குணியைக்குணமாகக்கூறு வதோர் மரபுவழுவமைதி.

குறைந்திடும்பெரியோர்கூறக் கடைப்பிடித்துறுதியிந்தப்
பிறந்திடும்பிறப்பிலெய்தப் பெறுதுமென்றுள்ளந்தேறு. (உச)

## மொழிபெயர்த்தவிதம்.

திருநகர்தீர்த்தமூர்த்திச் சிறப்புமூன்றந்தமூர்த்தி
யருள்விளையாடலெட்டெட் டருச்சனைவினையொன்றாக
வரன்முறையறுபத்தெட்டா மற்றவைபடலமாக
விரிமுறைவிருத்தச்செய்யுள் வகைமையால்விளம்பலுற்றேன்.(உரு)

## அவையடக்கம்.

நாயகன்கவிக்குங்குற்ற நாட்டியகழகமாந்தர்
மேயவத்தலத்தினோர்க்கென் வெள்ளறிவுரையிற்குற்ற
மாயுமாறரிதன்றேனு நீர்பிரித்தன்னமுண்ணுந்
தூயதீம்பால்போற்கொள்க சுந்தரன்சரிதந்தன்னை. (உசு)

## கலிநிலைத்துறை.

கவைக்கொழுந்தழ னுச்சுவைகண்டவூ னிமையோர்
சுவைக்கவின்னமு தாயின துளக்கமில் சான்றோ
ரவைக்களம்புகுந் தினியவாயாலவா யுடையார்
செவிக்களம்புகுந் தேறுவசிறியனேன் பனுவல். (உஎ)

பாயவாரியுண் டுவர்கெடுத்துலகெலாம் பருகத்
தூயவாக்கிய காரெனச்சொற்பொரு டெளிந்தோ
ராயகேள்வியர் துகளறுத்தாலவா யுடைய
நாயனார்க்கினி தாக்குபநலமிலேன் புன்சொல். (உஅ)

அல்லையீதல்லை யீதெனமறைகளு மன்மைச்
சொல்லினாற்றுதித் திளைக்குமிச்சுந்தர னடற்
கெல்லையாகுமோ வென்னுரையென்செய்கோ விதனைச்
சொல்லுவேனெனு மாசையென்சொல்வழி கேளா. (உக)

---

(உச) உறுதி - ஆன்மலாபம்.

(உரு) விரிமுறை - இது நூல்யாப்புளொன்று, என்னை. வட நூலிற் றொடுத்ததை வகுத்துக்கூறலின்.

(உஎ) அவைக்களம் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. செவிக்களம் - இதில் களம் ஏழனுருபு. பனுவல் - இது செய்யுண் மேல் முதலாகுபெயராய் நிற்றலின், இனியவாய், ஏறு, எனப்பன் மைமுடிபுதந்தார்.

## அரங்கேற்றிடம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அறுகாற்பீடத்துயர்மாலாழிகடைந் தமுதையரங்கேற்றுமாபோ
லறுகாற்பேடிசைபாடுங்கூடன் மான்மியத்தையருந்தமிழாற்பாடி
யறுகாற்பீடுயர்முடியார்சொக்கேசர் சந்நிதியிலமரர்சூழ
மறுகாற்பீடத்திருந்துபரஞ்சோதி முனிவனரங்கேற்றினானே. ()

பாயிரம் முற்றுப்பெற்றது.

---

# பாண்டித்திருநாட்டுப்படலம்.

கலிநிலைத்துறை.

கறைநிறுத்திய கந்தரச்சுந்தரக் கடவு
ளுறைநிறுத்திய வாளினாற்பகையிரு ளொதுக்கி
மறைநிறுத்திய வழியினால்வழுதியாய்ச் செங்கோன்
முறைநிறுத்திய பாண்டிநாட்டணியது மொழிவாம். (௧)

தெய்வநாயக னீறணிமேனிபோற் சென்று
பௌவமேய்ந்துமை மேனிபோற்பசந்துபல் லுயிர்க்கு
மெவ்வமாற்றுவான் சுரந்திடுமின்னரு ளென்னக்
கௌவைநீர்சுரந் தெழுந்தனகனைகுரன் மேகம். (௨)

இடித்துவாய்திறந் தொல்லெனவெல்லொளி மழுங்கத்
தடித்துவாள்புடை விதிர்த்துநின் றிந்திர சாபம்
பிடித்துநீளம்பு கோடைமேற்பெய்துவெம் பெரும்போர்
முடித்துநாமென வருதல்போன்மொய்த்தன கொண்மூ. (௩)

---

(௩0) அறுகால் என்பது - அற்ற கால்களையுடையதெனவினைத்தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகையாய்ப் பாம்பின்மேனின்று, பீடம் என்னுமிடத்தா லாதிசேடன் மேற்றதாயிற்று; பாம்பினங்கள், பாதமின்றிச் சரிக்குந் தன்மையனவென்பதை, அவற்றிற்குரியபன்னகமென்னும்பரியாயப்பெயரானுணர்க.

(௨) நீறணிந்தது - சர்வசங்காரகாலத்துத்திருமால்முதலியோரை நுதல்விழியாற்பொடித்துநீறாக்கி, அந்நீற்றைத்தனதுதிருமேனியிலணிந்து, தானே ஏனையகடவுளர்க்கெல்லாம் நாதனெனக் காட்டவும், யாவரும் தன்னையே சரணடைந்துய்யவும். குறித்தகுறிபாடு.

(௩) வாள் - வாளாயுதம், ஒளி. இந்திரசாபம் - இந்திரதனுசு, பச்சைவில் - அன்பு - நீர், பாணம். இவ்விருபதங்களுஞ் செம்மொழிச்சிலேடைகள்.

முனிதனீள்வரை யுச்சிமேன்முழங்கிவா னிவந்து
தனிதநீர்மழை பொழிவன தடஞ்சிலையிராமன்
கனிதநீர்மையா லாலவாய்க்கண்ணுதன் முடிமேற்
புனிதநீர்த்திரு மஞ்சனமாட்டுவான் போலும். (ச)

சுந்தரன்றிரு முடிமிசைத்தூயநீ ராட்டு
மிந்திரன்றனை யொத்தகாரெழிலிதென் மலைமேல்
வந்துபெய்வவத் தனிமுதன்மௌலிமேல் வலாரி
சிந்துகின்றகைப் போதெனப்பன்மணி தெறிப்ப. (ரு)

உடுத்ததெண்கடன் மேகலையுடையபார் மகட
னிடத்துதித்தபல் லுயிர்க்கெலாமிரங்கித்தன் கொங்கைத்
தடத்துநின்றிழி பாலெனத்தடவரை முகடு
தொடுத்துவீழ்வன விழுமெனத்தூங்குவெள் ளருவி. (சு)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கருநிறமேகமென்னுங் கச்சணிசிகரக்கொங்கை
யருவியாந்தீம்பால்சோர வகன்சுனையென்னுங்கொப்பூழ்ப்
பொருவில்வேயென்னுமென்றோட் பொதியமாஞ்சைலப்பாவை
பெருகுதண்பொருனையென்னும் பெண்மகப்பெற்றாளன்றே. (எ)

கல்லெனக்கரைந்துவீழுங் கடும்புனற்குழவிகானத்
தொல்லெனத்தவழ்ந்துதீம்பா லுண்டொரீஇத்திண்டோண்மள்ளர்
செல்லெனத்தெழிக்கும்பம்பைத் தீங்குரல்செவிவாய்த்தேக்கி
மெல்லெனக்காலிற்போகிப் பணைதொறும்விளையாட்டெய்தி. (அ)

அரம்பைமென்குறங்காமாவி னவிர்தளிர்நிறமாத்தெங்கின்
குரும்பைவெம்முலையாவஞ்சிக் கொடியிறுநுசுப்பாக்கூந்தல்

---

(ச) முனி - அகத்தியர். தனிதம் - மேககர்ச்சனை. இதுதன்னைத்தருதற்குக் கருவியாகிய மேகத்தின்மேனிற்றலால், காரியவாகுபெயர். கனிதல் - அகங்குழைதல். வான் - தொழிற்பெயர்விகுதி.

(ரு) இந்திரன்றனையொத்தகார் என்றது - இந்திரனுங் கரியநிறமுடையவனாதலின்.

(சு) மேகலை - சேலை, மாதரணி எனப் பலபொருளொருசொல். ஈண்டு உடுத்தவென்னும் வினையால். சேலைமேல் நின்றது.

(எ) பொருனை - தாம்பிரபர்ணி.

(அ) செவிவாய்த்தேக்கி என்பதை - அழகுவாய்த்தலைப் பொருந்தி என்றும், பணை என்பதை மகளிர் விளையாட்டு என்றுஞ் சிலேடைப்பொருள் கொள்ளுங்கால், செவ்வி, பண்ணை என இடையேயொற்று மிகுத்துக்கொள்க. கால் - கால், கால்வாய்.

சுரும்பவிம்குழலாக்கஞ்சஞ் சுடர்மதிமுகமாக்கொண்டு
நிரம்பிநீள்கைதைவேலி நெய்தல்சூழ்காவில்வைகி. (௯)

பன்மலர்மாலைவேய்ந்து பானுரைப்போர்வைபோர்த்துத்
தென்மலைத்தேய்ந்தசாந்த மான்மதச்சேறுபூசிப்
பொன்மணியாரந்தாங்கிப் பொருனையாங்கன்னிமுந்நீர்த்
தன்மகிழ்கிழவனுகந் தழீஇக்கொடுகலந்ததன்றே. (௧0)

வல்லைதாயிருபால்வைகுஞ் சிவாலயமருங்குமீண்டி
முல்லையானைந்துந்தேனுந் திரைக்கையான்முகந்துவீசி
நல்லமான்மதஞ்சாந்தப்பி நறுவிரைமலர்தூய்நீத்தஞ்
செல்லலாற்பூசைத்தொண்டின் செயல்வினைமாக்கள்போலும். (௧௧)

அரும்பவிழனங்கவாளி யலைதரவாகம்பொன்போர்த்
திரங்கிவாலன்னமேந்தி யிருகையுஞ்சங்கஞ்சிந்தி
மருங்குசூழ்காஞ்சிதள்ளி வரம்பிறவொழுகும்வாரி
பரம்பரற்கையம்பெய்யும் பார்ப்பனமகளிர்போலும். (௧௨)

வரைபடுமணியும்பொன்னும் வைரமுங்குழையும்பூட்டி
யரைபடுமகிலுஞ்சாந்து மப்பியின்னமுதமூட்டிக்
கரைபடுமருதமென்னுங் கன்னியைப்பருவநோக்கித்
திரைபடுபொருனைநீத்தஞ் செவிலிபோல்வளர்க்குமாதோ. (௧௩)

மறைமுதற்கலைகளெல்லா மணிமிடற்றவனேயெங்கு
நிறைபரமென்றும்பூதி சாதனநெறிவீடென்று
மறைகுவதறிந்துந்தேறு றறிவெனக்கலங்கியந்த
முறையின்வீடுணர்ந்தோர்போலத் தெளிந்ததுமூரிவெள்ளம். (௧௪)

மறைவழிகிளைத்தவெண்ணெண் கலைகள்போல்வருநீர்வெள்ளத்
துறைவழியொழுகும்பல்கால் சோலைதண்பழனஞ்செய்தே

---

(௧0) கன்னி - இது பொருளாலுயர்திணையேனுஞ்சொல்லால் அஃறிணையாதலால் கலந்ததென அஃறிணை முடிபுதந்தார்.

(௧௧) ஆனைந்து - பஞ்சகவ்வியம். பால், தயிர், நெய், கோமயம், கோசலம். செயலென்னுந் தொழிற்பெயர். பெயரெச்சத்தின்மே னின்றது.

(௧௨) காஞ்சி - ஓர்விருட்சம், எழுகோவைமணி. பார்ப்பனமகளிர் - தாருகாவனத்து ரிஷிபத்தினிகள்.

(௧௩) அமுதம் - நீர், பால்.

(௧௪) பூதிசாதனம் - உம்மைத்தொகைநிலைக் களத்துப்பிறந்த அன்மொழித்தொகை. சாதனம் - பஞ்சாட்சரத்தியானம்.

னுறைவழியோடையெங்கு மோடிமன்றுடையார்க்கன்பர்
நிறைவழியாதவுள்ளத் தன்புபோனிரம்பிற்றன்றே. (கரு)

கலிநிலைத்துறை.

இழிந்தமாந்தர்கைப் பொருள்களுமிகபரத் தாசை
கழிந்தயோகியர் கைப்படிற்றூயவாய்க் களங்க
மொழிந்தவாறுபோ லுவரியுண்டுவர்கெடுத் தெழிலி
பொழிந்தநீரமு தாயினபுவிக்கும்வா னவர்க்கும். (கசு)

ஈறிலாதவ ளொருத்தியேயைந்தொழி லியற்ற
வேறுவேறுபேர் பெற்றெனவேலைநீ ரொன்றே
யாறுகால்குளங் கூவல்குண்டகழ்கிடங் கெனப்பேர்
மாறியீறில்வான் பயிரெலாம்வளர்ப்பது மாதோ. (கஎ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

களமர்கள்பொன்னேர்பூட்டித் தாயர்வாய்கனிந்தபாடற்
குளமகிழ்சிறாரினேறு மொருத்தலுமுவகைதூங்க
வளமலிமருதம்பாடி மனவலிகடந்தோர்வென்ற
வளமருபொறிபோலேவ லாற்றவாள்வினையின்மூண்டார். (கஅ)

பலநிறமணிகோத்தென்னப் பன்னிறவேறுபூட்டி
யலமுகவிரும்புதேய வாள்வினைக்கருங்கான்மள்ளர்
நிலமகளுடலங்கீண்ட சால்வழிநிமிர்ந்தசோரிச்
சலமெனநிவந்தசெங்கேழ்த் தழன்மணியிமைக்குமன்னோ. (கக)

ஊறுசெய்படைவாய்தேய வுழுநருநீர்கால்யாத்துச்
சேறுசெய்குநருந்தெய்வந் தொழுதுநீஞ்செந்நெல்வீசி
யாறுசெய்குநரும்பேர்த்து நடவுசெய்குநருந்தெவ்வின்
மாறுசெய்களைகட்டோம்பி வளம்படுக்குநருமானார். (உ0)

பழிபடுநறவந்தன்னைக் கடைசியர்பருகிச்செவ்வாய்
மொழிதடுமாறவேர்வை முகத்தெழமுறுவலூன்ற

(கசு) உவரி – உவர்ப்பினையுடையது, கடல். எழிலி – மேலெழுதலையுடையது, மேகம்.

(கஎ) ஐந்தொழில் – சிருஷ்டி, திதி. சங்காரம், திரோபவம், அனுக்கிரகம். வேறுவேறுபேர் – பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி.

(கஅ) பொன்னேர் – தலைஏர். அளமரு – அலமரு-ளளவொற்றுமை.

(கக) கோத்தது – என்பதில் தகரம் தொகுத்தல். கருங்கால் என்றது – சேற்றால் நிறந்திரிந்து நிற்றலின்.

விழிசிவந் துழலக்கூந்தன் மென்றுகில்சோரவுள்ளக்
கழிபெருங்களிப்புநல்கிக் கலந்தவரொத்தாரன்றே. (உக)

பட்பகையாகுந்தீஞ்சொற் கடைசியர்பவளச்செவ்வாய்க்
குட்பகையாம்பலென்று மொண்ணறுங்குவளைநீலங்
கட்பகையாகுமென்றுங் கமலநன்முகத்துக்கென்றுந்
திட்பகையாகுமென்றுஞ் செறுதல்போற்களைதல்செய்வார். (உஉ)

கடைசியர்முகமுங்காலுங் கைகளுங்கமலமென்னார்
படைவிழிகுவளையென்னார் பவளவாய்குமுதமென்னா
ரடையவுங்களைந்தார்மள்ளர் பகைஞராயடுத்தவெல்லை
யுடையவனாணையாற்று லொறுப்பவர்க்குறவுண்டாமோ. (உங)

புரையறவுணர்ந்தோர்நூலின் பொருளினுள்ளடங்கியந்நூல்
வரையறைகருத்துமான வளர்கருப்புறம்புதோன்றிக்
கரையமைகல்விசாலாக் கவிஞர்போலிறுமாந்தந்நூ
லுரையெனவிரிந்துகற்பின் மகளிர்போலொசிந்ததன்றே. (உச)

அன்புறுபத்திவித்தி யார்வநீர்பாய்ச்சுந்தொண்டர்க்
கின்புருவானவீச னின்னருள்விளையுமாபோல்
வன்புறுகருங்கான்மள்ளர் வைகலுஞ்செவ்விநோக்கி
நன்புலமுயன்றுகாக்க விளைந்தனநறுந்தண்சாலி. (உரு)

அகனிலவேறுபாட்டி னியல்செவ்வியறிந்துமள்ளர்
தகவினைமுயற்சிசெய்யக் காமநூல்சாற்றுநான்கு
வகைநலார்பண்புசெவ்வி யறிந்துசேர்மைந்தர்க்கின்ப
மிகவிளைபோகம்போன்று விளைந்தனபைங்கூழெல்லாம். (உசு)

கொடும்பிறைவடிவிற்செய்த கூனிரும்பங்கைவாங்கி
முடங்குகால்வரிவண்டார்ப்ப முள்ளரைக்கமலநீல
மடங்கவெண்சாலிசெந்நெல் வேறுவேறரிந்தீடாக்கி
நெடுங்களத்தம்பொற்குன்ற நிரையெனப்பெரும்போர்செய்தார். ()

கற்றைவைகளைந்துதூற்றிக் கூப்பியூர்க்காணித்தெய்வ
மற்றவர்க்கற்றவாறீந் தளவைகண்டாறிலொன்று
கொற்றவர்கடமைகொள்ளப் பண்டியிற்கொடுபோய்த்தென்னா
டுற்றவர்சுற்றந்தெய்வம் விருந்தினர்க்கூட்டியுண்பார். (உஅ)

(உச) உரை - பொருளின்மேனிற்றலால் சொல்லாகுபெயர்.

(உரு) பத்திவேறு ஆர்வம்வேறு என்பதை - "அன்பீனுமார்வ முடைமை" என்னுந் திருக்குறளானுணர்க.

(உசு) நான்குவகைநலார் - பத்மினி, சித்தினி, சங்கினி, அத்தினி.

(உஅ) சுற்றம் - இதுசூழ்ந்தோர்மேனிற்றலின், வினைமுதற் பொருட்டொழிபெயர்.

சாறடுகட்டிவெள்ளுச் சாமைகொள்ளிறுங்குதோரை
யாறிமெதமால்யானைப் பழுக்குலையவரையேனல்
வேறுபல்பயறோடின்ன புன்னிலவிளைவுமற்று
மேறொடுபெண்டியேற்றி யிருநிலங்கிழியவுய்ப்பார். (உகூ)

துறவினரீசனேசத் தொண்டினர்பசிக்குநல்லூண்
டிறவினைப்பிணிக்குத்தீர்க்கு மருந்துடற்பனிப்புக்காடை
யுறைவிடம்பிறிதுநல்கி யவரவரொழுகிச்செய்யு
மறவினையிடுக்கணீக்கி யருங்கதியுய்க்கவல்லார். (௩0)

நிச்சலுமீசனன்பர் நெறிப்படிற்சிறார்மேல்வைத்த
பொச்சமிலன்புமன்னர் புதல்வரைக்கண்டாலன்ன
வச்சமுங்கொண்டுகூசி யடிபணிந்தினியகூறி
யிச்சையாறொழுகியுள்ளக் குறிப்பறிந்தேவல்செய்வார். (௩க)

நறைபடுகனிதேன்பெய்த பாலொடுநறுநெய்வெள்ள
நிறைபடுசெம்பொன்வண்ணப் புழுக்கலானிமிர்ந்தசோறு
குறைவறவுண்டுவேண்டும் பொருள்களுங்கொண்மினென்ன
மறைமுதலடியார்தம்மை வழிமறித்தருத்துவார்கள். (௩உ)

பின்னெவனுரைப்பதந்தப் பெருந்தமிழ்நாடாங்கன்னி
தன்னிடையூர்களென்னு மவயவந்தாங்கச்செய்த

---

(உகூ) சாறடுகட்டி - வெல்லம். இறுங்கு - சோளம். ஏனல்-தினை. யானைப்பழுக்குலை - யானை விலாப்புடைபோற் பருத்த வாழைக்குலை.

(௩0) பனிப்பு-நடுக்கம். உறைவிடம்-உறையுள். இது, உறை-இடம்-இ ஈ ஐ வழியென்னுஞ் சூத்திரப்படி யகரவுடம்படுமெய்பெறாது எதுகைநோக்கி, வகரவுடம்படுமெய் பெற்று நின்றது.

(௩க) நிச்சல்-நித்தல் என்பதன்மரூஉ. பொச்சம்—பொய். இது திசைச்சொல்.

(௩உ) செம்பொன்வண்ணப் புழுக்கலானிமிர்ந்தசோறு என்றது-பருப்புச்சோற்றை. செம்பொன்வண்ணம்-இது செவந்தபொன்போலுஞ் செந்நிறத்தையுடையது, என உவமைத்தொகைநிலைக்களத்துப்பிறந்த அன்மொழித் தொகையாய்ப் பருப்பின்மேலும், புழுக்கல்-தொழிலாகுபெயராய் அரிசியின்மேலும் நின்றது. இதை சிந்தாமணி, குணமாலையாரிலம்பகம், தீம்பாலடிசில் என்னுஞ் செய்யுட்கு நச்சினார்க்கினியரெழுதிய உரையானுமுணர்க.

பொன்னியற்கலனேகோயின் மடமறப்புறநீர்ச்சாலை
பின்னமுதருத்துசாலை யெனவுருத்திரிந்ததம்மா. (ருரு)

* திணைமயக்கம் - கலிநிலைத்துறை.

இன்றடம்புனல் வேலிசூழிந்நில வரைப்பிற்
குன்றமுல்லைதண பணைநெய்தல்குலத்திணை நான்கு
மன்றவுள்ளமற் றவைநிற்கமயங்கிய மரபி
ஞென்றொடொன்றுபோய் மயங்கியதிணைவகை யுரைப்பாம். (ருச)

கொல்லையானிரை மேய்ப்பவர்கோழிணர்க் குருந்தி
ஞெல்லைதாயதிற் படர்கறிக்கருந்துண ருகுப்ப
முல்லைசோறெனத் தேன்விராய்முத்திழை சிற்றி
லெல்லையாயமோ டாடுபெவெயின்சிறு மகளிர். (ருரு)

கன்றொடுங்களி வண்டுவாய்நக்கவீர்ங் கரும்பு
மென்றுபொன்சொறி வேங்கைவாயுறங்குவ பேதி
குன்றிளந்தினை மேய்க்துபூங்கொழுநிழன் மருதஞ்
சென்றுறங்குவ சேவகமெனமுறச் செவிமா. (ருசு)

எற்றுதெண்டிரை யெறிவளையெயிற்றிய ரிழைத்த
சிற்றில்வாய்நுழைந் தழிப்பவச்சிறுமியர் வெகுண்டு
பற்றிலாரெனச் சிதறியமனவணி பரதர்
முற்றிலாமுலைச் சிறுமியர்முத்தொடுங் கோப்ப. (ருஎ)

---

(ருரு) கலன் - ஆபரணம், இது சாதியொருமை.

(ருச) குலத்திணை என்றது - குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தலெனத் தேற்றமாயுள்ள நாற்றிணைகளை. பாலையோவெனின், "முல்லையுங்குறிஞ்சியு முறைமையிற்றிரிந்து, நல்லியல்பழிந்து நடுங்குதுயருறுத்துப், பாலையென்பதோர் படிவங்கொள்ளும்" என்னும் ஆசிரியர் வசனப்படி இயற்கைத்திணையல்லவாதலின், அது அந்நான்கினுளடங்கும். மயங்கியமரபின் என்றதற்கு-அனுலோமன் பிரதிலோமன் முதலிய மரபறியக்கூடாதார் போலெனப் பொருள்கொள்க.

(ருரு) தாய்-தாவி என்பது தாய் எனத் திரிந்துநின்றது.

(ருசு) ஈர்ங்-இது ஈறுதொகுத்தல். பொன் - உவமையாகுபெயர். தினை - முதலாகுபெயர்.

(ருஎ) மனவு - அக்குமணி. கோப்ப - இது பலர்பாற்படர்க்கை வினைமுற்று.

* திணைமயக்கமாவது - ஒருநிலக் கருப்பொருளோடு மற்றொருநிலக்கருப்பொருள்வந்து கூடல்.

முல்லைவண்டுபோய் முல்லையாழ்முளரிவாய் மருதம்
வல்லவண்டினைப் பயிற்றிப்பின்பயில்வன மருதங்
கொல்லையான்மடி யெறிந்திளங்குழவியென் றிரங்கி
யொல்லையூற்றுபால் வெள்ளத்துளுகள்வன வாளை. (ஙஅ)

கரும்பொற்கோட்டிளம் புன்னைவாய்க்கள்ளுண்டு காளைச்
சுரும்புசெவ்வழிப் பாண்செயக்கொன்றைபொன் சொரிவ
வருந்தடங்கடல் வளையெடுத்தாழியான்கையி
லிருந்தசங்கென விறைகொளப்பூவைமே லெறிவ. (ஙகூ)

கழிந்ததெங்கினெண் பழம்பரீஇமுட்பலாக் கனிகீண்
டழிந்ததேனுவர்க் கேணிபாய்ந்தகற்றுவ வுவரை
வழிந்ததேன்மடற் கேதகைமலர்நிழல் குருகென்
றொழிந்ததாமரைப் போதுபுக்கொளிப்பன கெண்டை. (சO)

ஆறுசூழ்கழிப் புலால்பொறு தசைந்துகூன் கைதை
சோறுகால்வன வாம்பல்வாய்திறப்பன துணிந்து
கூறுவாரெனக் குவளைகண்காட்டிடக் கூடித்
தூறுவாரெனச் சிரித்தலர்தூற்றுவ முல்லை. (சக)

துள்ளுசேல்விழி நுளைச்சியர்சுறவொடு மருந்தக்
கள்ளுமாறவுங் கூனலங்காய்த்தினை யவரைக்
கொள்ளுமாறவுங் கிழங்குதேன்கொழுஞ்சுவைக் கன்ன
லெள்ளுமாறவு மளப்பனவிடைக்கிடை முத்தம். (சஉ)

அவமிகும்புலப் பகைகடந்துயிர்க்கெலா மன்பா
நவமிகுங்குடை நிழற்றிமெய்ச்செய்யகோனடாத்திச்

---

(ஙஅ) யாழ் - பண்மேனிற்றலாற் கருவியாகுபெயர்.

(ஙஅ) குழவி-கன்று. கன்றைக்குழவியென்றது, தொல்காப்பியம் மரபியலுள் - "குஞ்சரம்பெறுமே குழவிப்பெயர்க்கொடை" என்ற சூத்திரத்தின்பாற்படுத்தி "ஆவுமெருமையுமதுசொலப்படுமே" எனக்கூறுதலால்.

(சO) பரீஇ-பரிவியென்னும் வினையெச்சஞ்சொல்லிசைநிறைக்க வளபெடுத்து நின்றது. பரிவி-விழுந்து.

(சக) சோறு - சாதம், மகரந்தம். அலர் - புட்பம், பழி.

(சஉ) கூனலங்காய் - புளியங்காய்.

(சங) அவமிகும்புலப்பகைகடந்தென்றது-தவமேற்கொண்டோர், உண்டிசுருக்கன் முதலியசெயல்களான், மனம் புலன்வழிச் செல்லாது நிறுத்தவேண்டுதலை. புலம்-சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். பரஞானம்-அமங்கலமுடையோரைப்பொருளெனக்காட்டும்போதம்போலாது, மங்கலசொரூபமாம் பரசிவத்தைமேற்படுத்திக் காட்டுந் திருவடிஞானத்தை. பரம்-மேன்மை. தண்டமிழ்ப்பொதியமென்றது-தமிழாசிரியரான அகத்தியர்க்குரிய தானமாதலின்.

சிவமிரும்பர ஞானமெய்த்திருவொடும் பொலிந்து
தவமிருந்தர சாள்வதுதண்டமிழ்ப் பொதியம். (சங)

வானயாறுதோய்ந் துயரியமலயமே முக்கண்
ஞானநாயக னம்மலைபோர்த்தகார் நால்வா
யானையீருரி யம்மழையசும்பதன் புண்ணீர்
கூனல்வான்சிலை குருதிதோய்கோடுபோன் றன்றே. (சச)

சுனையகன்கரைச் சூழல்வாய்ச்சுரும்புசூழ் கிடப்ப
நனையவிழ்ந்தசெங் காந்தண்மேனுகிள வேங்கை
சினையவிழ்ந்தவீ கிடப்பபொன்றேய்கலத் தெண்ணீ
ரனையபொன்சுடு நெருப்பொடுகரியிருந் தனைய. (சரு)

குண்டுநீர்ப்படு குவளைவாய்க்கொழுஞ்சினை மரவம்
வண்டுகூப்பிடச் செம்மறாய்ப்புதுமது வார்ப்ப
வண்டர்வாய்ப்பட மறைவழிபொரிசொரிந் தானெய்
மொண்டுவாக்கிமுத் தீவினைமுடிப்பவ ரனைய. (சசு)

அகிலுமாரமுந் தழன்மடுத்தகழ்ந்தெறிந் தழல்கா
லுகிருமாரமுந் தொட்டெறிந்தைவனந் தூவிப்
புகரின்மால்கரி மருப்பினால்வேலிகள் போக்கி
யிகலில்வான்பயி ரோம்புவவெயினர்தஞ் சீறூர். (சஎ)

அண்டவாணருக் கின்னமுதருத்துவோர் வேள்விக்
குண்டவாரழற் கொழும்புகைகோலுமக் குன்றிற்
புண்டவாதவே லிறவுளர்புனத்தெரி மடுப்ப
வுண்டகாரகிற் றூமமுமொக்கவே மயங்கும். (சஅ)

கருவிவான்சொரி மணிகளுங்கழைசொரி மணியு
மருவிகான்றபன் மணிகளுமகன்றலை நாகத்

(சச) அசும்பு - துளி. கூனல்வான்சிலை - இந்திரதனுசு.

(சரு) சூழல்வாய், நாகிள, இவைஇன்னோசை பயந்து நிற்கும் ஒருபொருட் பன்மொழிகளாதலின் வழாநிலைகள்.

(சசு) செம்மல் - பழயமலர், முத்தீயாவன - ஆகவனீயம், தக்ஷிணாக்கினி, காருகபத்தியம். அவை சதுரமும், முக்கோணமும், வில்வடிவமுமாயுள்ளன.

(சஎ) அகில் - கள்ளிவிருட்சத்திலுண்டாவது. "கள்ளிவயிற்றி லகில்பிறக்கும்" என்பதனாலுணர்க. ஐவனம் - மலைநெல். சீறூர்-குறிஞ்சிநிலத்தூர். எயினர்-வேடர் ஓம்புவ என்றது-"விட்டில்கிளிநாவாய் வேற்றரசுதன்னரசு, நட்டம்பெரும்பெயல் காலெட்டு." என்னுமிவற்றால் பயிர்களுக்குக் கேடுண்டாவகைக்காத்தலை.

(சஅ) இறவுளர் - குறவர்.

திரவிகான்றசெம் மணிகளும்புனங்கவ ரினமான்
குருவிவீழ்ந்திடக் கொடிச்சியர்கோத்தெறி கவண்கல். (சகூ)

மாயவன்வடி வாயதுவையமா லுந்திச்
சேயபங்கய மாயதுதென்னனு டலர்மேற்
போயமென்பொகுட் டாயதுபொதியமப் பொகுட்டின்
மேயநான்முக னகத்தியன்முத்தமிழ் வேதம். (ருo)

ஏகமாகிய மேருவும்பொதியமே யிரும்பொ
னுகுமேருவைச் சூழ்ந்தசாம்பூநத யாறு
நாகராடுதண் பொருனையேநாவலா றுடுத்த
போகபூமியும் பொருனைசூழ்பூமியே போலும். (ருக)

சிறந்ததண்டமி ழாலவாய்சிவனுல கானற்
புறந்தயங்கிய நகரெலாம்புரந்தரன் பிரமன்
மறந்தயங்கிய நேமியோனுதிய வானோ
ரறந்தயங்கிய வுலகுருவானதே யாகும். (ருஉ)

வளைந்தநுண்ணிடை மடந்தையர்வனமுலை மெழுகிக்
களைந்தகுங்குமக் கலவையுங்காசறைச் சாந்து
மளைந்ததெண்டிரைப் பொருனையோவந்நதி ஞாங்கர்
விளைந்தசெந்நெலுங் கன்னலும்வீசுமவ் வாசம். (ருங)

பொதியிலேவிளை கின்றனசந்தனம் பொதியி
னதியிலேவிளை கின்றனமுத்தமந் நதிசூழ்
பதியிலேவிளை கின்றனதருமமப் பதியோர்
மதியிலேவிளை கின்றனமறைமுதற் பத்தி. (ருச)

---

(ருo) அகத்தியன்-அகமாகிய விந்தமலையையடக்கினவன். முத்தமிழ்-இயலிசைநாடகம். முத்தமிழ்வேதம் என்றது-வேதந்தரும் புருடார்த்தங்களை, நிகமாகமசாரங்களாகிய திருமுறைகளை யுள்ளடக்கிநின்ற தமிழுந்தருதலின்.

(ருக) சாம்பூநதம் - வெண்ணாவல்.

(ருஉ) சிவனுலகென்றது - திருவாலவாய்க்குச் சிவலோக மென்பது ஓர் பரியாயநாமமாதலின்.

(ருங) காசறை - கஸ்தூரி.

(ருச) பொதியினதியிலே விளைகின்றனமுத்தம் என்றதை, "தென்னாடுமுத்துடைத்"தென்னும் ஔவை திருவாக்கானு முணர்க. மறைமுதல் - இது சிவபெருமானுக்குப் பரியாயப்பெயராதலால், வருமொழி வல்லெழுத்தின்முன் ஈறுதிரியாது நின்றது.

கடுக்கவின்பெறு கண்டனுந்தென்றிசை நோக்கி
யடுக்கவந்துவந் தாவொனுடலி னிளைப்பு
விடுக்கவாரமென் காறிருமுகத்திடை வீசி
மடுக்கவுந்தமிழ் திருச்செவிமாந்தவு மன்றே. (ருரு)

விடையுகைத்தவன் பாணினிக்கிலக்கண மேனுள்
வடமொழிக்குரைத் தாங்கியன்மலயமா முனிக்குத்
திடமுறுத்தியம் மொழிக்கெதிராக்கிய தென்சொன்
மடமகட்கரங் கென்பதுவழுதிநா டன்றே. (ருசு)

கண்ணுதற்பெரும் கடவுளுங்கழகமோ டமர்ந்து
பண்ணுறத்தெரிந் தாய்ந்தவிப்பசுந்தமி ழேனை
மண்ணிடைச்சில விலக்கணவரம்பிலா மொழிபோ
லெண்ணிடைப்படக் கிடந்ததாவெண்ணவும் படுமோ. (ருஎ)

தொண்டர்நாதனைத் தூதிடைவிடுத்தது முதலை
யுண்டபாலனை யழைத்ததுமெலும்புபெண் ணுருவாக்
கண்டதும்மறைக் கதவினைத்திறந்ததுங் கன்னித்
தண்டமிழ்ச்சொலோ மறுபுலச்சொற்களோ சாற்றீர். (ருஅ)

வெம்மையால்விளை வஃகினும்வேந்தர்கோல் கோடிச்
செம்மைமாறினும் வறுமைநோய்சிதைப்பினுஞ் சிவன்பாற்
பொய்ம்மைமாறிய பத்தியும்பொலிவுகுன் றுவாத்
தம்மைமாறியும் புரிவதுதருமமந் நாடு. (ருகூ)

---

(ருரு) தமிழ் - இனிமை. இப்பண்பு. தேன்மொழிமேனிற்றலால், பண்பாகுபெயர்.

(ருசு) அரங்கு - நாடகசாலை.

(ருஎ) கழகமோடமர்ந்தென்றது-முதலூழி யிறுதிக்கண்ணிருந்த, தலைச்சங்கமுதல் மூன்று சங்கத்தினுந் தலைமைப்புலவராயிருந்தமையை. பசுந்தமிழ் - சிறந்ததமிழ், பசுமையென்னும் பண்பு, அருமைமேனின்றது.

(ருஎ) இலக்கணவரம்பிலாமொழி என்றது-தமிழொழிந்த, மற்றைப் பதினேழுநிலங்களில், இலக்கண வரம்பில்லாத சிலநிலத்துமொழிகளை.

(ருகூ) பொலிவு - சைவவிளக்கம். அதாவது - விபூதி, உருத்திராட்சம், ஸ்ரீபஞ்சாட்சரமுதலியன.

உலகம்யாவையு மீன்றவளும்பரு ளுயர்ந்த
திலகநாயகி பரஞ்சுடர்சேயென மூன்று
தலைவரான்முறை செய்தநாடிஃதன்றிச் சலதி
சுலவுபாரினுண் டாகுமோ துறக்கத்து மஃதே. (௬௦)

பாண்டித் திருநாட்டுப்படலம் முற்றிற்று.

ஆ படலம் உ-க்கு திருவிருத்தம்-௯௦.

## மதுரைத்திருநகரப்படலம்.

மங்கலம்புனை பாண்டிநாடாகிய மகட்குச்
சங்கலம்புகை தோளிணை தடமுலை யாதி
யங்கமாம்புறந் தழுவியநகரெலா மனைய
நங்கைமாமுக மாகியநகர்வளம் பகர்வாம். (௧)

கொங்கையேபரங் குன்றமுங்கொடுங்குன்றுங் கொப்பூ
ழங்கமேதிருச் சுழியலவ்வயிறுகுற் றாலஞ்
செங்கையேடக மேனியே பூவணந்திரடோள்
பொங்கர்வேய்வனந் திருமுகமதுரையாம் புரமே. (௨)

வடுவின்மாநில மடந்தைமார்பிடைக்கிடந் திமைக்கப்
படுவிலாரமே பாண்டிநாடாரமேற் பக்கத்
திடுவின்மாமணி யதன்புறநகரெலா மிவற்று
னடுவிளுயக மாமணிமதுரைமா நகரம். (௩)

(௬௦) திலகநாயகி என்றது - முகத்திற்குப்பொலிவுசெய்யுந்தி லகம்போல, வாணிமுதலிய சத்திமார்களைத்தத்தமக்குரியதொழில் களால் விளக்கம்பெறச் செய்பவளாதலின். இஃதன்றிச்சலதிசுலவு பாரினுண்டாகுமோவென்றது - ஏனைச் சேரசோழநாடுகளில், சிவ பெருமான் அரசுபுரியினும், பிராட்டியாரும் அவரது திருமகனும் அரசுபுரியாமையின். இதனைத் "தென்னவன்சேரலன்சோழன் சீர்ப்புயங்கன்வரக்கூவாய்" என்னும் திருவாசகப்பாசுரத்தானுமுணர்க.

(௧) மங்கலம்புனைபாண்டிநாடென்றது- "மிக்கபெயலொடுபெயலின்மையெலிவிட்டில்கிளி, யக்கண்ணரசண்மையோடாறு"என்றகுறைபாடுகணீங்கி,"பிணியின்மைசெல்வம் விளைவின்பமேமம்,அணியென்பநாட்டிற்கிவ்வைந்து" என்னுமங்கலங்கணிலவிநிற்றலை.

(௨) ஏடகம் - இதழைத் தனதிடத்துடைய தாமரைமலர், திருவேடகமென்னுந் தலம்.

திருமகட்கொரு தாமரைக்கூடமே திருமான்
மருமகட்குவெண் டாமரைமாடமே ஞானந்
தருமகட்கியோ கத்தனிப்பீடமே தரையாம்
பெருமகட்கணி திலகமேயான திப் பேரூர். (௪)

திக்கும்வானமும் புதையிருடின்றுவெண் சோதி
கக்குமாளிகை நிவப்புறுகாட்சியந் நகருண்
மிக்கவாலிதழ்த் தாமரைவெண்மக ளிருக்கை
யொக்குமல்லது புகழ்மகளிருக்கையு மொக்கும். (௫)

நெற்கரும்பெனக் கரும்பெலாநெடுங்கமு கென்ன
வர்க்கவான்கமு கொலிகலிதெங்கென வளர்ந்த
பொற்கவின்குலைத் தெங்குகார்ப்பந்தரைப் பொறுத்து
நிற்கநாட்டிய காலெனநிவந்ததண் பணையே. (௬)

சிவந்தவாய்க்கருங் கயற்கணுள்வலாரியைச் சீறிக்
கவர்ந்தவான்றருக் குலங்களேகடிமணம் வீசி
யுவந்தவேறுபல் பலங்களும்வேண்டினர்க் குதவி
நிவந்தகாட்சியே போன்றதுநிழன்மலர்ச் சோலை. (எ)

ஒல்லொலிக்கதிர்ச் சாலிகள்புறந்தழீஇ யோங்க
மெல்லிலைப்பசுங் கொடியினல்வீக்குறு பூக
மல்லெனுங்களத் தண்ணறனணிவிழாத் தருப்பைப்
புல்லொடும்பிணிப் புண்டபொற்கொடிமரம் போலும். (அ)

சீதவேரியுண் டளிமுரல்கமலமேற் செருந்தி
போதவேரியு மலர்களுஞ்சொரிவன புத்தேள்
வேதவேதியர் செங்கரம்விரித்துவாய் மனுக்க
ளோதவேமமு முதகமுமுதவுவா ரனைய. (௯)

---

(௫) வெண்சோதி என்றது - முத்தாலுஞ் சுண்ணத்தாலு மாகிய ஒளியை. புகழ்மகளிருக்கை என்றது - புகழ் வெண்மைநிறமாதலின்.

(௬) வர்க்கம் - வரிசை.

(எ) வலாரி - வலாசுரனைக்கொன்றவனாகிய இந்திரன். தருக்குலங்களென்றது - சந்தானம், அரிச்சந்தனம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம், முதலிய பஞ்சதருக்களை.

(அ) தழுவி - இது தழீஇ என மருவியது.

விரைசெய்பங்கயச் சேக்கைமேற்பெடையொடு மேவி
யரசவன்னநன் மணஞ்செயவம்புயப் பொய்கை
திரைவளைக்கையா னுண்டுளிசெறிந்தபா சடையா
மரகதக்கலத் தரளநீராஞ்சனம் வளைப்ப. (௧௦)

இரும்பினன்னதோள் வினைஞரார்த்தெறிந்துவாய் மடுக்குங்
கரும்புதின்றிடி யேற்றொலிகாட்டியின் சாறு
சுரும்புசூழ்கிடந் தரற்றிடச்சொரிந்துவெஞ் சினத்தீ
யரும்புகட்களி றொத்தனவாலையெந் திரங்கள். (௧௧)

பள்ளநீர்குடைந் தஞ்சிறைப்பாசிபோர்த் தெழுந்த
வெள்ளையன்னத்தைக் காரணமெனப்பெடை வீழ்ந்த
வுள்ளமீட்டல மரச்சிறகுதறியுள் ளன்பு
கொள்ளவாசையிற் றழீஇக்கொடுகுடம்பைசென் றணையும். (௧௨)

இரவியாழியொன் றுடையதேரீர்த்தெழு மிமையாப்
புரவிநாசிமிர்த் தயில்வனபொங்கர்வாய்த் தளிர்கள்
கரவிலாமகத் தெழுபுகைகற்பக நாட்டிற்
பரவிவாட்டுவ பனியெனப்பங்கயப் பொய்கை. (௧௩)

பிறங்குமாலவா யகத்துளெம்பிரானரு ளால்வந்
தறங்கொடீர்த்தமா யெழுகடலமர்ந்தவா நோக்கிக்
கறங்குதெண்டிரைப் பெரும்புறக்கடலும்வந் திவ்வூர்ப்
புறங்கிடந்ததே போன்றதுபுரிசைசூழ் கிடங்கு. (௧௪)

எறியும்வாளையு மடிக்கடியெழுந்துடல் பரப்பிப்
பறியுமாமையும் வாளொடுகேடகம் பற்றிச்
செறியுநாண்மல ரகழியுஞ்சேண்டொடு புரிசைப்
பொறியுமேயொன்றி யுடன்றுபோர்புரிவன போலும். (௧௫)

(௧௦) சேக்கை - படுக்கை. இது செயப்படு பொருளில்வந்த தொழிற்பெயர். சே - படுத்தல். முதனிலை. பாசடை-பசியவிலை. தரள நீராஞ்சனம் - முத்தாலாத்தி.

(௧௧) இரும்பினன்னதோள்வினைஞர் - யானைப்பாகர், எவல் செய்வோர். வாய் - ஆனையின்வாய், ஆலையின்வாய். தின்னல்-தின்னுதல், நெரித்தல். சொரிதல் - கடைவாயின் வழியொழுகல்,புறத்தில் வெளிப்படுத்தல்.

(௧௪) எழுகடல்-உப்பு, பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, கள், சுத்தசலம். இவற்றிற்கப்புறஞ் சக்ரவாளகிரியைச் சூழ்ந்து நிற்பது பெரும்புறக்கடல்.

கண்ணிலாதவெங் கூற்றெனக்கராக்கிடங் தலைப்ப
மண்ணினூரெவ ரேனுமிம்மடுவிடை வீழ்ந்தோர்
தெண்ணிலாமதி மிலைந்தவர்க்கொப்பெனச் சிலரை
யெண்ணினூரிரு ணரகநீத்தேறினு மேறுர். (கசு)

குமிழலர்ந்தசெந் தாமரைக்கொடிமுகிழ் கோங்கி
னுமிழ்சரும்பர ஞானமுண்டுமிழ்ந்தவாய் வேதத்
தமிழறிந்துவை திகமுடன்சைவமு நிறுத்து
மமிழ்தவெண்டிரை வையையுமொருபுறத் தகழாம். (கஎ)

பிள்ளையும்பெடை யன்னமுஞ்சேவலும் பிரியாக்
கள்ளமுண்டகச் செவ்வியாற்கண்டவர் கண்ணு
முள்ளமுந்திரும் பாவகைச்சிறைபடுத் தோங்கும்
புள்ளலம்புதண் கிடங்கிதுபுரிசையைப் புகல்வாம். (கஅ)

மாகமுந்திய கடிமதின்மதுரைநா யகர்கைந்
நாகமென்பதே தேற்றமந்நகர்மதில் விழுங்கி
மேகநின்றசை கின்றதவ்வெஞ்சினப் பணித
னாகமொன்றுதோ லுரிபடநெளிவதே யாகும். (கக)

புரங்கடந்தபொற் குன்றுகோபுரமெனச் சுருதிச்
சிரங்கடந்தவர் தென்னராயிருந்தனர் திருந்தா
ருரங்கடந்திட வேண்டினுமுதவிசெய் தவரால்
வரங்கடந்திடப் பெறவெதிர்நிற்பது மானும். (௨௦)

சண்டபானுவுந் திங்களுந்தடைபடத் திசையு
மண்டகோளமும் பரந்துநீண்டகன்றகோ புரங்கள்
விண்டவாயிலால் வழங்குவவிடவரா வங்காந்
துண்டபோல்பவு முமிழ்வனபோல்பவு முழலா. (௨க)

மகரவேலையென் றியானைபோன்மழையருந் தகழி
சிகரமாலைசூ ழம்மதிற்றிரைக்கரந் துழாவி
யகழவோங்குநீர் வையையாலல்லது வேற்றுப்
பகைவர்சேனையாற் பொரப்படும்பாலதோ வன்றே. (௨௨)

---

(கசு) கண் - தாக்ஷணியம். கராக்கிடந்தென்பதும் பாடம்.

(கஎ) குமிழ், கோங்கு முதலியவைகள், நாசி, திருமுகம், திருமேனி, திருத்தனம்இவற்றைக்குறிக்க நின்றது. பரஞானமுண்டென்றது-அத்திருத்தனஞ்சொரிந்ததிருவமுதம், பரஞானமாதலின்.

(கஅ) கள்ள - உடைமைப்பொருளில்வந்த பொருளடியாகப் பிறந்த குறிப்புவினைப்பெயரெச்சம். தண்கிடங்கு - நீரரண். புரிசை மதிலரண்.

எல்லைதேர்வழித் தடைசெயுமிம்மதிற் புறஞ்சூழ்ந்
தொல்லைமேவலர் வளைந்துழியுடன்றுபோ ராற்றி
வெல்லமள்ளரும் வேண்டுமோபொறிகளே வெல்ல
வல்லதம்மதிற் பொறிசெயுமறஞ் சிறிதுரைப்பாம். (உ௩)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

மழுக்கள்வீசுவன நஞ்சபூசுமுனை வாள்கள்வீசுவன முத்தலைக்
கழுக்கள்வீசுவன குந்தநேமியெரி காலவீசுவன காலனே
ரெழுக்கள்வீசுவன கப்பணங்கள்விட மென்ன வீசுவனவன்னெடுங்
கொழுக்கள்வீசுவன கற்கவண்கயிறு கோத்துவீசுவனவார்த்தரோ.

நஞ்சுபில்குதுளை வாளெயிற்றரவு நாகிமிர்த்தெரியு மலையரா,வெஞ்சினங்கொண்முழை வாய்திறந்துபொரு வாரைவிக்கிட விழுங்குமாற், குஞ்சரங்கொடிய முசலம்வீசியெதிர் குறுகுவார்தலைகள் சிதறுமா, லஞ்சுவெம்பொறி விசைப்பினுங்கடுகி யடுபுலிப்பொறியமுக்குமால். (உச)

எள்ளியேறுநரை யிவுளிமார்பிற வெறிந்துகுண்டகழி யிடைவிழத்
தள்ளிமீளுமுருள் கல்லிருப்புமுளை கந்துவீசியுடல் சிந்துமாற்
கொள்ளிவாயலகை வாய்திரந்துகனல்கொப்புளிப்பவுடல்குப்புறத்
துள்ளியாடுவன கைகள்கொட்டுவன தோள்புடைப்பசில கூளியே.

துவக்குசங்கிலி யெறிந்திழுக்குமரி தொடர்பிடித்தகை யறுக்கவிட், டுவக்குமொன்னலர்க டலைகளைத்திருகி யுடனெருக்குமர நிலைகளாற், கவைக்கொழுந்தழல்கொ ளுத்திவீசுமெதிர் கல்லுருட்டியடு மொல்லெனக், குவைக்கடுங்கன்மழை பெய்யுமட்டமணல் கொட்டுமேவலர்கள் கிட்டவே. (உஎ)

உருக்கியீயமழை பெய்யுமாலயவுருக்குவட்டுருகு செம்பினீர், பெருக்கிவீசும்விடு படையெலாமெதிர் பிடித்துவிட்டவர்தமைத்தெறச், செருக்கிவீசுநடை கற்றமாடமொடு சென்றுசென்றுதுடி முரசொடும், பெருக்கிமீளுநடை வையமேனடவி யெய்யும்வாளிமழை பெய்யுமால். (உஅ)

---

(உச) முத்தலைக்கழு - சூலம். எழு - வளைதடி. கப்பணம்-நெருஞ்சிலென்னு மோராயுதம்.

(உ௬) தந்து - அரிகயிறு. இதை சீவகசிந்தாமணி நாமகளிலம்பகம், நகர்வளம் உஎ-வது செய்யுளில், "கூர்ந்தறிவநுண் ணூல்" என்பதற்கு, அரிகயிறு என நச்சினார்க்கினியர் கூறிய வுரையானுமுணர்க. கூளி - பேய்.

(உஎ) அரிதொடர் — இது துவக்கு சங்கிலிகளுள் ஒருவகை.

வெறிகொளைம்பொறியைவெல்லினும்பொருது வெல்லுதற்கரிய காலனை, முறியவெல்லினும் வெலற்கருங்கொடிய முரணவாயமர ரரணைலா, மறிவிஞனிறுவு கம்மியன்செயவு மரியவாயவனர்புரியு மிப், பொறிகள்செய்யும்வினை யின்னபொன்னணிபுரத்துவீதிக ளுரைத்துமால். (உகூ)

கலிநிலைத்துறை.

கழையுந்தாமமுஞ் சுண்ணமுமணிநிழற் கலனுங்
குழையுந்தூபமுந் தீபமுங்கும்பமுந் தாங்கித்
தழையுங்காதலர் வரவுபார்த்தன்பகந் ததும்பி
விழையுங்கற்பிஞ ரொத்தனவிழாவரு வீதி. (௩௦)

ஆலநின்றமா மணிமிடற்றண்ணலா னந்தக்
கோலநின்றசே வடிநிழல்குறுகினர் குணம்போல்
வேலைநின்றெழு மதியெதிர்வெண்ணிலாத் தெண்ணீர்
காலநின்றன சந்திரகாந்த மாளிகையே. (௩க)

குன்றநேர்பளிக் குபரிகைநிரைதொறுங் குழுமி
நின்றபல்சரா சரமும்நீழல்வாய் வெள்ளி
மன்றகம்பொலிந் தாடியமலரடி நிழல்புக்
கொன்றியொன்றறக் கலந்தபல்லுயிர்நிலை யனைய. (௩உ)

கருத்தருந்துபுற் குவைகழீஇக்காற்றொடர் பரியத்
தெரித்தகன்றயன் மரகதசித்திரத் தெற்றி
யெறித்தபைங்கதிர்க் கொழுந்தையுமெட்டிநா வளைத்துப்
பறித்துமென்றுவா யசைப்பனபசலையான் கன்று. (௩௩)

சிறுகுகண்ணவாய்க் காற்றெறிசெவியவாய்ப் பாச
மிறுகுகாலவாய்க் கோட்டுமொனினம்வழங் காறுங்
குறுகுநுண்மருங் கிறுத்தெழுகோட்டுமொ னினம்போ
மறுகும்வண்டுசூழ்ந் திறைகொளமான்மத நாறும். (௩ச)

மாடமாலையு மேடையுமாளிகை நிரையு
மாடரங்கமு மன்றிவேளன்னவர் முடியு
மேடவிழ்ந்ததா ரகலமுமிணைத்தடந்தோளுஞ்
சூடுமொதரார் சீறடிப்பஞ்சுதோய் சுவடு. (௩ரு)

(உகூ) கம்மியன் - தேவதச்சன். யவனர் - சிற்பர்.
(௩௦) குழை - மாந்தளிர்.
(௩ச) கோட்டுமொனினம்-கொம்புகளையுடையயானைக்கூட்டம், மலைச்சிகரம்போன்ற ஸ்தனங்களும், மான்போன்ற பார்வைகளை யுமுடைய பெண்கூட்டம். மான்மதம் — பெரியமதம், கஸ்தூரி.
(௩ரு) சீறடி - சிற்றடி.

மருமச்செம்புன லாறிட மாறடுகோட்டுப்
பருமச்செங்கண்மால் யானையின் பனைக்கையுமறைநூ
லருமைச்செம்பொரு ளாய்ந்தவர்க் கரும்பொருளீவோர்
தருமச்செங்கையு மொழுகுவ தானநீராறு. (௩௬)

பரியமாமணி பத்தியிற் பதித்திருட்படலம்
பொரியவில்லிடக் குயிற்றிய பொன்னரமியமுந்
தெரியமாமுர சொலிகெழு செம்பொனுடரங்கு
மரியமின்பயோ தரஞ்சுமந்தாடுவ கொடிகள். (௩௭)

வலம்படும்புயத் தாடவர் மார்பமேற்புலவிக்
கலம்படர்ந்தபூண் முலையினார் காலெடுத்தோச்சச்
சிலம்பலம்பிசை மழுங்கமுன் னெழுமவர்தேந்தார்ப்
புலம்புவண்டு நொந்தரற்றிய பொங்குபேரொலியே. (௩௮)

தையலார்மதி முகங்களுந் தடங்களுங்குழைய
மையளாவிய விழிகளு மாடமுங்கொடிய
கையுநாண்மலர்ப் பொதும்பருங் கறங்கிசைவண்ட
ரெய்யவோதியும் வீதியு நீளறனெறிய. (௩௯)

மலருந்திங்கடோய் மாடமுஞ் செய்வணமணங்க
ளலருந்தண்டுறை யுங்குடைந் தாடுவதும்பி
சுலவுஞ்சோலையு மாதருந் தூற்றுவவலர்கள்
குலவும்பொய்கையு மனைகளுங் குறைபடாவன்னம். (௪௦)

ஊடினாரெறி கலன்களு மம்மனையுடன்பந்
தாடினார் பரியாரமு மடியினாற்சிற்றில்
சாடினாரொடு வெகுண்டுகண் டதும்புமுத்திறைப்ப
வாடினார்பரி சித்தில மாலையுங்குப்பை. (௪௧)

ஐயவென்னுரை வரம்பின தாகுமோவடிய
ருய்யமாமணி வரிவளை விறகுவிற்றுழன்றோன்

(௩௬) பருமம் - கவசம். செம்பொருள் - உண்மைப்பொருள். தானநீர் - மதநீர் - தத்தஞ்செய்யுநீர்.

(௩௭) அரியமின்பயோதரம் - மேகத்தைக்குறிக்குங்கால் - அரிய - பசுமை, மின் - மின்னல், பயோதரம் - மேகம். எனவும், பெண்களைக்குறிக்குங்கால் - அரிய - இல்லாத, மின் - இடை, பயோதரம் - கொங்கை. எனவும், பொருள்கொள்க. முரசு - ஈண்டு மத்தளம். கொடிகள் - துவசங்கள் - கொடிபோன்றபெண்கள்.

(௪௨) ஐய - வியப்பிடைச்சொல்.

பொய்யில்வேதமுஞ் சுமந்திடப் பொருதகன்றரற்றுஞ்
செய்யதாண்மலர் சுமந்திடத் தவஞ்செய்ததெருக்கள். (சஉ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தோரணநிரை மென்காஞ்சி சூழ்நிலைநெடுந்தேரல்குற்
பூரணகும்பக் கொங்கைப் பொருவின்மங்கலமாமங்கை
தாரணிந் தாரந்தூக்கிச் சந்தகிறிமிர்ந்துபாலிச்
சீரணிமுளை வெண்மூரல் செய்துவீற்றிருக்குமன்றே. (சந)

திங்களைச் சுண்ணஞ்செய்து சேறுசெய்தூட்டியன்ன
பொங்குவெண் மாடப்பந்தி புண்ணியம்பூசுந்தொண்டர்
தங்கண்மெய் வேடந்தன்னைத் தரித்தனசாலக்கண்கொண்
டங்கணன் விழவுகாண்பா னடைந்தெனமிடைந்தவன்றே. (சச)

தேரொலி கலினப்பாய்மான் சிரிப்பொலிபுரவிபூண்ட
தாரொலி கருவியைந்துந் தழங்கொலிமுழங்குகைம்மான்
பேரொலி யெல்லாமொன்றிப் பெருகொலியன்றியென்றுங்
காரொலி செவிமடாது கடிமணிமாடக்கூடல். (சரு)

**பரத்தையர்வீதி.**

இழிபவருயர்ந்தோர்மூத்தோ ரிளையவர்கழியாநோயாற்
கழிபவர்யாவரேனுங் கண்வலைப்பட்டுநெஞ்ச [ப்
மழிபவர்பொருள்கொண்டௌளுக்கெண்ணெய்போலளந்துகாட்டி
பழிபடுபோகம்விற்பா ராவணப்பண்புசொல்வாம். (சசு)

மெய்படுமென்பிஞர்போல் விரும்பிஞர்க்கருத்துந்தங்கள்
பொய்படுமின்பம்யார்க்கும் புலப்படத்தேற்றுவார்போன்
மைபடுகண்ணூர்காமன் மறைப்பொருள்விளங்கத்தீட்டிக்
கைபடச்சுவராய்த்தோன்றச் சித்திரங்காணச்செய்வார். (சஎ)

திருவிற்கான்மணிப்பூணகம் பலகையாத்தெண்முத்தார
வருவிக்கால்வரைமென்கொங்கைச் சூதொட்டியாடிவென்று
மருவிக்காமுகரைத்தங்கள் வடிக்கண்வேன்மார்பந்தைப்பக்
கருவிச்சூதாடிவென்றுங் கைப்பொருள்கவர்தல்செய்வார். (சஅ)

---

(சச) புண்ணியம்-விபூதி. (சரு) கருவியைந்தாவன-தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி.

(சசு) பழிபடுபோகம்-என்றதை, பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின், மாண்டவறிவினவர். என்னுஞ்செய்யுளா னுணர்க.

(சஅ) வடிக்கண்-மாவடுவின்பிளவையொத்தகண். திருக்கோவையார்-"வடிக்கணிவைவஞ்சி, யஞ்சு மிடையிது" என்னும் பாசு

தண்பனிநீரிற்றோய்த்த மல்லிகைத்தாமநாற்றி
விண்படுமதியந்தீண்டும் வெண்ணிலாமுற்றத்திட்ட
கண்படையணைமேற்கொண்டு காமனுங்காமுற்றெய்தப்
பண்பலபாடிமைந்த ராவியைப்பரிசில்கொள்வார். (சக)

குரும்பைவெம்முலையிற்சிந்து சாந்தமுங்குழலிற்சிந்து
மரும்பவிழ்மாலைத்தாது மளிநுகர்ந்தெச்சிலாகிப்
பொரும்பரிக்காலிற்றூளாய்ப் போயரமாதர்மெய்யு
மிருங்குழற்காடுஞ்சூழ்போ யியன்மணம்விழுங்குமன்றே. (ருo)

ஆலவாயுடையானென்று மங்கயற்கண்ணியென்றுஞ்
சோலைவாழ்குயிலினல்லார் சொல்லியாங்கொருங்குசொல்லும்
பாலவாங்கிளிகள்பூவை பன்முறைகுரவனோது
நூலவாய்ச்சந்தைகூட்டி நுவன்மறைச்சிறாரையொத்த. (ருக)

ஔவியமதர்வேற்கண்ணா ரந்தளிர்விரனடாத்துந்
திவ்வியநரம்புஞ்செவ்வாய்த் தித்திக்குமெழாலுந்தம்மிற்
கௌவியநீரவாகிக் காளையர்செவிக்காலோடி
வெவ்வியகாமப்பைங்கூழ் விளைதரவளர்க்குமன்றே. (ருஉ)

கட்புலனுதியைந்து முவப்புறக்கனிந்தகாமம்
விட்புலத்தவரேயன்றி வீடுபெற்றவரும்வீழ்ந்து

---

ரத்தில், வடி-என்பது வடுவின்விகிருக்கோர்பெயரென, நச்சினார்க்கினியரெழுதிய வுரையானுமுணர்க.

(ருo) இயன்மணம் - என்றது, தெய்வப்பெண்கள் சரீரங்களும், கூந்தல்களும், இயல்பாகவே மணமுடைமையின். அதுபோலவே இந்நிலமாதர், சரீரமுங்கூந்தலும், இயல்பாகவே மணமுடையனவென்றதை "கொங்குதேர்வாழ்க்கை" யென்னுந் திருமுகப் பாசுரத்தானுமுணர்க.

(ருக) நூல்அவாய் - வேதத்தைவிரும்பி. சந்தைகூட்டல்-ஆசிரியர் கூறிய வேதவாக்கியங்களை ஒருசேரச்சொல்லுதல்.

(ருஉ) திவ்ய-திவ்-சொர்க்கத்தில், ய-பிறப்பது. எனவே, தெய்வத்தன்மையுடைய தென்பதுபொருள். நரம்பென்றது, இணை, கிளை, பகை, நட்பு என்னும், யாழிற்குரியநால்வகை நரம்பினை,குரல், துத்தம் முதலிய எழிசையினையும், வீணைகளி னரம்புகளென்பதுமொன்று. எழால் - கண்டத்தொனி.

பெட்பமுற்றமுதுங்கைப்பப் பெருங்குலக்கற்பினார்போ
னட்பிடைப்படுத்திவிற்கு நல்லவரிருக்கையீதால். (ருங)

**வேளாளர்வீதி.**

வழுக்கறுவாய்மைமாண்புங் கங்கைதன்மரபின்வந்த
விழுக்குடிப்பிறப்புமூவ ரேவியவினைகேட்டாற்று
மொழுக்கமுமமைச்சாய்வேந்தர்க் குறுதிசூழ்வினையுங்குன்றா
விழுக்கறுமேழிச்செல்வர் வளமறுகியம்பலுற்றாம். (ருச)

வருவிருந்தெதிர்கொண்டேற்று நயனுரைவழங்குமோசை
யருகிருந்தடிசிலூட்டி முகமனன்கறையுமோசை
யுரைபெறுதமிழ்பாராட்டு மோசைகேட்டுவகைதுள்ள
விருநிதியளிக்குமோசை யெழுகடலடைக்குமோசை. (ருரு)

அருந்தினரருந்திச்செல்ல வருந்துகின்றாருமாங்கே
யிருந்தினிதருந்தாநிற்க வின்னமுதட்டுப்பின்னும்
விருந்தினர்வரவுநோக்கி வித்தெலாம்வயலில்வீசி
வருந்திவிண்ணோக்குமோரே ருழவர்போல்வாடிநிற்பார். (ருசு)

வானமுந்திசையும்பொங்கும் புகழ்மையும்வானம்பேணு
ஞானமும்பொறையுங்குன்றா நன்றியுமூக்கப்பாடுந்
தானமுங்கொடையுமன்பும் வரிசையுந்தகைசானண்பு
மானமுந்தவஞ்செய்தீன்ற மகவுபோல்வளர்க்கவல்லார். (ருஎ)

**வணிகர்வீதி.**

புல்லியோர்பண்டங்கொள்வார் வினவினப்பொருடம்பக்க
மில்லெனினினமாயுள்ள பொருளுரைத்தெதிர்மறுத்து
மல்லதப்பொருளுண்டென்னின் விலைசுட்டியறுத்துநேர்ந்துஞ்
சொல்லிலுமிலாபங்கொள்வார் தொன்மரபிருக்கைசொல்வாம். ()

கலிநிலைத்துறை.

நீலவேதிமேற்பளிங்கிு னிழற்சுவர்நிறீஇமின்
காலவாலியவைரவாட் கானிரைத்தும்பர்க்

---

(ருங) அமுது-தேவருணவு - மோட்சம். ஆதலால் விண்ணுலகத்தவர் அமுதுகைப்பஎனவும், வீடுபெற்றவர் மோட்சங்கைப்ப எனவும், பொருள்கொள்க. நல்லவர் - கணிகையர்.

(ருச) மூவர் - அந்தணர், அரசர், வைசியர். சேர சோழபாண்டியரென்றுங் கூறுவர்.

(ருஎ) வரிசை - தத்தமக்குற்றநிலையிற்றவராமை.

(ருகூ) உம்பர் - மேலிடம். இயற்றின, பலவிகுதி தொக்குநின்றசெயப்பாட்டு வினைமுற்று.

கோலவாணிலாச்சொரிமணி குயிற்றிவெண்மாட
மாலைபோல்வகுத்தியற்றின பீடிகைமறுகு. (ருகூ)

(க) திரையளிப்பவுந்திரைபடு தீம்புனல்வேலிக்
(உ) கரையளிப்பவுங்கரையிலா னிரைபடுகானத்
(ங) தரையளிப்பவுந்தரைகிழித் தூன்றிவிண்டாங்கும்
(ச) வரையளிப்பவும்வாங்கிவாய் மடுப்பனமாடம். (சூo)

கரியகம்பலக்கிடுகின்மேற் கதிர்விடுவளத்
தெரியல்பொன்னரிமாலிகை தெண்ணிலாச்சொரியும்
பரியநித்திலமணிவட மரகதப்பசுந்தார்
விரியவிட்டனவிந்திர வின்னிரையனைய. (சூக)

நாள்களுங்குளிர்திங்களு ஞாயிறுமேனைக்
கோள்களுங்குளிர்விசும்பொரீஇக் குடிபுகுந்தாங்கு
வாள்கிடந்திராப்பகலொளி மழுக்கலால்வணிக
ராள்கலம்பகர்பீடிகை துறக்கநாடனைய. (சூஉ)

பன்னிறத்தபல்பெருவிலைப் பட்டெலாமவண
வன்னபட்டின்மேம்படுவிலைப் பருத்தியுமவண
வெந்நிலத்தரும்பொருள் பதினெழுபுலவணிகர்
மன்னிருக்கையுமருப்பெறல் வளனெலாமவண. (சூங)

மரகதத்திரளலம்மிகள் வைரவாளுலக்கை
யுரல்கள்வெள்ளியா லடுப்பகில்விறகுலைபனிநீ
ரரிசிமுத்தழல்செம்மணி யடுகலன்பிறவு
மெரிபொனுலிழைத் தாடுபவிவர்சிறுமகளிர். (சூச)

செயிரிற்றீர்ந்தசெம் பொன்னிறைற்றிண்ணிலைக்கதவம்
வயிரத்தாழுடைத் தவர்கடைவாயிலுமென்று

(சூo) க. உப்பு, முத்து, பவளம், சங்கு, ஒக்கோலை-ஆக-ரு.
உ. செந்நெல், சிறுபயறு, கரும்பு, வாழை, செவ்விளநீர்-ஆக-ரு.
ங. தேன்டை, தேன், மயிற்பீலி, அரக்கு, நாவி-ஆக-ரு.
ச. மிளகு, கோட்டம், அகில், தக்கோலம், இலவங்கம்-ஆக-ரு.

(சூக) கரியகம்பலம்-கறுப்புக்கம்பளம். இடுகு-சட்டம்.

(சூஉ) பீடிகை-கடைவீதி. (சூங) பட்டு, பருத்தி, இவை ஆடையாகிய காரியத்தின்மேல் நிற்றலால் காரியவாகுபெயர்கள்.

(சூரு) செயிரிற்றீர்ந்த செம்பொன் என்றது - ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்புநதம் என்னு நால்வகைப் பொன்னுளுயர்ந்தசாம்புநதத்தை. அயிர்-குற்றம். இசைப்பதை-இதில்-ஐ-சாரியை.

லயிறிற்றீர்ந்தபேரறிஞரு மனையர்தஞ்செல்வத்
தியலிற்றுமெனவரையறுத் திசைப்பதையெவனே. (சுரு)

எரிக்குறும்பொறியனையசெம் மணிசுடரெறிபொன்
வரிச்சுரும்புநேர்மரகத முத்துவாள்வைரந்
தெரிப்பருந்துகிர்சிந்தின செல்லுநாளொன்றுக்
கரிப்பர்கையகப்படுவன வாயிரத்திரட்டி. (சுசு)

பாயதொன்மரப்பறவைபோற் பயன்கொள்வான்பதினெண்
டேயமாந்தருங்கிளந்த சொற்றிரட்சிதான்றூய
மாயைகாரியவொலியன்றி வான்முதற்கருவி
ஞயகாரியவோசையே யாய்க்கிடந்தன்றே. (சுஎ)

ஒழிவில்வேறுபல்பொருளுமே ழுலோகமும்பிறவும்
வழுவில்வேறுபல்கலைகளு மரபுளிவகுத்துத்
தழுவிவேண்டினர் தாங்கொளத்தக்கவாபகரா
வழிவிலாமறை போன்றனவாவண வீதி. (சுஅ)

திக்கெலாம்புகழ் மதுரையைச்சிவபுரமாக்கி
முக்கணுயகனரசுசெய் முறையினுக்கேற்பத்
தக்கதோழனே டளகைமாநகருறைதயக்க
மொக்குமந்நகர் வாணிகருறையுள்சூழ்நியமம். (சுகூ)

---

(சுசு) குறுமை - சிறுமை. சிந்தின, அகப்படுவன, வினையாலணையும் பெயர்கள், எரிக்குறும்பொறி, சிறியதீப்பொறி. அரிப்பர்—அரித்துப்பொருள் தேடுவோர்.

(சுஎ) தூயமாயை-சுத்தமாயை. தூயமாயைகாரியவொலி-அக்கரங்களின்வடிவாய்ப் பொருள்பயப்பது. இதை, "மொழிக்காரணமாநாதகாரியவொலி, எழுத்து" என்பதனுலுமுணர்க. வான்முதற்கருவிஞய காரியவோசை, பொருள்பயக்கும்அக்கரவடிவைப்பெறுது, பஞ்ச பூதங்களின் காரியப்பாட்டா லெழும், அநுகரணவோசை. தொன்மரம் — ஆலமரம்.

(சுஅ) பல்பொருள் - பலபண்டங்கள் - அறமுதலிய வுறுதிப்பொருள்கள். எழுலோகம்-பொன் வெள்ளிமுதலியன-பூலோகம். புவலோகமுதலிய எழுலகம். பல்கலைகள் - பலஆடைகள் — அறுபத்துநான்குகலைகள். பகர்தல் - விற்றல் - அறிவித்தல்.

(சுகூ) தயக்கம் - தோற்றம். நியமம் - கடைவீதி.

## மன்னவர்வீதி.

ஒற்றையாழியானுலகிரு ளொதுக்குமாபோலச்
செற்றநேமியாற் கலியிருடின் றுகோ லோச்சி
மற்றடம்புய வலியினுன்மாறடுசீற்றக்
கொற்றமன்னவர் விழுக்குடிக்கோமறுகுரைப்பாம். (எ0)

தரங்கவேலைகடம்மையே தாளுறப்பிணித்துத்
துரங்கமாவெனத்தொகுத்தமந்திரம்பலவருவி
யிரங்குமோரறிவுயிர்வரை யாவையும்பெயர்த்து
மரங்கொல்யானைபோற் பிணித்தகூடம்பலமன்றே. (எக)

மழுக்கள்வச்சிரங்கார்முகம் வாளிமுக்குடுமிக்
கழுக்கள்சக்கரமுடம்பிடி கப்பணநாஞ்சி
லெழுக்கணுந்தகம்பலகைதண் டிவைமுதற்படையின்
குழுக்களோடிகல்விந்தைவாழ் கூடமும்பலவால். (எஉ)

துளையகல்லைமாலெனக்கொண்டு சுழற்றியுஞ்செந்து
ளளையும்யானைபோற்பாய்ந்துமல் லாற்றியுமாற்றல்
விளையவாளொடுகேடகம் வீசியும்வென்றி
யிளையராடமர்பயில்வன வெண்ணிலாக்கூடம். (எ௩)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தேசவிர்நீலமாடஞ் செம்மணிச்சென்னிமாடங்
காசறுகனகமாடஞ் சந்திரகாந்தமாட
மாசறவிளங்குமின்ன மாடநீண்மாலைகூடற்
பாசிழைமடந்தைபூண்ட பன்மணிக்கோவையன்ன. (எ௪)

விரையகல்கதுப்பினல்லார் வீங்கிளங்கொங்கைபோழ்ந்த
வரையகன்மார்பமன்றி வடுப்படார்தமக்கன்பில்லா
ருரையகன்மாணவாற்று லொழுகுவார்பலகையொள்வாட்
கரையகல்விஞ்சைவீரர் கணம்பயில்காட்சித்தெங்கும். (எ௫)

மின்னைவாளென்னவீசி வீங்குகார்தம்மிற்போர்மூன்
டென்னவான்மருப்புநீட்டி யெதிரெதிர்புதையக்குத்தி
யன்னவானென்னவாய்விட் டதுவெனச்செந்நீர்சோரப்
பொன்னவாமகன்றமார்பர் பொருகளிறூட்டுவார்கள். (எ௬)

(எ0) கோல்-நீதிமேனிற்றலா லுவமையாகுபெயர்.

(எக) மந்துரை - குதிரைலாயம். கூடம்-யானைக்கட்டுமிடம்.

(எஉ) விந்தைவாழிடம்-துர்க்காதேவிவாழுமிடம், அதாவது-
ஈண்டு, ஆயுதசாலை.

தூண்டுவாருள முந்தங்கள் பின்னிடத்துவக்குண்டூர்த்துத்
தாண்டுமொன்றைறையாழித் தேரினுந்தள்ளித்துள்ளப்
பாண்டில்வாய்ப்பசும்பொன்றேயப் பார்மகண்முதுகுகீண்டு
சேண்டிசைபோய்மடங்கச் செல்வத்தேர்நடத்துவார்கள். (எள)

மைந்தர்தந்நெருக்கிற்சிந்து கலவையுமகளிர்கொங்கைச்
சந்தமுங்கூந்தல்சோர்ந்த தாமமுஞ்சிவிறிவீசு
சிந்துரப்பொடியுநாறத் தேனொடுமெழுந்துசெந்தூ
ளந்தரவயிறுதூர்ப்ப வடுபரிநடத்துவார்கள். (எஅ)

தம்முயிர்க்கிரங்காராகித் தருக்கொடுமானமீர்ப்பத்
தெம்முனையெதிர்ந்தாராற்றுஞ் செருவெனக்குருதிசெங்கேழ்க்
கொய்ம்மலர்குடுமிச்சேவல் கோழிளந்தகர்போரூட்டி
வெம்முனைநோக்கிநிற்பார் வேறவற்றூறுநோக்கார். (எகூ)

பெண்முத்தமனையபேதைச் சிறுமியர்பெருநீர்வையை
வெண்முத்தமிழைத்தசிற்றில் சிதைபடவெகுண்டுநோக்கிக்
கண்முத்தஞ்சிதறச்சிந்துங் கதிர்முத்தமாலைதட்பத்
தெண்முத்தினகைத்துச்செல்வச் சிறார்கடேருருட்டுவார்கள். (அ௦)

கொடிமுகிறுழாவுமிஞ்சிக் கோனகர்வடகீழ்ஞாங்கர்
முடிமிசைவேம்புநாற முருகவிழாரும்போந்து
மடிமிசைநாறத்தென்னர் வழிவழியரசுசெய்யு
மிடிமுரசுறங்காவாயி லெழுநிலைமாடக்கோயில். (அக)

மற்றையவர்வீதி.

ஆத்திகருண்டென்றோது மறமுதற்பொருள்கணான்கு
நாத்திகம்பேசும்வஞ்சர் நாவரிகருவியாக
வாத்தனுலுரைத்தவேத வளவுகண்டுள்ளந்தேறித்
தீர்த்தராய்முத்திவேட்குஞ் செல்வர்தம்மிருக்கைசொல்வாம். (அ௨)

முஞ்சிநாண்மருங்கின்மின்னப் பொன்செய்தமுளரிவேய்ந்த
குஞ்சிநான்றசையத்தானைச் செருக்குமுன்கொய்துதூங்கப்

---

(எகூ) தருக்கு - வீரச்செருக்கு. முனை - யுத்தம்.

(அக) முடிமிசைவேம்புநாற, என்றது, பாண்டியர்க்கு வேப்பமலர்மாலை உரியதாதலின். ஆர்-ஆத்திமாலை, போந்து-பனைமாலை.

(அ௨) ஆத்திகர்-கடவுளுண்டென்பவர். நாத்திகர் - அறமுதலிய வுறுதிப்பொருள்க ளில்லையென்றும், மகளிரின்பமே முத்தியென்றுங்கூறும் உலோகாயதன்முதலியோர். அளவு - அனுமானுதிப் பிரமாணங்கள். தீர்த்தர்-பரிசுத்தமுடையவர்.

பஞ்சிநாண்கலைத்தோண்மார்பும் பலாசக்கோல்கையுந்தாங்கி
யெஞ்சிநான்மறைநூல்கற்போர் கிடைகளேயில்லமெல்லாம். (அ௩)

தீவினையந்தணாளர் சிறார்பயிறெய்வவேத
நாவுருவேற்றக்கேட்டுக் கிளிகளோநவிலும்வேற்றுப்
பூவையும்பயின்றுபுத்தே ளுலகுறைபுதுமந்தாரக்
காவுறைகிளிகட்கெல்லாங் கசடறப்பயிற்றுமன்னே. (அ௪)

வேதமுமங்கமாறு மிருதியும்புராணநூலின்
பேதமுந்தெரிந்தோராலும் பிறமதங்களையவல்ல
வாதமுமதமேற்கொண்டு மறுத்தலுநிறுத்தவல்ல
போதமுமுடையோராலும் பொலிந்தனகழகமெல்லாம். (அ௫)

உறிபொதிகரகக்கைய ரொளிவிடுசெங்கற்றோய்த்த
வறுவையருயிர்க்கூறஞ்சு நடையினரவிச்சைமாள
வெறிசுடர்மழுவாளென்னக் கோவணமார்த்தகோலர்
மறைமுடிவன்றித்தேறா மாதவர்மடங்களெங்கும். (அ௬)

அட்டில்வாய்ப்புகையுமாடத் தகில்படுபுகையும்வேள்வி
விட்டெழுபுகையுமொன்றி விரிசுடர்விழுங்கக்கங்குல்
பட்டதுபலருந்தத்தம் பயில்வினையிழக்கநங்கை
மட்டவிழ்கடுக்கையான்கண் புதைத்தநாண்மானுமன்னே. (அ௭)

சைவர்வீதி-கலிநிலைத்துறை.

தெய்வநீறுமைந்தெழுத்துமே சிதைக்கலனாக
வெவ்வமாசிருவினையுடம் பெடுத்துழல்பிறவிப்

---

(அ௩) பஞ்சிநாண் - உபவீதம். கலைத்தோல்-கிருஷ்ணசினம். கிருஷ்ணம்-மான், அசினம்-தோல். எனவே கிருஷ்ணசாரமென்னு மொருவிதமானின்தோல், என்பதுபொருள். பலாசம் - முண்முருக்கு. கிடைகள் - வேதாத்தியயன பாடசாலைகள்.

(அ௫) அங்கம் ஆறுவன-மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம். மதமேற்கொண்டு மறுத்தலாவது - அவ்வவர்மதத்திற்கூறும் பந்தமுத்தியிலக்கணங்களைமேற்கொண்டு, பிரமாணம், பிரமேயம், பிரமாதா, பிரமதிஎன்னும் நால்வகை இலக்கணங்களுள் ஒன்றோடொன்று வழுப்படக்கூறும் விகற்பங்களை யெடுத்துக்காட்டி விலக்குதல். நிறுத்தவல்லபோதமாவது-பிறர்தம்மதமேற்கொண்டு களைந்து சித்தாந்தத்தை நிறுத்தல்.

(அ௬) அறுவை - வஸ்திரம். அவிச்சை - மாயை.

(அஅ) சிதை-பாய்மரம். சிதைக்கலன்-சிதை-பாய்-கலன், மரக்கலம். பிறவிப்பௌவமேழென்றது-தேவர்,மானிடர்,விலங்குகள், பறவைகள், நீர்வாழ்வன, ஊர்வன, தாபரங்கண்முதலிய எழுபிறப்பினை.

பௌவமேழையுங்கடந்தரன்பதமலர்க்கரைசேர்
சைவமாதவருறைமடத்தனிமறுகுமைப்பாம். (அஅ)

எங்குமீசனைப்பூசைசெய்திகபரமடைவா
ரெங்குமன்பரைப்பூசைசெய்தெழுபிறப்பறுப்பா
ரெங்குமாகமஞ்செவிமடுத்தெதிர்வினைதடுப்பா
ரெங்குநாயகன்வடிவுணர்ந்திருண்மலங்களைவார். (அகூ)

அழிவிலானுரையாகமமிலக்கமாய்ந்தவற்றுள்
விழுமிதாகியவிதியிலும்விலக்கிலுமடியைத்
தழுவுதொண்டர்கண்மைந்தர்கள்சாதகர்பாசங்
கழுவிவீடருள்போதகக்காட்சியர்பலரால். (கூ0)

மறைகளாகமம்பொதுச்சிறப்பெனச்சிவன்வகுத்து
முறையினேதியவிதிவிலக்குறைகளுமுடிவி
லறையும்வீடுமொன்றிரண்டெனும்பிணக்கறவமைந்த
குறைவிலாச்சிவயோகியர்குழாங்களும்பலவால். (கூக)

குழலுந்தும்புருநாரதர்பாடலுங்குனித்துச்
சுழலுங்கொம்பனாராடலுமூவர்வாய்த்துதியும்
விழவின்செல்வமுஞ்சுருதியுந்திசையெலாம்விழுங்கு
முழவுங்கண்டுயிலாததுமுன்னவன்கோயில். (கூஉ)

மடங்கலின்றிவிண்பிளந்துமேல்வளர்ந்துவெள்ளேற்று
விடங்கர்வெள்ளிமன்றிமைத்தெழுவெண்சுடர்நீட்ட
முடங்கல்வெண்பிறைக்கண்ணியான்கயிலைமூவுலகு
மொடுங்குகின்றநாளோங்கியவோக்கமேயொக்கும். (கூ௩)

சுரந்துதேன்றுளித்தலர்களுஞ்சொரிந்துவண்டரற்ற
நிரந்துசுந்தரற்கொருசிறைநின்றலர்கடம்பு
பரந்துகட்புனலுகப்பலமலர்கடேய்ப்பழிச்சி
யிரந்துநின்றருச்சனைசெயுமிந்திரனிகரும். (கூ௪)

உழல்செய்தீவினையுருப்பறவுயிர்க்கெலாமடியி
னிழல்செய்வார்க்குநீணிழல்செயாநின்றபூங்கடம்பின்

---

(கூ0) அடியைத்தழுவுதொண்டர் - சரியைவழிநிற்போர். மைந்தர் - கிரியைவழிநிற்போர். சாதகர் - யோகவழிநிற்போர். பாசம்- ஆணவாதி ஐந்து மலங்கள். பச் - பந்தித்தல். அ - கருவிப்பொருள் விகுதி.

(கூ௩) கைலைமூவுலகு மொடுங்குகின்றநா ளோங்கியவோக்கம் என்றது, ஊழிதோறூழுங்குமவ்வோங்கல் என்றபடி எல்லாவுலகங்களும் நிலைகெட்டழியும் பேரூழிக்காலத்துத் திருக்கைலைமலை சிறிதுவளர்தலை.

குழல்செய்வண்டுகெற் பகமதுக்கொணர்ந்துவந்தூட்டித்
தழல்செய்காமமென் பேடையினூடலைநய்தணிக்கும். (ருரு)

ஆருநீர்க்கடலன்றது வெனநிறையகழ்கா
ரூருமாழியன் றதுவெனவோங்கெயிலெட்டாய்ச்
சாருநேமியன்றதுவெனச் சமைந்தகோபுரம்பொன்
மேருவன்றதுவெனச்சுடர் விசும்பிழிவிமானம். (ருசு)

வேதவந்தமுந்துளக்கற மெய்ப்பொருள்விளங்கு
நாதவந்தமுங்கடந்ததோர் நடுநிலைப்பொருளின்
பாதவந்தனைப்பத்தியின் பாலராய்ப்பயில்வோர்
மாதவந்தருபயனெனத் தழைத்தபல்வளனும். (ருஎ)

பொறிகளைந்தினுக்கூட்டுபல் போகமுமிதப்பச்
செறிகொணீரவாலுவப்பவத் திருநகர்மாக்க
ணெறிகொள்செஞ்சடைப்பிறைமுடி நிருமலக்கொழுந்தின்
வெறிகொளுண்மலரடிதழீஇ வீடுபெற்றார்போல். (ருஅ)

முன்னவன்னரசிருக்கையா லந்நகர்முளரிப்
பொன்னையீன்றதாலதுபல பொருணிறைசெல்வந்
தன்னையீன்றதாலதுபல தருமமென்றுரைக்கு
மின்னையீன்றதஃதீன்றதால் விழுத்தகுபுகழே. (ருகூ)

எழுக்கடந்ததோளுருத்திர வுலகமென்றியாரும்
வழுத்தநின்றவிந்நகர்வயி னும்பரின்மாண்ட
விழுத்தகும்பலசெல்வமும் வியர்ந்துபார்த்துள்ளத்
தழுக்கறுமையாலின்னமு மமரர்கண்ணுறங்கார். (௧௦௦)

விரையவிழ்ந்ததார்மீனவர் வாகைவேல்விடுத்துத்
திரையைவென்றதுமுடிதகர்த் திந்திரன்செருக்குக்
கரையவென்றதுங்கார்தளை யிட்டதுங்கனக
வரையைவென்றதுமிந்நகர் வலியினாலன்றே. (௧௦௧)

எங்குநாவுமாயெங்கணுங் கண்ணுமாயெங்குந்
தங்குபேரொளியல்லதித் தனிநகர்ச்செல்வஞ்

---

(ருசு) காருருமாழியென்றது - மேகங்கள்தவழுஞ் சக்ரவாளகிரியை. ஆழி - சக்கரம். எட்டாய்ச்சாருநேமி-அஷ்டகுலபர்வதங்களிலொன்றாயுள்ள ஒருபர்வதமெனப்பொருள்தந்து சிறத்தலால், பன்மையினொருமைவந்த பால்வழு வமைதியன்று.

(ருஎ) வேத அந்தம்-உபநிடதங்கள் - நாத அந்தம் - நாததத்துவத்தின் முடிவு.

செங்கணுயிரநாவினன் செப்பவுமெதிர்கண்
டங்கணுயிரமுடையவ னளக்கவும்படுமோ. (௧0௨)

புண்ணியம்புரி பூமிபாரதில்வருபோக
நண்ணியின்புறு பூமிவானுடென்பநாளும்
புண்ணியம்புரி பூமியுமதில்வருபோக
நண்ணியின்புறு பூமியுமதுரைமாநகரம். (௧0௩)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பண்கனிந்தனையசொல்லார் நரப்பிசைப்பாணிதேவ
ருண்கனியமுதுங்கைப்பச் செவிதுளைத்தூட்டவுண்டும்
பெண்களினமுதமன்னார் பெருமிதநடனமுண்ணக்
கண்களைவிடுத்துங்காலங் கழிப்பவரளவிலாதார். (௧0௪)

கலவிவித்தாகவூடிக் கட்புனல்குளிக்குநல்லார்
புலவிதீர்செவ்விநோக்கி புணர்முலைப்போகந்துய்த்து
நிலைநிலையாமைநோக்கி நெறிபடுதருமதானங்
கலைஞர்கைப்பெய்துங்காலங் கழிப்பவரெண்ணிலாதார். (௧0௫)

சந்தித்துமீனநோக்கி தலைவனைமூன்றுபோதும்
வந்தித்துமீசன்பூசை மரபுளிமுடித்தும்வேத
மந்தித்துமறியான்செய்த திருவிளையாடல்கேட்டுஞ்
சிந்தித்துமன்பர்பூசை செய்துநாள்கழிப்பார்பல்லோர். (௧0௬)

கற்பவைகற்றுங்கேட்டுங் கேட்டவைகருத்துளூறச்
சொற்பொருணினைந்துங் கேட்போர்க்குணர்த்தியுட்டுளக்கந்தீர்த்து
மெற்பகலிரவுநீங்கு மிடத்துமெய்யறிவானந்த
வற்புதவெள்ளத்தாழா தாழ்ந்துநாள்கழிப்பார்சில்லோர். (௧0௭)

தன்னிகருயர்ச்சியில்லான் காப்பியத்தலைவனாக
முன்னவர்மொழிந்ததேனோர் தமக்கெலாமுகமனன்றே

(௧0௨) ஆயிரம்நாவினன் - ஆதிசேடன். கண்ணுயிரமுடையவன் - இந்திரன்.

(௧0௩) போகம் என்றது-பெண்-ஆடை, அணிகலம், போசனம். தாம்பூலம், பரிமளம், பாட்டு, பூமவளி என்னும், அஷ்ட போகங்களை.

(௧0௫) புலவி - ஊடல். நிலை நிலையாமை என்றது — தோற்றக்கேடுகளை.

(௧0௬) மூன்றுபோது-காலை, மாலை, உச்சி. அந்தித்தல் - சமீபித்தல்.

(௧0௭) பகலிரவு என்றது - சகலகேவலங்களை.

(௧0௮) காப்பியம் — கவியாற்புனையப்படுவது - கவி, தன்னாற்புனையப்படுங் காப்பியத்தின் மேனிற்றலிற் கருவியாகுபெயர்.

உன்னதுதனதேயாகு மண்ணலேபாண்டிவேந்தா
யிந்நகர்க்கரசனுவா னிக்கவிக்கிறைவனுவான். (௧0அ)

என்னெனவுரைப்பேனிந்த விறைமகன்பண்பையேனை
மன்னவர்வானோர்போல மதித்துரைவிரிக்கற்பாற்றே
வன்னவனுணையாற்ற னடப்பதிவ்வகிலமென்றான்
முன்னவன்செய்தவாடல் வரவினைமுறையிற்சொல்வேன். (௧0௯)

மதுரைத்திருநகரப்படலம் முற்றிற்று.

ஆக படலம் ௩-க்கு - திருவிருத்தம் - ௧௧௯.

---

# திருக்கைலாசப்புகழ்ச்சி.



கலிநிலைத்துறை.

வரங்கடந்தருளெனமுதுவானவர்முனிவோர்
கரங்கடந்தலைமுகிழ்த்திடக்கருணைசெய்தவிச்சை
யுரங்கடந்துரையுணர்வெலாங்கடந்தருமறையின்
சிரங்கடந்தவனிருப்பதுதிருக்கயிலாயம். (௧)

புரந்தராதிவானவர்பதம்போதுறைபுத்தேள்
பரந்தவான்பதஞ்சக்கரப்படையுடைப்பகவன்
வரந்தவாதுவாழ்பதமெலாநிலைகெடவருநா
ளுரந்தவாதுநின்றூழிதோறோங்குமவ்வோங்கல். (௨)

அரம்பைமாதராராடலினரவமும்பாட
னரம்பினோசையுமுழவதிர்சும்மையுநால்வாய்
வரம்பிலோதையுமருவிவீழொலியுமாறாது
நிரம்பிவானமுந்திசைகளுநிமிர்வனமாதோ. (௩)

(௧0௯) வரவு - என்னுந் தொழிற்பெயர், பண்மைப்பொருண் மேனின்றது.

(௧) அவிச்சை-பாசம்.

(௨) ஊழிஎன்பதன்முதலில் அகரச்சுட்டுதொகுத்தல்.

(௩) நால்வாய் - யானை. இது தொங்கியசையும் வாயையுடையதெனப், பொருண்மே னிற்றலால், வினைத்தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகை நிலைத்தொடர். நரம்பு - வீணை மேனிற்றலால் தானியாகுபெயர்.

வெந்தநீற்றொளிவெண்மையும்விமலனையகங்கொண்
டந்தமின்றியேயசைவறவிருக்கையுமருவி
வந்தகண்களுங்கொண்டவணிருக்குமாதவர்க்குத்
தந்ததாலரன்கைலையுந்தனதுசாரூபம். (௪)

ஆங்குவெண்டுகில்விரித்தெனக்கல்லெனவார்த்து
வீங்குகாலருவித்திரள்வெள்ளமேயன்றி
யோங்குநான்மறைக்குடுமியினுள்ளொளிநோக்கித்
தூங்குமாதவர்கண்களுஞ்சொரிவனவெள்ளம். (௫)

கோட்டுமாமலர்நிலமலர்குண்டுநீரெடுத்துக்
காட்டுமாமலர்கொடிமலர்கொண்டுமுட்கரைந்த
பாட்டுமாமலர்கொண்டெம்பரஞ்சுடரடியிற்
சூட்டுமாதவர்தொகுதியுஞ்சூழ்வனவொருபால். (௬)

கையநாகமுங்காய்சினவுழுவையுங்கடுவாய்ப்
பையநாகமுந்தங்கிளைபரவியமுக்க
ணையனாகமெய்யருந்தவர்தமையடைந்தன்பு
செய்யநாகமும்வையமும்புகழ்வதச்சிலம்பு. (௭)

திருக்கைலாசப்புகழ்ச்சி முற்றிற்று.

ஆக படலம் ௪ - க்கு - திருவிருத்தம் - உ௬.

---

## புராணவரலாறு.



கலிவிருத்தம்.

அளந்திடற்கரிதாயவக்குன்றின்மேற்
களங்கறுத்துவிண்சாத்தவன்கோயின்முன்
விளம்பருஞ்சிவதீர்த்தத்தின்மிக்கதாய்
வளம்பெறுஞ்சிவதீர்த்தத்தின்மாடது. (க)

---

(௪) அந்தம் - முடிவு. அகம் - மனம் - இடம். கண் - கண்கள் - இடம். அவண் - அவ்விடம். சாரூபம் - சமானமானரூபம்.

(௫) தூங்கல் - நேயத்தழுந்தல். சொரிவன, என்னும் வினைமுற்று, பெயரெச்சமாய் நின்றது. வெள்ளம் - நீர்ப்பெருக்கு-ஆநந்தபாஷ்பம்.

(௬) கரைந்த, முதனிலை திரியாதுவந்த பிறவினைப் பெயரெச்சம்-இதுகரைக்குமென எதிர்காலப்பொருண் மேனின்றது.

(க) சிவதீர்த்தத்தின்மிக்கது - சிவனுடைய தீர்த்தங்களிலேயுயர்ந்தது. மாடு-பக்கம்.

தண்டருங்கதிர்ச்சந்திரகாந்தத்திற்
பண்டயங்கநவமணிபத்திசெய்
தண்டர்தச்சனனேகதவஞ்செய்து
கண்டதாயிரக்கான்மண்டபமரோ. (உ)

ஆனபான்மையினலந்தமண்டப
ஞானநாயகனுண்மலர்த்தாடொழ
மானமீனெனுவெந்துபதங்குறித்
தூனமின்மதிவைகுவதொத்ததே. (ங)

அன்னமண்டபந்தன்னுளருந்தவ
மென்னவேங்கையதண்மேலிருந்தனன்
பன்னுகேள்விப்பதினெண்புராணமுஞ்
சொன்னமாதவச்சூதமுனிவனே. (ச)

அந்தவேலையிலச்சிவதீர்த்தத்தில்
வந்துமூழ்கியம்மண்டபத்தேறியே
சந்தியாதிதவமுடித்தீறிலா
விந்துசேகரன்றுணினைந்தேத்தியே. (ரு)

சம்புபத்தன்சதானந்தனுத்தம
னம்புயத்தனனையமகோதர
னும்பரஞ்சியவுக்கிரவீரிய
னம்புகேள்விப்பிரசண்டநற்றவன். (சா)

ஆதிமாதவர்யாவருமன்புமை
பாதியாய்முற்றுமாகும்பராபரச்
சோதிபால்வைத்தசூதனைத்தோத்திர
மோதியஞ்சலித்தொன்றுவினுவினுர். (எ)

---

(உ) பதங்குறித்து - காலம் பார்த்து. மதி-மதுவையுடையது.

(ச) வேங்கையதள் - புலித்தோலாசனம்.

(ரு) சந்தியாதித்தவம் என்றது, சந்தியாகாலத்திற் செய்யும் பிராணுயாமம், மார்ஜனமுதலிய நித்தியகருமங்களை. சந்தி - பகலிராக்களின் கூட்டக்காலம், இதுவாச்சியார்த்தம். அக்காலத்தில் உபாசிக்கும் தேவதையைக் குறிப்பது இலக்கியார்த்தம்.

(எ) ஆதிமாதவர்—யாவரும்உமைபாதியாய் முற்றுமாகும்பராபரச்சோதிபால் அன்புவைத்த சூதனைத் தோத்திர மோதியெனக் கூட்டிப் பொருள் கொள்க.

கலிநிலைத்துறை.

வேதவாகமபுராணமேமிருதியேமுதலா
வோதுநூல்களின் றுணிபொருளுலகெலாம்பயந்த
பேதைபாகனேபரமெனத்தேர்ந் துணர்பெரிய
போதமாதவவுனக்கியாம்புகல்வதொன் றுளதால். (அ)

மேருமந்தரங்கைலைபர்ப்பதமுதல்விடைமே
லூருமந்தரநாடவனுறைபதியனந்த
மாருமந்தமில்போகம்வீட்டைவதென் றவற்றின்
காரணங்களோடுரைத்தனைகருத்தினுக்கிசைய. (கூ)

ஐயமாதிமுக்குற்றமுமகலநீயருளிச்
செய்யவுந்தெளிந்திலேங்கள்யாஞ்சிற்றறிவுடையே
மையநெஞ்சினேமாகையான்மயக்கறவின்ன
முய்யுமாறருள்செய்தியென் றுரைத்தனர்மன்னோ. (க0)

தலங்கடம்மின்மிக்குள்ளதாய்த்தகுதிசாற்றீர்த்தக்
குலங்கடம்மின்மிக்குடையதாய்க்குறையிரந்தோர்க்கு
நலங்கடந்தருண்மூர்த்தியாய்நாதவேதாந்தப்
புலங்கடந்தபேரொளியுறைதலனென் றுபுகலாய். (கக)

என்றபோதெதிர்முகமலர்ந்திருண்மலவலியை
வென்றசூதனுந்தலங்களின்விசேடமாய்ந்தம்பொற்
குன்றவார்சிலையானிடங்கொண்டுறைபதியு
ளொன் றுகேட்கவீடளிப்பதாயுளமற்றதுதான். (கஉ)

---

(அ) தேர்தல் - ஐயந்திரிபறத்தெளிதல். போதம் - ஞானம். உமக்கு, உயர்வுபற்றி ஒருமையிற் பன்மைவந்த வழுவமைதி.

(கூ) பருப்பதம் - ஸ்ரீபர்வதம். அந்தரநாடு - சிவலோகம்.

(க0) ஐயமாதிமுக்குற்றம் - ஐயம், திரிபு, அறியாமை. இவற்றுள் ஐயமாவது, ஒன்றில் துணிவுபெறாது நிற்றல். திரிபாவது- ஒன்றை, மற்றொன்றாகத்துணிதல். அறியாமையாவது - குற்றியை மகனே எனவும், இப்பியை, வெள்ளியே எனவுந்துணிதல். தெளிந்திலேங்கள் - இதில் கள்விகுதி, விகுதிமேல் விகுதியாகவந்த இடவழுவமைதி.

(கக) நாதவேதாந்தப் புலங்கடந்த பேரொளி என்றது, கலைஞானங்களை விளக்குமறிவையும், வைகரியாதி வாக்குகள் நான்கின் மேற்றதாம் தற்போதத்தையும், கடந்து நிற்றலை.

(கஉ) இருண்மலம் - ஆணவமலம்.

முற்றவோதியபுராணமூவாறினுட்காந்தம்
பெற்றதாறுசங்கிதையவையாறுந்தம்பெயராற்
சொற்றபேர்சனற்குமரமாமுனிவரன்சூதன்
கற்றவார்சடைச்சங்கரன்மாலயன்கதிரோன். (கஈ)

இன்னவாறனுட்சங்கரசங்கிதையென்று
சொன்னநூலினையுணர்த்தினன்சங்கரன்றுணைவிக்
கன்னபோதவண்மடியினிலிருந்துகேட்டதனை
மின்னுவேல்பணிகொண்டவேள்வெளிப்படவுணர்ந்தான். (கச)

குன்றெறிந்தவேள்வழிபடுகுறுமுனிக்குரைத்தா
னன்றுதொட்டஃதகத்தியசங்கிதையாகி
நின்றதன்னதுகேட்பவர்க்கரனடிகீழ
லொன்றுமின்பவீடளிப்பதாவொருதலனுரைக்கும். (கரு)

அதிகவப்பதியாதெனினலவாய்கேட்கக்
கதியளிப்பதென்றோதியசூதனைக்கதியின்
மதியைவைத்தவரன்னதைப்பகரெனவந்த
விதியினிற்புகல்கின்றனன்வியாதன்மாணக்கன். (கசு)

புதியதாமரைமேவியபழமறைப்புத்தேள்
விதியினற்கநெடைப்பரிமகஞ்செய்வான்வேண்டிக்
கதியைமாய்ந்தவர்க்குதவுதண்டுறைகெழுகாசிப்
பதியின்மைந்தரோடெய்தினன்பண்டொருவைகல். (கஎ)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அகத்தியன்வியாத ஞரதன்சனகனுதிநான் முனிவர்கோதம னாற், சிகைத்தெளிவுணர்ந்தபராசரன்வாமதேவன்வான்மீகியேவசி ட்டன், சகத்தியல்கடந்தசுகன்முதன்முனிவர் தம்மொடும்பத்து வெம்பரிமா, மகத்தொழின்முடித்துமற்றவர்க்குள்ள மகிழ்வுறவழங் குநவழங்கா. (கஅ)

(கஈ) பேர் - பன்மைப்பொருளில்வந்த வோரிடைச்சொல்.

(கரு) குன்று - கிரவுஞ்சமலை.

(கசு) கதி - மோட்சம்.

(கஎ) பழமறை - படைப்புக்காலந் தொட்டுள்ள வேதங்கள். பரிமகம் - பரி - அஸ்வம் - மகம் - யாகம். அஸ்வமேதயாகம்.

(கஅ) சனகனுதிநால்முனிவர்—சனகர், சனுதனர், சனந்த னர், சனற்குமாரர். சகம் - தோன்றியழிவது - உலகம்.

சத்தியவுலகிற்சரோருகக்கிழவன்சார்ந்தபின்புலப்பகைசாய்த்த வத்திருமுனிவரனைவருங்காசியடிகளையடைந்தனர்பணிந்து [யிற் முத்திமண்டபத்தினறமுதனான்கு மொழிந்தருண்மூர்த்திசன்னிதி பத்தியாயிருந்துநாரதமுனியைப்பார்த்தொருவினாவுரைபகர்வார்.

தலமுதன்மூன்றுஞ் சிறந்ததோர்சைவத் தலமுறையென்ன நாரதன்றான், கலைமுழுதுணர்ந்த சனற்குமாரன்பாற் கற்றவன்வி யாதனுமவன்பா, னலமுறக்கேண்மினென்ன வவன்கதிர்வேனம்பி பான்மறைமுதலனைத்து, மலமறவுணர்ந்தோன் குறுமுனியாகும வனிடைக்கேண்மெனவிடுத்தான். (௨௦)

மலயமாதவனை யடைந்துகைதொழுது வாழ்த்திவாதாவிவில் வலனைக், கொலைபுரிதருமமூர்த்தியேவிந்தக்குன்றடக்கியதவக்குன் றே, யலைகடல்குடித்த வருட்பெருங்கடலே யருந்தமிழ்க்கொண்ட லேதென்பா, றுலைபெறநிறுத்தகளைகணேயென்று சுருதியாயிரமெ னத்துதித்தார். (௨௧)

மூவகைச்சிறப்பு முள்ளதோர்தான மொழிகென முகமலர்ந்த ருள்கூர்ந், தியாவையுமுணர்ந்தோன் முத்திமண்டபத்தி லீரிருதொ கையின்வந்திறக்குஞ், சேவல்கடமையுமைங்கரன்றனையுஞ் சேவ லங்கொடியுடைவடிவேற், காவலன்றனையும்வடநிழலமர்ந்த கண் ணுதற்பரனையும்பணியா. (௨௨)

அங்கயற்கண்ணிதன்னையுமெந்தை யாலவாயானையுமிதய, பங் கயத்திருத்திச்சமாதியிலிருந்துபரவசமடைந்துபார்ப்பதிக்குச், சங் கரனருளிச்செய்தசங்கிதையைத் தாருகனுடலிரண்டாகச், செங் கைவேல்விடுத்த சேவகனெனக்குத்தெருட்டினு னனையசங்கிதை யில். (௨௩)

---

(௧௯) அறமுதல் நான்காவன - அறம், பொருள், இன்பம், வீடு. அலம் - சுழற்சி.

(௨௧) துலை - துலாக்கோல், நிறுத்த - நிறுத்திய. களைகண்- பற்றுக்கோடு. ஆயிரம் - அனந்தம்.

(௨௨) சேவல்களென்றது - மாகனந்தனென்னு மறையவனும், அவன்மனைவியும். மக்களிருவரும், மூன்றாம் யுகத்திற் பாவத்தாற் கோழிகளாய்ப்பிறந்து முத்திமண்டபத்தில்வந்து முத்தியடைவரெ ன்று காசிகாண்டத்திற் சொல்லப்பட்ட அக்கோழிகளாம்.

(௨௩) சமாதி - சுகத்துக்கு முதன்மையா யுள்ளது - அசைவ றவிருத்தல். பரவசமடைதல் - நேயத்தழுந்தல்.

பெறற்கருந்தவஞ் செய்தகந்தெளிந்தரிதிற் பெறுங்கதிகேட் பவர்க்கெளிதா, யுறப்படுந்தலநீர்விஞயமுச்சிறப்பு முள்ளதெத்தல த்தினுங்கழிந்த, சிறப்பிஞுங்கெண்ணெண்டிருவிளையாடல் செய்த ருள்வடிவெடுத்தென்று, மறைப்பொருள்விளங்கு மாலவாயதனை மண்ணின்மேற்சிவனுலகென்னும். (உச)

அத்தலத்தனையமூவகைச்சிறப்பு மளவிலாவுயிர்க்கெலாங்கருணை வைத்தவன்செய்ததிருவிளையாட்டும் வரையுரங்கிழியவேலெடுத்த வித்தகனெனக்குவிளம்பியவாறே விளம்புவனுமக்கெனவந்த [ன். வுத்தமமுனிவர்யாவருங்கேட்க வுணர்த்துவான்கடலெலாமுண்டா

புராணவரலாறு முற்றிற்று.

ஆ படலம் ௫ - க்கு திருவிருத்தம் - உருக.

---

# த ல வி சே ட ம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நாட்டமொருமூன்றுடைய நாயகனுக்கன்புடையீர் நயந்துநீவீ ர், கேட்டதலமீண்டுரைத்த திருவாலவாயதனுட்கிளைத்துப்பொன் னந், தோட்டலர்தாமரைமுளைத்த தொருதடமுஞ் சுந்தரச்செஞ் சோதிஞான, வீட்டமெனமுளைத்தசிவ லிங்கமுமொன்றுளதின்னு மிசைப்பக்கேண்மின். (க)

திருவாலவாய்க்கிணையாமொருதலமுந்தெய்வமணஞ்செய்யப்பூத்த மருவார்பொற்கமலநிகர்தீர்த்தமுமத்தீர்த்தத்தின்மருங்கின்ஞான வுருவாகியுறைசோமசுந்தரன்போலிகபரந்தந்துலவாவீடு தருவானுமுப்புவனத்திலுமில்லையுண்மையிதுசாற்றின்மன்னே. ()

அவ்வகையமூன்றின்முதற் றலப்பெருமைதனைச்சுருக்கி யறையக் னெவ்வகையவுலகத்துந்தருமதலமதிகமவற்றீறிலாத [கேண்மி சைவதலமதிகமவற்றறுபத்தெட்டதிகமவைதமிலீரெட்டுத் தெய்வதலமதிகமவற்றதிகதலநான்கவற்றைச்செப்பக்கேண்மின். ()

---

(உச) கழிந்த - மேன்மைப்பட்ட.

(உரு) மூவகைச்சிறப்பு - மூர்த்திச்சிறப்பு, தலச்சிறப்பு, தீர்த் தச்சிறப்பு.

(க) தோடு - இதழ்.

(உ) முப்புவனம் - சுவர்க்கம், மத்தியம், பாதலம்.

(௩) தருமதலம் - புண்ணியக்ஷேத்திரம். சைவதலம் - சிவஸ் தலம்.

அன்னமலிவயற்புலியூர்காசிநகர்காளத்தியாலவாயா
மின்னவளம்பதிநான்கிற்றிருவாலவாயதிகமெவ்வாறென்னின்
மின்னவிரம்பலங்காணக்காசிநகர்வதிந்திறக்கவியன்காளத்திப்
பொன்னகரம்பத்திபினுல்வழிபாடுசெயவளிக்கும்போகம்வீடு. (ச)

அறந்தழையுந்திருவால வாய்கேட்டவுடன்போகமளிக்குமீண்டு, பிறந்திறவாப்பேரின்பக் கதியளிக்குமிதுவன்றிப்பிறழாதெங்கு, நிறைந்தபரனெத்தலமும் படைப்பானித் தலத்தைமுத னிருமித்தங்க, னுறைந்தருளினனன்றி யின்னமுளததன்பெருமையுரைப்பக்கேண்மின். (ரு)

திருவாலவாயென்றுகேட்டவரேயறம்பெறுவர்செல்வமோங்குந்
திருவாலவாயென்றுநினைத்தவரேபொருளடைவர்தேவதேவைத்
திருவாலவாயிடத்துக்கண்டவரேயின்பநலஞ்சேர்வரென்றுந்
திருவாலவாயிடத்துவதிந்தவரேவீட்டுநெறிசேர்வாரன்றே. (சு)

சுரநதிசூழ்காசிமுதற்பதிமறுமைக்கதியளிக்குந்தூநீர்வைகை
வரநதிசூழ்திருவாலவாய்சீவன்முத்திதரும்வதிவோர்க்கீது
திரனதிகம்பரகதியும்பின்கொடுக்குமாதலினிச்சீவன்முத்தி
புரனதிகமென்பதெவனதற்கதுவேயொப்பாமெப்புவனத்துள்ளும்.

ஆதலினிப்பதிவிட்டுப்பிறபதியிற்போய்நோற்போரங்கைகொண்ட
சீதளவானமுதேய்ப்பத்தித்திக்கத்தேம்பெய்துசெய்ததீம்பா
லோதனத்தைக்கைவிட்டுப்புறங்கையைநக்குவாரொப்பாரந்த
மாதலத்தின்பெருமைதனையாவரேயளவிட்டுவெழுத்தற்பாலார். (அ)

மேற்படி - வேறு.

மற்றையதலங்கடம்மிற்பரிமகம்வாசபேய
மற்றமில்சோடசாகமக்கினிட்டோமம்யார்க்கு
முற்றருமிராசசூயமுதன்மகமுடித்தபேறுஞ்
செற்றமிறெரிசபூர்ணமுதலிட்டிசெய்தபேறும். (கூ)

---

(சு) வீடு - விடுதல் - எனவே எல்லாப்பற்றையு மற்றவரடையுமிடம் என்பதுபொருள்.

(எ) சுரநதி - தேவநதியாகிய கங்கை.

(கூ) வாசபேயமாவது - அந்தணர்கள், பன்னிரண்டுதினத்தில், இருபத்துமூன்றுமோடங்களால் சிவபெருமானுக்குப்பிரீதியுண்டாகச்செய்யும்யாகம். சோடசாகமாவது, ஐந்துதினத்தில். இரண்டுமேடங்களால்செய்யும்யாகம். அக்கினிட்டோயம் என்பதும் அதுவே. இராஜசூயமாவது - எல்லா அரசர்களையும்வென்று ஐந்துதினத்தில் அல்லது எ-கூ-கஉ-தினங்களில்-ச-மேடங்களால் க்ஷத்திரியர்களால் செய்யப்படும்யாகம். தரிசபூரணமாவது - அமாவாசை, பௌர்ணைகளில் சிவபெருமானுக்குப் பிரீதியுண்டுபண்ணச்செய்யும் ஸ்தாலிபாகக்கிரியை. இஷ்டி - யாகமுதலியகிரியை.

எள்ளிழுதன்னங்கன்னியிவுளிதேரியானையில்லம்
வெள்ளியான்பொன்பூணுடைவிளைவொடுபழனமுன்னாத்
தள்ளருமடிமையாதிதானங்கள்செய்தபேறும்
வள்ளறன்காசியாதிபதிகளில்வதிந்தபேறும். (க0)

கங்கைகாளிந்திவாணிக்காவிரிகண்ணவேணி
துங்கபத்திரிதீம்பாலிதூயதண்பொருனைமுன்னாச்
சங்கையினதிகண்முற்றுமாடியதவத்தின்பேறு
மங்கலமதுரைதன்னில்வைகலும்வதிந்தோர்க்கெய்தும். (கக)

அன்னியதலங்கடம்மிலாற்றியபிரமகத்தி
பொன்னினைக்களவுசெய்தல்கள்ளுண்டல்புனிதவாசான்
பன்னியைப்புணர்தலின்னபாதகமனைத்துமென்றுந்
தன்னிகராலவாயில்வதிபவர்தமைவிட்டேகும். (க௨)

மற்றையதலத்திற்சாந்திராயணமதியந்தோறு
முற்றபேறிங்குகங்குலுண்டியாலடைபேறாகு
மற்றையதலத்தின்மாதப்பட்டினிப்பலத்தின்பேறிங்
குற்றொருவைகலுண்டியொழிந்தவர்பெறும்பேறாகும். (கங)

அயனகரடைந்துநான்குதிங்களுண்பாற்றும்பேறிவ்
வியனகரடைந்துநோற்குமட்டமிவிரதநல்கு
மயனகரெய்தியாறுதிங்களுண்பாற்றும்பேறிவ்
வியனகர்ச்சோமவார்விரதமேயளிக்குமன்றே. (கச)

ஏனையதலத்திலோராண்டுணவொழிந்தியற்றுநோன்பா
லானபேறிங்குநோற்குஞ்சிவனிராவளிக்குமிங்கே
யூனவைம்பொறியும்வென்றோன்முப்பொழுதுண்டுவைகித்
தானமர்ந்தாலுங்காலுண்டியற்றுமாதவத்தோனாகும். (கரு)

---

(க0) எள் இழுது - எண்ணெய்.

(கக) காளிந்தி - கரியநிறத்தை யுடையதோர்நதி. கண்ணவேணி — சையகிரியிலுற்பத்தியாகி இந்த்ரநீலபர்வதத்தினருகிலோடும் நதி. ஆடியதவம் — தீர்த்தயாத்திரைப்பலன்.

(கங) சாந்திராயணம் - சந்திரசம்பந்தமுள்ள தோர்விரதம். என்னை - சந்திரன்கலைபுயரும் பூர்வபட்சப்பிரதமைமுதல், பௌர்ணமிவரையில் நாளுக்குநாள் ஒவ்வொருகவளம் உயர்த்தியும், ஷை கலை குறையப்பெறும் கிருஷ்ணபட்சப் பிரதமைமுதல் அமாவாசை வரையி லொவ்வொரு கவளமாகக்குறைத்தும் புசித்துச்செய்யும் விரதம்.

(கரு) காலுண்டென்றது - வாயுபஞ்சணஞ் செய்தலை. கால்—காற்று.

இந்தநான்மாடமோங்குமாலவாயிடத்தியாரேனு
மந்தணர்தமக்கோர்முட்டியருந்தவர்தமக்கோர்பிச்சை
தந்தவர்புறம்புசெய்தசோடசதானந்தம்மால்
வந்தபேறடைவர்பல்வேறுரைப்பதென்மதியான்மிக்கீர். (கசு)

பல்வகைத்தலங்களெல்லாம்வைகியபயனுமென்றும்
பல்வகைத்தீர்த்தமெல்லாமாடியபயனுமென்றும்
பல்வகைத்தானமெல்லாநல்கியபயனுமென்றும்
பல்வகைத்தானபூசைபண்ணியதவத்தின்பேறும். (கஎ)

பல்வகைத்தவங்களெல்லாமுற்றியபயனுந்தூய
பல்வகைமந்திரத்திலெய்தியபயனுநூலின்
பல்வகைக்கேள்வியெல்லாமாய்ந்துணர்பயனும்யோகம்
பல்வகைஞானமெல்லாம்பயின்றுணர்ந்தடங்கும்பேறும். (கஅ)

அனையதொல்பதியிலென்றும்வைகுவோரடைவரென்று
வினையதொல்பதிக்குநேர்வேறில்லைப்பதியின்மேன்மை
தனையறிபவராரீசனென்றறியாதலாலே
வினையைவெல்பவனங்கெய்திவதிவதேவேண்டுமாதோ. (கக)

மேற்படி - வேறு.

கைத்தலநான்கிரண்டுடைய மலர்க்கடவுண்மே லொருநாட்கயிலையாதி, யெத்தலமுமொருதுலையிட்டித்தலமு மொருதுலையிட்டிரண்டுந்தூக்கி, வுத்தமமாந் திருவாலவாய்மிகவுங் கனத்ததுகண்டுலகின்மேலா, வைத்ததலமிதுவென்று லிதன்பெருமையாவரேவழுத்தற்பாலார். (உ0)

---

(கசு) சோடசதானமாவன - அன்னதானம். வஸ்திரதானம், பூதானம், கன்னிகாதானம், இரணியதானம், கோதானம், உபயமுகி கோதானம், மகிஷதானம், வருடைதானம், அஸ்வதானம், சுவேதாஸ்வதானம், கஜதானம், காளாமுகிதானம், மகாமேருதானம், கற்பகவிருட்சதானம், வித்யாதானம், என்பன. முட்டி - ஓர் கைப்பிடி. இதுமுஷ்டி என்பதன் திரிபு.

(கக) அறிமின் என்னுமுன்னிலைப்பன்மை ஏவல் வினைமுற்று ஈறுதொக்கு அறியெனநின்றது. தனையறிபவராரீசன்றனன்றி, எனவும்பாடம்.

(உ0) துலை - துலாக்கோல், இது சினையாகுபெயராய்த்துலாத்தட்டை யுணர்த்திநின்றது.

அத்திருமாநகரின்பேர்சிவநகரங்கடம்பவனமமர்ந்தோர்சீவன்
முத்திபுரங்கன்னிபுரந்திருவாலவாய்மதுரைமுடியாஞானம்
புத்திதரும்பூவுலகிற்சிவலோகஞ்சமட்டிவிச்சாபுரந்தென்கூடல்
பத்திதருதுவாதசாந்தத்தலமென்றேதுவினுற்பகர்வர்நல்லோர். ()

என்றுதலச் சிறப்புரைத்த குறுமுனிவ னெதிரறவோ ரிறும்பூ தெய்தி, நன்றுதலப்பெருமையருள் செய்தனைகேட்டெலெடுத்த நய ப்பாடெல்லா, மின்றடைந்தேமினிச்சுவணபுண்டரிகச் சிறப்பதனை யிசைத்தியென்னக், குன்றமடக்கிய கருணைக்குன்றனை யான்வரன் முறையாற் கூறுகின்றான். (உஉ)

மேற்படி - வேறு.

விரதமாதவத்தீர்காணின்வெவ்வினையெல்லாம்வீட்டிச்
சரதமாப்போகநல்குந்தமனியமுளரிவந்த
வரவுமக்கனகக்கஞ்சப்பெருமையும்வளனுநன்கா
வுரைசெய்துங்கேண்மினென்னுமுனிவரனுரைக்குமன்றே. (உங)

தலவிசேடம் முற்றிற்று.

ஆ படலம் சு-க்கு - திருவிருத்தம் - உருச.

---

(உக) சீவன்முத்தியாவது - யான் எனதென்னும்விகற்பம்பற றிப் பசுகரணமாய்ப் பயில்வதின்றி, சிவகரணமாய், உடையானு டைமைப்பொருளுமாய்த்தற் செயலற்றுச் சாக்கிரத்தேயதீதத்தை ப்புரிந்துநிற்றல். பரஞானமென்றது - அபரஞானம்போ லழிவதி ன்றி, நித்தியசுகத்தை விளைவிப்பதாகிய சிவஞானம்பற்றி நிகழும் மோனநிலையை. புத்தி - சிவபோகம். சமட்டிவிச்சாபுரம்-சிவஞான முதலியநால்வகைஞானங்களையுந் தரும்நகரம். சமஷ்டி - நிறைவு. விச்சை - ஞானம். துவாதசாந்தத்தலம் - பிரமரந்திரத்துக்குமேல் உன்மனி சத்திக்கதீதமாய் விளங்கும் நிராமயஸ்தானம்.

(உஉ) சுவணம் - பொன்.

(உங) சந்தம் – உண்மை. தமனியமுளரி - பொற்றாமரை.

## தீர்த்தவிசேடம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கண்ணகன்குடுமிமாடக்கடிபொழிலாலவாயி
னண்ணலம்பெருமையாரேயளப்பவரவிர்ந்தமுத்த
வெண்ணகையுமையாளன்புவிளைமுகச்செவ்விபோலத்
தண்ணறுங்கமலம்பூத்ததடப்பெருந்தகைமைசொல்வாம். (க)

யாற்றினுங்கரசாங்கங்கைகாவிரியாதியாறும்
வேற்றுருவாயமுந்நீர்வேலையும்பிறவுங்காருந்
தோற்றுமுன்றன்னையாட்டச்சுந்தரமூர்த்திசெங்க
ணேற்றினன்கண்டதீர்த்தமாகுமீதெவ்வாறென்னின். (உ)

அகளமாயுலகமெல்லாமொடுக்கியந்நெறியேயார்க்கு
நிகளமாம்விருத்திதோன்றநினைவறநினைந்துநிற்குந்
துகளிலாவறிவானந்தசுந்தரச்சோதிமேனாட்
சகளமாமுருவங்கொண்டுதானொருவிளையாட்டாலே. (ஙு)

முக்கணனரவப்பூணநூலினன்முகிழ்வெண்டிங்கட்
செக்கரஞ்சடையான்சூலகபாலத்தன்செங்கணேற்றன்
மைக்கருங்கயலுண்கண்ணிவாமத்தன்முன்னும்பின்னும்
பக்கமுநந்தியாதிகணாதிபர்பரவிச்சூழ. (ச)

சென்றுதன்மேனித்தேசாற்றிசையெலாம்விளங்கச்செங்கண்
வென்றிகொளுரகவேந்தனகரமும்விபுதர்வேந்தன்
பொன்றிகழ்நகரும்வேதன்புரமுமால்புரமுமேலைத்
தன்றிருநகருஞ்சென்று சஞ்சரித்தாடிமீள்வான். (ரு)

அன்னபோதயனுந்தேவர்க்கரசனுமாழிவேந்து
முன்னர்வந்திறைஞ்சியேத்தமுனிவரும்பேறுநல்கித்
தன்னகரடைந்துநீங்காத்தனிப்பெருங்கணத்தினோரை
யின்னருள்சுரந்துநோக்கியிலிங்கத்திற்புகுதுமெல்லே. (சு)

---

(க) கண் அகல் - என்றதற்கு, இடமகன்ற என்பதுபொருள், யார், வினைக்குறிப்புமுற்று. இதில் யாவினா இன்மைப்பொருளது.

(ஙு) அகளம், நிட்களம். நிகளம் - பந்தம்.

(ச) செங்கண் ஏறு - சிவந்தகண்களையுடைய தருமவிடை.

(ரு) உரகவேந்தன் - ஆதிசேடன். உரகம்-சர்ப்பம். விபுதர் - தேவர். பொன்திகழ்நகர் - தெய்வலோகம். தன்திருநகர் - சிவலோகம்.

(சு) இலிங்கம் - பிரகாசகம் - முன்னர் என்பதில் அற்பகுதிப் பொருள்விகுதி.

வேத்திரப்படையோனாதிகணாதிபர்வீழ்ந்துபால
நேத்திரவன்பர்க்கன்பநிரஞ்சனநிருத்தானந்த
சாத்திரமுடிவுந்தேறாத்தனிமுதலொருவவென்னுத்
தோத்திரவகையாலேத்தித்தொழுதொன்றுவினவல்செய்வார். (எ)

ஐயவிவ்விலிங்கமூர்த்திக்காட்டவுமடியேமூழ்கி
யுய்யவுங்கங்கையாதிநதிகளுமுலகத்துள்ளோர்
மையறுதடாகநீருமற்றிலேயிருமைப்பேறுஞ்
செய்யவோர்தீர்த்தமிங்குண்டாக்கெனச்செப்பலோடும். (அ)

அத்தகையிலிங்கமூர்த்திக்கடுத்ததென்கீழ்சாராக
முத்தலைவேலைவாங்கிநாட்டினான்முதுபார்கீண்டு
பைத்தலைப்பாந்தள்வேந்தன்பாதலங்கீண்டுபோயெண்
கைத்தலப்பிரமனண்டகடாகமுங்கீண்டதவ்வேல். (௯)

அவ்வழிப்புறம்புசூழ்ந்துகிடந்தபேராழியூழிப்
பௌவநீரென்னவோங்கப்பாணியாலமைத்துவேணித்
தெய்வநன்னீரைத்தூவிக்கலந்துமர்தீர்த்தமாக்கிக்
கைவரைகபாலிநந்திகணத்தினைநோக்கிக்கூறும். (௧0)

இன்னமாதீர்த்தந்தன்னையெனைப்பலதீர்த்தங்கட்கு
முன்னம்யாமிங்குக்கண்டமுதன்மையாலாதிதீர்த்த
மென்னலாமினியுண்டாக்குந்தீர்த்தங்களௌவைக்குமேலாய்
மன்னலாற்பரமதீர்த்தமெனப்பெயர்வழங்கலாகும். (௧௧)

மருட்கெடமூழ்கினோர்நன்மங்கலம்பெறலானும
மருட்சிவதீர்த்தமாகும்புன்னெறியகற்றியுள்ளத்
திருட்கெடஞானந்தன்னையீதலான்ஞானதீர்த்தந்
தெருட்கதிதரலான்முத்திதீர்த்தமென்றிதற்குநாமம். (௧௨)

(எ) வேத்திரம் - பிரம்பு. வேத்திரப்படையோன் - திருநந்தி தேவர். பாலம் - நெற்றி. நிரஞ்சனம்-நிர் - அஞ்சனம். களங்கமில்லாதது. அஞ்சனம் - களங்கம்.

(அ) மை - குற்றம். இருமைப்பேறு - இம்மைமறுமைப்பயன்.

(௯) சார் - பக்கம். முத்தலைவேல் - சூலம். அண்டகடாகம்- பாதலம்.

(௧0) புறம்புசூழ்கிடந்தபேராழி-பெரும்புறக்கடல். பௌவம்- கடல். கைவரைகபாலி - கரத்திலேந்திய கபாலத்தையுடைய சிவபெருமான்.

(௧௧) கண்ட - உண்டாக்கிய. பரமம் - மேன்மை.

(௧௨) மருள் - அஞ்ஞானம்.

குடைந்துதர்ப்பணமுஞ்செய்துதானமுங்கொடுத்தம்மாடே
யடைந்தெழுத்தைந்துமெண்ணியுச்சரித்தன்பாலெம்மைத்
தொடர்ந்துவந்திறைஞ்சிச்சூழ்ந்துதுதித்தெமையுவப்பச்செய்தோ
ருடம்பெடுத்ததனுலெந்தவுறுதியுண்டதனைச்சேர்வார். (கரு)

இந்தநீரெம்மையாட்டினேழிரண்டுலகின்மிக்க
வந்தமிறீர்த்தமெல்லாமாட்டியபயன்வந்தெய்தும்
வந்திதின்மூழ்கியிங்குவைகுநங்குறியையுங்கள்
சிந்தையிலார்வம்பொங்கப்பூசனைசெய்மினென்று. (கசு)

விண்ணவர்தம்மின்மேலாம்வேதியனுகிநின்ற
பண்ணவன்றானந்நீரிற்படிந்துதன்னனுஞையாலே
யண்ணலங்கணத்திறைமூழ்குவித்தனுதியாய
புண்ணியவிலிங்கந்தன்னுட்புகுந்தினிதிருந்தான்மன்னே. (கரு)

அந்தமாநீரானந்தியாதியோர்விதியாற்சோம
சுந்தரன்முடிமேலாட்டித்துகளறப்பூசையாற்றிச்
சிந்தையில்விழைந்தவெல்லாமடைந்தனர்செம்பொற்கஞ்சம்
வந்தவாறிதுவத்தீர்த்தமகிமையுமுரைப்பக்கேண்மின். (கசு)

வளையெறிதரங்களானவாவியைநோக்கிற்பாவத்
தளையறுமூழ்கின்வேண்டுங்காமியமெல்லாஞ்சாரு
முளமுறமூழ்குமெல்லேமுழுக்கொன்றற்குலகத்துள்ள
வளவறுதீர்த்தமெல்லாமாடியபயன்வந்தெய்தும். (கஎ)

மெய்யைமண்ணாதிகொண்டுவிதிவழிசுத்திசெய்து
மையறுவருணசூக்கமந்திரநவின்றுமூழ்கிற்
றுய்யமாதீர்த்தமெல்லாந்தோய்ந்துநான்மறையுமாய்ந்தோர்
கையிலெப்பொருளுமீந்தகாசறுபேறுநல்கும். (கஅ)

---

(கசு) குறி, திருவருட்குறியாகிய சிவலிங்கம்.

(கரு) அனுஞை - கட்டளை. அனுதி - தனக்கோர்முதலில்லது.

(கஎ) பாவத்தளை - பாவத்தொடக்கு, காமியம். இச்சைபற்றி நிகழ்வது.

(கஅ) மண்ணாதிகொண்டு, என்றது - அரசடிமண், வில்வமரத்தடிமண், துழாயடிமண். புளியமரத்தடிமண், ஆலமரத்தடிமண், நாவல்மரத்தடிமண், யானைக்கட்டுமிடத்துமண், குதிரைக்கட்டுமிடத்துமண்முதலிய ஒன்பதுவகைமண்களும், துளசித்தளிர். புளியந்தளிர், நாவற்றளிர், வில்வத்தளிர், ஆலந்தளிர், அரசந்தளிர், அறுகந்தளிர்முதலிய எழுவகைத்தளிர்களும், பால், தயிர், நெய், கோசலம், கோமயமுதலிய பஞ்சகௌவியங்களுமாகியவற்றை. வருணசூக்கமந்திரம் வருணதேவ னனுக்கிரகத்துக்குரிய தோத்திரரூபமானமந்திரம்.

தெய்வவித்தீர்த்தந்தன்னைநினைவின்றித்தீண்டினனு
மவ்வியவினையினீந்தியரும்பெறல்வீடுசேர்வ
ரிவ்வுரைமெய்யேயாகுமென்னெனின்மனத்தாறன்றி
வெவ்வழநீண்டினனுஞ்சுமென்றிவிடுமோவம்மா. (கக)

ஆருமந்நீரிலென்றுமாடினர்சீவன்முத்தி
சேருவரந்நீராடுஞ்சிறப்புறுபயனுக்கொவ்வா
வாருணவாக்கினேயமந்திரமிவைமுன்னன
பேருணர்வளிக்குநானஞ்செய்தவர்பெறும்பேறெல்லாம். (உ0)

அன்னநீர்தனையுமாடியாலவாயுடையநாதன்
றன்னையும்பணிவோன்மேலைப்பரகதிதன்னைச்சாரு
மென்னநன்னூலிற்சொன்னபவித்திரமெவைக்குமேலாய்ப்
பன்னரும்புனிதமானபவித்திரமாகிநிற்கும். (உக)

ஆதரவிலனுயந்நீராடினோன்சுவர்க்கஞ்சேரு
மாதரவுளனுய்மூழ்கிவானவராதியானோர்க்
காதரவரிசியெள்ளுத்தருப்பணமமையச்செய்தோ
னுதரவேள்விமுற்றுமாற்றியபயனைச்சேரும். (உஉ)

ஏனைமாதலங்கடம்மிலிருந்துசெய்விரதம்பூசை
தானமாதருமமோமந்தவஞ்செபந்தியானந்தம்மா
லானமாபயனிற்கோடியதிகமாமடைந்துமூழ்கி
ஞானமாதீர்த்தஞாங்கரிருந்தவைநயந்துசெய்யின். (உங)

பிறந்தநாளந்நீர்மூழ்கின்மேலைவெம்பிறவிப்பௌவ
மறிந்திடுமறிதேள்கும்பமதிகளின்மூழ்கித்தென்பா
லுறைந்தவர்பொருட்டுப்பிண்டமுதவினலவர்தாமாழ்ந்து
நிறைந்திடுபிறவிப்பௌவநின்றுமேலெழுவரன்றே. (உச)

---

(கக) ஔவியவினை - பொறாமைமுதலிய தீக்குணங்கள்.

(உ0) வாருணமாக்கினேயமந்திரம், என்றது-வருணமந்திரஸ்நானம், ஆக்னேயமந்திரஸ் நானங்களை.

(உக) என்ன - எப்படிப்பட்ட. பவித்திரம் - பாவத்தைநீக்கி மோட்சத்தைத்தருவது.

(உஉ) ஆதரம் - விருப்பம்.

(உங) ஞாங்கர் - கரை.

(உச) மறி - சித்திரைமாதம், தேள் - கார்த்திகைமாதம் - கும்பம் - பங்குனிமாதம். தென்பாலுறைந்தவர் - பிதிரர்.

அத்தடமருங்கின்யாவர்தென்புலமடைந்தோர்தங்கள்
சித்தமாசகற்றவேண்டிச்செய்கடன்முடிக்கினன்னோ
ரெத்தனையெண்ணேர்ந்தாலுமெள்ளுக்காயிரமாண்டாக
வத்தனையாண்டுமெட்டுமேவரைவிண்ணுளவைப்பார். (உரு)

மூவகையுலகிலுள்ளதீர்த்தமுமுறையாலென்றுஞ்
சேவகஞ்செய்யுமிந்தத்தீர்த்தமெந்நாளுமூழ்கி
யேவரந்நீராலென்றுமீசனைப்பூசைசெய்வோ
ராவரிப்பிறவிதன்னிலவர்கதிக்கரையைச்சார்வார். (உசு)

விடுத்திடலரியசித்தவேள்விமாவிரதம்வேதந்
தடுத்திடலரியதானந்தவமிவைதரும்பேறெல்லா
மடுத்ததன்கரையில்வைகியீசனையருச்சிப்போர்க்குக்
கொடுத்திடுபுண்ணியத்திற்கோடியிலொன்றுக்கொவ்வா. (உஎ)

உம்மையிற்பிறவிதோறுநியமநல்லொழுக்கம்பூண்டு
பொய்ம்மையில்விரதந்தானந்தவஞ்செய்துபுனிதராகிச்
செம்மைநன்னெறியினின்றசித்தருக்கலதித்தீர்த்த
மிம்மையிலடைந்துநித்தமாடுதற்கெய்தாதன்றே. (உஅ)

மேற்படி - வேறு.

(க) மதிகதிரோனிடத்தொடுங்குதினந் (உ) திங்கட்பிறப் (ங) பரவம்வாயங்காந்து, கதிர்கடமை விழுங்குதினம் (ச) விதிபாதமிந்நாளிற்கருதிமூழ்கித், துதிகடருப்பணந்தானம் புரிதன்மனுவோதுதலத் தொகையொன்றற்கொன், றதிகபலனம்முறைநூறாயிரநூறாயிரமோரனந்தமாகும். (உகூ)

பொருவரியதகர்த்திங்கலோத்திங்களிவையுதிக்கும்போதுமூழ்கி
னொருபதினாயிரமடங்காஞ்சுறவுகவைத்தாளலவனுதிப்பின்மூழ்கி
னிருபதினாயிரமடங்காமிந்திரவியிடத்தொடுங்குமிந்துவாரம்
வருவதறிந்தாடிமனுவோதன்முதற்செயினனந்தமடங்குண்டாகும்.

---

(உசு) சேவகம் - ஏவற்பணிவிடை.

(உஅ) உம்மை - முற்சனனம்.

(உகூ) க. அமாவாஸ்யை, உ. மாசப்ரவேசம், ங. கிரகணபுண்ய காலம், ச. மாதங்கடோறும் வரப்பட்ட இருபத்தேழு யோகங்களில் ஒன்றாய்ப், பிதிர்கர்ம விசேடங்களுக்குரிய சிரார்த்தவகை தொண்ணூற்றாறிலொன்றாய் வருவது.

(௩0) தகர்-மேஷம்-சித்திரை. துலாத்திங்கள்-ஐப்பசிமாதம். சுறவு-மகரம்-தைமாதம். அலவன்-கடகம்-ஆடிமாதம். இந்திரவியிடத்தொடுங்கு மிந்துவாரமென்றது. சோமவார அமாவாசையை மநு-ஸ்ரீபஞ்சாட்சரம், சடாக்ஷரமுதலிய மகாமந்திரங்கள்.

பிரயாகைதனின்மகர மதிநாண்முப்பதுங்குடைந்து பெறும்பே றிந்தத், திரையார்பைந்தடத்தொருநாண் மூழ்குவோன் பெறும்வி ரத சீலம்பூண்டு, வரையாமலொருவருடம் படிந்துமையாயமரர்சி கா மணியாம்வேத, வுரையானைவழிபடுமேன் மலடிக்குநன்மகப்பே றுண்டாமன்றே. (ருக)

எண்டிசையநதிவாவி வடிவானமாதீர்த்த மெல்லாமிப்பொற், பு ண்டரிகதடத்திலொரு கோடியிலோர்கூறுநிகர் போதாவீது, கண் டதனு லறந்தீண்டப் பெற்றதனுனற்பொருளங் கையாலள்ளிக், கொண்டதனுலின்பநலங் குடைந்ததனுற்பேரின்பங் கொடுக்கு ம ன்றே. (ருஉ)

மேற்படி - வேறு.

முன்னவனருளிச்செய்தகாரணமுறையாலன்றி
யின்னமிப்புனிதவாவிக்கேதுவாலெய்துநாம
மின்னவிர்சடையான்சென்னிமேவியகங்கைநீரிற்
பின்னதுகலந்தநீராற்பெறுஞ்சிவகங்கையென்றும். (ருரு)

அலகிலாத்தீர்த்தந்தம்முளதிகவுத்தமமாய்த்தோன்றி
யிலகலாலிதனைத்தீர்த்தவுத்தமமென்பாராய்ந்தோர்
பலவிதழ்விரித்துச்செம்பொற்பங்கயமலர்ந்தநீரா
லுலகவர்யாரும்பொற்ருமரையெனவுரைப்பரன்றே. (ருச)

தருமமுன்னுகுநான்குந்தருதலாற்றருமதீர்த்த
மருமைசாலருத்ததீர்த்தமரும்பெறற்காமதீர்த்த
மிருமைசேர்முத்திதீர்த்தமென்பதாமினையதீர்த்தம்
வெருவருபாவமென்னும்விறகினுக்கெரியாமன்றே. (ருரு)

இவ்வருந்தலத்தினுன்றபெருமையுமெரிகால்செம்பொற்
றெய்வதபதுமதீர்த்தப்பெருமையுஞ்செப்பக்கேட்டோ
ரெவ்வமில்போகம்வீடுபெறுவரென்றிசைத்தான்முந்நீர்ப்
பௌவமுண்டமரர்வேந்தன்பரிபவவிழுமந்தீர்த்தோன். (ருசு)

தீர்த்தவிசேடம் முற்றிற்று.

ஆ படலம் எ - க்கு - திருவிருத்தம் - உகூ0.

---

(ருசு) பரிபவம் - துன்பம்.

## மூர்த்திவிசேடம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஆலவாயமர்ந்தசெம்பொனம்புயப்பெருந்தீர்த்தத்தின்
மேலவாம்பெருமைதன்னைவிளம்புவாரெவரேயங்க
ணீலமாமிடற்றுமுக்கணிராமயனநிவானந்த
மூலமாவிலிங்கமேன்மைமுறையினலறையலுற்றும். (௧)

பொன்னெடுமேருவெள்ளிப்பொருப்புமந்தரங்கேதார
வன்னெடும்புரிசைசூழ்ந்தவாரணவாசியாதிப்
பன்னருந்தலங்கடம்மிற்பராபரவிலிங்கந்தோன்று
முன்னரிக்கடம்பின்மாடேமுளைத்ததிச்சைவலிங்கம். (௨)

அப்பதியிலிங்கமெல்லாமருட்குறியிதனிற்பின்பு
கப்புவிட்டெழுந்தவிந்தக்காரணமிரண்டினலு
மொப்பரிதானஞானவொளிதிரண்டானவிந்தத்
திப்பியவிலிங்கமூலவிலிங்கமாய்ச்சிறக்குமன்றே. (௩)

இந்தமாவிலிங்கத்தெண்ணான்கிலக்கணவிச்சைமேனி
யந்தமிலழகன்பாகத்துமையொடுமழகுசெய்து
சந்ததம்விளக்கஞ்செய்யுந்தகைமையைநோக்கிச்சோம
சுந்தரனென்றுநாமஞ்சாத்தினர்துறக்கவாணர் (௪)

திறப்படுமுலகமெங்கும்வியாபியாய்ச்சிறந்துநிற்கு
மறப்பெருங்கடவுள்சோமசுந்தரனதனலன்றே
கறைக்கதிர்வடிவேற்றென்னன்கையிற்பொற்பிரம்புபட்ட
புறத்தடித்தழும்புமூன்றுபுவனமும்பட்டதன்றே. (௫)

சொற்றவிச்சமட்டியானசோமசுந்தரனைக்காணப்
பெற்றவர்வியட்டியானபிறபதியிலிங்கங்காண
லுற்றவராவரென்னென்றுரைக்கின்வேரூட்டுநீர்போய்
மற்றையசினைகளெல்லாந்தழைவிக்குமரத்தின்மாதோ. (௬)

---

(௧) நிராமயன் - நோயில்லாதவன். நீலம், மா, என்பன, ஒரு பொருட் கிளவிகள்.

(௨) வாரணவாசி - கோழிவசிப்பது, வாரணம் - கோழி. இது காரணம்பற்றியே,காசிக்குக்குக்குடநகரம்என்னும்பெயரும்வந்தது.

(௪) சோமசுந்தரன்-சஹ-உமா-சுந்தரன்-எனவே, உமையோடு கூடியவழகன். என்பதுபொருள்.

(௫) வியாபி - வியாபகத்தையுடையவன்.

எத்தலத்தியாவனெண்ணெண்டிருவிளையாடல்செய்தா
னத்தலத்தவனுக்கொப்புமதிகமாஞ்சிறப்புப்பெற்ற
வுத்தமனென்றுமெந்தவுலகிலுமில்லையந்த
வித்தகனதிகத்தன்மையெனைத்தெனின்விளம்பக்கேண்மின். (எ)

பொருப்பினுட்டலைமையெய்தும்பொன்னெடுங்குமிமேரு
தருக்களிற்றலைமைசாருந்தண்ணறுந்தெய்வதாரு
விருப்புறுவேள்விதம்முண்மேம்படும்புரவிமேத
மருட்படுதானந்தம்முள்விழுமிதாமன்னதானம். (அ)

மனிதரிலுயர்ந்தோராதிமறையவர்தேவர்தம்மிற்
பனிதருதிங்கள்வேணிப்பகவனேயுயர்ந்தோன்வேட்டோர்க்
கினிதருள்விரதந்தம்முளதிகமாமிந்துவாரம்
புனிதமந்திரங்கடம்முட்போதவைந்தெழுத்துமேலாம். (க)

மின்மைசான்மணியிற்சிந்தாமணிவரம்விழுப்பநல்குந்
தன்மைசாலறங்கடம்மின்மிகுஞ்சிவதருமமென்ப
வின்மைசானெறிநின்றோருக்கேற்குநற்கலங்கடம்மி
னன்மைசான்றவரேமுக்கணுதனுக்கன்புபூண்டோர். (க0)

தீயவாஞ்சுவைப்பாலாவிற்றேவராவதிகம்பல்வே
றுயமாதீர்த்தந்தம்முளதிகமாஞ்சுவணகஞ்ச
மாயமாசறுக்கவெல்லாத்தலத்திலும்வதிந்துமன்னுந்
தூயவானவரிற்சோமசுந்தரன்சிறந்தோனாகும். (கக)

அந்தமுமுதலுமில்லாவகண்டபூரணமாயார்க்கும்
பந்தமும்வீடுநல்கும்பராபரச்சோதிதானே
வந்தனைபுரிவோர்க்கிம்மைமறுமைவீடளிப்பானந்தச்
சுந்தரவிலிங்கத்தென்றும்விளங்குவான்சுருதியேத்த. (கஉ)

இத்தகுசயம்புதன்னையேனையசயம்புவெல்லா
நித்தமுந்தெரிசித்தேகுநிருமலவொளியாமிந்த
வுத்தமவிலிங்கங்கண்டோருரையுணர்வொடுங்கவுள்ளே
சித்தமாசொழியத்தோன்றுஞ்சிவபரஞ்சுடரைக்கண்டோர். (கங)

(எ) வித்தகன் - ஞானசொரூபன். வித்தகம் – ஞானம்.

(க0) மின்மை-மின்-ஒளி-மை. பகுதிப்பொருள் விகுதி. கலம்-தானபாத்திரம்.

(கக) தீயவாஞ்சுவைப்பால் - இனிமை விரும்புஞ் சுவையையுடையபால். தீ - இனிமை. அவா - விருப்பம்.

(கங) சயம்பு-ஸ்வயம்பு என்பதன் றிரிபு. தானே யுண்டானது என்பது பொருள். ஸ்வயம்-தானே, பு - உண்டானது.

இத்தனிச்சுடரைநேர்கண்டிறைஞ்சினோர்பாவமெல்லாங்
கொத்தழற்பொறிவாய்ப்பட்டபஞ்சுபோற்கோபமூள
மெய்த்தவஞ்சிதையுமாபோன்மருந்தினல்வீயுநோய்போ
லுத்தமகுணங்களெல்லாமுலோபத்தாலழியுமாபோல். (கச)

கலிகடலிரவிதோன்றக்கருகிருளுடையுமாபோ
லொலிகெழுபெருங்காறள்ளவுடைபடுமேகம்போல
வலிகெழுமடங்கல்சீறமாயுமால்யானைபோலக்
குலிசவல்லேறுதாக்கப்பொடிபடுங்குன்றம்போல. (கரு)

மருட்சிசெய்காமநோயான்மதிகெடுமாறுபோல
வருட்சிவஞானநோக்கால்வலிகெடுமவிச்சைபோலத்
தருக்குறுமுவணஞ்சீறத்தழலராவிளியுமாபோற்
செருக்குறவழியுங்கற்றகல்விபோற்சிதையுமன்றே. (கசு)

புலரியிற்சிவன்முத்திபுரேசனைக்காணப்பெற்று
லலைகடனன்குபட்டவவனிமாதானஞ்செய்த
பலனுறுங்கதிர்காலுச்சிவைகலிற்பணியப்பெற்றார்
கலைஞர்பானூற்றுப்பத்துக்கபிலைமாதானப்பேறும். (கஎ)

விண்ணிடைப்பரிதிப்புத்தேண்மேலைநீர்குளிக்குமெல்லை
யண்ணலைவணங்கிற்கோடியானினத்தானப்பேறும்
பண்ணவர்பரவும்பாதியிருள்வயிற்பணியப்பெற்றால்
வண்ணவெம்புரவிமேதமகம்புரிபெரும்பேறெய்தும். (கஅ)

இன்னனவதிகமாம்பேறறிந்துபோயெத்தேவர்க்கு
முன்னவன்சமட்டிவிச்சாபுரமுறைமுதல்வன்றன்னைச்
சொன்னவிக்காலந்தோறுமிறைஞ்சியுந்தொழுதுஞ்சூழ்ந்தும்
பொன்னடிக்கன்பராகிவழிபடும்புனிதசீலர். (ககூ)

---

(கரு) மடங்கல்-சிங்கம். குலிசம் - வச்சிராயுதம். ஏறு - இடி. தோன்ற, தள்ள, சீற, தாக்க, என்பன காரணப்பொருளில் வந்த வினையெச்சங்கள்.

(கசு) செருக்கு - அகங்காரம்.

(கஎ) புலரி - விடியற்காலம், கடல்நான்கென்றது, நாற்றிசைக்கடல்களை. உச்சிவைகல் - உச்சிக்காலம்.

(கஅ) புரவிமேதமகம் - அஸ்வமேதயாகம்.

உம்மையில்வினைகளென்னும்பிணியவிழ்ந்தொருவித்தூய
செம்மையராகியானுத்திருவொடுசெல்வமோங்க
வெம்மையில்போகமூழ்கிமலவிருள்வீக்கநீந்தி
மைம்மலிகண்டத்தெங்கோன்மலரடிநீழல்வாழ்வார். (உ0)

மேற்படி - வேறு.

அறவுருவனுலவாயானுமஞ்செவிமடுத்தாலடைந்தபத்துப், பிற விவினையறுகினைந்தானூறுபெரும் பவப்பாவப்பிணிபோங்கூட, லி றைவனையின் றிறைஞ்சுதுமென் றெழுந்துமனைப் புறம்போந்தாலீ ரைஞ்ஞூறு, மறமுறு வெம்பவத்திழைத்த பாதகவல்வினையனைத்து மாயுமன்றே. (உக)

புழைக்கைவரை தொலைத்தானைத் தெரிசித்தோராயிரவாம்பு ரவிவேள்வி, தழைத்தபெரும் பயன்பெறுவ ருருத்திரசூக்கம் மத னுற்றவவானேர்க, டொழற்கரியான்றனைத்துதித்தோர்கணத்துக் காயிரராசசூயயாக, மிழைத்தபெரும் பயன்பெறுவர் சமட்டிவடிவா கியவவ்விலிங்கந்தன்னை. (உஉ)

அங்கையளவாகியநன் னீராட்டிப்பூசித்தோ ரளவிலேனைத், துங்கதலத்துறையிலிங்கமூர்த்திகளைச் சிவாகமநூல்சொன்னவாற் றூன், மங்கலமாகியமுகமனீரெட்டும் வழுவாதுவாசந்தோய்ந்த, செங்கனகமணிக்கலசப்புனலாட்டிமாபூசைசெய்தோராவார். (உங)

---

(உ0) செம்மை - நடுநிலைமை. ஆனுத்திரு - நீங்காதசெல்வம்.
(உக) மறம் - தீமை.
(உஉ) சூக்கம் - சூக்தமென்னும் வடமொழித்திரிபு.
(உஉ) புழைக்கை-துவாரத்தையுடைய கையையுடையது,என உருபும்பயனுந் தொக்க இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைக்க ளத்துப்பிறந்த அன்மொழித் தொகையாய், யானைக்குக் காரணப் பெயராய்வந்தது. வாம்புரவி-தாவுங்குதிரை.
(உங) முகமன் - உபசாரம். இது சோடசோபசாரம், தசோப சாரம், பஞ்சோபசாரம், என மூன்றுவகைப்படும். அவற்றுள்சோ டசோபசாரமாவன—ஆவாகனம், ஸ்தாபனம், சந்நிதானம், சந்நி ரோதனம், அவகுண்டனம், தேனுமுத்திரை, பாத்தியம், ஆசமனீ யம், அர்க்கியம், புட்பதானம், தூபம், தீபம், நைவேத்தியம், பானீ யம், ஆராத்திரிகை, ஜபசமர்ப்பணை என்பன. தசோபசாரமாவன— மேற்காட்டிய சோடசோபசாரத்துள், ஆவாகனமுதல் புட்பதானம் வரையிலுள்ளபத்தும். பஞ்சோபசாரங்களாவன—பிரிதிவிசம்பந்த மான, கந்தமூலபலாதிகள், கந்தகுசுமாதிகள், அன்னாதிகளும்; அப் புசம்பந்தமான, வாரி, பால், தயிர், வஸ்திரமுதலியவைகளும்; தே யுசம்பந்தமான உலோகாதியாபரணங்களும், தீபங்களும்; வாயுசம் பந்தமான தூபம், சாமரம், மயில்விசிறியாதிகளும்; ஆகாயசம்பந்த மான, மணியோசை, தோத்திரத்தொனி முதலியவைகளுமாம்.

அவ்வண்ணஞ்சுந்தரனை யைந்தமுதமானுதவு மைந்துநீந்தேன், செவ்வண்ணக்கனிசாந்தச் சேறுமுதன்மட்டித்துத் தேவர்தேரு, மெய்வ்வண்ணங்குளிரவிரைப்புனலாட்டி மாபூசைவிதியாற்செய்தோர், மைவ்வண்ணவினைநீந்தியறமுதனாற் பொருளடைந்துமன்னிவாழ்வார். (உச)

நல்லவகைமுகமனீரெட்டுள்ளும்வடித்தவிரைநன்னீராட்ட
வல்லவர்நூருயிரமாமேதமகப்பயன்பெறுவர்வாசநான [வ
மெல்லவிர்குங்குமஞ்சாந்த மிலவபலவுமட்டித்தோரெழிலாற்தெய்
மூல்லைநகையாரோடும்விரைக்கலவைகுளித்தின்பமூழ்கிவாழ்வார்.

நன்மலரோன் ருலவாயான்முடிமேற்சாற்றி னையந்துநூறு, பொன்மலர்கொண் டயற்பதியிற் பூசித்தபயனெய்தும் புனிதபோகத், தன்மைதருசுந்தரற்குத் தூபமொருகாற்கொடுப்போர் தமக்குத்தாங்கள், சொன்மனமெய்யுறச்செய்த குற்றமாயிரம்பொறுப்பன்சுருதிநாதன். (உரு)

திருவமுதுநிவேதிப்போ ரவிழொன்றற் குகமொன்ருச் சிவலோகத்தின், மருவிநிறைபோகமுடன் வைகுவர்தாம்பூலமுக வாசமீந்தோர், பொருவரியகடவுளராண்டொருநூறுகோடிசிவ புரத்துவாழ்வா, ரொருபளிதவிளக்கிடுவோர் வெண்ணிறமுங்கண்ணுதலுமுடையராவார். (உஎ)

---

(உச) ஐந்தமுதம், என்றது-பஞ்சாமிர்தம். அவை-பால், நெய், தேன், சர்க்கரை, பழம். இவற்றுள், பால்நீக்கித் தேங்காய்த்திருகல் கூட்டி ஐந்துவகையாகக்கொள்ளுதலும; தேங்காய்த் திருகல்நீக்கி, நீர்கூட்டி யைந்தென்றுகொள்ளுதலும்; பழவர்க்கங்களெல்லாம் ஒன்ருகவும்; நெய், தயிர், பால், இம்மூன்றையும் இனம்பற்றியொன்ருகவுங்கொண்டு, இவ்விரண்டோடுதேன், சர்க்கரை, நீர்இவற்றைக்கூட்டி ஐந்தென்றுகொள்ளுதலும் உண்டு. ஆனுதவுமைந்தென்றது-பஞ்சகௌவியம்-அவை-பால், தயிர், நெய், கோமயம், கோசலம். இவற்ருேடு கோரோசனமுங்கூட்டி கவ்வியம் ஆறு எனவுங் கூறுதலுமுண்டு. கவ்வியம்-கோசம்பந்தமாயுள்ளன. கோ - பசு. மட்டித்தல்-பூசுதல். விரைபுனல் - வாசனையூட்டிய திருமஞ்சனம். விரை-வாசனை. மஞ்சனம்-நீர்.

(உரு) சுருதி, காதாற்கேட்கப்படுவது - வேதம்.

(உஎ) முகவாசம்-தக்கோலம் ஏலம் தகைசா லிலவங்கம், கர்ப்பூரம் சாதியோடைந்து, என்னுமிவ்வைந்தும். பளிதம் - கர்ப்பூரம். பளிதவிளக்கு-கர்ப்பூரநிராஞ்சனம்.

நறுந்திருமஞ்சனமெடுக்கக் குடமாட்டமணிக்கலசநல்லவாசம், பெறுந்தகையதூபக்கா நீபக்கான்மணியின்ன பிறவுங்கங்குற், றெறுங்கதிர்கான்மணிமாடமதுரைநாயகர்க்கீந்தோர்செய்தபாவம், வெறுந்துகள்செய்தைம்பொறிக்கும் விருந்தூட்டும்பெருங்காமவெள்ளத்தாழ்வார். (உஅ)

கயலிசையுங்கண்ணுமைகோன் றிருமுன்னர்ப்பல்லியமுங்கலென்றார்ப்ப, வியலிசையபாடலினோடாடலிவைசெய்விப்போரிறுமாப்பெய்திப், புயலிசையவியங்கலிப்ப மூவுலகுந்தொழவரசாய்ப் பொலங்கொம்பாடுஞ், செயலிசையவணங்கனை யாராடரங்குகண்டின்பச் செல்வத்தாழ்வார். (உகூ)

ஒருகாலட்டாங்கமுடன் பஞ்சாங்கமுடனுதலொண்செங்கால்வெண், குருகாலுமலர்த்தடஞ்சூழ் கூடனுயகர்ப்பணிவோர் கோலொன்றேச்சிப், பொருகாலின்வருபரித்தேர்மன்னவராயாவருந் தம்புடைவந்தெய்தி, யிருகாலுந்தலைவருட வெக்காலுந் தமைவணங்க விருப்பரன்றே. (௩0)

இத்தகையதிருவாலவாயுடையான்றிருமுன்னரியற்றுமோம
மெய்த்தவமந்திரந்தானமின்னவணுவளவெனினுமேருவாகு
முத்தமமாமிவ்விலிங்கப்பெருமையெலாம்யாவரளந்துரைப்பர்வேத
வித்தகரேசிறிதறிந்தவாருரைத்தேமினிப்பலகால்விளம்புமாறென்.

இத்தலத்துக்கொப்பாக வொருதலமும்பொற்கமல மென்னுமிந்த வுத்தமமாதீர்த்தத்துக் கொப்பதொரு தீர்த்தமுமெய்யுணர்வானந்த, வித்தனையவிலிங்கமிதற் கொப்பாவோரிலிங்கமும்பார் விண்மேலென்னு, முத்தலத்துமிலையந்த மூர்த்திதிருநாமங்கண் மொழியக்கேண்மின். (௩உ)

---

(உகூ) இசைய என்பவற்றுள், இயலிசைய பாடலென்றவிடத்து இசையையுடையவெனப் பெயரெச்சத்தின்மேலும், ஏனைய உவம உருபிடைச் சொல்லடியாய்ப்பிறந்த வினையெச்சங்களின் மேலும் நின்றன. இயம்-வாத்தியம். அணங்கு-தெய்வப்பெண்.

(௩0) குருகுஆலும்-அன்னங்கள்ஒலிக்கும். அட்டாங்கம்-தலை, இரண்டுகை, இரண்டுசெவி, மோவாய், இரண்டுதோள்என்னுமிவ்வெட்டுறுப்பும் நிலத்திற் பொருந்தவணங்குதல். அஷ்டம் - எட்டு-அங்கம்-உறுப்பு. பஞ்சாங்கம் - தலை, இரண்டுகை, இரண்டுமுழந்தாள் என்னு மிவ்வைந்துறுப்புக்களும் நிலத்திற்பொருந்த வணங்குதல். பஞ்சம்-ஐந்து.

கருப்பூரசுந்தரன்பூங்கடம்பவனசுந்தரனுட்கரவாத்தொண்டர்
விருப்பூருங்கலியாணசுந்தரனல்லறவடிவாய்விளங்குமேற்றுப்
பொருப்பூரும்பிராமசுந்தரன்றேன்புடைகவிழப்பொன்னிற்பூத்த
மருப்பூசுசண்பகசுந்தரன்மகுடசுந்தரன்ருன்வாழிமன்னே. (௩௩)

மான்மதசுந்தரன்கொடியபழியஞ்சுசுந்தரனோர்மருங்கின்ஞானத்
தேன்மருவியுறைசோமசுந்தரன்றேன்செவ்வழியாழ்செய்யப்பூத்த
கான்மருவுதடம்பொழில்சூழாலவாய்ச்சுந்தரன்மீன்கணங்கள்சூழப்
பான்மதிசூழ்நான்மாடக்கூடனயகன்மதுராபதிக்குவேந்தன். (௩௪)

சிரநாலோன்பரவரியசமட்டிவிச்சாபுரநாதன்சீவன்முத்தி
புரநாதன்பூவுலகசிவலோகாதிபன்கன்னிபுரேசன்யார்க்கும்
வரநாளுந்தருமூலவிலிங்கமெனவிவைமுதலாமாடக்கூட
லரனுமமின்னமளப்பிலவாகுமுலகுய்யவவ்விலிங்கம். (௩௫)

பாதாளமேழுருவமுளைத்தெழுந்ததவ்விலிங்கப்படிவந்தன்னு
ளாதாரமாகவமர்ந்தறுபத்துநாலுவிளையாடல்செய்த [ன்ரு
போதானந்தன்பெருமைநங் குரவன்மொழிப்படியே புகன்றேமெ
வேதாதிகலைதெரிந்தமலயமுனிகேட்டறவோர்வினுதல்செய்தார்.

அருட்கடலேயிறைவிளையாட் டறுபத்துநான்கென்ரு யவை
யானந்தப், பொருட்கடவுளெக்காலத்தியாவர்பொருட்டாடினனெ
ம்போதந்தேறித், தெருட்படரவரன்முறையாற் செப்புகெனக்கர
ங்குவித்தார்தென்பால்வெற்பி, லிருப்பவனும்வினயபடிக்கிறை நிர
ம்பத்தொகுத்துவிரித் தியம்புகின்றான். (௩எ)

மூர்த்திவிசேடம் முற்றிற்று.

ஆ படலம் அ - க்கு - திருவிருத்தம் - ௩.உஎ.

---

(௩௩) அறவடிவாய்விளங்குமேற்றுப்பொருப்புஎன்றது, தரும விடையை.

(௩௪) ஓர்மருங்கின் ஞானத்தேன் என்றது, உவம ஆகுபெய ராய் உமாதேவியை யுணர்த்திநின்றது.

(௩௬) பாதாளமேழ் என்றது, பாதாளத்தையீருகவுடையகீழ் ஏழுலோகத்தினை, அவை. அதலம், விதலம், சுதலம், தராதலம், ரசாதலம், மகாதலம், பாதாளம், என்பன. கேட்ட என்பதில், அக ரவீறு, தொகுத்தல். இறை-உத்தரம்.

சிவமயம்.

# திருவிளையாடற்றொகையாகிய * பதிகம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வானவர்கோன்பழிதொலைத்தவிளையாட்டுங்கரிசாபமாய்த்தவாறு
மீனவர்கோன்காடெறிந்துபுரங்கண்டபெருஞ்சிறப்புமீனநோக்கி
யானதடாதகையழல்வாயவதரித்துப்பாராண்டவருளுமீசன்
றனவளைமணஞ்செய்துமுடிதரித்துமண்காத்ததகைமைப்பாடும்.

புலிமுனியும்பணிமுனியுந் தொழவெள்ளிமன்றுணடம் புரிந்த வாறும், வலிகெழுதோட்குண்டகட்டுக் குறட்கன்னக்குன் றளித்த வகையும்பின்னு, நலிபசிநோய்கெடவன்னக் குழியழைத்துக்கொடுத்துநீர் நசைக்குவைகை, யலைபுனல்கூயருத்தியதும் பொன்மாலைக் கெழுகடலு மழைத்தவாறும். (௨)

அந்தரர்கோனுதனத்தி லுறைமலயத்துவசனைமீண் டழைத்த வாறுஞ், சுந்தரவுக்கிரகுமர னவதரித்தவாறும்வளை சுடர்வேல்செண்டு தந்தையிடத்தவன்பெற்ற வாறுமவனவ்வடிவேல் சலதிவீறு, சிந்தவிடுத்ததுமகவான் முடியைவளையெறிந்திறைவன் சிதைத்த வீறும். (௩)

பொன்னசலந்தனைச்செண்டாற் புடைத்துநிதியெடுத்ததுவும் புனிதர்க்கீசன், பன்னரியமறைப்பொருளைப் பகர்ந்ததுவும்மாணிக்கம் பகர்ந்தவாறுந், தொன்னகர்மேனீர்க்கிழவன் வரவிடுத்தகடல்சுவறத் தொலைத்தவாறு, மன்னதனித்தொன்மதுரை நான்மாடக் கூடனகரானவாறும். (௪)

---

*—"பதிகக்கிளவி பல்வகைப்பொருளைத், தொகுதியாகத் தொகுத்துரைப்பதுவே" என்னுஞ்சூத்திரப்படி, இங்குப்பலவகைத்திருவிளையாடல்களையுந் தொகுத்துக் கூறியதனால், பதிகம் எனப்பெயர் வந்தது.

(க) மீனவர்கோன், என்றது மச்சக்கொடியையுடையபாண்டியர்களுட்சிறந்த குலசேகரபாண்டியனை.

(௨) குண்டு - ஆழம். அகடு - வயிறு. குறள் - குண்டோதரன். கூவி - இது கூய் எனத் திரிந்துநின்றது.

(௩) வளை - சக்கரம். வீறு - செருக்கு.

(௪) நீர்க்கிழவன் - வருணன்.

6

வட்டங்கொள்சடையுடைய சித்தர்விளையாடியதோர்வனப்புங் கையிற், கட்டங்கந்தரித்தபிரான் கல்லானைக்கரும்பருந்தக் காட்டு மாறு, முட்டங்குவஞ்சனையா லமணர்விடுவாரணத்தை யொழித்த வாறு, மிட்டங்கொள் கௌரிமுனம் விருத்தனிளையோன் குழவி யானவாரும். (ரு)

செய்யதாண்மாறிநடமாடியதும்பழியஞ்சு திறனுந்தாயை, மை யலாற்புணர்ந்தமகன் பாதகத்தைமாற்றியதுமதியாதாசான், றைய லாட்டினைவிரும்பு மாணவனைவாளமரிற் றடிந்தவாறும், பையராவெ ய்ததுவும் படிற்றமணர்விடுத்தபசுப் படுத்தவாறும். (சு)

அறவேற்றுப்பரியுகைத்து மெய்க்காட்டுக்கொடுத்தவிளையாட் டுங்காட்டுச், சுரவேற்றுக்கொடியரசன் றனக்குலவாக்கிழிகொடுத் த தொடர்புநாய்கர், நறவேற்றமலர்க்குழலார் மனங்கவர்ந்துவளைப கர்ந்தநலனுமாறு, மறவேற்கண்மாதரார்க் கட்டமாசித்தியுற மதித் தவாறும். (எ)

சென்னிபொருட்டெயில்வாயி றிறந்தடைத்துவிடைபொறித் த செயலுஞ்சென்னி, மன்னிகலிட்டமர்விளைப்ப மீனவற்குநீர்ப்ப ந்தர் வைத்தவாறும், பொன்னனையாள்பொருட்டிரத வாதவினை முடித்ததுவும் புகார்க்குவேந்தன், றன்னையகன்குழிவீட்டித் தென் னவற்குமறவாகை தந்தவாறும். (அ)

மனக்கவலைகெடவுலவாக் கோட்டையடியார்க்களித்த வகையு மாம, னெனக்கருணைவடிவாகி வழக்குரைத்துப்பொருள்வணிகற் கீந்தவாறுஞ், சினக்கதிர்வேல்வரகுணற்குச் சிவலோகங்காட்டியது ந் திவவுக்கோலான், றனக்கடிமையெனவிறகு திருமுடிமேற்சுமந் துபகை தணித்தவாறும். (கூ)

அப்பாணற்கிருநிதியஞ் சேரனிடைத்திருமுகமீந் தளித்தவா று, மப்பாணன்பாடமழை யரையிரவிற்பொற்பலகை யளித்தவா று, மப்பாணன்மனைவியிசைப் பகைவெல்லவண்ணலவையடைந்த வாறு, மப்பாணனுளென்றேன் முலையருத்திப்பன்றியுயி ரளித்த வாறும். (௧௰)

(ரு) கட்டங்கம்-மழு. இது கடங்கமென்பதன்றிரிபு. இதனைத் திருக்கோவையாரில் — "சுத்தியபொக்கணத் தன்பணிகட்டங்கஞ் சூழ்சடையோன்" எனவருஞ் செய்யுளுரையாற் காண்க.

(சு) மாணவன் - மாணாக்கன். படிறு - வஞ்சகம்.

(எ) சுறவேற்றுக்கொடி - மீனக்கொடி. ஏறு - ஆண்.

(அ) புகார் - காவிரிப்பூம்பட்டினம். இது-சோழன்ராஜதானி.

(கூ) திவவுக்கோலான், என்றது-நரம்பின் கட்டமைந்த வீணை யையுடைய பாணபத்திரனை. திவவு - வீணைவலிக்கட்டு.

வயவேனக்குருளைகளை மந்திரிகளாக்கியதும் வலியுண்டாகக், கயவாய்க்குக்குருமொழிவைத் தருளியதுநாரைக்குக் கருணைநாட்டந், தயவால்வைத்தருண்முத்தி நல்கியதுங்கூடனகர் தன்னைச்சித்தர், புயநாகம்போய்வளைந்து திருவாலவாயாக்கிப் போந்தவாறும்.

சுந்தரனென்றெழுதியகூ ரம்பெய்துசெம்பியன்போர்தொலைத்தவாறுஞ், செந்தமிழோர்க்கியற்பலகை யருளியதுந்தருமிக்குச் செம்பொன்பாடித், தந்ததுவுமாறுபடு கீரற்குக்கரையேற்றந் தந்தவாறும், விந்தமடக்கியமுனியாற் கீரனியற்றமிழ்தெளிய விடுத்தவாறும். (கஉ)

ஊமனூற்புலவரிக லகற்றியதுமிடைக்காடனுடன்போய்க்கொன்றைத், தாமனூர்வடவால வாயமர்ந்தபரிசும்வலை சலதிவீசிப், பூமனூய்குழலியைவேட் டருளியதும்வாதவூர்ப் புனிதர்க்கேறத், தேமனூண்மலரடிகண் முடிசூட்டியுபதேசஞ் செய்தவாறும். (கஙு)

நரிகள்பரியாக்கியதும் பரிகணரியாக்கியது நாகம்பூண்டோ, னரியதிருமேனியின்மே லடிசுமந்துமண்சுமந்த வருளுந்தென்ன, னெரியடுவெஞ்சுரந்தனித்தவாறுமமணரைக்கழுவி லிட்டவாறுங், கரியதெனவன்னிகிண றிலிங்கங்கூய்வணிகமகட் காத்தவாறும். ()

எனத்தொகையா லறுபத்துநான்கிவற்றை நிறுத்தமுறையீறிலாத, வினைத்தொகையா றகன்றீரெக்காலமெவர் பொருட்டென நீர் வினயவாற்றான், மனத்தளவிலன்புமடை யுடைந்தொழுகத்திருவால வாயான்றனை, நினைத்தளவிலானந்தம் பெருகவிரித்துரைப்பலென நெறியார்கூறும். (கரு)

திருவிளையாடற்றொகையாகியபதிகம் முற்றிற்று.

ஆக படலம் - க - க்கு - திருவிருத்தம் - ருசஉ.

---

(கக) வயம்-வெற்றி. ஏனக்குருளை - பன்றிக்குட்டி. சயவாய்-கருக்குருவி.

(கஉ) செம்பியன்-விக்கிரமச்சோழன். கீரன்-நற்கீரன். கீரற்கு என்றதில், கு - உருபுமயக்கம்.

(கங) ஊமனென்றது - உருத்திரசன்மரை. புலவரென்றது-கடைச்சங்கப்புலவர்களாகிய நாற்பத்தெண்மரை. வடவாலவாய்என்றது-மதுரைக்கு வடக்கிலும், வையைநதிக்குத் தெற்கிலுமுள்ள வட மதுரையை. தேம் மன் நாண் மலர் தேன்பொருந்திய, அன்றலர்ந்த தாமரைமலர்.

(கச) தென்னன் - கூன்பாண்டியன், கரி - சாட்சி.

சிவமயம்.

முதலாவது,

# இந்திரன்பழிதீர்த்தபடலம்.



அறுசீரடியாசிரியவிருத்தம்.

மின்பயில்குலிசப்புத்தேள்விருத்திராசுரனைக்கொன்ற
வன்பழிவிடாதுபற்றக்கடம்பமாவனத்திலெய்தி
யென்பரவாரம்பூண்டவிறைவனையருச்சித்தேத்திப்
பின்பதுகழிந்துபெற்றபேற்றினையெடுத்துச்சொல்வாம். (க)

முன்னதாமுகத்தில்வண்டுமூசுமந்தாரநீழற் [ண்
பொன்னவிர்சுணங்குண்கொங்கைப்புலோமிசைமணாளன்பொற்பூ
மின்னவிர்ந்திமைப்பச்சிங்கஞ்சுமந்தமெல்லணைமேன்மேவி
யன்னமென்னடையாராடமோடன்மேலார்வம்வைத்தான். (உ)

மூவகைமலரும்பூத்துவண்டுளேமுழங்கத்தெய்வப்
பூவலர்கொடிபேர்ந்தன்னபொன்னனார்கூத்துமன்னார்
நாவலரமுதமன்னபாடலுநாகநாட்டுக்
காவலன்கண்டுகேட்டுக்களிமதுக்கடலுளாழ்ந்தான். (௩)

பையராவணிந்தவேணிப்பகவனேயனையதங்க
ளையனும்வியாழப்புத்தேளாயிடையடைந்தானாகச்
செய்யதாள்வழிபாடின்றித்தேவர்கோனிருந்தானந்தோ
தையலார்மயலிற்பட்டோர்தமக்கொருமதியுண்டாமோ. (௪)

ஒல்லெனக்குரவனேகவும்பர்கோன்றிருவினுக்கம்
புல்லெனச்சிறிதுகுன்றப்புரந்தரனரிந்திக்கேடு
நல்லதொல்குரவற்பேணாவையினால்விளைந்ததென்னா
வல்லலுற்றறிவன்றன்னைத்தேடுவானாயினானே. (௫)

(க) குலிசப் புத்தேள் - வச்சிராயுதத்தையுடைய இந்திரன். குலிசம் - வச்சிரம். புத்தேள் - தெய்வம்.

(உ) முன்னதாம் உகம்-கிரேதாயுகம். மந்தாரம்-பஞ்சதருக்களிலொன்று. தெய்வலோகத்தருக்களில் வண்டுமொய்க்கும் சம்பிரதாயமில்லாவிடினும், மரப்பொதுவகையில், வண்டு மூசு மந்தாரம் என்றார். மூசுதல் - மொய்த்தல்.

(௩) மூவகைமலர் - கோட்டுப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ.

(௪) பகவன், என்றது ஐஸ்வரிம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம். என்னும். இவ்வாறு குணங்களையுமுடையவனை.

(௫) அறிவன் - பிரகஸ்பதி.

அங்கவனிருக்கைபுக்கான் கண்டிலனவித்தபாசப்
புங்கவருலகமேனோர்பதவியும்புவனமூன்றி
லெங்கணுந்துருவிக்காணுனெங்குற்றான்குரவனென்னுஞ்
சங்கைகொண்மனத்தனுகிச்சதுமுகனிருக்கைசார்ந்தான். (சு)

துருவினனங்குங்காணுன்றிசைமுகற்றெழுதுதாழ்ந்து
பரவிமுன்பட்டவெல்லாம்பகர்ந்தனன்பகரக்கேட்டுக்
குரவனையிகழ்ந்தபாவங்கொழுந்துபட்டருந்துஞ்செவ்வி
வருவதுநோக்கிச்சூழ்ந்துமலர்மகனிதனைச்சொன்னான். (எ)

அனையதொல்குரவற்காணுமளவுநீதுவட்டாவீன்ற
தனையன்முச்சென்னியுள்ளான்றானவர்குலத்தில்வந்தும்
வினையினலறிவான்மேலான்விச்சுவவுருவனென்னு
மினையனைக்குருவாக்கோடியென்னலுமதற்குநேர்ந்தான். (அ)

அழலவிர்ந்தனையசெங்கேழடுக்கிதழ்முளரிவாழ்க்கைத்
தொழுதகுசெம்மறன்னைத்தொழுதுமீண்டகன்றுநீங்கா
விழைதகுகாதல்கூரவிச்சுவவுருவன்றன்னை
வழிபடுகுருவாக்கொண்டான்மலர்மகன்சூழ்ச்சிதேறன். (கூ)

கைதவக்குரவன்மாயங்கருதிலன்வேள்வியொன்று
செய்திடலடிகளென்னத்தேவர்கட்காக்கங்கூறி
வெய்தழல்வளர்ப்பானுள்ளம்வேறுபட்டவுணர்க்கெல்லா
முய்திறநினைந்துவேட்டான்றனக்குமேலுறுவதோரான். (கo)

வாக்கினுன்மனத்தால்வேறாய்மகஞ்செய்வான்செயலையாக்கை
நோக்கினுேதிதன்னுேக்கினன்குலிசவேலாற்
றாக்கினன்றலைகண்மூன்றுந்தனித்தனிப்பறவையாகப்
போக்கினனலகைவாயிற்புகட்டினன்புலவுச்சோரி. (கக)

---

(எ) செவ்வி - காலம்.

(கூ) சூழ்ச்சி - ஆலோசனை.

(கo) கைதவம் - வஞ்சனை. செய்திடல்-என்பதில் அல்விகுதிவி யங்கோட்பொருளது - "மக்கட்பதடி எனல்"என்பதுபோல.

(கக) யாக்கைநோக்கினன். இந்திரன். ஓதி-ஞானப்பார்வை. தனித்தனிப் பறவையாக என்றது, விச்சுவவுருவன் மூன்று சிரசு களில், சோமபானஞ் செய்கின்றமுகம், காடையாகவும், சுராபான ஞ்செய்கின்றமுகம், ஊர்க்குருவியாகவும், அன்னபானம் செய்கின் றமுகம் சிச்சிலிக்குருவியாகவும், பறந்தனவென்பதை. இதன் விரி வு ஆலாஸ்யமகத்துவத்திற் காண்க.

தெற்றெனப்பிரமபாவஞ்சீறிவந்தமரர்வேந்தைப்
பற்றலுமதனைத்தீர்ப்பான்பண்ணவர்மரமேன்மண்மேற்
பொற்றொடியார்மேனீர்மேல்வேண்டினர்புகுத்தலோடு
மற்றவரிஃதியாந்தீர்க்கும்வண்ணம்யாதென்னவிண்ணோர். (கஉ)

அப்பிடைநுரையாய்மண்ணிலருவருப்புவராயம்பொற்
செப்பிளங்கொங்கையார்பாற்றீண்டுதற்கரியபூப்பாய்க்
கப்பிணர்மரத்திற்காலும்பயினதாய்க்கழிகவென்று
ரிப்பழிசுமந்தவெங்கட்கென்னலமென்றார்பின்னும். (கங)

மேற்படி - வேறு.

கருவின்மாதர்கருவுயிர்க்குமளவுமுறையாற்கணவர்தோண்
மருவிவாழ்கமண்ணகழ்ந்தகுழியுமதனால்வடுவொழிக
பொருவினீருமிஃறைதோறுமூறிப்பொலிகமரங்குறைபட்
டொருவினாலுந்தழைகவெனவொழியாநலனுமுதவினர். (கச)

மாசிற்கழிந்தமணியேபோல்வந்தபழிதீர்ந்திந்திரனுந்
தேசிற்றிகழத்துவட்டாதன்செல்வன்றன்னைத்தேவர்பிரான்
வீசிக்குலிசத்துயிருண்டவிழுமங்கேட்டுவெகுண்டுயிர்த்துக்
கூசிப்பழிகோள்கருதியொருகொடியவேள்விகடிதமைத்தான். (கரு)

அந்தக்குண்டத்தெரிசிகைபோலழலுங்குஞ்சியண்டமுக
டுந்தக்கொடியதூமம்போலுயிர்த்துச்செங்கண்சினச்செந்தீச்
சிந்தப்பிறைவாளெயிறதுக்கித்திசைவான்செவிடுபடநகைத்து
வந்தக்கொடியவிடம்போலவெழுந்தானொருவாண்மறவீரன். (கசு)

கலிவிருத்தம்.

ஈங்குவன்விருத்திரனென்பவாரழற்
றூங்குவன்கணைவிடுதூரநீண்டுநீண்
டோங்குவனேங்குதற்கொப்பவைகலும்
வீங்குவன்றனிலருவினையினென்பவே. (கஎ)

வீங்குடல்விருத்திரன்றன்னைவிண்ணவ
ரேங்குறவறுதுவட்டாவெனும்பெயர்த்
தீங்குறுமனத்தினேன்றேவர்கோனுயிர்
வாங்குதிபொருதெனவரவிட்டானரோ. (கஅ)

---

(கங) பயின் - பிசினி.

(கரு) விழுமம் - துன்பம்.

(கஎ) உவன். என்பதிலுள்ள உகரச்சுட்டு, இகரச்சுட்டின்மேலதாய் இவனென்னும் பொருள்தந்துநின்றது. வீங்குவன்றனிலருவினையினென்பவே, என்பதும் பாடம்.

மதித்துணியெயிற்றினேன்வடவைபோற்சினை இக்
கொதித்தெதிர்குறுகினன்கொண்டலூர்தியு
மெதிர்த்தனன்களிற்றின்மேலிமயத்துச்சிமே
லுதித்ததோர்கருங்கதிரொக்குமென்னவே. (கசு)

அறத்தொடுபாவநேர்ந்தென்னவார்த்திரு
திறத்தருமூண்டமர்செய்யக்கற்சிறை
குறைத்தவன்றகுவன்மேற்குலிசவேலெடுத்
துறைத்திடவீசினனுடன்றுகள்வனும். (உ0)

இடித்தனன்கையிலோரிருப்புலக்கையைப்
பிடித்தனன்வரையெனப்பெயர்ந்துதீயென
னடித்தனன்சசிமுலைச்சுவடுதோய்புயத்
தடித்தனனிந்திரனவசமாயினன். (உக)

அண்டரேறனையவனவசமாறிப்பின்
கண்டகன்கைதவநினைந்திக்கள்வனோர்
மண்டமராற்றுவான்வலியிலோமெனப்
புண்டரீகத்தவனுலகிற்போயினன். (உஉ)

தாழ்ந்துதான்படுதுயர்விளம்பத்தாமரை
வாழ்ந்தவன்வலாரியோடணைந்துமாமகள்
வீழ்ந்தமார்பினனடிவீழ்ந்துசெப்பமால்
சூழ்ந்துவானுடனைநோக்கிச்சொல்லுவான். (உங)

ஆற்றவும்பழையதுன்னங்கைவச்சிர
மாற்றவருயிருணவலியின்றுதலால்
வேற்றொருபுதியதுவேண்டுமொலினிச்
சாற்றுமதுபெறுந்தகைமைகேட்டியால். (உச)

---

(கசு) வடவை என்றது-வடவாமுகாக்கினியை. வடவாமுகம்-பெண்குதிரை முகம்போலிருக்கும் ஊழித்தீ. அதுவடவைஎன, பின்மொழிகெட்ட முன்மொழியீற்றில் பொருள் சிறந்துநின்றது. வீமசேனன், என்னும்பெயர்வீமனென வருதற்போல. இந்திரகோபம் என்பது, கோபம்என முன்மொழிகெட்ட பின்மொழியீற்றில் பொருள் சிறந்துநிற்கும். இதனை வடநூலார், நாமைகதேச நாமக்கிரகணமென்பர். வடவைபெண்குதிரை. சினைஇ - சொல்லிசையளபெடை. சினவிஎன்பதுபொருள்.

தொடையகன்மார்பநாந்தூயபாற்கடல்
கடையுநாளசுரருஞ்சுரருங்கையில்வெம்
படையொடுமடையன்மின்பழுதென்றப்படை
யடையவுந்ததீசிபாலடைவித்தாமரோ. (உரு)

சேட்படுநாணனிசெல்லத்தேவரா
வாட்படையவுணராவந்துகேட்டிலர்
ஞாட்படைபடையெலாஞானநோக்கினல்
வேட்படைவென்றவன்விழுங்கினனரோ. (உசு)

விழுங்கியபடையெலாம்வேறறத்திரண்
டொழுங்கியதான்முதுகந்தண்டொன்றியே
யெழுங்கதிர்க்குலிசமாமிதனையெய்துமுன்
வழங்குவன்கருணையோர்வடிவமாயினன். (உஎ)

மேற்படி - வேறு.

என்றுமாதவனியம்பவும்பர்கோ
னென்றும்வானவர்தம்மொடொல்லெனச்
சென்றுமாயையின்செயலேநோன்பினல்
வென்றமாதவனிருக்கைமேவினன். (உஅ)

மேற்படி - வேறு.

அகமலர்ந்தருந்தவனமரர்க்கன்புகூர்
முகமலர்ந்தின்னுரைமுகமன்கூறிநீர்
மிகமெலிந்தெய்தினீர்விளைந்ததியாதது
தகமொழிந்திடெனவலாரிசாற்றுவான். (உகூ)

அடிகணீர்மறுதொன்றதனைவேண்டியிம்
முடிகொள்வானவரொடுமுந்தினேனது
செடிகொள்காரிருளுடலவுணர்த்தேய்த்தெமர்
குடியெலாம்புரப்பதோர்கொள்கைத்தாயது. (ங0)

---

(உரு) அசுரர் - அமுதபானஞ்செய்யாதவர். சுரர் - அமுதபானஞ்செய்தவர்.

(உசு) தேவரா, அவுணரா, என்பவற்றிலுள்ள, விகற்பப்பொருளில்வரும் ஆவது என்னு மிடைச்சொற்களீறு தொக்குநின்றன. ஞாட்பு - சண்டை.

(உஅ) மாதவன் - என்னு மிரண்டனுள், முன்னதை. மா, தவன் எனச்சொல்வகைசெய்து இலக்குமிநாயகன் எனவும், பின்னதை, பெரியதவத்தினை யுடையவ னெனவுங் கொள்க.

(ங0) செடி - முடைநாற்றம்.

யாதெனினினைய துன்யாக்கையுள்ளதென்
றோதலும்யாவையுமுணர்ந்தமாதவ
ஞதவற்கண்டதாமரையினனனப்
போதலர்ந்தின்னனபுகல்வதாயினன். (ரு௧)

நாய்நமதெனநரிநமதெனப்பிதா
தாய்நமதெனநமன்றனதெனப்பிணி
பேய்நமதெனமனமதிக்கும்பெற்றிபோ
லாய்நமதெனப்படும்யாக்கையாரதே. (ரு௨)

விடம்பயிலெயிற்றரவுரியும்வீநுழை
குடம்பையுந்தானெனுங்கொள்கைத்தேகொலா
நடம்பயில்கூத்தரினடிக்குமைவர்வா
ழுடம்பையும்யானெனவுரைக்கற்பாலதோ. (ருரு)

நடுத்தயாவிலார்தமைநலியத்துன்பநோ
யடுத்தயாவருந்திருவடையயாக்கையைக்
கொடுத்தயாவறம்புகழ்கொள்வனேயெனி
னெடுத்தயாக்கையின்பயனிதனின்யாவதே. (ருச)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

என்றனன்கரணமொன்றியெழுகருத்தறிவையீர்ப்ப
நின்றனன்பிரமநாடிநெறிகொடுகபாலங்கீண்டு
சென்றனன்விமானமேறிச்சேர்ந்தனனுலகைநோன்பால்
வென்றனன்றுறக்கம்புக்குவீற்றினிதிருந்தானம்மா. (ருரு)

---

(ருரு) ஐவர் என்னுந்தொகைக் குறிப்புச்சொல், உடம்பென்னுங் குறிப்பால் மெய், வாய், கண், மூக்கு, செவி, என்னும் பஞ்சேந்திரியங்களின்மேல் நின்றது.

(ருச) கொடுத்தயா என்பதை, கொடுத்து, ஐயா எனப்பிரிக்கயாவது என்பதில், வகரமெய் தோன்றல் விகாரம்.

(ருரு) கரணமொன்றி என்றது - தேகேந்திரியப் பிராணந்தக்கரணங்களொருபட்ட அவதரத்தை. பிரமநாடிநெறிகொடுகபாலங்கீண்டு என்றது — கலாபேதரூபங்களிற்பயின்று,ஆதாரயோகத்தைக்கடந்தும்,நிராதாரயோகத்தைக்கூடிக்கழன்றும், மீதானத்தெய்துதலை.பிரமநாடி - பிரமரந்திரத்தின் சம்பந்தமாயுள்ளசுழிமுனைநாடி.

அம்முனிவள்ளலீந்தவடுபடைமுதுகந்தண்டைத்
தெம்முனையடுபோர்சாய்க்குந்திறல்கெழுகுலிசஞ்செய்து
கம்மியப்புலவனுக்கங்கரைந்துகைகொடுப்பவாங்கி
மைம்முகிலூர்தியேந்திமின்விடுமழைபோனின்றான். (௩௬)

மறுத்தவாவஞ்சப்போரால்வஞ்சித்துவென்றுபோன
கறுத்தவாளவுணற்கொல்வான்கடும்பரிநெடுந்தேர்நீழல்
வெறுத்தமால்யானைமள்ளர்வேலைபுக்கெழுந்துகுன்ற
மறுத்தவானவர்கோனந்தவவுணர்கோமகனைச்சூழ்ந்தான். (௩௭)

வானவர்சேனைமூண்டுவளைத்தலும்வடவைச்செந்தீ
யானதுவரையினோங்கியழன்றுருத்தெழுந்தாலென்னத்
தானவர்கோனுமானந்தலைக்கொளவெழுந்துபொங்கிச்
சேனையுந்தானுமூண்டுசீறிநின்றடுபோர்செய்வான். (௩௮)

அடுத்தனரிடியேறென்னவார்த்தனராக்கங்கூறி
யெடுத்தனர்கையிற்சாபமெறிந்தனர்சிறுநாணோசை
தொடுத்தனர்மீளிவாளிதூர்த்தனர்குந்தநேமி
விடுத்தனர்வானோர்சேனைவீரர்மேலவுணவீரர். (௩௯)

கிட்டினர்கடகக்கையாற்கிளர்வரையனையதிண்டோள்
கொட்டினர்சாரிமாறிக்குதித்தனர்பலகைநீட்டி
முட்டினரண்டம்விள்ளமுழங்கினர்வடிவாளோச்சி
வெட்டினரவுணச்சேனைவீரரைவானவீரர். (௪0)

வீழ்ந்தனர்தோளுந்தாளும்விண்டனர்சோரிவெள்ளத்
தாழ்ந்தனர்போருந்தாருமகன்றனரகன்றமார்பம்
போழ்ந்தனர்சிரங்களெங்கும்புரண்டனர்கூற்றூர்புக்கு
வாழ்ந்தனரடுபோராற்றிவஞ்சகன்சேனைமள்ளர். (௪௧)

---

(௩௬) ஆக்கங்கரைந்தென்றது. வெற்றிதரக்கடவதென்று ஆசிர்வதித்தலை.

(௩௭) மறு - குற்றம்.

(௩௮) தானும்சேனையும் என்றது - திணைவிரவிச்சிறப்பினால் செய்வான் என உயர்திணையொருமை முடிபேற்றுநிற்றலால், திணைவழுவமைதி. அடுபோர் - கொலைத்தொழிற்குரியபோர்.

(௩௯) மீளி - வன்மை.

(௪0) சாரிமாறல் - வலசாரி இடசாரியாகச் சுற்றுதல்.

தாளொடுகழலுமற்ருர் தலையொடுமுடியுமற்ருர்
தோளொடுவீரமற்ருர் தும்பையோடமருமற்ருர்
வாளொடுகரமுமற்ருர்மார்பொடுகவசமற்ருர்
கோளொடுமாண்மையற்ருர்குறைபடக்குறையாமெய்யர். (சஉ)

தொக்கனகழுகுசேனஞ்சொரிகுடர்பிடுங்கியீர்ப்ப
வுக்கனகுருதிமாந்தியொட்டல்வாய்நெட்டைப்பேய்க
ணக்கனபாடல்செய்யஞாட்பினுட்கவந்தமாடப்
புக்கனபிணத்தின்குன்றம்புதைத்தபார்சிதைந்ததண்டம். (சங)

இவ்வகைமயங்கிப்போர்செய்திறந்தவரொழியப்பின்னுங்
கைவ்வகையடுபோராற்றிக்கரையிறந்தார்கண்மாண்டா
ரவ்வகையறிந்துவானத்தரசனுமவுணர்வேந்துந்
தெய்வதப்படைகள்வீசிச்சீறிநின்றடுபோர்செய்வார். (சச)

அனற்படைவிடுத்தான்விண்ணேராண்டகையதனைக்கள்வன்
புனற்படைவிடுத்துச்சிந்தத்துணித்தனன்புனிதன்காற்றின்
முனைப்படைவிடுத்தான்வெய்யோன்முழங்குகால்விழுங்குநாகச்
சினப்படைதொடுத்துவீசிவிலக்கினன்றேவரஞ்ச. (சரு)

நாகமாப்படைவிட்டார்த்தானுகர்கோனுவணச்செல்வன்
வேகமாப்படையைவீசிவிலக்கினன்றகுவர்வேந்தன்
மோகமாப்படையைத்தொட்டுமுடுக்கினன்முனைவனன்ன
தேகமாப்படிறன்ஞானப்படைவிடுத்திருள்போனின்றான். (சசு)

மட்டிடுதாரான்விட்டவானவப்படைக்குமாறு
விட்டடன்விலக்கிவேறும்விடுத்திடக்கனன்றுவஞ்சன்
முட்டிடமானவெங்கான்மூட்டிடக்கோபச்செந்தீச்
சுட்டிடப்பொருதுபொங்கிச்சுராதிபனிதனைச்செய்தான். (சஎ)

வீங்கிருளொதுங்கமேகமின்விதிர்த்தென்னக்கையி
லோங்கிருங்குலிசவேலையொல்லெனவிதிர்த்தலோடுந்
தீங்குளம்போன்றிருண்டதினியுடற்கள்வனஞ்சி
வாங்கிருங்கடலில்வீழ்ந்தான்மறைந்தமைநாகமொத்தான். (சஅ)

---

(சஉ) குறையாமெய்யர் - இறத்தலில்லாதவர். இதை, அமரர் என்னும் காரணப்பெயராலு மறிக.

(சங) கவந்தம் - தலையிழந்தவுடல். சேனம்-பருந்து. ஞாட்பு-போர்க்களம். சிதைந்தது - வலித்தல் விகாரம்.

(சரு) கால்விழுங்குநாகம்-காற்றையுணவாகக்கொள்ளும்நாகம்

(சசு) உவணச் செல்வன் - கருடன். முனைவன் என்றது-இந்திரனை.

ஒக்கவிந்திரனும்வீழ்ந்தானுடல்சினவுருமேறன்னான்
புக்கிடந்தேடிக்காணான்புண்ணியமுளரியண்ணல்
பக்கம்வந்தணையசெய்திபகர்ந்தனன்பதகன்மாளத்
தக்கதோர்சூழ்ச்சிமுன்னிச்சராசரமீன்றதாதை. (சகூ)

விந்தவெற்படக்கினார்க்கீதுரையெனவிடுப்பமீண்டு
சந்தவெற்படைந்தான்வானோர்தலைவனைமுகமன்கூறிப்
பந்தவெற்பறுத்தான்வந்ததெவனெனப்பறைகளெல்லாஞ்
சிந்தவெற்பறுத்தான்வந்தசெயலெலாமுறையாற்செப்ப. (ருO)

யாவையுமுணர்ந்தவெந்தைக்கியானெடுத்துணர்த்துகின்ற
தாவதென்னமருக்காற்றுதாழிபுக்கொளித்தானுவி
வீவதுமவனால்வந்தவிழுமநோயெல்லாமின்று
போவதுங்கருதிநும்பாற்புகுந்தனமடிகளென்றான். (ருக)

என்றவனிடுக்கண்டீர்ப்பானிகல்புரிபுலன்களைந்தும்
வென்றவனெடியோன்றன்னைவிடையவன்வடிவமாக்கி
நின்றவனறிவானந்தமெய்மையாய்நிறைந்தவெள்ளி
மன்றவனூழிச்செந்தீவடிவினைமனத்துட்கொண்டான். (ருஉ)

கைதவன்கரந்துவைகுங்கடலைவெற்படக்குங்கையிற்
பெய்துழுந்தெல்லைத்தாக்கிப்பருகினான்பிறைசேர்சென்னி
யையனதருளைப்பெற்றார்க்கதிசயமீதென்கொன்மூன்று
வையமுந்தொழிலுஞ்செய்யவல்லவரவரேயன்றே. (ருங)

அறந்துறந்தீட்டுவார்தமருஞ்செறற்செல்வம்போல
வறந்தனபடுநீர்ப்பௌவம்வடவைகட்புலப்பட்டாங்கு
நிறைந்தசெம்மணியுமத்தீநீண்டெரிசிகைபோனீண்டு
சிறந்தெழுபவளக்காடுந்திணியிருள்விழுங்கிற்றம்மா. (ருச)

பணிகளின்மகுடகோடிப்பரப்பெனவிளங்கிப்பல்கா
சணிகலப்பேழைபேழ்வாய்திறந்தனைத்தாகியொன்பான்
மணிகிடந்திமைக்குநீரான்மகபதிவேள்விக்காவாய்த்
திணியுடலவுணன்பட்டசெங்களமனையதன்றே. (ருரு)

(ருO) பந்தவெற்பு - பாசபந்தமாகியமலை. பறைகள்-சிறகுகள்.

(ருக) விழுமம் - துன்பம். வீவது - சாவது.

(ருஉ) நெடியோன்றன்னை விடையவன் வடிவமாக்கி நின்றவ னென்றது. திருக்குற்றால நகரில் கோயில்கொண்டிருந்த திருமாலைச் சிவலிங்கமாகச்செய்த அகத்தியரை.

வறந்தநீர்தன்னின்மின்னுவாள்விதிர்த்தென்னப்பன்மீ
னெறிந்தனநெளிந்தநாகமிலைமத்தனவளையுமுத்துஞ்
செறிந்தனகரந்தயாமைசேர்ந்தபல்பண்டஞ்சிந்தி
முறிந்தனவங்கங்கங்கமுக்கினசிறுமீனெல்லாம். (௫௬)

செருவினிலுடைந்துபோனசெங்கண்வாளவுணனங்கோ
ரருவரைமுதுகிற்கார்போலடைந்துவானுடர்செய்த
வுருகெழுபாவந்தானோருருவெடுத்திருந்துநோற்கும்
பரிசெனநோற்றுனின்னம்பரிபவவிளைவுபாரான். (௫௭)

கைதவநோன்புநோற்குங்கள்வனைக்கண்டுவானோர்
செய்தவமனையான்யாணர்வச்சிரஞ்சீரிப்பான்போற்
பெய்தவன்றலையைக்கொய்தான்புணரிவாய்நிறையச்சோரி
பெய்ததுவலாரிதன்னைப்பிடித்ததுபிரமசாயை. (௫௮)

உம்மெனுமார்பைத்தட்டுமுருத்தெழுமதிர்க்கும்போர்க்கு
வம்மெனும்வாய்மடிக்கும்வாளெயிறதுக்கும்வீழுங்
கொம்மெனவோடுமீளுங்கொதித்தழுஞ்சிரிக்குஞ்சீறு
மிம்மெனுமளவுநீங்காதென்செய்வானஞ்சினானே. (௫௯)

விரைந்தரன்றிசையோர்வாவிவீழ்ந்தொருகமலநூலுட்
கரந்தனன்மகவானிப்பாற்கற்பகநாடுபுல்லென்
றிருந்ததாலிருக்குமெல்லையிம்பரினகுடனென்போ
னரும்பரிமேதவேள்வியாற்றினானாற்றுமெல்லை. (௬௦)

அரசிலாவறுமைநோக்கியவனைவானுடர்யாரும்
விரைசெய்தார்மகுடஞ்சூட்டிவேந்தனக்கொண்டார்வேந்தாய்
வருபவன்சசியையீண்டுத்தருகெனமருங்குளார்போய்த்
திரைசெய்நீரமுதனாட்குச்செப்பவக்கற்பின்மிக்காள். (௬௧)

---

(௫௭) பரிபவம் - துன்பம். வரைமுதுகு - மலையினடுப்பாகம்.

(௫௮) சீறிப்பான்போல் - பரீட்சிப்பவனைப்போல. பிரமசாயை - பிரமகத்தி.

(௫௯) வம்மின் என்னும் முன்னிலைப்பன்மை ஏவல்வினைமுற்று, ஈறுதொக்கு வம்மென நின்றது.

(௬௦) அரன்திசை-ஈசான்யதிசை.

(௬௧) அரசு, வேந்து, இவை, இறைவன் மேனிற்றலால் பண்பாகுபெயர்கள்.

பொன்னுயிர்த்தனையகாட்சிப்புண்ணியக்குரவன்முன்போய்
மின்னுயிர்த்தனையாணின்றுவிளம்புவாளிதென்கொல்கெட்டே
னென்னுயிர்த்துணைவனுங்கேயிருக்கமற்றொருவனென்னைத்
தன்னுயிர்த்துணையாக்கொள்கைதருமமோவடிகளென்றாள். (சுஉ)

மாதவரெழுவர்தாங்கமாமணிச்சிவிகைமீது
போதரினவனேவானோர்புரந்தரனவனேயுன்றன்
காதலனுகுமென்றான்கைதொழுதற்குநேர்ந்தம்
மேதகுசிறப்பாலிங்குவருகெனவிடுத்தாதே. (சுஙு)

மனிதரின்மகவானுகிவருபவன்சிவிகைதாங்கும்
புனிதமாதவரையெண்ணான்புன்கணோய்விளைவும்பாரான்
கனிதருகாமந்துய்க்குங்காதலால்விரையச்செல்வா
னினிதயிராணிபாற்கொண்டேகுமின்சர்ப்பவென்றான். (சுச)

சர்ப்பமாகெனமுற்கொம்புதாங்கிமுன்னடக்குந்தென்றல்
வெற்பனுமுனிவன்சாபம்விளைத்தனன்விளைத்தலோடும்
பொற்பமாசுணமேயாகிப்போயினனறிவிலாத
வற்பரானவர்க்குச்செல்வமல்லதுபகைவேறுண்டோ. (சுரு)

பின்னர்தங்குரவனைபிரானடிபணிந்துவானோர்
பொன்னகர்வேந்தனின்றிப்புலம்படைகின்றதைய
வென்னலுங்குரவன்போயவ்விலஞ்சியுளொளித்தாற்கூவித்
தன்னுரையறிந்துபோந்தசதமகற்கொண்டுமீண்டான். (சுசு)

கொடும்பழிகோட்பட்டான்றன்குரவனைவணங்கியென்னைச்
சுடும்பழிகழிவதெங்ஙன்சொல்லெனத்தொலைவதோர்ந்தா
னடும்பழிமண்மேலன்றியருதுநீவேட்டைக்கென்னப்
படும்பழியிதனைத்தீர்ப்பான்பார்மிசைவருதியென்றான். (சுஎ)

---

(சுஉ) கெட்டேன் - வியப்பிடைச்சொல்.

(சுஙு) மாதவர் எழுவர் என்றது - அகத்தியன், ஆங்கிரசன், கோதமன், காசிபன், புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன்முதலிய சப்தரிஷிகள்.

(சுச) சர்ப்ப என்பதற்கு-விரைந்துநடக்க என்பதுபொருள்.

(சுரு) மாசுணம் - பெரும்பாம்பு.

(சுசு) சதமகன்-நூறுபரிமேதயாகஞ் செய்தவன் - இந்திரன்.

ஈசனுக்கிழைத்தகுற்றந்தேசிகனெண்ணித்தீர்க்குந்
தேசிகற்கிழைத்தகுற்றங்குரவனே தீர்ப்பதன்றிப்
பேசுவதெவனேதன்பாற்பிழைத்தகாரணத்தால்வந்த
வாசவன்பழியைத்தீர்ப்பான்குரவனேவழியுங்கூற. (சுஅ)

வாம்பரியுகைத்துத்தன்னல்வழிபடுகுரவன்வானோர்
தாம்பரிவோடுஞ்சூழத்தராதலத்திழிந்துசெம்பொற்
காம்பரிதோளியங்கன்கயிலைமால்வரையைத்தாழ்ந்து
தேம்பரியலங்கன்மார்பன்றென்றிசைநோக்கிச்செல்வான். (சுகூ)

மேற்படி - வேறு.

கங்கைமுதலளவிறந்த தீர்த்தமெல்லாம் போய்ப்படிந்து காசி காஞ்சி, யங்கனககேதார முதற்பதிகள்பலபணிந்து மவுணற்கொன்ற, பொங்குபழிவிடாதழுங்கி யராவுண்ணமாசுணடு பொலிவுமாழ்குந், திங்களனையான்கடம்ப வனத்தெல்லையணித்தாகச் செல்லுமேல்வை. (எ0)

தொடுத்தபழிவேறாகி விடுத்தகன்றதிந்திரன்றான் சுமந்தபாரம், விடுத்தவனுத்தளவிறந்த மகிழ்வெய்தித்தேசிகன்பால் விளம்பப்பாசங், கெடுத்தவன்மா தலம்புனிததீர்த்தமுள திவணமக்குக்கிடைத்தல்வேண்டு, மடுத்தறிகவெனச்சிலரை விடுத்தவ்வேறாநிலைநின்றப்பாற்செல்வான். (எக)

அருவிபடிந்தருவியெறி மணியெடுத்துப்பாறையிலிட் டருவிநீர்தூய்க், கருவிரல்கொய்தலர்சூட்டிக் கனியூட்டிவழிபடுவ கல்லாமந்தி, யொருதுறையில்யாளிகரி புழைக்கைமுகந்தொன்றற்கொன்றூட்டியூட்டிப். பருகுவனபுலிமுலைப்பால் புல்வாய்க்கன்றருத்தியிடும் பசிநோய்தீர. (எஉ)

நெளியராக்குருளைவெயில் வெள்ளிடையிற்கிடந்துயங்கிநெளியப்புள்ளே, றௌியருச்சிறைவிரித்து நிழல்பரப்பப்பறவைநோயுற்றதேகொ, லளியவாவச்சோவென் றேதியயன்மடமந்தி யருவியூற்றுந், துளியநீர்வளைத்தசும்பின் முகந்தெடுத்துக் கருங்கையினூற்சொரிவமாதோ. (எங)

---

(சுஅ) வழி - உபாயம்.

(சுகூ) காம்பரி-காம்பு, அரி-ஒருபொருட்பல்பெயர் - மூங்கில்.

(எக) வேறாநிலை-பழிவேறுபட்ட இடம். தொடுத்தபழி-விடாதுபற்றிய பிரமகத்தி.

(எஉ) அருவி-மலையாறு. புழைக்கை - துவாரம் பொருந்தியகை. விரல்கொய்து - மூன்றும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். புல்வாய் - மான்.

(எங) குருளை - குட்டி. புள்எறு - கருடன். வளை - சங்கு. தசும்பு - குடம்.

படவரவமணியீன்று நொச்சிப்பாசிலையன்ன பைந்தாண்மஞ்ஞை, பெடைதழுவிமணஞ்செய்ய மணவறையில்விளக்கிடுவபெருந் தண்கானத், தடர்சிறைமென்குயிலோமென் றார்ப்பமடக்கிள்ளையெழுத் தைந்துமோசைத், தொடர்புபெறவுச்சரிப்பக் குறுமொழிகேட்டாங்குவப்ப தொடிக்கட்பூவை. (எச)

இன்னவிலங்கொடுபுள்ளின் செயற்கரியசெயனோக்கி யிறும்பூதெய்திப், பொன்னகரான்புளகமுடல்புதைப்ப நிறைமகிழ்ச்சியுளம் புதைப்பப்போவா, னன்னபொழுதொற்றுவர்மீண் டடிவணங்கியின்சுவைப்பா லருந்துவான்முன், பின்னரியதேன்சொரிந்தாங்குவகைமேற்பேருவகை பெருகச்சொல்வார். (எரு)

எப்புவனத்திலுமென்றுங் கண்டறியாவதிசயமு மெண்ணுக்கெய்தாத், திப்பியமுமிக்கடம்பவனத்தின்று கண்டுவகைதிளைத்தேமங்கண், வைப்பனையவொருபுனித வாவிமருங்கொருகடம்ப வனத்தினீழ, லொப்பிலொளியாய்முளைத்த சிவலிங்கமொன்றுளதென்றுரைப்பக்கேட்டான். (எசு)

செவித்தொளையிலமுதொழுக்கு முழையரொடும்வழிக்கொண்டுசென்னிமேற்கை, குவித்துளமெய்மொழிகரணங் குணமூன்றுமொன்றித்தன்கொடியபாச, மவித்துளயர் வொழிக்க முளைத்தருள்குறிமேலன்பீர்ப்ப வடைவான்கானங், கவித்துளபூந்தடம்படிந்து கடம்பவனத்துழைநுழைந்தான் கவலைதீர்வான். (எஎ)

அருவாகியுருவாகியருவுருவங்கடந்துண்மையறிவானந்த, வருவாகியளவிறந்தவுயிராகியவ்வுயிர்க்கோருணர்வாய்ப்பூவின், மருவா

---

(எச) மணிஈன்று - மாணிக்கங்களை வெளிப்படுத்தி. தொடிக்கண் வளையல்போலும் வட்டமாகியகண்.

(எரு) இறும்பூது - அதிசயம். வைப்பு - நிட்சேபம். உழையர்-ஒற்றர்.

(எஎ) குணம் மூன்றுவன, சாத்துவிதம், இராசதம், தாமதம். கரணம்-மனம், வாக்கு, காயம் என்னுந் திரிகரணங்களும், மனம், புத்தி, அகங்காரம், சித்தம்முதலிய அந்தக்கரணங்களும்.

(எஅ) அருவம் என்றது—சிவம், சத்தி, நாதம், விந்துஎன அருவாகிநிற்றலை. உருவம்என்றது - மகேசுரன், உருத்திரன், திருமால், பிரமன், என உருவாகிநிற்றலை. அருவுருவம் என்றது-ரூபாரூபமாயுள்ளசதாசிவமாக நிற்றலை. உண்மையறிவானந்த வுருவாகி என்றது. அகோசரமாய்நின்ற சிவம், கோசரிக்குமிடத்துச், சத்து, சித்து, ஆனந்தங்களை முறையே, தூல, சூக்கும, காரணரூபமாகக் கொண்டு விளங்கிநிற்றலை.

கிச்சராசரங்களகிலமுந்தன் னிடையுதித்துமடங்கநின்ற, கருவாகி முளைத்தசிவக்கொழுந்தையாயிரங்கண்ணுங்களிப்பக்கண்டான். ()

கண்டுவிழுந்தெழுந்துவிழி துளிப்பவெழுகளிப் பென்னுங்கடலிலாழ்ந்து, விண்டுமொழிதழுதழுப்ப வுடல்பனிப்பவன் புருவாய் விண்ணோர்வேந்த, னண்டர்பிரானருச்சனைக்குவேண்டு முபகரணமெலாமகல்வானெய்திக், கொண்டுவரச்சிலரைவிடுத்தவரேகப்பின்னுமொரு குறைவுதீர்ப்பான். (எகூ)

தங்குடிமைத்தச்சனையோர் விமானமமைத்திடவிடுத்தத் தடத்தின்பாற்போ, யங்கணனைக்கடிதருச்சித்திடநறியமலர் கிடையாதயர்வானந்தச், சங்கெறிதண்டிரைத்தடத்தி லரனருளாற்பல்பரிதிசலதியொன்றிற், பொங்குகதிர்பரப்பிமுளைத் தாலென்னப்பொற்கமலம்பூப்பக்கண்டான். (அ0)

அன்புதலைசிறப்பமகிழ்ந் தாடினன்காரணத்தா லதற்குநாம, மென்பதுபொற்றாமரையென் றேழுலகும்பொலிகவெனவிசைத்துப்பின்னு, மின்பதுமத்தடங்குடைந்து பொற்கமலங்கொய்தெடுத்து மீண்டுநீங்காத், தன்பிணிநோய்தணியமுளைத் தெழுந்தமுழுமுதன்மருந்தின்றன்பால்வந்து. (அக)

மொய்த்தபுனக்காடெறிந்து நிலந்திருத்திவருமளவின் முளைத்தஞான, வித்தனையசிவக்கொழுந்தின் றிருமுடிமேற்பரிதிகரமெல்லத்தீண்டச், சித்தநெகிழ்ந்திந்திரன்றன் வெண்கவிகைத்திங்கணிழல்செய்வானுள்ளம், வைத்தனனப்போதிரவி மண்டலம்போலிழிந்ததொருமணிவிமானம். (அஉ)

கிரியெட்டுமெனமழையைக் கிழித்தெட்டும்புழைக்கைமதிக்கீற்றுக்கோட்டுக், கரியெட்டுஞ்சினமடங்க ளெட்டுமெட்டெட்டுக்கணமுந்தாங்க, விரியெட்டுத்திசைபரப்ப மயனிருமித்துதவியவவ்விமானஞ்சாத்தி, யரியெட்டுத்திருவுருவப் பரஞ்சுடரையருச்சிப்பானயினனே. (அங)

(எகூ) உபகரணம் - உரிமைப்பொருள்.

(அ0) அங்கணன் - அருள்நோக்குடையவன்.

(அங) கரியெட்டென்றது-அஷ்டகெசங்களை. மடங்கல் - சிங்கம். எட்டெட்டுக் கணங்கள்-அறுபத்துநான்கு சிவகணங்கள். அரி-இந்திரன். எட்டுத்திருவுருவம் என்றது, பஞ்சபூதம், சந்திர சூரியர் ஆன்மா என்னுமட்ட மூர்த்திகளை.

முந்தவமருலகடைந்து பூசனைக்குவேண்டுவன முழுதுந்தேர்வார், வந்துதருவைந்தீன்ற பொன்னுடையின்னுமிழு மணிப்பூண்வாசச், சந்தனமந்தாகினிமஞ் சனந்தூபந்திருப்பள்ளித் தாமந்தீபமந்தமிலானைந்துநறுங்கனிதீந்தேன் றிருவமுதமனைத்துந்தந்தார்.()

தெய்வத்தாமரைமுளைத்த நடம்படிந்துபவந்தொலைக்குந் திருநீருடிச், சைவத்தாழ்வடந்தாங்கி யன்புருவாயருளுருவந் தானுய்த்தோன்றும், பைவைத்தாடரவார்த்த பசுபதியையவனுரைத்தபனுவலாற்றின், மெய்வைத்தாதரம்பெருக வருச்சனைசெய்தானந்தவெள்ளத்தாழ்ந்தான். (அரு)

பாராரவட்டாங்கபஞ்சாங்கவிதிமுறையாற்பணிந்துள்வாய்மெய், நேராகச்சூழ்ந்துடலங் கம்பித்துக்கும்பிட்டு நிருத்தஞ்செய்து, தாராருந்தொடைமிதப்ப வானந்தக்கண்ணருவி ததும்பநின்றன், பாராமைமீக்கொள்ளவஞ்சலித்துத்துதிக்கின்று னமரர்கோமான்.

மேற்படி - வேறு.

அங்கணுபோற்றிவாய்மையாரணுபோற்றிநாக
கங்கணுபோற்றிமூலகாரணுபோற்றிநெற்றிச்
செங்கணுபோற்றியாதிசிவபரஞ்சுடரேபோற்றி
யெங்கணுயகனேபோற்றியீறிலாமுதலேபோற்றி. (அஎ)

யாவையும்படைப்பாய்போற்றியாவையுந்துடைப்பாய்போற்றி
யாவையுமாணுய்போற்றியாவையுமல்லாய்போற்றி
யாவையுமறிந்தாய்போற்றியாவையுமறந்தாய்போற்றி
யாவையும்புணர்ந்தாய்போற்றியாவையும்பிரிந்தாய்போற்றி. (அஅ)

இடருறப்பிணித்தவிந்தப்பழியினின்றென்னையீர்த்துன்
னடியிணைக்கன்பனுக்குமருட்கடல்போற்றிசேற்கண்
மடவரன்மணுளபோற்றிகடம்பமாவனத்தாய்போற்றி
சுடர்விடுவிமானமேயசுந்தரவிடங்கபோற்றி. (அகூ)

---

(அச) ஈன்ற-கொடுத்த. மந்தாகினி-கங்கை. திருப்பள்ளித்தாமம்-பத்திரபுஷ்பங்கள்.

(அரு) பவந்தொலைக்கும்-பிறவிநோயைத் தவிர்க்கும். பவம்-பிறப்பு. சைவத்தாழ்வடம்-சிவவேடத்துக்குரிய வுருத்திராக்கமாலை. பனுவல், ஈண்டுச் சிவாகமங்களை யுணர்த்திநின்றது. பசுபதி-பிரமனுதிப் பசுக்களுக் கிறைவன்.

(அசு) கம்பித்தல் - நடுங்கல். அஞ்சலி - நமஸ்காரம்.

(அஎ) அங்கண்-கிருபாநேத்திரம் செங்கண்-அக்கினிக்கண்.

(அகூ) ஈர்த்து-விடுவித்து. விடங்கன் - உளி நீக்கமுள்ளவன். டங்கம்-உளி.

பூசையும்பூசைக்கேற்றபொருள்களும்பூசைசெய்யு
நேசனும்பூசைகொண்டுநீயதியிற்பேறுநல்கு
மீசனுமாகிப்பூசையான்செய்தேனெனுமென்போத
வாசனையதுவுமானமறைமுதலடிகள்போற்றி. (கூ0)

என்னநின்றேத்தினனையின்னகைசிறிதுதோன்ற
முன்னவனடியாரெண்ணமுடிப்பவனருட்கணோக்கா
துன்னதுவேட்கையாதிங்குரையெனவிரையத்தாழ்ந்து
சென்னிமேற்செங்கைகூப்பித்தேவர்கோனிதனைவேண்டும. (கூக)

ஐயநின்னிருக்கையெல்லைக்கணியனுமளவினீங்கா
வெய்யவென்பழியினோடுமேலைநாளடியேன்செய்த
மையல்வல்வினையுமாய்ந்துன்மலரடிவழுத்திப்பூசை
செய்யவுமுரியனானேன்சிறந்தபேறிதன்மேல்யாதோ. (கூஉ)

இன்னநின்பாதப்போதேயிவ்வாறேயென்றும்பூசித்
துன்னடியாருள்யானுமோரடித்தொண்டனாவே
னன்னதேயடியேன்வேண்டத்தக்கதென்றடியில்வீழ்ந்த
மன்னவன்றனக்குமுக்கண்வரதனுங்கருணைபூத்து. (கூ௩)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

இருதுவிற்சிறந்தவேனி லுமதியாறிரண்டினிற்சிறந்தவான்றக ரும், பொருவிருரகையிற் சிறந்தசித்திரையுந்திதியினிற்சிறந்தபூர ணையு, மருவுசித்திரையிற் சித்திரைதோறும் வந்துவந்தருச்சியோர் வருடந், தெரியுநாண்மூந்நூற்றறுபதுமைந்துஞ் செய்தவர்ச்சனைப் பயனெய்தும். (கூ௪)

துறக்கநாட்டணைந்துசுத்த பல்போகந்துய்த்துமேன்மலபரிபா கம், பிறக்கநான்முகன்மான்முதற்பெருந்தேவர்பெரும்பதத்தாசை யும்பிறவு, மறக்கநாம்வீடுவழங்குதுமென்ன வாய்மலர்ந்தருளிவான் கருணை, சிறக்கநால்வேதச்சிகையெழுமனுதி சிவபரஞ்சுடர்விட கொடுத்தான். (கூ௫)

---

(கூக) வேட்கை - விருப்பம்.

(கூஉ) அணியன் - சமீபித்தவன்.

(கூ௩) அடித்தொண்டன் - தாழ்ந்ததொண்டன். அடி - தாழ் மை, இவ்வாறுவருதலை, திருவாசகம், திருவண்டப்பகுதியில், "அ ருட்பெருந்தீயிலடியோமடிக்குடல்." என்னுஞ் செய்யுளானு மு ணர்க.

(கூ௫) வான்கருணை - பெருங்கருணை.

மூடினன்புளகப் போர்வையால்யாக்கைமுடிமிசையஞ்சலிக்க மலஞ், சூடினன்வீழ்ந்தா னெழுந்துகண்ணருவி துளும்பினன்பன் முறைதுதிசெய், தாடினனையனடிபிரிவாற்ற தஞ்சினனவனருளா ணை, நாடினன்பிரியா விடைகொடுதுறக்க நண்ணினன்விண்ண வர்நாதன். (கசு)

எண்சீரடியாசிரியவிருத்தம்.

வந்தரமங்கையர்கவரிமருங்குவீச மந்தாரகற்பகப்பூமாரிதூற்ற, வந்தரநாட்டவர்முடிகளடிகள்சூட வயிராணிமுலைத்தடந்தோய்ந்தக லந்திண்டோள், விந்தமெனச்செம்மாந்து விம்முகாமவெள்ளத்து ளுடலழுந்தவுள்ளஞ்சென்று, சுந்தரநாயகன்கருணைவெள்ளத்தாழ்ந் துதொன்முறையின்முறைசெய்தான் றுறக்கநாடன். (கஎ)

இந்திரன்பழிதீர்த்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் கர - க்கு - திருவிருத்தம் - சங.கூ.

---

இரண்டாவது,

## வெள்ளையானைச்சாபநதீர்த்தபடலம்.

கொச்சகக்கலிப்பா.

மட்டவிழுங்கொன்றைச்சடையான்மகவானைத்
தொட்டபழியின்றொடக்கறுத்தவாறோதிப்
பட்டமதவேழம்பரனைப்பராய்முனிவ
னிட்டகொடுஞ்சாபநீத்தேகியவாறோதுவாம். (க)

கருவாசனைகழிக்குங்காசிநகர்தன்னிற்
றுருவாசவேதமுனிதொல்லாகமத்தின்
பெருவாய்மையாற்றன்பெயர்விளங்கவீச
னொருவாலிலிங்கவொளியுருவங்கண்டான். (உ)

---

(கசு) புளகம்-மயிர்ச்சிலிர்ப்பு. துறக்கம் - சுவர்க்கம்.

(உ) கருவாசனை-கர்ப்பவாசனை, அதாவது - இருவினை. துரு வாசமெனப் புஷ்பாஞ்சலியில் வந்தகாரணம்பற்றித் துருவாசரெ னப்பெயர்வந்தது.பெருவாய்மைஎன்றது-பதிவாக்கியமாயுள்ளசை வாகமங்களை.

இன்புற்றருச்சனைசெய்தேத்துவானவ்வேலை
யன்புக்கெளியனருளாற்றிருமுடிமேன்
மின்பொற்கடிக்கமலப்போதொன்றுவீழ்த்திடலுந்
தன்பொற்கரகமலப்போதலர்த்திதாங்கினான். (ரு)

தாங்கிக்கண்சென்னிதடமார்பணைத்துடலம்
வீங்கித்தலைசிறந்தமெய்யுவகைமேற்கொள்ள
நீங்கிக்கழிந்தகருணைநிதியனையான்
பூங்கற்பகநாட்டிற்போகின்றனவ்வேலை. (சா)

சங்கலறச்செங்களத்துத்தானவரைத்தேய்த்துவிறற்
கொங்கலர்தார்வேய்ந்தமரர்கோமான்றன்கோநகரிற்
செங்கணமரர்பெருஞ்சேனைக்கடல்கலிப்ப
மங்கலப்பல்லாண்டுமறைமுழங்கவந்தணைவான். (ரு)

எத்திக்குங்கல்லென்றியங்கலிப்பவேந்திழையார்
தித்தித்தமுதொழுகுங்கீதஞ்செவிமடுப்பப்
பத்திக்கவரிநிரைதானைப்படுகடலிற்
றத்திப்புரளிந்திரைபோற்றலைபணிப்ப. (சு)

அங்கட்கடலினெடுங்கூம்பகமிமிர்ந்த
வங்கத்தலையுய்க்குமீகான்றனைமானத்
திங்கட்குடைநிழற்றத்தீந்தேமதங்கவிழ்க்கும்
வெங்கட்களிற்றின்மிசைப்பவனிபோந்தணைந்தான். (எ)

அத்தலைவிண்ணாடரருகணைந்துவெவ்வேறு
தத்தமனக்கிசைந்தகையுறைகடாங்கொடுத்துக்
கைத்தலங்கள்கூப்பினார்கண்டார்கடவுளரி
லுத்தமனையர்ச்சித்துப்போந்தமுனியுத்தமனும். (அ)

---

(ரு) சங்கு - வெற்றிச்சங்கு. விறல்தார் - வெற்றிமாலை.

(சு) நிரை - வரிசை. தித்தித்த, என்றதில் அகரவீறு தொகுத்தல்.

(எ) கூம்பு-பாய்மரம். தீந்தேமதம் என்றதில், தீம், தேம், ஒருபொருட்பன்மொழி. வெங்கண் - என்றதில் சினையடையாகியவெம்மை தாட்சணியம் இன்மையை விளக்கி நிற்றலின் அஞ்சாமை என்னும் பொருளது.

(அ) அத்தலை - அவ்விடம்.

தீங்கரியவாசிமொழிசெப்பித்தன்செங்கரத்தி
னீங்கரியதாமரையைநீட்டினன்மற்றதனைத்
தாங்கரியசெல்வத்தருக்காலோர்கையோச்சி
வாங்கிமதயானையின்மேல்வைத்தான்மதியிலான். (௯)

கிறிக்கிடந்தமதியனையகிம்புரிக்கோட்
டேறிக்கடங்கவிழ்க்குமால்யானையுச்சியின்மே
னூறிக்கிடந்தநறுமலரைவீழ்த்தியுரற்
சீறிக்கிடந்தநெடுந்தாளாற்சிதைத்தன்றே. (௧0)

கண்டான்முனிகாமற்காய்ந்தானுதற்கண்போல்
விண்டாரழல்சிதறநோக்கினன்வெங்கோபங்
கொண்டானமரரொதுங்கக்கொதித்தால
முண்டானெனநின்றுருத்தானுரைக்கின்றான். (௧௧)

புள்ளியதோலாடைபுனைந்தரவப்பூணணிந்த
வெள்ளியசெங்கண்விடையானடிக்கமல
முள்ளியமெய்யன்புடையாரருவருத்துத்
தள்ளியசெல்வத்தருக்கினையென்செய்தாய். (௧௨)

கதித்தார்முடியமரர்கையுறையேநன்கு
மதித்தாயெம்மீசன்மதிமுடிமேற்சாத்தும்
பொதித்தாதவிழ்மலரைப்போற்றாதுவாங்கி
மிதித்தானைசிந்தவதன்மேல்வைத்தாய்பேதாய். (௧௩)

வண்டுளருந்தண்டுழாய்மாயோனிறுமாப்பும்
புண்டரிகப்போதுறையும்புத்தேளிறுமாப்பு
மண்டர்தொழவாழுன்னிறுமாப்புமாலால
முண்டவனைப்பூசித்தபேறென்றுணர்ந்திலையால். (௧௪)

---

(௯) ஓச்சி - நீட்டி.

(௧0) ஊறி - ஊற்றெடுத்து. உரல்சீறிக்கிடந்த என்றதற்கு, உரலோடு மாறுபட்டிருந்த என்பதுபொருள்.

(௧௨) மெய்யன்பரருவருத்துத்தள்ளியசெல்வம் என்றது - அழிவில்லாத சிவயோகம் நுகரும் மெய்யன்பர்க்கு, அழிதன் மாலையவாகிய இந்திரபோகம் பொய்ப்போகமாக முடியுமென்பதை விளக்கற்றென்க.

(௧௩) கையுறை - கையில் வரப்படுவதென்னும் பொருண்மேனிற்றலால் செயப்படு பொருளில்வந்த தொழிற்பெயர்.

(௧௪) இறுமாப்பு - மிகுமகிழ்ச்சி.

கேட்டானைவானவரின்சென்னிசெழியரிலோர்
வாட்டானைவீரன்வளையாற்சிதறுகநின்
கோட்டானநாற்கோட்டுவெண்ணிறத்தகுஞ்சரமுங்
காட்டானையாகவெனவிட்டான்கடுஞ்சாபம். (௧௫)

சவித்தமுனிபாதந்தலைக்கொண்டுசெங்கை
குவித்தமரர்தங்கோன்குறையிரப்பாரைய
வவித்தபொறியாயெம்மரசுங்காறள்ளுஞ்
செவித்தறுகண்வேழமுந்தீங்குடையரன்றே. (௧௬)

அத்தகையசீராற்சபித்தீரடிகேண்மற்
றித்தகையசாபமினிவிடுமினென்றிரந்து
கைத்தலங்கள்கூப்பிக்கரைந்தார்க்கிரங்கியருள்
வைத்தமுனிபிறிதுசாபம்வகுக்கின்றான். (௧௭)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

சிந்தனைவாக்கிற்கெட்டாச்சிவனருளளித்தசேட
நிந்தனைபரிகாரத்தானீங்காதுதலைமட்டாக
வந்ததுமுடிமட்டாகமத்தமாவனமாவாகி
யைந்திருபஃதாண்டெல்லையகன்றபின்பண்டைத்தாக. (௧௮)

என்றனன்பிறிதுசாபமிந்திரன்மகுடபங்க
மொன்றியசெய்கைபின்னருரைத்துமற்றஃதுநிற்க
நின்றவெள்ளானைவானநீத்தறிவிழந்துநீலக்
குன்றெனவனத்துவேழக்குழாத்தொடுகுழீஇயதன்றே. (௧௯)

மாவொடுமயங்கிச்செங்கண்மறம்பயில்காடுமுல்லைப்
பூவொடுவழங்குநீத்தப்புறவமுங்குறவர்தங்க

---

(௧௫) கோட்ட, நிறத்த, என்பனகுறிப்பு வினைப்பெயரெச்சங்கள். சேட்டானை-பெரியயானை. சேடு - பெருமை.

(௧௬) பொறி - பஞ்சேந்திரியம்.

(௧௭) சீரால்-என்றது, குற்றமும் பண்புளடங்குமாதலின், குற்றத்தை விளக்கிநின்றது.

(௧௮) சிந்தனை-மனம். நிந்தனை - அவமதிப்பு. மத்தமா - மத்தம், மதத்தையுடைய, மா - வெள்ளையானை. வனமா - காட்டானை. வனம் - காடு.

(௧௯) மறம்-கொலை, அது அத்தொழிலையுடைய ஓர்வகுப்பினரைக்குறித்து நிற்றலால் பண்பாகுபெயர்.

(௨0) குறவர்தங்கள் தேவொடும் பயிலுங்கல் என்றது, இளையபிள்ளையார் வசிக்கு மலைச்சார்பினதாகிய குறிஞ்சியை.

டேவொடுபெயிலுங்கல்லுந்திரிந்துநூருண்டுஞ்செல்லக்
காவொடுபெயிலுந்தெய்வக்கடம்பமாவனம்புக்கன்றே. (உ0)

புக்குரல்வட்டத்திண்காற்பொருவிறேவியலிற்றீர்ந்த
மைக்கருங்களிறுமுக்கண்மாதவனருள்வந்தெய்தத்
தக்கதோரமையஞ்சாரமரகதந்தழைத்துமின்னு
நக்கபொன்முளரிபூத்தநளிர்கயந்தலைக்கண்டன்றே. (உக)

கண்டபோதறிவுதோன்றக்கயந்தலைகுடைந்தபோது
பண்டையவடிவந்தோன்றப்பரஞ்சுடரருட்கண்டோன்றக்
கொண்டதோர்பரமானந்தக்குறியெதிர்தோன்றக்கும்பிட்
டண்டர்நாயகனைப்பூசைசெய்வதற்கன்புதோன்ற. (உஉ)

தூம்புடைக்கையான்மொண்டுமஞ்சனத்தாநீராட்டித்
தேம்புடையொழுகப்பள்ளித்தாமமுந்தெரிந்துசாத்திப்
பாம்புடைத்தாயவேணிப்பரனையர்ச்சிக்கவுள்ளத்
தாம்புடையறிந்தவெந்தையானையைநோக்கிக்கூறும். (உந)

வந்ததையெவனீவேண்டும்வரமெவனுரைத்தியென்னச்
சிந்தையிலன்புகூர்ந்ததெய்வதவேழந்தாழ்ந்து
முந்தையில்விளைவும்வந்தமுறைமையுமுறையாற்கூறி
யெந்தையையடையப்பெற்றேற்கினியொருகுறையுண்டாமோ. ()

என்பதாமாரம்பூண்டவெந்தையிக்கரிகளெட்டோ
டொன்பதாயடியனேனுமுன்னடிபிரியாதுன்றன்
முன்பதாயிவ்விமானமுதுகுறச்சுமப்பலென்றோ
ரன்பதாயொன்றெனுள்ளத்தடுத்தலாலஃதேவேண்டும். (உரு)

இடையறுவன்பின்வேழமிங்ஙனங்கூறவிண்ணு
டையவனம்பான்மெய்யன்புடையவனவனைத்தாங்கி
யடைவதேநமக்குவேண்டுமெனமகிழ்வெனுப்பின்னும்
விடையவன்வரங்கணல்கிவிடைகொடுத்தருளினனே. (உசு)

---

(உக) மாதவன் - உமாதேவியை யிடதுபாகத்தி லுடையவன். நளிர் - குளிர்ச்சி. கயம் - தடாகம். கயந்தலை - குளமாகிய இடம். இது ஆயன் சாத்தனென்றாற்போலநின்ற இருபெயரொட்டுப்பண்புத்தொகை. கயந்தலைகண்டது, இரண்டாம்வேற்றுமைத் தொகையாதலி னியல்பாயிற்று.

(உந) புடை - முதனிலைத்தொழிற்பெயர்.

(உரு) அரா - அரவு.

(உசு) விண்ணுடையவன் - இந்திரன்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

விடைகொடுவணங்கியேகும் வெள்ளானைமேற்றிசையடைந்து தன்பெயராற், றடமுமற்றதன்பாலரனையுங்கணேசன் றன்னையுங்கண்டருச்சனைசெய், திடையறுவன்புந்தானுமங்கிருக்குமெல்லையிச் செய்திகேட்டருள்கூர், கடவுளர்பெருமானுழையரைவிளித்தெங்களிற்றினைக்கொணர்கெனவிடுத்தான். (உஎ)

வல்லைவந்தழைத்தார் தம்மைமுன்போக்கி வருவலென்றெழுந்துகீழ்த்திசையோ, ரெல்லைவந்தோரூர்தனதுபேராற்கண் டிந்திரேச்சுரமெனவிறைவன், றொல்லைவண்பெயராலொன்றுகண்டரனைத் தூயபூசனைசெய்தங்கிருப்பக், கல்லைவன்சிறகுதடிந்தவனின்னுங்களிறுவந்திலதெனப்பின்னும். (உஅ)

மனத்தினுங்கடியதூதரைவிடுப்பவானடைந்திறைவனைவணங்கிப்
புனத்தினுங்கடியகல்லினும்பன்னாட்புன்கணேயுறவருசாபங்
கனத்தினுங்கரியகண்டனைக்கண்டுகளைந்ததுங்கிளந்துதிக்கயத்தி
னினத்தினுங்கழிந்ததெய்வதவேழமினிதுவீற்றிருந்ததுமாதோ. ()

குடவயினைராவதப்பெருந்தீர்த்தங்குடைந்தயிராவதகணேசக், கடவுளைத்தொழுதைராவதேச்சுரத்துக் கடவுளைப்பணிந்தவர்சாபத், தொடர்பினும்பாவத்தொடர்பினுங்கழிவர்சுராதிபன்களிறுசென்னெறிபோ, யிடர்கெடவையைபடிந்துதென்கரையி லிந்திரேச்சுரனடிபணிவோர். (௩0)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

இம்மையிலறமுன்மூன்றுலெய்தியபயனையெய்தி
யம்மையின்மகவானீரேழரும்பதமளவும்வானில்
வெம்மையில்போகமூழ்கிவெறுப்புவந்தடையவுள்ளச்
செம்மையில்விளைபேரின்பச்சிவகதிச்செல்வராவார். (௩க)

வெள்ளையானைச்சாபந்தீர்த்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் கக-க்கு - திருவிருத்தம் - சஎ0.

---

(உஎ) கண்டு-பிரதிட்டைசெய்து.

(உஅ) கல்லைவன் சிறகுதடிந்தவன்என்பதில், கடவுளையடிதொழுதுஎன்றுற்போல உருபுநோக்கியசொல் இரண்டுவெந்தன. கல்மலை.

(உகூ) புனம்-காடு. கடியகல்-மலை. புன்கண் - துன்பம். கனம்—மேகம். திக்கயத்தி னினத்தினுங்கழிந்த தெய்வதவேழமென்றது அதுவும் திக்கசங்களிலொன்றாயினுஞ் சிவபெருமான்திருவருளால் மேம்பட்டமையை விளக்க.

(௩க) அறமுன் மூன்றுவன—அறம், பொருள், இன்பம். மகவானீரேழரும்பதம் என்றது - பதினான்கு இந்திரபட்டங்களை.

சிவமயம்.

மூன்றாவது,

# திருநகரங்கண்டபடலம்.



கலிநிலைத்துறை.

தானவாறிழிபுகர்முகத்தடகரிசாபம்
போனவாறுரைசெய்துமேற்புதுமதிமுடிமேல்
வானவாறினன்கடம்பமாவனமுதுநகர
மானவாறதுதனைச்சிறிதறிந்தவாறிசைப்பாம். (க)

இன்னரம்புளரேழிசையெழான்மிடற்றளிகள்
கின்னரம்பயில்கடம்பமாவனத்தினின்கீழ்சார்த்
தென்னர்சேகரனெனுங்குலசேகரனுலக
மன்னர்சேகரனரசுசெய்திருப்பதுமணவூர். (உ)

குலவுமப்பெரும்பதியிளங்கோக்களிலொருவ
னிலவுமாநிதிபோலருச்சனைமுதனியதி
பலவுமாஞ்சிவதருமமுந்தேடுவான்பரன்பாற்
றலைமைசான்றமெய்யன்பினுன்றனஞ்சயனென்பான். (ங)

செல்வமாநகரிருந்துமேற்றிசைப்புலஞ்சென்று
மல்லல்வாணிகஞ்செய்துதன்வளம்பதிமீள்வான்
றொல்லையேழ்பவக்கடற்கரைதோன்றுவித்தடியா
ரல்லறீர்ப்பவன்கடம்பமாவனம்புகுமளவில். (ச)

இரவிகண்மறைந்தேழ்பரியிரதமுந்தானு
முரவுநீர்க்கருங்கடலில்வீழ்ந்தொளித்தனனுக
விரவுநீன்மயங்கிருள்வயிற்றமியனுய்மெலியு
மரவுநீர்ச்சடையண்ணலுக்கன்பினேனங்கண். (ரு)

---

(க) தானம் - மதம். புகர்முகம் - புள்ளிதங்கியமுகம்.

(உ) கின்னரம்-வீணை. இது இசைமேனிற்றலால் கருவியாகு பெயர். இருப்பது-தொழிற்பெயர், இது இடத்தின்மேனின்றது.

(ங) இளங்கோக்கள்-வைசியர். கரை - இது ஈண்டு மோட்சத்தையுணர்த்திநின்றது.

வாங்குநான்மருப்பேந்தியமதலையெருத்தந்
தாங்கியாயிரங்கரங்களாற்றடவியெண்டிசையுந்
தூங்குகாரிருடுரத்துநெஞ்சுடரெனச்சூழ்போய்
வீங்குகாரிருளொதுக்கியவிமானநேர்கண்டான். (சு)

அடுத்தணைந்தனனவிர்சுடர்விமானமீதமர்ந்த
கடுத்ததும்பியகண்டனைக்கண்டுதொழுந்துவகை
மடுத்தநெஞ்சினனங்ஙனம்வைகிருள்கழிப்பா
னெடுத்தசிந்தையினிருந்தனனிருக்குமவ்விருள்வாய். (எ)

சோமவாரமன்றுதலாற்சூரர்களங்கெய்தி
வாமமேகலைமலைமகடலைமகன்மலர்ந்த
காமர்சேவடிபணிந்தவன்கங்குல்போற்கருதி
யாமநான்கிலுமருச்சனையின்புறப்புரிவார். (அ)

அண்டர்வந்ததுமருச்சனைபுரிவதுமனைத்துந்
தொண்டரன்பினுக்கெளியவன்சுரர்தொழக்கறுத்த
கண்டனின்னருட்கண்ணினாற்கண்டனனுதலிற்
புண்டரம்பயிலன்புடைப்புண்ணியவணிகன். (கூ)

நானமென்பனிநறும்புனனாயகன்பூசைக்
கானநல்விரைவருக்கமுமமரர்கைக்கொடுத்து
ஞானவெண்மதிச்சடையவன்கோயிலின்ஞாங்கர்த்
தானமர்ந்தருச்சனைசெய்வான்றங்கணாயகனை. (க0)

வள்ளறன்னைமெய்யன்பினாலருச்சிசெய்வானே
ருள்ளவல்வினையீட்டமுங்கங்குலுமொதுங்கக்
கள்ளமில்லவன்யாரையுங்கண்டிலன்கண்டான்
றள்ளருஞ்சுடர்விமானமேற்றனித்துறைதனியை. (கக)

ஆழ்ந்தசிந்தையனதிசயமடைந்துசேவடிக்கீழ்
தாழ்ந்தெழுந்திருகைகளுந்தலைமிசைக்கூப்பிச்
சூழ்ந்துதன்பதிக்கேகுவானொருதலைதுணிந்து
வாழ்ந்தவன்பினன்விடைகொடுவழிக்கொடுவந்தான். (கஉ)

---

(சு) எருத்தம் - பிடரி.

(அ) அவன்கங்குல் என்றது, அவனுக்குரிய கங்குலென நிற்றலால், சிவராத்திரியை என்க. (கூ) புண்டரம் - திரிபுண்டரம்.

(க0) நானம்-கஸ்தூரி. விரை-வாசனை.

(கக) அருச்சி - முதனிலைத் தொழிற்பெயர். அருச்சித்தலென்பதுபொருள். (கஉ) ஒருதலை-ஒருபட்சம்.

முக்கடம்படுகளிற்றினுன்முகிறவழ்கோயில்
புக்கடங்கலர்சிங்கமன்னுனெதிர்புகல்வான்
றிக்கடங்கலுங்கடந்தவெந்திகிரியாய்நெருந
லக்கடம்பமாவனத்திலோரதிசயங்கண்டேன். (கரு)

வல்லைவாணிகஞ்செய்துநான்வருவழிமேலைக்
கல்லடைந்ததுவெங்கதிர்கங்குலும்பிறப்பு
மெல்லைகாணியகண்டனனிரவிமண்டலம்போ
லல்லடுஞ்சுடர்விமானமுமதிற்சிவக்குறியும். (கசு)

மாவலம்புதார்மணிமுடிக்கடவுளர்வந்தத்
தேவதேவனையிரவெலாமருச்சனைசெய்து
போவதாயினூர்யானுமப்பொன்னெடுங்கோயின்
மேவுமீசனைவிடைகொடுமீண்டனனென்றான். (கஎ)

மூளுமன்பினுன்மொழிந்திடமுக்கணெம்பெருமான்
றாளுமஞ்சலிகரங்களுந்தலையில்வைத்துள்ள
நீளுமன்புமற்புதமுமேசிரம்பநீர்ஞால
மாளுமன்னவனிருந்தனன்போயினனருக்கன். (கஅ)

ஈட்டுவார்வினையொத்தபோதிருண்மலங்கருக
வாட்டுவாரவர்சென்னிமேன்மலரடிக்கமலஞ்
சூட்டுவார்மறைகடந்ததந்தொல்லுருவிளங்கக்
காட்டுவாரொருசித்தராய்த்தோன்றினர்கனவில். (கஎ)

(கரு) முக்கடம்-மூன்றுமதம், கைமதம்-ஒன்று. கபோலமதம், இரண்டு. அடங்கலர்-பகைவர்.

(கசு) மேலைக்கல்-அஸ்தமனகிரி.

(கஎ) மா - இது பலபொரு ளொருசொல். ஈண்டுச்சார்பால் வண்டின்மேனின்றது.

(கஅ) அன்பும் அற்புதமேசிரம்ப என்றதனால், தன் அரசியற் செயலொழிந்து, அவன்கூறிய சொல்வசத்தனாய்நின்றானென்பது தோன்றுதலின், குறிப்பெச்சம். அஞ்சலி கரம் - வினைத்தொகை.

(கஎ) தொல்லுரு என்றது, அனாதியாயுள்ள உண்மைத்திருவுருவத்தை. வினையொத்தலென்றது-ஆன்மாக்கள்தேடும் இருவினைப்போகங்களை நுகர்தற் கண்தோன்றும், இளைப்பின்மிகுதியை. இருண்மலங்கருகவாட்டுவார் என்றது, வினையொப்பு வாய்ந்தகாலத்து ஆசிரியத் திருக்கோலங்கொண்டெழுந்தருளி அவ்விருபாசங்கட்கிடையெழுந் தற்போதச்செயலில், அவற்றின்செயலின்மை. காட்டுதலை மலரடிக்கமலஞ்சூட்டுவார் என்றது-சத்திபதிவித்தலை.

வடிகொள்வேலினாய்கடம்பமாவனத்தினைத்திருந்தக்
கடிகொள்காடகழ்ந்தணிநகர்காண்கெனவுணர்த்தி
யடிகளேகினார்கவுரியராண்டகைகங்குல்
விடியும்வேலைகண்விழித்தனன்பரிதியும்விழித்தான். (கஅ)

கனவிற்றீர்ந்தவனியதியின்கடன்முடித்தமைச்சர்
சினவிற்றீர்ந்தமாநவர்க்குந்தன்கனாத்திரஞ்செப்பி
நனவிற்கேட்டதுங்கனவினிற்கண்டதுநயப்ப
வினவித்தேர்ந்துகொண்டெழுந்தனன்மேற்றிசைச்செல்வான். ()

அமைச்சரோடுமெந்நீபமாவனம்புகுந்தம்பொன்
சமைத்தவிழ்ந்தபொற்றாமரைத்தடம்படிந்தொளிவிட்
டிமைத்தலர்ந்தபொன்விமானமீதினிதுவீற்றிருந்தோர்
தமைச்சரண்பணிந்தஞ்சலிதலையின்மேன்முகிழ்த்தான். (உ0)

அன்புபின்றள்ளமுன்புவந்தருட்கணீர்தேங்க
வென்புநெக்கிடவேகிவீழ்ந்திணையடிக்கமலம்
பொன்புனைந்ததார்மௌலியிற்புனைந்தெழுந்திறைவன்
முன்புநின்றுசொற்பதங்களாற்றோத்திரமொழிவான். (உக)

சரணமங்கையோர்பங்குறைசங்கரசரணஞ்
சரணமங்கலமாகியதனிமுதல்சரணஞ்
சரணமந்திரவடிவமாஞ்சதாசிவசரணஞ்
சரணமும்பர்கணாயகபசுபதிசரணம். (உஉ)

ஆழிஞாலமேலாசையுமமரர்வான்பதமேல்
வீழுமாசையும்வெறுத்தவர்க்கன்றிமண்ணாண்டு
பீழைமூழ்கிவானரகொடுபிணிபடச்சுழலு
மேழையேங்களுக்காவதோவெந்தைநின்கருணை. (உங)

---

(கஅ) அடிகள்-சோமசுந்தரக்கடவுள். காண்க என்பதில் அகரவீறு தொகுத்தல்.

(க௯) சினவு-தொழிற்பெயர். (உ0) நீபம்-கடம்பு.

(உக) சொல்பதம் - ஒருபொருட்பன்மொழி. பொன்புனைந்த தார்-பொன்னரிமாலை.

(உஉ) மந்திரவடிவமாஞ் சதாசிவ என்றது, மந்திரங்கட்கெல்லாமுற்படத்தோன்றிய பஞ்சப்பிரமமந்திரங்களையே முற்பட்டவடிவமாகக்கொண்டிருத்தலை. பசுபதி என்றது-விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னு மூவகைப்பசுக்களுக்குந் தலைவனாகநிற்றலின். மங்கலமாகிய என்றது, சிவம் என்னும் பதத்திற்கு மங்கலமென்பது பொருளாதலின்.

(உங) பீழை-துன்பம்.

சூளதாமரைச்சென்னியுந்தொடத்தொடநீண்ட
நீளனீயுனக்கன்பிலமாயினுநீயே
மூளவன்புதந்தெங்குடிமுழுவதும்பணிகொண்
டாளவேகொலிக்கானகத்தமர்ந்தனையென்று. (உச)

சுரந்தவன்பிருகண்வழிச்சொரிவபோற்சொரிந்து
பரந்தவாறொருசிவானந்தப்பரவையுட்படிந்து
வரந்தவாதமெய்யன்பினுல்வலங்கொடுபுறம்போந்
தரந்தைதீர்ந்தவனொருசிறையமைச்சரோடிருந்தான். (உரு)

ஆயவேலையின்மன்னவனுணையாலமைச்சர்
மேயவேலவர்துறைதுறைமேவினர்விடுப்பப்
பாயவேலையினூர்த்தனர்வழிக்கொடுபடர்ந்தார்
சேயகாடெறிந்தணிநகர்செய்தொழின்மாக்கள். (உசு)

வட்டவாய்மதிப்பிளவின்வெள்வாய்க்குயநவிய
மிட்டதோளினர்யாப்புடைக்கச்சினரிரும்பின்
விட்டகாரொளிமெய்யினர்விசிகொள்வார்வன்றூற்
றொட்டகாலினர்வனமெறிதொழிலினராரூர். (உஎ)

மறியுமோதைவண்டரற்றிடமரந்தலைபனிப்ப
வெறியுமோதையுமெறிபவரோதையுமிரங்கி
முறியுமோதையுமுறிந்துவீழோதையுமுகில்வாய்ச்
செறியுமோதையுங்கீழ்ப்படமேற்படச்செறியும். (உஅ)

ஒளிறுதாதொடுபோதுசெந்தேனுகவொலித்து
வெளிறில்வன்மரஞ்சினையிறவீழ்வசெங்களத்துப்
பிளிறுவாயவாய்கிணத்தொடுகுருதிநீர்பெருகக்
களிறுகோடிறமாய்ந்துவீழ்காட்சியவனைய. (உகூ)

பூவடைந்தவண்டினமயற்புறவொடும்பழனக்
காவடைந்தனபறவைவான்கற்பகமடைந்த
கோவடைந்திடவொதுங்குறுங்குறும்புபோற்செறிந்து
மாவடைந்தனமாடுளவரைகளுங்காடும். (ஙo)

(உச) சூள் - பிரதிக்கினை.

(உரு) அரந்தை-மனக்கவலை.

(உஎ) குயம்-கொடுவாள். நவியம்-கோடரி.

(உகூ) வன்மரம்—ஓர்வகைச்சாதிமரம். தாது-மகரந்தம். போது-மலர். சினை-கிளை.

இருணிரம்பியவனமெலாமெறிந்துமெய்யுணர்ந்தோர்
தெருணிறைந்தசிந்தையின்வெளிசெய்துபல்லுயிர்க்கு
மருணிறைந்துபற்றறுத்தரனடிநிழலடைந்த
கருணையன்பர்தம்பிறப்பெனவேரொடுங்களைந்தார். (௩௧)

களைந்துநீணிலந்திருத்திச்செந்நெறிபடக்கண்டு
வளைந்துநன்னகரெடுப்பதெவ்வாறெனத்தேறல்
விளைந்துதாதுகுதார்முடிவேந்தன்மந்திரரோ
டளைந்தளாவியசிந்தையோடிருந்தனனங்கண். (௩௨)

மெய்யரன்புதோய்சேவடிவியனிலந்தீண்டப்
பொய்யகன்றவெண்ணீறணிமேனியர்பூதிப்
பையர்நள்ளிருட்கனவில்வந்தருளியபடியே
யையர்வல்லவந்தருளினாரரசுளங்களிப்ப. (௩௩)

கனவிலும்பெருங்கடவுளர்காண்பதற்கரியார்
நனவிலும்வெளிவந்தவர்தமையெதிர்நண்ணி
நினைவினின்றதாளிறைஞ்சிநேர்நின்றுநல்வரவு
வினவியாதனங்கொடுத்தனன்மெய்யுணர்வேந்தன். (௩௪)

தென்னரன்பினிலகப்படுசித்தர்தாமுன்னர்ச்
சொன்னவாதிநூல்வழிவருசார்புநூற்றொடர்பா
னன்னராலயமண்டபங்கோபுரநகர
மின்னவாறுசெய்யெனவகுத்திம்மெனமறைந்தார். (௩௫)

மறைந்தெவற்றிலுநிறைந்தவர்மலரடிக்கன்பு
நிறைந்தநெஞ்சுடைப்பஞ்சவனிலத்துமேம்பட்டுச்
சிறந்தசிற்பநூற்புலவராற்சிவபரஞ்சுடர்வந்
தறைந்துவைத்தவாறாலயமணிநகர்காண்பான். (௩௬)

---

(௩௧) மெய்யுணர்தல் - தத்துவஞான முணர்தல், அதாவது, பிறப்புவீடுகளையும், அவற்றின் காரணங்களையும், விபரீதமின்றி உண்மையாலறிதல்.

(௩௩) நீறு-பாசத்தைநீற்றுவது.

(௩௪) பெருங்கடவுளர் என்றது-பிரமவிஷ்ணுக்களை.

(௩௫) முதனூல்-ஆகமம். வழிநூல்-சிற்பநூல். சார்புநூல்-இவ்விரண்டையு மொருபுடை தழுவிக்கூறும் ஏனையநூல்கள்.

(௩௬) பஞ்சவன் (குலசேகர) பாண்டியன். மறைந்தெவற்றிலு நிறைந்தென்றதை, "விறகிற்றீயினிற்பாலிற்படுநெய்போன், மறையநின்றுளன்மாமணிச்சோதியான்" எனவருந்தேவாரத்தாலுணர்க.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

மறைபயில்பதுமமண்டபமருத்த மண்டபமழைநுழைவளைவா ய்ப், பிறைபயில்சிகைமாமண்டபமறுகாற் பீடிகை திசையெலாம் பிளக்கும், பறைபயினிருத்தமண்டபம்விழாக்கொள் பன்மணிமண் டபம்வேள்வித், துறைபயில்சாலைதிருமடைப்பள்ளிசூழுறைதேவர் தங்கோயில். (௩எ)

வலவயினிமயவல்லிபொற்கோயின்மாளிகையடுக்கியமதில்வா, னிலவியகொடியநெடியசூளிகைவா னிலாவிரிதவளமாளிகைமீன், குலவியகுடுமிக்குன்றிவர்செம்பொற் கோபுரங்கொண்டல்கண்படுக் குஞ், சுலவெயிலகழிக்கிடங்குகம்மியநூற் றுலவரம்பெல்லைகண் டமைத்தான். (௩அ)

சித்திரநிரைத்தபீடிகைமறுகுதெற்றிகள்வாணிலாத்தெளிக்கு
நித்திலநிரைத்தவிழாவருவீதிநிழன்மணிச்சாளரவொழுக்கப்
பித்திகைமாடப்பெருந்தெருக்கவலைபீடுசால்சதுக்கநற்பொதியில்
பத்தியிற்குயின்றமன்றுசெய்குன்றுபருமணிமேடையாடரங்கு ()

அருந்தவரிருக்கையந்தணருறையுளரசராவணங்குலவணிகப்
பெருந்தெருநல்வேளாளர்பேரறஞ்சால்பெருங்குடிஏனையகரிதேர்
திருந்தியபரிமாநிலைக்களங்கழகந்தீஞ்சுவையாறுநான்குண்டி
யிரந்தவர்க்கருத்துநல்லறச்சாலையினையனபிறவுநன்கமைத்தான். ()

துணிகயங்கீழ்நீர்க்கூவல்பூவோடை தொடுகுளம்பொய்கைநந் தவனந், திணிமலர்ச்சோலைதுடவையுய்யானந்திருநகர்க்கணிபெற ச்செய்து, மணிமலர்த்தாரோன்மாளிகைதனக்கம்மாநகர்வடகுண பாற்கண், டணிநகர்சாந்திசெய்வதுகுறித்தானண்ணலா ரறிந்திது செய்வார். (சக)

---

(௩அ) சூளிகை-இறப்பு. குடுமி-சிகரம். கம்மியநூல்-சிற்பநூல். வரம்பு, எல்லை, ஒருபொருட் பன்மொழி.

(௩கூ) தெற்றிகள் - சித்திரகூடங்கள். பித்திகை - சுவர்த்தல ம். கவலை - மூன்றுதெருக்கள் கூடுமிடம். சதுக்கம்-நான்குதெருக் கள்கூடுமிடம். பொதியில் - அம்பலங்கள். மன்று - சபை. அரங்கு- நாடகசாலை.

(சo) உறையுள் - வீடு. ஆவணம் - வீதி. கழகம்-கல்விச்சாலை. அறுசுவை-கைப்பு, புளிப்பு, கார்ப்பு, உவர்ப்பு, துவர்ப்பு. இனிப்பு. நான்குண்டியாவன - உண்ணல், தின்னல், நக்கல், பருகல். இவற் றுள், உண்ணல்-சோறுமுதலியன. தின்னல்-கறிமுதலியன, நக்கல் தேன்முதலியன. பருகல்-நீர்முதலியன.

(சக) கயம்-குளம். கூவல்-கிணறு. உய்யானம்-பூந்தோட்டம்.

பொன்மயமானசடைமதிக்கலையின்புத்தமுதுகுத்தனரதுபோய்ச்
சின்மயமானதம்மடியடைந்தார்ச்சிவமயமாக்கியசெயல்போற்
றன்மயமாக்கியந்நகர்முழுதுஞ்சாந்திசெய்ததுவதுமதுர
நன்மயமானதன்மையான்மதுராநகரெனவுரைத்தனர்நாமம். (சஉ)

கீட்டிசைக்கரியசாத்தனுந்தென்சார் கீற்றுவெண்பிறைநுதற்க ளிற்றுக், கோட்டிளங்களபக்கொங்கை யன்னையருங்குடவயின்மது மடையுடைக்குந், தோட்டிளந்தண்ணந்துழாயணிமௌலித்தோன் றலும்வடவயிற்றோடு,நீட்டிரும்போந்தி னிமிர்குழலெண்டோணீலி யுங்காவலாநிறுவி. (சங)

கைவரையெருத்திற்கனவரைகிடந்த காட்சிபிற்பொலிந்தொ ளிர்கோயின், மைவரைமிடற்றுமதுரைநாயகரை மரபுளியருச்சனை புரிவான், பொய்வரைமறையாகமநெறியொழுகும்புண்ணியமுனிவ ரையாதி, சைவரைக்காசிப்பதியினிற்கொணர்ந்து தலத்தினிற்று பனஞ்செய்தான். (சச)

உத்தமகுலத்து நாற்பெருங்குடியு முயர்ந்தவுமிழிந்தவுமயங்க, வைத்தவுமானபுறக்குடிமூன்றுமறைவழுக்காமநுவகுத்த, தத்தமநெ றிநின்றொழுகவைதிகமுஞ்சைவமுந்தருமமுந்தழைப்பப், பைத்தெ ழுதிரைநீர்ஞாலமேற்றிலகம்பதித்தெனநகர்வளம்படுத்தான். (சரு)

---

(சஉ) சின்மயம் - ஞானமயம். சிவமயம் - சிவஸ்வரூபம்.

(சங) சாத்தன் - ஐயனார். களபம் - கலவைச்சாந்து. அன்னை யர்என்றது, சத்தமாதர்களை. போந்து - பனை. நீலி-நீலநிறத்தையு டையவள் - காளி. தண்ணந்துழாய் என்றதில், அம்விரித்தல் வி காரம்.

(சச) கைவரை - யானை. எருத்தம் - பிடரி. கனவரை - பொ ன்மலை. கனகம் - பொன் - வரை-மலை. கனகம் - என்பது, இடை க்குறையாய் கனமெனநின்றது. கனம் - பெருமைதங்கிய - வரை- மலை. எனினும்பொருந்தும். மை-கருமை. மரபுளி-இதில் உளிமூன் றனுருபு. தாபனம்-இருக்கச்செய்தல்.

(சரு) நாற்பெருங்குடி-அந்தணர், அரசர், வணிகர், வேளாளர். உயர்ந்தவு மிழிந்தவு மயங்கவைத்தவு மானபுறக் குடிமூன்றும், என்றது, உயர்வு, இழிவு, விரவுஎன்னு மூவகைக்குடிகளையும். இவ ற்றுள், உயர்வு - அநுலோமர், பிரதிலோமர். இழிவு - அந்தராளர், விராத்தியர். விரவு - அவ்விருவகைக்குடிகளின் கலப்பாலுற்பவித் தவர்கள். வைதிகம்-வேதசம்பந்தம். சைவம்-சிவசம்பந்தம். அல்லது ஆகமசம்பந்தம்.

அன்றுதொட்டரசனந்நகரெய்தியணிகெழுமங்கலமியம்ப, வென்றுதொட்டிமைக்குமனையின்மங்கலநா ளெய்தினனிருந்துமுப்புரமுங், குன்றுதொட்டெய்தான்கோயின்மூன்றுறுப்புங்குறைவில்பூசனைவழாதோங்கக், கன்றுதொட்டெறிந்துகனியுகுத்தான்போற்கலிதுரந்தரசுசெய்நாளில். (சசு)

பவநெறிகடக்கும்பார்த்திவன்கிரணம் பரப்பிளம்பரிதிபோன் மலயத், துவசனைப்பயந்துமைந்தன்மேன்ஞாலஞ்சுமத்திநாள்பலகழித்தொருநா, ணவவடிவிறந்தோனலயத்தெய்திநாதனைப்பணிந்துமூவலஞ்செய், துவமையிலின்பவருணிழலெய்தியொன்றியொன்றாநிலைநின்றான். (சஎ)

திருநகரங்கண்டபடலம் முற்றிற்று.

ஆ படலம் – கஉ - க்கு - திருவிருத்தம் - ருகஎ.

---

நான்காவது,

## தடாதகைப்பிராட்டியார் திருவவதாரப்படலம்.



கலிவிருத்தம்.

கன்னியொருபங்கினர்கடம்பவனமெல்லா
நன்னகரமானதுநவின்றுமுலகீன்ற
வன்னைமகளாகிமலயத்துவசனுக்கு
தென்னனிடைவந்துமுறைசெய்ததுரைசெய்வாம். (க)

---

(சசு) என்று-சூரியன். மூன்றுறுப்பாவன - நித்தியம், நைமித்திகம், பிராயச்சித்தம். கலி-துன்பம்.

(சஎ) நவவடிவமாவன-பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன், விந்து, நாதம், சத்தி, சிவம் என்பன; இவற்றுள் முன்னையநான்கும் உருவம், பின்னையநான்கும்அருவம், இடையது அருவுருவம். நவவடிவிறந்தோனென்றது, மேற்கண்டபேதங்களைக்கடந்துநின்ற பராபரவடிவனை. அருணிழல் என்றது, நித்தியானந்தத்தைத்தரும், பாமுத்தியாகிய திருவடிப்பேற்றை. ஒன்றியொன்றாநிலை-கலந்துங் கலவாதநிலை. அதாவது-அனன்னியமாய். இருந்தபடி இருத்தல்.

(க) முறை - அரசாக்ஷி.

மனுவறமுவந்துதன்வழிச்செலநடத்தும்
புனிதன்மலயத்துவசன்வென்றிபுனைபூணன்
கனியமுதமன்னகருணைக்குறையுள்காட்சிக்
கினியவன்வடசொற்கடறமிழ்க்கடலிகந்தோன். (௨)

வேனில்விறல்வேள்வடிவன்வேட்கைவிளைபூமி
யானமடவார்கள்பதினுயிரவருள்ளான்
வானெழுகுபானுவழிவந்தொழுகுசூர
சேனன்மகள்காஞ்சனையைமன்றல்வினைசெய்தான். (௩)

கண்ணுதலைமுப்பொழுதும்வந்துபணிகற்றோ
னெண்ணில்பலநாண்மகவிலாவறுமையெய்திப்
பண்ணரியதானதருமம்பலவுமாற்றிப்
புண்ணியநிரம்புபரிவேள்விபுரிகுற்றான். (௪)

ஈறின்மறைகூறுமுறையெண்ணியொருதொண்ணூற்
றாறினொடுமூன்றுமகமாற்றவமரேச
னூறுமகமும்புரியினென்பதனொடிப்பின்
மாறுமெனமற்றதனைமாற்றியிதுசாற்றும். (௫)

நன்பொருள்விரும்பினையதற்கிசையஞால
மின்புறுமகப்பெறுமகத்தினையியற்றி
னன்புறுமகப்பெறுதியென்றமரர்நாடன்
றன்புலமடைந்திடலுநிம்பநகுதாரான். (௬)

மிக்கமகவேள்விசெய்விருப்புடையனாகி
யக்கணமதற்குரியயாவையுமமைத்துத்
தக்கநியமத்துரியதேவியொடுசாலை
புக்கனனிருந்துமகவேள்விபுரிகிற்பான். (௭)

(௨) உறையுள் - இருப்பிடம்.

(௪) பணி - முதனிலைத்தொழிற்பெயர்.

(௬) நன்பொருள் என்றது, புத்திரப்பேற்றை, புத்திரனைப் பொருளென்றது, அவர்செய்தபொருள் தம்மைநோக்கிச்செய்யும் வினையால் வந்தடைதலில் காரணப்பெயர். "தம்பொருளென்பதம் மக்களவர்பொரு, டந்தம்வினையான்வரும்" என்னுந்திருக்குறளா னுணர்க. பொருள் - புதல்வன்.

(௭) மகவேள்வி - புத்திரகாமேஷ்டியாகம்.

ஆசறமறைப்புலவராசிரியர்காட்டு
மாசறுசடங்கின்வழிமந்திரமுதாத்த
மோசையநுதாத்தசொரிதந்தழுவவோதி
வாசவனிருக்கையிலிருந்தெரிவளர்ப்பான். (அ)

விசும்புநிலனுந்திசையும்வேள்வியடுசாலைப்
பசும்புகைபடர்ந்தொருப்படாமெனமறைப்பத்
தசும்புபடுநெய்பொரிசமித்திஞெடுவோனோர்க்
கசும்புபடுமின்னமுதினகுதிமடுத்தான். (கூ)

ஐம்முகனநாதிபரமாத்தனுரையாற்று
னெய்ம்முகநிறைத்தழனிமிர்த்துவருமெல்லை
பைம்முகவராவணிபரஞ்சுடர்தனிப்ப
மைம்முகநெடுங்கணிமவான்மனைவிநாண. (கo)

வள்ளன்மலயத்துவசமீனவன்வலத்தோ
டுள்ளமனைகாஞ்சனைசுருங்கியமருங்கு
றள்ளவெழுகொங்கைகடதும்பநிமிர்தீம்பால்
வெள்ளமொழுகக்கரியவேற்கணிடனுட. (கக)

இவ்வுலகமன்றியுலகேழுமகிழ்வெய்தச்
சைவமுதலாயினதவத்துறைநிவப்ப
வெளவியமறங்கெடவறங்குதுகலிப்பத்
தெய்வமறைதுந்துபிதிசைப்புலனிசைப்ப. (கஉ)

---

(அ) சடங்கு - கிரியை. "உதாத்த. வோசையனுதாத்த சொரிதந்தழுவவோதி," என்றது - வேதாங்கங்களி லொன்ருகிய சிட்சைக்கியைந்த, உதாத்தம், அனுதாத்தம், ஸ்வரிதம், பிரசயமென்னுஞ்சதுர்விதஸ்வர கரணங்களை. அவற்றுள், உதாத்தம் - எடுத்தல். அநுதாத்தம் - படுத்தல். ஸ்வரிதம் - நலிதல். ப்ரசயம் - விலங்கல். இவற்றைமுறையே, தலையிசை, மிடற்றிசை, நெஞ்சிசை, மூக்கிசை எனவுங்கூறுவர்.

(கூ) படாம்-போர்வை. தசும்பு - குடம். அசும்பு - ஊற்று. ஒடு-எண்ணிடைச்சொல்.

(கo) ஐம்முகம்-ஈசானம், தற்புருடம். அகோரம், வாமதேவம், சத்தியோசாதம், என்னும் ஐந்துதிருமுகங்கள். உரை - வேதம். ஆறு - வழி. பைம்முகமென்றது - சர்ப்பங்களுக்கு முகமேபடமாதலின். நிறைத்து-செயவெனச்சத்திரிபு.

(கஉ) சைவமுதலாயின தவத்துறை என்றது - சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வைரவம், வாமம் என்னுந் தவநெறிக்குரிய உட்சமயங்களாறினையும். உலகேழாவன - பூலோகம்,புவலோகம், சுவலோகம், தவலோகம், மகாலோகம், சனலோகம், சத்தியலோகங்களை.

மைம்மலர்நெடுங்கணரமங்கையர்நடிப்ப
மெய்ம்மனமொழிச்செயலின்வேறுபடலின்றி
யம்மதுரைமாநகருளாரகமகிழ்ச்சி
தம்மையறியாதனதலைத்தலைசிறப்ப. (கங)

மாந்தர்பயின்மூவறுசொன்மாநிலவரைப்பிற்
றீந்தமிழ்வழங்குதிருநாடதுசிறப்ப
வாய்ந்ததமிழ்நாடரசளித்துமுறைசெய்யும்
வேந்தர்களின்மீனவர்விழுத்தகைமையெய்த. (கச)

நொய்தழலெரிக்கடவுணேற்றபயனெய்தக்
கொய்தளிரெனத்தழல்கொழுந்துபடுகுண்டத்
தைதவிழ்தழ்க்கமலமப்பொழுதலர்ந்தோர்
மொய்தளிர்விரைக்கொடிமுளைத்தெழுவதென்ன. (கரு)

விட்டிலகுசூழியம்விழுங்குசிறுகொண்டை
வட்டமதிவாய்க்குறுமுயற்கறையைமானக்
கட்டியதினூற்றியகதிர்த்தரளமாலை
சுட்டயதில்விட்டொழுகுசூழ்கிரணமொப்ப. (கசு)

தீங்குதலையின்னமுதமார்பின்வழிசிந்தி
யாங்கிளநிலாவொழுகுமாரவடமின்ன
வீங்குடலிளம்பரிதிவெஞ்சுடர்விழுங்கி
வாங்குகடல்வித்துருமமாலையொளிகால. (கஎ)

சிற்றிடைவளைந்தசிறுமென்றுகில்புறஞ்சூழ்
பொற்றிருமணிச்சிறியமேகலைபுலம்ப
விற்றிருமணிக்குழைவிழுங்கியகுதம்பை
சுற்றிருள்கடிந்துசிறுதோள்வருடியாட. (கஅ)

---

(கச) மூவறுசொன்மாநிலவரைப்பு, என்றது—பதினெண்பாஷைநிலங்களை. அவை-சிங்களம், சோனகம், சாவகம், சீனம், மழுவம், குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கம், கலிங்கம், வங்கம், கங்கம், மகதம், கடாரம், கவுடம், குசலம், திரவிடம் என்பன. வேந்தர்கள்-சேரசோழபாண்டியர்.

(கரு) ஐது - அழகிது. அலர்ந்த என்னும் பெயரெச்சம் ஈறுதொக்கு நின்றது.

(கசு) சூழியம்-உச்சிக்கொண்டையி லணியுமாபரணம். சூழி—உச்சிக்கொண்டையணி, அம்—பகுதிப்பொருள்விகுதி. முயற்கறை-இருபெயரொட்டுப் பண்புத்தொகை. முயலாகியகளங்கம் என்பது பொருள்.

(கஎ) குதலை-உருத்தெரியாச்சொல். வித்துருமம்-பவளம்.

(கஅ) மேகலை-எண்கோவையணி.

தெள்ளமுதமென்மழலைசிந்தவிளமூரன்
முள்ளெயிறரும்பமுலைமூன்றுடையதோர்பெண்
பிள்ளையெனமூவொருபிராயமொடுநின்ற
ளெள்ளரியபல்லுயிருமெவ்வுலகுமீன்றாள். (கக)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

குறுந்தளிர்மெல்லடிகிடந்த சிறுமணிநூபுரஞ்சதங்கை குழறியேங்க, நறுந்தளிர்போலசைந்துதளர் நடையொதுங்கிமழலைபிளக்கையுந்தோன்றப், பிறந்தபெரும்பயன்பெறுபொன் மாலைமடியிருந்தொருபெண்பிள்ளையானா, ளறந்தழுவுநெறிநின்றோர்க் கிகம்போகம்வீடளிக்கு மம்மையம்மா. (உ0)

செய்யவாய்வெளிறாது துணைமுலைக்கண்கருகாது சேல்போனீண்ட, மையவாய்மதர்த்தகருங் கண்பசவாதையிரண்டு மதியந்தாங்கா, தையவாலிலைவருந்தப் பெறாதுபெறுமகவையெடுத் தணைத்தாண்மோந்தா, டுய்யவாய்முத்தங்கொண் டின்புற்றாண்முன்பெற்ற தோகையன்னாள். (உக)

பரையாதிவிருப்பறிவு தொழிலாகியுலகமெலாம் படைத்துக்காத்து, வரையாதுதுடைத்துமறைத் தருளியவைநின்றுந்தன் வடிவுவேறா, யுரையாதிமறைகடந்த வொருமுதல்விதிருமகளா யுதித்தற்கிந்தத், தரையாளுமன்னவன்செய தவமிதுவோவதற்குரிய தவந்தான்மன்னோ. (உஉ)

---

(உ0) குழறி-ஒன்றோடொன்றுவிரவி. இகம் - இவ்வுலகவின்பம்-போகம்-சுவர்க்காதிபோகங்கள். வீடு-மோட்சம்.

(உக) பசத்தல்-நிறம்வேறுபடுதல். முன்பெற்றதோகை, என்றது-பர்வதராஜபத்னியாகியமேனையை, மேனையுங்கருப்பக்குறிபெறாது உமையை மகவாகப்பெற்று மகிழ்ந்தவளாதலால், முன்பெற்றதோகையன்னாள் என்றார். அன்னாள்-ஒத்தவள்.

(உஉ) பரை-பராசத்தி. ஆதி-ஆதிசத்தி. விருப்பு-இச்சாசத்தி. அறிவு-ஞானசத்தி. தொழில்-கிரியாசத்தி. முறையே, இப்பஞ்சசத்திகளின்தொழில்-சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம். வரையாது-நீக்காது. அவைநின்றுந் தன்வடிவுவேறாய் என்றது-உருவும், அருவுருவங்கடந்து, பரவிந்துவையதட்டித்துநின்ற அருவத்திருவுருவின்மேலாகிய, பரபோகமுங்கடந்து, பேரொளியாய்நிற்றலின். மறைகடந்த வொருமுதல்வி என்றது - பரை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் நாலவகை வாக்கின்காரியவொலிபற்றியெழும், விந்து நாதகாரண விகற்பங்களை, வரைசெய்து அவைமுற்றும்வியாபகமாய்நிற்கும் குடிலாந்தசத்தியாய்நிற்றலை.

கள்ளமாநெறியொழுகும் பொறிகடந்துகரணமெலாங்கடந்தானந்த, வெள்ளமாம்பரஞான வடிவுடையாடன்னன்பின் வெளிவந்தின்றோர், பிள்ளையாயவதரித்த கருணையுந்தன்மணுட்டிதவப் பேறுந்தேருன், பள்ளமாகடற்றுனைப் பஞ்சவர்கோனெஞ்சத்துப் பரிவுகூர்ந்தான். (உந)

மகவின்றிப்பலபகல்யான் வருந்தியருந்தவம்புரிந்தேன் மைந்தற்பேறு, தகவிந்தமகஞ்செய்தே னதுவுமொருபெண்மகவைத் தந்ததந்தோ, முகவிந்துநிலவொழுக வருபெண்ணுமுலைமூன்றாய்முகிழ்த்துமாற்றார், நகவந்ததென்னேயோ வென்றுவகையிலனுகி நலியுமெல்லை. (உச)

மன்னவநின்றிருமகட்கு மைந்தர்போற்சடங்கனைத்தும் வழாதுவேதஞ், சொன்னமுறைசெய்துபெயர் தடாதகையென்றிட்டுமுடிசூட்டுவாயிப், பொன்னனையாடனக்கிறைவன் வரும்பொழுதோர்முலைமறையும் புந்திமாழ்கே, லென்னவரனருளாலோர் திருவாக்குவிசும்பிடைநின் றெழுந்ததன்றே. (உரு)

அவ்வாக்குச்செவிநிரம்பவன்புவகையகநிரம்பவகிலமெல்லா
மெய்வாக்குமனமொன்றவிழிவாக்கும்புனனிரம்பவிமலற்போற்றி
செய்வாக்குமகநிரப்பியெழுந்துமனையொடுஞ்சாலைநீத்திரண்டு
கைவாக்குமியங்கலிப்பக்கடிமாடமனைபுகுந்தான்கழற்கால்வேந்தன்

---

(உந) பொறி-மெய், வாய், கண், மூக்கு, செவி, கரணம், மனம், புத்தி, அகங்காரம், சித்தம். "பொறிகடந்து கரணமெலாங்கடந்து" என்றது, அவற்றைத் தெய்வமெனக்கூறும். உலகாய தன்முதலிய மதங்களை மறுத்தற்கென்க. பஞ்சவர் - பாண்டியர் மணுட்டி, இது மணவாட்டி என்பதன் மரூஉ-மாகடல் என்பது, உரிச்சொற் றொடராதலின், வருமொழி வல்லெழுத்து மிகாதியல்பாய் நின்றது.

(உச) இந்து-சந்திரன். முகிழ்த்து — செயவெனெச்சத்திரிபு. அந்தோ - ஓ - இரக்கக் குறிப்பிடைச்சொற்கள், ஓ - ஐயப்பொருளது.

(உரு) வாக்கு என்றது, அசரீரியை. வாக்கல்-சொரிதல். விழிவாக்கும் புனல்-ஆனந்தபாஷ்பம்.

முரசதிர்ப்பமங்கலங்கொண் டெதிர்வருவார்முகத்துவகைமு றுவல்பூப்ப, வரசிருக்குமண்டபம்புக் கினிதமர்ந்துகனகமழையான் றகேள்வி, விரசிருக்குமறையவர்கைப் பெய்தெவர்க்குமம்முறையா ல்வெறுப்பநல்கிப், பரசிருக்குங்கரதலத்தெம் பரன்கோயினனிசிற ப்புப்பல்கநல்கா. (உஎ)

சிறைவிடுமின்சிறைக்களமுஞ் சீத்திடுமினேழாண்டு தேயத்தீ ட்டு, மிறைவிடுமினயல்வேந்தர் திறைவிடுமினிறைநிதிய மீட்டமோ யத், துறைவிடுமினுலயமு மறப்புறமும்பெருக்குமெனத் தொழா ரைக்காய்ந்த, கறைவிடுமின்னயில்வேலான் வள்ளுவனைக்கூய்முர சங் கறங்கச்சாற்றி. (உஅ)

கல்யாணமணிமௌலி வேந்தரையுங்கால்யாப்புக்கழலநீத்துக், கொல்யானைபரிநெடுந்தே ரரசுரிமைதொன்முறையாற் கொடுத்து ப்போக்கிப், பல்லாருங்கொள்கவெனப் பண்டாரந்தனைத்திரந்து பசும்பொன்னுடை, வில்லாருமணிகொடும்பூண் வெறுக்கைமுத லெனைப்பலவும் வெறுப்பவீசி. (உகூ)

தூமரபின்வருபெருமங் கலகவிகட்கிருநிதியந் துகில்பூண்பாய் மா, காமர்கரிபரித்தடந்தேர் முதலாயபலபொருளுங் களிப்பநல்கி க், கோமறுகுகளிதூங்கச் சுண்ணமொடு மெண்ணெய்விழாக் குளி ப்பநல்கி, மாமதுராநகரன்றி மற்றுமுளநகரெங்கு மகிழ்ச்சிதூங்க.

இவ்வண்ணநகர்களிப்ப விறைமகனுங்களிப்பெய்தி யிறைவர் சொன்ன, வவ்வண்ணஞ்சாதமுதல் வினைநிரப்பித்தடாதகையென் றழைத்துத்தேவி, மெய்வ்வண்ணமறையுணராவிறைவிதனைமேனை போன் மேனுஞ்ஞேற்ற, கைவ்வண்ணத்தளிர்தீண்டி வளர்ப்பவிம வான்போலக் களிக்குநாளில். (௩க)

---

(உஎ) மங்கலம், என்றதுசாமரம். நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, விளக்கு, கொடி, இணைக்கயல். இவற்றுள், தோ ட்டி, முரசு, கொடி. இணைக்கயல்விலக்கி.இடபம், சீவற்சம், சங்கு, சுவத்திகம், என்பவற்றைக்கூட்டி எட்டெனக் கொள்ளுதலுமொ ன்று. இவற்றுள், சீவற்சம்-குழந்தையை இடையில்வைத்திருக்கும் ஓர் பெண்வடிவம். சுவத்திகம்-மண்டப வடிவம்.

(உகூ) பண்டாரம் - பொக்கிஷம். கொடும் பூண் - வளைந்தவடி வாகச்செய்தசந்திராரமுதலியஆபரணங்கள். வெறுக்கை-பொருள்.

(௩0) சுண்ணம்-வாசனைப்பொடி. மறுகு-வீதி.

(௩க) சாதமுதல்விதி - சாதகர்மமுதலிய சடங்குகள். சாதம், சனனம்.

திருந்தாதவிளங்குதலை யாயமொடுபுறம்போந்து சிறூர்க்குச்சி ற்றில், விருந்தாகமணற்சிறுசோ றட்டும்வரையுரங்கிழித்த வேளும் வாய்வைத், தருந்தாதவிளமுலைவாய் வைத்தருந்தப்பாவைதனக் க ளித்தும்போதில், வருந்தாதையண்டமெலாஞ் சிற்றிலிழைப்பாளா ய்க்கு மகிழ்ச்சிசெய்தாள். (௩௨)

தீட்டுவாளிரண்டனைய கண்களிப்பத்தோழியர்க்குத்தெரியவா டிக், காட்டுவாளெனக்கழங்குபந்துபயின்றம்மனையுங்கற்றுப்பாசம், வீட்டுவாண்மேலொடுகீழ் தள்ளவெமைவினைக்கயிறுவீக்கியூச, லா ட்டுவாள்காட்டுதல்போ லாடினளணித்திலத்தாம் பசைத்தவூசல். ()

இம்முறையாற்றுயர்க்குந் தோழியர்க்குமகத்துவகையீந்தாளா கி, யம்முறையாற்றுதைக்கு மகத்துவகையீவாளாயாத்தவாய்மைச், செம்மறையாரணமுதனு லீரெட்டுக்கலைமுழுதுந் தெளிந்தாளந்த, மெய்ம்மறையார்கலையனைத்து மேகலையாமருங்கசைத்த விமலையம் மா. (௩௪)

சொல்வாய்மைக்கலைத்தெளிவு முழுமதியைப் பிளந்திருபாற் சொருகியன்ன பல்வாய்மைக்கடகரிதேர் பரியுகைக்குந்திறனுமழ ற்பகழிதூர்க்கும், வில்வாள்வச்சிரமுதற்பல்படைத்தொழிலுங்கண் டிளமை விழுங்குமூப்பிற், செல்வாய்மைத்திறலரசன் றிருமகட்கு முடிசூட்டுஞ் செய்கைபூண்டான். (௩௫)

முடிகவிக்குமங்கலநாள் வரையறுத்துத்திசைதோறு முடங்க ல்போக்கிக், கடிகெழுதார்மணிமௌலிக் காவலரைவருவித்துக் கா வல்சூழ்ந்த, கொடியணிமாநகரெங்கும்விழாவெடுப்பவழகமைத்துக் குன்றமன்ன, தொடிகெழுதோட் சுமதிதிருமணத்தினுக்கு வேண் டுவனசூழ்ந்துசெய்தான். (௩௬)

---

(௩௨) ஆயம்-கூட்டம். வரை - கிரவுஞ்சமலை. வேள் - குமாரக் கடவுள். பாவை - பதுமை. மலரில்வருந்தாதை - தாமரைமலரில் வசிக்கும் பிரமன். ஆய்-அன்னை.

(௩௩) வினை என்றது-நல்வினை தீவினைகளை. தாம்பு-வடம்.

(௩௪) ஆரணம் - வேதத்தின் பாகுபாடு. ஆத்தம் - உண்மை. கலை-சாஸ்திரம்.

(௩௬) கொடி-வாகுவலயம். திருமணம் என்றது - மகுடாபி ஷேக மகோற்சவத்தை. காவல்சூழ்ந்த கொடியணிமாநகர்என்றது- மலை, காடு, மதில், கடல், என்னும் நால்வகை யரண்களை.

மங்கலதூரியமுழங்க மால்யானையுச்சிமிசை வந்தபூத, கங்கை முதலொன்பதுதீர்த் தமுநிரப்பிக் கதிர்விடுபொற் கடம்பூசித்துப், புங்கவரைமந்திரத்தீ வளர்த்தமுதமருத்தி யெரிபொன்னூற்செய்த, சிங்கமணியாதனத்தை நேசித்துப்பூசித்துத் தெய்வமேத்தி. (௩௭)

திருமுடியைமதயானை மிசைவைத்துநகரைவலஞ் செய்துபூசித், தருமணியாற்சுடிகையிழைத் தடாகத்தாற்குயிற்றியதோ ரைவாய்நாகம், பெருமணிநீள்படம்பரப்பி மிசைகவிப்பவச்சிங்க பீடத் தேற்றிக், குருமணிவாணகைமயிலைக் கும்பத்துப்புண்ணியநீர் குளிரவாட்டி. (௩௮)

புங்கவர்மந்தாரமழை பொழியவருந்தவராக்கம் புகலத்தெய்வப், பங்கயமென்கொம்பனையாராடமுனிபன்னியர்பல்லாண்டுபாட, மங்கலதூரியமுழங்க மறைதழங்கமாணிக்க மகுடஞ்சூட்டி, யெங்கருணைப்பெருமாட்டிக் கரசமைச்சர்பணியுந்தன்னிறைமைநல்கா.

பாலனையமதிக்கவிகை மிசைநிழற்றமதிகிரணம்பரப்பியன்ன, கோலமணிக்கவரிபுடை யிரட்டமலர்மழைதேவர் குழாங்கடூற்றக், காலையிளங்கதிர்கயிலை யுதித்தெனவெண்கடாயானைக்கழுத்தில்வேப்ப, மாலைமுடிப்பெண்ணரசை மங்கலதூரியமுழங்க வலஞ்செய்வித்தான். (௪0)

விண்ணுடுமொழிகேட்ட மகிழ்ச்சியினுந்திருமகடன் விளக்கநோக்கி, யுண்ணுடுபெருங்களிப்புத்தலைசிறப்பச்சிலபகல்சென்றொழியமேனாட், புண்ணுடுவேன்மங்கை குதுகலித்துநடிப்பத்தன் புயமேல்வைத்த, மண்ணுடுமகட்களித்து வானுடுபெற்றானம் மகவுபெற்றான். (௪௧)

விரதநெறியடைந்தீற்றுக் கடன்பிறவுந்தாதைக்கு விதியாலாற்றி, யரதனமெல்லணைமேற்கொண் டுலகமெலாமொருகுடைக்கீழாள்வாளானாள், சரதமறையாய்மறையின் பொருளாயப்பொருண் முடிவு தானாய்த்தேனி, ணிரதமெனப்பூவின்மண மெனப்பரமனிடம்பிரியா வெம்பிராட்டி. (௪௨)

---

(௩௭) பூதகங்கை-பரிசுத்தமாகிய கங்கை. ஒன்பது தீர்த்தமாவன—கங்கை, யமுனை, சரஸ்வதி, நருமதை, காவேரி, குமரி, கோதாவரி, துங்கபத்திரி, தாமிரபர்ணி.

(௩௮) ஆடகம்-நால்வகைப் பொன்னிலொன்று. ஐவாய்நாகம்-ஐந்துதலைநாகம். மயில்-உவமவாகுபெயர்.

(௩௯) ஆக்கம்-ஆசீர்வசனம். தூரியம்-வாத்தியம்.

(௪௧) விண்ணாடுமொழி-என்றது, அசரீரிவாக்கை. வேல்மங்கை என்றது-வீரலட்சுமியை. வானுடு-சுவர்க்கலோகம்.

(௪௨) சரதம்-உண்மை. ஈற்றுக்கடன் - அந்தியேஷ்டி முதலிய கிரியை.

மேற்படி-வேறு.

மண்ணரசிறைஞ்சஞாலமனுவழிபுரந்துமாறன்
விண்ணரசிருக்கையெய்தப்பெற்றபின்விடையோனுள்ளத்
தெண்ணரசன்னமென்னத்தென்னவனீன்றகன்னிப்
பெண்ணரசிருந்துநேமியுருட்டியபெருமைசொல்வாம். (௬௩)

இன்னியமியம்புமாக்களெழுப்பவானிரவிதோன்றக்
கன்னலேந்தென்னப்பள்ளித்துயிலெழீஇக்கடிநீராடித்
தன்னிறைமரபுக்கேற்றநியதிமாதானமன்பு
துன்னியகடவுட்பூசைத்தொழின்முதலனைத்துமுற்றா. (௬௪)

திடம்படுமறிஞர்சூழச்சிவபரன்கோயின்முன்னிக்
கடம்படிமுளைத்தமுக்கட்கரும்பினைமறைவண்டார்க்கும்
விடம்பொதிகண்டத்தேனைவிதிமுறைவணங்கிமீண்டு
குடம்பயில்குடுமிச்செம்பொற்குருமணிக்கோயினண்ணி. (௬௫)

அரசிறைகொள்ளுஞ்செம்பொனத்தாணியிருக்கையெய்தி
நிரைசெறிமடங்கலாறுமுடங்கினநிமிர்ந்துதாங்க
விரைசெறிமலர்மீப்பெய்தவியன்மணித்தவிசின்மேவித்
திரைசெறியமுதிற்செய்தபாவைபோற்சிறந்துமாதோ. (௬௬)

அனிந்திதையமுதின்சாயற்கமலினியணங்குகாதற்
கனிந்தபார்மகளிராய்வந்தடைப்பைபொற்களாஞ்சியேந்த
வினந்திரிபதுமக்கோயிலிருவருமனையராகிப்
புனைந்தவெண்கவரிக்கற்றையிருபுடைபுரட்டிவீச. (௬௭)

செடியுடலெயினச்செல்வன்சென்னிமேற்சுமந்துசாத்துங்
கடியவிழ்மலரிற்பொன்னிக்காவலன்குடக்கோனேனை
முடிகெழுவேந்தருள்ளார்முடிமிசைமிலைந்ததாம
மடிமிசைச்சாத்திநங்கையாணையாறேவல்செய்வார். (௬௮)

(௬௩) நேமி-ஆக்ஞைசக்கரம். மாறன்-மலயத்துவசபாண்டியன்

(௬௪) கன்னல்-நாழிகை. துன்னிய, காரணப்பொருளில்வந்த வினையெச்சம்.

(௬௬) அத்தாணி-கொலுமண்டபம். திரை - கடலின்மேனிற்றலால் தானியாகுபெயர்.

(௬௭) இனந்திரிபதுமம்என்றது,செந்தாமரை, வெண்டாமரைகளை. அனிந்திதை, கமலினி, இவ்விருவரும் திருக்கைலேயில் உமாதேவியாருக்கு அகம்படித்தொண்டுபுரிபவர். காளாஞ்சி - களாஞ்சி எனநின்றது, குறுக்கல்காளாஞ்சி-தம்பலப்படிகம்.

(௬௮) எயினச்செல்வன் என்றது, கண்ணப்பநாயனுரை. எயினர்-வேடர். பொன்னிக்காவலன் - காவிரிநாட்டுக்கரசனுகியசோழன். குடக்கோன்-மேற்றிசைக் கரசனுகிய சேரன்.

வையுடைவாளராகிமார்புறப்பின்னியார்த்த
கையினராகியன்னையென்றுதன்கருணைநோக்கஞ்
செய்யுமென்றிமையார்நோக்கிநோக்குமேற்செங்கைகூப்பி
யுய்குநமெனவாய்பொத்தியுழையர்தம்பணிகேட்டுய்வார். (சகூ)

ஆங்கவன்மராடர்வேந்தனவன்கருநாடர்வேந்த
னீங்கிவன்விராடர்வேந்தனிவன்குருநாடர்வேந்த
னூங்குவன்சேரன்சென்னியுவனெனக்கோலாற்சுட்டிப்
பாங்கிருமருங்குங்காட்டக்கஞ்சுகப்படிவமாக்கள். (ருO)

செந்தமிழ்வடநூலெல்லைதெரிந்தவர்மறைநூலாதி
யந்தமிலெண்ணெண்கேள்வியளந்தவர்சமயமாறும்
வந்தவர்துறந்தோர்சைவமாதவர்போதமாண்ட
சிந்தனையுணர்வான்மாயைவலிகெடச்செற்றவீரர். (ருக)

முன்னிருந்தினியதேற்றுமூத்தவரெண்ணியெண்ணிப்
பன்னுமைந்துறுப்பிற்காலமளந்தறிபனுவன்மாந்தர்
பின்னுமுன்னோக்குஞ்சூழ்ச்சிப்பெருந்தகைச்சுமதியோடு
மின்னமுதனையகேள்விமந்திரர்யாருஞ்சூழ்வார். (ருஉ)

கற்றறியந்தணாளர்விருத்திகள்கடவுட்டானத்
தற்றமில்பூசைச்செல்வமறப்புறநடக்கையேனைச்
செற்றமில்குடிகண்மற்றுமமைச்சராற்றெளிந்தும்வெவ்வே
றொற்றுவிட்டுணர்ந்தும்வேறுகுறையுண்டேலொறுத்துத்தீர்த்தும்.

---

(சகூ) உழையர்-ஏவல்செய்வோர். யாத்த-கட்டிய. ஊங்கு-நடு-உவன்-நடுவிலிருப்பவன்.

(ருக) எண்ணெண்கேள்வி என்றது-அறுபத்துநான்குகலைஞானங்களை. சமயமாறும் என்றது, சைவம், பாசுபதம், காளாமுகம், கௌமாரம். வாமம், கணபத்தியம், என்னும் உட்சமயங்களாறினை.

(ருஉ) தேற்றல் - தெளிவித்தல். ஐந்துறுப்பாவன - திதி, வாரம், கரணம்,யோகம். பின்னுமுன்னோக்குஞ் சூழ்ச்சிப்பெருந்தகைச்சுமதி என்றது, மேல்வருங்காரியங்களையும், முன்னிகழ்ந்தகாரியங்களையும் ஆராய்ந்துணரும்சூழ்ச்சியில் வல்லமுதன்மந்திரியை. சுமதி-நல்லறிவுடையவன்.

(ருங) விருத்தி-தொழில். ஒற்று-தூது. ஒறுத்து - தண்டித்து.

ஆதியுத்தேசத்தானுமிலக்கணவமைதியானுஞ்
சோதனைவகைமையானுஞ்சொன்னநூலனுவாதித்து
நீதியினவற்றுற்கண்டித்தவ்வழிநிறுத்தித்தம்மில்
வாதிகள்வாதஞ்செய்யுங்கோட்டிமேன்மகிழ்ச்சிகூர்ந்தும். (௫௪)

பையுளபகுவாய்நாகப்பள்ளியோனுதிவானோர்
கையுளவலியாலட்டகடலமுதனைத்தும்வாரிப்
பொய்யுளமகலக்கற்றபுனிதநூற்புலவர்நாவிற்
செய்யுளின்விளைவித்தூட்டத்திருச்செவிதெவிட்டவுண்டும். (௫௫)

தொல்லைநான்மறையோர்சைவர்துறந்தவர்யார்க்குமின்பம்
புல்லவானமுதுங்கைப்பப்பாகநூற்புலவரட்ட
முல்லைவான்முகையினன்னவறுசுவைமுரியாமூர
னல்லவூணருத்தியன்னோர்நாவிருந்தமுதுசெய்தும். (௫௬)

எல்லவனுச்சிநீந்துமெல்லையினான்குமாறும்
வல்லவர்சூதனோதிவகுத்தமூவாறுகேள்வி
சொல்லவுண்மலர்ந்துமேனைமநுமுதற்றுறைமாண்கேள்வி
நல்லனநயந்துகேட்டுநெண்பகற்போதுநீத்தும். (௫௭)

---

(௫௪) உத்தேசமாவது - தான்விவகரிக்கும் பொருளைப்பெயர் மாத்திரங்கூறல், அதாவது, இலக்கியம். இலக்கணமாவது - அவ்வியாப்தி, அதிவியாப்தி, அசம்பவம் என்னு மூன்றுகுற்றங்களு மில்லாததருமம். சோதனையாவது - தான்விவகரிக்கும் அப்பொருளில் இவ்விலக்கணமுளதோ விலதோவெனப்பார்த்தல். அநுவாதமாவது, முன்னர்ப்பெறப்பட்டதொன்றனைவேறொன்றுவிதித்தற்பொருட்டுப்பின்னருமெடுத்தோதுதல். கண்டித்தலாவது - இலக்கியவிலக்கண உபநியாசவிசேஷணங்களாற்பரிகரித்தல். அவ்வழிநிறுத்தலாவது-உத்தேசமாகியஆரம்பத்தினின்று, விபக்ஷாதிகளைச்சார்ந்து, பக்ஷப்போலிகளுக்கு இடஞ்செய்யாது, லட்சணநிறைவாம் ஏதுப்பொருள் ஒருமருங்குஞ் சாய்தலின்றித் தம்மதம்நிறுத்தல். வாதிகள் பிறர்மதமறுத்துத் தம்மதநிறுத்துவோர். கோட்டி - வாக்கியமுடிவு.

(௫௫) பகுவாய்-பிளவுபட்டவாய். அறுசுவை என்றது - ஈண்டு கறிமேனிற்றலால் அடையடுத்த பண்பாகுபெயர்.

(௫௭) நான்கென்றது-சதுர்வேதங்களை. ஆறென்றது-வேதாங்கங்களை. மூவாறு என்றது - பதினெண்புராணங்களை. கேள்வி- இதுகேட்டற்குக் காரணமாகிய நூன்மேனிற்றலால் காரியவாகுபெயர்.

கலைக்குரைவிரிப்பாரென்னவறுமையிற்கல்விபோலப்
புலப்படாமருங்குனல்லாரெந்திரப்புலவன்பூட்டி
யலைத்திடுபாவைபோனின்றாடல்செய்யாடற்கண்ணு
நலத்தகுபாடற்கண்ணுநல்லருணுட்டஞ்செய்தும். (ருஅ)

இன்னிலையொழுக்குந்தொல்லோரியற்றியதருமம்வேறு
மன்னிலைநிறுத்தும்வேள்வியறம்பலவர்க்கஞ்செய்ய
நன்னிதியளித்தும்வேள்விநடத்தியுஞ்செல்வங்கல்வி
தன்னிருகண்களாகத்தழைந்திடவளர்க்குநாளும். (ருகூ)

ஒப்புருமுதலீறில்லாவொருத்திதன்சத்திபெற்ற
முப்பெருந்தேவராலேமுத்தொழினடத்துமென்று
செப்பலும்புகழன்றென்னிற்றென்னவன்கன்னியாகி
யிப்புவிமநுவிற்காக்குமென்பதென்பேதைமைத்தே. (௬௦)

கலிநிலைத்துறை.

வரைசெய்பூண்முலைத்தடாதகைமடவரற்பிராட்டி
விரைசெய்தார்முடிவேய்ந்துதண்குடைமநுவேந்தன்
கரைசெய்நூல்வழிகோல்செலக்கன்னியாம்பருவத்
தரசுசெய்தலாற்கன்னிநாடாயதந்நாடு. (௬க)

இன்னவாறுமையவதரித்திருந்தனளென்னுப்
பொன்னவாவினர்பெறவெறிபொருநைகால்பொருப்பன்
சொன்னவாய்மைகேட்டகங்களிதூங்கினர்தொழுது
மின்னுவார்சடைமுனிவரோர்வினவரைசெய்வார். (௬உ)

---

(ருஅ) கலை-பரதநூல். எந்திரப்புலவன் - சூத்திரப்பதுமையாட்டுந் தொழிலில் வல்லவன்.

(ருகூ) இன்னிலை-இல்-நிலை-கிருகத்தாச்சிரமநிலை. வேறு என்றது-ஒழிந்த பிரமசரியம், வானப்பிரத்தம். சந்நியாசம் என்னு மூன்றாச்சிரமங்களையும். அந்நிலைநிறுத்தும் வேள்வி என்றது-அவ்வவ்வாச்சிரமங்களுக்குரிய யாகாதிகர்மங்களை. ஆக்கம்-விருத்தி. வேள்வி என்றது, அக்கினிஷ்டோமாதி யாகங்களை.

(௬௦) ஒப்புரு முதலீறில்லாவொருத்தி என்றது-நவாதீதநிலையினின்ற ஒளியுருவாகிய அருட்சத்தியை. தன்சத்தியென்றது-அவ்வருட்சத்தியினின்றுந் தோன்றிய மகேசைமுதலியோரை

(௬க) மடவரல்-கற்பின் வரலாற்றினையுடையவள் என்னை, கற்பின்பகுதிகளாகிய, நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு, என்னும் நான்கு குணங்களுள், மடம்என்பது ஓர்குணம். அக்குணத்தின் வருகையையுடையவள் என்பது பொருள.

(௬உ) பொருனை-தாமிரபர்ணிநதி. தூங்கினர், வினைமுற்று எச்சமாய் நின்றது.

திருந்துநான்மறைச்சென்னியுந்தீண்டுதற்கரிதா
யிருந்தநாயகியாவையுமீன்றவெம்பிராட்டி
விரிந்தவன்புகூர்த்தக்கனும்வெற்பனும்பன்னாள்
வருந்திநோற்றலாலவர்க்கொருமதலையாய்வந்தாள். (௬௩)

மனித்தனுகியபூழியன்மகளெனவீங்குத்
தனித்தகாரணம்யாதெனத்தமனியப்பொதுவிற்
குனித்தசேவடிக்கன்புடைக்குடமுனியருள்கூர்ந்
தினித்ததோர்கதைகேண்மினென்றெடுத்துரைசெய்வான். (௬௪)

விச்சுவாவசுவெனுமொருவிச்சையன்பயந்த
நச்சுவாள்விழிமடந்தைவிச்சாவதிநாம
மச்சுவாகதமொழியினளம்பிகைக்கன்பு
வைச்சுவாழ்வுறுமனத்தினடாதையைவணங்கா. (௬௫)

ஐயவம்பிகைதன்னையானன்பினல்வழிபட்
டுய்யவேண்டுமென்றாளவனுலகெலாம்பயந்த
தையன்மந்திரந்தனைமகடனக்குபதேசஞ்
செய்யவந்நெறியொழுகுவாள்செப்புவாள்பின்னும். (௬௬)

இறைவிதன்னையாதரிப்பதற்கிம்பரிற்சிறந்த
குறைவிநன்னகர்யாதெனக்கூறுவான்கேள்வித்
துறைவிளங்கினோர்பயில்வதுதுவாதசமுடிவென்
றறைவளம்பதியவனிமேற்சிவபுரமாமால். (௬௭)

சேடுதாங்குமூவுலகினுட்சிறந்தனசத்தி
பீடமூவிருபத்துநான்கவற்றின்முற்பீட
மாடமோங்கியமதுரையாமற்றதுபோகம்
வீடும்வேண்டியசித்தியும்விளைப்பதென்றெண்ணு. (௬௮)

---

(௬௪) மனித்தன்-விரித்தல் விகாரம்.

(௬௫) விச்சையன் - இசைநூலில் வல்லவன். நஞ்சு-நச்சு என வலித்தற்பெற்றது. வைச்சு - வைத்து என்பதன் மரூஉ. சுவாகதம்-கிளி.

(௬௭) வளம்பதி-இது உரிச்சொற்றொடராதலினியல்பாயிற்று.

(௬௮) சேடு-பெருமை. பீடமூவிருபத்து நான்கென்றது, அறுபத்துநான்கு சத்திபீடங்களை. இதன் விரிவைதேவிபாகவதமுதலிய நூல்களிற்காண்க.

அல்லுமெல்லும்வானகர்க்கதவடைப்பின்றிச்சுவர்க்கச்
செல்வரங்கடைந்துமையருள்சித்தியால்வினையை
வெல்லுவாரதான்றெந்தையோடைவர்கள்வேண்டி
நல்வரம்பலவடைந்தனர்நமர்களந்நகரில். (௬௯)

எம்மையாரையும்யாவையுமீன்றவங்கயற்க
ணம்மையாவரேயாயினுமன்பினுதரிப்போ
ரிம்மையாகியபோகம்வீடெண்ணியாங்கெய்தச்
செம்மையாகியவின்னருள்செய்துவீற்றிருக்கும். (௭௦)

என்றதாதையையிறைஞ்சினளனுஞைகொண்டெழுந்தாண்
மன்றன்மாமலர்வல்லிபோல்வழிக்கொடுகொனங்
குன்றமாறுபின்கிடப்பமுன்குறுகினளன்பி
னின்றவாதியெம்பரையருணிறைந்தவந்நகரில். (௭௧)

அடைந்திளம்பிடியாடல்போலாடககமலங்
குடைந்துநான்மறைக்கொழுந்திடங்கொண்டுறைகுறிப்பாற்
படர்ந்தபொன்மலைவல்லியைப்பணிந்துவெங்கதிரோன்
றொடர்ந்தவான்சுறுமதியமேயாதியாத்தொடங்கா. (௭௨)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

பெரும்பகனல்லூண்கங்கு லூணுதவப்பெற்றவூணிலைமுதற்பல்லூ, ணரும்பொடியெள்ளூண்சாந்திராயணமானேந்துபானறியநீர்தருப்பை, யிரும்புதனுனிநீர்காலி வைநுகர்ந்துமியற்றரும்பட்டினியுற்றும், வரம்புரவிராறுதிங்களுநோற்று வாடிமேல்வருஞ்சுறுமதியில். (௭௩)

சன்னிதியடைந்து தாழ்ந்துநின்றிளமாந்தளிரடிக்காய்ஞ்சிசூழ்கிடந்த, மின்னிகர்மருங்கு லிழையிடைநுழையா வெம்முலைச்செம்மலர்க்காந்தட். பொன்னிரைவளைக்கை மங்கலக்கழுத்திற் பூரணமதிக்கலைமுகத்தி, னின்னிசையளிசூ ழிருட்குழற்கற்றை யிறைவியையிம்முறைநினையா. (௭௪)

---

(௬௯) ஐவர்கள். பஞ்சசுரர், வசுபூர்ணர், சொச்சவித்தியர், யக்ஷர் வித்தியாதார்.

(௭௧) அனுஞை - உத்தரவு, மா - என்னும் பலபொரு ளொருசொல், சார்புபற்றி வண்டின்மேல் நின்றது.

(௭௧) சுறுமதி. மகரமதியாகிய தைமாதம்.

(௭௨) வரம்புரவிராறுதிங்களுநோற்று என்கிறதற்குதையாதி மார்கழி யீருன பன்னிரண்டு மாதங்களிலும், பெரும்பகனல்லூண் பட்டினியுற்றுமென்றதீராகிய பன்னிரண்டு வகைப்பட்ட வுணவுகளைமுறையேயுண்டு தவஞ்செய்து என்பதுபொருள்.

(௭௪) இம்முரை நினையா என்றது, பாதாதிகேசம்வரையில்மனத்தில் தியானித்து என்பதை விளக்கிநின்றது. காஞ்சி-இருகோவைமணி.

கோலயாழ்த்தெய்வம்பராய்க்கரங்குவித்துக் கொழுஞ்சுடர்ப்ப
சுங்கதிர்விளக்கம், போலநூற்பொல்லம் பொத்துபொன்னிறத்த
போர்வைநீத்தவிழ்கடிமுல்லை, மாலைமேல்வீக்கிப் பத்தர்பின்கிடப்
பமலர்க்குழறோய் சுவற்கிடத்திச், சேலைநேர்விழியாண்மாடகந்திரி
த்துத்தெதித்தனள்பண் ணறிந்திசைப்பாள். (எரு)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஒளியாலுலகின்றுயிரமனைத்துமீன்போற்செவ்வியுறநோக்கி
யளியால்வளர்க்குமங்கயற்கணன்னேகன்னியன்னமே
யளியாலிமவான்றிருமகளாயாவியன்னமயில்பூவை
தெளியாமழலைக்கிளிவளர்த்துவிளையாட்டயருஞ்செயலென்னே. ()

அண்டக்குவைவெண்மணற்சிறுசோறாக்கித்தனியேவிளையாடுங்
கொண்டற்கோதாய்படியெழுதலாகாவுருவக்கோகிலமே
கொண்டற்குடுமியிமயவரையருவிகொழிக்குங்குளிர்முத்தால்
வண்டற்குதலைமகளிரொடும்விளையாட்டயரும்வனப்பென்னே. ()

வேதமுடிமேலானந்தவுருவாய்நிறைந்துவிளையாடு
மாதரரசேமுத்தநகைமானேயிமயமடமயிலே
மாதரிமவான்றேவிமணிவடந்தோய்மார்புந்தடந்தோளும்
பாதமலர்சேப்புறமிதித்துவிளையாட்டயரும்பரிசென்னே. (எஅ)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

யாழியன்மொழியாலிவ்வழிபாடி யேத்தினளாகமெய்யுள்ளத், தாழியவன்பின்வலைப்படு கருணையங்கயற்கண்மடமானோர், சூழிய நுழைமெல்லிளங்குழற்குதலைத் தொண்டைவாயகவைமூன்றெய்தி, வாழிளங்குழவியாகியா லயத்துவந்துநின்றாள் வரங்கொடுப்பாள்.()

---

(எரு) கோலம்-அழகு - சித்திரம். பொல்லம் - தையல். பொத்து-தைத்து. போர்வை - உறை. சுவல் - பிடரி. மாடகம்-முறுக்காணி.

(எஎ) அண்டக்குவை - அண்டகோடிகளின்கூட்டம். கொண்டல்-மேகம். படி-ஒப்பு-உலகம். வண்டல்-மகளிர்விளையாட்டு. இமவான்தேவி-பர்வதராஜபத்னியானமேனை. சேப்பு-செவப்பு.

(எகூ) யாழியல்-வீணையினிசை. சூழியம் - உச்சிக்கொண்டை. தொண்டை-கொவ்வைக்கனி. அகவை-வயது.

இறைஞ்சியஞ்சலித்தாடன்னை யெம்மன்னையாதுவேண்டினை யெனவென்று, நிறைந்தபேரன்புநின்னடிப் போதினீங்கலாநிலை மைதந்தருளென், றறைந்தனளின்னும் வேண்டுவதேதென் றருள விம்மகவுருவாகிச், சிறந்துவந்தென்பா லருள்சுரந்திருக்கத் திருவு ளஞ் செய்யெனப்பணிந்தாள். (அ0)

சிவபரம்பரையு மதற்குநேர்ந்தருள்வா டென்னவர்மன்னனும் மலயத், துவசனென்றொருவன்வருமவன்கற்பின் றுணைவியாய்வரு தியப்போதுன், றவமகவாக வருவலென்றன்பு தந்தனள்வந்தவா றிதுவென், றுவமையில்பொதியத் தமிழ்முனிமுனிவர்க் கோதினு னுள்ளவாறுணர்ந்தார். (அக)

தடாதகைப்பிராட்டியார் திருவவதாரப்படலம் முற்றிற்று.

ஆ படலம் கரு - க்கு - திருவிருத்தம் - ருகூஅ.

---

ஐந்தாவது,

## திருமணப்படலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தரைபுகழ்தென்னன்செல்வத்தடாதகைப்பிராட்டிதானே
திரைசெய்நீர்ஞாலங்காத்தசெயல்சிறிதுரைத்தேன்றெய்வ
விரைசெய்பூங்கோதைமாதைவிடையவன்மணந்துபாராண்
டரசுசெய்திருந்ததோற்றமறிந்தவாறியம்பலுற்றேன். (க)

காயிரும்பரிதிப்புத்தேள்கலியிருமிப்பச்சோதி
பாயிருங்குடைவெண்டிங்கட்படரொளிநீழல்செய்ய
மாயிரும்புவனமெல்லாமநுமுறையுலகமீன்ற
தாயிளங்குமரியாகித்தனியரசிருக்குநாளில். (உ)

மருங்குதேய்ந்தொளிப்பச்செம்பொன்வனமுலையிறுமாப்பெய்தக்
கருங்குழற்கற்றைபானுட்கங்குலைவெளிறுசெய்ய
விரங்குநல்யாழ்மென்றீஞ்சொலின்னகையெம்பிராட்டிக்
கருங்கடிமன்றல்செய்யுஞ்செவ்விவந்தடுத்ததாக. (ங)

---

(அக) சிவபரம்பரை-சிவசத்தியாகிய மீனுட்சியம்மை.

(ங) பானுட்கங்குல்-நடுராத்திரி. செவ்வி - பருவம். கடிமன் றல்-விவாகமுகூர்த்தம்.

பனிதருமதிக்கொம்பன்னபாவையைப்பயந்தாளுேக்கிக்
குனிதரகிறையப்பூத்தகொம்பனுய்க்கின்னங்கன்னி
கனிதருசெவ்வித்தாயுங்கடிமணப்பேறின்றென்னுத்
துனிதருநீரளாகிச்சொல்லினுள்சொல்லக்கேட்டாள். (ச)

அன்னைநீநினைந்தவெண்ணமாம்பொழுதாகும்வேறு
பின்னைநீயிரங்கல்யான்போய்த்திசைகளும்பெருநீர்வைப்பு
மென்னதுகொற்றநாட்டிமீள்வலிங்கிருத்தியென்னுப் [தாள்.
பொன்னவிர்மலர்க்கொம்பன்னுள் பொருக்கென வெழுந்துபோந்

தேம்பரிகோதைமாதின்றிருவுளச்செய்திநோக்கி
யாம்பரிசுணர்ந்தவேந்தரமைச்சரும்பிறரும்போந்தார்
வாம்பரிகடாவித்திண்டேர்வலவனுங்கொணர்ந்தான்வையந்
தாம்பரிவகலவந்தாளேறினுள்சங்கமார்ப்ப. (சு)

ஆர்த்தனதடாரிபேரியார்த்தனமுருடுமொந்தை
யார்த்தனவுடுக்கைதக்கையார்த்தனபடகம்பம்பை
யார்த்தனமுழவந்தட்டையார்த்தனசின்னந்தாரை
யார்த்தனகாளந்தாளமார்த்தனதிசைகளெங்கும். (எ)

வீங்கியகொங்கையார்த்தகச்சினர்விழிபோறறைப்ப
வாங்கியசிலையேறிட்டகணையினர்வட்டத்தோல்வா
ளாங்கியகையர்வைவேற்றளிர்க்கையர்பிணுத்தெய்வம்போ
லோங்கியவாயத்தாருமேறினுருடனத்திண்டேர். (அ)

கிடைப்பனவுருளாற்பாரைக்கீண்டுபாதலத்தினெல்லை
யடைப்பனபரந்ததட்டாலடையவான்றிசைகளெட்டு
முடைப்பனவண்டமுட்டியொற்றிவான்கங்கைநீரைத்
துடைப்பனகொடியாற்சாரிசுற்றுவபொற்றிண்டேர்கள். (கூ)

---

(ச) துனி-துன்பம். நீர்மை-குணம். அது ஈறுகெட்டு நீரென நின்றது. செவ்வித்து என்பதில், து-பகுதிப்பொருள்விகுதி.

(ரு) இரங்கல்-எதிர்மறைப்பொருளில்வந்த வியங்கோள் வினைமுற்று. கொற்றம்-வெற்றி.

(சு) கடாவி-செலுத்தி. பரிவு-துன்பம்.

(எ) மொந்தை, படகம், ஒருகட்பறைகள். தட்டை - கற்கடிப்பறை.

(அ) பிணு - பெண். வட்டத்தோல்-கேடசம். ஆயம் - மகளிர் கூட்டம்.

(கூ) சுற்றுவ, கிடைப்பன, இவ்விரண்டும் வினைமுற்றெச்சங்கள்.

செருவின்மாதண்டந்தாங்கிச்செல்லும்வெங்கூற்றமென்ன
வருவிமாமதநீர்காலவரத்தவெங்குருதிக்கோட்டார்
கருவிவான்வயிறுகீண்டுகவிழுநீர்வாயங்காந்து
பருகிமால்வரைபோற்செல்வபரூஉப்பெருந்தடக்கையானை. (௧௦)

ஒலியவார்திரையினன்னவொழுங்கினயோகமாக்கள்
வலியகாலடக்கிச்செல்லுமனமெனக்கதியிற்செல்வ
கலியநீர்ஞாலங்காப்பான்கடையுகமுடிவிற்றோற்றம்
பொலியும்வாம்புரவியொன்றேபோல்வனபுரவிவெள்ளம். (௧௧)

காலினுங்கடிதுசெல்லுஞ்செலவினர்கடுங்கட்கூற்ற
மேலினுமிகையுண்டாயின்வெகுண்டுவென்கண்டுமீளும்
பாலினர்பகுவாய்நாகப்பல்லினும்பில்குமால
வேலினர்வீயாவென்றிவீக்கியகழற்கால்வீரர். (௧௨)

எண்புதைத்தெழுந்தவீரரிவுளிதேர்யானைவெள்ள
மண்புதைத்தனபதாகைமாலைவெண்கவிகைபீலி
விண்புதைத்தனநுண்டூளிவெயில்விடுபரிதிப்புத்தேள்
கண்புதைத்தனபேரோதைகடலொலிபுதைத்ததன்றே. (௧௩)

தேரொலிகலினப்பாய்மான்செலவொலிகொலைவெண்கோட்டுக்
காரொலிவீரரார்க்குங்கனையொலிபுனைதார்க்குஞ்சி
வாரொலிகழற்காற்செங்கண்மள்ளர்வன்றிண்டோள்கொட்டும்
பேரொலியண்டமெல்லாம்பிளந்திடப்பெருத்ததன்றே. (௧௪)

பரந்தெழுபூழிபோர்ப்பப்பகலவன்மறைந்துமுந்நீர்
கரந்தவன்போன்றானாகக்கங்குல்வந்திறுத்ததேய்ப்பச்
சுரந்திருணிறையமுத்தின்சோதிவெண்குடையும்வேந்தர்
நிரந்தபூண்வயிரவாளுநிறைநிலாவெறிக்குமன்றே. (௧௫)

---

(௧௧) கால் - காற்று. கலி - ஓசை. கலியுகமுடிவிற் றோற்றம் பொலியும்வாம்புரவி என்றது-கற்கி அவதாரத்தை.

(௧௨) வெங்-புறமுதுகு. பில்கும் சிந்தும். வீக்கல்-கட்டல்.

(௧௩) இவுளி-குதிரை. பீலி-மயிற்குஞ்சம். பதாகை - கொடி. புத்தேள்-தேவன்.

(௧௪) கலினம்-கடிவாளம். மள்ளர்-வீரர். முந்நீர்-படைத்தலும், காத்தலும், அழித்தலுமாகிய, மூன்று தன்மையையுடையது எனப்பண்புத்தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகைநிலையாய்க், கடலுக்குக் காரணக்குறியாய்வந்த பரியாயப்பெயர். ஆற்றுநீர், ஊற்றுநீர், வேற்றுநீர் என மூன்றுநீரையுடையது எனவும் பொருள்படும்.

தேர்திரைகலனுய்ச்செல்லப்பரிதிரைதிரையாய்த்துள்ள
வார்முரசொலியாய்க்கல்லவாட்கலன்மீனுய்க்கொட்பத்
தார்திரைகவரிக்காடுநுரைகளாய்த்ததும்பவேழங்
கார்திரையாகத்தானைக்கடல்வழிக்கொண்டதன்றே. (கசு)

கள்ளவிழ்கோதைமாதரெடுத்தெறிகவரிக்காடு
துள்ளவந்தணர்வாயாசியொருபுறந்துவன்றியார்ப்பத்
தெள்விளியமுதகீதமொருபுறந்திரண்டுவிம்ம
வள்ளைவார்குழையெம்மன்னைமணித்திண்டேர்நடந்ததன்றே. (கஎ)

மீனவன்கொடியுங்கானவெம்புலிக்கொடியுஞ்செம்பொன்
மானவிற்கொடியும்வண்ணமயிற்றழைக்காடுந்தோட்டுப்
பானலங்கருங்கட்செவ்வாய்வெண்ணகைப்பசுந்தோணிம்பத்
தேனலம்பலங்கல்வேய்ந்தசெல்விதேர்மருங்கிற்செல்ல. (கஅ)

மறைபலமுகங்கொண்டேத்திவாய்தடுமாறியெய்ப்ப
நிரைபரம்பரைநீயெங்கணிருபர்கோன்மகளாய்வைய
முறைசெய்துமாசுதீர்ப்பாயடியனேன்முகத்துமாசுங்
குறையெனநிழற்றுந்திங்கட்கொள்கைபோற்கவிகைகாப்ப. (ககூ)

அங்கயனேக்கிமான்றேர்க்கணித்தொருதடந்தேரூர்ந்து
வெங்கதிர்வியாழச்சூழ்ச்சிமேம்படுசுமதியென்போ
னங்கைதன்குறிப்புநோக்கிநாற்பெரும்படையுஞ்செல்லச்
செங்கையிற்பிரம்புநீட்டிச்சேவகஞ்செலுத்திச்செல்வான். (உ௦)

அலகினுற்கருவிச்சேனையாழ்கடலனைத்துந்தன்போன்
மலர்தலையுலகமன்றிமகபதியுலகமாதி
யுலகமும்பிறவுஞ்செல்லவுலப்பிலாவலியதாக்கித்
திலகவாணுதலாண்மன்னர்திருவெலாங்கவரச்செல்வாள். (உக)

கயபதியாதியாயவடபுலக்காவல்வேந்தர்
புயவலியடங்கவென்றுபுழைக்கைமான்புரவிமான்றேர்
பயன்மதிநுதல்வேலுண்கட்பாவையராயமோடு
நயமலிதிறையுங்கொண்டுதிசையின்மேனுட்டம்வைத்தாள். (உஉ)

---

(கசு) கலன்-மரக்கலம். வேழம்-யானை.

(கஎ) கவரி-சாமரை. புலிக்கொடி, சோழனுடையது. விற்கொடி-சேரனுடையது. புலிக்கொடி-புலிஎழுதியகொடி. ஏனையகொடிகளுக்கு மிவ்வாறேகொள்க.

(உக) மகபதி-இந்திரன். உலப்பிலா-கெடுதியில்லாத.

(உஉ) கயம்-யானை, இது கஜம் என்பதன்திரிபு. பயல் - பாதி.

வார்கழல்வலவன்றேரைவலியகாலுதைப்பமுந்நீ
ரூர்கலனொப்பத்தூண்டவும்பர்கோனனிகத்தெய்திப்
போர்விளையாடுமுன்னர்ப்புரந்தரன்மிலைந்ததும்பைத்
தார்விழவாற்றல்சிந்தத்தருக்கழிந்தகன்றுபோனான். (உங)

இழையிடைநுழையாவண்ணமிடையிறவீங்குகொங்கைக்
குழையிடைநடந்துமீளுங்கொலைக்கணார்குழுவுந்தான
மழைகவிழ்கடாத்துவெள்ளைவாரணமாவுங்கோவுந்
தழைகதிர்மணியுந்தெய்வதருக்களுங்கவர்ந்துமீண்டாள். (உச)

கலிநிலைத்துறை.

இவ்வாறுமற்றைத்திசைகாவலர்யாரையும்போய்த்
தெவ்வாண்மைசிந்தச்செருச்செய்துதிறையுங்கைக்கொண்
டவ்வாறுவெல்வாளெனமூன்றரணட்டமேருக்
கைவார்சிலையான்கயிலைக்கிரிநோக்கிச்செல்வாள். (உரு)

சலிக்கும்புரவித்தடந்தேருடைத்தம்பிராட்டி
கலிக்கும்பலதூரியங்கைவரைதெய்வத்திண்டோ
வலிக்கும்பரிமள்ளர்வழங்கொலிவாங்கிநேரே
யொலிக்கும்படிகிட்டினளூழிதோறேங்குமோங்கல். (உசு)

வானோர்கயிலைமலையான்மகடன்னைநீத்துப்
போனாள்வந்தாளென்றருவிக்கட்புனலுக்கந்நீ
ராளுவொலியாலணைவாவென்றழைஇத்தன்றேசு
தானநகையாற்றழீஇயெதிரேற்பச்சென்றாள். (உஎ)

கிட்டிப்பொருப்பைக்கிரியோடுகிரிகடாக்கி
முட்டிப்பொருதாலெனவேழமுழங்கிப்பாயப்
புட்டிற்புறத்தார்மறத்தார்கணைபூட்டுவில்லார்
வட்டித்துருமேறெனவார்த்துவளைந்துகொண்டார். (உஅ)

---

(உங) கழல்-வீரகண்டை. கால்-காற்று. அனிகம்-சேனை. தும்பை, போர்செய்தற் கணிந்துவருமாலை. முன்னர் - அர், பகுதிப்பொருள்விகுதி.

(உரு) தெவ் ஆண்மை-பகையின்வலிமை. செரு-சண்டை. திறை-கப்பம். மூன்றரண் - மூன்றுமதில், எனவே திரிபுரம் என்பது பொருள்.

(உஅ) புட்டில்-அம்புறூத்தூணி. புறம்-முதுகு. மறம் - வீரம். வட்டித்தல்-சபதங்கூறல்-உறுமு-இடி.

ஓடித்திருமாமலைகாவலரும்பரார்க்கு
நாடிப்பணிதற்கரிதாகியநந்திபாதங்
கூடிப்பணிந்தித்திறங்கூறலுங்கொற்றவேனந்
தேடிக்கிடையானுளந்தேர்ந்தனனந்தியெந்தை. (உக)

வென்றிக்கணத்தைவிடுத்தான்கனமீதுபெய்த
குன்றிக்கணம்போற்சுழல்கண்ணழல்கொப்புளிப்பச்
சென்றிக்கனையமொழியாள்பெருஞ்சேனையோடு
மொன்றிக்கடலுங்கடலும்பொருதொத்ததன்றே. (௩௦)

சூலங்கண்மழுப்படைதோமரநேமிபிண்டி
பாலங்கள்கழுக்கடைவாட்படைதண்டநாஞ்சி
லாலங்கவிழ்க்கின்றவயிற்படைவீசியூழிக்
காலங்கலிக்குங்கடல்போன்றகளமரார்ப்பு. (௩க)

எறிகின்றனவோச்சுவவெய்வனவாதியாகச்
செறிகின்றனபல்படைசெந்நிறப்புண்ணீர்மூழ்கிப்
பறிகின்றனவும்பிழைக்கின்றவும்பட்டுத்தாக்கி
முறிகின்றனவுமுயன்றூர்வினைப்போகமொத்த. (௩உ)

தெரிசிக்கவந்தசிலதேவர்சிறைப்புளூர்தி
வெருவிப்பறந்தவொழிந்தோர்விலங்கூர்திமானங்
கருவிப்படையாற்சிதைபட்டனகாலனூர்தி
குருதிப்புனலுக்கதுகொற்றவையுண்டதென்ன. (௩௩)

பொருகின்றதுகண்டுவிச்சாதரர்போகம்வீடு
தருகின்றவனைத்தொழவானெறிசார்ந்துநேரே

(உக) உம்பரார் - மேலிடத்திலுள்ளவர். ஏனமென்றது, வராகவடிவங்கொண்ட திருமாலை.

(௩௦) கனம்-மேகம். இக்கு-கரும்பு. பொருத்து - இடைநிலை பெற்றுவந்த தொழிற்பெயர்.

(௩க) பிண்டிபாலம் - எறியாயுதம். கழுக்கடை - சிறியஈட்டி. நாஞ்சில்-கலப்பை. களமர்-வீரர்.

(௩உ) முயன்றூர் வினைப்போகம்என்றது - முற்பிறப்பிற்செய்தநல்வினைக்கீடாகப் போகம் சிலநாள்நிற்றலும், தீவினைக்கீடாகவரும் நன்மையுடனே கழிதலும் நெறியாதலின்.

(௩௩) விலங்கூர்தி-ஐராவதயானைமுதலிய மிருகவாகனங்கள். ஊர்தி, நடத்தப்படும் பொருள் மேனிற்றலால், செயப்படுபொருளில்வந்த தொழிற்பெயர்.

வருகின்றவர்வேறுவழிக்கொடுபோவரன்புக்
குருகின்றளிர்மெல்லடியாரொடுமூற்றமஞ்சா. (௩௪)

திங்கட்படைசெங்கதிரோன்படைசீற்றமேற்ற
வங்கிப்படைதீம்புனலான்படைநாரசிங்க
துங்கப்படைசிம்புணெடும்படைசூறைச்செல்வன்
வெங்கட்படைபன்னகவெம்படைமாறிவிட்டார். (௩௫)

கொட்புற்றமராடுமிக்கொள்கையர்தம்மினந்தி
நட்புற்றவர்கைப்படைதுட்படஞானமூர்த்தி
பெட்புற்றருளவருமெங்கள்பிராட்டிவெய்ய
கட்புற்றரவிற்கணைமாரிகடேற்றிநின்றாள். (௩௬)

கையிற்படையற்றனர்கற்படைதொட்டுவீரர்
மெய்யிற்படுகென்றுவிடக்குமுன்வீரக்கன்னி
பொய்யிற்படுநெஞ்சுடையார்தவம்போலமாய
செய்யிற்படுவச்சிரவேலைநிமிர்த்துவீசி. (௩௭)

துண்டம்படவேதுணித்தக்கணவீரர்தம்மைத்
தண்டங்கொடுதாக்கினள்சாய்ந்தவர்சாம்பிப்போனு
ரண்டங்கள்சராசரம்யாவையுந்தானேயாக்கிக்
கொண்டெங்குநின்றாள்வலிகூறவரம்பிற்றாமோ. (௩௮)

படையற்றுவிமானமும்பற்றறவற்றுச்சுற்றுந்
தொடையற்றிகண்மூண்டெழுதோள்வலியற்றுச்செற்ற
மிடையற்றுவீரநகையற்றடலேறுபோலு
நடையற்றடைவார்நிலைகண்டனனந்தியண்ணல். (௩௯)

உடையானடிதாழ்ந்திவையோதலுமோதநீத்தச்
சடையானிளவாணகைசெய்துதருமச்செங்கண்
விடையான்சிலையாணிகல்வென்றிவிளைக்குந்தெய்வப்
படையானெழுந்தானமராடியபாரிற்சென்றான். (௪0)

---

(௩௪) ஊற்றம்-இடையூறு. போகம்வீடு தருகின்றவ னென்றது-இருவினை யொப்புவந்துகூட, போகத்தையும், மலபரிபாகத்தில் மோட்சத்தையும் தருவோனாதலின்.

(௩௫) சிம்புள் - சரபம். சூறை-வாயு. பன்னகம் - பாம்பு.

(௩௬) கொட்புற்று-சுழன்று - இது, கொடுமை என்னும் பண்பீறும், ஈற்றயலுகரமுங்கெட்டுப் பெயர்விகுதியேற்றுக் கொட்பு எனநின்றது. பெட்பு என்பதற்குப்பகுதி-பேண் என்பதன் விகாரமெனக்கொள்க.

(௩௮) சாய்தல்-புறங்கொடுத்தல். சாம்பி-சோர்ந்து.

(௩௯) இகல்-போர். தொடை-தும்பைமாலை. செற்றம் - கோபம்.

(௪0) தெய்வப்படை என்றது-பாசுபதாஸ்திரத்தை.

அறுசீரடியாசிரிய விருத்தம்.

மேவியாகவப்பாரிடைப்பாரிடவீரரையமராரடி
யோவிலாவலிகவர்ந்ததுமன்றினியுருத்தெவரெதிர்ந்தாலுந்
தாவிலாவலிகவரவுமடங்கலின்றனிப்பிணவெனநிற்குந்
தேவியார்திருவுருவமுஞ்சேவகச்செய்கையுமெதிர்கண்டான். (சக)

ஒற்றைவார்கழற்சரணமும்பாம்பசைத்துடுத்தவெம்புலித்தோலுங்
கொற்றவாண்மழுக்கரமும்வெண்ணீறணிகோலமுந்நூன்மார்புங்
கற்றைவேணியுந்தன்னையேநோக்கியகருணைசெய்திருநோக்கும்
பெற்றதன்வலப்பாதியைத்தடாதகைப்பிராட்டியுமெதிர்கண்டாள்.

கண்டவெல்லையி லொருமுலைமறைந்தது கருத்தினுண்மடன ச்சங், கொண்டமைந்திடக் குனிதரமலர்ந்தபூங் கொம்பர்போலொசிந்தொல்கிப், பண்டையன்புவந் திறைகொளக்கருங்குழற் பாரமும்பிடர்தாழக், கெண்டையுண்கணும் புறவடிநோக்கமண் கிளைத்துமின்னெனநின்றாள். (சங)

நின்றமென்கொடிக்ககல்விசும்பிடையரனிகழ்த்தியதிருமாற்ற
மன்றறிந்தமூதறிவனுஞ்சுமதிசீறடிபணிந்தன்னையிக்
கொன்றையஞ்சடைக்குழகனேநின்மணக்குழகனென்றலுமன்பு
துன்றநின்றவட்பார்த்தருட்சிவபரஞ்சோதிமற்றிதுகூறும். (சச)

என்றுதொட்டுநீதிசையின் மேற்சயங்குறித்தெழுந்து போந்தனையாமு, மன்றுதொட்டுநம்மதுரை விட்டுனைவிடாதடுத்துவந்தன முன்னைத், தொன்றுதொட்டநான்மறையுரைவழிவருசோமவாரத்தோரை, நன்றுதொட்டநாண்மணஞ்செயவருதுநின்னகர்க்குநீயேகென்றான். (சரு)

என்றநாதன்மேலன்பையுமுயிரையுமிருத்தியாயஞ்சூழக்
குன்றமன்னதேர்மேற்கொடுதூரியங்குரைகடலெனவார்ப்ப
நின்றதெய்வமால்வரைகளும்புண்ணியநீத்தமுநீத்தேகி
மன்றன்மாமதுராபுரியடைந்தனண்மதிக்குலவிளக்கன்னாள். (சசு)

---

(சக) ஆகவப்பார்-யுத்தபூமி. பாரிடம் - பூதகணம். உருத்து-கோபித்து. பிணமடங்கல்-பெண்சிங்கம்.

(சங) ஒல்கி - துவண்டு.

(சச) மாற்றம்-உரை. குழகன் - பேரழகுடையவன்.

(சரு) ஓரை நன்றுதொட்டநாள் - நல்லமுகூர்த்தங்கூடிய காலத்தில். உனைவிடா தடுத்துவந்தன மென்றது-சத்தனுயுள்ளதனக்குத்தாதான்மிய சத்தியாய்நிற்றலை.

(சசு) புண்ணியநீத்தம்-புண்ணியநதி.

மங்கைநாயகிமங்கலமெதிர்கொளவந்துவானிழிசெல்வம்
பொங்குமாளிகைபுகுந்தனளாகமேற்புதுமணத்திறந்தீட்டி
யெங்குமோலையுய்த்தமைச்சர்மங்கலவினைக்கியைவனவமைக்கின்று
ரங்கண்மாநகரெங்கணுங்கடிமுரசானைமேலறைவித்தார். (சஎ)

மேற்படி - வேறு.

கன்னிதன்மணமுரசறைதலுங்கடிநகருறைபவர்கரைகெடத்
துன்னியவுவகையர்கடவுளைத்தொழுகையருடலமுகிழ்ப்பெழப்
பன்னியதுதியினரியலெழின்மகளிரையழகுசெய்பரிசென [ய்வார்.
வின்னியலெழில்வளநகரெலாஞ்செயல்வினையணிபெறவெழில்செ

கோதையொடும்பரிசந்தனக்குப்பைகளைந்தனர்வீசுவார்
சீதளமென்பனிநீர்கரேய்ச்சிந்தினபூழியடக்குவார்
மாதருமைந்தருமிறைமகண்மன்றன்மகிழ்ச்சிமயக்கினுற் [வார்.
காதணிகுழைதொடி கண்டிகைகழல்வன தெரிகிலர்தொழில் செய்

மங்கலமென்றெனவினவுவார்வருமதிநாளெனவுரைசெய்வார்[வார்
தங்களையொல்லை தழீஇக்கொள்வார் தாங்கருமோகை தலைக்கொள்
திங்களினெல்லையுமாறுநாளாறுகமென்றுசெலுத்துவார்
நங்கையருங்கடிகாணவோதுடித்தனதோள்கணமக்கென்பார். (ருo)

பித்திகைவெள்ளைபுதுக்குவார்பெட்புறுவார்களும்பெட்புறச்
சித்திரபந்திதிருத்துவார்தெற்றிகள்குங்குமநீவுவார்
வித்தியபாலிகைமென்றழைவிரிதலைநீர்நிறைபொற்குடம்
பத்தியின்வேதிசிரப்புவார்தோரணம்வாயில்பரப்புவார். (ருக)

நீளிடைமணிமறுகெங்கணுநெடுநடைக்காவணநாட்டுவார்
பாளைகொள்கமுகுசுவைக்கழைபழுக்குலைவாழையொழுக்குவார்
கோளிறைகொண்டெனவாடிகள்கோத்தணிவார்மிசைகொடிநிரை
வாளரியெழுபரியடிபடமத்திகைநிரையெனவைப்பரால். (ருஉ)

---

(சஅ) கடி-காவல். முகிழ்ப்பு-புளகம்.

(சகூ) கோதை—பூமாலை. பூழி-புழுதி.

(ருக) பித்திகை - சுவர்த்தலம். மெட்புறுவாரென்றதுஈண்டு, யாவராலும் விரும்பப்பட்ட சிற்பநூல்வல்லோரை. பெட்பு-ஆசை. தெற்றி-திண்ணை. வேதி-மேடை.

(ருஉ) மறுகு-வீதி. காவணம்-நடைப்பந்தல். கோள் - நவக்கிரகம். அரி-சூரியன்.

பூவொடுதண்பனிசிந்துவார்பொரியொடுபொற்சுணம்வீசுவார்
பாவைவிளக்குநிறுத்துவார்பைந்தொடைபந்தரினூற்றுவா
ராவணமென்னவயிர்ப்புறவணிமறுகெங்கணுமரதனக்
கோவையுமரகதமாலையுங்கோப்பமையாரமுந்தூக்குவார். (ருங)

அடுகரிசிந்துரமப்புவாரழன்மணியோடைமிலைச்சுவார்
கடுநடையிவுளிகழுத்தணிகாலணிகலனைதிருத்துவார்
சுடர்விடுதேர்பரிபூட்டுவார்தொடையொடுகவரிகடேய்க்குவார்
வடிவறுபொற்கலநவமணிமங்கலதீபமியற்றுவார். (ருச)

பழையனகலனைவெறுப்பராற்புதியனபணிகள்பரிப்பராற்
குழைபனிநீரளை குங்குமங்குவிமுலைபுதைபடமெழுகுவார்
மெழுகியவீரம்புலர்த்துவார்விரைபடுகலவைகளப்புவா
ரழகியகண்ணடிநோக்குவார்மைந்தரையாகுலமாக்குவார். (ருரு)

அஞ்சனம்வேல்விழிதீட்டுவாராடவர்மார்பிடைநாட்டுவார்
பஞ்சுகள்பாதமிருத்துவார்பரிபுரமீதுதிருத்துவார்
வஞ்சியர்தேறலருந்துவார்மருங்குறளாடவருந்துவார்
கொஞ்சியகனிமொழிகழறுவார்குழுவொடுகுரவைகள்குழறுவார். ()

கின்னரமிதுனமெனச்செல்வார்கிளைகெழுபாணுடுவிறலியர்
கன்னியரரசைவணங்குவார்கடிமணமெய்துகளிப்பினு
லின்னிசையாழொடுபாடுவாரீந்தனதுகில்விரித்தேந்துவார்
சென்னியின்மீதுகொண்டாடுவார்தேறலையுண்டுசெருக்குவார். ()

மன்னவர்மகளிருமறையவர்மகளிரும்வந்துபொன்மாலையைத் [ர்
துன்னினர்சோபனம்வினவுவார் தோகைதன்மணவணிநோக்குவா
கன்னிதனேவலர்வீசியகாசறைகர்ப்புரவாசமென் [ரால்.
பொன்னறுங்கலவையின்மெய்யெலாம்புதைபட வளனுடும்போவ

---

(ருங) சுண்ணம்-சுணமென-இடைகுறைந்துநின்றது. பாவை விளக்கு-பிரதமைகளேந்தும் விளக்கு. கோப்பு—கோர்வை.

(ருச) ஓடை-பட்டம். கலன்-சேணம்.

(ருரு) ஆகுலம்-வருத்தம். அப்புவார், வினைமுற்று எச்சமாய் நின்றது.

(ருசு) பரிபுரம்—சிலம்பு. தேறல்-மது. குரவைபாடலாவது- "குரவையென்பதெழுவர்மங்கையர், செந்நிலைமண்டலக்கடகக்கை கோத்துத், தந்நிலைகொட்பநின்றுடலாகும்" எனவருஞ் சூத்திரத் தாலுணர்க.

(ருஎ) விறலியர்-பாடற்பெண்கள். கின்னரமிதுனம் - கின்னரம், மிதுனம், என்னும் பட்சிகள். கிளை-வீணையினரம்பு-சுற்றம்.

(ருஅ) காசறை-மயிர்ச்சாந்து.

அங்கனகஞ்செய்தசும்பினவாடைபொதிந்தனதோடவிழ்
தொங்கல்வளைந்தனமங்கையர்துள்ளியகவரியினுள்ளன
கங்கையும்வாணியும்யமுனையுங்காவிரியும்பலதுறைதொறு
மங்கலதூரியமார்ப்பனமதமலைமேலனவருவன. (ருக)

அங்கவர்மனைதொறுமணவினையணுகியதுழனியரெனமறைப்
புங்கவரினிதுணவறுசுவைப்போனகமடுவினைபுரிகுவா
ரிங்கடுவனபலியடிகளுக்கெனயதிகளையெதிர்பணிகுவார்
சங்கரனடியரையெதிர்கொள்வார்சபரியைவிதிமுறைபுரிகுவார். ()

இன்னணநகர்செயலணிசெயவிணையிலிமணமகன்மணவினைக்
கன்னியுமனையவளென்னினிக்கடிநகர்செயுமெழில்வளனையா
மென்னவரியநகர்செயலெழிலிணையெனவுரைசெய்வதெவனிதன்
முன்னிறைமகடமர்மணவணிமண்டபவினைசெயுமுறைசொல்வாம்.

மேற்படி - வேறு.

கருவிவான்முகிலூர்தியைப்பொருதநாட்கலைமதிமருமாட்டி
செருவில்வாங்கியவிமானமாலைகளெனத்தெய்வதவரையெல்லா
மருவியந்நகர்வைகியதம்மிறைமடமகடனைக்காண்பான்
றருவின்றெனநட்டனரெட்டிவான்றொடுநிலைநெடுந்தேர்கள். ()

பளிக்கினேழுயர்களிறுசெய்தமைத்தபொற்படியதுபசுஞ்சோதி
தெளிக்குநீலத்தினுளிகணிரைமணித்தெற்றியதுற்றோர்சாய்
வெளிக்குளாடியவோவியப்பாவைபோன்மிளிர்பளிங்காற்சோதி
தளிர்க்கும்பித்தியிடையிடைமரகதச்சாளரத்ததுமாதோ. (கூங)

பல்லுருச்செய்தபவளக்காலாயிரம்படைத்ததிந்திரநீலக்
கல்லுருத்தலைப்போதியதாடகக்கவின்கொளுத்தரமேல
தல்லுருக்கியசெம்மணித்துலாத்ததாலமுதுடற்பசுந்திங்கள்
வில்லுருக்குகன்மாடமதாகியவேள்விமண்டபஞ்செய்தார். (கூச)

---

(ருக) தசும்பு-குடம். மதமலை-மதத்தையுடையயானை.

(கூ0) துழனி-ஓசை. பலி-பிக்ஷை. சபரியை-பூசை.

(கூஉ) முகிலூர்தி - இந்திரன். நெடுந்தேரென்றது - நிலைத்தேரை.

(கூங) ஏழுயர்களிறு என்றது-ஏழுமுழமுயர்ந்த அரசயானையை.

(கூச) போதியது-போதிகைகளையுடையது. போதிகை - குறுந்தறி. வில்-கிரணம். துலாம்-சிறுகுமிழ். உருக்கு-காலங்காந்தபெயரெச்சமாதலால், கல்மாடம் என்னும்எல்லைப்பொருள்கொண்டது- கல்மாடம் - சந்திரகாந்தக்கல்லால்செய்தமேனிலை.

முத்திற்பாளைசெய்தவிர் மரகதத்தினுன்மொய்த்த பாசிலைது ப்பின், கொத்திற்றீம்பழம் வெண்பொனுற்கோழரை குயின்றபூக முந்துப்பின், ருெத்திற்றூங்குபூச் செம்பொனுற்பழுக்குலை தூக்கி ப்பொன்னுற்றண்டு, வைத்துப்பாசொளி மரகதநெட்டிலைவாழையு நிறைவித்தார். (சுரு)

பித்திமாதவி சண்பகம் பாதிரிபிறவுமண்டபஞ்சூழப் பத்தியா வளர்த்தளிகள்வாய் திறந்து பண்பாடவின்மதுக்காலத், தத்தியாய் மணங் கவர்ந்துசாளரந்தொறுந் தவழ்ந்தொழுகிளந்தென்ற, நித்தி யாநிற்குமதுத்துளி தெளித்திடச் செய்தனருய்யானம். (சுசு)

வேள்விச்சாலையும் வேதியுங்குண்டமு மேகலையொடுதொன் றூற், கேள்விச்சார்பினுற் கண்டுகண்ணடிவிடைகிளர்சுடர்சீவற்ச, நீள்விற்சாமரம் வலம்புரிசுவத்திக நிறைகுடமெனவெட்டு, வாள்வி ட்டோங்குமங் கலத்தொழில்செய்பொறி வகையினுனிருமித்தார்.()

மணங்கொள்சாந்தொடு குங்குமப் போதளாய் மான்மதம்பனி நீர்தோய்த், திணங்குசேறுசெய் திருநிலந்தடவிவா னிரவிமண்டல நாணப், பணங்கொளுரகமா மணிவிளக்கிருகையும் பாவைகளேடுத் தேந்தக், கணங்கொடாரகை யெனநவமணிகுயில்கம்பலம் விதானி த்தார். (சுஅ)

செம்பொற்கோயின்முன் சேணொடுகாவணந் திசையெலா ம்விழுங்கச்செய், தம்பொற்பாலிகைப் பாண்டில்வாய் முளைதெளித் தம்புயத்தவனுதி, யும்பர்க்கேற்றபொற் கம்பலமேல்விரித் துள்ளு றத்தவிசிட்டுத், தும்பைத்தாழ்சடை யான்றமர்க்காதனஞ் சூழவிட் டதனுப்பண். (சுகூ)

கற்பகந்தரவயிரவாளரிப்பிடர்கதுவப்பொற்குடரேற்றி
யெற்படுந்துகிராற்குடஞ்சதுரமாவியற்றியவெருத்தத்தூண்
விற்புடும்பளிக்குத்திரந்துப்பினுல்விடங்கமேனிலமூன்றுப்
பொற்பநூல்வழிவிமானம்பன்மணிகளாற் பொலியச்செய்துள்ளாக.

---

(சுரு) துப்பு - பவளம். கோழ் - வழவழப்பு. தொத்து - கொத்து. தூக்கி, வைத்து, என வேறு பலவடுக்கியவினையெச்சங்கள், இசையெச்சமாய்நின்ற அமைத்த என்னும் பெயரெச்சத்தின் முதனிலையைத் தனித்தனிகொண்டன.

(சுசு) பித்தி - சிறுசண்பகம் - மாதவி - குருக்கத்தி. தத்தல்- செல்லல். உய்யானம்-பூந்தோட்டம். உத்தியானமென்பது உய்யானமெனநின்றது, இடைக்குறை. பித்தி-கடைக்குறை-பித்திகை.

(சுஎ) மேகலை - ஓமகுண்டத்தின் வரம்புகள்.

(சுஅ) தாரகை - நட்சத்திரம்.

(சுகூ) பாண்டில் - வட்டவடிவு. நாப்பண் - நடு.

(எ0) அரி-சிங்கம். விடங்கம்-கொடுங்கை. நூல்-சிற்பநூல்.

அங்கமாறுயேகால்களாய்முதலெழுத்தம்பொற்பீடிகையாகித்
துங்கநான்மறைநூல்களேசித்திலந்தொடுத்தசைதாம்வாகி
யெங்கணுயகனெம்பெருமாட்டியோடிருப்பதற்குருக்கொண்டு
தங்கிஞலெனநவமணிகுயின்றபொற்றவிசதுசமைத்திட்டார். (எக)

புரந்தரன்றருகற்பகம்பொலந்துகில்பூண்முதலியநல்கச்
சுரந்தரும்பெறலமுதமைவகையறுசுவையுணுமுதலாகப்
பரந்ததெய்வவான்பயப்பச்சிந்தாமணிபற்பலவுஞ்சிந்தித்
திரந்துவேண்டுவதரத்தரவீட்டிஞரிந்திரநகர்நாண. (எஉ)

தென்னர்சேகரன்றிருமகடிருமணத்திருமுகம்வரவேற்று [றி
மன்னர்வந்தெதிர்தொழுதுகைக் கொண்டுதம்மணிமுடிமிசையேற்
யன்னவாசகங்கேட்டனர்கொணர்ந்தவர்க்கருங்கலந்துகினல்கி
முன்னரீர்த்தெழுகளிப்புறமனத்தினுமுந்தினர்வழிக்கொள்வார். ()

கொங்கர்சிங்களர்பல்லவர்வில்லவர்கோசலர்பாஞ்சாலர்
வங்கர்சோனகர்சீனர்கள்சாளுவர்மாளவர்காம்போச
ரங்கர்மாகதராரியர்நேரியரவந்தியர்வைதர்ப்பர்
கங்கர்கொங்கணர்விராடர்கண்மராடர்கள்கருநாடர்குருநாடர். ()

கலிங்கர்சாவகர்கூவிளரொட்டியர் கடாரர்கள்காந்தாரர், குலி ங்கர்கேகயர்விதேகர்கள் பௌரவர்கொல்லர்கள் கலயாணர், தெலு ங்கர்குர்ச்சரர்மச்சர்கண்மிலேச்சர்கள் செஞ்சையர் முதலேனைப், பு லங்கொண்மன்னருந் துறைதொறுமிடைந்துபார் புதைபடவருகி ன்றார். (எரு)

இத்தகைப்பலதேயமன்னவர்களுமெண்ணிடம்பெறுநீண்டிப்
பைத்தவாழிபோனிலமகண்முதுகிறப்பரந்ததானையராகித்
தத்தநாட்டுளபலவகைவளனொடுந்தழீஇப்பலநெறிதோறு
மொய்த்துவந்தனர்செழியர்கோன்றிருமகண்மூரசதிர்மணமூதூர்.

வந்தகாவலருழையர்சென்றுணர்த்தினர்வருகெனவருகுய்ப்பச்
சந்தவாளரிப்பிடரணைமீதறந்தழைத்தருள்பழுத்தோங்குங்
கந்தநாண்மலர்க்கொம்பினைக்கண்டுகண்களிப்புறமுடித்தாமஞ் [ர்.
சிந்தவீழ்ந்தருள்சுரந்திடத்தொழுதுபோய்த்திருந்து தம்மிடம்புக்கா

---

(எக) அங்கம் - வேதாங்கங்கள். முதலெழுத்து - பிரணவம். தவிசது - அது பகுதிப்பொருள் விகுதி.

(எஉ) ஐவகையுணவாவன - உண்ணல், தின்னல், நக்கல், பருகல், உரிஞ்சல். தெய்வ ஆன் - காமதேனு.

(எரு) துறை - வழி. (எசு) நெறி - மார்க்கம்.

வரைவளங்களும்புறவினில்வளங்களுமருதத்தண்பணைவேலித்
தரைவளங்களுஞ்சலதிவாய்நடைக்கலந்தருவளங்களுமீண்டி
யுரைவரம்பறமங்கலம்பொலிந்ததிவ்வூரினிநால்வேதக்
கரைகடந்தவன்றிருமணஞ்செயவருகாட்சியைப்பகர்கின்றேன். ()

ஏகநாயகிமீண்டபின்ஞாட்பிகந்திரசிதகிரியெய்தி
நாகநாயகமணியணிசுந்தரநாயகனுயிர்க்கெல்லாம்
போகநாயகனுகிப்போகம்புரிபுணர்ப்பறிந்தருணந்தி
மாகநாயகன்மாலயனுருத்திரர்வரவின்மேன்மனம்வைத்தான். ()

சங்குகன்னனையாதியகணதிபர்தமைவிடுத்தனனன்னுர்
செங்கணேற்றவர்மாலயன்முதற்பெருந்தேவர்வான்பதமெய்தி
யெங்கணுயகன்றிருமணச்சோபனமியம்பினுரதுகேட்டுப்
பொங்குகின்றபேரன்புபின்றள்ளுறப்பொள்ளெனவருகின்றூர். ()

அஞ்சுகோடியோசனைபுகைந்திருமடங்கழன்றவர்தமைப்போலீ
ரஞ்சுதீயுருத்திரர்புடையுடுத்தவரழற்கணுற்பூதங்க
ளஞ்சுநூறுருத்திரரண்டத்துச்சியரரியயன்முதற்றேவ
ரஞ்சுமாணையுமாற்றலும்படைத்தவரடுகுரட்படைவீரர். (அக)

---

(எஅ) புறவு - முல்லை. சலதி - சமுத்திரம்.

(எகூ) ஏகம்-ஒப்பின்மை. நாகநாயகன் - ஆதிசேடன். ஞாட்பு-யுத்தகளம். இரசிதம்-வெள்ளி. மாகநாயகன்-இந்திரன். மாகம்-வானுலகம்.

(அக) இருமடங்கழன்றவரென்றது - கீழண்டகடாகத்தில், கோடியோசனையுள்ள கனகமயமான ஆலயத்தில். ஆயிரம்யோசனையுயரமும், இரண்டாயிரம்யோசனை அகலமுமுள்ள சிங்காதனத்தில். தமது திருமேனியில் அக்கினிச்சுவாலை பத்துக்கோடியோசனையும் அச்சுவாலையின்புகை ஐந்துகோடி யோசனையுமுடையவராய் வீற்றிருக்கும் காலாக்கினி உருத்திரநாயனுரை. தமைப்போலீரைஞ்சுதீ யுருத்திரரென்றது-அவரைச்சூழ்ந்து அவர்போன்றிருக்கும், தசவுருத்திரர்களை. புடையுடுத்தவரென்றது-அப்பத்துருத்திரர்களுள் ஒவ்வொருவரையும் பரிவாரமாகச்சூழ்ந்து சேவித்துநிற்கும், ஒவ்வொருகோடியுருத்திரர்களை. நாற்பூதங்களஞ்சுநூறுருத்திரரண்டத்துச்சியர் என்றது-நால்வகைப்பூதங்களும் அண்டமுகட்டில் வசிப்பவர்களுமாகிய யாவருமஞ்சத்தக்க நூறு உருத்திரர்களை. இவர்கள். அண்டகடாகப்புறம்பிலுள்ள இந்திரதிக்குமுதலிய அஷ்டதிக்குகளிலும் ஒவ்வொருதிக்குக்குப் பதின்மராகவும், அண்டகடாகவோட்டுக்குக்கீழுள்ள விஷ்ணுதிக்கிற்பதின்மரும், அண்டகடாகத்தின்மேலுள்ள பிரமதிக்கில் பதின்மருமாக வசிப்பவர்கள். ஆணை-ஆக்கினை. ஆற்றல்-வல்லமை-குறட்படை-பூதப்படை.

புத்தியட்டகர்நாலிருகோடிமேற்புகப்பெய்தநரகங்கள்
பத்திரட்டியுங்காப்பவர்பாரிடப்படையுடைக்கூர்மாண்டர்
சத்தியச்சிவபரஞ்சுடருதவியசதவுருத்திரரன்று
ருய்த்தளித்தவீரைம்பதுகோடியருருத்திரகணநாதர். (அஉ)

பட்டகாரிவாயரவணிபவர்பசுபதியுருத்திரராதி
யட்டமூர்த்திகண்மேருவினவிர்சுடராடகர்தோடேந்து
மட்டறுமலர்மகன்செருக்கடங்கிடமயங்கியவிதிதேற்ற
நிட்டையாலவனெற்றியிற்றேன்றியநீலலோகிதநாதர். (அங)

---

(அஉ) புத்தியட்டகர் - பைசாசம், ராட்சசம், யாக்ஷம், காந்தர்வம், மாகேந்திரம், சௌமியம், பிராசேஸ்வரம், பிராமம் என்னுமெண்வகைப்பட்ட சூக்குமபுவனங்களினதிபதிகளாகிய அனந்தர், சூக்ஷமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, ஸ்ரீகண்டர், சிகண்டி என்னும் அஷ்டவித்யேஸ்வரர்கள். நாலிருகோடிமேற்புகப்பெய்தநரகங்கள் பத்திரட்டி என்பது—அதிபாதக முதலிய பாவங்களைச் செய்தோர்வசித்தற்கு, 'இருபத்தெட்டுத்தளங்களாகக்கட்டின நிலைமாடங்கள்போல ஒன்றின்மே லொன்றாய், உருத்திரதேவநாயனார்புவனத்திற்குமேலுள்ள இருபத்தெட்டுகோடிநரகங்களை. கூஷ்மாண்டர் என்பது-கூர்மாண்டர் என்றாயிற்று. காப்பவரென்றது, பிரளயகாலாக்கினியையும், பிரளயகாலத்துச் சூரியனும்போன்ற திருவுருவமும், கறுத்தமுகமும் மழுவேந்தியகரமுமுடைய கூர்மாண்டதேவநாயனாரைப் புடைசூழ்ந்து அவரைப் போலுருவாய்ந்த, அநேக உருத்திரர்களை. கூர்மாண்டராவார்-அந்நரகங்களின் மேற்பாகமாகிய கநகபூமியில் அந்நரகங்களுக்கும் அவற்றைக்காப்போருக்கும் அதிபராயுள்ளவர். சத உருத்திரராவார், மந்திரம், பதம் வன்னம், புவனம், தத்துவம், கலை ஆகிய ஆறத்துவாக்களிலு முறையாயமர்ந்துள்ள நூறு ருத்திரர்கள். ஈரைம்பது கோடியுருத்திரர்களென்றது-பிரமாண்டதர உருத்திரர்களுக்கு உள்ளிட்ட நூறுகோடி யுருத்திரர்களை.

(அங) காரி-விஷம். அட்டமூர்த்திகளாவார் - பவன் சருவன், ஈசானன், பசு, பதி, வீமன், மாதேவன், உருத்திரன். ஆடகர் - ஆடகேஸ்வரர். இவர் பாதாளத்துக்குமேலுள்ள ஆடகேஸ்வரபுவனத்தில் ஆயிரம்யோசனை உயரமுள்ள பொன்மயமான திருக்கோயிலினுள்ள அசுரரும், நாகரும், அரக்கரும், சேவிக்க வீற்றிருப்பவர். விதி-சிருட்டித்தொழில்.

பாலமேற்றசெந்தழல்விழியுருத்திரர்பதினொருபெயர்வாகைச்
சூலமேற்றகங்காளகபாலியர் துரகதநெடுங்காரி
நீலமேற்றபைங்கஞ்சுகப்போர்வையினெடியவர்திருவாணக்
கோலமேற்றவரெண்மர்ஞாளிப்புறங்கொண்டகேத்திரபாலர்.(அச)

செய்யதாமரைக்கண்ணுடைக்கரியவன்செம்மலர்மணிபீடத்
தையன்வாசவனாதியெண்டிசைப்புலத்தமரெண்வசுதேவர்
மையில்கேள்விசாலேழெழுமருக்துகண்மருத்துவரிருவோர்வான்
வெய்யவாள்வழங்காறிரண்டருக்கரோர்வெண்சுடர்மதிச்செல்வன்.

கையுங்கால்களுங்கண்பெற்றுக்கதிபெற்றகடும்புலிமுனிச்செல்வன்
பையராமுடிப்பதஞ்சலிபாற்கடல்பருகி மாதவன்சென்னி
செய்யதாள்வைத்தசிறுமுனிகுறுமுனிசிவமுணர்சனகாதி
மெய்யுணர்ச்சியோர்வாமதேவன் சுகன் வியாதனாரதன்மன்னோ. ()

எழுவரன்னையர்சித்தர்விச்சாதரரியக்கர்கின்னரர்வேத
முழுவரம்புணர்முனிவர்யோகியர்மணிமுடித்தலைப்பலநாகர்
வழுவில்வான்றவவலியுடைநிருதர்வாள்வலியுடையசுரேசர்
குழுவொடும்பயில்பூதவேதாளர்வெங்கூளிகளரமாதர். (அஎ)

---

அச) உருத்திரர் பதினொருவர் என்றது - மாதேவன், அரன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன். ஈசானன், விசையன், வீமதேவன், பவோற்பவன், கபாலி, சௌமியன் என்னுமேகாதசவுருத்திரர்களை. இவர்கள் பிரமனுக்குமயங்கிய சிருட்டியைத் தேற்றுவித்தற்பொருட்டு ஒவ்வொருகற்பத்திலும் அவன்நெற்றியிலிருந்து ஒவ்வொருவராகத்தோன்றினவர்கள். கங்காளர் - எலும்பைத்தரித்தவர். கபாலியர்-கபாலத்தையேந்தியவர். காரி-சாத்தன்.திருவாணக்கோலமேற்றவர். எண்மரென்றது - அசிதாங்தகர், குரு, சண்டர், குரோதனர், உன்மத்தர், கபாலி, பீஷணர், சங்கரரென்னும் க்ஷேத்திரபாலரை.

(அரு) வாசவனாதி யெண்டிசைப் புலத்தமரென்றது—இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானியன் என்னு மஷ்டதிக்குப்பாலகரை. எண்வசுதேவர் என்றது-துருவன், தமன், சோமன், ஆபன், அனிலன், அனலன், பிரத்தியூடன், பிரபாசன், என்னும் வசுகணத்தவரை. மருத்துவர் - அஸ்வனிதேவர்கள். ஆறிரண்டருக்கரென்றது-இந்திரன், தாதா, பகன், பூஷன், மித்திரன், வருணன், அரியமான், அருச்சி, விவசுவன், துவட்டா, சவிதா, விஷ்ணு என்னுமிவர்களை.

(அசு) சிறுமுநி-உபமந்நியர், குறுமுனி-அகத்தியர்.

ஆண்டினோடயனம்பருவந்திங்களாறிரண்டிருபக்க
மீண்டுமைம்பொழுதியோகங்கள்கரணங்களிராப்பகலிவற்றோடும்
பூண்டநாழிகைகணமுதற்காலங்கள்பொருகடனதிதிக்கு
நீண்டமால்வரைதிக்கயமேகமின்னிமிர்ந்தவைம்பெரும்பூதம். ()

மந்திரம்புவனங்கடத்துவங்கலைவருணங்கள்பதம்வேதந்
தந்திரம்பலசமயநூல்புறந்தழீஇச்சார்ந்தநூறருமாதி
முந்திரங்கியசதுவிதஞ்சரியையேமுதலியசதுட்பாத
மிந்திரங்குநீர்முடியவரடியவரிச்சியாவெண்சித்தி. (அகூ)

ஆயிரங்கடலனையவாய்ப்பரந்தெழுமாயிரமனிகத்து
ளாயிரங்கதிரனையராயுருத்திரரந்தரத்தவரண்ட
மாயிரந்தகர்பட்டெனத்துந்துபியாயிரங்கலந்தார்ப்ப
வாயிரஞ்சதகோடியோசனைவழியரைக்கணத்திடைச்செல்வார். ()

சித்தந்தேர்முனிவேந்தருந்தேவருஞ்சிவனுருத்தரித்தோருந்
தத்தந்தேர்முதலூர்தியர்வார்திகழ்சந்தனமணிக்கொங்கைக்
கொத்தந்தேமலர்க்குழன்மனையாரொடுங்குளிர்விசும்பாறுச்சென்
றத்தந்தேரிடையாள்பங்கனணிவரைக்கணியராய்வருகின்றார். ()

இழிந்தவூர்தியர் பணிந்தெழும்யாக்கைய ரிறைபுகழ்திருநாம, மொழிந்தநாவினர் பொடிப்பெழுமெய்யினர் முகிழ்த்தகைமுடியே றக், கழிந்தவன்பினர் கண்முதற்புலங்கட்குங் கருணைவான்சுவை யூறப், பொழிந்தவானந்தத் தேனுறைதிருமலைப்புறத்து வண்டெ னமொய்த்தார் (கூஉ)

---

(அஅ) ஆண்டு-பிரபவாதியறுபதுவருடங்கள். அயனம் — உத்த ராயனம், தக்ஷிணாயனம். பருவம். கார்முதலிய ஆறுபருவங்கள். இ ருபட்சம். சுக்கிலபட்சம், கிருஷ்ணபட்சம். ஐம்பொழுது - வைக றையாதியைம்பொழுதுகள். ஐம்பெரும்பூதம்-பிரிதிவுமுதலிய பஞ் சபூதங்கள்.

(அகூ) மந்திரம் - சத்தகோடிமகாமந்திரங்கள். கலை - நிவர்த்தி யாதி பஞ்சகலைகள். வருணங்கள் - ஐம்பத்தோரக்ஷரங்கள். பதம்- எண்பத்தொருபதங்கள். தந்திரம் - இருபத்தெட்டாகமங்கள். புறந் தழீஇச்சார்ந்தநூல் - புறச்சமயம்புறச்சமயநூல்கள். சதுட்பாதம், ச ரியையாதிநான்கு ஞானபாதங்கள். எண்சித்தி-அஷ்டமாசித்தி.

(கூO) ஆயிரம் - அநேகம். அனிகம் - சேனை. கதிர் - சூரியன். அந்தரத்தவர்-தேவர்கள்.

(கூக) சிவனுருத்தரித்தோர் - உருத்திரர். ஆறு - வழி. அத் தந்தேரிடையாள் - அ - தந்து எர் - இடையாள். என்பது சொல் வகை. அந்த நூல்போன்ற அழகிய இடையையுடையவள் என் பது பொருள்தந்து - நூல்.

விரவுவானவர்நெருக்கறவொதுக்குவான்வேத்திரப்படையோச்சி
யரவுவார்சடைநந்தியெம்பிரானவரணிமணிமுடிதாக்கப்
பரவுதூளியிற்புதைபடுகயிலையம்பருப்பதம்பகல்காலு
மிரவிமண்டலத்தொடுங்குநாளொடுங்கியவிந்துமண்டலமானும். ()

வந்தவானவர்புறநிற்பநந்தியெம்வள்ளலங்குள்ளெய்தி
யெந்தைதாள்பணிந்தையவிண்ணவரெலாமீண்டினரெனவீண்டுத்
தந்திடென்னவந்தழைத்துவேத்திரத்தினற்றராதரந்தெரிந்துய்ப்ப
முந்திமுந்திவந்திறைஞ்சினர்சேவடிமுண்டகமுடிசூடி. (கூச)

தீர்த்தன்முன்பணிந் தேத்துகின்றார்களிற்சிலர்க்குத் தன்றிரு
வாயின், வார்த்தைநல்கியுஞ்சிலர்க்கருண்முகிழ்நகைவழங்கியுஞ்சில
ர்க்குக்கண், பார்த்துநீண்முடிதுளக்கியுஞ் சிலர்க்கருட்பரிசிறந்தெ
ழுந்தண்டங், காத்தகண்டனோர்மண்டபத்திடைபுக்குக் கடிமணக்
கவின்கொள்வான். (கூரு)

ஆண்டநாயகன்றிருவுளக்குறிப்புணர்ந்தளகைநாயகனுள்ளம்
பூண்டகாதன்மேற்கொணடெழுமன்புந்தன்புனிதமெய்த்தவப்பேறு
மீண்டவாங்கணைந்தெண்ணிலாமறைகளுமிருவருமுனிவோருந்
தீண்டருந்திருமேனியைத்தன்கையாற்றீண்டிமங்கலஞ்செய்வான்.

பூந்துகிற்படாங்கொய்சகத்தானையின்போக்குகோவணஞ்சாத்தி
யேந்திரட்டைஞாண் பட்டிகையிறுக்கிவண்டிரைக்குநாண்மலர்க்கு
வேய்ந்துகற்பகப்புதுமலர்சசிகழிகைமிலைந்துநீறணிமெய்யிற் [ஞ்சி
சாந்தமான்மதந்தண்பனிநீரளாய்த்தடக்கையான்மட்டித்தான். ()

இரண்டுசெஞ்சுடர்நுழைந்திருந்தாலென விணைமணிக்குழைக்
காதிற், சுருண்டதோடுபொற்குண்டலந்திணியிருபரந்துதோட்புற
ந்துள்ள, மருண்டதேவரைப்பரமெனமதிப்பவர்மையல்வல்லிருண்
மான, விருண்டகண்டமேன் முழுமதிகோத்தென விணைத்தகண்
டிகைசாத்தி. (கூஅ)

(கூச) முண்டகம்-தாமரை. சூடி-செயவெனெச்சத்திரிபு.

(கூரு) துளக்கியும்-அசைத்தும். அண்டங்காத்தகண்டன் என்றது-பல்லாயிரகோடி யண்டங்களையும் விஷத்தாற்பொன்றாது காத்தருளிய சிவபெருமானை.

(கூசு) இருவர்-பிரமவிஷ்ணுக்கள்.

(கூஎ) பட்டிகை-அரைஞாண். குஞ்சி - ஆண்மயிர். சிகழிகை-தொடுத்தமாலை. மிலைந்து-சூடி. மட்டித்து-பூசி.

(கூஅ) மருண்டதேவரென்றது - மலமயக்கத்தாற் றாம்பரமென்றுமயங்கிய, பிரமவிஷ்ணுக்களை.

வலங்கிடந்தமுந் நூல்வரையருவியின்வயக்குமார்பிடைச்சென்னித்
தலங்கிடந்தவெண் டிங்களுேற்றமுதெனத்தரளமாலிகைசாத்தி
யிலங்கிடந்தமாலிகைப்பரப்பிடையியைத்திருண்முகம்பிளந்தாரங்
கலங்கிடந்தபாற்கடன்முளைத்தெழுமிளங்கதிரெனக்கவின்செய்து.

திசைகடந்தநாற்புயங்களிற்பட்டிகைசேர்த்துவாளெறிக்குந்தோ
ணசைகடந்தநல்லார்மனங்கவர்ந் துயிர்நக்கவங்கதஞ்சாத்தி
யசைகடங்கலுழ்வாரணவுரிவைநீத்தணிகொளுத்தரீயம்பெய்
திசைகடந்தமந்திரபவித்திரமெடுத்தெழில்விரனுழைவித்து. (க00)

உடுத்தகோவணமிசைப்பொலந் துகிலசைத்துரகமைந்தலைநால, விடுத்தபோல்வெயின் மணித்தலைக்கொடுக்குமின் விடவிருபுறந் தூக்கித், தொடுத்ததார்புயந் தூக்கிநூபுரங்கழல்சொற்பதங்கடந்தன் பர்க், கடுத்ததாளிலிட்டிருநிதிக்கோமகனருந்தவப்பயன் பெற்றான்.

செங்கண்மாலயனிந்திரன் முதற்பெருந்தேவர்க்கும்யாவர்க்கு, மங்கலந்தரு கடைக்கணுயகனொருமங்கலம்புனைந்தான்போற், சங் கைகொண்டு கும்போதரன் முதுகின்மேற் சரணம்வைத் தெதிர் போந்த, துங்கமால்விடைமேற் கொடுநடந்தனன் சுரர்கள்பூமழை தூர்த்தார். (க0உ)

அந்தரத்தவரந்தரதுந் துபியைந் துமார்த்தனர்சூழ
வந்தரக்கருமியக்கரும்பூதருமங்கலவியங்கல்லக்
கொந்தலர்க்கருங்குழலரமடந்தையர்கொளைவல்விஞ்சையர்நாளந்
தந்தசைத்திடமலர்ந்தபூங்கொம்பர்போற்சாய்ந்தசைந்தனராட. ()

துங்கமாயிரங்கருவியாயிரமலைத்தூங்கிருண்முழைதோறுஞ்
சிங்கமாயிரம்வாய்திறந்தார்த்தெனச்சிரங்களாயிரந்திண்டோ
ளங்கமாயிரமாயிரமுடையவனுயிரமுகந்தோறுஞ்
சங்கமாயிரமாயிரமாயிரந்தடக்கையும்பிடித்தூத. (க0ச)

---

(கூக) அங்கதம்—வாகுவலையம்.

(க0க) பொலம்-பொன். இருநிதிக்கோமன் - சங்கநிதி, பதும நிதிகளுக்குத்தலைவனுகியகுபேரன். கொடுக்கு-ஓர் ஆபரணம். பதம் அளவு. இதனைச், "சொற்பதங்கடந்த தொல்லோன்காண்க" என் னுந் திருவாசகம், திருவண்டப்பகுதித் திருவகவலானுணர்க.

(க0உ) கும்போதரன் - கும்பம்-உதரன். கும்பம் - குடம் - உத ரன்-வயிற்றை யுடையவன்.

(க0ங) கொளை-இசைப்பாட்டு. கொம்பர்-இறுதிநிலைப்போலி.

(க0ச) சிரங்களாயிரந் திண்டோளங்க மாயிர மாயிரமுடைய வனென்றது-ஆயிரஞ்சிரமும், இரண்டாயிரங் கரமுமுடைய பானு கம்பனை.

போக்குமாயவன்புணர்ப்பையுமிருண்மலப் புணர்ப்பையுங்கடந்தெ
காக்குநாயகனருச்சனைவிடாதருட்சுதியடைந்துளவாணன் [ம்மைக்
றூக்குநேர்படவாயிரங்கரங்களாற்றொம்மெனமுகந்தோறுந்
தாக்கவேறுவேறெழுகுடமுழாவொலிதடங்கடலொலிசாய்ப்ப. ()

முனிவரஞ்சலிமுகிழ்த்தசெங்கையினர்மொழியுமாசியருள்ளங்
கனிவரும்பியவன்பினர்பரவவுட்கருத்தொடுவழிக்கொண்டோர்
துனிவருங்கணநாதர்கொட்டதிர்கரத்துணையினர்மழைபோலப்
பனிவருங்கணராடியதாளினர்பாடுநோவினரேத்த. (கoசு)

இந்திரன்மணிக்களாஞ்சிகொண் டொருமருங்கெய்த மெல்லி
லைவாசந், தந்திலங்குபொன்னடப்பைகொண்டீசனோர்கார்வரமரு
த்துக்கோ, வந்திரங்கொலியாலவட்டம்பணிமாறவாரழற்றூபந், தந்
துநேரநீர்க்கடவுள்பொற்கோடிகந்தாமரைக்கரந்தூக்க. (கoஎ)

நிருதியாடிகொண்டெதிர்வரவடிக்கடிநிதிமுகந்தளகைக்கோன்
கருதியாயிரஞ்சிதறிடத்தண்டிநன்காஞ்சுகர்வினைசெய்யப்
பருதியாயிரம்பணுடவியுரகரும்பன்மணிவிளக்கேந்தச்
சுருதிநாயகன்றிருவடிமுடியின்மேற்சுமந்துபின்புறஞ்செல்ல. ()

கங்கைகாவிரியாதியநவநதிக்கன்னியர்குளிர்தூங்கப் [கீற்றுத்
பொங்குவார்திரைக்கொழுந்தெனக்கவரிகள் புரட்டவெண்பிறைக்
துங்கவாளெயிற்றிருளுடற்குழிவிழிச்சுடரழற்செம்பங்கிச்
சங்கவார்குழைக்குறியகுண்டோதரன்றண்மதிக்குடைதாங்க. ()

(கoரு) முகந்தொறும் என்றது, ஆயிரங்கரங்களையுடைய வா
ணசூரன்முழக்குங்குடமுழாவும் ஆயிரமுகமுடையதாதலின். மாய
ம்வன்புணர்ப்பு எனச் சொல்வகைசெய்து, மாயையின் வலியதொ
டக்கெனப் பொருள்கொள்க.

(கoசு) பனிவருங்கணர் - ஆனந்தபாஷ்பஞ்சொரியுங்கண்களை
யுடையவர். கணர்-இடைக்குறை.

(கoஎ) ஈசன்-அஷ்டதிக்குப்பாலகர்களி லொருவனாகிய வீசா
னமூர்த்தி. மருத்துக்கோ-வாயுதேவன். அழல் - அக்கினிதேவன்.
நீர்க்கடவுள்-வருணதேவன்.

(கoஅ) தண்டி தண்டாயுதத்தையுடையயமன். காஞ்சுகர்-கஞ்
சுகம் பூண்டவர். கஞ்சுகம் - மெய்ச்சட்டை. சுருதிநாயகன் - வேத
புருஷன்.

கoகூ) செம்பங்கி-செவந்தமயிர். பிறைக்கீறு - இருபெயரொ
ட்டுப் பண்புத்தொகை.

இடிக்கும்வானுருமேறுயர்நெடுங்கொடி யெகினவெண்கொடி ஞால, முடிக்குமூழிநா ளுளர்கடுங்காலென மூச்செறிவிடநாகந் துடிக்கவாய்விடு மூவணவண்கொடிமுதற் சூழ்ந்துசேவகஞ்செய்யுங், கொடிக்குழாத்தினுட் கொடியரசாய்விடைக் கொடிபுடைபெயர்ந்தாட. (கக௦)

கண்ணுதற்பிரான் மருங்கிருகடவுளர் கப்புவிட்டெனத்தோன்றும், வண்ணமுத்தலைப்படை யெடுத்தொருகுடவயி றுடைப்பெரும்பூதம், பண்ணவப்பதினெண் படைக்கலமுந்தன்பக்கமாச்சேவிப்ப, வண்ணன்முச்சுடர் முளைத்தொருவரை நடந்தனையதோர்மருங்கெய்த. (ககக)

பந்தநான்மறைப்பொருட்டிரட்டெனவடபாடல்செய்தெதிர்புட்ப
தந்தனேத்தவானுயிருணவுருத்தெழுதல்விடத்தெதிர்நோக்கு
மந்தமாதியிலானிழல்வடிவமாயாடியினிழல்போல
வந்தசுந்தரன்சாத்துநீருடுதிருமாலையுமெடுத்தேந்த. (ககஉ)

அன்னத்தேரினனயன்வலப்பாங்கருமராவலிகவர்சேன, வன்னத்தேரினன்மாலிடப்பாங்கரு மலர்க்கரங்குவித்தேத்தப், பொன்னத்தேமலர்க்கொன்றையான் வெள்ளியம்பொருப்பொடுமெழீஇப்போந்தா, லென்னத்தேரணி மதுரைமாநகர்ப்புறத் தெய்துவானவ்வேலை. (ககரு)

மேற்படி - வேறு.

தேவர்கடேவன்வந்தான்செங்கண்மால்விடையான்வந்தான்
மூவர்கண்முதல்வன்வந்தான்முக்கணெம்பெருமான்வந்தான்
பூவலரயன்மால்காணுப்பூரணபுராணன்வந்தான்
யாவையும்படைப்பான்வந்தானென்றுபொற்சின்னமார்ப்ப. (ககச)

---

(ககக) கண்ணுதற்பிரான் மருங்கிருகடவுளர் கப்புவிட்டெண என்றது—சிவபிரானது வலப்பாலிலும், இடைப்பாலிலும், பிரமவிஷ்ணுக்கள் தோன்றினமையை. இதனைக் கூர்மபுராணம், அட்டமூர்த்தியியல்புரைத்தவத்தியாயத்தில் "மைந்தநின்னை என்வலப்புறத்தீன்றனனறிய" பைந்துழாய்முடிவண்ணனை எனதிடப்பாலிற், றந்தளித்தனனீவிர்வெங்கரிமுகன றழல்வேற் கந்தனேரெனக் கருணையினுச்சிமோந்துரைப்பான்" என்னுஞ்செய்யுளானுணர்க.

(ககஉ) பந்தம்-வேதவுறுப்புக்களிலொன்று. வான்—தேவர்களையுணர்த்தவி னிடவாகுபெயர்.

(ககரு) சேனம்-கருடன். வன்னம் – இதுவர்ன்னமென்பதன் றிரிபு. பொன்னத்தேமலர்-சிறந்தபொன்னிறம்வாய்ந்ததேன் பொதிந்தகொன்றைமலர். தேரணிமதுரை - அழகியநிலைத்தேரின் வரிசையையுடைய மதுரை.

(ககச) பூரணம்-நிறைவு. புராணன் - அனுதிமுத்தச் சித்துருவினன்.

பெண்ணினுக்கரசிவாயிற்பெருந்தகையமைச்சரேனை
மண்ணினுக்கரசர்சேனைமன்னவர்பிறருமீண்டிக்
கண்ணினுக்கினியான்றன்னைக்கண்டெதிர்கொண்டுதொழ
விண்ணினுக்கரசனூரின்வியத்தகுநகரிற்புக்கான். (ககரு)

முகிறவழ்புரிசைமூதூர்முகப்பெருவாயினீந்தி
யகிறவழ்மாடவீதிவலம்படவணைவானாக
நகிறழைபொலங்கொம்பன்னநன்னகர்மகளிரம்பொற்
றுகிறழைமருங்குலாயத்தொகைபுறந்தழுவச்சூழ்ந்தார். (ககசு)

தமிழ்முதற்பதினெண்டேத்துமகளிருந்தாருநாட்டி
னமிழ்தமன்னவருமுல்லையம்புயங்குமுதநீலங்
குமிழ்நறுங்கோங்குகாந்தள்கோழிணரசோகம்வாச
மமிழ்தரமலர்ந்தநந்தவனமெனவொருங்குமொய்த்தார். (ககஎ)

எம்மைநீர்விடுதிரேயோவென்பபோற்கலையுஞ்சங்கும்
விம்மநாண்மடனுமுங்கணெஞ்சுடைவெளியாறுக
வும்மைநீத்தோடுமெந்தோவுரைத்தனமுரைத்தோமென்று
தம்மைநூபுரங்கால்பற்றித்தடுப்பபோலார்ப்பச்சென்றார். (ககஅ)

கடியவிழ்கமலக்காடுபூத்ததோர்கருணைவாரி
யடிமுதன்முடியீறுகவலர்விழிக்குவளைசாத்திக்
கொடியசெம்பதுமப்போதுகுழன்மிசைச்சூடுவார்போற்
றொடியணிகரங்கள்கூப்பித்துதியெனவினையசொல்வார். (ககக)

நங்கையென்னோற்றாள்கொல்லோநம்பியைத்திளைத்தற்கென்பார்
மங்கையைமணப்பானென்னோவள்ளலுநோற்றானென்பா
ரங்கடிமதுரையென்னோவாற்றியதவந்தானென்பா
ரிங்கிவர்வதுவைகாண்பானென்னநாநோற்றோமென்பார். (க௨0)

(ககசு நகில்தழை பொலங்கொம்பன்ன மகளிர்என்றது, பேதையொழிந்த ஏனையறுவகைப் பருவப்பெண்களை. நகில் - முலை. இதுகடைக்குறை.

(ககஎ) தேயத்து என்பது—தேத்து என இடைகுறைந்துநின்றது.

(ககஅ) மேகலை என்பது—கலையென நின்றது முதற்குறை. விம்மல்-ஒலித்தல்.

(ககக) கருணைவாரி என்றது, சிவபெருமானை. தாமரைக்காடு என்றது, அவரது திருமுகமுதலிய அவயவங்களை.

தென்னவன்வருந்திமேனாட்செய்தவப்பேறுப்பெற்ற
தன்மகள்வதுவைகாணத்தவஞ்செய்தானிலனேயென்பார்
கன்னிதனழுக்கேற்றவழகனிக்காளையென்பார்
மன்னவனிவனேயன்றிவேறிலைமதுரைக்கென்பார். (கஉக)

நங்கைதன்னலனுக்கேற்பநம்பியைத்தந்ததிந்தத்
துங்கமாமதிநூல்வல்லசுமதிதன்சூழ்ச்சியென்பா
ரங்கவடவப்பேறென்பாரன்னைதன்கன்னிக்கன்றி
யிங்கிவன்மருகனாகவெத்தவமுடையாளென்பார். (கஉஉ)

பூந்துகினெகிழ்ப்பர்சூழ்வர்புணர்முலையலைப்பர்பூசு
சாந்தினையுகுப்பர்நாணந்தலைக்கொண்டார்போலச்சாய்வர்
கூந்தலையவிழ்ப்பர்வாரிக்கூட்டுவர்முடிப்பர்மேனி
மாந்தளிரெங்குமாரன்வாளிகள்புதையச்சோர்வார். (கஉ௩)

தண்ணளியொழுக்கஞ்சார்ந்தகுணத்தினைச்சார்ந்துமிந்த
வண்ணமென்மலர்களென்னேவாளியாய்த்தைத்தவென்பார்
கண்ணறுங்கூந்தல்வேய்ந்தகடியவிழ்நீலத்தாரும்
வெண்ணகையரும்புமுல்லைத்தாமமும்வெறுத்துவீழ்ப்பார். (கஉச)

விம்மிச்செம்மாந்தகொங்கைமின்னனார்சிலர்விற்காமன்
கைம்மிக்கணையேறுண்டுகலங்கியமயக்காற்றங்கண்
கைம்மிக்கநெடுங்கண்மூரல்வதனமுமவனம்பென்றே,
தம்மிற்றம்முகத்தைநோக்கார்தலையிறக்கிட்டுச்செல்வார். (கஉரு)

பற்றியபைம்பொன்மேனிப்பசப்பதுதேறாரண்ண
லொற்றமால்விடையின்மேற்கொண்டிருந்துநம்முளத்துமேவப்
பெற்றனமிதென்கொன்மாயம்பேதைமீர்பெருமானீண்ட
கற்றைவார்சடைப்பூங்கொன்றை யிதுவன்றோகாண்மினென்பார்.

திங்களென்றெழுந்துநம்மைச்சுடுவதென்செந்தீயென்பார்
புங்கவன்சென்னிமீதுங்கிடப்பதேபோலுமென்பா
ரங்கவற்கிந்தவெப்பமிலைகொலென்றயிர்ப்பாராற்றக்
கங்கைநீர்சுமந்தானென்பாரதனையுங்காண்மினென்பார். (கஉஎ)

---

(கஉச) நீலத்தாரும், முல்லைத்தாமமும்வெறுத்துவீழ்ப்பாரென்றது—நீலமும்முல்லையும் மன்மத பாணங்களுட்கொடியன வாதலின்.

(கஉசு) இது என்னுஞ் சுட்டுப்பெயர், மேனிப்பசப்பைச் சுட்டிநின்றது.

(கஉஎ) புங்கவன்-சிவபெருமான், அயிர்த்தல் - சந்தேகித்தல்.

கலையொடுநாணம்போக்கிக்கருத்தொடுவண்ணம்வேறு
யுலையொடுமெழுகிட்டென்னவுருகுகண்ணீரராகிக்
கொலையொடுபயில்வேற்கண்ணார்குரிசிறன்பவனிநோக்கி
யலையொடுமதியஞ்சூடுமையன்மெய்யன்பரொத்தார். (கஉஅ)

நட்டவர்க்கிடுக்கணெய்தநன்றிகொன்றவர்போற்கையில்
வட்டவாய்த்தொடியுஞ்சங்குமருங்குசூழ்கலையுநீங்க
விட்டபொற்சிலம்பிட்டாங்கேநன்றியினிகவார்போற்கா
லொட்டியேகிடப்பநின்றாருருகுத்தபூங்கொம்பரன்னார். (கஉகூ)

மின்னகுவேற்கணாளோர்விளங்கிழைவிடைமேலையன்
புன்னகைப்போதுநோக்கப்போதுமுப்புரமும்வேனின்
மன்னவன்புரமுஞ்சுட்டதல்லவோகெட்டேன்வாளா
வின்னவைசுடாதுபோமோவேழையேன்புரமுமென்றாள். (கங0)

உழைவிழியொருத்திதன்கணுருவெளியாகித்தோன்றுங்
குழகனையிரண்டுசெம்பொற்கொங்கையுமொன்றாய்வீங்கத்
தழுவுவாளூற்றங்காணுடடமுலையிரண்டேயாகி
யிழையிடைகிடக்கநீங்கியிருக்கைகண்டிடைபோலெய்த்தாள். ()

வாரிருங்கொங்கையாளோர்மாதராள்வானோருய்யக்
காரிருள்விடமுண்டன்றுகறுத்ததேயன்றுகொன்றைத்
தாரிருஞ்சடையார்கண்டந்தையன்மீர்தமதுநெஞ்சங்
காரிரும்பென்றேகாட்டக்குறியிட்டகறுப்பேயென்றாள். (கஙஉ)

பொன்னவிர்சடையான்முன்னேபோனதென்னெஞ்சுதூதா
யன்னதுதாழ்த்ததென்னென்றழுங்குவாளொருத்திகெட்டே
னென்னதுநெஞ்சம்போனதென்றனளொருத்திகேட்ட
மின்னனாள்வேற்கண்சேந்தாள்விளைத்தனளவளும்பூசல். (கஙங)

---

(கஉகூ) நட்டவர் - சிநேகர். இடுக்கண் - வறுமை. நன்றி-உதவி. தொடி-வட்டமாகிய வாயையுடையதோர் கையணி.

(கங0) நகைப்போது (பற்களாகிய) முல்லைமலர். நோக்கப்போது-கண்களாகியமலர். வேனின்மன்னவன்புரம் - வேனிற்பருவத்தலைவனாகிய மன்மதனது தேகம்-புரம்-தேகம்.

(கஙக) உழை - மான். குழகன் - அழகன். ஊற்றம் - பரிசம். இழை - நூலிழை.

(கஙங) தாழ்த்தது-தாமதித்தது. சேத்தல்-செவத்தல்.

செப்பிளங்கொங்கையாளோர்தெரிவைநீர்திருநோக்கெம்பால்
வைப்பதென்மதன்போலெம்மைச்சுடுவதேமதனுக்காவி
யப்பொழுதளித்தாற்போலெம்மாவியுமளித்தாலின்று
மெய்ப்புகழுமக்குண்டின்றேற்பெண்பழிவிளையுமென்றாள். (கருச)

கவனமால்விடையான்றன்னைக்கடைக்கணித்திலனென்றங்கோர்
சுவணவான்கொடியோரோவத்தொழில்வல்லான்குறுகநோக்கி
யிவனைநீயெழுதித்தந்தால்வேண்டுவவீவனென்று
ளவனையாரெழுதவல்லாரென்றனனுவிசோர்ந்தாள். (கருரு)

வலத்தயன்வரவுகாணுன்மாலிடங்காணுள்விண்ணோர்
குலத்தையுங்காணுண்மண்ணோர்குழாத்தையுங்காணுண்ஞானப்
புலத்தவர்போலக்கண்டபொருளெலாமழுமான்செங்கைத்
தலத்தவன்வடிவாக்கண்டாளொருதனித்தையன்மாது (கருசு)

முன்பெற்றங்காலிற்செல்லவண்ணலைமுன்போய்க்காண்பான்
பின்பற்றியாசைப்பாசம்பிணித்தெழவோடுவாளோர்
பொன்பெற்றமுலையாள்கொம்பருகுமலர்போலத்தாளின்
மின்பெற்றகாஞ்சிதட்பவிலங்கொடுநடப்பாளொத்தாள். (கருஎ)

விதுக்கலைமிலைந்துசெங்கண்விடையின்மேல்வருமானந்த
மதுக்கடறனைக்கண்வாயான்முகந்துண்டுமகளிரெல்லாம்
புதுக்கலைசரிவதோரார்புரிவளைகழல்வதோரார்
முதுக்குறையகல்வதோரார்மூழ்கினார்காமவெள்ளம். (கருஅ)

பைத்தழகெறிக்குமாடப்பந்திமேனின்றுகாண்பார்
கைத்தலங்கூப்பியாங்கேகண்களுநோக்கியாங்கே
சித்தமுங்குடிபோய்ச்செல்லுஞ்செயலுமாண்டங்கண்மாண
வைத்தமண்பாவையோடுவடிவுவேறற்றுநின்றார். (கருகூ)

---

(கருரு) கவனம்-வேகம். கடைக்கணித்தல் - சிறக்கணித்தல். ஓவத்தொழில்-சித்திரத்தொழில்.

(கருசு) ஞானப்புலத்தவர்-மெய்யுணர்ச்சி யுடையவர். தையல் மாது-அழகிற்சிறந்தபெண். தையல்-அழகு.

(கருஎ) பெற்றம்-இடபம். கால்-வாயு. பாசம் - கயிறு. காஞ்சி-இருகோவைமணி.

(கருஅ) விதுக்கலை-சந்திரகலை. விது-சந்திரன். புரி-விருப்பம்.

(கருகூ) பைத்தல் - பரத்தல். மண் பாவையென்றது - சுதையாற்செய்த பாவையை. இதனை "மண்மாண்புனைபாவையற்று" என்னும் திருக்குறளுக்குப் பரிமேலழகர்செய்த வுரையானுமுணர்க.

அன்பட்டபுரமுங்காமனுகமுஞ்சுட்டதீயிம்
மின்பட்டசடிலத்தண்ணன்மெய்யென்பதறியார்நோக்கிப்
பொன்பட்டகலனுமெய்யும்பொரிகின்றரவனைப்புல்லி
னென்பட்டுவிடுமோவையவேழையராவியம்மா. (கசo)

கொடிகள்பூத்துதிர்ந்தபோதிற்கொம்பனூர்கலையுஞ்சங்குந்
தொடிகளுஞ்சுண்ணத்தூளுஞ்சுரர்பொழிமலருநந்தி
யடிகள்கைப்பிரம்புதாக்கச்சிந்தியவண்டவாணர்
முடிகளின்மணியுந்தாருங்குப்பையாய்மொய்த்தவீதி. (கசக)

துன்னியதருப்பைகூடவரசிலைதுழாவித்தோய்த்துப்
பொன்னியல்கலசநன்னீர்பூசுரர்வீசவன்னூர்
பன்னியர்வட்டமாகவானவிற்பதித்தாலென்ன
மின்னியமணிசெய்நீராசனக்கலம்விதியாற்சுற்ற. (கசஉ)

கொடிமுரசாடிசெம்பொற்குடமணிநெய்யிற்பூத்த
கடிமலரணையதீபமங்குசங்கவரியென்னும்
படிவமங்கலங்களெட்டும்பரித்துநேர்மதுமக்கொம்பர்
வடிவினூர்வந்துகாட்டமாளிகைமருங்கிற்செல்வான். (கசங)

செப்புரங்கவர்ந்தகொங்கையரம்பையர்தீபங்காட்டுந்
துப்புரவன்பினூர்க்குத்தூயமெய்ஞ்ஞானநல்கு
முப்புரங்கடந்தான்றன்னைமும்முறையியங்களேங்கக்
கப்புரவிளக்கந்தாங்கிவலஞ்செயக்கருணைபூத்தான். (கசச)

கோயின்முன்குறுகலோடுமைம்புலக்குறும்புதேய்த்த
தூயநால்வேதச்செல்வர்சுவத்திகளோதநந்தி
சேயிருந்தடக்கைபற்றிச்செங்கணேறிழிந்துநேர்ந்து
மாயனுமயனுநீட்டுமலர்க்கரமிருபாற்பற்றி. (கசரு)

---

(கசo) அன்பு அட்டபுரம் - சிவனேசமொழிந்த திரிபுரம். ஐய இடைச்சொல். இங்கு இரக்கக் குறிப்பின்மேனின்றது.

(கசக) போதில், என்பதில் இல்லுருபு ஐந்தாம் வேற்றுமை யொப்புப்பொருளது. தொடி-வளையலுள்ஒருவகைக்கையணி.தொடி-வளைவு-இதுபண்பாகு பெயராய் அணியின்மேல் நின்றது.

(கசங) பதுமம்-தாமரை.

(கசச) துப்புரவு-உறுதி. கப்புரவிளக்கம் - கர்ப்பூரதாபம் - இது இடக்குறை.

(கசரு) சுவஸ்தி என்னும் வடமொழி சுவத்தி எனத் தற்பவமாயிற்று. சுவஸ்தியாவது-இருவர். ஒருவர்பின்னொருவராய்வேதத்தை மங்களார்த்தமாக மாறியோதுதல்.

எதிர்ந்தருமறைகள்காணுதிளைத்தடிசுமந்துகாணு
முதிர்ந்தவன்புருவமானபாதுகைமுடிமேற்சாத்தி
பதிந்தவர்தலைமேற்கொண்டுபோசவல்வினைதீர்த்துள்ளம்
பொதிந்துபேரின்பநல்கும்பொன்னடிப்போதுசாத்தி. (க௬௬)

பையரவுரியினன்னநடைப்படாம்பரப்பிப்பெய்த
கொய்யவிழ்போதுநீத்தங்குரைகழலடியனைப்பத்
தெய்வமந்தாரமாரிதிருமுடிநனைப்பத்தென்ன
ருய்யவந்தருளுமையனுள்ளெழுந்தருளுமெல்லை. (க௬௭)

மங்கலமகளிரோடுங்காஞ்சனமாலைவந்து
கங்கையின்முகந்தசெம்பொற்கரகநீரனையார்வாக்கத்
திங்களங்கண்ணிவேய்ந்தசிவபரஞ்சோதிபாத
பங்கயம்விளக்கியந்நீர்தலைபெய்துபருகினின்றாள். (க௬௮)

பாதநாண்மலர்மேலீரம்புலரவெண்பட்டாணிவிச்
சீதமென்பனிநீராட்டிமான்மதச்சேறுபூசித்
தாதவிழ்புதுமாந்தாரப்பொன்மலர்சாத்திச்சென்னி
மீதிருகரங்கள்கூப்பிவேறுநின்றிதனைச்சொன்னாள். (க௬௯)

அருமையாலடியேன்பெற்றவணங்கினைவதுவைசெய்தித்
திருநகர்த்திருவுங்கன்னித்தேயமுங்கைக்கொண்டாள்கென்
றுரைசெய்தாளதற்குநேர்வாருண்ணகையுடையராகி
மருகனரியங்களார்ப்பவதுவைமண்டபத்தைச்சேர்ந்தார். (க௭0)

அருத்தநான்மறைகளார்ப்பவரிமணித்தவிசிலேறி
நிருத்தனுங்கிருந்துசூழநின்றமாலயனையேனை
யுருத்திராதியரைப்பின்னுமொழிந்தவானவரைத்தத்தந்
திருத்தகுதவிசின்மேவத்திருக்கடைநாட்டம்வைத்தான். (க௭க)

---

(க௬௭) நடைப்படாம்-நடைப்பாவாடை. நின்றாள் - முற்றெச்சம்.

(க௭0) வதுவை-திருக்கலியாணம். திரு - செல்வம். கன்னித்தேயம்-பாண்டிநாடு. மருகனர் என்றது - மருகன் என்னு மொருமைப்பெயரோடு, ஆர் என்னு மிடைச்சொல்வந்து, ஒருமைகெடாது பலர்பால் வினைமுற்றைக்கொண்டு முடிந்தமையின் பால்வழுவமைதி. இதனை "இயற்பெயர் முன்னராரைக்கிளவி, பலர்க்குரியெழுத்தின் வினையொடுமுடிமே" எனவரூந் தொல்காப்பியச் சூத்திரத்தானுணர்க.

விண்டலவானேரேனேர்மிடைதலான்ஞாலச்செல்வி
பண்டையளன்றியின்றுபரித்தனள்பௌவமேழு
முண்டவன்றன்னைத்தானின்றுத்தரத்திருத்தினுனே
வண்டர்நாயகன்றனுணைவலியினேவறியேமம்மா. (கருஉ)

மாமணித்தவிசில்வைகிமணவினைக்கடுத்தவோரை
தாம்வருமளவும்வானத்தமனியமலர்க்கொம்பன்னுர்
காமருநடனநோக்கிக்கருணைசெய்திருந்தானிப்பாற்
கோமகள்வதுவைக்கோலம்புனைதிறங்கூறலுற்றேன். (கருஙு)

மாசறுத்தெமையானந்தவாரிநீராட்டிப்பண்டைத்
தேசுருவிளக்கவல்லசிவபரம்பரையைச்செம்பொ
ஞசனத்திருத்திநானமணிந்துகுங்குமச்சேறப்பி
வாசநீராட்டினுர்கண்மதிமுகக்கொம்பரன்னுர். (கருச)

முரசொடுசெங்கமேங்கமூழ்கிநுண்டேசுசாத்தி
யரசியலறத்திற்கேற்பவந்தணர்க்குரியதானம்
விரைசெறிதளிர்க்கையாரவேண்டுவவெறுப்பத்தந்து
திரைசெய்நீரமுதமன்னுடிருமணக்கோலங்கொள்வாள். (கருரு)

செம்மலர்த்திருவும்வெள்ளைச்செழுமலர்த்திருவுந்தங்கள்
கைம்மலர்த்தவப்பேறின்றுகாட்டுவார்போலநங்கை
யம்மலரனிச்சமஞ்சுமடியிற்செம்பஞ்சுதீட்டி
மைம்மலர்க்குழன்மேல்வாசக்காசறைவழியப்பெய்து. (கருகா)

---

(கருஉ) ஞாலச்செல்வி பண்டையளன்றி யின்று பரித்தனள் என்றது, பர்வதராஜபுத்திரியார் திருமணத்து வடபாலுயர்ந்துதெ ன்பால்தாழ்ந்தமைபோல, ஈண்டுத் தாழாது சமமாய்ப்பரித்து நிற் றலை. பௌவமேழு முண்டவன்-அகத்தியன் - பௌவம்-கடல். உத் தரம்-வடதிசை.

(கருச) மாசு - ஆணவாதி குற்றங்கள். ஆனந்தவாரிநீராட்டி எ ன்றது—வாதனைபற்றியெழும் மலபோதநீக்கத்தில் அறிவானந்தத் துமூழ்கச்செய்தலை. பண்டைத்தேசுருவிளக்கவல்ல என்றது—சி வத்தோடுதொதான்மியப்படுத்தி யச்சிவமேயாய் நிற்கச்செய்தலை.

(கருரு) அரசியலறம்-க்ஷத்திரியதருமம்.

(கருகா) செம்மலர்த்திரு-இலக்குமி, வெள்ளைச் செழுமலர்த்தி ரு-சரஸ்வதி. திரு-கண்டோரால் விரும்பப்படுந்தன்மை. காசறை- மயிர்ச்சாந்து.

கொங்கையின்முகட்டிற்சாந்தங்குளிர்பனிநீர்தோய்த்தட்டிப்
பங்கயமலர்மேலன்னம்பவளச்செவ்வாய்விட்டார்ப்பத்
தங்கியவென்னவாரநூபுரந்ததும்பச்செங்கே
ழுங்கதிர்ப்பாதசாலங்கிண்கிணியலம்பப்பெய்து. (கருள)

எண்ணிரண்டிரட்டிகோத்தவிரிசிகையிருபத்தொன்றிற்
பண்ணியகலாபமீரேழ்பருமநாலிரண்டிற்செய்த
வண்ணமேகலையிரண்டிற்காஞ்சியிவ்வகையோரைந்தும்
புண்ணியக்கொடிவண்டார்ப்பப்பூத்தபோற்புலம்பப்பூட்டி. (கருஅ)

பொன்மணிவண்டுவீழ்ந்தகாந்தளம்போதுபோல
மின்மணியாழிகோத்துமெல்விரற்செங்கைக்கேற்ப
வன்மணிவைரயாப்புக்கடகமுந்தொடியும்வானத்
தென்மணிக்கரங்கள்கூப்பவிருதடந்தோளிலேற்றி. (கருகூ)

மரகதமாலையம்பொன்மாலைவித்துருமமாலை
நிரைபடவானவில்லினிழல்படவாரத்தாமம்
விரைபடுகளபச்சேறுமெழுகியபுளகக்கொங்கை
வரைபடுமெருவியன்றிவனப்புநீர்நுரையுமான. (கசுo)

உருவமுத்துவாயம்முத்துடுத்தபல்காசுகோளாய்
மருவவக்காசுசூழ்ந்தமாமணிகதிராய்க்கங்குல்
வெருவவிட்டிமைக்குமாரமேருவின்புறஞ்சூழ்ந்தாடுந்
துருவசக்கரம்போற்கொங்கைதுயல்வரவிளங்கச்சூட்டி. (கசுக)

---

(கருள) முகடு-உச்சி. அட்டி-திமிர்ந்து. பாதசாலம் - பரியகம். இதனை, "பொன்னிதழ்பொதிந்த பன்னிறமணிவடம், பின்னிய தொடரிற் பெருவிரன்மோதிரம், தன்னொடுதொடக்கித் தமனிய ச்சிலம்பின், புறவாய்ச்சூழ்ந்து புணரவைப்பதுவே" என்னுஞ் சூத்திரத்தானுணர்க.

(கருஅ) ஆர்த்தல், புலம்பல், இவ்விரண்டும் ஒலித்தலென்னு ம்பொருளது.

(கருகூ) யாப்பு—தலைப்பூட்டு. எல்-சூரியன்.

(கசுo) வித்துருமம்-பவளம். ஆரத்தாமம்-முத்துமாலை.

(கசுக) உடு — நக்ஷத்திரம். காசு - இரத்தினம். கதிர்-சூரியன். நிரைபட, மான, துயல்வர, என்னும் வேறுபலவடுக்கியவினையெச்சங்கள், சூட்டி என்னும் வினை எச்சத்தின் முதனிலையைத் தனித்தனிகொண்டன.



கொடிக்கயலினமாய்நின்றகோட்சுறுவேறும்வீறுந்
தொடிக்கலைமதியுந்தங்கோன்றொல்குலவிளக்காய்த்தோன்றும்
பிடிக்கிருகாதினூடுமெந்தணம்பேசுமாபோல்
வடிக்குழைமகரத்தோடுபெரிதிவாண் மழுங்கச்சேர்த்து. (கசுஉ)

மழைக்குமாமதிக்குநாப்பண்வானவிற்கிடந்தாலொப்ப
விழைக்குமாமணிசூழ்பட்டமிலம்பகமிலங்கப்பெய்து
தழைக்குமாமுகிலைமைந்தன்றளையிடல்காட்டுமாபோற்
குழைக்குநீர்த்தகரஞாழற்கோதைமேற்கோதையாத்து. (கசுங)

கற்பகங்கொடுத்தவிந்தக்காமருகலன்களெல்லாம்
பொற்பமெய்ப்படுத்துமுக்கட்புனிதனுக்கீறிலாத
வற்புதமகிழ்ச்சிதோன்றவழகுசெய்தமையந்தோன்றச்
சொற்கலையாளும்பூவின்கிழத்தியுந்தொழுதுநோக்கி. (கசுச)

சுந்தரவல்லிதன்னைச்சோபனமென்றுவாழ்த்தி
வந்திருகையுந்தங்கண்மாந்தளிர்க்கைகணீட்டக்
கொந்தவிழ்கோதைமாதுமறமெலாங்குடிகொண்டேறு
மந்தளிர்ச்செங்கைபற்றுவெழுந்தணண்மறைகளார்ப்ப. (கசுரு)

கலிவிருத்தம்.

அறைந்தனதூரியமார்த்தனசங்க
நிறைந்தனவானவர்நீண்மலர்மாரி
யெறிந்தனசாமரையேந்திழையார்வாய்ச்
சிறந்தனமங்கலவாழ்த்தெழுசெல்வம். (கசுசு)

அடுத்தனள்சுந்தரியம்பொனடைப்பை
யெடுத்தனளாடிதிலோத்தமையேந்திப்
பிடித்தனள்விந்தைபிடித்தனள்பொற்கோ
லுடுத்தநெருக்கையொதுக்கிநடந்தாள். (கசுஎ)

---

(கசுஉ) கோள் - வலிமை. சுறுஏறு - ஆண்மகரம், தொடி மதி - வட்டமாகிய சந்திரன் - தொடி - வட்டம். மந்தணம். இரகசியம். மகரக்குழை - மகரகுண்டலம்.

(கசுங) இலம்பகம் - நுதலணிமாலை. மைந்தன் என்றது- ஈண்டு உக்கிரகுமார பாண்டியனை. தளை - விலங்கு. ஞாழல்- மயிர்ச்சாந்து. கோதை - கூந்தல், மாலை.

(கசுரு) இருகை - இருபக்கம் - கை - பக்கம்.

(கசுசு) தூரியம் - மணப்பறை.

(கசுஎ) சுந்தரி - இந்திராணி, விந்தை - வீரலட்சுமி, பொன் கோல் - பொற்கட்டமைந்தபிரம்பு.

கட்டவிழ்கோதையரம்பைகளாஞ்சி
தொட்டனளூர்ப்பசிதூமணியால
வட்டமசைத்தனள்வன்னமணிக்கா
சிட்டிழைகோடிகமேனகைகொண்டாள். (கசூஅ)

கொடிகளெனக்குளிர்போதொடுசிந்தும்
வடிபனிநீரினர்வீசுபொன்வண்ணப்
பொடியினரேந்தியபூம்புகைதீபத்
தொடியணிகையினர்தோகையர்சூழ்ந்தார். (கசூகூ)

தோடவிழோதியர்சோபனகீதம்
பாடவிரைப்பனிநீரொடுசாந்த
மேடவிழ்மென்மலரிட்டபடத்திற்
பாடகமெல்லடியைப்பையவையா. (கஎ0)

செம்மலராளொடுநாமகடேவி
கைம்மலர்பற்றினகல்வியொடாக்க
மிம்மையிலேபெறுவார்க்கிதுபோதென்
றம்மணிநூபுரமார்ப்பநடந்தாள். (கஎக)

ஒல்கினண்மெல்லவொதுங்கினளன்பு
பில்கியிருந்தபிரானருகெய்தி
மெல்கியெருத்தமிசைத்தலைதூக்கிப்
புல்கியகாஞ்சிபுலம்பவிருந்தாள். (கஎஉ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அற்பகவிமைக்குஞ்செம்பொனரதனபீடத்தும்பர்ப்
பொற்பகலாதகாட்சிப்புனிதனோடிருந்தநங்கை
யெற்பகல்வலங்கொண்டேகுமெரிகதிர்வரையினுச்சிக்
கற்பகமருங்கிற்பூத்தகாமருவல்லியொத்தாள். (கஎங)

(கசூஅ) காளாஞ்சி என்றது - களாஞ்சிஎன குறுக்கல்பெற்றது. காளாஞ்சி - தம்பலப்படிகம். கோடிகம் - பூந்தட்டு. ஊர்ப்பசி - ஊர்வசி என்னும் வடசொற்றிரிபு; ஊர்வசி (பிரமன்) தொடையிற்பிறந்தவள்.

(கஎ0) தோடவிழ் ஓதியர் என்றது, இதழவிழ்ந்தமலர்களையணிந்த கூந்தலையுடைய பாடன்மகளிரை. ஏடவிழ் மென்மலரிட்டபடம் என்றது - இதழவிழ்ந்த மெல்லியமலர்பரப்பிய நடைப்பாவாடையை. பைய - மெல்ல.

(கஎக) தேவி - தடாதகைப்பிராட்டியார். ஆக்கம் - செல்வம்.

(கஎஉ) மெல்கி - மென்மைக்குணநிரம்பி. எருத்தம்-பிடரி.

(கஎங) அல் - இருள். வரை - மகமேரு.

பண்ணுமின்னிசையுநீருந்தண்மையும்பாலும்பாலி
னண்ணுமின்சுவையும்பூவுநாற்றமுமணியுமங்கேழ்
வண்ணமும்வேறுவேறுவடிவுகொண்டிருந்தாலொத்த
தண்ணலுமுலகமீன்றவம்மையுமிருந்ததம்மா. (களச)

விண்ணுளார்திசையினுள்ளார்வேறுளார்பிலத்தினுள்ளார்
மண்ணுளார்பிறரும்வேள்விமண்டபத்தடங்கியென்றும்
பண்ணுளாரோசைபோலப்பரந்தெங்குநிறைந்தமூன்று
கண்ணுளாரடியினீழல்கலந்துளார்தம்மையொத்தார். (களரு)

ஆயபோதாழியங்கையண்ணல்பொற்கரகநீராற்
சேயவான்சோதியாடற்சேவடிவிளக்கிச்சாந்தந்
தூயபோதவிழ்சாத்தித்தூபமுஞ்சுடருங்கோட்டி
நேயமோடருச்சித்தையனிறையருள்பெற்றுநின்றான். (களசு)

விண்டலத்தவருளாதிவேதியன்பாததீர்த்த
முண்டகத்தவனுமாலுமுனிவரும்புரந்தராதி
யண்டருநந்திதேவுமகணத்தவருமேனைத்
தொண்டரும்புறம்புமுள்ளுநனைத்தனர்சுத்திசெய்தார். (களஎ)

அத்தலைநின்றமாயோனுதிசெங்கரத்துநங்கை
கைத்தலங்கமலப்போதுபூத்ததோர்காந்தளொப்ப
வைத்தருமனுவாயோதக்கரகநீர்மாரிபெய்தான்
றொத்தலர்கண்ணிவிண்ணோர்தொழுதுபூமாரிபெய்தார். (களஅ)

ஆடினாரரம்பைமாதர்விஞ்சையரமுதகீதம்
பாடினாரவென்றார்த்துப்பரவினார்முனிவர்வானோர்
மூடினார்புளகப்போர்வைகணத்தவர்முடிமேற்செங்கை
சூடினார்பலருமன்றற்றொடுகடலின்பத்தாழ்ந்தார். (களகூ)

---

(களரு) அடியினீழல் கலந்துளார் தம்மையொத்தார் என்றது, தேவர்முதல் நிலவுலகிலுள்ளோர்காறும் பேதமின்றி ஒருசேரவிருத்தலை.

(களசு) ஆழி அம்கை அண்ணல் - திருமால் - ஆடல்சேவடி- நடனம்புரியுஞ் செவந்ததிருவடி. கோட்டி - சுற்றி.

(களஎ) ஆதிவேதியன் - சிவபெருமான்.

(களஅ) ஆதி - சிவபெருமான். கரகநீர் மாரிபெய்தான்-என்பதற்கு, கரகத்திலுள்ள நீரைவார்த்தா னென்பதுபொருள்.

(களகூ) தொடுகடல் (சகரர்) தோண்டிய கடல்.

புத்தனுரெறிந்தகல்லும்போதெனமிலைந்தவேத
வித்தனுரடிக்கீழ்வீழவிண்ணவர்முனிவரேனோர்
சுத்தநாவாசிகூறக்குங்குமத்தோயந்தோய்ந்த
முத்தவாலரிசிவீசிமூழ்கினார்போகவெள்ளம். (கஅ0)

அம்மையோடப்பனென்னவலர்மணம்போலநீங்கார்
தம்மருள்விளையாட்டாலேயாற்றநாட்டமியர்போல
நம்மனோர்காணத்தோன்றிநன்மணம்புணரனால
மும்மையுமுய்ந்தவென்னுத்தத்தமின்மொழியலுற்றார். (கஅக)

காமருசுரபித்தீம்பால்கற்பகக்கனிநெய்கன்ன
ஞமருசுவையவின்னநறுமதுபருக்கஞ்செம்பொ
ஞமணிவட்டத்திண்காற்பாசனத்தமையப்பெய்து
தேமருகொன்றையானைத்திருக்கைதொட்டருள்கவென்றார். ()

அங்கைவைத்தமுதுசெய்தாங்ககமகிழ்ந்தட்டமூர்த்தி
கொங்கவிழ்குமுதச்செவ்வாய்கோட்டிவாண்முறுவல்பூத்தான்
புங்கவர்முனிவர்கற்பின்மகளிரும்போதின்மேய
மங்கையரிருவரோமெங்கலம்பாடலுற்றார். (கஅங)

மாக்கடிமுளரிவாணன்மைந்தரோடொருங்குவைகி
நாக்களினடுவாரத்துடவையானறுநெயார்த்தி
வாக்கிடவாரமாந்திவலஞ்சுழித்தகடுவீங்கித்
தேக்கிடுமொலியினார்த்துநிமிர்ந்ததுதெய்வச்செந்தீ. (கஅச)

---

(கஅ0) புத்தனார் - சாக்கியநாயனார். குங்குமத்தோயந்தோய்ந்த முத்தவாலரிசி என்றது - மந்திராட்சதையை

(கஅஉ) கற்பகக்கனி - கற்பகவிருட்சந்தந்தவாழைக்கனி. கன்னல்-சருக்கரை. பாசனம்-கலம். காமரு, தேமரு என்பவற்றினிறுதியுகரந்தொகுத்தல். திருக்கைதொட்டருள்க என்றது, சைவபரிபாஷை.

(கஅங) அட்டமூர்த்திஎன்றது, நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், சூரியன், சந்திரன்என்னு மிவ்வெட்டுருவாய் நிற்குஞ் சகளவடிவினை. புங்கவர் - தவசிரேஷ்டர். மகளிர்-சத்தமாதர்கள்-போதின்மேய மங்கையரிருவர்என்றது - பூமகள், நாமகளை.

(கஅச) முளரிவாணன் - தாமரைமலரில் வசிக்கும் பிரமன். மைந்தரென்றது, சனகனுதிநால்வரை. நாக்களி னடுவார என்றது - காளி, கராளி, மனோஜவை, சுலோகிதை, சுதூம்பரவருணை, ஸ்புலிங்கினி, விசுவரூபி என்னும் அக்கினிதேவனுடைய எழுநாக்களில் நடுவாகிய சுலோகிதை என்னும் நாவினை. இதன்விரிவை முண்டகோபநிஷத்திற்காண்க. துடவை-சிருக்குசிரவம். ஆர்த்தி-நிரப்பி. அகடு - வயிறு.

சுற்றுநான்மறைகளார்ப்பத்தூரியஞ்சங்கமேங்கக்
கற்றநான்முகத்தோன்வேள்விச்சடங்குநூல்கரைந்தவாற்றுன்
முற்றமங்கலநாண்சாத்திமுழுதுலகீன்றாள்செங்கை
பற்றினன்பற்றிலார்க்கேவீடருள்பரமயோகி. (கஅரு)

இணரெரித்தேவுந்தானேயெரிவளர்ப்பவனுந்தானே
யுணவுகொள்பவனுந்தானேயாகியவொருவன்வையம்
புணர்வுறுபோகமூழ்கப்புருடனும்பெண்ணுமாகி
மணவினைமுடித்தானன்னான்புணர்ப்பையார்மதிக்கவல்லார். ()

பின்புதன்பன்னியோடுபிறைமுடிப்பெருமான்கையி
னன்பொரிவாங்கிச்செந்தீநாமடுத்தெனைத்துமான
தன்படிவுணர்ந்தவேதமுனிவர்க்குத்தக்கதான
மின்பகந்ததும்பநல்கியெரிவலமுறையால்வந்து. (கஅஎ)

மங்கலம்புனைந்தசெம்பொனம்மிமேன்மணுட்டிபாத
பங்கயமலரைக்கையாற்பரிபுரஞ்சிலம்பப்பற்றிப்
புங்கவன்மனுவாலேற்றிப்புண்ணியவசிட்டன்றேவி
யெங்கெனச்செங்கைகூப்பியெதிர்வரவருட்கண்சாத்தி. (கஅஅ)

விதிவழிவழாதுவேள்விவினையெலாநிரம்பவிங்ங
னதிர்கடலுலகந்தேறவாற்றிநான்மறைகளார்ப்பக்
கதிர்மணிநகையார்வாழ்த்தக்காமனைக்காய்ந்தநம்பி
மதிநுதன்மங்கையோடுமணவறைதன்னிற்புக்கான். (கஅகூ)

மனிதருமிமையாதையன்மங்கலவனப்புநோக்கிப்
புனிதவானவரையொத்தாரவர்க்கதுபுகழோவெந்தை
கனிதருகருணைநாட்டம்பெற்றவர்கடவுளோராற்
பணிதருமலரிட்டேத்திவழிபடற்பாலரன்றே. (ககூ0)

மானிடரிமையோரென்னும்வரம்பிலராகிவேள்வி
தானிடரகலநோக்கித்தலைத்தலைமயங்கிநின்றார்
கானிடநடனஞ்செய்யுங்கண்ணுதலருட்கணோக்கா
லூனிடரகலுநாளிலுயர்ந்தவரிழிந்தோருண்டோ. (ககூக)

(கஅஎ) படிவம் - ஈறுதொக்கு நின்றது.

(கஅஅ) வசிட்டன்தேவி - அருந்ததி.

(கஅகூ) வேள்விவினை - திருக்கலியாணச்சடங்கு. இங்ஙனம் என்பது, ஈறுதொக்கு, இங்ஙன் எனநின்றது.

(ககூக) இடர்-பிறவித்துன்பம். தலைத்தலை-இடங்கடோறும். மயங்கி - கலந்து. ஊனிடரகலுநாள் - பிறப்பொழியும்நாள். கானிடம் - மயானம்.

மணவறைத்தவிசினீங்கிமன்றன்மண்டபத்திற்போந்து
கணமணிச்சேக்கைமேவிக்கருநெடுங்கண்ணன்வாணி
துணைவனேமுதல்வானோர்க்குஞ்சூழ்கணத்தொகைக்குமென்றுந்
தணவறுசெல்வந்தந்தோன்சாறுசால்சிறப்புநல்கி. (கககூஉ)

எட்டுவாய்முளரியான்மாலேனைவானவருந்தத்த
நாட்டுவாழ்பதியிற்செல்லநல்விடைகொடுத்துவேந்தர்க்
காட்டுவானுடிக்காட்டுந்தன்மைபோலரசுசெய்து
காட்டுவானாகியையன்றிருவுளக்கருணைபூத்தான். (கககூ௩)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அதிர்விடைக்கொடியங்கயற்கொடியாகவராக்கலன்பொற்கலனாகப்
பொதியவிழ்கடுக்கைவேம்பலராகப்புலியதள்பொலந்துகிலாக
மதிமுடிவைரமணிமுடியாகமறைகிடந்தலம்புமாமதுரைப்
பதியுறைசோமசுந்தரக்கடவுள்பாண்டியனாகிவீற்றிருந்தான். (கககூ௪)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

விண்டவழ்மதியஞ்சூடுஞ்சுந்தரவிடங்கப்புத்தேள்
கொண்டதோர்வடிவுக்கேற்பக்குருதிகொப்புளிக்குஞ்சூலத்
திண்டிறற்சங்குகன்னன்முதற்கணத்தேவர்தாமும்
பண்டையவடிவுமாறிப்பார்த்திபன்பணியினின்றார். (கககூ௫)

தென்னவன்வடிவங்கொண்டசிவபரனுலகங்காக்கு
மன்னவர்சிவனைப்பூசைசெய்வதுமறையாறென்று
சொன்னதுமன்னரெல்லாந்துணிவதுபொருட்டுத்தானு
மந்நகர்நடுவூரென்றோரணிநகர்சிறப்பக்கண்டான். (கககூ௬)

(கககூஉ) தணவு - நீக்கம். தவிசு - ஆசனம். சேக்கை—சிங்காதனம். சாறு - (விவாக) மகோற்சவம்.

(கககூ௩) ஆட்டுவானுடிக்காட்டுந் தன்மைபோலென்றது, வேத முதலிய நூல்களைத் தாம் வகுத்திருப்பினும், அவற்றின்வழி ஆன்மாக்கள் நடக்க வியலாதாதலால் தாமேவந்தருளி அரசியல்செலுத்திக் காட்டினாரென்பதை.

(கககூ௪) பொதி - அரும்பு.

(கககூ௫) விடங்கம் - அழகு.

(கககூ௬) மறை ஆறு - வேதநெறி.

மெய்ம்மைநூல்வழியேகோயில்விதித்தருட்குறிநிறீஇப்பே
ரிம்மையேநன்மைநல்குமிறையெனநிறுவிப்பூசை
செம்மையாற்செய்துநீபவனத்துறைசிவனைக்கால
மும்மையுந்தொழுதுவையமுழுவதுங்கோனடத்தும். (ககஎ)

பூவருமயன்மாலாதிப்புனிதருமுனிவரேனோர்
யாவருந்தனையேபூசித்திகபரமடையநின்ற
மூவருண்மேலாமுக்கண்மூர்த்தியேபூசைசெய்த
தாவரவிலிங்கமேன்மைத்தகுதியாரளக்கவல்லார். (ககஅ)

மேற்படி - வேறு.

மனித்தருக்கரசாகித் தெவ்வேந்தர்க்குமடங்கலாய் மடநல்லார்க்.கினித்தவைங்கணைக் காளையாய்நிலமகட் கிணர்த்துழாயணிமாலா, யனித்தநித்த மோர்ந்திகபரத்தாசை நீத்தகந்தெளிந்தவர்க்கொன்றாய்த், தனித்தமெய்யறிவானந்தமாம் பரதத்துவமாய்நின்றான்.()

திருமணப்படலம் முற்றிற்று.

ஆ படலம் கச - க்கு - திருவிருத்தம் - எகூஎ.

---

(ககஎ) நூல் - சிற்பசாஸ்திரம். நன்மை நல்குமிறை என்பது- சௌந்தரபாண்டியனாற் புதுக்கியநடுவூர்சிவதளியிலமைத்தசிவலிங்கத்தின் திருநாமம். இதற்கு வடமொழிமகாபீஷ்டப்பிரதேஸ்வரர், இதனுண்மை, "முலைமூன்றணைந்த சிலைநுதற்றிருவினை, அருமறைவிதிக்கத்திருமணம் புணர்ந்து, மதிக்குலம்வாய்த்த மன்னவனாகி, மேதினிபுரக்கும் விதியுடைநன்னாள், நடுவூர்நகர்செய் தடுபவந்துடைக்கும்,அருட்குறிநிறுவியருச்சனைசெய்த,தேவர்நாயகன்" எனக்கல்லாடத்தில் வருதல் காண்க. செம்மை-தானியாகுபெயர் முறைமைஎன்பது பொருள். மும்மை - மூன்று.

(ககஅ) இகம் - இவ்வுலகம். பரம் - முத்தியுலகம்.

(ககக) ஐங்கணைக்காளைஎன்றது - தாமரை, மா, அசோகு, முல்லை, நீலம்என்னுமைந்துபுஷ்பங்களையே பாணமாகவுடையமன்மதனை. இணர்-பூங்கொத்து. அநித்தம் - நிலையாமை. நித்தம் - நிலையுடைமை. ஒன்றாய் - அபேதமாய்.

சிவமயம்.

ஆறவது,

# வெள்ளியம்பலத்திருக்கூத்தாடியபடலம்.



அறுசீரடியாசிரியவிருத்தம்.

உலகியனிறுத்துவான்வந்தொருபரஞ்சுடர்வான்றிங்கட்
குலமணிவிளக்கைவேட்டுக்கோமுடிகவித்துப்பாராண்
டிலகுறுதோற்றமீதான்முனிவரரிருவர்தேற
வலகிலானந்தக்கூத்துச்செய்தவாறறையலுற்றும். (க)

புண்ணியமலர்மென்கொம்பைவேட்டபின்புவனந்தாங்குங்
கண்ணுதன்மூர்த்தியாயகவுரியன்மணத்தில்வந்த
மண்ணியல்வேந்தர்வானோர்மாதவர்பிறருமுண்ண
நண்ணுதிரென்னலோடுநெண்ணுவார்விரைவினெய்த. (௨)

பொன்னவிர்கமலம்பூத்தபுனிதநீராடித்தத்த
நன்னெறிநியமமுற்றிநண்ணினர்புலிக்காலோனும்
பன்னகமுனியுந்தாழ்ந்துபரவியம்பலத்துளாடு
நின்னருணடங்கண்டுண்பதடியேங்கணியமமென்றார். (௩)

என்னலுமந்தக்கூத்தையிங்குநாஞ்செய்துந்தில்லைப்
பொன்னகருலகமெல்லாமுருவமாம்புருடற்குள்ள
மின்னதாந்துவாதசாந்தமென்றிறையருளிச்செய்ய
மன்னவவேனையங்கம்யாவெனமன்னன்சொல்வான். (௪)

---

(க) உலகியல்என்றது-உயர்ந்தோர்வழக்காய்வகுத்த, அறநிலையறம், மறநிலையறம், அறநிலைப்பொருள், மறநிலைப்பொருள். அறநிலையின்பம், மறநிலையின்பம் என்னுமறுவகைப்பொருள்களை. பார்பரத்தலென்னுந் தொழிலடியாகப் பிறந்தபெயர், பூமி. முனிவரரிருவரென்றது - பதஞ்சலி வியாக்கிரபாதரை.

(௩.) நியமம் - நித்தியகடன்.

(௪) உலகமெல்லாம் உருவமாம்புருடன் என்றது, விராட்புருடனை. துவாதசாந்தம் என்றதை, தலவிசேடம் உக-வது பாடற்குறிப்பிற்காண்க.

அரைக்குமேலுலகேழென் றுமரைக்குக்கீழுலகேழென் று
முரைக்கலா லுலகமெல்லாமுருவமாம்புருடற்கிந்தத்
தரைக்குமேலனந்தந்தெய்வத்தானமுண்டனைத்துங்கூறின்
வரைக்குறுசிலதானங்கள்வகுத்துரைசெய்யக்கேண்மின். (ரு)

திருவளராரூர்மூலந்திருவானைக்காவேநாபி
மருவளர்பொழில்சூழண்ணுமலைமணிபூரநீவி
ரிருவருங்கண்டமன்றமிதயமாந்திருக்காளத்தி
பொருவருங்கண்டமாகும்புருவமத்தியமாங்காசி. (சு)

பிறைதவழ்கயிலைக்குன்றம்பிரமரந்திரமாம்வேத
மறைதருதுவாதசாந்தமதுரையீதிகமெந்த
முறையினலென்னின்முன்னர்த்தோன்றியமுறையாலென்றக்
கறையறுதவத்தரோடுகவுரியன்கோயில்புக்கான். (எ)

தன்னருளதனனீத்ததன்னையேதேடிப்போந்த
மின்னவிர்கயிலைதானேவிடையுருமாறிமன்றாய்
மன்னியதேயோதிங்கண்மண்டலமேயோவென்னப்
பொன்னவிர்விமானக்கீழ்பால்வெள்ளியம்பொதுவுண்டாக. (அ)

மின்பயில்பரிதிப்புத்தேள்பாற்கடல்விளங்கியாங்குப்
பின்பதன்மிசைமாணிக்கப்பீடிகைதோன்றிற்றன்ன
தன்பர்தமுளமேயாகுமல்லதுவேதச்சென்னி
யென்பதாமஃதேயன்றியாதெனவிசைக்கற்பாற்றே. (கூ)

அன்னதோர்தவிசினும்பராயிரங்கரத்தாலள்ளித்
துன்னிருள்விழுங்குங்கோடிசூரியரொருகாலத்து
மன்னினருதித்தாலொப்பமனமொழிபக்கங்கீழ்மேற்
பின்முதல்கடந்தஞானப்பேரொளிவடிவாய்த்தோன்றி. (க0)

---

(ரு) வரை - அளவு.

(சு) மூலம் - மூலாதாரம். நாபி - சுவாதிட்டானம். இதயம்- அனுகதம். கண்டம் - விசுத்திஸ்தானம் - புருவமத்யம் - ஆக்கினேயஸ்தானம்.

(எ) கறை - குற்றம். கவுரியன் - சவுந்தரபாண்டியன்.

(அ) மன்று - வெள்ளியம்பலம்.

(கூ) பீடிகை - பீடம்.

(க0) மனமொழிபக்கம் கீழ்மேல் பின்முதல்கடந்த என்றது, சித்தத்திற்கும், வாக்கிற்கும், வரையறப் படாமல் ஆணவத்திற் கட்டுண்டோர்க்குப் புலப்படாதிருத்தலிற் சமீபமின்றித் தனக்கோர் நிகர்பொருள் எவ்விடத்தும் எக்காலத்தும் இன்மையை.

முந்துறுகணங்கண்மொந்தைதண்ணுமைமுழக்கஞ்செய்ய
நந்திமாமுழவந்தாக்கநாரணனிடக்கையார்ப்ப
வந்துகந்திருவநூலின்மரபுளியிருவர்பாட
வைந்துதுந்துபியுங்கல்லென்றூர்கலிமுழக்கங்காட்ட. (கக)

மதுமுகத்தலர்ந்தவெண்டாமரைமகள்சுருதிகூட்டச்
சதுமுகத்தொருவன்சாமகீதயாழ்தடவிப்பாட
விதுமுகத்தருகுமொய்க்குமீனெனஞானவெள்ளிப்
பொதுமுகத்தமரர்தூற்றும்பூமழையெங்கும்போர்ப்ப. (கஉ)

பொருங்கடனிறத்தசெந்தீப்பொங்குளைக்குறளன்மீது
பெருங்கடல்வடவைச்செங்கண்பிதுங்கமேற்றிரிந்துநோக்கி
முருங்கடலெரியிற்சீறமுதுகிறவலத்தாளூன்றிக்
கருங்கடன்முளைத்தவெய்யோன்காட்சியிற்பொலிந்துநின்று. (கங)

கொய்யுஞ்செங்கமலப்போதுகுவித்தெனவெடுத்துக்கூத்துச்
செய்யும்புண்டரிகத்தாளுந்திசைகடந்துளவீரைந்து
கையுந்திண்படையுந்தெய்வமகளிர்மங்கலநாண்காத்த
மையுண்டமிடறுஞ்சங்கவார்குழைநுழைந்தகாதும். (கச)

செக்கரஞ்சடையுந்தேசார்வெண்டிருநீறுந்தெய்வ
முக்கணுமுரகக்கச்சுமுள்ளெயிறிமைக்குமார்பு
மைக்கருங்கயற்கணங்கைவல்லியிளுதுங்கிநிற்கும்
பக்கமுமவண்மேல்வைத்தபார்வையுநகையுந்தோன்ற. (கரு)

கங்கையாறலம்புமோசைகடுக்கைவண்டிரங்குமோசை
மங்கலமுடிவினோசைமந்திரவேதவோசை
செங்கையாடெரியினோசைதிருவடிச்சிலம்பினோசை
யெங்கணுமிரம்பியன்பரிருசெவிக்கமுதமூற்ற. (கசு)

(கக) தண்ணுமை-இருதலையுஞ் சுருங்கிய, நெடியவடலினையுமுடையது. முழவமாவது, பெரியவுடலின்மேல் தலை பெற்றுள்ள ஐந்துமுகமுடையது. பஞ்சதுந்துபிகளாவன - தோற்கருவி, துளைக்கருவி, கஞ்சக்கருவி, நரம்புக்கருவி, மிடற்றுக்கருவிகளாம். கந்திருவநூல் இசைநூல். [து-சபை.

(கஉ) விதுமுகம்-சந்திரமண்டலம், மீன்-நட்சத்திரங்கள். பொ

(கங) திரிந்து - சுழன்று உளை - புறமயிர். குறளன்-குறுகிய வடிவினையுடைய முயலகன் முருங்கு. மெலித்தல்விகாரம்.

(கச) செக்கர்-செம்மைநிறம். உரகம்-பாம்பு. எயிறு-ஆதிவராகதந்தம்.

(கரு) குவித்தெனஎன்றது, குவிந்தெனவென்றும்பாடம்.

(கசு) அலம்பும்-ஒலிக்கும். கடுக்கை-கொன்றைமலர். எரி-மழு.

ஆடினனமலமூர்த்தியஞ்சலிமுகிழ்த்துச்சென்னி
சூடினூரடியில்வீழ்ந்தார்சுருதியாயிரநாவாரப்
பாடினூர்பரமானந்தப்பரவையிற்படிந்தாரன்பு
நீடினூர்நிருத்தானந்தங்காண்பதுநியமம்பூண்டார். (கஎ)

முனிவர்கந்திருவர்வானேர்தானவர்மோனயோகர்
புனிதகிம்புருடராதிப்புலவருமிறைஞ்சியன்பின்
கனிதருமின்பத்தாழ்ந்தார்திருமணங்காணவந்த
மனிதருங்காணப்பெற்றூர்மாதவர்பொருட்டான்மன்னே. (கஅ)

அனந்தனுமுனிவர்வேந்தனளவிலாநந்தமூறி
மனந்தனினிரம்பிமேலும்வழிவதுபோலமார்பம்
புனைந்தபுண்ணியவெண்ணீறுகரைந்திடப்பொழிகண்ணீரு
ணனைந்திருகரமுங்கூப்பிநாதனேப்பாடுகின்றூன். (கக)

பராபரமுதலேபோற்றிபத்தியில்விளைவாய்போற்றி
சராசரமாகிவேறுய்நின்றதற்பரனேபோற்றி
கராசலவுரியாய்போற்றிகனகவம்பலத்துளாடு
நிராமயபரமானந்தநிருத்தனேபோற்றிபோற்றி. (உ0)

ஒன்றுகியையந்தாய்யைந்துருவாகிவருவாய்போற்றி
யின்றுகிச்சென்றநாளாயெதிர்நாளாயெழுவாய்போற்றி
நன்றுகித்தீயதாகிநடுவாகிமுடிவாய்மன்று
ணின்றுடும்பரமானந்தநிருத்தனேபோற்றிபோற்றி. (உக)

அடியரெம்பொருட்டுவெள்ளியம்பலத்தாடல்போற்றி
பொடியணிதடந்தோள்போற்றிபுரிசடைமகுடம்போற்றி
கடியவிழ்மலர்மென்கூந்தற்கயல்விழிபாகம்போற்றி
நெடியநற்பரமானந்தநிருத்தனேபோற்றிபோற்றி. (உஉ)

(கஎ) அமலன்-மலரகிதன் ஆயிரம் - அனந்தம். பரமானந்தம்-பேரின்பம். (கஅ) மோனம்—மௌனநிலை.

(கக) அனந்தனுமுனிவர் வேந்தன் என்றது-ஆதிசேடாவதாரமாகிய பதஞ்சலிமுனிவரை.

(உ0) பராபரம்-முன்பின்னில்லாதது எனவே அனுதியாயுள்ளதுஎன்பதுபொருள். கராசலம்-கரம்அசலம்—கையையுடையமலை, எனவே யானை என்பதுபொருள். நிராமயம் நிர் ஆமயம் - நோயில்லாதவன். ஆமயம்-நோய்.

(உக) ஒன்றுய் என்றது-நிஷ்களம், சகளம், சகளநிஷ்களமுங்கடந்துநின்ற சுத்தசிவத்தை. ஐந்துரு என்றது, பரசிவன், அனுகதசிவன், சதாசிவன், மகேசன், உருத்திரனென்னு மிவர்களை. ஐயைந்தாய் என்றது, சந்திரசேகரர்முதலிய இருபத்தைந்து சிவமூர்த்தங்களை.

என்றுநின்றேத்தினன்பின்னிருவரைநோக்கிவெள்ளி
மன்றுணின்ருடாநின்றமறைமுதல்கருணைகூர்ந்து
நன்றுநீர்வேட்டதென்னென்றருள்செயநாதன்பாதந்
துன்றுமெய்யன்பிற்றாழ்ந்துதொழுதுநின்றிதனைச்சொல்வார். ()

எந்தையித்திருக்கூத்தென்றுமிந்நிலைநின்றியார்க்கும்
பந்தவெம்பாசநீங்கப்பரித்தருள்செய்தியென்னச்
செந்தமிழ்க்கன்னிநாடுசெய்தமாதவப்பேறெய்தத்
தந்தனமென்ருன்வேதந்தலைதடுமாறநின்ருன். (உச)

அராமுனியீதுவேண்டுமொதியெம்பெருமவிந்த
நிராமயபரமானந்தநிருத்தநேர்கண்டோரெல்லாந்
தராதலமிசைவந்தெய்தாத்தனிக்கதிபெறுதல்வேண்டும்
பராபரவென்றுதாழ்ந்தான்பகவனுமதற்குநேர்ந்தான். (உரு)

ஆர்த்தனர்கணத்தோர்கைகோத்தாடினரலர்பூமாரி
தூர்த்தனர்விண்ணோர்கண்ணீர் துளும்பினர்முனிவராகம்
போர்த்தனர்புளகமன்பிற்புதைந்தனர்விழுங்குவார்போற்
பார்த்தனர்புல்லிக்கொண்டார்பரவியவ்விருவர்தம்மை. (உசு)

மேற்படி - வேறு.

அனித்தமாகியபூதமைம்பொறிபுலனுதியாருருகி
யினித்தமாயையோடிருவினைத்தொடக்கினுமிருளினும்வேருகித்
தனித்தயோகிகளகநிறைந்தாடியகனிப்பெருந்திருக்கூத்தைக் [ன்.
குனித்தவண்ணமாக்கண்டவர்க்கிகபரங் கொடுத்தவணுறைகின்ரு

(உச) இந்நிலை என்றது-வெள்ளியம்பலத்தை. தலைதடுமாறல், தட்டழிந்து மயங்கல். கன்னிநாடு-பாண்டிநாடு.

(உரு) அலர்பூ - மலர்ந்தபூ.

(உஎ) பூதமைம்பொறி புலனுதியாருருகி என்றது - பிரிதிவு முதலிய பஞ்சபூதங்களும், மெய்முதலியஞானேந்திரியங்களைந்தும், சத்தமுதலியவைம்புலன்களும், மனமாதியந்தக்கரணங்களுன்கும், கூடிய ஆன்மதத்துவ மிருபத்துநான்கும், காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயைஎன்னும் வித்தியாதத்துவமேழும், சுத்தவித்தை, ஈசுரம், சதாக்கியம், சத்தி, சிவம் என்னும் சிவதத்துவமைந்தும் ஆகிய முப்பத்தாறு தத்துவங்களை. இனித்தமாயை என்றது, பொருளல்லவற்றைப் பொருளாகக்கருதி இன்புறச்செய்யு மாயாமலத்தை. இருவினைத்தொடக்கென்றது, நல்வினை, தீவினைகட்கேதுவாகிய கன்மமலத்தை. இருளென்றது — சகசமலமாகிய ஆணவமலத்தை. குனித்தவண்ணம்-ஆடியதிருக்கோலம்.

குனிவிலாதிரைத் தினந்தொடுத்தெதிர்வரு கொடுவிலாதிரையெல்லை, புனிதவாடகமுளரிதோய்ந் தத்தனிப்பொதுநடந் தெரிசித்தங், கினிதமர்ந்துநூற் றெண்மடங்கைந்தெழுத் தெண்ணியிந்நிலைநிற்குங், கனியுமன்பினு ரெண்ணியாங்கெய்துவர் கருதியவரமெல்லாம். (உஅ)

வெள்ளியம்பலத் திருக்கூத்தாடியபடலம் முற்றிற்று.

ஆ படலம் கரு - க்கு - திருவித்தம் - அஉரு.

---

ஏழாவது,

## குண்டோதரனுக்கு அன்னமிட்டபடலம்.

கலிநிலைத்துறை.

பன்னகேசனுமடுபுலிப்பாதனும்பணிய
மின்னுவார்சடைமன்னவன்வெள்ளிமன்றுடல்
சொன்னவாறிதுபசித்தழல்சுடவொருபூத
மன்னமாமலைதொலைத்தவாறெடுத்தினியறைவாம். (க)

கன்னியர்க்கரசாயினுள்கடிமணபுகுந்த
மின்னியற்சடைமாதவர்வேதியரேனை
ரெந்நிலத்துளமன்னவர்யாவர்க்குமுறையே
பொன்னியற்கலத்தறுசுவைப்போனகமருத்தா. (உ)

பூசுகின்றவுமுடுப்பவும்பூண்பவும்பழுக்காய்
வாசமெல்லிலையேனவுமம்முறைவழங்காத்
தேசமன்னவரேனையோர்செல்லுநர்ச்செலுத்தி
யீசனன்புறுகற்பினுளிருக்குமவ்வேலை. (ங)

---

(உஅ) வில் ஆதிரை, தனுமாசத்திருவாதிரை நட்சத்திரம். ஐந்தெழுத்து—ஸ்ரீபஞ்சாட்சரம்.

(க) பன்னகேசன்-பதஞ்சலிமுனிவர், புலிப்பாதன் - வியாக்கிரபாதன்.

(உ) இயல், முதனிலைத் தொழிற் பெயராதலின் வருமொழி நோக்கித் திரிந்தது.

(ங) பழுக்காய்-பாக்கு. மெல்லிலை-வெற்றிலை. வாசம்-வாசனைத்திரவியம். அவை-தக்கோலந் தீம்பூதகைசாலிலவங்கம், கற்பூரஞ் சாதியோடைந்து. எனவும் என்றது-மலர்முதலியவற்றை.

மடைவளத்தொழிற்புலவர்வந்தடியிணைவணங்கி
யடியரேமட்டபோனகமாயிரத்தொன்றி
னிடையதாயினுந்தொலைந்திலதியாங்கண்மேற்செய்யக்
கடவதேதெனப்பிராட்டிதன்கணவர்முன்குறுகா. (ச)

பணிந்தொதுங்கிநின்றடிகண்முப்பத்துமுக்கோடி
கணங்கடம்மொடுமிங்கெழுந்தருள்வதுகருதி
யிணங்குமின்சுவைப்போனகமெல்லையின்றாக்கி
யுணங்குகின்றதுண்டெஞ்சியதெனைத்தெனவுரைக்கின். (ரு)

இமையக்குன்றமுமடைகலாயிதன்புறங்கிடந்த
சிமையக்குன்றுகளீட்டமுஞ்சேர்ந்தெனநிமிரச்
சமையக்கொட்டியவாலரிப்புழுக்கலுஞ்சாதக்
கமையக்கொட்டியகறிகளின்வருக்கமுமனைத்தே. (சு)

என்றபோதிறையெம்பிரான்றேவியாரிடத்தி
லொன்றுமன்பினுலொருவிளையாடலைநினைத்தோ
தன்றனிக்குடைப்பாரிடத்தலைவனதாற்ற
லன்றியாவருமறிந்திட்க்காட்டவோவறியேம். (எ)

சிறிதுவாணகைசெய்துமூவேந்தரிற்சிறந்த
மருவின்மீனவனரும்பெறன்மகளுனக்கரிதிற்
பெறுவதேதுவான்றருவுநின்பணிசெயப்பெற்றிங்
குறைவதேற்பிறர்திருவெலாமுன்னதேயன்றோ. (அ)

அளவிலாதநின்செல்வத்தின்பெருக்கைநாமறிய
விளைவுசெய்தனைபோலுநின்விருந்துணப்பசியாற்

---

(ரு) போனகம்-அமுது. உணங்கல்-வாடல். எஞ்சியது-சேஷமாயுள்ளது. எத்தனைத்து என்பது எனைத்தெனநின்றது தொகுத்தல்விகாரம்.

(சு) நிமிர்தல்-உயர்தல். சமைய-பொருந்த. வால்அரிபுழுக்கல்-வெள்ளிய அரிசியாலமைந்த அன்னம். சாதத்துக்கு என்பது சாதக்கு எனநின்றதுதொகுத்தல்.

(எ) பாரிடம்-பூதம்.

(அ) அரும்பெறல்மகள் - பெறூது பெற்றமகள். மகள் - அண்மைவிளி.

(கூ) பசியாற் களையடைந்தவராக நங்கணத்தினுட் காணேம் என்றது, சிவகணங்கட்குப் பசிப்பிணியின்மையைக் குறித்துநின்றது-தளவமூரல், முல்லையரும்பனையபற்கள். தளவம்-முல்லை.

களையடைந்தவராகிநங்கணத்தினுட்காணேந்
தளவமூரலாயாஞ்செயத்தக்கதேதென்றான். (௯)

அடுக்கநின்றகுண்டோதரனகட்டிடைவடவை
மடுக்கவுன்னினனதுவந்துவயிற்றெரிபசியாய்த்
தொடுக்கவாலமுண்டாங்குடல்சோர்ந்துவேர்த்தாவி
யொடுக்கமுற்றனையபசியினலுயங்கினேனென்றான். (௧0)

குடையெடுக்குமிக்குறியதாட்குறட்கொருபிடிசோ
றிடுமினப்புறஞ்சோறுபாலெனத்தொழுதெல்லா
முடையநாயகிபோயினள்குறியனுமுடனே
நடைதளர்ந்துகண்புகைந்துவாய்புலர்ந்திடநடந்தான். (௧௧)

படைக்கணேவலரிறைமகள்பணியினற்பசிநோய்
தொடுத்தவன்றனைக்கொண்டுபோய்ச்சொன்றிமுன்விடுத்தா
ரடுத்திருந்ததேகண்டனரன்னமாமலையை
யெடுத்தயின்றதுமடிசிலங்கிருந்ததுங்காணார். (௧௨)

சிலம்புநூபுரச்சீறடிச்சேடியர்சில்லோ
ரலம்புவால்வளைக்கைநெரித்ததிசயமடைந்தார்
புலம்புமேகலையார்சிலர்பொருக்கெனவெருண்டார்
கலம்பெய்பூண்முலையார்சிலர்கண்புதைத்திரிந்தார். (௧௩)

முரவைபோகியமுரிவில்வான்மூரல்பால்வறையல்
கருனைதீம்பயறடுதுவைபலவகைக்கறிகள்
விரவுதேம்படுபாறயிரிழுதுதேன்வெள்ளம்
வரைவிலாதனமிடாவொடுவாரிவாய்மடுத்தான். (௧௪)

---

(௧0) அகடு - வயிறு. ஒடுக்கம் - மெலிவு. உயங்கல்-வாடல்.

(௧௧) குறியதாள்குறள் - குறுகிய காலையுடையபூதம். சோறும்-சொல்லுவோம், இது எதிர்காலத்தன்மை வினைமுற்றாதலால் முதனிலைதிரிந்து நின்றது.

(௧௨) படைக்கணேவலர் - படைத்தற்றொழிலினின்ற ஏவலாட்கள் - அல்லது வாள்போன்ற கண்களையுடைய பணிப்பெண்கள்.

(௧௩) சிலம்பும், அலம்பும், புலம்பும், என்பவை, ஒலிக்குமென்னும் பொருளன, சீறடி-சிற்றடி. இரிதல்-போதல்.

(௧௪) முரவை-தவிடு. மூரல்-சோறு. பால்வறையல், பால்சேர்த்துச் சமைத்த துவட்டற்கறி. கருனை-பொரிக்கறி. துவை-புளிங்கறி. இழுது-வெண்ணெய்.

பல்பழக்குவைவேற்றுருப்பண்ணியங்கன்னன்
மெல்சுவைத்தண்டுதெங்கிவையன்றியும்வேவா
வல்சிகாய்களின்வருக்கமுநுகர்ந்துமாறும
லெல்லைதீர்நவபண்டமுமெடுத்துவாய்மடுத்தான். (கரு)

பாரித்துள்ளவிப்பண்டமும்பருஉக்குறுங்கையால்
வாரித்தன்பெருவயிற்றிடைவைப்பவுந்துவை
பூரித்தாகுதிபண்ணியதழலெனப்பொங்கிக்
கோரித்தொன்பதுவாயிலும்பசித்தழல்கொளுத்த. (கசு)

அலங்கலோதிகண்டதிசயமடைந்துதன்னன்பி
னலங்கொளுயகன்முன்புபோய்நாணமுட்கிடப்ப
விலங்குபூங்குழல்சுவன்மிசையிறக்கியிட்டொல்கி
நிலங்கிளைத்துநின்றுணிலைகண்டனனிருபன். (கள)

அஞ்சிலோதியைவினவுவானநிகலான்போலக்
குஞ்சியாரழலன்னவக்குடவயிற்றவனுண்
டெஞ்சியுள்ளவேற்பூதங்களின்னமும்விடுத்துன்
னெஞ்சுவப்பவேயருத்துதுமென்னலுநிமலை. (கஅ)

ஐயவின்னுமிக்குறட்பசியடங்கிடாவேறு
வெய்யபாரிடவீரரைவிடுத்தியேலெடுத்து
வையம்யாவையும்வயிற்றிடைவைப்பரேயதனுற்
செய்யகாலருத்திரப்பெயர்தேற்றமாமுனக்கே. (ககூ)

சங்கவார்குழைக்குறண்மகன்றன்செயறுனே
யிங்குவந்துரைசெய்திடவறிதியென்றிறைமுன்
மங்கைநாயகிகுமுதவாய்மலர்பொழுதெயிற்றுத்
திங்கள்வாய்முழையான்பசித்தீச்சுடவந்தான். (உ0)

---

(கரு) பண்ணியம் - பலகாரம். கன்னல் - சருக்கரை. மெல்சுவைத்தண்டு - மெல்லுதற்றொழிலமைந்த கரும்பு. வல்சி - சோறு. நவபண்டம் - நவதானியம்.

(கசு) பாரித்தல்-நிறைதல். தழல் - யாகாக்னி. கோரித்து-அதிகரித்து. ஒன்பதுவாயில் - நவத்துவாரங்கள். கோரித்தென்றது, கோரமென்னும் பெயரடியாகப் பிறந்தவினையெச்சம்.

(கள) சுவல் - பிடரி. ஒல்கி - துவண்டு.

(கஅ) சில்-வட்டத்தகட்டணி. குஞ்சி-மயிர். குடவயிற்றவன் கும்போதரன்.

(உ0) முழை-மலைக்குகை.

நட்டமாடியசுந்தரநங்கையெம்பிராட்டி
யட்டபோனகம்பனிவரையனையவாய்க்கிடந்த
தொட்டுவாய்மடுத்திடவுமென்சுடுபசிதணியா
திட்டுணுதவர்வயிறுபோற்காந்துவதென்றான். (உக)

கையர்முப்புரத்திட்டதீக்கடும்பசியுருவாய்ப்
பொய்யனேன்வயிற்றிடைக்குடிபுகுந்ததோவென்னுங்
கையெறிந்திடுமெண்டங்கள்வெடிபடக்கதறு
மையகோவெனுமுயிர்த்திடுமோவிசோர்ந்தயரும். (உஉ)

குண்டோதரனுக்கு அன்னமிட்டபடலம் முற்றிற்று.

ஆ படலம் கசு - க்கு - திருவிருத்தம் - அசஎ.

---

எட்டாவது,

## அன்னக்குழியும் வையையுமழைத்தபடலம்.

கலிநிலைத்துறை.

வேதநாயகன்பாரிடவேந்தனுக்கமையா
வோதனுதிகளருத்தியதன்மையீதுவையும்
போதராமையாலமைவுறப்போனகக்குழிதந்
தோதமாநதியருத்தியசெய்தியுமுரைப்பாம். (க)

கவனமால்விடையாளிபின்கடிகமழ்தென்றற்
பவனமாமலையாட்டியைப்பார்த்துளேநகைத்துத்
தவனமாபசியுடையவன்றன்பொருட்டன்ன
புவனமாதினைநினைத்தனனினைக்குமுன்போந்தான். (உ)

---

(உக) காந்தல்-எரிதல்.

(உஉ) கையர்-வஞ்சகர். முப்புரம்-திரிபுரம்.

(க) அமையா-வயிறுநிரம்பாத. உவை-என்றது, அஃறிணைபல வின்பாற் சுட்டுப்பெயர்-இவ்வுகரச்சுட்டு சேய்மை அண்மைகட்குப் பொதுவாதலின் சேய்மைப்பொருளில்வந்தது.

(உ) பவனம்-காற்று-தவனம்-தாகம்-புவனமாது-பூமிதேவி-அ ன்னபுவனமாதென்றது, ஆன்மகோடிகளுக்குப் பலவுணவுகளையும் கொடுப்பவளாதலின்.

நாற்றடந்திசைத்தயிர்க்கடனனந்தலைநிலங்கீண்
டேற்றெழுந்துநாற்கிடங்கராயுதித்தெழுந்தாங்கு
மாற்றருஞ்சுவைத்தீந்தயிர்வாலரிப்பதத்தோ
டேற்றெழுந்ததுநாற்குழியிடத்திலும்பொங்கி. (ங)

குருமதிக்குலமன்னவன்மருகனக்குண்டப்
பெருவயிற்றிருபிறையெயிற்றெரிசிகைப்பேழ்வா
யொருகுறட்குடைவீரனையுன்பசிதணியப்
பருகெனப்பணித்தருளலும்பாரிடத்தலைவன். (ச)

அத்தயிர்ப்பதங்கிடங்கரிலலைகடல்கலக்கு
மத்தெனக்கரம்புதைத்தெடுத்தெடுத்துவாய்மடுத்துத்
துய்த்திடப்பசிவிடுத்ததுசுருதிநாயகன்றாட்
பத்திவைத்துவீடுணர்ந்தவர்பழவினைத்தொடர்போல். (ரு)

வாங்கிவாங்கிவாய்மடுத்தலுமுடம்பெலாம்வயிறாய்
வீங்கினான்றரைகிழிபடப்பொருப்பெனவீழ்ந்தா
னீங்குநீளுயிர்ப்பிலனுடல்புரண்டனனீர்வேட்
டாங்குநீர்நிலைதேடுவானுயினனெழுந்தான். (சு)

ஆவியன்னவர்ப்பிரிந்துறையணங்கனார்போலக்
காவிநாண்மலர்தாமரைக்கடிமலர்வாட
வாவியோடையுங்குளங்களும்வறப்பவாய்வைத்துக்
கூவநீணிலைநீர்களும்பசையறக்குடித்தான். (எ)

அனையனாகியுநீர்நசையாற்றலன்வருந்தும்
வினையனாகிவானதிச்சடைவேதியன்பாதத்
தினையநாதனுந்தன்றிருமுடியின்மீதிருக்கு
நனையநாண்மலரோதியைப்பார்த்தொன்றுநவில்வான். (அ)

---

(ங) நனந்தலை-நடு. கிடங்கர்-குழி. வாலரிப்பதம் - வெள்ளிய அரிசியாலமைந்த அன்னம். பதம் - அன்னம்.

(ச) குரு-நிறம். பேழ்வாய், பிளந்தவாய்.

(சு) நீளுயிர்ப்பு-நெட்டுயிர்ப்பு, வேட்டு-விரும்பி, நீர்நிலை, தடாகமுதலியன. நிலைநீர் - இலக்கணப்போலி.

(எ) வாவி-நடக்குங்கிணறு, இது நடைவாவி என்று வழங்குகின்றது. காவி-நீலோற்பலம். கூவம்-கிணறு.

(அ) நசை-விருப்பம். இனைய-இரங்க. நனைய-பொருளடியாகப்பிறந்த குறிப்புவினைப் பெயரெச்சம். இது-மலரென்னும் பொருள்கொண்டது. நனை-தேன்.

தேங்குநீர்த்திரைமாலிகைச்செல்விநீயிந்த
வாங்குநீர்த்தடம்புரிசைசூழ்மதுரையின்மாடோ
ரோங்குநீத்தமாயொல்லெனவருதியென்றுரைத்தா
னீங்குநீர்த்திருமாதவனொருமொழிநிகழ்த்தும். (கூ)

அன்றுமெம்பிரானுணையாற்பகீரதன்பொருட்டுச்
சென்றுநீயொருதீர்த்தமாய்த்திளைப்பவர்களங்க
மொன்றுதீவினைத்தொடக்கறுத்தொழுகெனப்பணித்தா
யின்றுமோர்நதியாகெனப்பணித்தியேலென்னை. (கO)

தெரிசித்தோர்படிந்தாடினோர்செங்கையாலேனும்
பரிசித்தோர்பவத்தொடர்ச்சியின்பற்றுவிட்டுள்ளத்
துருசித்தோர்வுறுபத்தியும்விச்சையுமுணர்வாய்
விரிசித்தோர்வுறுமெய்யுணர்வால்வரும்வீடும். (கக)

தந்திடப்பணித்தருளனுத்தடம்புனற்செல்வி
சுந்தரப்பெருங்கடவுளைவரங்கொண்டுதொழுது
வந்தளப்பிலாவேகமோடெழுந்துமாநதியா
யந்தரத்துநின்றிழிபவளாமெனவருமால். (கஉ)

கலிவிருத்தம்.

திரைவளையணிகரமுடையவள்செழுமணிநகையுடையா
ளுரைவளைதுகிலுடையவள்கொடிநுணுகிடையவளறனீள்
விரைவளைகுழலுடையவள்கயல்விழியுடையவள்வருவாள்
வரைவளைசிலையவன்முடிமடவரனதிவடிவினுமே. (கஙு)

(கூ) திரைமாலிகைச்செல்வி - அலைகளையேமாலையாகவுடைய கங்கை. மாடு - பக்கம். நீத்தம் - வெள்ளம்.

(கO) திளைப்பவர்-மூழ்குவோர். நதி-மேற்றிசையிற்றோன்றிக் கீழ்த்திசையைநோக்கிச் செல்லும் ஆறு.

(கக) உருசித்தல் - இனிப்புறல். விச்சை-சிவஞானம். உணர்வாய் விரிசித்தென்றது "அகரவுயிர்போ லறிவாகியெங்கு நிகரிலி றைநிற்கு நிறைந்து" எனவருந் திருவருட்பயனு லுணர்க.

(கஙு) அறல்-கருமணல். விரை-வாசனை. மடவரல் - மடப்பத் தினது வரலாற்றையுடையவள். மடம்-அறிந்துமறியாமை.

விரைபடுமகிலரைபொரிதிமில்வெயில்விடுமெணிவரையோ
டரைபடமுதுசினையலறிடவடியொடுகெடிதகழாக்
குரைபடுகழலிறவுளர்சிறுகுடியடியொடுபெறியாக்
கரைபடவெறிவதுவருவதுகடுவிசைவளியெனவே. (கச)

பிணையொடுகலைபிடியொடுகரிபிரிவிலவொடுபழுவப்
பணையொடுகருமுசுவயிறணைபறழொடுதழுவியதன்
றுணையொடுகவிபயின்மரநிரைதொகையொடுமிறவுளர்வெங்
கணையொடுசிலையிதனொடுமெறிகவணொடுகொடுவருமால். (கரு)

அடியிறகெடுவரையுதைவனவகழ்வனவகழ்மடுவைத்
திடரிடுவனமழைசெருகியசினைமரநிரைதலைகீழ்
படவிடுகரைதொறுநடுவனபடுகடலுடைமுதுபார்
நெடுமுதுகிருபிளவுறவருநெடுநதியினவலையே. (கசு)

பிளிறொலியினமுதுமரமகழ்பெருவலியினவசையா
வெளிறடிவனவெறிமணியினவிரைசெலவினமதமோ
டொளிறளியினநுரைமுகபடமுடையனவெனவரலாற்
களிறனையதுமதுவிதழிகள்கவிழ்சடையணிகுடிஞை. (கஎ)

(கச) அரைபொருதிமில் என்றது—பொருக்குப் பொருந்திய தூரினையுடையவேங்கைவிருட்சத்தை. முதுசினை-பெரியகிளைகள். கடிது-விரைவாக. குரை-ஒலி. கழல்-வீரகண்டை. இறவுளர்-வேடர். குடில் என்பது, குடி எனக்கடைகுறைந்து நின்றது; சிற்றில்.

(கரு) பிணை-பெண்மான். கலை-ஆண்மான். பிடி பெண்யானை. கரி-ஆண்யானை. பழுவம்-காடு. பணை-மரக்கிளை. முசு-ஆண்குரங்கு. மறழ்-குட்டி. கவி-ஆண்குரங்கு. இது கபியென்பதன்றிரிபு. இதண்-பரண். இதுகடைக்குறை.

(கசு) திடர்-மேடு. அகழ்தல்-தோண்டுதல்.

(கஎ) இச்செய்யுள் செம்மொழிச்சிலேடையாதலின்; நதியைக் குறிக்குங்கால்:—பிளிறல்-ஒலித்தல். முதுமரம்-ஆலமரம். வெளில்-விளாமரம். வெள்ளில் என்பது, வெளிலெனதொகுத்தற்பெற்றது மணி-முத்து. விரைசெலவு-விரைந்துசெல்லுங்கதி. மதம்—வலிமை. அளி-குளிர்ச்சி. முகபடம்-போர்வை. யானையைக் குறிக்குங்கால்_ பிளிறல்-கர்ச்சித்தல். முதுமரம்-பெரியமரம். வெளில்-கட்டுத்தறி. மணி-தந்தங்களிலுண்டாகுமுத்துக்கள். விரைசெலவு - விரைந்து செல்லும்நடை. மதம்-மும்மதநீர். அளி-அம்மதநீரையுண்ணும்வண்டுகள். நுரைமுகபடாம்-நுரைபோல்வெளுத்த நெற்றிப்பட்டம், எனப்பொருள்கொள்க. குடிஞை (கங்கா) நதி. இதழி-கொன்றை.

நீடியபிலமுறுநிலையினநிருமலன்மதிமுடிமீ
தாடியசெயலினவெயிலுமிழருமணிதலையினநீள்
கோடியகதியினநிரைநிரைகுறுகியபலகாலி
னோடியவலியினவளையுடலுரகமுமெனவருமால். (கஅ)

மண்ணகழ்தலின்வளையணிகருமாவனையதுமிசைபோய்
விண்ணளவலினவுணர்களிறைவிடுபுனலொடுநெடுகு
மண்ணலையலையதுசுவையிழுதளையளைவுறுசெயலாற்
கண்ணனையனையதுநெடுகியகடுகியகதிநதியே. (கக)

திகழ்தருகரிபரிகவரிகள்செழுமணியொடுவருமா
றிகழ்தருகுடபுலவரசர்கணெறிசெய்துகவர்திருவோ
டகழ்தருபதிபுகுமதிகுலவரசனையதையலதேற்
புகழ்தருதிறையிடவருகுடபுலவரசனுநிகரும். (உ0)

ஆரொடுமடலவிழ்பனையொடுமரநிகரிலைநிம்பத்
தாரொடுபுலியொடுசிலையொடுதகுகயலொடுதழுவாப்
பாரொடுதிசைபரவியதமிழ்பயிலரசர்கள்குழுமிச்
சீரொடுபலதிருவொடுவருசெயலனையதநதியே. (உக)

---

(கஅ) இதுவுமச்சிலேடையாதலின்,நதியைக்குறிக்குங்கால்:—பிலம்-பாதலம். ஆடிய-தங்கிய. தலை-இடம். கோடியகதி-வளைந்துசெல்லும்வேகம். குறுகியபலகால்-நெருங்கியபலகால்வாய்கள்.சர்ப்பத்தைக்குறிக்குங்கால்:—பிலம்-பிலத்துவாரம். தலையின-சுடிகையிலுடையன. கோடியகதி-வளைந்தநடை. பலகால்-பலகால்கள், எனப்பொருள்கொள்க. உரகம்—சர்ப்பம்.

(கக) வளையணிகருமா-சங்கையணிந்த (திருமாலாகிய) வராகமூர்த்தி. அவுணர்களிறை விடுபுனலொடு நெடுகுமண்ணல் என்றது, அசுரர்களுக்குத்தலைவனாகிய மாவலி தாரைவார்த்தநீரோடு திரிவிக்கிரமவடிவங்கொண்ட வாமனமூர்த்தியை. அளை-தயிர்.

(உ0) குடபுலம்-மேற்றிசை. நெறி-ஆணை. அகழ்தருபதி-அகழ்சூழ்ந்தமதுரை. அரசு-பண்பாகுபெயராய்ப் பண்பின்மேனின்றது. அரசு-அரசத்தன்மை இது உகரவீற்றுப்பாவதத்திதன்.

(உக) அரம்-ஓர்கருவி. ஆர்-ஆத்திமாலை. தழுவா என்றது-ஆரும்பனையும், வேம்பும் சேரசோழபாண்டியர்களுக்கு உரியமாலைகளாதலாலும், புலியும், சிலையும், கயலும் அவர்களுக்குரியகொடிகளாதலாலும் அவற்றைத்தழுவிவந்தமையை. தமிழ்பயிலரசர் என்றது-சேரன், சோழன், பாண்டியன் என்னுந் தமிழ்நாட்டு மூவேந்தரை.

கலிநிலைத்துறை.

கல்லார்கவிபோற்கலங்கிக்கலைமாண்டகேள்வி
வல்லார்கவிபோற்பலவான்றுறைதோன்றவாய்த்துச்
செல்லாறுதோறும்பொருளாழ்ந்துதெளிந்துதேயத்
தெல்லாரும்வீழ்ந்துபயன்கொள்ளவிறுத்ததன்றே. (௨௨)

வண்டோதைமாறாமலர்வேணியின்வந்தநீத்தங்
கண்டோதநஞ்சுண்டருள்கண்ணுதன்மூர்த்திபேழ்வாய்
விண்டோதணியாதென்விடாயெனவெம்பிவீழ்ந்த
குண்டோதரனைவிடுத்தானக்குடிஞைஞாங்கர். (௨௩)

அடுத்தானதியின்னிடைபுக்கிருந்தாற்றலோடு
மெடுத்தான்குறுங்கையிரண்டுங்கரையேறநீட்டித்
தடுத்தான்மலைபோனிமிர்தண்புனல்வாயங்காந்து
மடுத்தான்விடாயுங்கடலுண்ணுமழையுநாண. (௨௪)

நீர்த்தன்சடைநின்றிழிதீர்த்தமருந்திவாக்குக்
கூர்த்தின்புகொண்டுகுழகன்றிருமுன்னரெய்திப்
பார்த்தன்பணிந்தபதமுன்பணிந்தாடிப்பாடி
யார்த்தன்புருவாய்த்துதித்தானளவாதகீதம். (௨௫)

---

(௨௨) கவியைக்குறிக்குங்கால்:—கலங்கி என்றது-தெற்றெனப்பொருள்கொள்ளக் கிடக்காது மயங்கநிற்றலை. பலவான்றுறை-அகப்பொருட்டுறைகளும், புறப்பொருட்டுறைகளுமாகிய பலதுறைகளை. செல்லாறுதோறும் பொருளாழ்ந்து என்றது - சென்றுதேய்ந்திறுதலென்றுங்குற்றந் தங்காது முடிவுகாறுமொருதன்மைத்தாய், சித்திக்குந்தோறும் நுண்ணியபொருள்தோன்ற நிற்றலை. தெளிய-ஐயமாதி முக்குற்றங்களகல நிற்றல். பயன் - அறமுதலிய நால்வகைப்பயன்கள். நதியைக்குறிக்குங்கால்:—பலவான்றுறை-பெரியநீர்த்துறை. செல்லாறுதோறும் பொருளாழ்ந்து தெளிந்து - செல்லுமிடந்தோறும் மணி பொன்முதலிய பலபொருள்களையும் ஆழத்தையுமுடையதாய் கலங்குதல்நீங்கி. பயன் - பிரயோசனம். இறுத்தல்-நிலைபெறுதல்.

(௨௩) விண்டு-திறந்து. குடிஞை-நதி.

(௨௪) ஆற்றல்-வன்மை. அங்காந்து-வாயைத்திறந்து.

(௨௫) கூர்ந்து என்பது-கூர்த்தெனவலித்தற்பெற்றது. பார்த்தன், பிரதையின்புத்திரன், அருச்சுனன். இது தத்திதாந்தபதம். அளவாத-அளவில்லாத.

பாட்டின்பொருளானவன்பாரிடவீரன்பாடல்
கேட்டின்பமெய்திக்கணங்கட்குக்கிழமைநல்கி
மோட்டின்புனன்மண்முறைசெய்திருந்தானளகக்
காட்டின்புறம்போய்மடங்குங்கயற்கண்ணியோடும். (உகூ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தீர்த்தனிதழிச்சடைநின்றுமிழிந்துவரலாற்சிவகங்கை
தீர்த்தனுருவந்தெளிவோர்க்குஞானந்தரலாற்சிவஞான
தீர்த்தங்காலிற்கடுகிவருசெய்தியாலேவேகவதி
தீர்த்தங்கிருதமாலையெனவையைநாமஞ்செப்புவரால். (உஎ)

அன்னக்குழியும் வையையுமழைத்தபடலம் முற்றிற்று.

ஆகூ படலம் கஅ - க்கு - திருவிருத்தம் - அஎசு.

---

ஒன்பதாவது,

## எழுகடலழைத்தபடலம்.

கொச்சகக்கலிப்பா.

முடங்கன்மதிமுடிமறைத்தமுடித்தென்னன்குறட்கன்னக்
கிடங்கரொடுநதியழைத்தகிளர்கருணைத்திறனிதுமேன்
மடங்கல்வலிகவர்ந்தான்பொன்மாலைபடிந்தாடவெழு
தடங்கடலுமொருங்கழைத்ததன்மைதனைச்சாற்றுவாம். (க)

ஓதவரும்பொருள்வழுதியுருவாகியுலகமெலாஞ்
சீதளவெண்குடைநிழற்றியறச்செங்கோல்செலுத்துநாள்
போதவரும்பொருளுணர்ந்தவிருடிகளும்புனிதமுனி
மாதவரும்வரன்முறையாற்சந்தித்துவருகின்றார். (உ)

---

(உகூ) கிழமை - உரிமை. மண்முறை-உலக அரசாக்ஷி. மோடு-உயர்ச்சி.

(க) முடங்கல் - வளைவு. பொன்மாலை - காஞ்சனமாலை. மடங்கல் — நரசிம்மம். யமன்என்பதுமொன்று. கிடங்கு - கிடங்கர். இது இறுதிநிலைப்போலி.

(உ) அறம்-தருமநூல். போதம்-சானசாஸ்திரம். அறம், போதம் என்பன நூன்மேனிற்றலால் தாணியாகுபெயர்கள். இருடிகள்-சப்தரிஷிகள். முனிவர்என்பது-முனிஎன ஈறுதொக்கது.

வேதமுனிகோதமனுந் தலைப்பட்டுமீள்வானோர்
போதளவில்கற்புடையபொன்மாலைமனைபுகுந்தான்
மாதவளும்வரவேற்றுமுகமனுரைவழங்கிப்பொன்
னாதனமிட்டஞ்சலிசெய்தரியதவத்திறங்கேட்பாள். (ரு)

கள்ளவினைப்பொறிகடந்துகரைகடந்தமறைச்சென்னி
யுள்ளபொருள்பரசிவமென்றுணர்ந்தபெருந்தகையடிகே
ளள்ளரியபவமகற்றுந்தவமருள்செய்கெனக்கருணை
வெள்ளமெனமுகமலர்ந்துமுனிவேந்தன் விளம்புமால். (சு)

தவவலியாலுலகீன்றதடாதகைக்குத்தாயானாய்
சிவபெருமான்மருகனெனுஞ்சீர்பெற்றாய்திறன்மலயத்
துவசனருங்கற்புடையாய்நீயறியாத்தொல்விரத
மவனியிடத்தெவரறிவாராறனுலுமியம்பக்கேள். (ஏ)

மானதமேவாசிகமேகாயிகமேயெனவகுத்த
வீனமில்சீர்த்தவமூன்றுமிவற்றின்மானதந்தரும
தானமிசைமதிவைத்தறயவுபொறைமெய்சிவனை
மோனமுறத்தியானித்தலைந்தடக்கன்முதலனந்தம். (அ)

வாசிகமைந்தெழுத்தோதன்மனுப்பஞ்சசாந்திமறை
பேசுசதவுருத்திரந்தோத்திரமுரைத்தல்பெருந்தருமந்

(ரு) வேதமுனி - வேதங்களையுணர்ந்தமுனி. தலைப்பட்டு-சந்தித்து. முகமன் - உபசாரவார்த்தை. திறம் - பாகுபாடு.

(சு) பவம் - சனனத்தொடர்ச்சி. மறைச்சென்னி—உபநிடதம்.

(அ) மானதம்-மனத்தாற்செய்யப்படுவது. வாசிகம் - வாக்காற் செய்யப்படுவது. காயிகம் - காயத்தாற்செய்யப்படுவது, இம்மூன்று ந்தத்திதாந்தபதம். தருமம் - முப்பத்திரண்டறங்கள். தானம்-சற் பாத்திரங்கள். ஐந்து - பஞ்சேந்திரியம்.

(எ) ஐந்தெழுத்தோதலாவது - திருவருண் முன்னிலையில் ஸ்ரீ பஞ்சாட்சரத்தைவிதிப்படிமாறிச்சூக்குமமாயோதல். மநுஎன்றது-பஞ்சப்பிரமமகாமந்திரங்களை. பஞ்சசாந்தியாவது-சிவபெருமானே பொருளெனக்கூறும்உபநிடதபாகங்களை, ஐந்துகாண்டமாகமுறைப்படுத்தியோதுதல். மறைபேசுசத வுருத்திரமுரைத்தலாவது-வேதங்கள்பிரமன்முதல் சதாசிவமீறாகமுறையேயேற்றங்கூறுவதால், அவற்றுள்நடுக்கண்டமான சதவுருத்திரமனுக்களை யோகநாமத்தால் உருத்திர கணங்களைச் சங்காரக்கிரமத்தின்வைத்து அதீதசிவபரியந்தம் வரைப்படுத்திக் கூறுதல்.

காசகலவெடுத்தோதன்முதலனந்தங்காயிகங்க
ளீசனருச்சனைகோயில்வலஞ்செய்கையெதிர்வணங்கல். (எ)

நிருத்தனுறைபதிபலபோய்ப்பணிதல்பணிநிறைவேற்ற
றிருத்தன்முடிநதியாதிதீர்த்தயாத்திரைபோய்மெய்
வருத்தமுறவாடலிவைமுதற்பலவவ்வகைமூன்றிற்
பொருத்தமுறுகாயிகங்கள்சிறந்தனவிப்புண்ணியத்துள். (அ)

திருத்தயாத்திரையதிகமவற்றதிகஞ்சிவனுருவாந்
திருத்தமாங்கங்கைமுதற்றிருநதிகடனித்தனிபோய்த்
திருத்தமாடுவதரிதத்திருநதிகளவைவந்து
திருத்தமாய்நிறைதலினலவற்றதிகந்திரைமுந்நீர். (கூ)

என்றுமுனிவிளம்பக்கேட்டிருந்தகாஞ்சனமாலை
துன்றுதிரைக்கடலாடத்துணிவுடையவிருப்பினளாய்த்
தன்றிருமாமகட்குரைத்தாள்சிறிதுள்ளந்தளர்வெய்திச்
சென்றிறைவற்குரைப்பலெனச்செழியர்தவக்கொழுந்தனையாள். ()

தன்றன்னையுடையபெருந்தகைவேந்தர்பெருமான்முன்
சென்றன்னமெனநின்றுசெப்புவாள்குறள்வீரற்
கன்றன்னக்குழியினெடுமொறழைத்தவருட்கடலே
யின்றன்னைகடலாடவேண்டினளென்றிரந்தாள். (கக)

தேவிதிருமொழிகேட்டுத்தென்னவராய்நிலம்புரக்குங்
காவிதிகழ்மணிகண்டர்கடலொன்றோவெழுகடலுங்
கூவிவரவழைத்துமெனவுன்னினர்குணபாலோர்
வாவியிடையெழுவேறுவண்ணமொடும்வருவனவால். (கஉ)

---

(அ) பணி-திருப்பணிகள். திருத்தன் - தீர்த்தனென்பதன்றி ரிபு.

(கூ) திருத்தம் - தீர்த்தம். பரிசுத்தமுள்ளது. திருத்தமாய்-முட்டின்றி, சிவனுருவாங்கங்கை என்றது - காசிப்பதியிற்கங்கை வடிவமாகநின்று மரிக்குமுயிர்களுக்கு முத்தியருளுதலே.

(க0) முனி - கௌதமமுனிவர். கேட்டிருந்த என்பது-கேட்டஎன்னும் பொருள்மேனிற்றலால், இருந்து - அசைநிலையிடைச்சொல்.

(கஉ) காவி - நீலமலர். குணபாலோர்வாவி என்றது-கீழ்த்திசையிலுள்ள பொற்றாமரைத்தடாகத்தை. வண்ணம் - நிறம்.

துண்டமதித்திரளனையசுரிவளைவாய்விடவுதைத்து
வெண்டவளநுரைததும்பச்சுறுவேறுமிசைக்கொட்கத்
தண்டரளமணித்தொகுதியெடுத்தெறியுந்தரங்கநிரை
யண்டநெடுமுகடுரிஞ்சவார்த்தெழுந்தகடலேழும். (கங)

காணுமாநகர்பனிப்பக்கலிமுடிவினயன்படைப்புக்
கோணுமாறெழுந்ததெனக்கொதித்தெழுந்தகடலரவம்
பூணுநாயகனகிலபுவனமெலாங்கடந்ததிரு
வாணையாலவனடிசென்றடைந்தார்போலடங்கியதால். (கச)

தன்வண்ணமெழுகடலின்றனிவண்ணமொடுகலந்து
பொன்வண்ணநறும்பொற்குட்டப்பூம்பொய்கைபொலிவெய்தி
மின்வண்ணச்சடைதாழவெள்ளிமணிமன்றுடு
மன்வண்ணமெனவெட்டுவண்ணமொடும்வயங்கியதால். (கரு)

எழுகடலழைத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் கஅ - க்கு - திருவிருத்தம் - அஅக.

---

(கங) சுரிவளை-சுரிந்தமுகத்தையுடைய சங்குகள். சுறுவேறு ஆண்மகரம். தரங்கம்நிரை - அலைகளின்வரிசை. அண்டநெடுமுகடு என்றது - நெடியவிண்ணுலகின் முகட்டை. வெண்தவளம் - ஒருபொருட்பன்மொழி. மணித்தொகுதி - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. கொட்ப-இதுகொடுமை என்னும் பண்படியாகப்பிறந்த வினையெச்சம் சுழலவென்பதுபொருள்.

(கச) பனிப்ப - வருந்த. அரவம் - ஒலி. ஆணை-ஆக்கினை.

(கரு) தன்வண்ணமாவது - பொற்றாமரைத் தீர்த்தத்தினியற்கை நிறமாகிய, வெண்மைநிறம். மன்றுடுமன்வண்ணமென்றது-சிவபெருமான் அட்டமூர்த்தியாய் நிற்குங்கால், பிருதிவிற்குரியபொன்னிறமும், அப்புவிற்குரிய வெண்ணிறமும், தேயுவிற்குரிய செந்நிறமும், வாயுவிற்குரிய கருமைநிறமும், ஆகாயத்திற்குரியபுகைநிறமும், சந்திரனுக்குரியசுக்கிலநிறமும், சூரியனுக்குரிய ரத்தநிறமும், ஆத்மாவிற்குரியபடிகநிறமும் ஆகிய வெவ்வெண்வகைப்பட்ட நிறங்களோடுங்கலந்துநிற்றலை.

சிவமயம்.

பத்தாவது,

## மலையத்துவசனையழைத்தபடலம்.

கலிவிருத்தம்.

எழுகடலழைத்தவாறியம்பினுமினிச்
செழுமதிமரபினேன்சேணிழிந்துதன்
பழுதில்கற்பில்லொடும்பரவைதோய்ந்தர
னழகியதிருவுருவடைந்ததோதுவாம். (க)

புரவலன்றடாதகைப்பூவையோடும்வந்
துரவுநீர்க்கடன்மருங்குடுத்தசந்தன
மரவமந்தாரமாவகுளம்பாடலம்
விரவுநந்தனத்தரியணையின்மேவினான். (உ)

தாதவிழ்மல்லிகைமுல்லைசண்பகப்
போதுகொய்திளையருஞ்சேடிப்பொற்றொடி
மாதருங்கொடுத்திடவாங்கிமோந்துயிர்த்
தாதரமிரண்டறவமருமெல்லையில். (ந)

தன்னமர்காதலிதன்னைநோக்கியே
மன்னவனுன்பொருட்டேழுவாரியு
மிந்நகரழைத்தனமீண்டுப்போந்துநி
னன்னையையாடுவானழைத்தியாலென. (ச)

---

(க) சேண் - விண்ணுலகம். செழுமை - நிறைவு. பரவை-கடல். அரன் - தன்னையடைந்தோர் மலத்தொடக்கைவேரோடொழிப்பவன்.

(உ) புரவலன் - சவுந்தரபாண்டியன். பூவை - நாகணவாய்ப்பறவையைப்போன்ற இன்சொல்லையுடைய தடாதகைப்பிராட்டியார். உரவு - வலிமை. மரவம் - குங்குமமரம். வகுளம் - மகிழ். பாடலம் - பாதிரி. அரியணை-சிங்காதனம். நந்தவனம் என்பது - நந்தனம் எனநின்றது. சந்தோஷத்தைத் தரும்வனம் என்பதுபொருள.

(ந) சேடி - ஏவல்மகளிர். பொற்றொடி என்றது - பொன்னாலாகிய வளையலணிந்த தோழிப்பெண்களை. ஆதரமிரண்டற என்றது - இருதலைப்புள்ளிற் கோருயிர்போல, வோருயிர்வாய்ந்து, ஆவிற்கிருகோடு தோன்றினாற்போல ஒத்த அன்பினை உடையராயிருத்தலை. ஆதரம் - அன்பு.

மடந்தையுமன்னையைக்கொணர்ந்துவாவிமா
டடைந்தனளாகமற்றவள்புராணநூற்
படர்ந்தகேள்வியர்தமைநோக்கிப்பௌவநீர்
குடைந்திடும்விதியெவன்கூறுமென்னவே. (ரு)

கோதறுகற்பினுய்கொழுநன்கைத்தலங்
காதலன்கைத்தலமன்றிக்கன்றின்வா
லாதலிம்மூன்றிலொன்றங்கைபற்றியே
யோதநீராடுதன்மரபென்றோதினர். (சு)

மறையவர்வாய்மைபொன்மாலைகேட்டுமேற்
குறைவறத்தவஞ்செயாக்கொடியபாவியேற்
கிறைவனுஞ்சிறுவனுமில்லையேயினிப்
பெறுவதுகன்றலாற்பிறிதுண்டாகுமோ. (எ)

ஆதலாற்கன்றின்வால்பற்றியாடுகோ
மாதராயென்றுதன்மகட்குக்கூறலும்
வேதன்மால்பதவியும்வேண்டினர்க்கரு
ளுதனுருயிர்த்துணையாயநாயகி. (அ)

தன்னுயிர்க்கிழவனையடைந்துதாழ்ந்துதன்
னன்னைதன்குறையுரையாடவாண்டகை
மன்னவன்வலாரியோடொருங்குவைகிய
தென்னவன்மேன்மனஞ்செலுத்தினனரோ. (கூ)

மேற்படி - வேறு.

சிலையத்திரியார்திருவுள்ளமுணர்ந்
தலையத்திரியட்டவனுதனநீத்

---

(ரு) கொணர்ந்து - அழைத்துவந்து. கொணு என்னும் பகுதி ஈறுகுறுகி ரகரமெய்விரிந்துகொணர் எனநின்றது.

(சு) ஆதல்-இடைச்சொல். எண்டுவிகற்பப்பொருளில்வந்தது. காதலன்-புத்திரன்.

(கூ) வலாரி - வலனென்னு மசுரனைக்கொன்றவன்-இந்திரன். வைகிய — வீற்றிருந்த.

(க0) சிலை—வில். அத்திரி - மகமேருமலை. அலை - வினைத்தொகை. பறந்துதிரியும் என்பதுபொருள். அட்டவன் - சிறகுகளையறுத்தவிந்திரன். உலை-கொல்லனுலைக்களம். அத்திரி-துருத்தி. உலையத்திரியொத்த விமானமென்றது - துருத்தி, பருத்தலுஞ்சுருங்கலுமுடைமைபோல, விமானம் செல்லுதலும் இறங்குதலுமுடைமைபற்றி.

துலையத்திரியொத்தவிமானமொடு
மலையத்துவசச்செழியன்வருமால். (கo)

மண்பேறடைவான்வருமேழ்கடல்வா
யெண்பேறடையாவருளின்னமுதைப்
பெண்பேறதனாற்பெறுபேறிதெனக்
கண்பேறடைவானெதிர்கண்டனனே. (கக)

வந்தான்மருகன்சரணம்பணிவான்
முந்தாமுனமாமனெனும்முறையா
லந்தாமரையங்கையமைத்துமகட்
டந்தானையெதிர்ந்துதழீஇயினனால். (கஉ)

ஆத்தன்றிருவுள்ளமகிழ்ந்தருளாற்
பார்த்தன்புநிரம்பியபன்னியொடுந்
தீர்த்தம்புகுந்தாடியசெல்கவெனப்
பூத்தண்பொருனைப்புனனாடவனும். (கங)

முன்னைத்தவமெய்திமுயன்றுபெறு
மன்னப்பெடையன்னவள்வந்தெதிரே
தன்னைத்தழுவத்தழுவிக்கிரிவேந்
தென்னக்குறையாமகிழ்வெய்தினனே. (கச)

தண்டேமொழிவேள்விதவக்குறையாற்
கண்டேனிலனென்றுகருத்தவல
முண்டேயஃதிவ்வுவகைக்களிதேன்
வண்டேயெனவுண்டுமறந்தனனால். (கரு)

---

(கக) பேறு-பயன். எழ்கடல்வாய் எண்பேறு அடையா அருள் இன் அமுதைஎன்றதற்கு - எழுகடலின் அருகில்எழுந்தருளியிருந்த அளவிடுதற்கரிய இனியஅமுதம்போன்ற தன்மருகனை என்பது பொருள்.

(கங) பொருனை - தாமிரவர்ணி. புனனாடவன் - நீர்வளமிக்க பாண்டிநாட்டையுடையமலயத்துவசன். ஆடியசெல்க என்றது-செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சமாதலின் வருமொழி வல்லெழுத்து இயல்பாய் நின்றது.

(கச) கிரிவேந்து - மலையரசன்.

(கரு) தேமொழி-அண்மைவிளி. வேள்வி - திருமணம். அவலம்-கவலை. இவ்வுவகை என்றது-(திருமணத்தில் உடனிருந்ததிருக்கோலம்போல, இங்கும்பெருமானும் பிராட்டியும் உடனிருந்ததிருக்கோலங்கண்ட) பெருமகிழ்ச்சியை.

சேணுற்றவனைச்சிலநாள்கழியக்
காணுற்றவள்போனிறைகற்புடையாள்
பூணுற்றுமலர்ந்ததொர்பொற்கொடிபோ
னுணுற்றெதிர்நண்ணியிறைஞ்சினளால். (கசு)

மஞ்சோதியஞ்சனமாலைகையிற்
பைஞ்சோதிவிளங்குபவித்திரையாய்ச்
செஞ்சோதிமுடிச்சிவநாமவெழுத்
தஞ்சோதிநெடுங்கடலாடுமரோ. (கஎ)

துங்கக்கலைவேதியர்தொன்மறைநூற்
சங்கற்பவிதிப்படிதன் றுணைகை
யங்கைத்தளிர்பற்றியகத்துவகை
பொங்கப்புணரிப்புனலாடினனே. (கஅ)

குடைந்தார்கரையேறினர்கொன்றைமுடி
மிடைந்தார்கருணைக்கண்விழிக்கமல
முடைந்தாரனைமாருதரங்குறுகா
தடைந்தாருமைபாகரருட்படிவம். (கசு)

ஒண்கொண்டன்மிடற்றொளியும்மொருநா
லெண்கொண்டபுயத்தெழிலும்மழல்சேர்
கண்கொண்டநுதற்கவினும்பொலியா
மன்கண்டுவியப்பவயங்கினனால். (உ0)

விண்ணின்றுவழுக்கிவிழுங்கதிர்போற்
கண்ணின்றநுதற்கருணாகரன்வா
ழெண்ணின்றபுரத்தினிழிந்திமையா
மண்ணின்றதொர்தெய்வவிமானமரோ. (உக)

---

(கசு) சேண்-தூரதேசம். நாண் உற்று என்றது-சிவபெருமான் றிருவருளால்வந்த தமதுகணவனைக் கைப்பற்றுதற்கு மங்கலநாண் பூண்டமையை. இவ்வுண்மை, ஆலாஸ்யமகத்துவத்திலும் வருதல் காண்க.

(கஎ) மஞ்சு-மேகம். ஓதி கூந்தல் பைஞ்சோதி-பசியகிரணம். பவித்திரை-பவித்திரமுடையவள். பவித்திரம்-பாபத்தைநீக்கி முத்தியையளிப்பது. பைஞ்சோதி பவித்திரம் என்றது-தருப்பைப்பவித்திரமாதலின்.

(கசு) மிடைந்தார்-தரித்தவர். அடைந்தாருமைபாகரருட்படிவம் என்றது-சிவசாரூப்பியப்பேற்றை.

(உக) கதிர்-சூரியன். கருணாகரன்-அருளே திருமேனியாகவுடையசிவபெருமான். எண்ணின்றபுரம்என்றது-திருமால்முதலியோரெண்ணத்தில் நிலைபெற்று நின்றசிவபுரத்தை. மண்-நிலவுலகம்.

அத்தெய்வவிமானமடுத்திடலு
முத்தெய்வதமுக்கணவன்பணியா
* னத்தெய்வதநுக்கரனங்கையொடு
மெத்தெய்வதமுந்தொழவேறினனால். (உஉ)

தேமாரியெனும்படிசிந்தநறும்
பூமாரிபொழிந்ததுபொன்னுலகந்
தூமாமறையந்தரதுந்துபிகா
ராமாமெனவெங்குமதிர்ந்தனவால். (உங)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

எழுந்ததுவிமானம்வானமெழுந்ததுந்துபியுநாணி
விழுந்ததுபோலுமென்னவரவொலியெங்கும்விம்மத்
தொழுந்தகைமுனிவரேத்தச்சுராதிகள்பரவத்திங்கட்
கொழுந்தணிவேணிக்கூத்தர்கோனகர்குறித்துச்செல்வார். (உச)

முன்புதன்னுருவாய்வையமுறைபுரிகோல்கைக்கொண்டு
பின்புதன்னுருவந்தந்தமருகனும்பெருகுகேண்மை
யன்புதந்தருகுநின்றதடாதகையணங்குமீண்டு
பொன்புனைகுடுமிக்கோயில்புகுந்துநன்கிருப்பக்கண்டார். (உரு)

முன்னைவல்வினையால்யாக்கைமுறைதடுமாறித்தோற்ற
மன்னியமனிதர்போலப்பண்டையவடிவமாறி

(உஉ) முத்தெய்வதம்-சோமசூர்யாக்னியென்னு மூன்றுதெய்வங்கள். * நத்தெய்வதருக்கரன் என்புழி, நகரம் சிறப்புப்பொருட்கண்வந்தது; நக்கீரனார் நப்பாலத்தனார் என்பனவற்றின் நகரம் போல, நங்கை - காஞ்சனமாலை.

(உங) தேம் மாரி - இனிய மழை. (உச) அர ஒலி - அரகர வென்னுமுழக்கம். கோநகர் என்றது - அயன்பதமுதலிய எல்லாப் பதங்களுக்குந் தலைமைபெற்றுள்ள சிவபுரத்தை.

(உரு) முன்பு தன்னுருவாய் என்றது-பாண்டியர் திருவுருவங் கொண்டமையை. பின்பு தன்னுருவம் என்றது-சிவபெருமான்திருவுருவமாகிய சாரூப்பியத்தை; எனவே சிவபெருமான் பாண்டியனது திருவுருவைத் தான்பெற்றுத் தனது திருவுருவத்தைப் பாண்டியனுக்களித்தாரென்பது கருத்து. குடுமி-சிகரம்.

(உசு) முன்னை வல்வினை - அனாதியேயுள்ள பாசவினை. யாக்கைமுறைதடுமாறி என்றது - எழுவகைத் தோற்றங்களிலும் மாறி மாறிப் பிறந்தலொழிந்தமையை. தோற்றமன்னிய மனிதர் என்றது-அத்தோற்றங்களுள் தேவர்முதலிய வுயிர்களின் சரீரங்களைப் பெறுதற்கு தனிதயாக்கையே காரணமாக நிற்றலை. பண்டைய வடிவம் - சத்தியும், சிவமும்.

யன்னையேமகளாயீன்றவப்பனேமருகனாக
வென்னயாநோற்றேமியார்க்குமியற்றருந்தவந்தானென்னா. (உ௬)

கன்றகலான்போலையன்கனைகழல்விடாதுபற்றி
யொன்றியவன்புபின்னின்றீர்த்தெழவுள்ளத்தோடுஞ்
சென்றிருகண்ணுமுட்டியடிக்கடிதிரும்பிநோக்கக்
குன்றுறழ்விமானந்தன்னையஞ்சலிகூப்பிச்செல்வார். (உஎ)

மேற்படி - வேறு.

புவலோகங்கடந்துபோய்ப் புண்ணியருக்கெண்ணிறந்த போக மூட்டுஞ், சுவலோகங்கடந்துபோய் மகாலோகஞ்சனலோகந் துறந் துமேலைத், தவலோகங்கடந்துபோய்ச் சத்தியலோகங்கடந்து தண் டுழாயோ, னவலோகங்கடந்துலக நாயகமாஞ்சிவலோக நண்ணி னாரே. (உஅ)

அறக்கொடிபின்னிறைமகனை யடிபணிந்துதனையீன்றார்க் கா திவேத, மறைப்பொருடன்வடிவளித்த வருளின்மனநிறைமகிழ்ச்சி வாய்கொள்ளாமற், புறப்படுவதெனவிரண்டு திருச்செவிக்குஞ்செங் குமுதம் பொதிந்ததீந்தே, னிறைப்பதெனப்பன்முறையாற் றுதி செய்துதொழுதொன்று நிகழ்த்தா நின்றாள். (உ௯)

---

(உஅ) புவலோகம் - சந்திரசூரியர்முதலியோர் வசிக்கும்பதம். சுவலோகம் - இந்திரனிருக்கும்பதம். மகலோகம் - மரீசி, மார்க் கண்டர், சித்தர்முதலியோர் வசிக்கும்பதம். சனலோகம் - கவ்விய வாகனர், அனலர், சோமர், யமர், அரியமணர், அக்கினி வாக்கர், பொக்கிஷ், ஆசிபபர், சோமயா என்று சொல்லப்பட்ட பிதிர்த்தே வர்களும், சங்கரிஷணர், வாசுதேவர், பிரத்துய்மினர், நிருத்தர் என்னும் நால்வரும், அத்தசீயசாரமும் மதனமுதலாயினோருமிருக் கும்பதம். தவலோகம்-சனகர், சனற்தனர், சனாதரர், சனற்குமாரர், சங்கு, திரிசங்கு, ரிபு என்னும் எழு முநிவர்களும் தவஞ்செய்தி ருக்குமிடம். சத்தியலோகம் - கிழக்கே இந்திரநீலநிறம் வாய்ந்த இருக்குவேதமும், வடக்கே படிகநிறம் வாய்ந்த யசுர்வேதமும், மேற்கே பதுமராக நிறம் வாய்ந்த சாமவேதமும், தெற்கே கருமை நிறம் வாய்ந்த அதர்வணவேதமுமிருக்க, மத்தியில் பிரமனிருக்கும் பதம். நவலோகம் - ஆன்மகோடிகளைப் பாதுகாக்குந் திருமால் வசிக்கும்பதம். சிவலோகம் - பிரம விஷ்ணுக்கள் சேவிக்க உருத் திரமூர்த்தி எழுந்தருளியிருக்கும் பதம்.

(உ௯) செவிக்கும் - உருபு மயக்கம்.

எண்ணிறந்ததேவர்க்கும் யாவர்க்கும்பயன்சுரக்கு மிமையோர் நாட்டுப், புண்ணியவான் றன்புனிற்றுக் கன்றுக்குக்குறைவேதென் பொருட்டென்னின்று, ளெண்ணியதுகடலொன்றே யெழுகடலு மீண்டழைத்தா யின்றுளாட, விண்ணிருந்தகணவனையும் விளித்து னருள்வடிவளித்துன் மேனுடந்தாய். (௩௦)

தென்னர்மரபிறந்ததெனப் படுபெழியிலாழவருஞ் செவ்விநோக்கிப், பொன்னவிர்தார்முடிபுனைந்து கோலோச்சிவருகின்றாய் போலுமேலு, மிந்நிலைமைக்கிடையூறு மினியின்றேயெனத்தலைவி யியம்பலோடுந், தன்னிறைவியுட்கோளை யகங்கொண்டுமகிழ்ந்திருந்தான் றமிழர்கோமான். (௩௧)

மலயத்துவசனையழைத்தபடலம் முற்றிற்று.

ஆக படலம் ௧௧ - க்கு - திருவிருத்தம் - ௬௨௦.

---

பதினோராவது,

## உக்கிரபாண்டியனது திருவவதாரப்படலம்.



கலிநிலைத்துறை.

மன்னவன்குலசேகரன்றிருமகன்மனைவி
தன்னெடுங்கடலாடியதகுதியீதந்தத்
தென்னவன்றனித்திருமகடிருவுளங்களிப்ப
வுன்னருந்திறலுக்கிரனுதித்தவாறுரைப்பாம். (௧)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தண்ணிலாமௌலிவேய்ந்தசுந்தரசாமினூலத்
தெண்ணிலாவைகறன்னதிணையடிநிழல்போல்யார்க்குந்

---

(௩௦) புண்ணிய ஆன் என்றது - புண்ணிய வடிவாகிய காமதேனுவை. புனிறு-இளமை. அருள்வடிவு-சாரூப்பியம்.

(௩௧) செவ்வி - காலம். இடையூறு-இடையுறுதல். உட்கோள்-உட்கிடை: அதாவது - மனக்கொள்கை.

(௨) சுந்தரசாமி-சவுந்தரபாண்டியர். எண்ணிலாவைகல் என்றது - அறுபத்தாறுயிரம்வருடம் அரசுபுரிந்தமையை. உண்ணிலாவுயிர்-எல்லாவுடம்பினுள்ளும் விளங்கும் உயிர்த்தொகைகள்.

தெண்ணிலாக்கவிகைநீழல்செய்தருட்செங்கோலோச்சி
யுண்ணிலாவுயிர்தானாகிமுறைபுரிந்தொழுகுநாளில். (உ)

கரியவன்கமலச்செம்மன்மறைமுதற்கலைகள்காண்டற்
கரியவனன்பர்க்கென்றுமெளியவனாகுமேன்மை
தெரியவன்பகன்றசிந்தைத்தென்னவன்றனக்குங்கற்பிற்
குரியவடனக்குங்காதன்மகளெனவுமையைத்தந்தான். (ங)

மற்றதற்கிசையத்தானுமருமகனாகிவையம்
முற்றும்வெண்குடைக்கீழ்வைகமுறைசெய்தானாகமூன்று
கொற்றவர்தம்மிற்றிங்கட்கோக்குடிவிழுப்பமெய்தப்
பெற்றதுபோலுமின்னம்பெறுவதோர்குறைவுதீர்ப்பான். (ச)

ஒன்றினைச்செய்கைசெய்யாதொழிகைவேறொன்றுசெய்கை
யென்றிவையுடையோனாதியீறிலாப்பரமயோகி
நன்றுதீதிகழ்ச்சிவேட்கைநட்பிகல்விளைக்குமாயை
வென்றவன்செய்யுமாயைவிருத்தியாரளக்கவல்லார். (ரு)

---

(ங) தென்னவன்-மலயத்துவசபாண்டியன். கற்பிற்குரியவள் என்றது - கற்பின்கிழத்தியாராகிய காஞ்சனமாலையை.

(ச) மூன்றுகொற்றவர் - சேரசோழபாண்டியர். திங்கள்கோக்குடி-சந்திரன்வழிவந்த பாண்டியர்மரபு. விழுப்பம்-மேன்மை. இன்னும் பெறுவதோர்குறைவு என்றது-தமக்குப்பின் அரசின்மையை.

(ரு) ஒன்றினைச்செய்கை-ஈஸ்வரன்பிரபுத்வசாமர்த்தியகுணங்கள் மூன்றனுளொன்றாகிய (கர்த்தத்துவம்) செய்யாதொழிகை அகர்த்தத்துவம். வேறொன்றுசெய்கை-அன்னிய தாகர்த்தத்துவம். ஆதியீறிலாப் பரமயோகி என்றது - மேற்கூறிய முக்குணங்களும், ஆன்மாக்களின் பொருட்டேயன்றித், தனக்கோர்முதலும் இறுதியுமில்லாதவ னென்பதைக்குறித்து நின்றது. இகழ்ச்சி—வெறுப்பு. வேட்கை-விருப்பம். அவன்செய்யுமாயை விருத்தியாரளக்க வல்லாரென்றது - ஆன்மாக்கள் பந்தத்தின்கண் அது அதுவாயும், முத்தியின்கண், மாயாகருவிகண்முற்றும்நீங்கி முதல்வனோடொன்றாயும் நிற்குந் தன்மையனவாய், இடையாயுள்ள சுத்தத்தில் அரிதிற்றெளியு மரபாயிருத்தலாலும், அவன்செயலையறிவது அரியதிலரிய தென்பதை விளக்கிநின்றது.

இந்திரசாலவிச்சைகாட்டுவோனென்னத்தன்பாற்
செந்தழனாட்டமீன்றசெல்வனைக்கருப்பமெய்தா
தந்தமிலுயிருஞாலமனைத்தையுமீன்றதாயாஞ்
சுந்தரவல்லிதன்பாற்றோன்றுமாறுள்ளஞ்செய்தான். (சு)

அங்கவன்வரவுக்கேற்பவாயமும்பிறருந்தாழ்ந்து
மங்கைநின்வடிவுக்கேற்பக்கருவுருவனப்புஞ்சீருந்
திங்கடோறுற்றுமன்றற்செவ்வியுங்காணவாசை
பொங்கியதெங்கட்கென்றார்புனிதையப்படிபோலானாள். (எ)

கருமணிசிகரச்செம்பொற்கனவரையனையகாட்சித்
திருமுலையமுதம்பெய்தசெப்பிரண்டனையவாக
வருமுலைசுமந்துமாய்ந்தமருங்குலும்வந்துதோன்ற
வருள்கனிந்தனையாளுவிற்கின்சுவையார்வம்பொங்க. (அ)

என்னவுமெளியவேனுமரியனவென்னவேட்டா
ளன்னவும்போகபூமியரும்பெறலுணவுநல்கிப்
பன்னகரமுதுந்திங்கட்படுசுவையமுதுந்தெய்வப்
பொன்னகரமுதுமாசைபுதைபடக்கணங்கணல்க. (கூ)

புண்ணியமுனிவர்வேதபண்டிதர்போந்துவேந்தர்க்
கண்ணியசடங்குமூதூரருங்கடிவெள்ளத்தாழ

---

(சு) இந்திரசாலவிச்சை காட்டுவோனென்றது - கருப்பத்தில் தோன்றுவதுபோலப் பிறர்கண்களுக்குக் காணப்பட்டும்,அவ்வாறு தோன்றாமையை. செந்தழல் நாட்டமீன்ற செல்வன்என்றது - செவந்தநுதற்கண் தந்தருளிய இளையபிள்ளையாரை.

(எ) ஆயம் - மகளிர்கூட்டம். மன்றல்செவ்வி - திருவிழாப் பொலிவு.

(அ) கருமணி - நீலரத்தினம். கனகம் — கனிந்தால், என்பவற் றீறுதொக்குக், கனம், கனிந்து எனநின்றன.

(கூ) போகபூமி என்றதை - ஆதியரிவஞ்சம் நல்லரிவஞ்சம், ஏமதவஞ்சம் ஏமவஞ்சம், தேவகுருவஞ்சம் உத்தரகுருவஞ்சம், எனப்போகபூமியறுவகைப்படுமே. என்பதனாலுணர்க. பன்னகரமுதமென்றது - பலநகரங்களிலுள்ள அமிர்தமொத்தவுணவுகளை. திங்கட்படு சுவையமுதமென்றது - சந்திரமண்டலத்துள்ள சுவைமிகுந்த அமுதத்தை. பொன்னகரமுதம் - தேவருலகிலுள்ளவமுதம்.

வெண்ணியதிங்கடோறுமியற்றவிக்கன்னித்தெய்வம்
பண்ணியதருமச்சார்பாற்பயென்றலைப்பாடெய்த. (௧0)

மாசறத்துறந்தோருள்ளமானவான்களங்கநீங்க
வீசர்தங்கிழமையென்னுமிந்துவாதிரைநாள்செய்த
பூசையின்பயின்றுனெய்தவெரிபசும்பொற்கோள்வந்து
தேசொடுகேந்திரத்திற்சிறந்தநல்லோரைவாய்ப்ப. (௧௧)

முந்தைநான்மறைகடாமேமுழங்கமந்தாரமாரி
சிந்தநாண்மலர்பூத்தாடுமின்னெனத்திசைகடோறு
மந்தரமகளிராடத்துந்துபியைந்துமார்ப்ப
விந்தையுந்திருவும்வெள்ளைக்கிழத்தியும்வீறுவாய்ப்ப. (௧௨)

---

(௧0) வேந்தர்க்கண்ணிய சடங்கென்றது - அரசர்க்குவிதித்தக ருப்பாதானம், புஞ்சவநம், சீமந்தம்,விண்டுபலி என்னும் நால்வகை க்கருமங்களை. இவற்றுள், கர்ப்பாதானமாவது-கருப்பந்தரிக்கும்படி செய்யுங்கிரியை. புஞ்சவநமாவது-வாமதேவமந்திரத்தால், ஆயிரம், அல்லது நூற்றெட்டுதரம் ஓமஞ்செய்து, அந்தமந்திரத்தினலேயே ஆண்மகவுபிறக்கும்படி, ஆலந்தளிர், பால், உளுந்து இவைகளைக் கொண்டு கருப்பவதியின் நாசியிற்பிழியுங்கிரியை. சீமந்தமாவது வியாகிரிதி மந்திரத்தாலும், அகோரமந்திரத்தாலும், நூற்றெட்டு தரம் ஓமஞ்செய்து, தருப்பை, அத்தி, அரக்கொம்பு, மூன்றிடத்து விளர்ப்புள்ளபன்றிமுள் இவைகளைக்கூட்டி, வித்தியாங்க மந்திரத் தினல் தலைமயிரை வகிரும்படி நெற்றிமுதன்மே விழுத்துச்செய் யுங்கிரியை. விண்டுபலியாவது-சீமந்தச்சடங்கி னுறுப்புக்களிலொ ன்றுய், இருடிகேசன்முதலிய திருநாமங்களால் திருமாலைக்காலையி லும், மாலையிலும் ஆவாகனஞ் செய்தருச்சித்து, அகோரமந்திரத்தி னுலும், வியாகிரிதியினுலும், நூற்றெட்டு ஓமங்களையும், விண்டுமநு வால் ஆறுஓமங்களையும், நெய்யினல் ஆறு ஓமங்களையுஞ்செய்து முடிவில் எட்டுப்பிரமசரியருக் கன்னமூட்டிக், கருப்பவதியின் வயிற் றிலுள்ள சிசுவுக்கு வலிமையுண்டாகச் செய்யுங்கிரியை. திங்கடோ றுமென்றது - புஞ்சவநம், இரண்டாவது அல்லது நான்காவதுமா தங்களிலும்; சீமந்தம்-நான்கு, எட்டுமுதலிய விரட்டித்த மாதங்க ளிலும்: செய்வதாதலின்.

(௧௧) பொற்கோள் - பிரகஸ்பதி.

(௧௨) அந்தரமகளிர் - அரம்பையர்கள் விந்தை — வீரலட்சுமி. திரு — இலக்குமி. வெள்ளைக்கிழத்தி - நாமகள். வீறு - இறுமாப்பு

அந்தணர்மகிழ்ச்சிதூங்கவடுத்தவர்வளர்க்குமுன்னர்
மந்திரவேள்விச்செந்தீவலஞ்சுழித்தெழுந்தார்த்தாடச்
சிந்துரநுதன்மாவெட்டுஞ்சேடனும்பொறையெய்ப்பாற
விந்திரன்மேருப்புத்தேள்புனலிறைக்கிடத்தோளாட. (கங)

ஆலத்தையமுதமாக்குமண்ணலுமணங்குங்கொண்ட
கோலத்துக்கேற்பக்காலைக்குழந்தைவெங்கதிர்போலன்றைக்
காலத்திலுதித்தசேய்போற்கண்மழைபிலிற்றுநிம்ப
மாலைத்தோட்செழியன்செல்வமகள்வயிற்றோன்றினனே. (கச)

எடுத்தனண்மோந்துபுல்லியேந்தினள்காந்தன்கையிற்
கொடுத்தனள்வாங்கிவீங்குகொங்கைநின்றிழிபால்வெள்ளம்
விடுத்தனள்குமுதப்போதில்வெண்ணிலாவெள்ளம்போல்வாய்
மடுத்தனளருத்தினுடன்மைந்தனையெம்பிராட்டி. (கரு)

சலத்தலைகிடக்கைப்புத்தேட்ருநிழல்வாழ்க்கைப்புத்தே
ளலர்த்தலையிருக்கைப்புத்தேளாதிப்புத்தேளிர்வேதப்
புலத்தலைக்கேள்விசான்றபுண்ணியமுனிவரேனோர்
குலத்தலைமகளிரோடுங்கோமகன்கோயில்புக்கார். (கசு)

குடபுலத்தரசும்பொன்னிக்குளிர்புனற்கோழிவேந்தும்
வடபுலத்தரசர்யாருங்குறுநிலவாழ்க்கைச்செல்வத்
தடல்செழுதொண்டைத்தண்டாரரசொடுமெனிகஞ்சூழக்
கடல்களுற்றிசையும்பொங்கிவருவபோற்கலிப்பவந்தார். (கஎ)

---

(கங) மாவெட்டும் என்றது-ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீபம் என்னும் அஷ்டகசங்களை. பொறை - பொறுத்தல். எய்ப்பு - இளைப்பு. மேருப்புத்தேள் - மேருத்தெய்வம். புனலிறை - வருணன்.

(கச) சேய் - குமாரக்கடவுள். (கரு) புல்லி-தழுவி. காந்தன் - கணவன். குமுதப்போது - அல்லிமலர். எடுத்தனள், ஏந்தினள், கொடுத்தனள், விடுத்தனள், மடுத்தனள் என்பனமுற்றெச்சங்கள்.

(கசு) சலத்தலைக் கிடக்கைப்புத்தேள் - திருமால். தருநிழல் வாழ்க்கைப்புத்தேள் - இந்திரன். அலர்த்தலையிருக்கைப்புத்தேள் - பிரமன். புத்தேளிர் - தேவர். கோமகன் - சவுந்தர பாண்டியன்.

(கஎ) குடபுலத்தரசு - சேரன். பொன்னி - காவிரி. கோழி - உறையூர். கோழிவேந்தன் - சோழன். வடபுலத்தரசரென்றது-வடதேயத்திலுள்ள கஜபதிமுதலிய அரசர்களை. தொண்டைத்தண்டாரரசு என்றது - தொண்டை மண்டலத்தரசனை.

மன்னனைத்தேவிதன்னைமுறையினல்வழுத்திவாழ்த்தி
நன்னர்கோளாகியோகைகநவின்றுவெண்மழுமானீத்த
தென்னவர்பெருமான்றேவிதிருமுகக்கருணைபெற்றுப்
பொன்னடிபணிந்துதம்மூர்போகுவாரினையசொல்வார். (கஅ)

வழுதியர்பெருமான்றன்பாற்கந்தனேவந்தானென்பார்
பழுதறுகற்பினுடன்பாக்கியமிதுவேயென்பா
ரழகினுன்மதனும்பெண்மையவாவுறுமிவன்கோலானை
யெழுகடலுலகோவையமேழையுங்காக்குமென்பார். (கக)

மனிதர்வான்றவமோதென்பார்வைகுவோர்தவமோவானப்
புனிதர்வான்றவமோவேள்விப்பூசுரர்தவமோகேள்வி
முனிவர்வான்றவமோவீறுமுதலிலாமுதல்வனுள்ளக்
கனிதருகருணைபோலிக்காதலன்றோற்றமென்பார். (உ0)

தருமமாதவத்தின்பேறேவருத்தமாதவத்தின்பேறே
பெருமைசால்காமநோற்றபெருந்தவப்பேறேவெய்தற்
கருமையாம்வீடுநோற்றவருந்தவப்பேறேவிந்தத்
திருமகனென்றுதம்மில்விளுய்மகிழ்சிறப்பச்சென்றார். (உக)

அவ்வவர்மனைகடோறுமங்கலவணிகளாகக்
கௌவைமங்கலங்களார்ப்பக்கடிநகரெங்கும்பொங்க
நெய்விழாவெடுப்பக்கேள்விநிரம்பியமறையோர்க்கீந்த
தெய்வமாதானநீத்தந்திரைக்கடன்மடுத்ததம்மா. (உஉ)

சுண்ணமும்பொரியுந்தூவெள்ளரிசியுந்தூர்வைக்காடுந்
தண்ணறுஞ்சிவிறிவீசுதண்பனிநீருஞ்சாந்து
மெண்ணெயுநானச்சேறும்பசையறவெடுத்துவாரிக்
கண்ணகனகரமெங்குங்கழுவினதானவெள்ளம். (உரு)

செம்பொன்செய்துருத்திதூம்புசெய்குழல்வட்டமாக
வம்பொன்செய்சிவிறிவெண்பொனண்டைகொண்டாரந்தூங்கும்

(கஅ) கோள் - ஏற்றுக்கொள்ளுதல். ஓகை - மகிழ்ச்சி.

(உ0) தென்பார் - பாண்டிநாடு. பூசுரர்-அந்தணர். (உக) அருத்தம் - பொருள். (உஉ) கௌவை - முழக்கம். நெய்விழா - எண்ணெய்விழா.

(உரு) தூர்வைக்காடு - அறுகின் குப்பை. தானவெள்ளம் - தானநீர்ப்பெருக்கு - அல்லது, மதநீர்ப்பெருக்கு.

(உச) துருத்தி, குழல், சிவிறி, அண்டை, இந்நான்கும் ஒவ்வோர்வகையான நீரிறைக்குங் கருவிகள். தூம்பு - தொளை. மாறி ஆடலாவது - துருத்தியுஞ் சிவிறியுமேந்திய பெண்கள்; குழலும், அண்டையும் ஏந்திநீர் தூவலும்; குழலும் அண்டையுமேந்திய புருஷர்கள்; துருத்தியும் சிவிறியும் ஏந்திநீர் தூவலுமாம். அனங்கன் (தேகமில்லாதவன்) மன்மதன்.

வம்பஞ்சுமுலையினருமைந்தருமாறியாட
வம்பஞ்சுமாறிமாறியனங்கனுமாடல்செய்தான். (உச)

இன்னணங்களிப்பமூதூரிந்துவாதிரைநன்னாளிற்
பொன்னவன்கேந்திரித்தபுனிதலக்கினத்திற்போந்த
தென்னவர்பெருமான்சேய்க்குச்சாதகச்செய்தியாதி
மன்னவர்க்கியன்றவேதமரபினல்வயங்கவாற்றி. (உரு)

கரியவெண்டிரைநீர்ச்செல்வன்கல்லிறகரிந்தவென்றித்
தெரியலனுலகந்தாங்குதெய்வதவரைக்கோனுதித்
தரியலர்வீரஞ்சிந்தத்தருக்கழித்தச்சந்தோற்றற்
குரியகாரணத்தானுமமுக்கிரவருமனென்றான். (உசு)

நாலாகுமதியிற்சந்திமிதிப்பதுநடத்தியாறும்
பாலாகுமதியிலன்னமங்கலம்பயிற்றியாண்டின்
மேலாகுமதியிற்கேசவினைமுடித்தைந்தாமாண்டி
னூலாறுதெரிந்துபூணநூற்கடிமுடித்துப்பின்னர். (உஎ)

---

(உரு) மூதூர் - தொன்று தொட்டுள்ள மதுரைநகர். பொன்னவன்-குரு. கேந்திரித்த - கேந்திரஸ்தானமடைந்த. சாதகன்மமாவது-புத்திரோற்பத்தியாய காலத்தில், அஸ்திரமந்திரத்தால் நூறு ஓமஞ்செய்து, வாமமந்திரத்தால் புத்திரன்முகத்தை யெதிர் நோக்கிப், பஞ்சப்பிரம மந்திரங்களையுச்சரித்து, உச்சியைமோந்து, தற்புருடமந்திரத்தை வலக்காதில் செலுத்தல். ஆதியென்றது-உத்தாபனக்கிரியையை. அதாவது, அசுத்தமாகிய அறைவீட்டினின்றும் சுத்தமாகிய வுயர்ந்தவிடத்தில் குழந்தையைச் சேர்ப்பிக்குங்கிரியை.

(உசு) கரிய-பெரிய. நீர்ச்செல்வன்-வருணன். கல்லிறகு அறிந்தவென்றித் தெரியலன் - இந்திரன். தெரியல் - மாலை. வரைக்கோன் - மகம்மேரு அரசன் தரியலர்-பகைவர். தருக்கு-செருக்கு. உக்கிரவருமன் - உக்கிரமே கவசமாகவுடையவன். இதுநாமகரணச் சடங்கைக் குறித்தது. நாமகரணமாவது - பெயரிடுதலிற் செய்யுங் கிரியை.

(உஎ) சந்திமிதிப்பது என்றது - பிரவாசக்கிரியையை. அதாவது - நான்காமாதத்தில் குழந்தையையெடுத்துக்கொண்டு ஆலயத்திற்குச் செல்லுங்கிரியை; அல்லது-நாற்சந்தி கூடுமிடத்திற் செல்லுதல். அன்னமங்கலம்-அன்னப்பிராசநக்கிரியை. அதாவது, ஆறுவதுமாதத்தில் சோறூட்டுதலிற் செய்யுங்கிரியை. கேசவினை-சௌளக்கிரியை. அதாவது-பதின்மூன்றுவதுமாதத்தில் மயிர்வினைக்குச் செய்யுங்கிரியை. பூணநூற்கடி - உபநயக்கிரியை. அதாவது-ஐந்தாவதுவருடத்தில் பரமசிவத்தைத் தரிசிப்பதற்குச் செய்யுங்கிரியை,

பதநிரைபாழிச்சாகையாரணம்பணைத்தவேத
முதனிரைக்கலையும்வென்றிமுரிவிற்கலையும்வாளு
மதநிரையொழுகுமையன்மாநிரைவையம்பாய்மா
விதநிரையேற்றமற்றுமுணர்த்திஞன்வியாழப்புத்தேள். (உஅ)

குருமுகத்தறியவேண்டுமென்பதோர்கொள்கையாலே
யொருமுறைகேட்டாங்கெண்ணென்கலைகளுமொருங்குதேறி
யரனலதொருவராலுந்தேற்றுவதருமையாலப்
பரனிடைத்தெளிந்தான்பாசுபதாத்திரப்படையுமன்னோ. (உகூ)

எல்லையில்கலைகளெல்லாமகவைநாலிரண்டின்முற்றத்
தொல்லறிவுடையானுகிக்குரவரைத்தொழுதுபோற்ற
வல்லவனுகியன்ஞர்மகிழ்ச்சிகொள்கலனுய்வென்றிச்
செல்வவேற்றிளையரோடுந்திருவிளையாடல்செய்வான். (௩0)

புகர்மதவேழமுட்டிப்போர்விளையாடிவென்றுந்
தகரொடுதகரைத்தாக்கித்தருக்கமராடிவென்றும்

---

(உஅ) பதநிரைபாழி சாகையாரணம்பணைத்தவேத முதனிரைகலை என்றது-காண்டோபக்கிர மணக்கிரியையை. அதாவது வேத பாகங்களை அத்தியயனஞ்செய்ய ஆரம்பிக்குங்கிரியை. பதம்-வாசகம். நிரை - பூர்வபூர்வபதத்தை அனுசரித்து, உத்தரோத்தரபதத்தை யுச்சரிக்குங்கிரமம். பாழி - இரண்டுபெதத்தை யெடுத்துக் கொண்டு பூர்வபதத்தையொரு முறையுச்சரித்து, உத்தரபதத்தை இரண்டு முறையுச்சரித்து, மீட்டும்பூர்வபதத்தை இரண்டுமுறையுச்சரித்து, உத்தரபதத்தை ஒருமுறை யுச்சரிக்குஞ்சடை. சாகை - சத்தகாண்டத்தின்வேறுயுள்ளது. ஆரணம் அச்சாகையில் பத்துப்பிரச்சினங்கள்கூடியது. பணைத்த என்றதற்கு-இவ்வுறுப்புக்களால் நிரம்பிய வென்பது பொருள். வேதமுதல் நிரைகலை என்றது-மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் என்னும் ஆறு அங்கங்களை. விற்கலை-தனுர்வேதம். வாள் - வாட்பயிர்ச்சிக்குரியநூல். மாஏற்றம் - யானையேற்றம். வையம்-தேர். பாய்மா-குதிரை.

(உகூ) கொள்கை-கோட்பாடு எண்ணெண்கலை-அறுபத்து நான்கு கலைகள். (௩0)நாலிரண்டகவை-எட்டுவயது ,தொல்லறிவுஎன்றது-நுதற்கண்ணிற்றேன்றிய இளையபிள்ளையாராதலின், பண்டுள்ளமுற்றறிவை. மகிழ்ச்சிகொள்கலன்-மகிழ்ச்சிக்கோர்பாத்திரம்.

(௩க) புகர்-புள்ளி. வேழம்-யானை. தகர்—ஆட்டுக்கடா. வகிர்-பிளவு. வாரணம் என்னும் பலபொருளொருசொல், "வகிர்படுகுருதிச்சூடு"என்னுங் குறிப்பால் சேவலை யுணர்த்திற்று நான்குறுப்பு ஆடி - என்றதற்கு இரதகஜ துரகபதாதி என்னு நான்குறுப்புகளமைந்த சதுரங்கத்தைத்தொட்டு விளையாடி என்பதுபொருள்.

வகிர்படுகுருதிச்சூட்டுவாரணமாடிவென்று
நகைமணிப்பலகைசெம்பொனுன்குறுப்பாடிவென்றும். (௩௧)

காற்றினுங்கடியமாவிற்காவதம்பலபோய்மீண்டுங்
கூற்றினுங்கொடியசீற்றக்குஞ்சரமுகைத்தும்வையை
யாற்றினுய்யானத்தாவியகத்தினுளின்பந்துய்த்தும்
வேற்றிறன்மைந்தரோடுமெல்லமர்விளைத்துவென்றும். (௩௨)

சந்தவெற்படைந்துவேட்டஞ்செய்துமச்சைலவாழ்க்கை
யந்தணராசிகூறவவர்தொழில்வினுயுமன்னூர்
கந்தமென்கனிவிருத்தூண்கைதழீஇக்களித்துமீண்டு
மிந்தவாறைம்மூவாண்டுகழியமேலெய்துமாண்டில். (௩௩)

சூர்முதறடிந்ததங்கடோன்றலேயிவனென்றெண்ணிக்
கார்முகமயிலும்வேலுங்கைவிடாக்காக்குமாபோல்
வார்முகமுலேயினுரும்வடிக்கணுமருங்குமொய்ப்பக்
கூர்முகவேலானின்னகொள்கையனுகத்தாதை. (௩௪)

பங்கயச்செவ்வித்தாகிக்கண்மனம்பருகுகாந்தி
யங்கழற்காலுஞ்சொன்னவடைவினிற்றிரண்டுநீண்ட
சங்கையும்வட்டந்தோன்றுச்செழுமுழந்தாளுநால்வாய்த்
துங்கவீர்ங்கவுண்மால்யானைத்துதிக்கைபோற்றிரள்கவானும். ()

சிறுகியவயிறுந்தாழ்ந்தநாபியுஞ்செவ்விநோக்கு
மறுவில்கண்ணடியினன்னகடியகல்வரைகொண்மார்பு
மெறியிசைவீணைத்தண்டிநிணைந்துநீண்டிழிந்தகையும்
வெறியதார்கிடந்தமேருவெற்பிரண்டனையதோளும். (௩௬)

---

(௩௨) மா-குதிரை. காவதம்-காதம். ஆவி-தடாகம். இன்பமென்றது-நீர்விளையாட்டயர்தலாலும்,மலர்களைச் சூடுவதாலும்,நிகழும் மனக்கிளர்ச்சியை.

(௩௩) சந்தவெற்பு - சந்தனவிருட்சங்களடர்ந்த பொதியமலை. சைலம்-மலை. கந்தம் - கிழங்கு.

(௩௪) சூர்முதலென்றது - சூரபன்மனுகிய மாமரத்தின்வேரை தோன்றல் என்றது - சிவசுப்பிரமண்யக்கடவுளை. மருங்கு-பக்கம்.

(௩௫) கழல்-வீரகண்டை. சொன்ன அடைவு என்றது - சாமுத்திரிக நூலிற்சொன்ன முறைமை. சங்கை-கணைக்கால். வட்டம்-எலும்பின் வட்டவடிவம். நால்வாய் - தொங்கியசையும்வாய். ஈர்ங்கவுள் தண்மைவாய்ந்தகபோலம். கவான்-தொடை.

(௩௬) கடி-சருச்சரை. அதாவது முருட்டுத்தன்மை. மறு-குற்றம்.

வலம்புரியென்னவாய்ந்தகண்டமுமலராண்மன்னும்
பொலம்புரிகமலமன்னவதனமும்பொதுவாஞேக்கி
நிலம்புரிதவப்பேறன்ஞன்வடிவெலாநின்றுநின்று
நலம்புரிநூலாஞேக்கிச்சோதிப்பானடிக்கவல்லான். (ங௭)

உன்னதமாறுநீண்டவுறுப்பைந்துசூக்கந்தானு
மன்னதுகுறுக்கநான்காமகலுறுப்பிரண்டேழாகச்
சொன்னதுசிவப்புமூன்றுகம்பீரந்தொகுத்தவாறே
யின்னவைவிரிக்கினெண்ணன்கிலக்கணவுறுப்பாமென்ப. (ஙஅ)

வயிறுதோணெற்றிநாசிமார்புகையடியிவ்வாறு
முயரில்வான்செல்வனுகுமொளிகவர்கண்கபோலம்
புயல்புரைவள்ளற்செங்கைபுதுமணங்கவருந்துண்டம்
வியன்முலைநமொர்பைந்துநீண்டவேல்விளக்குநன்மை (ஙகூ)

நறியபூங்குஞ்சிதொக்குவிரற்கணுநகம்பல்லைந்துஞ்
சிறியவேலாயுள்கோசஞ்சங்கைநாமுதுகிந்நான்குங்
குறியவேற்பாக்கியப்பேருஞ்சிரங்குளமென்ருய்ந்தோ
ரறியுமிவ்வுறுப்பிரண்டுமகன்றவேலிதுவுநன்ரும். (ச0)

அகவடியங்கைநாட்டக்கடையிதழண்ணநாக்கு
நகமிவையேழுஞ்சேந்தநன்மையாற்பெருமாவின்ப
மிகல்வலியோசைநாபியென்றிவைமூன்றுமாழ்ந்த
தகைமையாலெவர்க்குமேலாநன்மைசாறக்கோனென்ன. (சக)

எல்லையின்மூர்த்திமைந்தனிலக்கணநிறைவினேடு
நல்லவாங்குணனுநோக்கிப்பொதுவறஞாலங்காக்க
வல்லவனுகிவாழ்நாணனிபெறவல்லனென்ன
வல்லணிமிடற்ருன்பின்னுமனத்தினுலளந்துசூழும். (சஉ)

---

(ங௭) நடிக்கவல்லான்-இந்திரஜாலவித்தை செய்யவல்லசவுந்தரபாண்டியன். நலம்புரிநூல்-சாமுத்திரிகைநூல்.

(ஙகூ) புயல்-மேகம். துண்டம்-நாசி.

(ச0) குஞ்சி - சிகை. தொக்கு - சிறுத்து. கோசம் - ஆண்குறி. குளம் - நெற்றி.

(சக) அகவடி - அடியினுள்ளிடம். அங்கை-உள்ளங்கை. நாட்டக்கடை - கட்கடை. இதழ்-உதடு. அண்ணம் - மேல்வாய். இகல்வலி - ஒருபொருட்பன்மொழி.

(சஉ) வாழ்நாள்-ஆயுள். சூழல்-ஆலோசித்தல். அல்-இருள்.

இத்தகுபண்புசான்றநீர்மையாலிசைமைநீதி
வித்தகநல்லவுள்ளமுடைமைமெய்வீறுதெய்வ
பத்திமையுலகுக்கெல்லாமகிழ்ச்சிசெய்பண்புசாந்த
சித்தமெவ்வுயிர்க்குமன்புசெய்கைநல்லீகைகல்வி. (சங)

வெல்லுதற்கரியார்தம்மைவெல்லுதறேவராலுஞ்
செல்லுதற்கரியதேத்துஞ்சென்றிடுதிறையுங்கோடல்
புல்லுதற்கரியஞாலமாலைபோற்புயத்திலேந்திச்
சொல்லுதற்கரியகீர்த்தியுலகெலாஞ்சுமப்பவைத்தல். (சச)

என்றிவையாதியாயவியற்குணமுடையனாகி
நன்றிசெய்துலகுக்கெல்லாநாயகனொருவனாகி
நின்றிடுமிவற்குப்பின்னர்நீண்முடிகவித்துமுன்னர்
மன்றல்செய்கென்றுசூழ்ந்துமதிஞரோடுசாவினனே. (சரு)

உக்கிரபாண்டியனது திருவவதாரப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௨௦ - க்கு - திருவிருத்தம் - கூசுரு.

---

பன்னிரண்டாவது,

## உக்கிரகுமாரனுக்கு

## வேல்வளைசெண்டுகொடுத்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

உருக்குந்திறலுக்கிரகுமரனுதயமிதுவான்மதியுநதிப் [ச்
பெருக்குங்கரந்தசடைக்கற்றைப்பெருந்தேர்ச்செழியர்பிரானவற்கு
செருக்குஞ்செல்வமணமுடித்துச் செவ்வேல்வளைசெண்டளித்துள்
தரிக்குமுடிதந்தரசுரிமைதந்தசெயலுஞ்சாற்றுவாம். [ளாந்

---

(சங) இசைமை-புகழ். வித்தகம்-சதுரப்பாடு. வீறு-நிகரின்மை.

(சச) தேத்தும்-இடத்தும். தேம்-இடப்பெயர்ச்சொல் - அது உருபேற்குமிடத்து ஈறும், அத்துச்சாரியையின் அகரமுங்கெட்டுத் தேத்து என நின்றது. (சரு) இயல்-இயற்கை. மதிஞர் (சுமதிமுதலிய) அமைச்சர். உசாவல்-ஆலோசித்தல். கவித்தும்-சூட்டுவோம். இது எதிர்காலத்தன்மைப் பன்மை வினைமுற்று. தும் - மேற்படி வினைமுற்றுவிகுதி.

வையைக்கிழவன் றன்னருமைக்குமரன் றனக்குமணம்புணர்ச்சி
செய்யக்கருதுந்திறனோக்கியறிஞரோடுந்திரண்டமைச்சர்
மையற்றழியாநிலத்திருவுமரபுங்குடியும்புகழ்மையுநம்
மையற்கிசையத்தக்ககுலத்தரசர்யாரென் றளக்கின்றார். (௨)

நீந்தண்புனல்சூழ்வடபுலத்துமணவூரென்னுந்திருநகர்க்கு
வேந்தன் பரிதிதிருமரபின்விளங்குஞ்சோமசேகரனென்
றேய்ந்தகேள்வியவனிடத்துத்திருமாதென்னவவதரித்த
காந்திமதியைமணம்பேசவிருந்தாரற்றைக்கனையிருள்வாய். (௩)

வெள்ளைக்களிற்றின்பிடர்சுமந்தகுடுமிக்கோயின்மேயவிளம்
பிள்ளைக்கதிர்வெண்மதிமௌலிப்பெருமானிரவிமருமானும்
வள்ளற்கரத்தான் கனவிலெழுந்தருளிவானோர்நனவிற்குங்
கள்ளத்துருவாந்திருமேனிகாட்டியிதனைவிளம்புவார். (௪)

அன்னமிறைகொள்வயன்மதுரைச்சிவன்யாமரசநீயின்ற
பொன்னையனையாடனைமதுராபுரியிற்கொடுபோய்மறுபுலத்து
மன்னர்மகுடமணியிடறமழுங்குங்கழற்காற்சுந்தரனுந்
தென்னர்பெருமான் குமரனுக்குக்கொடுத்தியென்றுசெப்புதலும்.

உள்ளக்கமலமுககமலமுடனேமலரவிருதடங்க
ணள்ளற்கமலமலர்ந்துதனதங்கைக்கமலமுகிழ்த்தெழுந்து
வள்ளற்பரமன் கருணையெளிவந்தசெயலைநினைந்தன்பின்
வெள்ளத்தழுந்தியெழுந்திரவிவேலைமுளைக்கும்வேலையினில். (௬)

நித்தநியமக்கடனிரப்பிநிருபனமைச்சரொடுநான்கு
பைத்தகருவிப்படையினொடுபலவேறியமுங்கப்பத்தன்
பொய்த்தமருங்குற்றிருமகளைப்பொன்னனூரோடிரதமிசை
வைத்துமணஞ்சேர்திருவினொடுமதுரைநோக்கிவழிக்கொண்டான்.

---

(௩) வடபுலத்துமணவூர் என்றது-மதுரைக்கு வடக்கிலுள்ள மணவூரை. அற்றை - அந்நாள். கனையிருள் - மிக்க இருள்.

(௪) மருமான் - புத்திரன். வள்ளல் - வரையாது கொடுத்தல்.

(௬) அள்ளல்—சேறு. முகிழ்த்து - குவித்து. வள்ளற் பரமன்-அருட்கொடையையுடைய சிவபெருமான். வேலை இரண்டனுள். முன்னையது-கடல். பின்னையது-விடியற்காலம். மலர்ந்து - விழித்தென்னும் பொருளது. (எ)நிருபன்-சோமசேகரச்சோழன்.நான்கு பைத்த கருவிப்படை என்றது-இரதகஜதுரகபதாதிகளை, பைத்த-பரந்த; இது இறந்தகாலப்பெயரெச்சம். பை-பகுதி. கருவி - ஆயுதம். பொய்த்தமருங்குல்-பொய்போலுமில்லாத இடை.

னென்னலெல்லைமணம்பேசநினைந்தவாறேயமைச்சர்மதி
மன்னர்பெருமான்றமரோடுமெணவூர்நோக்கிவழிவருவா
ரன்னவேந்தன்றனைக்கண்டாரடல்வேற்குமரனனையானெந் [ன்.
தென்னர்பெருமான் குமரனுக்குன் றிருவைத்தருதியெனவனையா

குலனுங்குடியுங்கனவின்கட்கொன்றைமுடியார்வந்துரைத்த
நலனுங்கூறிமணநேர்ந்துநயப்பவதனைநன்முதியோர் [திவரு
புலனொன்றுழையர்தமைவிடுத்துப் பொருனைத்துறை வற்குணர்த்
வலனுந்தயில்வேன்மன்னனொடுமதுரைமூதூர்வந்தணைந்தார். (கூ)

இரவிமருமான்மதிமருமானெதிரேபணியததழீஇமுகமன்
பரவியிருக்கைசெலவுய்த்துப்பாண்டிவேந்தனிருந்தான்மேல்
விரவியமைச்சர்திருமுகங்கள்வேந்தர்யார்க்கும்விடுத்துநகர்
வரைவுநாள்செய்தணிசெய்யமன்றன்முரசமறைவித்தார். (கO)

மாடம்புதுக்கிப்பூகதமுங்கதலிக்காடுமறுகெங்கு
நீடநிரைத்துப்பாலிகையுநிறைபொற்குடமுமுறைநிறுத்தி
யாடுகொடியுந்தோரணமும்புனைவித்தழகுக்கழகாகக்
கூடநெருங்குநகரைமணக்கோலம்பெருகக்கொளுத்தினர். (கக)

தென்றனுடன்றிருமகளைத்தேவர்பெருமான்மணம்புரிய
மன்றலழகாலொருநகரொப்பதிகமின்றிமதுரைநக
ரன்றுதானேதனக்கொப்பதாகும்வண்ணமணியமைத்தா
ரின்றுதானேதனக்கதிகமென்னும்வண்ணமெழிலமைத்தார். (கஉ)

கலிவிருத்தம்.

முன்னர்மாலைமுடியணிசுந்தரத்
தென்னரேற்றின்றிருமுகங்கண்டுதொழ்ந்
தன்னவாசகமுட்கொண்டயற்புல
மன்னர்மாதவர்யாரும்வருவரால். (கங)

(அ) னென்னல் எல்லை-நேற்றைப்போது. அமைச்சர்என்றது-அமாத்தியரென்னும் வடசொற்றிரிபு. அமாத்தியர் - அருகிலுள்ளோர். அன்ன-சுட்டுத்திரிபிடைச்சொல். அடல்-கொல்லல்.

(கூ) புலன் ஒன்று உழையர்-அறிவுசான்றதூதுவர். பொருனைத்துறைவன்-சவுந்தரபாண்டியன். வலன்-வெற்றி. அயில்-கூர்மை.

(கO) முகமன்பரவி-உபசாரவார்த்தைகளைச்சொல்லி. விரவி-கலந்து. வரைவுநாள் - திருக்கல்யாண மகோற்சவநாள். மன்றல் - விவாகம். (கக) பூகதம்-பாக்குமரம். மறுகு-வீதி. கூடம் - யானைகட்டுமிடம். கொளுத்தினர்-அலங்கரித்தார். (கஉ)தென்றல்நாடன்-தென்றற்காற்றுத் தோன்றுதற்குரிய பாண்டியநாடன். அன்று என்றது-தடாதகைப்பிராட்டியார் திருமணக்காலத்தை. இன்று என்றது-உக்கிரபாண்டியன் திருக்கலியாண சந்தர்ப்பதினத்தை.

புரவிவெள்ளமும்போர்க்கரிவெள்ளமும்
வரவிற்கால்வலிமள்ளரின்வெள்ளமும்
விரவியாழியவெள்ளமுமுள்ளுற
விரவிதன்வழித்தோன்றல்வந்தெய்தினன். (க௪)

கோடுவில்லொடுமேகக்குழாங்கண்மின்
னீடுவாளொடுநேர்ந்தெனமார்புதாழ்ந்
தாடுகுண்டலக்காதுடையாடவர்ச்
சேடனீகத்துச்சேரன்வந்தீண்டினன். (கரு)

கடலுமுள்ளமுங்காற்றும்பல்வண்ணமு
முடலுங்கொண்டெனவுந்துறுவாம்பரிப்
படுகட்டற்குட்பரிதியிற்றோன்றினு
னடுபெரிப்பதியாகியவேந்தனே. (க௬)

அலகிலாவுதயந்தொறுமாதவ
ரலகிலாருதித்தென்னபொன்னோடைசே
ரலகிலானையனீகமொடெய்தினு
னலகிலாற்றற்கயபதியண்ணலே. (கஎ)

தொக்கமள்ளரடிப்படுதூளிபோய்த்
திக்கடங்கவிழுங்கித்திரைக்கட
லெக்கர்செய்யவெழுந்தியங்கல்லென
நக்கவேற்கைநரபதிநண்ணினன். (கஅ)

---

(க௪) கால்வலிமள்ளர்-காற்றைப்போலும் வன்மையையுடைய காலாட்படைவீரர். ஆழியவெள்ளம்-ஆழ்ந்தகடல்வெள்ளம். தோன்றலென்றது - பெருமையிற்சிறந்தசோழனை.

(கரு) கோடு-வளைவு. சேடு - பெருமை. அனீகம்-சேனை.

(க௬) உந்தல்-செலுத்தல். வாவும்-தாவும். இதுவாம் எனநின்றது; இடைக்குறை. கடலுமுள்ளமுங் காற்றும்பல் வண்ணமும், உடலங்கொண்டென என்பவைகளுள் கடல் உடல் கொண்டென என்பது-குதிரைச்சேனையின் அளவின்மையையும்; உள்ளமுங் காற்றும் உடல்கொண்டென என்பது - அவற்றின் விரைவினையும், பல்வண்ணமும் உடல்கொண்டென வென்பது - ஒவ்வொரு குதிரைகளும் ஒவ்வொரு நிறத்தில் முட்டின்றி நிறைந்து நிற்றலையும் உணர்த்தி நின்றன.

(கஎ) அலகு - அளவு. உதயம் - உதயகிரி. ஆதவர் - சூரியர். ஓடை-நெற்றிப்பட்டம்.

(கஅ) எக்கர் - மேடு. நக்க என்றது-நிகழ்காலப் பெயரெச்சமாதலின், விளங்காநின்ற என்னும் பொருளது. நகு-பகுதி.

மீனவேலையிற்கந்துகமேற்கொடு
கூனல்வார்சிலைவஞ்சக்கொடுஞ்சமர்க்
கானவாழ்க்கையரட்டக்கரும்படை
மானவேற்குறுமன்னவர்நண்ணினர். (கக)

சீனர்சோனகர்சிங்களர்கொங்கணர்
மானவேல்வலமாளவர்சாளுவர்
தானமாநிரைச்சாவகராதியா
மேனைநாட்டுளமன்னருமீண்டினர். (உ0)

நூலொடுந்துவக்குண்டுநுடங்குமான்
றோலர்தூங்குசொருக்குடைத்தானையர்
கோலமுஞ்சியர்கிஞ்சுகக்கோலினர்
நாலுநூல்பயினுவின்ர்நண்ணினர். (உக)

வட்டநீர்க்கலக்கையினர்வார்ந்துதோள்
விட்டகுண்டலக்காதினர்வேட்டதீத்
தொட்டகோலினர்வேள்வியிற்சுட்டநீ
றிட்டநெற்றியரில்லொடுநண்ணினர். (உஉ)

முண்டநெற்றியர்வெண்ணிறமூரலர்
குண்டிகைக்கையர்கோவணம்வீக்கிய
தண்டுகையர்கற்றூனையர்மெய்யினைக்
கண்டுபொய்யினைக்காய்ந்தவர்நண்ணினர். (உங)

---

(கக) கூனல்-வளைவு. கரும்படை - பெரியசேனை. அரட்டர்-குறுநிலமன்னர். குடியரசாதலின் அரட்டக்கரும்படைக்குறுமன்னவர் என்றார். அரட்டர் என்பது ஈறுகெட்டுவருமொழிமுதல்வல்லெழுத்துமிக்கது. (உ0) தானம்மா-மதமொழுக்குஞ்சுவட்டினையுடைய யானை.

(உக) நூல் - உபவீதம். மான்றோல் - கிருஷ்ணசாரமென்னும் மானினதுசர்மம். முஞ்சி - ஓர்வகைப்புல். கிஞ்சுகம் - முண்முருக்கு. நாலுநூல்-நான்குவேதம். தானையர், முஞ்சியர், கோலினர், நாவினர் என்றது – பிரமசரியரை.

(உஉ) தீத்தொட்டகோல்-தீக்கடைக்கோல். கையினர், காதினர்கோலினர், நெற்றியரென்றது-வானப்பிரத்தரை. (உங) முண்டம்-திரிபுண்டரம். வெண்ணிறமூரலர் - தம்பலக்காவியுறாப்பல்லினர். கல்தானையர் - செங்கல்லிற்றேய்த்த காவியுடையையுடையவர் மெய்யினைக்கண்டு பொய்யினைக் காய்ந்தவரென்றது-பொருள்கடோறு மூலகத்தார் கற்பித்துவழங்கும் கற்பனைகளைக் கழித்து, நின்ற வுண்மையைக் காண்பவராதலின். நெற்றியர், மூரலர், கையர், தானையர், காய்ந்தவரென்றது - சந்நியாசிகளை.

தீந்தண்பாற்கடல்செந்துகிர்க்காட்டொடும்
போந்தபோன்மெயிற்புண்ணியப்பூச்சினர்
சேந்தவேணியர்வேதச்சிரப்பொரு
ளாய்ந்தகேள்வியருந்தவரெய்தினர். (உ௪)

ஆதிசைவர்முதற்சைவரைவருங்
கோதிலாவகச்சைவக்குழாங்களும்
பூதிமேனியர்புண்ணியவைந்தெழுத்
தோதுநாவினரொல்லைவந்தெய்தினர். (உ௫)

வெண்களிற்றவன்வேரியந்தாமரைப்
பெண்களிப்புறுமார்பன்பிரமனோ
டொண்களிப்புறவும்பர்முதற்பதி
னெண்கணத்தவர்யாவருமீண்டினர். (உ௬)

அணைந்துகோயிலடைந்தரிச்சேக்கைமேற்
குணங்கடந்தவன்கோமளவல்லியோ
டிணங்கிவைகுமிருக்கைகண்டேத்தினர்
வணங்கினர்வணங்கும்முறைவாழ்த்தினர். (உ௭)

விரைசெய்தார்முடிச்சுந்தரமீனவன்
சுரர்கண்மாதவர்வேந்தர்க்குத்தொன்முறை

---

(உ௪) துகிர்-பவளம். புண்ணியம் - விபூதி. வேதச்சிரப்பொரு ளாய்ந்த கேள்வியருந்தவரென்றது - வேதத்தினுச்சியிலுள்ளமெய்ப் பொருளாகிய பரசிவத்தை, ஆராய்ந்தறியும் ஆகமநூற்கேள்வியமை ந்த அரியசைவ தபோதனரை.

(உ௫) ஆதிசைவர்முதல் சைவரைவரென்றது-அநாதிசைவர், ஆதிசைவர். மகாசைவர், அநுசைவர், அவாந்தரசைவர், பிரவரசை வர், அந்தியசைவர் என்னு மெழுவகைச்சைவப்பிரிவினருள், அநா திசைவர்-சதாசிவமூர்த்தியாதலாலும். அந்தியசைவர் - அநுலோம ரொழிந்த ஏனையோராதலாலும், அவ்விருவரை யொழித்துநின்ற ஐவரையும். அகச்சைவக்குழாம் என்றது-சைவம், பாசுபதம்,மாவிர தம், காளாமுகம், வாமம், வயிரம் என்னு மறுவகைக் கூட்டத்தி னரை. (உ௬) பதினெண்கணத்தராவார் - "கின்னரர் கிம்புருடர், விச்சாதரர் கருடர்-பொன்னமர் பூதர்புகழியக்கர்-மன்னும் - உரகர் சுரர்சாரணர் முநிவர்மேலாம் - பரகதியோர் சித்தர்பாலர். " காந்த ருவர்தாரகைகள் காணப்பசாசுகள்-ஏந்துபுகழ்மேய விராக்கதரோ- டாய்ந்ததிறல்-போகாவியல்புடைய போக பூமியாருடனே - ஆசாச வாசிகளாவார். (உ௭) அரிச்சேக்கை - சிங்காதனம். குணம்-சாத்மீ கம்,இராசதம்,தாமதம்என்னு முக்குணங்கள். ஏறினர்-முற்றெச்சம்:

வரிசைநல்கியிருந்தனன்மன்னவன்
றிருமகன்மணஞ்செய்திறஞ்செப்புவாம். (உஅ)

சோமசேகரன்றேகைவனப்பெலாங்
கோமகன்கண்டுவப்பவக்கொள்கைகண்
டேமமேனியனூல்வழியார்க்குமத்
தேமன்கோதையுறுப்பியறேற்றுவான். (உகூ)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

பெருகநீண்டறவுங்குறுகிடாவாகிப் பிளந்திடாக்கடையவாய்த் தழைந்து, கருவிவான்வண்டின்கணமெனக்கறுத்துக்கடைகுழன்றியன்மணங்கான்று, புரையறச்செறித்துநெறிந்துமெல்லென்றுபுந்திகண்கவரநெய்த்திருண்ட, மருமலர்க்குழலாடன்பதிக்கினியமல்லல்வான்செல்வமுண்டாகும். (௩0)

திண்மதவேழமத்தகம்போலத்திரண்டுயர்சென்னியாளவடனுண்மகிழ்கணவனுயுணீண்டகிலவுலகரசுரியனுமெட்டாந், தண்மதிபோன்றுமயிர்நரம்பகன்று தசைந்துமூவிரலிடையகன்ற, வொண்மதிநுதறன்பதிக்குநற்றிருவோடு லப்பிலாரோக்கியமுண்டாம். ()

கண்கடைசிவந்தான் பாலெனவெளுத்து நடுவிழிகழியவுங்கரிதா, யெண்கவினடைந்து கோமளமாகி யிமைகருமயிர்த்தெளினிய, வொண்கரும்புருவங் குனிசிலையொத்த தத்தமிலொத்திருதுளையும், பண்கொளவுருண்டு துண்டமெட்போது பதுமமேற் பூத்ததுபோலும். (௩உ)

வள்ளைபோல்வார்ந்து தாழ்ந்திருசெவியு மடற்சுழிநல்லவாய்முன்னர், தள்ளியகாது மனோகரமாகுந் தன்மையானன்மையேதழைக்கு, மொள்ளியகபோலம் வட்டமாய்த்தசைந்திட் டுயர்ந்துகண்ணுடிமண்டலம்போற், றெள்ளியவூற்றமினியதுநன்றென் றேதினுன்றிரைகடற்செல்வன். (௩௩)

---

(உகூ) எமம்மேனியன்-பொன்னிறம்உள்ள பிரகஸ்பதி. நூல் - சாமுத்திரிகநூல். தேம் மன் கோதை - தேன் நிலைபெற்ற கூந்தலையுடையகாந்திமதி. தோகை-மயில்போலுஞ் சாயலையுடையாள்.

(௩0) கருவி - உலகத்திற்குத் துணைக்காரணம். மல்லல் - வளமை.

(௩க) எட்டாந்தண்மதி - குளிர்ச்சிவாய்ந்த அர்த்த சந்திரன். இடைஎன்றது - புருவத்திற்கும், கூந்தலுக்கும் மத்திமபாகத்தை. உலப்பு-கெடுதி. (௩உ) கோமளம்-இளமை. துண்டம்-நாசி. பண் - அமைதி. (௩௩) வார்ந்து-நீண்டு. ஊற்றம்-பரிசம். கடற்செல்வன்—வருணன்.

கொவ்வைவாயதரந்திரண்டிருபுடையுங்குவிந் துசேந்திரேகை நேர்கிடந்தா, லவ்வணியிழைதன் னன்பனுக்கென் று நண்புருவாகு மெண்ணுன்கும், வல்லவாளெயிறு மிடைவெளியின்றி வார்ந்துமே ல்கீழிரண்டொழுங்குஞ், செவ்வனேர்ந்தாவின் பாலெனவெள்கித் திகழினன் றென்பர் நூறெளிந்தோர். (௩௪)

மெல்லிதாய்ச்சிவந் துகோமளமானநாவினுள்வேட்டவேட்டாங்கே வல்லைவந்தெய்தநுகர்ந்திடுந்தசைந் துவட்டமாயங்குலமிரண்டி னெல்லையதாகிமஞ்சுளமாகியிருப்பதுசுபுகநன்றென்ப ரல்லியங்கமலம்போன்மணந்திருடீர்ந்தவிர்மதிபோல்வதுமுகமே.

திரைவளைக்கழுத்துத் தசைந்துநால்விரலி னளவதாய்த் திரண்டு மூன்றிரேகை, வரைபடிற்கொழுந னகிலமன்னவனுமார்பகந் தசைந்துமூவாறு, விரலளவகன்று மயிர்நரம்பகன்று மிதந்த தேல் விழுமிதாம் வேய்த்தோள், புரையறத்தசைந்து மயிரகன்றென்பு புலப்படாமொழியகோமளமாம். (௩௬)

செங்கைநீண்டிருண்டு கணுக்கள்பெற்றடைவே சிறுத்திடிற் செல்வமோடின்பந், தங்கும் வள்ளுகிர்சேந் துருண்டுகண்ணுள்ளங் கவர்வதாய்ச்சரசரப்பகன்ரு, லங்கவைநல்ல வகங்கைமெல்லெனச் சேந் திடைவெளியகன்றிடை யுயர்ந்து, மங்கலமாய்ச்சில் வரைகளி னல்லவிலக்கணவரையுளமாதோ. (௩௭)

முத்தணிதனங்கள் கடினமாய்த்தசைந்துவட்டமாய்முகிழ்த் திருகடநே, ரொத்திறுமாந்தீர்க் கிடையறநெருங்கி யுள்ளதுமெலிந்த மார்ந்துரோம, பத்திபெற்றயலே மயிர்நரம்பகன்றபண்டியாளுண்டி வேட்டாங்கே, துய்த்திடுநாபி வலஞ்சுழித்தாழ்ந்தாற் றெருலைவிலாத திருவளம்பெருகும். (௩௮)

இடைமயிர்நரம்பற் றிருபதோடொருநான் கெழிலவிரலள வொடுவெட்ட, வடிவதாய்ச்சிறுகி மெலிவதுநிதம்ப மத்தகம்யாமை யின்புறம்போற், படிவநேரொத்த னன்றிருகுறங்கும் படுமயிரென்பகன்றியானைத், தடவுடைக்கையுங் கரபமுங்கதலித்தண்டுமொத் திருக்கினன்றென்ப. (௩௯)

---

(௩௫) வேட்டது என்பது-ஈறுதொக்கு வேட்ட எனநின்றது; வேள்-பகுதி. சுபுகம்-மோவாய். (௩௬) வரை-கீற்று. அகிலம்-கில மில்லாதது; பூமி. தசைந்து-தசைப்பற்றுடையதாய். (௩௭) உகிர் - நகம். சரசரப்பு-சருச்சரை. (௩௮)முகிழ்த்து-அரும்பி. கடம். குடம். பண்டி-வயிறு. இறுமாந்து-செருக்குற்று. இது இறந்தகாலவினை எச்சம்; இறுமா - பகுதி. (௩௯) படிவம்-வடிவம். குறங்கு-தொடை. தடவு-பெருமை. கரபம்-கையினடி.

அங்கமுண்மறைந்து வட்டமாய்த்தசைவ தணிமுழந்தாண்மயி ர்நரம்பு, தங்கிடாதடைவே யுருட்சியாய்ச்சிறுத்துச் சமவடிவாயழ கடைந்த, சங்கையாஞ்சிரையென்பறத் தசைந்தியாமை முதுகென த்திரண்டுயர்ந்தழகு, மங்கலம்பொலிந்தபுறவடிமடந்தை மன்னவன் பன்னியாமன்றே. (சO)

அல்லியங்கமலக்கால்விரலுயர்ந்து தூயவாயழகவாய்க்கழுநீர், மெல்லிதழ்நிரைத்தாங்கொழுங்குறத்திரண்டு வாலுகிர்வெண்மதிப் பிளவு, புல்லியபோன்றுமெல்லியவாகிப் புகரறத்தசைந்தனவகத் தாள், சொல்லியதசைவுமென்மையுஞ்சமமுந் துகளறப்படைத்தன நன்றால். (சக)

வண்ணமாந்தளிர்போற்சிவந்தெரிபொன்போல்வைகலும் வெ யர்வையற்றுக,முண்ணமாயிருக்கிற்செல்வமுண்டாகுமொன்மணம் பாடலங்குவளை, தண்ணறு முளரிமல்லிகைநறுந்தண் சண்பகம் போல்வனவாகும், பண்ணவாங்கிளவிகுயில்கிளியாழிற்படின்வரு ம்பாக்கியமென்னு. (சஉ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கருங்குழற்கற்றைதொட்டுச்செம்மலர்க்காலினெல்லை
மருங்குனல்கூர்ந்தகன்னிவடிவெலாம்வாக்கின்செல்வ
ஞெருங்குநூலுணர்வாற்றெள்ளியிம்பரின்றும்பர்தேத்து
மிரங்குமிக்குயிலன்னாண்மெய்யிலக்கணமரியதென்றான். (சங)

அங்கதுகேட்டோர்யாருமகங்களிதுளும்பவிப்பாற்
கொங்கலர்நறுந்தார்க்குஞ்சியுக்கிரகுமரன்போந்து
மங்கலவரிசைமானமத்தமான்சுமந்தவையைச்
சங்கெறிதுறைநீராடித்தகுங்கடிவனப்புக்கொள்வான். (சச)

கட்டவிழ்கண்ணிவேய்ந்துமான்மதக்கலவைச்சாந்த
மட்டனஞ்செய்துமுத்தான்மாண்கலன்முழுதுந்தாங்கி
விட்டவிர்கலைவான்றிங்கள்வெண்கதிர்ச்செல்வன்போல்வந்
திட்டபூந்தவிசின்மேற்கொண்டிருந்தனன்சங்கமோங்க. (சரு)

---

(சO) அங்கம் - எலும்பு. சங்கை - கணைக்கால். சிரை—நரம்பு.

(சக) அல்லியங்கமலம் - அழகிய அகவிதழினையுடைய தாம ரை - அல்லி - அகவிதழ். புகர்-குற்றம். (சஉ) உண்ணம்-மேன்மை. பாடலம்-பாதிரி. பண்-இசை. கிளவி-சொல். (சங) நல்கூர்ந்த - வறுமையுற்ற. வாக்கின்செல்வன்-பிரகஸ்பதி. இம்பர் - இந்நில வுலகம். (சச) கொங்கு-மகரந்தம். மானம் மத்தம் மான் என்றது - பெருமையும், மதுமயக்கத்தையும், உடையயானையை.

(சரு) கட்டு-முறுக்கு. மட்டனம்-பூசல்.

அந்நிலைமணநீராட்டியருங்கலப்போர்வைபோர்த்த
கன்னியைக்கொணர்ந்துநம்பிவலவயிற்கவினவைத்தார்
பன்னியோடெழுந்துசோமசேகரன்பரனும்பங்கின்
மன்னியவுமையுமாகமதித்துநீர்ச்சிரகந்தாங்கி. (சகூ)

மங்கலநீரானம்பிமலரடிவிளக்கிவாசக்
கொங்கலர்மாலைசூட்டிக்குளிர்மதுபருக்கமூட்டி
நங்கைதன்கையைப்பற்றிநம்பிதன்கையிலேற்றிப்
புங்கவரறியநன்னீர்மந்திரம்புகன்றுபெய்வான். (சஎ)

இரவிதன்மருமான்சோமசேகரனென்பேர்திங்கண்
மரபினைவிளக்கவந்தசுந்தரமாறன்மைந்த
னுரவுநீர்ஞாலந்தாங்குமுக்கிரவருமற்கின்றென்
குரவலர்க்கோதைமாதைக்கொடுத்தனனெனநீர்வார்த்தான். (சஅ)

மைந்துறுமடங்கிற்றிண்காண்மணிவடவயிரவூச
லைந்துடன்பதஞ்செய்பஞ்சியணையினோடன்னத்தூவிப்
பைந்துகிலணையீரைந்துபவளவாய்ப்பசும்பொன்மேனி
யிந்திரமணிக்கட்பாவைவிளக்குநான்கிரட்டியென்ப. (சகூ)

அட்டில்வாயடுக்குஞ்செம்பொற்கலங்கணூறம்பொன்வாக்கி
யிட்டிழைமணிக்களாஞ்சியேழுபொற்கவரியெட்டு
விட்டொளிர்பசும்பொற்கிண்ணப்பந்திசூழ்விளங்கநாப்ப
ணட்டபொற்காலினோடுநகைமணிக்கலநூறென்ப. (ருo)

பெருவிலையாரப்பேழையாயிரம்பெற்றநுண்டூ
சருவிலைப்பட்டுவெவ்வேறமைத்தனபேழைமூந்நூ
றுருவமுதெழுதிச்செய்தவோவியப்பாவையன்னோர்
திருமணிக்கலனோடேவற்சேடியரெழுநூற்றைவர். (ருக)

---

(சகூ) மணநீர் ஆவது - பத்துத்துவரிலும், ஐந்துவாசனையிலும், முப்பத்திரண்டு வகையோமாலிகையிலும், ஊறியநீர், நம்பி-ஆடவருட்சிறந்த உக்கிரகுமரன். (சஎ) மதுபர்க்கமாவது - பால், பழம், சர்க்கரை, நெய் கலந்தமைத்தவுணவு. (சகூ) மைந்து - வலிமை. அன்னத்தூவி – அன்னத்தின் சிறையடியிலுள்ள மெல்லியமயிர். பாவைவிளக்கு - பதுமை யேந்தியவிளக்கு. பைந்துகில் என்றதில்பைஎன விகாரப்பட்டு நின்றபசுமை என்னும் பண்பு, மென்மைமேல் நின்றது. (ருo) அட்டில் - மடைப்பள்ளி. (ருக) ஆரப்பேழை என்றது-முத்தாரமுதலிய ஆபரணங்கள் வைக்கும்பெட்டியை.

விளைவொடுமூன் றுமூதூர்மின் னுவிட்டெறியுஞ்செம்பொ
னளவிருகோடியின்னவரும்பெறன் மகட்குச்செல்வ
வளமுறவரிசையாகவழங்கினான் முழங்கிவண்டு
திளைமதுக்கண்ணிச்சோமசேகரமன்னன்மாதோ. (ருஉ)

ஆர்த்தனவியங்களெல்லாமமரர்மந்தாரமாரி
தூர்த்தனர்வேள்விச்செந்தீச்சுழித்ததுவலமாய்த்துள்ளி
வார்த்தனமடவார்நாவின்முளைத்தனவாழ்த்துமன்றல்
பார்த்தனர்கண்களெல்லாம்பெற்றனபடைத்தபேறு. (ருங)

பொதியவிழ்கடப்பந்தண்டார்ப்புயத்திளங்காளையன்னான்
முதியவிர்செந்தீயோம்பவின்னியமுழங்கக்காந்தி
மதியைமங்கலநாண்பூட்டிவரிவளைச்செங்கைபற்றி
விதிவழியேனைமன்றல்வினையெலாநிரம்பச்செய்தான். (ருச)

மேற்படி - வேறு.

எண்ணிலாதவளத்தினொடுமிரவிமருமான்மடப்பிடியைப்
பண்ணிலாவுமறையொழுக்கம்பயப்பவேள்விவினைமுடித்துந்
தண்ணிலாவெண்கலைமதியுந்தாராகணமுந்தவழ்ந்துழல
விண்ணிலாவுமணிமாடவீதிவலமாய்வருமெல்லை. (ருரு)

மின்னேர்பொன்னந்தொடியினருமென்செம்பஞ்சியடியினரும்
பொன்னேர்மணிப்பூண்முலையினரும்புலம்புமணிமேகலையினரு
மன்னேரோதித்தாரினருமாகிக்கண்ணுமனமுமவன்
முன்னேதூதுநடப்பதெனநடப்பநடந்தார்முகிழ்முலையார். (ருசு)

சுருங்குமிடையார்தன்பவனிதொழுதுவருவார்தமக்கிரங்கி, மருங்குற்பாரங்கழிப்பான்போற் கலையைக்கவர்ந்தும் வளைத்தோண்மே, லொருங்குபாரங் கழிப்பான்போல் வளையைக்கவர்ந்துமுள்ளத்து, ணொருங்குபாரங்கழிப்பான்போ னிறையைக்கவர்ந்து நெறிச்செல்வான். (ருஎ)

வானமதிசேர்முடிமறைத்தவழுதிமகனேயிவனென்று
லானையெருத்திற்சிங்கவிளவடலேறென்னவயல்வேந்தர்

---

(ருச) கடப்பந்திண்டார்ப்புயத்திளங்காளைஎன்றது - கடப்பமலர் மாலையணிந்த புயத்தையுடைய முருகக்கடவுளை.

(ருசு) தொடியினர், அடியினர், முலையினர், மேகலையினர், தாரினர் என்றது - பவனிகாணவந்தபேதை, பேரிளம்பெண் நீங்கியவனை ஐவகைப் பருவப்பெண்களையு முறையே குறித்துநின்றது.

(ருஎ) நிறை - மனத்தைத்தீயவழியிற் செலுத்தாது நல்வழியில்நிறுத்தல். (ருஅ) எருத்து - பிடரி. யானைமகளென்றது. தேவசேனையை. இளையோன் - குமாரக்கடவுள்.

சேனைதழுவவரும்பவனிக்கொப்பேதொப்புச்செப்புங்கால்
யானைமகளைமணந்துவருமிளையோன்பவனிச்செல்வமே. (ருஅ)

இம்மைதனிலுநன்மைதருமீசன்றனையும்வாசவற்கு
வெம்மைதருவன்பழிதவிர்த்தவிமலன்றனையுமங்கயற்க
ணம்மைதனையும்பணிந்துமீண்டரசன்கோயிலடைந்தீன்றோர்
தம்மைமுறையாலடிக்கமலந்தலையிற்பணிந்தான்றனிக்குமரன். ()

ஆறுவாறுசுவையடிசிலயில்வோர்தம்மையயல்வித்து
நாறுவரிசைவரன்முறையானல்கிவிடையுநல்கிப்பின்
வானுடவர்க்குவிடைகொடுத்துமதிக்கோனுழுகிவைகுநாட்
டேனுர்கண்ணித்திருமகனுக்கிதனைச்செப்பிபிதுசெய்வான். (சுo)

மைந்தகேட்டியிந்திரனுங்கடலுமுனக்குவான்பகையாஞ்
சந்தமேருத்தருக்கடையுஞ்சதவேள்விக்கோன்முடிசிதற
விந்தவளைகொண்டெறிகடலிலிவ்வேல்விடுதியிச்செண்டா [ம்.
வந்தமேருத்தனைப்புடையென்றெடுத்துக்கொடுத்தானவைமூன்று

அன்னமூன்றுபடைக்கலமுந்தொழுதுவாங்கியடலேறு
தன்னைநேராயெதிர்நிற்குந்தனயன்றனையுக்கிரவழுதி
யென்னவாதிமறைமுழங்கவியங்களேங்கமுடிகவித்துத்
தன்னதாணையரசுரிமைதனிச்செங்கோலுந்தானல்கா. (சுஉ)

சூட்சிவினையிற்பொன்னனையசுமதிதன்னைத்தொன்னூலின்
மாட்சியறிஞர்தமைநோக்கிவம்மினிவனைக்கண்ணிமைபோற்
காட்சிபயக்குங்கல்வியும்போற்காப்பீரிதுநுங்கடனிம்ம
ணுட்சியிவனதென்றிளையவரியேறனையான்றனைநல்கா. (சுௌ)

மேற்படி - வேறு.

வெய்யவேற்காளையன்னுன்றன்னையும்வேறுநோக்கி
யையவிவ்வையந்தாங்கியளித்தனநெடுநாளிந்த

(ருக) நன்மைதருமீசன்-மஹாபீஷ்டப்பிரதேஸ்வரர். பழிதவிர்த்தவிமலன் - சோமசுந்தரக்கடவுள். (சுo) ஆறுத-நீங்காத. இது ஈறுதொக்கு, ஆறுஎனநின்றது, சுவை-கறிமேல் நிற்றலால்பண்பாகுபெயர் (சுக) சதவேள்விக்கோன் - நூறு அஸ்வமேதயாகங்களைச் செய்த இந்திரன். சதம்-நூறு. வேள்வி-யாகம். (சுஉ) அன்ன - சுட்டுத்திரிபு. அடல் ஏறு-கொலைத்தொழிலமைந்தசிங்கம். (சுௌ) சூழ்ச்சிமந்திராலோசனை. பொன்-பிரகஸ்பதி. காட்சி பயக்குங்கல்விஎன்றது-(தளர்ச்சிநேர்ந்தவழி) அறிவுதந்து ஊன்றுகோல் போலுதவுங் கல்வியை. "தளர்ந்துழியுதவுங்கல்வி" என்றார்பிறரும்.

மையறுமனத்தார்சொல்லும்வாய்மையாரெழுகிநீயுஞ்
செய்கோன்முறைசெய்தாண்டுதிருவொடும்பொலிகவென்றான்.

பன்னருங்கணங்களெல்லாம்பண்டையவடிவமாகத்
தன்னருட்டுணையாய்வந்ததடாதகைப்பிராட்டியோடும்
பொன்னெடுங்கோயில்புக்குப்பொலிந்தனனிச்சைதன்னா
லின்னருட்படிவங்கொள்ளுமீறிலாவின்பமூர்த்தி. (சுரு)

கலிவிருத்தம்.

பின்னருக்கிரப்பெயர்தரித்தவத்
தென்னர்கோமகன்றெய்வநான்மறை
மன்னுநல்லறம்வளரவையகந்
தன்னதாணையாற்றாங்கிவைகினான். (சுசு)

உக்கிரகுமாரனுக்கு வேல்வளைசெண்டுகொடுத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் உக - க்கு - திருவிருத்தம் - கoருக.

---

பதின்மூன்றாவது,

## கடல்சுவறவேல்விட்டபடலம்.

கலிவிருத்தம்.

வளையொடுசெண்டுவேன்மைந்தற்கஞ்சுரும்
பளையவேம்பணிந்தகோனளித்தவாறிதத்
துளையவிழ்தாரினான்றனயன்வேலைமே
லிளையவனென்னவேலெறிந்ததோதுவாம். (க)

திங்களினுக்கிரச்செழியன்வெண்குடை
யெங்கணுநிழற்றவீற்றிருக்குநாள்வயிற்
சங்கையில்லாதமாதருமவேள்விகள்
புங்கவர்புடைதழீஇப்போற்றவாற்றுநாள். (உ)

அரும்பரிமகந்தொணூற்றாறுசெய்துழிச்
சுரும்பரினிசைத்தருத்தோன்றறண்ணறு

---

(சுச) மை - குற்றம். நெடுநாள் - அறுபத்தாறாயிரம் வருடம்.

(க) இளையவனென்றது - (சூரபன்மன்நிலைகெடவேலெறிந்த) இளையபிள்ளையாரை. (ரு) தருத்தோன்றல் என்றது - பஞ்சதருக்களின்றலைவனாகிய இந்திரனை. அரி-வண்டு குழை-இது மலருக் காதலின் ஆகுபெயர்.

விரும்பரிமுரன் றருசூழ்வேம்பினங்குழைப்
பொரும்பரிவீரன்மேற்பொரு துபொங்கினான். (௩)

மன்னியநாடெலாம்வளஞ்சுரந் துவான்
பொன்னியனுடுபோற்பொலிதலாலிந்த
மின்னியவேலினான்வேள்விசெய்வதென்
றுன்னியமனத்தனோர்சூழ்ச்சியுன்னினான். (௪)

பொருங்கடல்வேந்தனைக்கூவிப்பொள்ளென
விருங்கடலுடுத்தபாரேழுமூழிநா
ளொருங்கடுவெள்ளமொத்துருத்துப்போய்வளைந்
தருங்கடிமதுரையையழித்தியாலென்றான். (௫)

விளைவதுதெரிகிலன்வேலைவேந்தனும்
வளவயன்மதுரையைவளைந்திட்டிம்மெனக்
களைவதுகருதினான்பேயுங்கண்படை
கொளவருநனந்தலைக்குருட்டுக்கங்குல்வாய். (௬)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

கொதித்தலைக்கரங்களண்டகூடமெங்குமூடுபோ
யதிர்த்தலைக்கவூழிநாளிலார்த்தலைக்குநீத்தமாய்
மதித்தலத்தையெட்டிமுட்டிவருமொரஞ்சனப்பொருப்
புதித்தலொத்துமண்ணும்விண்ணுமுட்கவந்ததுததியே. (எ)

வங்கவேலைவெள்ளமாடமதுரைமீதுவருசெயல்
கங்குல்வாயதிங்கண்மீதுகாரிவாயகாருடல்
வெங்கண்வாளராவிழுங்கவீழ்வதொக்குமலதுகா
ரங்கண்மூடவருவதொக்குமல்லதேதுசொல்வதே. (அ)

வட்டயாமைபலகைவீசுவாளைவாள்கண்மகரமே
பட்டயானைபாய்திரைப்பரப்புவாம்பரித்திரள்
விட்டதோணியிரதமின்னவிரவுதானையொடுகட
லட்டமாகவழுதிமேலமர்க்கெழுந்ததொக்குமே. (௯)

---

(௫) உருத்து-கோபித்து. (௬) நனந்தலைக் குருட்டுக்கங்குல் என்றது - கட்புலனுடையவரையும், குருடராகச்செய்யும் இருள்மிகுந்த நடுராத்திரியை. (எ) உததி-கடல். மதிதலம்-சந்திரமண்டலம். அஞ்சனப்பொருப்பு - நீலமலை. உட்க-நிலைகெட.

(அ) காரி - விஷம். (௯) அட்டம் - நேர். இது திசைச்சொல்.

இன்னவாறெழுந்தவேலைமஞ்சுறங்குமிஞ்சிசூழ்
நன்னகர்க்குணக்கின்வந்துநணுகுமெல்லையரையிரா
மன்னவன்கனவின்வெள்ளிமன்றவாணர்சித்தராய்
முன்னர்வந்திருந்தரும்புமுறுவறோன்றமொழிகுவார். (க0)

வழுதியுன்றனகரழிக்கவருவதாழிவல்லைநீ
யெழுதிபோதிவென்றிவேலெறிந்துவாகைபெறுகெனத்
தொழுதசெங்கரத்தினோன்றுதிக்குநாவினோனெழீஇக்
கழுதுறங்குகங்குலிற்கனவுணர்ந்துகாவலான். (கக)

கண்ணிறைந்தவமளியிற்கழிந்துவாயில்பலகடந்
தண்ணிறைந்தமதியமைச்சருடன்விரைந்துகுறுகியே
மண்ணிறைந்ததெனமுழங்கிவருதரங்கவாரிகண்
டெண்ணிறந்தவதிசயத்தனுகிநிற்குமெல்லைவாய். (கஉ)

கனவில்வந்தசித்தவேடர்நனவில்வந்துகாவலோ
னினைவுகண்டுபொழுதுதாழநிற்பதென்கொலப்பனே
சினவிவேலைபோலவந்ததெவ்வைமானவலிகெட
முனையவேலெறிந்துஞாலமுடிவுதீர்த்தியாலென. (கங)

எடுத்தவேல்வலந்திரித்தெறிந்தவேலைவேன்முனை
மடுத்தவேலைசுஃறெனவறந்துமானவலிகெட
வடுத்துவேரிவாகையின்றியடிவணங்குதெவ்வரைக்
கடுத்தவேல்வலான்கணைக்காலின்மட்டதானதே. (கச)

சந்தவேதவேள்வியைத்தடுப்பதன்றியுலகெலாஞ்
சிந்தவேறுசூழ்ச்சிசெய்ததேவர்கோவினேவலால்
வந்தவேலைவலியழிந்தவஞ்சகர்க்குநன்றிசெய்
திந்தவேலைவலியிழப்பதென்றுமுள்ளதேகொலாம். (க௫)

(க0) இஞ்சி - மதில். வாழ்நர் என்பது வாணரெனத் திரிந்து நின்றது-வாழ், பகுதி ; நகரம்-எதிர்காலவிடைநிலை ; ழகரக்கேடும் நகரத்திரிபும்சந்தி ; அர் - பலர்பால் விகுதி.

(கக) கழுதுறங்குகங்குல் - பேயுங்கண்ணுறங்கும் நடுராத்திரி.

(கங) தெவ்வை-பகைவனை. (க௫) வேலைவலி இழப்பது என்றும் உள்ளது என்றது - முன் ; சூரபன்மனுக் கிடங்கொடுத்து முருகக்கடவுள் வேலால் வலிகெட் டழிந்தமையையும் : விருத்திரனுக் கிடங்கொடுத்து அகத்தியரால் ஆசமனம் செய்யப்பட்டு வலியிழந்தமையையும் ; குறித்து நின்றது.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

புண்ணிடைநுழைந்தவேலாற்புணரியைப்புறங்கண்டோன்பான்
மண்ணிடைநின்றசித்தர்வானிடைநிறைந்தஞானக்
கண்ணிடைநிறைந்துதோன்றுங்கருணையால்வடிவங்கொண்டு
விண்ணிடையணங்கினேடுவிடையிடைவிளங்கிநின்றூர். (கசு)

முக்கணும்புயங்கணுன்குமுலைமதிக்கண்ணிவேய்ந்த
செக்கரஞ்சடையுங்காளகண்டமுந்தெரிந்துதென்னன்
பக்கமேபணிந்தெழுந்துபரந்தபேரன்புந்தானுந்
தக்கவஞ்சலிசெய்தேத்தித்தரைமிசைநடந்துசெல்வான். (கஎ)

துந்துபியைந்துமார்ப்பப்பாரிடந்தொழுதுபோர்ப்பத்
தந்திரவேதகீதந்ததும்பியெண்டிசையுந்தாக்க
வந்தரநாடரேத்தவகல்விசும்பாறதாக
வந்துதன்கோயில்புக்கான்வரயுபோக்கிறந்தவள்ளல். (கஅ)

அஞ்சலிமுகிழ்த்துச்சேவித்தருகுறவந்தவேந்த
னிஞ்சிசூழ்கோயிலெய்தியிறைஞ்சினன்விடைகொண்டேகிப்
பஞ்சின்மெல்லடியாரட்டமங்கலம்பரிப்பநோக்கி
மஞ்சிவர்குடுமிமாடமாளிகைபுகுந்தான்மன்னே. (கக)

வளையெயின்மதுரைமூதூர்மறிகடலிவற்றினுப்பண்
விளைவயனகரமெல்லாம்வெள்ளியம்பலத்துளாடுந்
தளையவிழ்கொன்றைவேணித்தம்பிரான்றனக்கேசேர்த்துக்
களைகணுயுலகுக்கெல்லாமிருந்தனன்காவல்வேந்தன். (உ0)

கடல்சுவறவேல்விட்டபடலம் முற்றிற்று.

ஆ படலம் உஉ - க்கு - திருவிருத்தம் - க0ருக.

---

(கஅ) தந்திரம் - ஆகமமுதலிய கலைகள். (உ0) களைகணுய்-பற்றுக்கோடாய். இதில் ஆய், செயவெனச்சத்திரிபு.

சிவமயம்.

பதினான்காவது,

# இந்திரன்முடிமேலவளையெறிந்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மின்னவிர்மணிப்பூண்மார்பன்வேலையைவேலால்வென்று
பொன்னவிர்வாகைவேய்ந்தபுகழுரைசெய்தேனாக
நன்னகராளிசெம்பொனகைமுடிசிந்தவந்த
மன்னவன்வளைகொண்டோச்சிவென்றது வகுத்துச்சொல்வாம். (க)

கோமகனிகழுநாளிற்கோணிலைபிழைத்துக்கொண்மூ
மாமழைமறுப்பப்பைங்கூழ்வறந்துபுற்றலைகடீந்து
காமருநாடுமூன்றுங்கையறவெய்தமன்னர்
தாமதுதீர்வுநோக்கித்தமிழ்முனியிருக்கைசார்ந்தார். (உ)

முனிவனையடைந்துவேந்தர்மூவருந்தங்கணாட்டிற்
பனிவருமாரியின்றிவறந்தமைபகரமேருக்
குனிவருசிலையார்க்கன்பர்கோணிலைகுறித்துநோக்கி
யினிவருமாரியில்லையாதினாலென்றுகேண்மின். (௩)

காய்சினவெய்யோன்சேயோன்முன்செலக்கதிர்கால்வெள்ளித்
தேசிகன்பின்புசென்றுநடக்குமிச்செயலான்முந்நீர்த்
தூசினவுலகிற்பன்னீராண்டுவான்சுருங்குமென்று
பேசினநூல்கண்மாரிபெய்விப்போற்சென்றுகேண்மின். (௪)

என்றவனெதிர்யாமெவ்வாறேகுதுமென்றுரைந்தும்
வென்றவன்சோமவாரவிரதநீர்நோற்றுவெள்ளி
மன்றவனருளைப்பெற்றுவான்வழிச்சென்மினென்றக்
குன்றவன்சிலையானேன்பின்விதியினைக்கூறுகின்றான். (௫)

உத்தமவானோர்தம்முளுத்தமனாகுமீச
னுத்தமசத்திமாருளுத்தமியுருத்திராணி
யுத்தமவிரதந்தம்முளுத்தமந்திங்கணோன்பென்
றுத்தமமறைநூலாதியுரைக்குமிச்சோமவாரம். (௬)

(க) நாக நன்னகர்-பொன்னுலகம். (உ) கோள் - நவக்கிரகம். கையறவு - வறுமை. (௪) வெய்யோன் - சூரியன். சேயோன்-அங்காரகன். வெள்ளித்தேசிகன் - அசுரகுருவாகிய சுக்கிரன்.

மந்தரங்காசியாதிபதிகளில்வதிந்துநோற்கத்
தந்திடும்பயனிற்கோடிதழைத்திடுமதுரைதன்னி
லிந்தநல்விரதநோற்போர்க்கதிகம்யாதென்னிற்சோம
சுந்தரனுரியவாரமாதலாற்சோமவாரம். (எ)

அங்கதினதிகப்பேறுண்டருக்கனின்மதிதோய்ந்தொன்றித்
தங்கியதிங்கணோன்புதகுதியினோற்கவல்லார்க்
கிங்கதினதிகநீதியீட்டியபொருள்கொண்டாற்று
மங்கலவிரதப்பேறென்றனந்தமாய்வளருமன்றே. (அ)

நலமலிவிரதநோற்கத்தொடங்குநாணவில்வாந்தேளிற்
சிலையினிலாதலன்றியிரட்டியதெரிசஞ்சேர்ந்த
மலமதியொழித்துமற்றைமதியிலுமுந்தைப்பக்கத்
தலர்கதிர்வாரத்தல்லூணயின்றிடாவயலிற்றுஞ்சா. (கூ)

வைகறையெழுந்துசேற்கண்மணாளனையுள்கியற்றைச்
செய்கடனிறீஇக்காமாதிசிந்தைநீத்தலர்பொற்கஞ்சப்
பொய்கையையடைந்துகையிற்பவித்திரம்புனைந்துவாக்கு
மெய்கருத்தொருப்பாடெய்தச்சங்கற்பம்விதந்துகூறி. (க0)

கடம்படிமுளைத்தமுக்கட்கரும்பினைநினைந்துஞாலத்
திடம்படுதீர்த்தமெல்லாமாடியபயனையீண்டுத்
திடம்படத்தருதியென்னுத்திரைத்தடம்படிந்துவெண்ணீ
றுடம்பணிந்தக்கமாலையொளிபெறவிதியாற்றாங்கி. (கக)

வெள்ளைமந்தாரமுல்லைமல்லிகைவெடிவாய்ச்சாதி
கள்ளவிழ்மயிலைபாதிவெண்மலர்கவர்ந்துவேழப்
பிள்ளையைமுந்தப்பூசித்திரந்துசங்கற்பம்பேசி
யுள்ளணைந்துச்சிமேற்பன்னிருவிரலுயர்ச்சிக்கும்பர். (கஉ)

---

(அ) அருக்கனில் மதிதோய்ந்து ஒன்றிதங்கிய திங்கள்நோன்பு என்றது-சூரியனில் சந்திரன்கலந்த அமாவாசையில்வரும் சோமவார விரதத்தை. (கூ) தேள்—(விருச்சிகம்) கார்த்திகைமாதம். சிலை-(தனு) மார்கழிமாதம். தெரிசம் - அமாவாசை. மலமதி - இரண்டமாவாசை கூடியமாதம். முந்தைப்பக்கம்-பூர்வபட்சம் (வளர்பிறை.) (க0) பவித்திரம் - பாவத்தைநீக்கி முத்தியைத்தருவது. ஒருப்பாடு-ஒன்றுபட்டு நிற்றல். சங்கற்பம் - ஏற்பாடு.

(கஉ) மயிலை - இருவாட்சி.

சத்தியஞானனந்தத்துவந்தன்னையுள்கி
வைத்ததன்வடிவங்கொண்டுமண்முதற்சிவமீறான
வத்துவவிலிங்கந்தன்னையாசனமூர்த்திமூல
வித்தைமற்றாலுநூலின்விதியினாற்பூசைசெய்க. (கங)

ஐந்தமுதாவினைந்துநறுங்கனியைந்துசெந்தேன்
சந்தனதோயம்புட்பத்தண்புனன்மணிநீராட்டிச்
சுந்தரவெண்பட்டாடைகருப்புரச்சுண்ணஞ்சாந்தங்
கந்தயல்லிகைமுன்னனவெண்மலர்க்கண்ணிசாத்தி. (கச)

காசணிபொலம்பூண்சாத்திக்கனைகழலாதியங்க
பூசனைசெய்துசேற்கட்பூரணபரையையவ்வா
றீசனைந்தெழுத்தைப்பெண்பாற்கிசையவுச்சரித்துப்பூசித்
தாசறுசுரபித்தீம்பாலட்டவின்னமுதினோடும். (கரு)

பண்ணியவகைபானீயநிவேதனம்பண்ணிவாச
நண்ணியவடைக்காய்நல்கிநறுவிரைத்தூபந்தீப
மெண்ணியவகையாற்கோட்டிக்கண்ணடியேனைமற்றும்
புண்ணியன்றிருமுன்காட்டிவில்வத்தாற்பூசைசெய்தல். (கசு)

புரகரனிச்சாஞானகிரியையாய்ப்போந்தவில்வ
மரமுதலடைந்துமூன்றுவைகலூணுறக்கமின்றி
யரகரமுழக்கஞ்செய்வோரைம்பெரும்பாதகங்கள்
விரகில்செய்கொலைகளுமாதலால்விசேடம்வில்வம். (கஎ)

மடங்கிதழ்சுருங்கல்வாடியுலர்ந்ததுமயிர்ச்சிக்குண்டன்
முடங்குகாற்சிலம்பிக்கூடுபுழுக்கடிமுதலாங்குற்ற
மடங்கினுங்குற்றமில்லையுத்தமமாகும்வில்வந்
தடங்கைகொண்டீசனுமமாயிரஞ்சாற்றிச்சாத்தல். (கஅ)

---

(கங) மண்முதல் சிவம்ஈறுஆன அத்துவம் இலிங்கம் என்றது-ஆன்மதத்துவம் அடிப்பாகமும், வித்தியாதத்துவம் நடுப்பாகமும், சிவதத்துவம் முடிவுமாகவமைந்த சிவலிங்கப்பெருமானை. ஆசனம், மூர்த்திமூலம் வித்தைஎன்றது — ஆசனமந்திரம், மூர்த்திமந்திரம், மூலமந்திரங்களை. (கரு) ஈசன் ஐந்து எழுத்தைப்பெண்பாற்கு இசைய உச்சரித்து என்றது - சத்திபீஜங்களோடொருப்பட்டசத்தி பஞ்சாட்சரியை. (கசு) பண்ணியம் - பலகாரம். பானீயம் - பாயசம். அடை - வெற்றிலை. காய் - துவர்க்காய். வகையாற்கோட்டி என்றது - மூன்றுதரம் வட்டமாகச் சுற்றுதலை.

(கஎ) புரகரன் - புரஹரன் என்னும் வடசொற்றிரிபு. திரிபுரத்தை யழித்தவனென்பது பொருள். கள்-புலை. விரகு-அறிவு.

அடியனேன்செய்யுங்குற்றமன்றைக்கன்றனந்தமாகுங்
கொடியநஞ்சமுதாக்கொண்டாய்குற்றமுங்குணமாக்கொண்டு
படியெழுதரியமங்கைபங்கனேகாத்தியென்று
முடியுறவடியில்வீழ்ந்துமும்முறைவலஞ்செய்தேத்தி. (கக)

வன்மனங்கரையநின்றுவேண்டியவரங்கள்வேண்ட
நன்மணப்பேறுமக்கட்பேறுநல்வாக்குக்கல்வி
பொன்மனக்கினியபோகந்தெவ்வரைப்புறகுகாண்ட
லிம்மையிலரசுமற்றுமெண்ணியாங்கெய்துமன்னோ. (உ0)

ஆதியிவ்விலிங்கந்தீண்டற்கருகரல்லாதவேத
வேதியர்முதலோரிட்டவிலிங்கத்திவ்விதியாலர்ச்சித்
தோதியவிரதநோற்கவர்ச்சனைக்குரியரல்லாச்
சாதியர்பொருணேர்ந்தாதிசைவராற்பூசைசெய்தல். (உக)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

பொருவிலிவ்விரதமைவகைத்துச்சிப் போதிலூணிரவிலூணி ரண்டு, மொருவுதலுறங்கா திருத்தலர்ச்சனைநால் யாமமுமுளுற்றுத லென்னக், கருதினிவ்வைந்து மொன்றனுக்கொன்று கழியவுமதிக மாநோற்கும், வருடமொன்றிரண்டு மூன்றுபன்னிரண்டு வருடம் வாழ்நாளளவிவற்றுள். (உஉ)

உடலளவெண்ணிநோற்பவர்முந்தவுத்தியாபனஞ்செய்துநோற்கக்
கடவரவ்வருடக்கட்டளைக்கிறுதிகழிப்பதுத்தாபனவிதிதான்
மடலவிழ்மாலைமண்டபங்குண்டமண்டலம்வகுத்துமாபதியைப்
படரொளிவெள்ளிமுப்பதுகழஞ்சிற்படிமையானிருமிதஞ்செய்து.

காலையிலாசான்சொல்வழிநித்தக்கடன்முடித்துச்சிதொட்டந்தி
மாலையினளவும்புராணநூல்கேட்டு மாலைதொட்டியாமமோர்நான்கு
சேலனகண்ணுள்பங்கனைப்பூசைசெய்கவப்பூசனைமுடிவின் [ஞ்
மூலமந்திரநூற்றெட்டுநூற்றெட்டுமுறையினுலாகுதிமுடித்தல். ()

வில்வமாயிரங்கொண்டாயிரநாமம்விளம்பிநால்யாமமுஞ்சாத்த
ணல்லவைந்தெழுத்தாலைந்தெழுத்துருவி னுதனுக்கருக்கியங்கொடு
லெல்லையின்மூலமந்திரத்தாலுமேனைமந்திரங்களினுலும் [த்த
வில்லழலோம்பிப்பூரணுகுதிசெய்தீறிலான்வேள்வியைமுடித்தல்.

---

(கக) படிவம் என்றது படிஎன ஈறுதொக்குநின்றது-படிவம்-உருவம். (உங) கட்டளை - நியதி. (உரு) வில்அழல் - வில் வடிவாகச்செய்த ஓமகுண்டத்தமைந்த அக்கினி.

புலர்ந்தபின்னித்த வினைமுடித்தரம்பைப் பொதுளும்பாசிலை பதின்மூன்றி, னலந்தருதூவெள் ளரிசிபெய்தினிய நறியகாய்கறி யொடுபரப்பி, யலந்தரவான்பா னிறைகுடம்பதின் மூன் றரிசிமே ல்வைத்தரனடியிற், கலந்தவன் பினராய்ச் சிவார்ச்சனைக்குரிய கட வுள்வேதியர்களைவரித்து. (உசு)

காதணிகலனுங் கையணிகலனுங் கவின்பெறவளித்தரனுக, வாதரம்பெருக நினைந்தருச்சனைசெய் தரியதக்கிணையொடும்பாதப், போதணிகாப்பு விசிறி தண்கவிகைபூந்துகின்முதற்பலவுடனே,மே தகுதானஞ் செய்துபின்குருவைக் கற்புடைமின்னிடையோடும். ()

ஆசனத்திருத்திப்பொலந்துகில்காதுக்கணிகள்கைக்கணிகளுமணிந் வாசநன்மலரிட்டருச்சனைசெய்துமலைமகடலைவனைவரைந்து [து பூசனைசெய்தபடிமையோடம்பொன்பூதலம்பதாதிகள்பிறவுந் தூசலர்மாலைகோட்டணிபுனைந்தசுரபிமாதானமுஞ்செய்து (உஅ)

இனையவாறுத்தாபன முடித்தாசானேவலாற்சிவனடிக்கன்பர், த னையரோடொக்கலுடன முதருந்தறகுதியிவ்விரதமுன்கண்ண, ன னையதாமரையோனிந்திரன் முதல்வானுடவர்மூவறுகணத்தோ, ர னைவருநோற்றூர்மனிதருமனுட்டித் தரும்பெறற்போகம் வீடடைந் தார். (உகூ)

ஈதுநோற்பவர்வெம் பகைமனத்துயர்தீந் தாயிரம்பிறவியிலிய ற்றுந், தீதுசேர்வினை தீர்ந் தெடுத்தயாக்கையினிற் சிவகதியடைவ ரிவ்விரத, மோதினோர்கேட்டோர் மனைவியர்மக்க ளொக்கலோடி னிதுவாழ்ந்தும்பர், மேதகுபதிஞ விந்திரன்பதத்தில் வீற்றினிதி ருப்பரென்றறவோன். (௩0)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

சொல்லியநெறியாற்சோமசுந்தரன்விரதநோற்பார்
வில்லிடுமணிப்பூண்வேந்தர்முனிவனைவிடைகொண்டேகி
யல்லியங்கனககஞ்சததாடியங்சயற்கண்வல்லி
புல்லியபாகன்றன்னைவழிபடஇப்போற்றிநோற்றூர். (௩௧)

---

(உசு) அலம்-அமைவு. (உஎ) பாதப்போதணி காப்பு-பாதுகை.

(உஅ) சுரபி-பசு. (உகூ) ஒக்கல்-உற்றம். அனைய தாமரை எ ன்றது-அத்திருமாலுந்திக்கமலத்தை. அல்லது அனையவென்னுஞ் சுட்டுத்திரிபு உயர்வின்மேல் நின்றதெனினு மொக்கும்.

(௩0) பதினுலிந்திரர்பதம் என்றது-ஓர்பிரமகற்பத்தை. யாக் கை-சரீரம்-இப்பெயர்க்கு-மகாமாயை யென்னு மோர்சத்தி கன்ம வசத்துக்கீடாகப் பூவின் மணத்தைக் காற்றுகொடுவந் தறிவிக்கு மாறுபோலக். கன்மங்களுக்கான வனுபோகக்கருத்தை யவத்தாகா லத்திலேயுண்டாக்கிக், கருவிற்றூகவந்த ஆன்மாவைச் சுக்கில சு ரோணிதங்களிலே கூட்டிக்கட்டிவித்தது, என்பதுபொருள்.

சுந்தரன் றன்னைப்பூசைத்தொழில்செய் துவரம்பெற்றேகி
யந்தரத்தாறுசெல்வாரஃதறிந்தமரர்வேந்தன்
வந்தவரிருக்கவேறுமடங்கன்மான் றவிசுமூன்று
தந்திடப்பணித்தானிட்டார்தனதரியணையிற்றாழ. (௩உ)

வான்வழிவந்தமூன்றுமன்னரும்பொன்னாடெய்தி
யூன்வழிகுலிசவைவேலும்பர்கோன்மருங்கிற்புக்கார்
தேன்வழிபோந்தின்கண்ணிச்சேரனுமார்த்தார்வேந்துங்
கான்வழிதாருநாடன்காட்டியதவிசின்வைக. (௩௩)

மைக்கடல்வறப்பவென்றவாகைவேற்செழியன்மௌலிச்
செக்கர்மாமணிவிற்காலத்தேவர்கோன் றவிசிலேறி
யொக்கவீற்றிருந்தானாகவும்பர்கோனழுக்காறெய்திப்
பக்கமேயிருந்தவேனைப்பார்த்திபர்முகத்தைப்பாரா. (௩௪)

மூகமனன்கியம்பிநீவிர்வந்ததென்மொழிமினென்ன
மகபதியெங்கணாட்டின்மழைமறுத்தடைந்தேமென்றா
ரகமலர்ந்தனையார்நாட்டினளவும்வான்சுரக்கநல்கி
நகைமணிக்கலன்பொன்னாடைநல்கிநீர்போமினென்றான் (௩௫)

அன்னவரகன்றபின்னையமரர்கோன்கன்னிநாடன்
றன்னரியணைமேலொக்கத்தருக்கினோடிருக்குமாறும்
பின்னருமாரிவேண்டாப்பெருமிதவீறுநோக்கி
யின்னதுபுலப்படாமையினையதோர்வினயமுன்னா. (௩௬)

பொற்புறவரிசைசெய்வான்போலளவிறந்தோர்தாங்கி
வெற்புறழ்திணிதோளாற்றன்மெலிவதோராரந்தன்னை
யற்புறவளித்தான்வாங்கியலர்மதுத்தார்போலீசன்
கற்புடையுமையாண்மைந்தன்கதுமெனக்கழுத்திலிட்டான். (௩௭)

கண்டனன்கடவுணதன்கழியவுமிறும்பூதுள்ளங்
கொண்டனனின்றுதொட்டுக்குரையளிதுழாவுகிம்பத்
தண்டழைமார்பவாரந்தாங்குபாண்டியனென்றுன்னை
மண்டலமதிக்கவென்றான்வானநாடுடையமன்னன். (௩௮)

---

(௩௩) போந்து - பனை. ஆர் - ஆத்தி. தாருநாடன் - கற்பக நாட்டரசனாகிய இந்திரன். (௩௬) வீறு - செருக்கு. புலப்படாமை, அறிவுக் கெட்டாமை. (௩௭) கதுமென - விரைந்து. (௩௮) கடவுள்நாதன் - தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரன். இறும்பூது - வியப்பு.

அன்னதுசிறிதுமெண்ணுதங்குநின்றிழிந்துதென்னன்
றன்னகரடைந்தானிப்பாற்சதமகனுணையாலம்
மன்னவரிருவர்நாடுமழைவளம்பெருகப்பெய்த
தென்னவனுடுபண்டைச்செயலதாயிருந்ததன்றே. (௩௯)

ஆயதோர்வைகல்வேட்டையாடுவானண்ணல்விண்ணந்
தாயதோர்பொதியக்குன்றிற்சந்தனச்சாரனண்ணி
மேயதோலரிமானேனம்வேங்கையெண்கிரலையின்ன
தீயதோர்விலங்குவேட்டஞ்செய்துயிர்செகுக்குமெல்லை. (௪0)

பொன்றத்துமருவிக்குன்றிற்புட்கலாவருத்தமாதி
மின்றத்துமேகநான்கும்வீழ்ந்தனமேயக்கண்டு
குன்றத்தினெடியதிண்டோட்கொற்றவனவற்றைப்பற்றிக்
கன்றத்திண்களிறுபோலக்கடுந்தளைசிக்கயாத்தான். (௪௧)

வேட்டத்திற்பட்டசெங்கண்வேழம்போற்கொண்டுபோகிக்
கோட்டத்திலிட்டானுகக்குன்றிறகரிந்தவென்றி
நாட்டத்துப்படிவத்தண்டநாடன்மற்றதனைக்கேட்டுக்
காட்டத்துக்கனல்போற்சீறிக்கடுஞ்சமர்குறித்துச்செல்வான். (௪௨)

வாங்குசீர்வரப்பவேலைவிடுத்ததும்வலியவாரந்
தாங்கியசெருக்குங்காரைத்தளையிடுதெருக்குநோக்கி
யீங்கொருமனிதயாக்கைக்கித்துணைவலியாதென்று
வீங்கியமானமூக்கமீனவன்மதுரைசூழ்ந்தான். (௪௩)

கலிவிருத்தம்.

ஓடினரொற்றர்போய்ச்செழியனெண்கழல்
சூடினர்நகர்ப்புறஞ்சுரர்கள்சேனைகண்
மூடினவென்னலுமுனிவுமானமு
நீடினனரியணையிருந்துநீங்குவான். (௪௪)

---

(௪0) விண்ணம் - விண்ணுலகம். தோல் - யானை. அரிமான் - சிங்கம். எண்கு - கரடி. இரலை - மான்.

(௪௧) மேகம் நான்கென்றது - புட்கலாவர்த்தம், சங்காரித்தும், துரோணம், காளமுகி என்னும் மேகங்களை. இவைமுறையே பொன், பூ, மண், கல், இவற்றைப்பொழிவன.

(௪௨) கோட்டம் - சிறைக்கூடம். நாட்டத்துப் படிவத்தண்டநாடன் என்றது - கண்கள்நிறைந்த தேகத்தையுடைய இந்திரனை. காட்டம் - விறகு. இதுகாஷ்டமென்பதன்றிரிபு.

(௪௩) ஊக்க - செலுத்த.

பண்ணுகதேர்பரிபகடுவீரர்முன்
னண்ணுககடிதெனநடத்தியாவரென்
றெண்ணலன்மதமலையெருத்தமேற்கொடு
கண்ணகன்கடிநகர்க்காப்புநீங்குமின். (சரு)

அடுத்தனர்வானவரார்த்துப்பல்படை
யெடுத்தனர்வீசினர்சிலையிலெய்கணை
தொடுத்தனரிறுதிநாட்சொரியுமாரிபோல்
விடுத்தனர்மதிக்குலவீரன்சேனைமேல். (சசு)

ஆர்த்தனர்மலயவெற்பரையன்சேனையோர்
பார்த்தனர்வேறுபல்படைக்கலக்குவை
தூர்த்தனர்குனிசிலைதொடுத்துவாளியாற்
போர்த்தனரமரர்மெய்புதைத்தவென்பவே. (சஎ)

தறிந்தனதாள்சிரந்தகர்ந்ததோள்கரம்
பறிந்தனகுறுதிநீர்கடலிற்பாய்ந்தன
செறிந்தனபாரிடஞ்சேனங்கூளிகண்
முறிந்தனவானவர்முதல்வன்சேனையே. (சஅ)

ஆடினகுறைத்தலையவிந்தபோர்க்களம்
பாடினபாரிடம்விந்தைப்பாவைதாள்
சூடினகூளிகள்சோரிசோரப்பார்
மூடினபிணக்குவையண்டமூட்டவே. (சகூ)

வெஞ்சினவலாரிதன்வீரச்சேனைக
டுஞ்சினகண்டெரிசொரியுங்கண்ணனைப்
பஞ்சின்முன்னெரியெனப்பதைத்துத்தெய்வத
வஞ்சினப்படைகளான்மலைவதுன்னினன். (ருo)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வெங்கதிர்ப்படைவிட்டார்த்தான்விண்ணவனதனைத்திங்கட்
பைங்கதிர்ப்படைதொட்டோச்சியவித்தனன்பாராள்வேந்தன்
சிங்கவெம்படைவிட்டார்த்தான்றேவர்கோனதனைச்சிம்புட்
புங்கவன்படைதொட்டோச்சியடக்கினன்புணரிவென்றோன். (ருக)

---

(சரு) பகடு, மதமலை - யானை. காப்பு என்றது - மலை, காடு, கடல், மதிலென்னு நால்வகையரண்களுள், மதில்மேல்நின்றது.

(சஎ) மலயவெற்பரையன் - உக்கிரகுமாரபாண்டியன்.

(சஅ) குருதிநீர் - உதிரம். பாரிடம் - பூதம். கூளி - பசாசு.

(சகூ) குறைத்தலை — கவந்தம். (ருo) வஞ்சினம் - நெடுமொழி அதாவது - போர்முகத்துத் தமதுவீரத்தைப் புகழ்ந்துகூறல்.

(ருக) சிங்கப்படை—நரசிம்மாஸ்திரம். சிம்புட்படை—சரபாஸ்திரம்.

தானவர்பகைவன்மோகசரந்தொடுத்தெறிந்தானாக
மீனவனதனைஞானவாளியால்விளித்துமாய்ந்து
போனபின்மற்போராற்றிப்புக்கனர்புக்கார்தம்மில்
வானவன்மண்ணினான்மேல்வச்சிரம்வீசியார்த்தான். (ருஉ)

காய்சினமடங்கலன்னான்கைவளைசுழற்றிவல்லே
வீசினன்குலிசந்தன்னைவீழ்த்ததுவிடுத்தான்சென்னித்
தேசினன்மகுடந்தள்ளிச்சிதைத்ததுசிதைத்தலோடுங்
கூசினனஞ்சிப்போனான்குன்றிறகரிந்தவீரன். (ருங)

இந்திரண்டனையகூர்ம்பல்லிருள்வரைநெஞ்சுபோழ்ந்த
மைந்தனில்வலியகாளைவரைந்தெறிநேமிசென்னி
சிந்திடாதாகிநம்பொன்மணிமுடிசிதறச்சோம
சுந்தரநாதன்பூசைத்தொழிற்பயனளித்ததென்னா. (ருச)

போரினுக்காற்றாதோடிப்பொன்னகர்புகுந்தவென்றித்
தாரினுக்கிசைந்தகூர்வேற்சதமகன்பின்புதன்னாட்
டேரினுக்கெல்லாமாரியுதவுவேனிகளநீக்கிக்
காரினைத்தருகவென்னாக்கவுரியற்கோலைவிட்டான். (ருரு)

முடங்கல்கொண்டணைந்ததூதன்முடிகெழுவேந்தன்பாதத்
தொடங்கிநின்றோலைநீட்டவுழையுளானொருவன்வாங்கி
மடங்கலேறனையான்முன்னர்வாசித்துக்காட்டக்கேட்டு
விடங்கலுழ்வேலான்விண்ணோர்வேந்துரைதேறானாகி. (ருசு)

இட்டவன்சிறையைநீக்கியெழிலியைவிடாதுமாறு
பட்டசிந்தையனேயாகப்பாகசாதனனுக்கென்று
நட்டவனொருவேளாளனன்பிணையென்றுதாழ்ந்தான்
மட்டவிழ்ந்தொழுகுநிம்பமாலிகைமார்பினானும். (ருஎ)

இடுக்கண்வந்துயிர்க்குமூற்றமெய்தினும்வாய்மைகாத்து
வடுக்களைந்தொழுகுநாலாமரபினனுரையையாத்த
னெடுத்துரைமறைபோற்சூழ்ந்துசிறைக்களத்திட்டயாப்ப
விடுத்தனன்பகடுபோலமீண்டனமேகமெல்லாம். (ருஅ)

---

(ருச) இருள்வரை - கிரவுஞ்சகிரி. (ருரு) கூர்வேல் என்றது- வச்சிராயுதத்தை. நிகளம் - விலங்கு. (ருசு) முடங்கல் - ஓலை. உழை - அருகு. (ருஎ) பாகசாதனன் - பாக னென்னு மோரசுரனை வென்றவன். (ருஅ) இடுக்கண் - வறுமை. ஊற்றம் - இடையூறு. வடு - குற்றம். நாலாம் மரபினன் என்றது - சற் சூத்திரனாகிய வேளாளனை. யாப்பு - தளை.

தேவர்கோனேவலாலேதிங்கண்மும்மாரிபெய்து
வாவியுங்குளனும்யாறுமடுக்களுமடுத்துக்கள்வாய்க்
காவிசூழ்வயலுஞ்செய்யுஞ்செந்நெலுங்கன்னற்காடும்
பூவிரிபொழிலுங்காவும்பொலிந்ததுகன்னிநாடு. (ருசு)

இந்திரன்முடிமேல்வளையெறிந்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் உ௩ - க்கு - திருவிருத்தம் - கககo.

---

பதினைந்தாவது,

## பேருவைச்செண்டாலடித்தபடலம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அண்டரஞ்சவமருழந்தவமரர்கோனையரசர்கோன்
வண்டலம்புமௌலிசிந்தவளையெறிந்துவென்புறங்
கண்டவண்ணமின்னதன்னகன்னிநாடன்மேருவிற்
செண்டெறிந்துவைப்பெடுத்தசெயலுநன்குசெப்புவாம். (க)

மன்னவன்றனக்குமுன்னர்மலயவெற்பின்முனிவர்கோன்
சொன்னதிங்கள்விரதமன்றுதொட்டுநோற்றுவரலுமந்
நன்னலஞ்செய்பேறுபோலநங்கைகாந்திமதிவயிற்
றுன்னருஞ்சயங்கொண்மைந்தனொருவன்வந்துதோன்றினான். (உ)

வயந்தனைப்பயந்ததென்னமைந்தனைப்பயந்தபோ
தியந்துவைத்துநகர்களிப்பவினிதிருந்தபுரவலன்
சயந்தழைக்கவிந்திரன்சயந்தனைப்பயந்தநாள்
வியந்தகத்தடைந்தவின்பம்விளைமகிழ்ச்சியெய்தினான். (௩)

தென்னரேறுசாதகாதிசெய்துவீரபாண்டிய
னென்னநாமவினைநிரப்பியெழுதொணுதகலைமுதற்

---

(ருசு) மடுத்தல் - நிறைதல். வயல் - விளைநிலம். செய் - பட்டம். பொழில் - நந்தவனம். கா-பயன்றருஞ்சோலை.

(க) வென் - முதுகு. வைப்பு - நிட்சேபம். (௩) வயந்தனைப் பயந்தது என்ன என்றது-திருமால் (மன்மதனைப் பெற்ற மைபோல) எனவும், வெற்றியைப் பெற்றதுபோல எனவும் பொருள்படும். வயம்-வெற்றி. வசந்தன் என்பது, வயந்தன் எனப்போலியாயிற்று. இயம் - வாச்சியம். (ச) எழுதொணுதகலை - வேதம்.

பன்னுகேள்விகரிகடேர்கள்பரிபடைக்கலம்பயின்
றன்னகாதலான்விளங்கவகமகிழ்ச்சியடையுநாள். (ச)

மல்குமாறுகோடிரிந்துமழைசுருங்கிநதியுநீ
ரொல்குமாறுபருவமாறியுணவுமாறியுயிரெலா
மெல்குமாறுபசியுழந்துவேந்தனுக்குவிளைபொரு
ணல்குமாறிலாமையின்னலியவந்தநாடெலாம். (ரு)

மழைவறந்ததென்கொலென்றுவழுதிகூறமுழுதுணர்ந்
தழிவிலாதபிரமசற்பமளவுமெல்லைகண்டநூ
லுழவர்கோள்களிரவிதன்னையுற்றுநோக்கிநிற்றலாற்
றழையுமாரிவருடியாதொர்வருடமென்றுசாற்றினர். (சு)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மகவுறுநோயைநோக்கிவருந்துறுதாய்போன்மன்னன்
பகவுறுமதியஞ்சூடும்பரஞ்சுடர்முன்போய்த்தாழ்ந்து
மிகவுறுபசியால்வையமெலிவதையையவென்னுத்
தகவுறவிரங்கிக்கண்ணீர்ததும்பிநின்றிரந்துவேண்ட. (எ)

திரைக்கடல்விடஞ்சேர்கண்டர்காலத்தின்செவ்விநோக்கி
யிரக்கமில்லவர்போல்வாளாவிருத்தலுமருத்தார்மார்பன்
கரைக்கரிதாயதுன்பக்கடலில்வீழ்ந்திருக்கைபுக்கா
னரக்கர்போர்க்கடலினீந்தியருக்கனீர்க்கடலில்வீழ்ந்தான். (அ)

வள்ளறன்குடைக்கீழ்த்தங்குமுயிர்ப்பசிவருத்தமெல்லாங்
கொள்ளைகொண்டிருந்தநெஞ்சிற்குளிர்முகச்செவ்விகுன்றத்
தள்ளருந்துயரின்மூழ்கித்தரையிடத்துயின்றுழுகை
வெள்ளிமன்றுடையார்சித்தவேடராய்க்கனவில்வந்தார். (கூ)

அடற்கதிர்வேலோய்மாரியரிதிப்போததனைவேண்டி
யிடர்ப்படல்வரைக்குவேந்தாயிருக்கின்றவெரிபொன்மேருத்
தடப்பெருவரையின்மாடோர்தனிப்பெருமுழையிலிட்டுக்
கிடப்பதோரெல்லையில்லாக்கேடிலாச்சேமவைப்பு. (க0)

---

(ரு) ஆறுகோள்-சநி, செவ்வாய், குரு, சூரியன், இராகு, கேதுக்கள். பருவம்-கார்காலம். ஒல்குமாறு என்றதில்-மாறு, வினையெச்சப்பொருளில் வருமோ ரிடைச்சொல். (சு) நூல் உழவர் - கணிதநூற்புலவர். (எ) பகவு - பிளவு.

(அ) அரக்கர் போர்க்கடலில்நீந்தி என்றது - சூரியன் றனது விபவத்தோடு வருங்கால் இடையில் அறுபத்து நான்குகோடி யரக்கர்வந்துபோர்புரிய, அவரைக்கடந்து நீங்கியதை.

கிடைத்துமற்றனையமேருகிரிசெருக்கடங்கச்சென்டாற்
புடைத்துநின்னுணைத்தாக்கிப்பொன்னறைபொதிந்தபாறை
துடைத்துநீவேண்டுங்காறுந்தொட்டெடுத்ததனைமீள
வடைத்துநின்குறியிட்டடையவருதியென்றடிகள்கூற. (கக)

விழித்தனனெழுமான்றேரோன்விழிக்குமுன்கடன்களெல்லாங்
கழித்தனன்மீனநோக்கிகணவனைவலமாய்ப்போந்து
சுழித்தெறிகடலனீகத்தொகைபுறஞ்சூழக்கொண்டல்
கிழித்தெழுவாயினீங்கிக்கீழ்திசைநோக்கிச்செல்வான். (கஉ)

அதிர்ந்தனமுரசஞ்சங்கமதிர்ந்தனவியங்களண்டம்
பிதிர்ந்தனவென்னவார்ப்பப்பெயர்ந்துவெண்கவரிதுள்ள
முதிர்ந்தநான்மறையோராசிமொழியநாவல்லோரேத்தப்
பதிந்துபார்கிழியத்திண்டேர்பாகுமுன்செலுத்தவூர்ந்தான். (கங)

பவளக்காற்பிச்சம்பொற்காற்பன்மணிக்கவிகைமுத்தத்
தவளக்காற்பதாகைக்காடுதானவானருவிதூங்குங்
கவளக்காற்பொருப்பும்பாய்மாக்கடலுமண்மடந்தையாகந்
துவளக்கால்வயவர்மான்றேர்த்தொகுதியுஞ்சூழல்போக. (கச)

கோழிணர்ஞாழலன்னகோட்டுகிர்ப்புலவுப்பேழ்வாய்த்
தாழ்சினவுழுவையொற்றைத்தனிப்பெருங்கொடியுங்கூனற்
காழ்சிலைக்கொடியுஞ்சூழக்கயற்கொடிநிலந்துழாங்கை
யேழுயர்வரைமேற்றோன்றியிருவிசும்பகடுகீற. (கரு)

தென்கடல்வடபாலேக்கிச்செல்வதுபோலத்தென்னன்
றன்கடலனிகங்கன்னித்தண்டமிழ்நாடுநீந்தி
வன்கடநெறிக்கொண்டேகிவளவர்கோனெதிர்கொண்டாற்று
நன்கடன்முகமனேற்றுநளிர்புனனாடுநீந்தி. (கசு)

---

(கக) கிடைத்து - அடைந்து. குறி - முத்திரை. (கஉ) எழுமான் - எழுகுதிரைகள். மா-குதிரை, ன்-சாரியை. கொண்டலென்றது - மேகமண்டலத்தை. (கங) பாகு - பாகன். (கச) பிச்சம்-பீலிக்குடை; பீலி - மயிலிறகு. தானம் பொருப்பு என்றது - யானையை. பாய்மா - பாய்ந்துசெல்லுங் குதிரை.

(கரு) ஞாழல் - குங்குமமரம். கோடு - வளைவு. பேழ் - பிளவு. உழுவை-புலி. சிலை-வில். ஏழுயர்வரை என்றது - எழுமுப்புயர்ந்த மலைபோன்றயானையை. (கசு) வன்கடம் - முரம்புங் கூர்ங்கல்லுநெருங்கியகாடு. கடன் - வரிசை.

தண்டகநாடுதெள்ளித்தெலுங்கநாடகன்றுசாய்தாட்
கண்டகக்கைதைவேலிக்கருநடங்கடந்துநாடுந்
தொண்டகந்துவைக்குங்குன்றுநதிகளுந்துறந்துகள்வாய்
வண்டகமலர்க்காவேலிமாளவதேசநண்ணி. (கஎ)

அங்குநின்றெழுந்துதீவாயருஞ்சுரநெறிபட்டேகி
மங்குனின்றதிருஞ்செம்பொன்மாடநீள்விராடநண்ணிக்
கொங்குநின்றவிழுங்கானங்குன்றொரீஇவாளைபாயத்
தெங்குநின்றிளநீர்சிந்துமத்தியதேயத்தெய்தி. (கஅ)

அந்நெடுநாடுநீங்கியாடலேறுயர்த்தோன்றல்
பொன்னெடுஞ்சடையிற்றாழ்ந்துபுனிதமாந்தீர்த்தக்காசி
நன்னெடுநகரமெய்திநளிர்புனற்கங்கைநீந்திக்
கன்னெடுநெறியனேககாவதங்கடந்தபின்னர். (ககூ)

மடங்கன்மாநாகம்யாளிவழங்கலான்மனிதர்செல்லா
விடங்கடந்தாகவைஞ்ஞூற்றிரட்டியோசனைத்தாமெல்லைக்
கடங்கெழுகுமரிகண்டங்கடந்துமற்றதுபோலெட்டுத்
தடங்கெழுகண்டங்கொண்டபாரதவருடந்தள்ளி. (உ0)

யாவையுமீன்றுடன்னையீன்றபொன்னிமயந்தன்னைத்
தாவியப்புறம்போய்ப்போகந்தரும்புகிம்புருடகண்ட
மேவியங்கதுநீத்தேமவெற்படைந்ததுபின்னாக
வோவியப்புறத்துத்தோன்றுமரிவருடத்தையுற்று. (உக)

உற்றதுகழிந்தப்பாற்போய்நிடதவெற்பொழிந்துசம்புப்
பொற்றருக்கனிகால்யாறுபோகிளாவிரதகண்டத்

---

(கஎ) கண்டகம் - முள். தொண்டகம் — குறிஞ்சிநிலப்பறை.

(உ0) மாநாகம் - பெரியயானை. பாரதவருடம் - பரதன் என்ப வனுலாளப்பட்ட பூமியின் பெரும்பிரிவு. பரதன் - சுவாயம்புவமனு வின் இரண்டாவதுபேரன். வருடம் - பெரும்பிரிவு. குமரிக்கண் டம் என்றது - பரதனுலாளப்பட்டபூமியின் ஒன்பதுபங்கிலொன்று. குமரி - பரதனுடைய புத்திரி, இவற்றின்விரிவை சிவதருமோத்தி ரம்,கோபுரவியலிலும்; காந்தம் அண்டகோசப்படலத்திலும்காண்க.

(உக) கிம்புருடகண்டம்-இமையகிரிக்கும் ஏமகிரிக்கும் இடை யில் கிம்புருடனுலாளப்பட்டபாகம். அரிவருடம் ஏமகிரிக்குத்தெற் கு. நிஷதகிரிக்குவடக்கு, இதன்மத்தியில் அரிஎன்பவனுலாளப்பட் ட பூமியின்பெரும்பாகம். (உஉ) இளாவிரதகண்டம்-இதுமகம்மேரு வின் சாரலாய் இளாவிரதனென்பவனுலாளப்பட்ட பாகம்.

துற்றனன்கண்டான்மூன்றூரொருங்கடுனொன்றுகூனி
வெற்றிவெஞ்சிலையாய்நின்றவெற்பினைமலயவெற்பன். (உஉ)

வெம்படைமறவர்சேனைவெள்ளநீத்தேகித்தென்பாற்
சம்புவின்கனியின்சாறுவலம்படத்தழுவியோடு
மம்பொனீராறுமாற்றினருகுபொன்மயமாய்நிற்கும்
பைம்புனங்கானநோக்கிவளைந்துதென்பால்வந்தெய்தா. (உ௩)

அவ்வரையரசைநோக்கிவரைகளுக்கரசேயெந்தை
கைவரிசிலையேபாரின்களைகணேயளவில்வானந்
தைவருசுடருங்கோளுநாள்களுந்தழுவிச்சூழுந்
தெய்வதவரையேமேலைத்தேவராலயமேயென்று. (உச)

மாணிக்கமிமைக்கும்பூணான்விளித்தலும்வரைக்குவேந்தன்
பாணித்துவரவுதாழ்ப்பப்பாகசாதனனைவென்றோ
னாணித்தன்சினமுமேருங்கைவரைச்செருக்குமாறச்
சேணுற்றசிகரந்தன்னிற்செண்டினாலடித்துநின்றான். (உரு)

அடித்தலுமசையாமேருவசைந்துபொற்பந்துபோலத்
துடித்ததுசிகரபந்திசுரர்பயில்மாடப்பந்தி
வெடித்தனதருணபானுமண்டலம்விண்டுதூளாய்ப்
படித்தலைதெறித்தாலென்னப்பன்மணியுதிர்ந்தவன்றே. (உசா)

புடைவரைக்குலங்களெட்டும்புறந்தழீஇக்கிடக்குஞ்செம்பொ
னடைகலோர்நான்குநான்குகிடங்கருமலர்ந்தநான்கு
தடமலர்ப்பொழிலுநான்குதருக்களுஞ்சலித்தவம்மா
வுடையவனிடையூறுற்றாலடுத்தவர்க்குவகையுண்டோ. (உள)

(உரு) பாணித்தல் - தாமதித்தல். (உசா) சிகரபந்தி - ஆயிரங் கொடுமுடிகள். தருணபானு - இளஞ்சூரியன்.

(உள) வரைக்குலங்களெட்டாவன - நிஷதம், ஏமகூடம், இமயம், நீலம், சுவேதம், சிருங்கம், கந்தமாதனம், மாலியவான், என்பன. அடைகல் ஓர்நான்காவன - மேருமலைக்குறுதியாகச் சூழ்ந்து நிற்கும், மந்தரம், கந்தமாதனம், விபுலம், பாருசுவம் என்னும் பருவதங்கள். நான்குகிடங்கராவன - தாகம். மானதசரசு, விமலோதகம், மனோரதமென்னும் ஓடைகள். நான்கு தடங்களாவன - அருணம், மானதசரசு, சீதோதம், மகாமடு என்னுந்தடாகங்கள். நான்கு தருக்கள் என்றது - கடம்பு, நாவல், அரசு, ஆல் என்பவற்றை, நான்கு பொருள்களாவன - சயித்திரம், விசித்திரை, வைப்பிரசம், திருதாக்கியம் என்பன.

புடைத்தபின்மேருத்தெய்வம்புடைக்குலவரையெட்டென்னப்
படைத்தவெண்டோளுநான்குமுடியுமேற்படுவெண்சோதி
யுடைத்தனிக்குடையுங்கொண்டவுருவினோடெழுந்துநாணிக்
கிடைத்ததுகருணைவேந்தன்கிளர்சினந்தணிந்துநோக்கா. (உஅ)

இத்தனைவரவுதாழ்த்ததென்னெனமேருத்தெய்வம்
வித்தகநம்பிகேட்டிமீனெடுங்கண்ணியோடும்
வைத்தலையரவம்பூண்டபரனையிப்படிவங்கொண்டு
நித்தலும்போகிப்போகிவழிபடுநியமம்பூண்டேன். (உகூ)

இன்றுகேட்டிலையோவையாவேந்திழையொருத்திகாமந்
துன்றுமாகடலின்மோகச்சுழித்தலைப்பட்டுவெள்ளி
மன்றுளாடியபொற்பாதம்வழிபடன்மறந்துதாழ்ந்து
நின்றுளேனினையதீங்கினிமித்தினாலடியும்பட்டேன். (௩௦)

திருவடிபிழைத்ததீங்குதீர்த்தனையிதனிலையன்
றருவதோறுருதிதானுந்தக்கதோர்கைம்மாறென்னால்
வருவதுமுண்டாங்கொல்லோமற்றதுநிற்கமன்றற்
பருவரைமார்பவந்தபரிசென்கொல்பகர்தியென்ன. (௩க)

மன்னவன்வெறுக்கைவேண்டிவந்தனனென்றானைய
வுன்னதுபுலத்தோர்க்கேற்பவுரைபடுமாற்றதாய
பொன்னவிர்தேமாநீழற்புதைபடக்கிடக்குஞ்செம்பொ
னென்னவங்கையாற்சுட்டிக்காட்டியதெரிபொற்குன்றம். (௩உ)

மின்னகுவேலான்முந்நீர்வேலையைவணக்கநகண்டோன்
பொன்னறைமருங்கிற்போகிப்பொத்தியபாறைநீக்கித்
தன்னவாவளவிற்றூயதமனியமுகந்துமூடிப்
பின்னதுந்தன்னதாகப்பெயரிலச்சினையுந்தீட்டா. (௩௩)

மின்றிகழ்மணிப்பூண்மார்பன்மீண்டுதென்றனையோடுந்
தென்றிசைநோக்கிப்பாகன்செலுத்தமான்றடந்தேரூர்ந்து
பொன்றிகழ்வரையும்போகபூமியும்பிறவுநீத்து
நன்றிகொண்மனிதர்வைப்பினண்ணுவானண்ணுமெல்லை. (௩ச)

---

(௩உ) உன்னதுபுலத்தோற்கேற்ப என்றது - மாற்றதிகமுள்ள பொன்னும் அதனிடத்துள்ள தாதலின். வெறுக்கை - சிவஞானிகளால் வெறுக்கப்படுவது; பொருள்.

(௩௩) பொத்திய - மூடிய. இலச்சினை - முத்திரை.

மாத்திமர்விராடமன்னர்மாளவர்தெலுங்கதேயப்
பார்த்திபர்பிறருந்தத்தம்பதிதொறும்வரவுநோக்கித்
தேர்த்திகழனிகத்தோடுஞ்சென்றெதிர்முகமன்செய்யத்
தார்த்திருமார்பன்கன்னித்தண்டமிழ்நாடுசார்ந்தான். (நரு)

கன்னிப்பொன்னெயில்சூழ்செம்பொற்கடிநகர்க்கணியனாகிப்
பொன்னிற்செய்திழைத்தநீள்கோபுரத்தினைக்கண்டுதொழ
வுன்னித்தேரிழிந்தெட்டோடைந் துறுப்பினாற்பணிந்தெழுந்து
வன்னிச்செஞ்சுடர்க்கணெற்றிமன்னவன்மதுரைசார்ந்தான். (நகு)

அறத்துறையந்தணாளர் துறந்தவரரன்றாள்பற்றிப்
புறத்துறையகன்றசைவபூதியர்புனிதன்கோயிற்
றிறத்துறையகத்துத்தொண்டர்திரண்டெதிர்கொள்ளமுத்தி
னிறத்துறைவையைநீத்துநெடுமதில்வாயில்புக்கான். (நஎ)

கொங்கலர்கோதைமாதர்குங்குமம்பனிப்பச்சிந்து
மங்கலமறுகினேகிமறைகள்சூழ்கோயிலெய்தித்
தங்களுயகனைச்சூழ்ந்துதாழ்ந்தெழுந்தேத்திப்போந்து
திங்களூர்குடுமிச்செல்வத்திருமணிக்கோயில்புக்கான். (நஅ)

பொன்மலைக்கடவுளீந்தபுண்ணியநிதியையந்த
நன்மலைமானக்கூப்பிநல்கிப்பல்குடியுமோம்பித்
தென்மலைக்கிழவன்றெய்வந்தென்புலவாணரொக்க
றன்மனைவிருந்துகாத்துத்தருக்கினனிருக்குநாளில். (நகூ)

ஐவினைநடத்துமீசனாணையானடக்குங்கோளுஞ்
செய்வினைத்திரிவுமாறத்தென்னனாடெங்குமாரி
பெய்வினையுடையதாகிப்பெருவளம்பகிர்ந்துநல்க
வுய்வினையுடையவாகியுயிரெலாந்தழைத்தவன்றே. (சഠ)

---

(நகு) எட்டோடைந் துறுப்பினாற் பணிந்தென்றது-கோபுரமாகிய ஸ்தூலலிங்கத்தை அஷ்டாங்க பஞ்சாங்க நமஸ்காரங்களோடும் வணங்கினமையை. (நஎ) அறத்துறை - தருமநெறி. புறத்துறை - புறச்சமய மார்க்கம். கோயிற்றிறத்துறை - நித்தநைமித்திகநெறி. முத்தின்நிறத்துறை - முத்தைப்போன்ற வெண்மையாகிய நீர்த்துறை.

(நஅ) குங்குமம்பனிப்பச் சிந்துமென்றதற்கு - புழுதிகளடங்கித்தண்மை யுண்டாகும்படி, குங்குமங்கலந்த நீரைத்தெளித்து என்பதுபொருள். (நகூ) தென்மலைக்கிழவன்-பொதியமலைக் கிறைவனாகிய உக்கிரகுமார பாண்டியன். தென்புலவாணர் - பிதிரர்.

(சഠ) ஐவினை - பஞ்சகிருத்தியம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

புவனியிம்முறையாற்புறந்தரளித்தாரம் பூண்ட பாண்டியன் றிருமக
கவனியேழறியவீரபாண்டியனென் றணி முடிகவித்தரசளித்து[னுக்
நவநிரதிசயபூரணவின்பஞானநோக்கருளியமதுரைச்
சிவனடிநிழலிற்பிளப்பறப்பழையதேசொடுநிறைந்துவீற்றிருந்தான்

மேருவைச்செண்டாலடித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் - உச - க்கு - திருவிருத்தம் - ககருக.

---

பதினாறவது,

## வேதத்துக்குப்பொருளருளிச்செய்தபடலம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

உலம்பொரு தடந்தோ ளுக்கிரச்செழிய னுயரியமேருமால் வரையைப், பொலம்புரி செண்டாற் புடைத்துவைப்பெடுத்துப் போந்தருளடைந்தவா புகன்றும், வலம்படு திணிதோள் வீரபாண்டியன் கோல்வழங்குநாண்மதுரை யெம்பெருமான், புலம்பொரு முனிவர் தேறநால்வேதப் பொருளுணர்த்திய திறம்புகல்வாம் (க)

ஐம்பெரும்பூத நிலைதிரிந்தீரே ழடுக்கிய வுலகொடு மயன்மா, லும்பர்வான்பதமு முதித்தவாறொடுங்க வுருத்ததோரூழி வந்தெய்தச், செம்பொருண் மறையு மொடுங்கிய வழிநாட் செஞ்சுடர்க் கடவுண்முன்மலரும், வம்பவிழ்கமல மெனவரன் றிருமுன் மலர்ந்ததாலகிலமுமாதோ. (உ)

பண்டுபோற்பின்னு முத்தொழி னடத்தப் பராபரஞ்சுடர் திருவுள்ளங், கொண்டுபோர்த்திகிரி வலவனைத்தரவிரிக்குரிசி றன்னுபி முண்டகத்தில், வண்டுபோற் பிரமனுதித்து மூவுலகும் வரன்முறை படைக்குநாணஞ்ச, முண்டுபோற்றிய வானவர்க்குயிரளித்த வும்பர் நாயகன் றிருவாக்கில். (ந)

---

(சக) நவம்-புதுமை. பழையதேசு என்றது - முருகக்கடவுளை.

(க) உலம் — திரண்டகல். (உ) பூதம் நிலைதிரிதலாவது — பிரிதிவுமுதலியவைந்தும் ஒன்றிலொன் றொடுங்கி நிற்றல். உருத்ததோர் ஊழி - மகாப்பிரளயம்.

பிரணவமுதித்த ததனிடைவேதம் பிறந்தன நைமிசாரணியத், தருணிறைமுனிவர் கண்ணுவர்கருக்கராதியோ ரதிகரித்தவற்றின், பொருணிலைதெரியா துள்ளமுமுகமும் புலர்ந்தன ரிருப்ப வப்போ தத், திருண்மலவலிவென் றவனரபத்த னென்றொரு வேதியன்வந் தான். (ச)

வந்தவேதியனை யிருந்த வேதியர்கள் வரவெதிர்ந் திறைஞ்சி வேறிருக்கை, தந்தவேலையிலம் மறையவன்முனிவர் தமைமுகநோ க்கியீ துரைப்பான், பந்தவேதனைசால் வாவெறுப்பிகந்த பண்பின ராயினீர்நீவிர், சிந்தைவேறாகி முகம்புலர்ந்திருக்குஞ் செய்தியாதெ னவவர்சொல்வார். (ரு)

மருட்பமொயை கழிந்தவன்மொழிந்த மறைபயின் றுரைசெய் தேசிகனற், றிருட்பமனத்தே மிருத்துமாலைய யாது சூழிதற் கெ னக்கேட்ட, தெருட்பமனத்தோன் செப்புவான் வேதஞ் செப்பிய சிவபரஞ்சுடரே, யருட்படிவெடுத்துப் பொருளையு முணர்த்து மல் லது சூழ்ச்சியாதறைவீர். (சு)

பண்ணியதவத்தாலன்றி யாதானும் படுபொருள் பிறிதிலை தவ முஞ், புண்ணியதலத்தி னல்லதுபலியா புண்ணிய தலத்தினும் விழு ப்ப, நண்ணியசைவ தலத்தினிலியற்றி னல்குமச்சிவ தலங்களினு, மெண்ணியவதிகதலத்தினிலியற்றி னிருந்தவமெளிதுடன்பயக்கும்.

அத்தகுதலமற் றியாதெனி னுலக மகிலமுந் தன்னுடம்பான, வித்தகன்சென்னிப் பன்னிருவிரன்மேல் விளங்கிய தலமதுசீவன், முத்தராயெண்ணில் வானவர்முனிவோர் முயன்று மாதவப் பயன டைந்து, சித்தமாசகன்று வதிவதென்றறநூல் செப்பியமதுரை யந் நகரில். (அ)

தெளிதருவிசும்பி னிழிந்ததோர் விமான சிகாமணியருகு தெ ன்மருங்கின், முளிதருபாரை வடநிழல்பிரியா முழுமுதல் வழிபடு மறவோர்க், களிதருகருணை முகமலர்ந்தளவாவருங் கலையனைத்தை யுந்தெளிவித், தொளிதருமனைய மூர்த்தி யேநுங்கட் கோதியமறை ப்பொரு ளுணர்த்தும். (கூ)

அங்கவன்திருமு னருந்தவவிரதமாற்றுவான் செல்லுமினென வப், புங்கவனருள்போல் வந்தமாதவன்பின் புனிதமா முனிவருமங் கை. பங்கவன்மதுரைப் பதிபுகுந்தம்பொற் பன்மணிக் கோயில்புக்

(ச) பிரணவம் என்றது - அபரப்பிரணவத்தை. (சு) சூழ்-ஆலோசனை. தெருள்-ஞானம். (எ) அதிகதலம் என்றது - சிவஸ்தலங்களுட்சிறந்ததலத்தை. (கூ) அறவோ ரென்பது - சனகாதிகளை.

காழிச், சங்கவன்கைபோல் வளைசெறிசெழும்பொற் றாமரைத்த டாகநீராடி. (கo)

கரைகடந்துள்ளங் கடந்தவன்புந்தக் கடிதுபோய்நான்கிருவெ ள்ளி, வரைகடம்பிடரிற் கிடந்ததோர்மேரு வரைபுரைவிமான மேற் காணு, வுரைகடம்பொருளைக் கண்களாற்கண்டாங் கும்பர்தம்பிரா னைநேர்கண்டு, திரைகடந்திடும்பே ரின்பவாரியிலுஞ் சேணிலத்தி லும் விழுந்தெழுந்தார். (கக)

கைதலைமுகிழ்த்துக் கரசரணங்கள் கம்பிதஞ்செய்துகண்ணரு வி, பெய்தலைவெள்ளத் தாழ்ந்துவாய்குழறிப் பிரமன்மாலின்னமுந் தேறு, மைதழைகண்ட வெள்ளிமன்றாடும் வானவர்நாயகவானோ ருய்தரவிடமுண் டமுதருள்புரிந்த வுத்தமபோற்றியென்றேத்தா. ()

மறைபொருள்காணு துள்ளமாலுழந்து வாடியவெமக்கு நீயே யந், நிறைபொருளாகி நின்றனையதற்கு நீயலாற்பொருள் பிறிதியா தென், றிறைவனையிறைவன்பங்கிலங்கயற்க ணிறைவியையம்மு றையேத்தி, முறைவலஞ்செய்து வடநிழலமர்ந்த மூர்த்திமுன்னெ ய்தினார்முனிவோர். (கஙு)

சீதளப்பளிக்கு மேனியும்பளிக்குச் செழுமலைபதித்த துப்பன் ன, பாதமுஞ்செவ்வாய் மலருமுக்கண்ணும் பங்கயச்செங்கர நான் கும், வேதபுத்தகமு மமுதகும்பமுந்தன் விழிமணிவடமு மெய்ஞ் ஞான, போதமுத்திரையுந் தரித்ததோர்தனிமைப் போதன்முன்று ழ்ந்தெழுந்தேத்தா. (கச)

வடநிழலமர்ந்த மறைமுதன்மேதாமனுவெழுத்திருபது மிரண் டுந், திடமுறவரபத் தன்றனுற்றெளிந்து தேணிறைமதி முதலடை விற், படிமதியளவுந் தருப்பணமோமம் பார்ப்பனவுண்டி முப்போ து, மடைவுறநுவன்று நோற்குமாதவர்மு னருமறைப்பொருள்வெ ளிவருமால். (கரு)

கலிவிருத்தம்.

மானமுனிவோரதிசயிப்பவடநீழன்
மோனவடிவாகியமுதற்குரவனெண்ணுன்

---

(கக) வெள்ளிவரைகள்என்றது - வெள்ளையானைகளை. உரை கள் - வேதவாக்கியங்கள். (கஉ) கம்பிதம் - நடுக்கம். (கச)போதன்- தக்ஷிணமூர்த்தி. அமுதம் - ஞானமிர்தம்.

(கரு) மேதாமனு என்றது - தக்ஷிணமூர்த்தி பேதங்களுளொ ன்றாய் விளங்கும் மேதாதக்ஷிணமூர்த்திக்குரிய, இருபத்திரண்டக் கரங்களாலாய மூலமந்திரத்தை. மேதை - ஞானம்.

கூனமிலிலக்கணவுறுப்பகவைநானுன்
கானவொருகாளைமறையோன்வடிவமாகி. (கசு)

நீண்டதிரிமுண்டமழனெற்றிவிழிபொத்தக்
காண்டகையகண்டிகைவளைந்தொழுகுகாதிற்
பூண்டகுழைகௌவியபொலன்செய்பலகாசு
சேண்டவழிளங்கதிர்சிரித்திருள்சிதைப்ப. (கஎ)

உத்தரியவெண்படம்வலம்படவொதுங்க
முத்தவளநூலினுெடுமுத்தமிடையிட்டு
வைத்தணியுமக்கவடமாலையெறிவாளாற்
பத்தரைமறைத்தமலபந்தவிருள்சிந்த. (கஅ)

கண்டிகைதொடுத்திருகரத்தினுெடுவாகு
தண்டினிடுமாலைவிடவாளரவுதள்ள
வெண்டுகிலினுனவிரிகோவணமருங்கிற்
றண்டரியபட்டிகைவளைந்தொளிதழைப்ப. (ககூ)

வண்டுவரிபாடுவனபோலமலர்பாத
புண்டரிகமேலுழல்சிலம்புகள்புலம்பத்
தொண்டரகமாசிருடுணித்துமுடிசூட்டு
முண்டகமலர்ப்புறம்விறற்கழன்முழங்க. (உ0)

ஏதமில்பவித்திரம்வலக்கரணிமைப்பப்
போதம்வரைபுத்தகயிடக்கையதுபொற்ப
வோதியுணராதலறியோலமிடும்வேதம்
பாதுகைகளாகியிருபாதமலர்சூட. (உக)

கள்ளமுளரிக்குண்முரல்காளையறுகால
புள்ளொலியினுவுமிதழும்புடைபெயர்ந்து
துள்ளவெழுவேதவொலிதொண்டர்செவியாற்று
ளுள்ளவயல்புக்குவகையொண்பயிர்வளர்ப்ப. (உஉ)

சீதமணிமூரறிருவாய்சிறிதரும்ப
மாதவர்கள்காணவெளிவந்துவெளிநின்று
ஞதமுடிவாயளவினுன்மறையினந்தப்
போதவடிவாகிநிறைபூரணபுராணன். (உங)

---

(கஅ) வாள்-ஒளி. மலம்-ஆணவம். (ககூ) தண்டல்-நீக்கல்.
(உக) போதம் என்றது - சிவஞானபோதத்தை.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வட்டவான்மதிகண்டார்க்குமுவாக்கடன்மானமாண்ட
சிட்டராமுனிவர்காளைத்தேசிகவடிவநோக்கி
யொட்டருவுவகைவெள்ளமேற்கொளவுருத்தகூற்றை
யட்டதாமரைதஞ்சென்னிக்கணிமலராகத்தாழ்ந்தார். (உச)

அளவறுகலைகட்கெல்லாமுறைவிடமாகிவேத
விளைபொருளாகிநின்றவேதியசரணமென்ற
வளைவுறுமனத்திஞரைத்தேசிகவள்ளனோக்கிப்
பளகறுதவத்தீர்வேட்கையாதெனப்பணிந்துசொல்வார். (உரு)

அடியரேமுய்யுமாறுமுலகெலாமளிக்குமாறும்
படியிலாவரத்தவேதப்பயனருள்செய்தியென்னக்
கொடியமாபாசந்தீர்ப்பான்குரவனம்முனிவரோடு
முடிவிலாவிலிங்கமுன்போய்மறைப்பொருண்மொழிவதானுன். ()

அந்தணிர்கேண்மின்சாலவருமறைப்பொருள்களெல்லா
மந்தணமாகுமிந்தமறைப்பொருளறிதருனே
நந்தலில்லாதபோகப்பயனுக்குநலியும்பாச
பந்தனைகழிக்கும்வீட்டின்பயனுக்குங்கருவியாகும். (உஎ)

உத்தமசயம்புக்குள்ளுமுத்தமதரமாய்மேலாந்
தத்துவமாகுமிந்தச்சுந்தரசயம்புலிங்க
நித்தமாய்மறைகட்கெல்லாநிதானமாம்பொருளாயுண்மைச்
சுத்தவத்துவிதமானசுயம்பிரகாசமாகும். (உஅ)

நிறைபராபரம்விஞ்ஞானநிராமயமென்றுநூல்க
ளறைபரம்பிரமமாகுமிதனுருவாகுமேக
மறையிதன்பொருளேயிந்தச்சுந்தரவடிவாயிங்கு
னுறைசிவலிங்கமொன்றேயென்பர்நூலுணர்ந்தநல்லோர். (உகூ)

---

(உச) வால்-வெண்மை. உவா-நிறைவு. சிட்டர்-பெரியோர்.
(உரு) படி-அளவு. (உஎ) மந்தணம்-ரகசியம். கருவி-சாதனம்.
(உஅ) மேலாந் தத்துவமென்றது - நாதவிந்துக்களின் பொருளாய் விளங்கிநிற்றலை. சயம்பு-இதுஸ்வயம்பு என்பதன்றிரிபு. ஸ்வயம்-தானே; பு - உண்டானது.

(உகூ) பராபரம்-பரைக்குமேலானவன்; பரை-பராசத்தி. விஞ்ஞானம்-பரஞானம். பரம்-மேன்மை. பிரமம் - வியாபியாயுள்ளவன். வேதத்தைச்சிவனுருவம் என்றது - சிவபெருமான் பிரதிவிம்பித்தற்கு, விம்பமாய்நின்ற பிரணவத்தில் அவ்வேதமும் தோன்றினமையின்.

ஆகையான்மறையுமொன்றேயருமறைப்பொருளுமொன்றே
சாகையாலனந்தமாகித்தழைத்ததச்சாகையெல்லா
மோகையாலிவனையேத்துமுலகுதயாதிக்கிந்த
வேகனுணையினுன்மூன்றுமூர்த்தியாயிருந்ததன்றே. (௩௦)

மலர்மகனுகிமூன்றுவையமு ்படைத்துமாலா
யலைவறநிறுத்திமுக்கணுதியாயழித்தம்மூவர்
தலைவனுய்ப்பரமாகாசசரீரியாய்முதலீறின்றித்
தொலைவருஞ்சோதியாமிச்சுந்தரவிலிங்கந்தன்னில். (௩௧)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

ஆதியிலான்ம தத்துவமான வலர்மகன்பாகமுநடுவி, னீதியில் விச்சா தத்துவமான நெடியவன்பாகமு முடிவி, லோதியசிவதத்துவமெனலான வுருத்திரபாகமு முதிக்கும், பேதியிம்மூன்றி லெண்ணிறத்துவங்கள் பிறக்குமிம்மூன்றினு முறையால். (௩௨)

ஓதருமகாரமுகாரமேமகார முதித்திடும்பிரணவம்விந்து, நாத மோடுதிக்கும் வியத்ததாரகத்தி னல்லகாயத்திரிமூன்று, பேதமாம்பதத்தாற் பிறக்குமிக்காயத்திரி யிருபேதமாம்பேதம், யாதெனிற் சமட்டி வியட்டியென்றிரண்டு மேதுவாம்வேட்டவைக் கெல்லாம்.

இன்னவையிரண்டு மிவனருள்வலியா லீன்றநான்மறையை யந்நான்கும், பின்னிவனருளா லளவிலவான பிரணவமாதி மந்திரமு, மன்னவாறுனதாரகத் தகாரமாதியக்கரங்களுமுதித்த, சொன்னவக்கரத்திற் சிவாகமநூலிச் சுரவரனடுமுகத்துதித்த. (௩௪)

கீட்டிசைமுகத்தொன் றடுத்தநாலைந்திற்கிளைத்ததா லிருக்கது தென்பா, லீட்டியவிரண்டாம் வேதநூறுருவோ டெழுந்ததுகுடதி

---

(௩௦) ஆணை-அருட்சத்தி. பரமாகாசசரீரிஎன்றது - சிதாகாசஸ்வரூபமாய்நிற்றலை.

(௩௨) எண்ணில் தத்துவம் என்றது-இம்மூன்று தத்துவங்களிலுந்தோன்றிய வாக்குகள், வாயுக்கள், வசனுதிகள் முதலியவற்றை.

(௩௩) வியத்தம்-வியட்டி. தாரகம்-விரணவம். சமட்டி-பொது. வியட்டி-சிறப்பு. மூன்றுபேதம்-மூன்றுவாக்கிய முடிபாயுள்ளது.

(௩௪) பிரணவமாதிமந்திரம் என்றது - சத்தகோடி மகாமந்திரங்களை. அகாரமாதியக்கரங்கள் என்றது – அகரமுதலிய ஐம்பத்தோரக்ஷரங்களை. நடுமுகம் - ஈசானம்.

(௩௫) கீட்டிசைமுகம்-தற்புருஷம். தென்பால்முகம் - அகோரம். குடதிசைமுகம் - வாமதேவம். வடதிசைமுகம் - சத்தியோசாதம்-இருக்கது, நான்கது இவற்றுள், அதுபகுதிப்பொருள்விகுதி.

சைமுகத்தி, லீட்டியசாம மாயிரமுகத்தா னிமிர்ந்தது வடதிசை முகத்தி னூட்டியவொன்ப துருவொடுகிளைத்து நடந்தது நான்கதா மறையே. (௩௫)

அருமறைநால்வே றுகையால்வருணமாச்சிரமங்களுநான்காந், தருமம்யாகாதி கருமமுமறையின் றகைமையிற் றோன்றின மறையும், கருமநூன்ஞான நூலெனவிரண்டாங்கருமநூலிவனருச்சனைக்கு, வரும்வினையுணர்த்து ஞானநூலிவன்றன் வடிவிலாவடிவினையுணர்த்தும். (௩௬)

முதனுகர்நீராற் சினைகுழைத்தாங்கிம் முழுமுதற் கருத்து நல்லவியின், பதமிவன்வடிவப்பண்ணவர் பிறர்க்குந்திருத்தியாம்பரனிவன்முகத்தின், விதமுறுநித்த மாதிமூவினைக்கும் வேண்டியங் குலகவர்போகங், கதிபெற வியற்றுஞ் சிவார்ச்சனை வினைக்குங் காரணமிச்சிவகோசம். (௩௭)

மறைபலமுகங்கொண் டலறிவாயிளைத்து மயங்கவே றகண்டபூரணமாய், நிறைபரம்பிரம மாகுமிக்குறியைக் கருமநன்னெறிவழாப்பூசை, முறையினுஞான நெறியினிப் பொருளை யருளினுன் முயக்கறமுயங்கு, மறிவினுந்தெளிவ துமக்கு நாமுரைத்த வருமறைப்பொருள் பிறர்க்கரிதால். (௩௮)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கருமத்தான்ஞானமுண்டாங்கருமத்தைச்சித்தசுத்தி
தருமத்தாலிகந்தசித்தசுத்தியைத்தருமநல்கு
மருமைத்தாந்தருமத்தாலேசாந்தியுண்டாகுமாண்ட
பெருமைத்தாஞ்சாந்தியாலேபிறப்பதட்டாங்கயோகம். (௩௯)

கிரியையான்ஞானந்தன்னுற்கிளர்சிவபத்திபூசை
தரிசனஞ்சைவலிங்கதாபனஞ்செய்தலீசற்
குரியமெய்யன்பர்பூசையுருத்திரசின்னந்தாங்க
லரியதேசிகன்பாற்பத்தியனைத்தையுந்தெரியலாகும். (௪0)

---

(௩௬) மறைநால்வேறு என்றது-இருக்கு, யசுர், சாமம், அதர்வணங்களை. வருணம் நால்என்றது-பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர்களை. ஆச்சிரமம் நான்காவன ; பிரமசரியம், கிருகஸ்தம், வானப்பிரத்தம்,சந்நியாசம். வடிவிலாவடிவம் – நின்மலசொருபம்.

(௩௭) முதல்-வேர். குழைத்தல் - தளிர்த்தல். முகம் - சந்நிதி. நித்தமாதிமூவினை - நித்த நைமித்தியகாமியங்கள். கோசம் - இலிங்கம். (௩௮) பலமுகம் என்றது-சாகைகளை. (௩௯) கருமம் - சிவார்ச்சனைமுதலியசற்கருமங்கள். சித்தசுத்தி-நித்திய நைமித்திய கருமங்களைச் சிவார்ப்பணஞ் செய்வதால்வரும் நிட்காமிய பயன். சாந்தி என்றது-அகக்கரண நிக்கிரகத்தை. மத்தம்என்பது-ஈறு கெட்டது. ஆல் - உருபுமயக்கம். (௪0) சின்னம் - வேடம்.

மறைவழிமதங்கட்கெல்லாமறைபிரமாணம்பின்சென்
றறைதருமிருதியெல்லாமவைக்கனுகுணமாமின்ன
முறையினுன்மார்த்தமென்றுமொழிவதம்மார்த்தஞ்சேர்ந்த
துறைகள்வைதிகமாமேலாச்சொல்வதிச்சுத்தமார்க்கம். (சக)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

தெருட்பெறுபோக வீடுகாரணமாய்ச் சிவமயமாமறைப் பொருளை, யிருட்கெடவுரைத்தே மிப்பொருட்கதிக மில்லை யிப்பொருளொலாமுமக்கு, மருட்கெடத்தெளிவ தாகென வினைய வழிவழாமா தவர்புறத்தை, யருட்கையாற்றடவி யிலிங்கத்துட் புகுந்தா னருள்பழுத்தன்ன தேசிகனே. (சஉ)

வேதத்துக்குப்பொருளருளிச்செய்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் உ௫ - க்கு - திருவிருத்தம் - ககக௩.

---

பதினேழாவது,

## மாணிக்கவிற்றபடலம்.

கலிநிலைத்துறை.

சுகந்தவார்பொழின்மதுரையெம்பிரான்றன துணைத்தா
ளுகந்தவாவறுகண்ணுவமுனிமுதலோது
மகந்தவாதபேரன்பருக்கருமறைப்பொருளைப்
பகர்ந்தவாறிதுமாணிக்கம்பகர்ந்தவாபகர்வாம். (க)

அன்னநாள்வயின்வீரபாண்டியற்கணங்கனைய
மின்னனாருளம்போகமும்விளைநிலமனைய
பொன்னனார்பெறுகாளையரைங்கணைப்புத்தே
ளென்னவீறினார்வான்பயிர்க்கெழுகளையென்ன. (உ)

---

(சக) அனுகுணம்-இரண்டாவது குணம். மார்த்தம்-மிருதி சம்பந்தம். வைதிகம்-வேதசம்பந்தம்.

(சஉ) மாதவர் புறத்தை அருட்கையாற் றடவி என்றது-பக்குவான்மாக்களுக்குப் பிரார்த்த வாதனையை ஒழித்தற்குச் செய்யுந் தீட்சையை.

(உ) ஐம்போகம் என்றதை — "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியுமைம்புலனு, மொண்டொடிகண்ணேயுள." என்னுந் திருக்குறளானுணர்க.

பின்னரும்பெறற்குமரனைப்பெறுவதுகருதி
மன்னனுங்குலத்தேவியுங்கயற்கணிமணாளன்
றன்னைநோக்கியட்டமிசதுர்த்தசிமதிவார
மின்னநோன்புநோற்றொழுகுவாரிறைவனின்னருளால். (ரு)

சிறிதுநாள்கழிந்தகன்றபின்கங்கையிற்சிறந்த
மறுவிலாவடமீன்புரைகற்பினுள்வயிற்றிற்
குறியவாலவித்தங்குரம்போன்றொருகுமர
னிறையுநீருலகருட்குடைநிழற்றவந்துதித்தான். (சா)

அத்தனிச்சிறுகுமரனுக்ககங்களிசிறப்ப
மெய்த்தநூன்முறைசாதகவினைமுதல்வினையும்
வைத்தனன்பொலிவெய்துநாண்மன்னவனூழ்வந்
தொத்தநாள்வரவேட்டைபுக்குழுவைகோட்பட்டான். (கு)

வேங்கைவாய்படமீனவன்விண்விருந்தாக
வாங்குநூன்மருங்கிறக்கரமார்பெறிந்தாரந்
தாங்குகொங்கைசாந்தழிந்திடத்தடங்கண்முத்திறைப்ப
வேங்கமாதர்பொன்னகருளாராவருமிரங்க. (சு)

மற்றவேலைகாமக்கிழத்தியர்பெறுமைந்த
ரற்றநோக்கியீதமையமென்றூனைமாவாதி
யுற்றபல்பிறபொருணிதியொண்கலனோடுங்
கொற்றமௌலியுங்கவர்ந்தனர்கொண்டுபோய்மறைந்தார். (எ)

மன்னனூணையாறொழுகியமந்திரக்கிழவர்
மின்னுவேலிளங்குமரனைக்கொண்டுவிண்ணடைந்த
தென்னர்கோமகற்கிறுதியிற்செய்வினைநிரப்பி
யன்னகாதலற்கணிமுடிசூட்டுவானமைந்தார். (அ)

நாடிப்பொன்னறைபுகுந்தனர்நவமணிமகுடந்
தேடிக்கண்டிலர்நிதிசிலகண்டிலர்திகைத்து
வாடிச்சிந்தைநோயுழந்திதுமாற்றவர்கூட்டுண்
டோடிப்போயினதாகுமென்றுணர்ந்திதுநினைவார். (கூ)

---

(சா) வடமீன் - அருந்ததி. அங்குரம் - முளை.

(சு) வாங்குநூல்மருங்கு-ஒசியும் நூல்போன்ற இடை. மாதர் என்றது—குலமாதுமுதலியகாமக்கிழத்தியரை. பொன்நகர்—இலக்குமிவசிக்கும் மதுரைநகர் ; அல்லது - விண்ணுலகம்.

(அ) மந்திரம் - ஆலோசனை. கிழவர் - உரியவர்.

வேறுமாமுடிசெய்துமாலென்னினேனிலைமிக்
கேறுமாமணியிலையரசிருக்கையின்றின்றேற்
றேறுநீருலகலையுமென்செய்வதிங்கென்று
வாறுசேர்சடையாரருள்காண்டுமென்றமைச்சர். (௧௦)

கரைசெயாப்பெருங்கவலைசூழ்மனத்தராய்க்கறங்கு
முரசுகண்படாக்கடிமனைமுற்றநீத்தருமை
யரசிளந்தனிக்கொழுந்தினைக்கொண்டுபோயம்பொன்
வரைசெய்கோபுரவாயின்முன்வருகுவார்வருமுன். (௧௧)

எற்றதும்புசோவணவுடையிடம்படப்பிறங்கத்
துற்றபல்கதிர்மணிப்பொதிசுவன்மிசைத்தூங்க
மற்றடம்புயவரைமிசைவரம்பிலாவிலைகள்
பெற்றவங்கதம்பரிதியிற்பேர்ந்துபேர்ந்திமைப்ப. (௧௨)

மந்திரப்புரிநூலதுவலம்படப்பிறழ
விந்திரத்திருவில்லெனவாரமார்பிலங்கச்
சுந்தரக்குழைகுண்டலந்தோள்புரண்டாடத்
தந்திரத்தருமறைகளிதாணிலந்தோய. (௧௩)

கலிவிருத்தம்.

பொன்னவிர்ந்திலங்குகோபுரமுன்போதுவார்
முன்னவர்துனிவுகூர்முன்னநீக்கிய
தென்னவர்குலப்பெருந்தெய்வமாகிய
மன்னவர்வணிகராய்வந்துதோன்றினர். (௧௪)

வந்தவரெதிர்வருவாரைமம்மர்கொள்
சிந்தையராய்வருசெய்தியாதென
முந்தையில்விளைவெலாமுறையிற்கூறினர்க்
கெந்தையாம்வணிகனீதியம்புமாலரோ. (௧௫)

என்படரெய்துகின்றீர்களென்வயி
னுன்பதுமணிகளுமுள்ளவாலவை
பொன்பதினுயிரகோடிபோனதென்
றன்புறமணியெலாமடைவிற்காட்டுவார். (௧௬)

(௧௨) எல்-ஒளி. சுவல்-பிடர். தூங்கல்-தொங்கல். அங்கதம்-வாகுவலயம். (௧௩) புரிநூல்-உபவீதம். குழை குண்டலம் - சங்ககுண்டலம். (௧௪) துனிவு-வருத்தம். முன்னம்-மனக்குறிப்பு.
(௧௫) மம்மர்-மயக்கம். (௧௬) படர்-துன்பம்.

இருந்தனர்கீழ்த்திசைநோக்கியிட்டதோர்
கருந்துகிலுவுமிந்திராதிக்காவல
ரருந்திசையெட்டினுமடைவிற்செம்மணி
பெருந்தண்முத்தாதியெண்மணியும்பெய்தரோ. (கஎ)

இம்மணிவலனுடற்சின்னமென்னவக்
கைம்மறிகரந்தவர்கூறக்கற்றநூற்
செம்மதியமைச்சரச்செம்மல்யாரவன்
மெய்ம்மணியாயதென்விளம்புகென்னவே. (கஅ)

மேவரும்வலனெனுமவுணன்மேலநாண்
மூவரின்விளங்கியமுக்கண்மூர்த்திசெஞ்
சேவடியருச்சனைத்தவத்தின்செய்தியால்
யாவதுவேண்டுமென்றிறைவன்கூறலும். (கக)

தாழ்ந்துநின்றியம்பும்யான்சமரில்யாரினும்
போழ்ந்திறவாவரம்புரிதியூழ்வினை
சூழ்ந்திறந்தாலென்மெய்துறந்தமாந்தரும்
வீழ்ந்திடநவமணியாதல்வேண்டுமால். (உ0)

என்றுவேண்டலும்வரமீசனல்கின
னன்றுபோயமர்குறித்தமரர்கோனொடு
சென்றுபோராற்றலுந்தேவர்கோனெதிர்
னின்றுபோராற்றலனீங்கிப்போயினன். (உக)

தோற்றவானுடவன்மீண்டுசூழ்ந்தம
ராற்றினும்வெல்லரிதழிவிலாவர
மேற்றவனுதலாலிவனைச்சூழ்ச்சியாற்
கூற்றினூரேற்றுதல்குறிப்பென்றுன்னியே. (உஉ)

(கஎ) கருந்துகில்-கம்பலம். இந்திராதி காவலர்-அஷ்டதிக்குப் பாலகர். அடைவிற்பெய்து என்றது—கம்பலத்தின் நாப்பண், செம்மணியாகிய பதுமராகத்தையும், அதனைச்சூழ, எட்டுத் திக்கிலும், முத்து, வைடூரியம், வைரம், பச்சை, கோமேதகம், பவளம், நீலம், புஷ்பராகமுதலிய எண்வகை இரத்தினங்களையும் வைத்தமையை.

(கஅ) சின்னம் - உருப்பின்பேதம். மறி - மான்.

(கக) மூவர்-பிரமன், விஷ்ணு, உருத்திரன். (உ0) போழ்ந்து-பிளவுபட்டு. ஊழ் என்றது—ஈண்டுப்போகூழினை.

(உஉ) சூழ்ந்து - ஆலோசித்து. சூழ்ச்சி - விநயம்.

விடங்கலுழ்படைக்கலனின் றிவிண்ணவ
ரடங்கலுந்தழீஇக்கொளவடுத்துத்தானவ
மடங்கலைவருகெனநோக்கிவானவக்
கடங்கலுழ்யானைபோற்கரைந்துகூறுவான். (௨௩)

விசையநின்றோள்வலிவென் றிவீக்கமெத்
திசையினும்பரந்ததச்சீர்த்திநோக்கியுண்
ணசையுறுமகிழ்ச்சியானல்குவேனுனக்
கிசையவேண்டியவரம்யாதுகேளென. (௨௪)

கடிபடுகற்பகநாடுகாவலோ
னொடியுரைசெவித்தொளை நுழையத்தானவ
னெடியகைபுடைத்துடனிமிர்ந்துகார்படு
மிடியெனநகைத்திகழ்ந்தினையகூறுவான். (௨௫)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நன்றிதுமொழிந்தாயாருநகைக்கநீயெனைவென்கண்ட
வென்றியுமதனுற்பெற்றபுகழுநின்வீறுபாடு
மின்றுநின்போரிற்காணப்பட்டவேயிசைபோயெங்கு
நின்றதேயிதுபோனின்கைவண்மையுநிற்பதன்றே. (௨௬)

ஈறிலானளித்தநல்லவரமெனக்கிருக்கநின்பால்
வேறுநான்பெறுவதுண்டோவேண்டுவதுனக்கியாதென்பாற்
கூறுநீயதனையின்னேகொடுக்கலேனுகினின்போற்
பாறுவீழ்களத்திற்றோற்றபழிப்புகழ்பெறுவனென்றான். (௨௭)

மாதண்டவவுணன்மாற்றமகபதிகேட்டுவந்து
கோதண்டமேருக்கோட்டிக்கொடும்புரம்பொடித்தான்வெள்ளி
வேதண்டமெய்தியாங்கோர்வேள்வியான்புரிவனுனைப்
போதண்டர்க்கூட்டவாவாய்ப்போதுவாய்வல்லையென்றான். (௨௮)

அன்றொருதவத்தோனென்புவச்சிரமொன்றேயாக
வொன்றியகொடையாற்பெற்றபுகழுடம்பொன்றேயென்போல்
வென்றியினுளும்வீயாமெய்யெலாமணிகளாகப்
பொன்றியகொடையினாலும்புகழுடம்பிரண்டுண்டாமே. (௨௯)

---

(௨௩) தானவமடங்கல்-அசுரசிங்கமாகியவலன். (௨௫) நொடி-சொல். (௨௬) வீறு-இருமாப்பு. (௨௭) பாறு-பருந்து. (௨௮) வேதண்டம்-மலை. வல்லை-விரைவு. ஆ-பசு. இச்செய்யுளால் கோமேதயாகமெனலை ஆலாஸ்ய மகத்துவத்தில் நரமேதயாகமெனக் கூறப்பட்டுளது. (௨௯) தவத்தோன்-தவசிரேஷ்டராகிய ததீசிமுனிவன்.

மேவலனல்லைநீயேநட்டவன்மேலைவானோர்
யாவருமருந்துமாற்றாலறம்புகழெனக்கேயாக
வாவுருவாதியென்றாயன்னதேசெய்வேனென்றா
னீவதேபெருமையன்றியிரக்கின்றதிழிபேயன்றே. (௩0)

அதற்கிசைந்தவுணர்வேந்தனமரர்வேந்தனைமுன்போக்கி
மதர்க்கடுங்குருதிச்செங்கண்மைந்தனுக்கிறைமையீந்து
முதற்பெருங்கலையாம்வேதமொழிமரபமைந்தவாறுய்ப்
புதர்க்கடுவேள்விச்சாலைப்புறத்துவந்திறுத்திநின்றான். (௩க)

வாய்மையான்மாண்டநின்போல்வள்ளல்யாரென்றுதேவர்
கோமகன்வியந்துகூறத்தருக்குமேற்கொண்டுமேரு
நேமியோடிகலும்விந்தவரையெனநிமிர்ந்துவேள்விக்
காமெனையூபத்தோடும்யாமினென்றடுத்துநின்றான். (௩உ)

யாத்தனர்தருப்பைத்தாம்பால்யானையால்யாத்தசிங்கப்
போத்தெனநின்றான்வாயைப்புதைத்துயிர்ப்படங்கவீட்டி
மாய்த்தனர்மாய்ந்தவள்ளல்வலனுமந்தாரமாரி
தூர்த்திடவிமானமேறித்தொல்விதியுலகஞ்சேர்ந்தான். (௩௩)

மணித்தலைமலையின்பக்கமாய்த்தவன்வயிரவேலாற்
பிணித்துயிர்செகுத்தவள்ளற்பெருந்தகையாவைவேதம்
பணித்திடும்வபையைவாங்கிப்படரெரிசுவைமுன்பார்க்கக்
குணித்தவாறுடர்க்கூட்டிக்கோதிலாவேள்விசெய்தான். (௩௪)

அத்தகையாவின்சோரிமாணிக்கமாம்பன்முத்தம்
பித்தைவயிரேயென்புவச்சிரம்பித்தம்பச்சை
நெய்த்தவெண்ணிணங்கோமேதந்தசைதுகிர்நெடுங்கணீல
மெயத்தவைபுருடராகமிவைநவமணியின்றோற்றம். (௩௫)

இவ்வடிவெடுத்துத்தோன்றியிருண்முகம்பிளப்பக்காந்தித்
தைவருவணியொன்பானுஞ்சார்விடநிறங்கள்சாதி
தெய்வதமொளிமாசெள்ளிச்சோதனைசெய்துதேசு
மெய்வரவணிவோரெய்தும்பயனிவைவிதியாற்கேண்மின். (௩௬)

---

(௩க) புதர்-தேவர். (௩உ) யூபம்-யூபஸ்தம்பம். யாமின்-கட்டுங்கள். (௩௩) உர்ணையாலென்றும் பாடம். உர்ணை - சிலந்திநூல். தொல்விதி-பழையோனாகிய பிரமன். (௩௪) பக்கம்-சிறகு. வபை-வயிற்றினுபிக்குள் வெண்டுகில்போன்ற புரையாகிய நிணம்.

(௩௫) பித்தம்-இதில் அம்பகுதிப் பொருள் விகுதி. பித்தை-மயிர். ஐ-கபம். (௩௬) எள்ளி-களைந்து.

மேற்படி-வேறு.

வாளவிருமாணிக்கங்கிரேதமுதலுகநான்கும்வழியேமக்கங்
காளபுரந்தும்புரஞ்சிங்களமிந்நான்கிடைப்படுமேக்கமலராக
மாளுநிறமொன்பதரவிந்தமாதுளம்பூவித்தழல்கல்லாரங்
கோளரியகச்சோதநரந்தநறும்பலந்தீபங்கோபமென்ன. (௩௭)

இந்நிறத்த பொதுவாய மாணிக்கமறையவர்முன் னியனுற்சாதி, தன்னியல்பாற்சாதரங்கங் குருவிந்தஞ்சௌகந்தி கங்காவாங்க, மென்னுமிவற்ருற்சிறந்துநான்காகுமிவ்வடைவே யிந்நான்கிற்குஞ், சொன்னவொளிபத்திருநான் கிருமூன்றுநான்கவையுஞ் சொல்லக் கேண்மின். (௩௮)

சாதரங்கநிறங்கமலங் கருநெய்தலிரவியொளி தழல்கச்சோத, மாதுளம்போ ததன்வித்துக் கார்விளக்குக் கோபமென வகுத்தபத்து. மேதகையகுருவிந்த நிறங்குன்றிமுயற்குருதி வெள்ளி லோத்தம், போதுபலாசலர்திலகஞ் செவ்வரத்தம் விதாரமெரி பொன்போலெட்டும். (௩௯)

களிதருசௌகந்திகத்தி னிறமிலவம்போதுகுயிற் கண்ணசோகந், தளிரவிர்பொன் செம்பஞ்சி யைவண்ண மெனவாறுந் தகுகாவாங்க, வொளிகுரவுகுசும்பைமலர் செங்கற் கொவ்வைக்கனியென்ருருநான்கந்த, மிளிர்பதுமராகத்தைப்பொதுமையினுற்சோதிக்க வேண்டுமெல்லை. (௪0)

திண்ணியதாய் மேல்கீழ்சூழ் பக்கமுற வொளிவிடுதல் செய்தாற்செவ்வே, யண்ணிய வுத்தமமுதன் மூன்ருமென்பர் சாதரங்கமணிவோர்விச்சை, புண்ணியவான்கன்னியறு சுவையன்ன முதலானபுனிததானம், பண்ணியதும்பரிமேத யாகமுதன்மகம்புரிந்த பயனுஞ் சேர்வர். (௪௧)

குருவிந்தந்தரிப்பவர்பார் முழுதுமொரு குடைநிழலிற்குளிப்பவாண்டு, திருவிந்தையுடனிருப்பர் சௌகந்திகந் தரிம்போர்செல்வ

(௩௭) கமலராகம் - பதுமராகம். கல்லாரம் - செங்குவளை. கச்சோதம்-மின்மினி. கோபம்-இந்திரகோபம்.

(௩௮) கோவாங்கம் - கவாங்கமென்னும் வடசொற்றிரிபு. இதனைக்கல்லாடம்-கதிர்நிரப்பும் என்னு மகவலுட்காண்க.

(௩௯) வெள்ளிலோத்தம்போது-விளாமலர். பலாசு - முண்முருக்கு. திலகம்-மஞ்சாடிப்பூ. விதாரம்-முள்ளிலவம்பூ.

(௪0) ஐவண்ணம்-மருதோன்றி. செங்கல்-காவிக்கல். விச்சை-கல்வி.

(௪௧) குளிப்ப-தங்க. திரு - தனலட்சுமி. விந்தை - ஜெயலட்சுமி.

ங்கீர்த்தி, மருவிந்தப்பயனடைவர் காவாங்கந் தரிப்போர் தம்மனையி ற்பாலும், பெருவிந்தமெனச்சாலி முதற்பண்டமுடன் செல்வப்பெருக்குமுண்டாம். (சஉ)

எள்ளியிடு குற்றமெலா மிகந்து குணனேற் றெளிவிட் டிருள்கால்சீத்துத், தள்ளியவிச்செம்பதும ராகமது புனை தக்கோர் தம்பாலேனைத், தெள்ளியமுத்துள்ளிட்ட பன்மணியும் வந்தோங்குஞ் செய்யாளோடு, மொள்ளியநற் செல்வமதற் கொப்பநெடும் பாற்கடலினோங்குமாலோ. (சங)

மேற்படி - வேறு.

பிறகிறச்சார்புபுள்ளிபுள்ளடிபிறங்குகீற்று
மறுவறுதராசமென்னவகுத்தவைங்குற்றந்தள்ளி
யறைதருபண்புசான்றவரதனமணியும்வேந்தன்
செறுநர்வாளூற்றமின்றிச்செருமகட்கன்பனுவான். (சச)

குறுநிலக்கிழவனேனுமவன்பெருங்குடைக்கீழ்த்தங்கி
மறுகுநீர்ஞாலமெல்லாம்வாழுமற்றவனைப்பாம்பு
தெறுவிலங்கலகைபூதஞ்சிறுதெய்வம்வறுமைநோய்தீக்
கறுவுகொள்கூற்றச்சீற்றங்கலங்கிடவாதியாவாம். (சரு)

முன்னவரென்பகற்றோர்வச்சிரமுந்நீர்முத்த
மன்னவரென்பதுப்புமாணிக்கம்வணிகரென்ப
மின்னவிர்புருடராகம்வயிடூயம்வெயிற்கோமேதம்
பின்னவரென்பநீலமரகதம்பெற்றசாதி. (சசு)

---

(சங) செய்யாள் - இலக்குமி. எள்ளியிடு குற்றமெலா மென்றது-கருகிநொய்தாதல், காற்று, வெகுளி, திருகல், முரணுதல், செம்மண், இறுகல். மத்தகக்குழிவு, காசம், இலேச்சுழி, வெச்சம், பொரிவு, புகைதல், புடாயம், யந்தை, நெய்ப்பிலி என்னும் பதினாறுவகைக்குற்றங்களே. குணன் ஏற்று என்றது, தேய்க்குதல், நெருப்பு, கையிலெடுத்தல், அங்கைக்குறி, தூக்கல், தகடு, வெயில், குச்சை, மத்தகக்குறி, ஓரம், நெய்ப்பு, பார்வைஎன்னும் ஒத்த செந்நிறம்வாய்ந்த பன்னிரண்டு நற்குணங்களே, இவற்றின் விரிவை - கல்லாடம், சிலப்பதிகாரமுதலிய நூல்களிற்காண்க.

(சச) புள்ளடி-பறவையின் பாதவடிவு. செறுநர்-பகைவர். செருமகள்-வீரலட்சுமி. புள்ளியை, விந்து எனவும், புள்ளடியைக் காகபாதம் எனவும்-கீற்றைத்தாரை எனவுங்கூறுவர். தராசம் - என்றது - ஒளிசலித்தலே. (சரு) குறுநிலக்கிழவன்-சிற்றரசன்.

(சசு) முன்னவர்-பிர்ம்மகுலத்தவர். பின்னவர்-சூத்திரர்.

பார்த்திவர்மதிக்குமுத்தம்பளிங்கன்றிப்பச்சைதானுஞ்
சாத்திகந்துகிர்மாணிக்கங்கோமேதந்தாமேயன்றி
மாத்திகழ்புருடராகம்வயியேம்வயிரந்தாமு
மேத்திராசதமாநீலந்தாமதமென்பராய்ந்தோர். (சஎ)

இனையவையளந்துகண்டுமெதிக்குநாளெழுமான்பொற்றேர்
முனைவனாண்முதலாவேழின்முறையினாற்பதுமராகங்
கனைகதிர்முத்தந்துப்புக்காருடம்புருடராகம்
புனையொளிவயிரநீலமென்மனார்புலமைசான்றோர். (சஅ)

வெய்யவன்கிழமைதானேமேதகுமணிக்குமாகு
மையறுதிங்கடானேவயியேமணிக்குமாகு
மையறவிவையொன்பானுமாய்பவரகம்புறம்பு
துய்யராயறவோராய்முன்சொன்னநாளடைவேயாய்வர். (சகூ)

அல்லியம்பதுமஞ்சாதியரத்தவாயாம்பல்கோடல்
வல்லிசேர்மௌவற்போதுநூற்றிதழ்மரைகள்வாய
மெல்லிதழ்க்கழுநீர்பேழ்வாய்வெள்ளைமந்தாரமின்ன
சொல்லியமுறையால்வண்டுசூழத்தன்முடிமேற்சூடி. (ருO)

தலத்தினைச்சுத்திசெய்துதவிசினையிட்டுத்தூய
நலத்துகில்விரித்துத்தெய்வமாணிக்கநடுவேவைத்துக்
குலத்தமுத்தாதியெட்டுங்குணதிசைமுதலெண்டிக்கும்
வலப்படமுறையேபானுமண்டலமாகவைத்து. (ருக)

(சஎ) எழுமான் பொன்தேர் முனைவன்நாள் முதலா எழில்என்றது - ஞாயிற்றுக்கிழமை முதலிய எழு கிழமைகளை காருடம்-பச்சைமேதகமணி என்றது - கோமேதக மணியை. ஆய்தல் - அளந்தறிதல். "ஞாயிறுமாணிக்கங் கோமேதகந் திங்கள் முத்தம்-வாய்வயியேஞ்செவ்வாய் வனப்பவளங்களாகும் - மேயவன்புதனிற்பச்சைவியாழமாம் புட்பராகம் - காய்கதிர் வெள்ளி வச்ரங் கடுஞ்சனி நீலமாமெ." எனவருஞ்செய்யுளால் ஞாயிற்றுக்கிழமைமுதலியகிழமைகளுக்குரியமணிகள் இன்னவையெனவுணர்க.

(ருO) அல்லி-அகவிதழ். சாதி-சிறுசண்பகம். அரத்தவாயாம்பல்-செவந்த வாயையுடைய அல்லி. கோடல் - செங்காந்தள். மௌவல்-நொடிமல்லிகை. நூற்றிதழ்மரை - நூற்றிதழ்த் தாமரை. கழுநீர்என்றது-கருங்குவளை, செங்குவளை ஆகிய இருவகை மலர்களை. பேழ்வாய் வெள்ளைமந்தாரம்-பிளவுபட்டவாயினையுடைய வெள்ளைமந்தாரை. பானு-சூரியன்.

அன்புறுபதுமராகமாதியாமரதனங்க
ளொன்பதுங்கதிரோனாதியொன்பதுகோளுமேற்றி
முன்புரைகமலப்போதுமுதலொன்பான்மலருஞ்சாத்தி
யின்புறநினைந்துபூசையியன்முறைவாழாதுசெய்தல். (௫௨)

தக்கமுத்திரண்டுவேறுதலசமேசலசமென்ன
விக்கதிர்முத்தந்தோன்றுமிடன்பதின்மூன்றுசங்க
மைக்கருமுகில்வேய்பாம்பின்மத்தகம்பன்றிக்கோடு
மிக்கவெண்சாலியிப்பிமீன்றலைவேழக்கன்னல். (௫௩)

கரிமருப்பைவாய்மான்கைகற்புடைமடவார்கண்ட
மிருசிறைக்கொக்கின்கண்டமெனக்கடைகிடந்தமூன்று
மரியனவாதிப்பத்துநிறங்களுமணங்குந்தங்கட்
குரியனநிறுத்தவாறேயேனவுமுரைப்பக்கேண்மின். (௫௪)

மாடவெண்புறவின்முட்டைவடிவெனத்திரண்டபேழ்வாய்க்
கோடுகொன்முத்தம்வெள்ளைநிறத்ததுகொண்மூமுத்த
நீடுசெம்பரிதியன்னநிறத்ததுகிளைமுத்தாலி
பீடுசானிறத்தராவின்பெருமுத்தநீலத்தாமால். (௫௫)

ஏனமாவாரஞ்சோரியீர்ஞ்சுவைச்சாலிமுத்த
மானதுபசுமைத்தாகும்பாதிரியனையதாகு

(௫௨) பதுமராகத்திற்கு, ஆதித்தனும்; முத்தத்திற்கு, சந்திரனும்; பவளத்திற்கு, செவ்வாயும்; பச்சைக்குப், புதனும்; புருடராகத்திற்கு, வியாழமும்; வயிரத்திற்கு, வெள்ளியும்; நீலத்திற்குச், சனியும்; கோமேதகத்திற்கு, இராகுவும்; வைடூரியத்திற்குக், கேதுவும். அதிதேவதைகளாதலின், ஒன்பதுகோளுமேற்றி யென்றார். ஒன்பான்மலர்-தாமரை, சிறுசண்பகம், செவ்வாம்பல், செங்காந்தள், கொடிமல்லிகை, நூற்றிதழ்த்தாமரை, கொக்கிரகு, மந்தாரம் என்பன.

(௫௩) தலசம்-பூமியிற்றோன்றியவை. அவை-வேய், பாம்பின்றலை, பன்றிக்கொம்பு, நெற்பயிர், கரும்பு, யானைக்கோடுமுதலியவற்றில் தோன்றிய முத்தங்கள். சலசம்-சலத்தில் தோன்றியவை. அவை சங்கு, மேகம், சிப்பி, மீன்றலை முதலியவற்றில் தோன்றிய முத்தங்கள்.

(௫௪) ஐவாய்மான் என்றது - மிருகங்களுக்கெல்லாம் அரசத்தன்மை வாய்ந்தமிருகம்; எனவேசிங்கமென்பதுபொருள். இதுபற்றியே அதற்கு மிருகேந்திரன் என்னும் பெயரும் வழங்குகின்றது. அதனது பரியாயப்பெயர்களுள், பஞ்சானனம் எனவுமோர்பெயருண்டு, அதற்குப் பரந்தமுகத்தையுடையதென்பதுபொருள்.

(௫௫) கோடுகொன்முத்தம்-சங்கீன்றமுத்தம். கொண்மூ-மேகம். கிளை-மூங்கில். ஆலி-கல்மழை.

மீனதுதரளம்வேழமிரண்டினும்விளையுமுத்தந்
தானதுபொன்னின்சோதிதெய்வதஞ்சாற்றக்கேண்மின். (௫௬)

பான்முத்தம்வருணன்முத்தம்பகன்முத்தம்பகலோன்முத்த
மான்முத்தநீலமுத்தமாசறுகுருதிமுத்தங்
கான்முத்தம்பசியமுத்தங்காலன்றன்முத்தந்தேவர் [வாம்.
கோன்முத்தம் பொன்போன் முத்தங் குணங்களும்பயனுஞ் சொல்

உடுத்திரளனையகாட்சியுருட்சிமாசின்மைகையா
லெடுத்திடிற்றிண்மைபார்வைக்கின்புறல்படிகமென்ன
வடுத்திடுகுணமாறின்னவணியின்மூதணங்கோடின்மை
விடுத்திடுந்திருவந்தெய்தும்விளைந்திடுஞ்செல்வம்வாழ்நாள். (௫௮)

மாசறுதவத்தோனென்பும்வலாசுரனென்பும்வீழ்ந்த
கோசலமாதிநாட்டிற்பட்டதுகுணத்தான்மாண்ட
தேசதாயிலேசதாகித்தெள்ளிதாயளக்கினெல்லை
வீசியவிலையதாகிமேம்படுவயிரந்தன்னை. (௫௯)

குறுநிலத்தரசுந்தாங்கிற்குறைவுதீர்செல்வமெய்தி
யுறுபகையெறிந்துதங்கோன்முழுதுலகோச்சிக்காக்கும்

---

(௫௬) வேழம் இரண்டு என்றது—யானைக் கொம்பினையும், கரும்பினையும். (௫௭) கால்-வாயுதேவன்.

(௫௮) உடு-நக்ஷத்திரம். மூதணங்கு-மூதேவி.

(௫௯) கோசலமாதி நாட்டிற்பட்டது என்றதற்கு - கோசலம், கலிங்கம், மாதங்கம், இமயம், மகாராஷ்டிரம், சவ்வீரம்,பவுண்டரம் மக்கமுதலிய நாட்டிற்றோன்றி; காட்டுவாகைப்பூ, பொன், மல்லிகைமலர், வெண்மை, செம்மை, கருமை, குவளைமலர், செம்பொன்முதலிய நிறங்களையும்; திருமால், இந்திரன்,இயமன், வாயு,வருணன், சந்திரன், சூரியன், அக்கினிமுதலிய அதிதேவதைகளையும், முறையேபெற்று எனப்பொருள்கொள்க. அவற்றுள் படிகநிறவயிரம்—பிராமணஜாதியும், முயற்கண்போலுள்ளது - க்ஷத்திரிய சாதியும், வாழைக்குறுத்துபோலுள்ளது - வைசியஜாதியும், மேகநிறமுள்ளது - சூத்திரஜாதியுமெனக்கொள்க. குணத்தான் மாண்ட தேசதாய் என்றது-சரை, மலம், கீற்று, சம்படி, பிளத்தல், துளை, கரி, விந்து, காகபாதம், இருத்து, கோடிமுரிதல், தாரைமழுங்கல், என்னும் பன்னிரண்டு குற்றங்களில் நீங்கி, எண்வகைப்பலகை, அறுவகைக்கோணம், தாரை, சுத்தி, தராசம் என்னும் ஐவகைக்குணங்களால் மாட்சிமைப்பட்ட விளக்கமுடையதாய் எனப்பொருள்கொள்க. மேம்படுவைரம் என்றது-அரசர், கிரீடத்திலன்றி ஏனைய உறுப்புக்களிலும், அரசிமார் மங்களாபரணத்திலும் அணியக்கூடாவென பொருள்போந்த வெனக்கொள்க.

வறுமைநோய்விலங்குசாராவரைந்தநாளன்றிச்செல்லுங்
கறுவுகொள்கூற்றம்பூதங்கணங்களுமணங்குசெய்யா. (௬௦)

மாமணிமரபுக்கெல்லாம்வயிரமேமுதன்மைச்சாதி
யாமெனவுரைப்பர்நூலோரதிகம்யாதென்னிலேனைக்
காமருமணிகட்கெல்லாந்தமரிடுகருவியாமத்
தூமணிதனக்குந்தானே துளையிடுங்கருவியாகும். (௬௧)

மரகதத்தோற்றங்கேண்மின்வலாசுரன்பித்தந்தன்னை
யிரைதமக்காகக்கௌவிப்பறந்தபுள்ளீர்ந்தண்டில்லித்
தரைதனிற்சிதறவீழ்ந்துதங்கியதோற்றமாகு
முரைதருதோற்றமின்னும்வேறுவேறுள்ளகேண்மின். (௬௨)

விதிர்த்தவேலனையவாட்கண்வினதைமாதருணச்செல்வ
னுதித்தவான்முட்டையோட்டையுவணவேற்றரையில்யாப்பக்
கதிர்த்தவோடரையிற்றப்பிவீழ்ந்தொருகடல்சூழ்வைப்பி
லுதித்தவாராகுமின்னுமூண்டொருவகையாற்றோற்றம். (௬௩)

முள்ளரைமுளரிக்கண்ணன்மோகினியணங்காயோட
வள்ளரைமதியஞ்சூடிமந்தரவரைமட்டாகத்
துள்ளரியேறுபோலத்தொடர்ந்தொருவிளையாட்டாலே
யெள்ளரிதாயசெந்தீயிந்தியக்கலனஞ்செய்தான். (௬௪)

அப்பொழுதமலவித்திலரியரகுமரன்கான
வைப்புறைதெய்வத்தோடும்வந்தனனந்தவிந்து
துப்புறுகருடன்கௌவிக்கடலினுந்துருக்கநாட்டும்
பப்புறவிடுத்தவாறேபட்டதுகலுழப்பச்சை. (௬௫)

மேற்படி - வேறு.

காடமேசுப்பிரமேகாளமெனக்குணமூன்றுங்கருடப்பச்சைக்
கீடறுகினிதழ்நிறத்தகாடமதுசாதியினுவிருவேறுகுஞ்

---

(௬௧) தமர் - துளை. தூமணிதனக்குத்தானே துளையிடுகருவி யாகும் என்றதை - வயிரவூசியு மயன்வினையிரும்பும், செயிரறுபொன்னைச் செம்மைசெயாணியுந், தமக்கமைகருவியுந் தாமாமவைபோல், உரைத்திறமுணர்த்தலு முரையதுதொழிலே, என்னுஞ் சூத்திரத்தானுணர்க. (௬௨) புள்-கருடன். பித்தம் - பிச்சு.

(௬௩) உவண ஏறு-கருடன். (௬௪) முளரிக்கண்ணன் - தாமரைமலர்போலுங் கண்களையுடைய திருமால். (௬௫) வித்து-விந்து; இந்திரியம். கானவைப்புறைதெய்வம் என்றது—அவனோடுதித்த வனத்தில் வசிக்கும் பரிவாரதேவர்களை.

சாடரியசகுணமெனச்சதோடமெனவவையிரண்டிற்சகுணமாரும்
பீடுபெறுகாடமொடுமுல்லசிதம்பேசலம்பித்தகமேமுத்தம். (கூகூ)

புல்லரியபிதுகமெனவிவையாறிற்காடமதுபுல்லின்வண்ண
முல்லசிதமெலிதாகும்பேசலமேகுளச் செநெலொண்டரளம்போலு
மல்லடரும்பித்தகமேபசுங்கிளியின்சிறைநிறத்ததாகுமுத்தங் [ம்.
குல்லைநிறம்பிதுகமரையிலையினிறஞ் சதோடத்தின்குணனைந்தாகு

தோடலேசாஞ்சிதமேதுட்டமேதோடமூர்ச்சிதமேவெய்ய
தோடலேசத்தினுடுசூழ்மந்ததோடமெனத்தொகுத்தவைந்திற்
றோடலேசாஞ்சிதஞ்சம்பிரவிலையாமலரியிலைதுட்டநீலத்
தோடதாம்புல்லினிறந்தோடமூர்ச்சிதமுளரிதோடலேசம். (கூஅ)

மந்ததோடங்கலபமயிலிறகினிறமாமிவ்வகுத்ததோடஞ்
சிந்தவானுதகுணமணியணிவோர்நாற்கருவிச்சேனைவாழ்நா [கு
ளுந்தவாழ்வார்வலன்கணீலமிரண்டரன்கண்டத் தொளிவிட்டோங்
மிந்திரநீலந்தான்மாநீலமெனுமிரண்டிலிருண்டிந்தநீலம். (கூகூ)

முந்தியவிந்திரநீலம்விச்சுவரூபனைமகவான்முடித்தநாளி
னந்தியடுபழிதவிர்ப்பான்புரியுமகப்பரிமகத்தினறியதூம
முந்தியரும்பரியிமையாநாட்டநுழைந்தளிசேற்றினுழுகும்பீளை
சிந்தியவாறிடைப்படுமொன்றிந்திரவின்னீலமெனத்திகழுநீலம். ()

சஞ்சையாம்பகற்கடவுண்மனைவியவன்கனலுடலந்தழுவலாற்று
தஞ்சுவாடன்னிழலைத்தன்னுருவாநிறுவிவனமடைந்துநோற்க
விஞ்சையாலறிந்திரவிபின்றொடரமாப்பரியாமின்னைத்தானுஞ்
செஞ்செவேவயப்பரியாய்மையல்பொருதிந்தியத்தைச்சிந்தினனே.

அவைசிதறும்புலந்தோன்றுநீலமாநீலமிவையணிவோர்வானோர்
நவையறுசீர்மானவரிந்நகைநீலஞ்சாதியினுனல்வேறந்தக்

---

(கூகூ) சகுணம் - குணசம்பந்தமுள்ளது. சதோடம் - தோஷச
ம்பந்தமுள்ளது. (கூஎ) குளச்செந்நெல் ஒண்தரளம் என்றது - குள
நீரால்விளையும் செந்நெற்பயிரிற்றோன்றிய விளக்கமுற்றமுத்துக்க
ளை. குல்லை - துளசி. மரை - தாமரை. (கூஅ) சம்பீரம் - எலுமிச்சை
யிலை. (கூகூ) ஆனுத - நீங்காத. கருவிச்சேனை - இருபெயரொட்டுப்
பண்புத்தொகை. மாநீலமெனு மிரண்டி லிரண்டிந்த நீலம் என்றும்
பாடம். (எக) பகற்கடவுள் - சூரியன்.

(எஉ) மானவர் - மனிதர். எரிபொன் - பசும்பொன். தவல் -
கெடுதல். இருபிறப்பாளர் - அந்தணர்.

கவலரிய வெள்ளைசிவப்பெரிபொன்மைகலந்திருக்கிற் கரிதாய்முற்றுங், தவலரிதாயிருக்கிலிரு பிறப்பாளர் முதன்முதனாற் சாதிக்காகும். (எ௨)

இலங்கொளியவிந்நீலமெய்ப்படுப்போர் மங்கலஞ்சேர்ந்திருப்பரேனை, யலங்குகதிர்நீலத்திற்பெருவிலையாயிரப்பத்தின ளவைத்தாகித், துலங்குவதான்பாற்கடத்தினூறுகுணச் சிறப்படைந்துதோற்றுஞ்சோதி, கலங்குகடலுடைவைப்பிலரிதிந்தவிந்திரன் பேர்க்கரியநீலம். (எ௩)

மைந்துறுசெம்மணிமுத்துவாள்வயிரம்பச்சையொளிவழங்குநீல
மைந்திவைமேற்கோமேதமுதற்பவளமீருகவறைந்தநான்கு
நந்தொளியவேனுமவைசிறுவேட்கைபயப்பவழனகுசெங்குஞ்சி
வெந்தறுகண்வலனிணங்கள்சிதறுமிடைப்படுவனகோமேதமென்ப. (எ௪)

உருக்குநறுநெய்த்துளிதேன் றுளிநல்லான்புண்ணியநீ ரொத்துச்சேந்து, செருக்குபசும்பொன்னிறமும் பெற்றுமெலிதாய்த்தூய்தாய்த் திண்ணிதாகி. யிருக்குமதுதருக்கினிருட் பாவம்போம்பரிசுத்தியெய்தும்வென்றித், தருக்குவலன்கபம்விழுந்த விடைப்புருடராகமொளி தழையத்தோன்றும். (எ௫)

தாழ்ந்தபிலத்திழிந்தெரிபொற் கண்ணவுணனுயிர்குடிக்குந்தறுகட்பன்றி, போழ்ந்தமுழைவாய்திறந்து திசைசெவிடுபடநகைத்துப்பொன்போற்கக்கி, வீழ்ந்தகபம்படுதீவிற் படுமுச்சிவட்டமாய்மெலிதாய்ப்பொன்போற், சூழ்ந்தொளிவிட்டவிர்தழல்போற்றெளிவெய்தி மனங்கவர்ந்து தோற்றஞ்செய்யும். (எ௬)

இந்தமணிபாரியாத்திரகிரியிற்கொடுமுடியாயிலங்குந்தெய்வ
மந்தரமால்வரைப்புறஞ்சூழ்மேகலையாமயனிந்தமணியினுலே
யந்தரநாடவனகருமரசிருப்புமண்டபமுமமைத்தானிந்தச்
சந்தமணிதரிப்பவரேதரியார்வெந்நிடவாகைதரிக்கவல்லார். (எஎ)

---

(எ௩) ஆயிரப்பத்து - பதினாயிரம். பாற்கடத்தினூறுகுணச்சிறப்பு என்றது—மாநீலம் என்னுமணியை பசுவின்பால் நிறைந்தகுடத்திற்போட்டால் அதன்குணமே யக்குடமுழுதுங் காட்டுங்குணச்சிறப்பினை.

(எ௪) மைந்து - வன்மை செம்மணி-பதுமராகம்.

(எ௫) நல்லான்புண்ணியநீர் என்றது—கோசலத்தை. சேந்து-செவந்து. மெலிது-வழுவழுப்புடையது திண்மை-கனம்.

(எ௬) பிலம் - பாதலம். பொற்கண்ணவுணன்-இரணியாக்ஷன். தறுகண்-அஞ்சாமை. பன்றிஎன்றது - திருமால்கொண்டஆதிவராகவுருவை. தெளிவுஎய்தி என்றது—சருச்சரையகன்று நிற்றலை.

(எஎ) பாரியாத்திரகிரி - குமரிகண்டத்திலுள்ள எழுமலைகளிலொன்று. கொடிமுடி-சிகரம். அந்தரநாடவன்-இந்திரன். தரியார்-பகைவர்.

வலன்மயிராம்வயியேமிளாவிரதகண்டத்தில்வந்துதோன்றிப்
பலர்புகழுங்கோரக்கமகதஞ்சிங்களமலயம்பாரசீக
மிலகுதிரிகூடாதிதேயங்கள்பிறதீபமெங்குந்தோற்று
மலைகடலும்படிமிறுதிக்காரிடிக்கும்போதுநிறமதற்கியாதென்னில்.

கழையிலைகார்மயிலெருத்தம் வெருகின் கண்ணிறத்ததாய்க் கனத்ததாகி, விழைவுதருதெளிதாகித் திண்ணிதாய்மெலிதாகி விளங்குமீதி, லழகுபெறவலமிடமேல் கீழொளிவிட்டனமுறையே யறவோராதித், தழைவுறுநாற்சாதிகளாந் தினமிதனைப்பூசித்துத் தரிக்கசான்றோர். (எகூ)

வலத்தவுணன்றசைவீழ்ந்த வழிபடுதுப்பயன்சந்தி வடிவமாந்தன், புலத்தவரைவிதிக்குமிடத் தவருடன் மாசிழிபுலத்தும் புயல்போல்வண்ணன், வலத்தமதுகைடவரைக் குறைகுருதிவழிநிலத்து மகவான்வெற்பின், குலத்தையிற்கரிசோரி சிதறிடத்துவந்து குடிகொண்டுதோன்றும். (அ0)

அவ்விழியிற்படுபவள முருக்கம்பூப்பசுங்கிளிமூக் கலர்ந்தசெவ்விச்,செவ்வரத்தமலர்க்கொவ்வைக்கனிபோலுங் குணங்குற்றந்திருகிக்கோட, லெவ்வமுறப்புழுவரித்தன் முகமொடிதல் பெரும்பாலுமிப்பூணேந்தல், பெய்வளையார்தமக்கேயாந் தரிக்கின்மகப்பேறுமுதற் பேறுண்டாகும். (அக)

இரவியெதிரெரியிறைக்குங் கல்லுமதியெதிர்செழுநீ ரிறைக்குங்கல்லு, முரையிடுமொம்பதிலொன்றி லுட்கிடையாய்க்கிடக்கு

(எஅ) இறுதிகார் - ஊழிக்காலமேகம்.

(எகூ) கழை-மூங்கில். வெருகு-பூனை. அறவோர் - அந்தணர். முறையேயறவோராதித்தழைவுறு நாற்சாதிகளாம் என்றதனுல் - வையேமணியைக் கையிலெடுத்தோனிருந்த திசையைக்கொண்டு, வலப்பாலொளிவீசில் - அந்தணசாதியும், இடப்பாலொளிவீசில் - க்ஷத்திரியசாதியும், மேற்றிசைப்பக்கமாக வொளிவீசில் - வைசியஜாதியும், கீழ்த்திசைப்பக்கமாக வொளிவீசில், சூத்திரஜாதியுமாகக் கொள்க.

(அ0) சந்திவடிவமாத் தென்புலத்தவரை விதிக்குமிடத் தவனுடன்மாசிழிபுலத்தும் என்றது- பிரமன் சந்தியாகால வடிவமாயிருந்துபிதிரர்களைச் சிருட்டிக்குமிடத்து அவனுடற்களங்கம் வீழ்ந்தவிடத்தை. புயல் - மேகம். (அக) கோடல் - கோணுதல். எவ்வம்-குற்றம். ஏந்தல் - தரித்தல். (அஉ) எரியிறைக்குங்கல்-அனலைச்சிந்துஞ் சூரியகாந்தக்கல். நீரிறைக்குங்கல்-சந்திரகாந்தக்கல். ஒன்பது என்றது-நவமணிகளை. வடபால்நோக்கி என்றது-இரத்தினங்களை விலைபகருங்கால் கீழ்த்திசை நோக்கியும், கொடுக்குங்கால் வடதிசைநோக்கியு மிருத்தல்வேண்டுமென்னும் மரபுபற்றி.

மென வொன்பான்வேறு, மரபுரைத்துவணிகரே ருகிய வானவரே றுவடபானேக்கிப், பரவி யிருந்தருச்சித்து மணிகைக்கொண் டெதிர்மதுரைப் பரனைநோக்கா. (அ௨)

அஞ்சலிசெய்தகநோக்கா லிக்குமரற்களவிறந்த வாயுள்செல்வம், விஞ்சுகவென் றளித்தருள விறைமகனும் விண்ணிழிந்த விமானநோக்கிச், செஞ்சரணம் பணிந்திருகைத் தாமரையும்விரித்தேற்றுன் செல்வநாய்கர், மஞ்சனையும்புடைநின்ற வமைச்சரையு நோக்கிமுக மலர்ந்துசொல்வார். (அ௩)

இம்மணியா லிழைத்துநவ முடிசூட்டியிச்சிங்க விளவேறன்ன, செம்மறனை யபிடேக பாண்டியனென் றியம்புமெனச் செம்பொன்றூக்கிக், கைம்மறியில் வணிகருக்கு விலைகொடுப்பான் வருவார்முன் கருணைநாட்ட, மம்மகன்மே னிரப்பியிள நகையரும்பி நின்றுரையங்குகாணுர். (அ௪)

ஒருருவாய்நேர்நின்ற வணிகேசர்விடையின்மே லுமையாளோடு, மீருருவாய்முக்கண்ணு நாற்கரமு மஞ்சமர ரிறவாவாறு, காருருவா யெழுமிடருங் காட்டித்தங் கோயில்புகக் கண்டாரின்று, பாருருவாய்நின்றவணி கேசரிவ ரெனவேபின் பற்றிப்போவார். (அ௫)

தேன்செய்த கொன்றைநெடுஞ் சடையார்முன் ருழ்ந்தெழுந்து செங்கைகூப்பி, யான்செய்யுங் கைம்மாறு யெம்பிராற் கொன்றுண்டோ யானுமென்ன, தூன்செயுடலும்பொருளு முயிருமெனி னவையாவு முனவேயையா, வான்செய்யுநன்றிக்கு வையகத்தோர் செய்யுங்கைம் மாறுண்டேயோ. (அ௬)

என்னுமுன் வழுத்தலுறும் விறன்மாறன் கோக்கொழுந்தை யிகல்வேல்விந்தை, மன்னுகு மிவற்குமன வாக்கிறந்த பூரணமா மதுரைநாதன், பொன்னுரு மணிமகுடஞ்சூட மணிநல்குதலாற்புவியனேகம், பன்னுளுமுறைபுரியத் தக்கதென வாழ்த்தினுர் பல்சான்ருேரும். (அ௭)

---

(அ௩) அகநோக்கு என்றது-திருவருட் பார்வையை. மஞ்சன்-மைந்தன் - இதுபோலி. தூக்கி - துலையால் நிறுத்து.

(அ௫) பாருருவாய் என்றது - உலகினர் திருவுருவங் கொண்டுற்றமையை.

(அ௭) மாறன் என்றது - வீரபாண்டியனை. கோக்கொழுந்து என்றது-அரசிளங்குமரனை. புரியத்தக்கது-இது வியங்கோள் வினைமுற்று. பொறுப்பதறிவிலன் கூற்றுக்களேயெனத் திருவாசகத்தில் துவ்விகுதி வியங்கோட் பொருளில் வருதல் காண்க. கொழுந்தை இதில்-ஐ-சாரியை இடைச்சொல்.

எத்திவலங் கொண்டிருநான் கிபந்தழுவப் பெற்றோங்கி யிருக்குமட்ட, மூர்த்திவிடையருள்பெற்று மூவாநன்மறையாசி முனிவர் கூறப், பார்த்திவன்றன் பொலன்மாட மனைபுகுந்தா னிறைமணிப் பன்பாயுங்கேள்விச், சாத்திரருமந்திரரு மணிநோக்கி வியப்படைந் தார் சங்கைகூர்ந்தார். (அஅ)

மேற்படி - வேறு.

வேளெனவந்தநாய்கர்சுந்தரவிடங்கரானு
ளுள்களுங்கோளும்பற்றிநவமணியாக்கினுரோ
தாள்களுந்தோளுமார்புந்தரித்தநீணுகமீன்ற
வாள்விடுமணியோவீந்தார்யாதென மதிக்கற்பாலேம். (அகூ)

இந்திரக்கடவுணுட்டுமிம்மணியரியவென்று
மந்தரக்கிழவர்நல்கிமயனினுமாண்டகேள்வித்
தந்திரக்கனகக்கொல்லர்க்குவர்ப்பனததும்பவீசிச்
செந்திருமார்பினுற்குத்திருமணிமகுடஞ்செய்தார். (கூ0)

மங்கலமரபான்மாலைமணிமுடிசூட்டிநாமஞ்
செங்கணேறுயர்த்தநாய்கர்செப்பியமுறையால்வேத
புங்கவரிசைப்பவீதிவலஞ்செய்துபுனிதன்பாத
பங்கயமிறைஞ்சிவேந்தன்பன்மணிக்கோயிலெய்தார். (கூக)

போர்மகட்குறையுளானபுயத்தபிடேகத்தென்னன்
றேர்முதற்கருவித்தானைத்தெவ்வர்நீண்முடியெலாந்தன்
வார்கழற்கமலஞ்சூடமனுமுறைப்பைங்கூழ்காக்குங்
காரெனக்கருணைபெய்துவையகங்காக்குநாளில். (கூஉ)

---

(அஅ) அட்டமூர்த்தி என்றதை - "நிலநீர்நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன், புலனுயமைந்தனேடெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்." என்னுந் திருவாசகத்தா னுணர்க. மூவா-கெடாத, பெற்றது என்னும் வினைப்பெயர்-ஈறு தொக்கது. பொலன்மாடம்-பொன்னாலாகியமாளிகை. பொன்என்னுஞ்சொல் ஈறுகெட்டு, லகரமும், மகரமும்பெற்றுப் பொலம் என நின்று இறுதி நிலைப்போலியாய்ப் பொலன் என்றாயிற்று. சங்கை கூர்ந்தார் என்றது-சூரியன் முதலிய கோள்களோவென ஐயுறலை. (அகூ) வேள்-முருகக்கடவுள். நாள் - நட்சத்திரங்கள். கோள் - நவக்கிரகங்கள்.

(கூ0) இந்திரக் கடவுணுட்டு மிம்மணியரிய என்றது-சோமசுந்தரக்கடவுளா லருளப்பட்டதாதலின். செய்தார்-முதனிலை திரியாதுவந்த பிறவினை வினைமுற்று.

(கூக) புனிதன் - சோமசுந்தரக்கடவுள்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

தந்தைதன்காமக் கிழத்திய ரீன்ற தனயராய்த் தனக்கு முன்னவராய், முந்தைநாளரசன் பொன்னறைமுரித்து முடிமுதற்பொருள்கவர்ந்துட்குஞ், சிந்தையராகி மறுபுலத்தொளித்த தெவ்வரைச்சிலர்கொடுவிடுப்ப, வந்தவர்கவர்ந்த தனமெலாமீள வாங்கினனீர்வ்கதிர்மருமான். (௬௩)

மாணிக்கம்விற்றபடலம் முற்றிற்று.

ஆ படலம் உ௬ - க்கு - திருவிருத்தம் - க௨அ௭.

---

## பதினெட்டாவது,

## வருணன்விட்டகடலைவற்றச்செய்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

காழ்கெழுகண்டத்தண்ணல்கௌரியன்மகுடஞ்சூட
வீழ்கதிர்மணிகளீந்தவியப்பிதுவிடையோன்சென்னி
வாழ்கருமுகிலைப்போக்கிமதுரைமேல்வருணன்விட்ட
வாழ்கடல்வறப்பக்கண்டவாடலைப்பாடல்செய்வாம். (க)

சித்திரைமதியிற்சேர்ந்தசித்திரைநாளிற்றென்னன்
மைத்திரண்மிடற்றுவெள்ளிமன்றுளாற்களவுமாண்ட
பத்திமைவிதியிற்பண்டம்பற்பலசிறப்பநல்கிப்
புத்தியும்வீடுநல்கும்பூசனைநடத்தலுற்றான். (உ)

நறியநெய்யாதியாரநறுங்குழம்பீறுவாட்டி
வெறியகர்ப்புரநீராட்டியற்புதவெள்ளம்பொங்க
விறைவனைவியந்துநோக்கியேத்துவானெறிநீர்வையைத்
துறைவநீயென்கர்ப்பூரசுந்தரனேயோவென்றான். (௩)

பூசனைபுரியுமெல்லைப்பொன்னகர்க்கிறைமைபூண்ட
வாசவன்வருடந்தோறும்பூசித்துவருவானன்ன
காசறுமனத்தான்பூசைகழிவுறுமளவுந்தாழ்ந்து
தேசமைசிறப்பார்பூசைசெய்துதன்னுடுபுக்கான். (௪)

---

(௬௩) உட்கல் - திடுக்கிட்டு வருந்தல்.

(க) வியப்பென்பது - தானியாகுபெயராய் படலத்தின்மேனின்றது.

அன்றுநீர்க்கடவுள்வேள்விநாயகனவையத்தெய்தி
நின்றவன்றன்னேய்தீருஞ்செவ்வியினிகழ்ச்சிதோன்றக்
குன்றவன்சிறகரீர்ந்தகொற்றவன்முகத்தைநோக்கி
யின்றுநீசிறிதுதேம்பியிருத்தியாலிதென்கொலென்றான். (ரு)

சிலைப்படுமுகிலூரண்ணல்செப்புவானிருடீரன்பின்
வலைப்படுபெருமானெம்மான்மதுரையெம்பிரானையன்பு
தலைப்படுபூசைசெய்யத்தாழ்த்ததின்றதனாலிப்போ
தலைப்படச்சிறிதெனுள்ளமாகுலமடைந்ததுண்டால். (சு)

என்னவவ்விலிங்கந்தான்மாவிலிங்கமோவென்றுமுந்நீர்
மன்னவன்வினவலோடுமகபதிமொழிவான்முன்பென்
றன்னரும்பழியும்வேழச்சாபமுந்தொலைத்ததன்றே
வன்னதையறிந்திலாய்கொலென்னநீரண்ணல்கூறும். (எ)

அற்றதுவாகிற்றெய்வமருத்துவராலுந்தீரச்
செற்றிடவரிதாயென்னைத்தெறும்பெருவயிற்றுநோயை
வற்றிடுமாறுதீர்க்குங்கொல்லெனவலாரியைய
முற்றுநீவினையதென்னென்றுண்ணகையரும்பிச்சொல்வான். (அ)

அரியயராலுந்தீராப்பிறவிநோயறுக்கவல்ல
பெரியவனிந்தயாக்கைப்பெரும்பிணிபிறவுந்தீர்த்தற்
கரியனோவையன்செய்யுந்திருவிளையாட்டையின்னே
தெரியநீசோதியென்னத்தெண்கடற்சேர்ப்பன்சொல்வான். (கூ)

கல்லிறகரிந்தோயிங்குநான்வருங்காலைவேட்டார்க்
கெல்லையில்காமநல்குஞ்சுரபியுமின்பால்சோரப்
புல்லியகன்றுமாற்றுப்பட்டவப்போதுகண்ட
நல்லசோபனத்தாலிந்தநன்மொழிகேட்டேனென்னு. (க0)

வருணனுமேகிவெள்ளிமன்றுடையடிகள்செய்யுந்
திருவிளையாடல்கண்டுவெயிற்றுநோய்தீர்ப்பானெண்ணி

(ரு) வேள்விநாயகன் - இந்திரன். தேம்பி - வருந்தி. நோய் என்றது-வருணனுக்குள்ள சலோதர வியாதியை. இதனைச் "சலோதரநோய்க்கோட்பட்டான் றண்புனற்கரையன் மாதோ," என்பதானுமுணர்க.

(சு) சிலை - இந்திரதனுசு. (எ) நீர் அண்ணல் - வருணன்.
(அ) தெய்வமருத்துவர் - அச்சுவனிதேவர். (கூ) கடற் சேர்ப்பன்என்றது - கடற்றுறைக் கிறைவனாகிய வருணனை.
(க0) காமம் என்றது - ஈண்டு விரும்பப்பட்ட பொருளின்மேனின்றது. ஆறு - வழி.

முரசதிர்மதுரைமூதூர்முற்றுநீயழித்தியென்னுக்
குரைகடறன்னைவல்லேகூவினனேவினனே. (கக)

கொச்சகக்கலிப்பா.

கொதித்தெழுந்துதருக்களிறக்கொத்தியெடுத்தெத்திசையு
மதிர்த்தெறிந்துவரைகளெல்லாமகழ்ந்துதிசைப்புறஞ்செல்லப்
பிதிர்த்தெறிந்துமாடநிரைபெயர்த்தெறிந்துபிரளயத்தி
லுதித்தெழுந்துவருவதெனவோங்குதிரைக்கடல்வருமால். (கஉ)

கந்தமலர்த்தனிக்கடவுள்கற்பத்துமழியாத
விந்தவளம்பதிக்கிடையூறெய்தியதெம்பதிக்குமினி
வந்ததெனச்சுந்தரனைவந்திரைஞ்சிவானவருஞ்
சிந்தைகலங்கினர்வருணன்செய்தசெயறெளியாதார். (கங)

சூலமோடழலேந்துஞ்சொக்கர்திருவிளையாட்டின்
சீலமோநாமிழைத்ததீவினையின்றிறமிதுவோ
வாலமோவுலகமெலாமழியவரும்பேரூழிக்
காலமோவெனக்கலங்கிக்கடிநகரம்பனிப்பெய்த. (கச)

மண்புதைக்கத்திசைபுதைக்கமயங்கிருள்போல்வருநீத்தம்
விண்புதைக்கவெழுமாடவியனகரின்புறத்திரவி
கண்புதைக்கவருமளவிற்கண்டரசனடுடுங்கிப்
பெண்புதைக்குமொருபாகப்பிரானடியேசரணென்னு. (கரு)

ஆலமெழுந்திமையவர்மேலடரவரும்பொழுதஞ்சு
மாலெனவுந்தன்னுயிர்மேன்மறலிவரும்பொழுதஞ்சும்
பாலனெனவுங்கலங்கிப்பசுபதிசேவடியில்விழுந்
தோலமெனமுறையிட்டானுலகுபுகழுறையிட்டான். (கசு)

முறையிட்டசெழியனெதிர்முறுவலித்தஞ்சலையென்னுக்
கறையிட்டவிண்புரந்தகந்தரசுந்தரக்கடவு
ளுறையிட்டவருகடலைச்சுவறப்போய்ப்பருகுமெனப்
பிறையிட்டதிருச்சடையிற்பெயனுன்கும்வரவிடுத்தான். (கஎ)

நிவப்புறவெழுந்தநான்குமேகமுநிமிர்ந்துவாய்விட்
டுவர்ப்புறுகடலைவாரியுறிஞ்சனவுறிஞ்சலோடுஞ்

---

(கஉ) அகழ்தல்-பறித்தல். பிதிர்த்தல்-தூள்படுத்தல்.
(கசு) பாலன் என்றது-மார்க்கண்டேயரை.
(கஅ) நிவப்புற - நிரம்ப. சிவப்பெருங்கடவுளென்றது-தனது சத்தியால் பிரமவிஷ்ணுக்கள்முதலானோரை யொடுக்கியுந் தோற்றியுந் தானொரு விகாரமுமின்றி நிற்கும் இறைவனுதலை.

சிவபெருங்கடவுள்யார்க்குந்தேவெனத்தெளிந்தோரேழு
பவப்பெரும்பௌவம்போலப்பசையறவறந்ததன்றே. (௧அ)

அந்நிலைநகருளாரும்வானவராதியோருந்
தென்னவர்பிரானுமெந்தைதிருவிளையாடனோக்கிப்
பன்னருமகிழ்ச்சிபொங்கப்பன்முறைபுகழ்ந்துபாடி
யின்னநீர்மனத்தராகியீறிலாவின்பத்தாழ்ந்தார். (௧௯)

வருணன்விட்டகடலை வற்றச்செய்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் உஎ - க்கு - திருவிருத்தம் - ௧௩0௯.

---

கூடற்காண்டம்.

பத்தொன்பதாவது,

## நான்மாடக்கூடலானபடலம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

பூதங்களல்லபொறியல்லவேறுபுலனல்லவுள்ளமதியின்
பேதங்களல்லவிவையன்றிநின்றபிறிதல்லவென்றுபெருநூல்
வேதங்கிடந்துதடுமாறும்வஞ்சவெளியென்பகூடன்மறுகிற்
பாதங்கணோவவளையிந்தனுதிபகர்வாரையாயுமவரே. (௧)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருமகள்வலக்கண்வாக்கின்சேயிழையிடக்கண்ஞானப்
பெருமகணுதற்கணுகப்பெற்றுவான்செல்வங்கல்வி
யருமைவீடளிப்பாள்யாவளவளுயிர்த்துணைவன்காண
வொருமுலைமறைந்துநாணியொசிந்தபூங்கொம்பினின்றாள். (௨)

---

(௧அ) பௌவம் - கடல்.

(௧) இந்தனம்-விறகு. பூதங்கள்என்றது பிரிதிவு முதலிய பஞ்சபூதங்களை. பொறிஎன்றது-மெய், வாய், கண்,மூக்கு, செவியாகிய ஞானேந்திரியங்களை. புலன்என்றது-சத்தாதியைம்புலன்களை. உள்ளமதியின்பேதங்களென்றது-மனமாதி யந்தக்கரண விகற்பங்களை, பிறிது என்றது-ஆன்மாவை. வஞ்சவெளி - வெறுவெளி.

கதிர்மதிமிலைந்தவேணிக்கண்ணுதல்வருணனேய
வதிர்கடல்வறப்பச்செய்தவாடலீதனையானேய
முதிர்மழையேழின்மேலுமுன்னைநாண்முகிலுப்போக்கி
மதுரைநான்மாடக்கூடலாக்கியவண்ணஞ்சொல்வாம். (ரு)

எற்றுதெண்டிரைநீர்ச்சேர்ப்பன்றன்செயலிழுக்கிநாண
முற்றிருகண்ணுஞ்சேப்பவுடன்றெழுகோபச்செந்தீப்
பற்றிடபாகம்வெம்பிப்பரவையும்யாறும்வெந்து
வற்றிடவெகுண்டுநின்றான்மானமும்வலியுங்குன்றான். (சு)

நளிர்புனன்மதுரைமூதூர்நாயகனுடறன்னைத்
தெளிகிலனாகிப்பின்னுஞ்செழுமுகிலேழுங்கூவிக்
குளிர்கடல்வறந்ததென்னக்குடித்தெழுந்திடித்துப்பெய்யா
வொளிவளர்மதுரைமுற்றுமொல்லெனக்களைமினென்றான். (ரு)

பொள்ளனமேகமேழும்புகுந்துபார்தெரியமுந்நீர்ப்
பள்ளமும்வறப்பமுற்றப்பருகிமெய்கருகிமின்னித்
தெள்ளருந்திசையும்வானுஞ்செவிடுறப்பிலமும்பாரும்
விள்ளமால்வரைகளெட்டும்வெடிபடமேருச்சாய. (சு)

ஊழிநாள்வெடிக்குமண்டகடாகத்தினொலிபோலார்த்துப்
பாழிவானுருமுவீழப்பணுடவிமணிகள்சிந்தி
யாழிநீர்ஞாலந்தாங்குமராவுடனெளியத்திக்கிற்
சூழிமாலயானைநின்றநிலைகெடத்துணுக்கங்கொள்ள. (எ)

வெள்ளியநீறுபூத்துமுழவெனவீங்குகாய்போற்
றெள்ளியவாலிசிந்தத்திரண்டதிண்பளிக்குத்தூண்போ
லொள்ளியதாரைசோரவும்பர்மீன்கணங்களோடுந்
துள்ளியதிரையிலாடுமீன்கணந்துடித்துவீழ. (அ)

ஆர்த்தெழுகொண்மூவேழுஞ்சராசரமனைத்துஞ்சூழ்ந்து
போர்த்ததுஞாலமுண்ணப்புக்கதோர்வடிவங்கொண்ட
தீர்த்தனில்விசும்பும்பாருந்திசைகளுந்தெரியாவாகப்
பார்த்தகண்ணுழையாவாகப்பரந்திருள்கான்றதன்றே. (கூ)

---

(ரு) ஏவிய என்பது,ஏயவென நின்றது, இடைக்குறை.

(சு) பரவை-கடல். (எ) பாழி-வலிமை. சூழி-முகபடாம். மால்யானை-அஷ்டகஜங்கள். (அ) முழவு-மத்தளம். வீங்குகாய்என்றது-கலியாணபூசனிக்காயை. ஆலி-மழைத்துளி. மீன்கணம்-நக்ஷத்திரக்கூட்டம். (கூ) தீர்த்தன் என்றது-பிரளயகால ருத்திரமூர்த்தியை. கான்ற-வெளிப்படுத்தின.

பைஞ்சுடரெறிக்கும்பச்சைகாரொளிபரப்புநீலம்
புஞ்சவாளுடுக்களன்னநித்திலம்பொன்னங்குப்பை
செஞ்சுடர்மணிகடுப்புச்சிதறுவகணவரோடும்
விஞ்சையர்மகளிருடிவெறுத்தெறிகலன்கள்போல. (கO)

கடியகாலுதைப்பப்பெய்யுங்கடுஞ்செலவெழிலிமாடக்
கொடியநீணகரைச்சூழ்ந்துபுதைத்தலுங்கோலொன்றேச்சிப்
படியெலாம்புரக்குங்கோனுநகருளார்பலருஞால
மடியுநாளிதுவேயென்னுமயங்கினருயங்கினரே. (கக)

கண்ணுதன்மூர்த்திதானேயின்னமுங்காக்குமென்னுப்
புண்ணியநகரரரோடும்பொருக்கெனக்கோயிலெய்தி
விண்ணிழிவிமானவாழ்க்கைவிடையவனடிக்கீழ்வீழ்ந்தா
னண்ணலாராடன்முன்னுமறிந்துகைகண்டவேந்தன். (கஉ)

விடையினையாலமுண்டமிடற்றினைகங்கைதாங்குஞ்
சடையினைகூற்றைவென்றதாளினைமேருச்சாபப்
படையினையடியேந்துன்பப்பாட்டினைநீக்கியாளு
நடையினையாகியெங்கணல்லுயிர்காத்தல்வேண்டும். (கங)

என்னலுந்தென்னர்க்கென்றுமெய்தியவிடுக்கண்டீர்க்கு
முன்னவன்முன்போனுன்குழுகிலையுநோக்கியின்ன
தொன்னகரெல்லைநான்குஞ்சூழ்ந்துநான்மாடமாகி
வின்னெடுமொரியேழும்விலக்குமினெனவிடுத்தான். (கச)

வந்துநான்மாடமாகிவளைந்துநாற்றிசையுஞ்சூழ்ந்து
சந்துவாய்தெரியாதொன்றித்தாெனருகுடிலாய்மாடப்
பந்திகோபுரஞ்செய்குன்றங்கால்கள்போற்பரிப்பப்போர்த்த
விந்துவார்சடையோனேயவெழிலிமாநகரமெங்கும். (கரு)

அன்னநான்மாடத்துள்ளுநகருளாரமைச்சர்வேந்தன்
றன்னநாற்கருவித்தானைசராசரம்பிறவுந்தாழ்ந்து

---

(கO) பச்சை - முதலிய மணிகளைச் சிதறுவ என்றது - எழு மேகங்களுள் சம்வர்த்தம், புட்கலாவர்த்தம் என்னு மிரண்டுமேகங் களும் நவரத்தினங்களைப் பொழிவன வாதலின். புஞ்சம் - திரட்சி. நித்திலம்-முத்து. (கக) எழிலி-மேகம். (கங) சாபம்-வில்.

(கரு) குடில்-குடிசை. (கசு) சராசரம்-சரம். அசரம்-சரம்-இயங்கியற் பொருள். அசரம்-நிலையியற் பொருள். பொன் அனள்-பொற்கொடிபோலும் ; உமாதேவியார். முன்னைநாள் என்றது-வருணன் விட்டகடலை வற்றச்செய்த காலத்தை. என்ன என்றதில்-அகரவுருபு ஆறும்வேற்றுமைப் பன்மைப் பொருளது.

முன்னைநாடனினுமின்பமுழ்கிநன்கிருந்தாரூழிற்
பொன்னனுள்பாகன்றளிற்புக்கமர்ந்திருந்தாரொத்தார். (கசு)

கழைகெழுவரையினுச்சிகவிழ்கின்றபுயல்போற்கார்சூழ்ந்
திழைமணிமாடத்தும்பரெறிதுளியுடைந்துதுள்ளத்
தழைகடல்வறப்பவாங்கித்தன்னுடல்வறப்பப்பெய்து
மழைகளும்வெள்கிநின்றவருணனும்வெள்கிநின்றான். (கஎ)

நடுங்கினன்கழிந்தவச்சநாணமீதூரமான
மொடுங்கினனுள்ளத்துள்ளோருவகைவந்தெய்தப்பொற்பூத்
தடங்கரைகுறுகாமுன்னேய்தணிந்துபின்றேய்ந்துபாச
மடங்கினன்மடங்காவன்பின்வள்ளலைப்பூசைசெய்வான். (கஅ)

புனிதநீருடிக்கண்டிபூண்டுவான்கங்கையாதி
வனிதையர்பசும்பொற்கும்பவாசநீர்வடித்துநீட்டப்
பனிமலர்ச்சந்தங்கந்தமணிக்கலன்பசும்பொனுடை
யினையனபிறவுமீன்றுகற்பகமெடுத்துக்காட்ட. (கக)

ஐங்கனியமுதமைந்துகௌவியமமுதுதூபஞ்
செங்கதிர்விளக்கமின்னதேவரான்கொடுப்பச்சேற்க
ணங்கைதன்பதியைப்பூசித்தாயிரநாமங்கூறிப்
பைங்கதிர்முத்தஞ்சாத்தித்தொழுதடிபணிந்துநின்றான். (உ௦)

அருச்சனையுவந்தவாதியமலனீயாதுவேண்டிற்
றுரைத்தியென்றேதநீர்க்கோனெல்லைதாழ்ந்தொன்றினுலுங்
கரைத்திடவரியவிந்தக்கடியவென்வயிற்றுநோய்நின்
றிரைத்தடமாடியின்னேதீர்ந்திடப்பெற்றேனெந்தாய். (உக)

---

(கஎ) மழைகளும் வெள்கிநின்ற என்றது - கரிய மேகங்களும் விடாது மழையைச்சொரிந்து தேகம் வெளுத்து நாணி நின்றதை. வருணனும்வெள்கிநின்றான் என்றது - தனதுசெயல் முற்றுறாமை யால் வருணனும் அச்சமுற்று அசைவற்று நின்றமையை.

(கஅ) பொற்பூத் தடம்-பொற்றாமரைத் தடாகம். நடுங்கினன்-ஒடுங்கினன், மடங்கினன்-முற்றெச்சங்கள்.

(கக) கங்கையாதிவனிதையர் என்றது - கங்கைமுதலிய எழு புண்ணிய நதிகளாகிய பெண்களை. (உ௦) ஐங்கனி - எலுமிச்சம்பழம், நார்த்தம்பழம், தமர்த்தம்பழம், குளஞ்சிப்பழம், மாதுளம்பழம்.

(உக) ஒன்றினுலும் என்றது - மணிமந்திர ஔஷதாதிகளை. இன்னே - இது இனி என்னு மிடைச்சொற் றிரிபு.

மேற்படி-வேறு.

வேதமுதற்கலைகாட்சிமுதலளவைவிரிஞ்சன்முதல் விண்ணோர் செய்யுஞ், சோதனையுளகப்படாச் சோதியுனைச் சோதிக்கத் துணிந் தேனந்தோ, பேதமையேனிடத்தென்ன குணங்கண் டென்பிணி தீர்த்தென் பெற்றாயாசை. கோதமிலாய்குற்றமே குணமாகக் கொள்வதுநின் குணமோவையா. (உஉ)

பொன்னகரான் காலந்தாழ்த் துனையருச்சித் தயர்ச்சி யொடும் போனவாறு, மென்னெனயான்வினவியதும் வலாரி யிறைகொடுத் ததுமவ்விறைக்குநேர்யான், பின்னைவினயதுமவன்சொல் வழியுன் னைச்சோதித்த பெற்றிதானு, முன்னவனே யுன்னருளா லென்பி ணிக்குமருந்தாகிமுடிந்தவாறே. (உரு)

ஆறுமதிமுடியணிந்த வருட்கடலே வயிற்றுநோ யன்றி மேனு ண், மாறுபடு மிருவினையு மலவலியுங் கெடவீட்டின் வழியும்பெற் றேன், வேறினிமந்திரமென்னை மணியென்னை மருந்தென்னை மெ ய்மையாகத், தேறுமவர்க்கிப்புனித தீர்த்தமே பிணியனைத்துந் தீர் ப்பதன்றோ. (உச)

மேற்படி - வேறு.

அடியனேன்முன்னஞ்செய்தவபராதமிரண்டுந்தீரும்
படிபொறுத்தருள்வாயென்றுபன்முறைபரவித்தாழ்ந்து
மடிவிலாமகிழ்ச்சிபொங்கவரங்களுஞ்சிறிதுவேண்டிக்
கடியதன்னகரம்புக்கான்குடதிசைக்காவல்வேந்தன். (உரு)

---

(உஉ) காட்சி முதலளவை என்றது - பிரத்தியட்சம், அநுமானம், ஆகமம், அபாவம், அருத்தாபத்தி, ஒப்பு என்னு மறுவகைப் பிரமாணங்களை. இதனுள், வேதமுதற்கலை என்றது - ஆகமப்பிரமாணத்தை. பேதமை-மெய்யறிவின்மை. கோதமிலாய் என்றது- விருப்பு வெறுப்பில்லாதவனென்பதை. கோது - குற்றம்.

(உரு) இறை - விடை.

(உச) மணி என்றது - தன்னைத்தானறிந்து நின்ற வையித்தியாசிரியன், கோசபீசமுதலிய ஔடதங்களை முறைப்படி யமைத்துப்புடந்தீர்த தெடுத்ததோர் குளிகையை. அதனைத் தமரிட்டுத் தரிப்பவரது நோய்முதலியவைகள் உடனே கசிக்குமென்பதை, அகத்தியர் கரிசலைமுதலிய வையித்திய நூல்களிற்காண்க.

வன்றிறல்வருணன்விட்டவாரியைவிலக்கவீசன்
மின்றிகழ்சடையினின்றுநீங்கியமேகநான்கும்
குன்றுபோனிவந்துநான்குகூடமாக்கூடலாலே
யன்றுநான்மாடக்கூடலானதான்மதுரைமூதூர். (உசு)

நான்மாடக்கூடலானபடலம் முற்றிற்று.

ஆ படலம்-உஅ - க்கு திருவிருத்தம் - கந௱உ.

---

இருபதாவது,

## எல்லாம்வல்லசித்தர் திருவிளையாடற்படலம்.

கலிநிலைத்துறை.

சத்தநான்மறைப்பொருள்வரைதள்ளுநீண்முடிமேல்
வைத்தகார்கணுன்மாடமாமதுரைமேல்வருண
னுய்த்தமாரியைத்தடுத்தவாறுரைத்துமேறுயர்த்தோர்
சித்தராய்விளையாடியசெயல்சிறிதுரைப்பாம். (க)

தேடருங்கதிர்மணிமுடிச்செழியனும்பாண்டி
நாடருந்திருவெய்திமேனல்லவீடெய்தக்
கூடலம்பதிமேவியகுணங்குறிகடந்த
வேடரங்கொருசித்தமெய்வேடராய்வருவார். (உ)

வட்டவார்சடைக்குஞ்சியும்பூணனூன்மார்பு
மிட்டநீறணிதிலகமுமிணைக்குழைதூங்க

---

(க) சத்தநான்மறை - ஒலி வடிவமாகிய நான்கு வேதங்கள். வரை - எல்லை. சத்தநான்மறைப்பொருள்வரைதள்ளுநீண்முடிஎன்றது - பரஞானத்தாலன்றி விந்துசத்தியின் காரியமாகிய அபரஞானத்தா லாராய்தற்கு அரிதென்பதை.

(உ) குணங்குறிகடந்தவென்னுங்குறிப்பால் வேடர் என்றது- நிட்களசிவத்தை. குணம் - முக்குணங்கள். குறி என்றது - ஆண் பெண்என்னும் பகுப்பினை.

விட்டவெள்ளைமுத்திரையுந்தோல்விரித்தபட்டிகையுஞ்
சுட்டவெண்பொடிப்பொக்கணந்தூக்கியதோளும். (ரு)

தூய்யவெண்பொடியழிந்துமெய்சிவந்திடச்சுவடு
செய்யும்வெண்டிரட்படிகநீண்மாலையுஞ்சிவந்த
கையிலங்குகட்டங்கமுங்கண்டவர்மனஞ்சென்
றுய்யவன்புறவீக்கியவுதரபந்தனமும். (௪)

அட்டவேங்கையீருரிவைகீண்டசைத்தகோவணமு
மொட்டவீக்கியபுலியதளுடுக்கையுமிடத்தோ
ளிட்டயோகபட்டிகையும்பொன்னிடையிடைகட்டப்
பட்டசுஃறெலிவேத்திரப்படைக்கையும்படைத்து. (௫)

வேதகிண்கிணிசிலம்புசூழ்ந்தடிகளின்மிழற்ற
வோதரும்பதமுளரியூறருண்மதுவொழுகப்
போதவானந்தமதுநுகர்ந்தலர்முகம்பொலியப்
பாதபங்கயமுபநிடப்பாதுகைசூட. (சு)

சிறிதுமூரலும்வெயர்வையுந்திருமுகத்தரும்பக்
குறுகியாவணஞ்சித்திரகூடநாற்சந்தி
மறுகுசூளிகையுபரிகைமாளிகைவாயி
லறுகுசூழ்நிரைதெற்றியிவ்விடந்தொறுமடைந்து. (எ)

தெற்கிருப்பவர்போல்வடதிசைவயிற்சென்று
புக்கிருப்பதுங்கிழக்குளார்போலமேற்றிசையி
னக்கிருப்பதும்யாவருநாடினரறியத்
தக்கதன்றியேயிந்திரசாலமாத்தணந்தும். (அ)

சேயவெற்பினையணியதாச்செய்துமற்றணித்தாய்
மேயவெற்பினைச்சேயதாவிடுத்துமெய்முதுமூப்

(ரு) வெள்ளைமுத்திரைஎன்றது - சங்கத்தோடுகளை. பொக்கணம் என்றது - பிறர்க்கு விபூதிநல்க, இப்பிவடிவாகத் தலையோட்டானமைத்ததொருகருவி. இதனைச், "சுத்திய பொக்கணத்தென் பணிகட்டங்கம் எனவருந் திருக்கோவையார்க்கு நச்சினார்க் கினிய ரெழுதிய வுரையினுமுணர்க." ஐந்துமுகங்கள்தலையிற்பொருந்தச் செய்த வட்டவடிவாகிய ஓர்பை எனவும் பொருள்கூறுவர்.

(௪) கட்டங்கம்-மழு. உதரபந்தம்-உடிசூத்திரம். அதள்-தோல். சுஃறெலி-பிரம்பை வீசும்போதுண்டாகும்ஓர்விதக் குறிப்போசை.

(எ) ஆவணம் - கடைவீதி. நாற்சந்தி - நான்குதெருக்கள் கூடுமிடம். சூளிகை-வீட்டிறப்பு. தெற்றி - திண்ணை. அறுகு - சிங்கம்.

(அ) நக்கல் - சிரித்தல்.

பாயமக்களை யிளையவ ராக்கியுங்குதலை
வாயமக்களைக்கழி முதுமக்களாவகுத்தும். (கூ)

ஆணைப்பெண் ணுருவாக்கியும்பெண்ணையா ணுருவ
மாணக்காட்டியுமலடியைமகப்பெறச்செய் துங்
கோணக்கூன்செவிமைகண் குருடுபெங்கெவருங்
காணத்தீர்த்துநா லுலோகமுங்கனகமாச்செய் தும். (கம)

செல்வர்தம்மனைப்பொருளெலாம்வ றுமையிற்சிறந்தோ
ரில்லமெய்தவுநட்டவரிகலின் றித்தம்மின்
மல்லும்வெஞ்சமரிழைப்பவுங்காஞ்சிரமரத்தி
னல்லதீங்கனிபழுப்பவும்விஞ்சைகணயந் தும். (கக)

பருவமாறியபருவத்தில்வையைநீர்பரந்து
வருவதாக்கியுமீளவும்வறந்திடச்செய் தும்
பொருவி றீஞ்சுவையோடையும்பொய்கையுமுவர்ப்புத்
தருவவாக்கியுமுவரியின்சுவையவாத்தந் தும். (கஉ)

வீசிமாத்திரைக்கோலினைவிண்ணினட்டதன்மே
லூசிநாட்டியிட்டேசிமேற்பெருவிரலூன் றி
யாசிலாடியுமூசிமேற்றலைகிழக்காக
மாசில்சேவடிப்போதுவான் மலர்ந்திடச்சுழன் றும். (கங)

சண்டவெம்பணிப்பகையெனப்பறந்துவிண்டாவிக்
கொண்டலைப்பிடித்திடியொடுங்குடித்தநீர்பிழிந் து
கண்டவர்க்கதிசயம்பெறக்காட்டியுங்காண
விண்டலத்தினிற்பண்டுபோலிறைகொளவிடுத்தும். (கச)

எல்லிடைப்படும்பொருள்களையிராவெழப்பார்த்து
மல்லிடைப்படும்பொருள்களைப்பகல்வரவமைத்தும்
வல்லழற்புன லுளர்வளிவலிகெடப்பார்த்து
நல்லபோதுகாய்கனியிலாநாள்படக்கண்டும். (கரு)

பீளைகால்விழிக்கிழவரைப்பிரம்பினுல்வருடிக்
காளையாடவராக்கியக்கணவருக்கிசைய

---

(கூ) முதுமக்கள்-விருத்தர். (கம) பங்கு - முடம். நாலுலோகம்-வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம்.

(கக) காஞ்சிரம்-எட்டி. (கங) ஆசு - குற்றம், இல் - இன்றி.

(கச) பணிப்பகை-கருடன். பணி-பாம்பு. (கரு) எல்-பகல். அல்-இருள். படக்கண்டும் என்றது-காய்க்கச்செய்தலை.

வீளைவாய்முதுகற்பினர்கருவடைந்திளமை
யாளவேத்திரம்வருடிநீறளித்தருள்செய்தும். (கசு)

அகரமாதிமூன்ருகியவாகருடணமே
புகரிலாவதிரிச்சியமஞ்சனம்பொருவில்
வகரமாதிமூன்ருகியவசியமேவாத
மிகலிலாவயத்தம்பமென்றின்னவைசெய்தும். (கஎ)

வேதநூறெளியார்களெக்கலைகளும்விளங்கப்
பூதிநாவினிற்சிதறியும்பூழியன்காதன்
மாதராரொடும்பயில்புதுமணமலர்க்காவிற்
காதநீண்டகோட்டெங்கினைக்கரும்பனைசெய்தும். (கஅ)

ஏனைவான்றருக்குலங்களைப்புட்களையிருகோட்
டானையாதிபல்விலங்கினையொன்றையொன்ருக
ஞானநோக்கினுேக்கியுநாடியவிளையோர்
மானினுேக்கியராகிலோமெனவெழில்வாய்த்தும். (கக)

நாகநாடுபொன்னுட்டுளபொருளுமங்நகரு
ளாகவாக்கியுமின்னணம்விச்சைகளன÷த
மாகநாயகன்மலைமகளுயகன்மதுரை
யேகநாயகன்றிருவிளையாடல்செய்திருந்தான். (உ0)

---

(கசு)வேத்திரம்-பிறம்பு. வருடி-தடவி.வீளை-ஓர் வகையொலி.
(கஎ) அகரமாதி மூன்றென்றது—ஆகருடணம், அதிரிச்சியம், அஞ்சனம் என்னும் மூன்று மொழிகளுக்கும் அகரமே முதலெழுத்தாகலின். வகரமாதிமூன்றென்றது—வசியம், வாதம், வயத்தம்பம் என்னு மூன்றுமொழிகளுக்கும், வகரம்முத லெழுத்தாதலின், ஆகருடணம் என்பதில் ஆகாரமும், வாதம்என்பதில், வா-என்னுமுயிர் மெய்யெழுத்தும் முதலெழுத்தாய்நிற்க.அகரவகரங்களேமுதலெழுத்துக்களென்ற தென்னையெனின், ஆ-வா-என்பன அகர, வகரங்களின் விகாரங்களேயாதலின். ஆகருடணம்-தூரத்தி லுள்ளதை சமீபத்தில் வருவித்தல். அதிரிச்சியம்-கண்களுக்குப்புலப்படுவதைப் புலப்படாமற்செய்தல். அஞ்சனம் - மறைந்துகிடக்கும் பொருள்களை விளக்கிக்காட்டுதல். வசியம்-பிறரைத் தன்வயப்படுத்தல். வாதம்-இரும்பு முதலியவற்றைப் பொன்னுக்குதல். வயத்தம்பம்-பாலரைப் பாலராகவேயிருக்க வயதை நிறுத்தலும், விருத்தரை, இளைஞரே யாகவும், இளைஞரை விருத்தரே யாகவும், நிலைபெறச் செய்தலும்.
கஅ) பூழியன்-அபிடேக பாண்டியன். கோள்-வயிரம்.
(கக) எழில்வாய்ந்தும் என்றது-வசியம். (உ0) நாகநாடு-பாதலம்.

சித்தயோகிகள்செய்கின்றவாடன்மேற்செலுத்தி
வைத்தகண்களுஞ்சிந்தையும்வாங்கலர்திகைத்துத்
தத்தமாள்வினைத்தொழின்மறந்திருந்தவர்தகைசான்
முத்தவேதியராதியமுதுநகர்மாக்கள். (உ௧)

இனையசெய்தியையுழையராலிறைமகனறிந்தா
னனையசித்தரையிங்ஙனந்தருகெனவடுத்தார்
தனையகற்றினன்சித்தரைச்சார்ந்தவர்தாமும்
வினையைவென்றவராடலைவியந்துகண்டிருந்தார். (உஉ)

அமைச்சர்தங்களைவிடுத்தனனமைச்சருஞ்சித்தர்
தமைச்சரண்பணிந்தரசன்முன்வருகெனத்தவத்தோ
ரெமக்குமன்னனாலென்பயனெனமறுத்திடமண்
சுமக்குமன்னவன்றம்மவர்தொழுதனர்போனார். (உ௩)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மன்னன்முனமைச்சர்சித்தர்மறுத்துரைமாற்றங்கூற
முன்னவனருள்பெற்றிம்மைமறுமையுமுனிந்தயோக
ரிந்நிலவேந்தர்மட்டோவிந்திரனயன்மாலேனோர்
தன்னையுமதிப்பரோவென்றிருந்தனன்றருமவேந்தன். (உ௪)

எல்லாம்வல்லசித்தர்திருவிளையாடற்படலம் முற்றிற்று.

ஆ படலம் உ௰ - க்கு - திருவிருத்தம் - க௩௫௬.

---

இருபத்தோராவது,

## கல்லானைக்குக்கரும்பருத்திய படலம்.

கலிநிலைத்துறை.

செல்லார்பொழில்சூழ்மதுராபுரிச்சித்தரெல்லாம்
வல்லாரவராடலையாருரைசெய்யவல்லா
ரெல்லாரும்வியப்புறவித்தனிச்சித்தசாமி
கல்லானைதின்னக்கரும்பீந்தகதையுஞ்சொல்வாம். (௧)

---

(உ௧) ஆள்வினைத்தொழில்—நித்தியகருமங்கள். முத்தவேதியர் முத்தத்தன்மைவாய்ந்த அந்தணர்; அதாவது-ஆன்மாவின் தோற்ற மற்றுச் சிவத்தோற்றமாய் நின்றவர். (உஉ) வினையை வென்றவர் என்றது—இயல்பாகவே பாசங்களில் நீங்கினவராதலின். அடுத் தார்தனை என்றதில், கட்டுரைச்சுவைப் பொருள்படவந்த, தான் என்னும் அசைநிலையிடைச்சொல், தன்எனக்குறுகிநின்றது.(உ௩) தம்மவர் என்றது-மந்திரிகளை.

(உ௪) முன்னவன்என்றது—தனதிச்சையால் பிரபஞ்சத்தோ ற்றத்திற்குத் திருமேனிகொண்டருளிய சிவபெருமானை.

பின்னையமச்சம்பெருகப்பெரியோரையெண்ணா
தென்னையெளியாரெனயானிகழ்ந்திங்ஙனீண்டச்
சொன்னேனவர்க்கென்குறையென்னிற்றுருவினானே
தன்னேரிலார்தமைக்காணத்தகுவதென்னா. (௨)

ஆனந்தசித்தர்தமைக்காண்பலென்றன்புகூர்ந்த
மீனந்தரித்தகொடிவேந்தன்குறிப்புநோக்கி
மோனந்தரித்தசிவயோகருமுந்தித்தம்பொன்
மானந்தனக்குவடமேற்றிசைவந்திருந்தார். (௩)

அருகாதசெல்வத்தவனன்றுதைத்திங்கடோற்றம்
வருகாலமாகமதுரேசனைவந்துவந்தித்
துருகாதரத்தாற்கழிந்துள்வலமாகமீள
வருவானவன்முன்வருகாஞ்சுகிவன்கண்மாக்கள். (௪)

சீறிட்டவேங்கையதட்சேக்கையர்சீறியைந்தும்
பாறிட்டவேடர்யோகபட்டத்தர்கட்டங்கத்தி
லேறிட்டகையரிறுமாந்திருப்பாரைநோக்கி
மாறிட்டுநீக்கியெழப்போகெனவந்துசொன்னார். (௫)

பின்னாவருதென்னர்பிரான்பெரியோரைநோக்கி
யெந்நாடுநும்மூருமக்கென்வரும்யாதுவேண்டு
நுந்நாமமேதுநுவன்மின்னெனவையரெந்த
நன்னாடுமெந்தநகருள்ளுந்திரிவமப்பா. (௬)

ஆனாலுமிப்போதணிகான்மிரநாட்டிற்காசி
தானாமிருக்குந்தலமாகுநாதனாகி
யானாதபிச்சைப்பெருவாழ்வுடையார்நமரா
நாணாளும்விஞ்சைநடாஅய்த்திரிசித்தரேம்யாம். (௭)

ஆனந்தகானந்தொடுத்திங்குளவானசைவத்
தானம்பலவுந்தொழுந்தற்பரமாகிவந்தே

---

(௨) ஈண்ட-வரும்படி. துருவி-தேடி. (௩)பொன்மானம்-பொன்னாலாகிய இந்திரவிமானம். மானம்-முதற்குறை.

(௪) காஞ்சுகி வன் கண்மாக்கள் என்றது—மெய்காப்பாளரை. கஞ்சுகமுடையோன்-காஞ்சுகி. இதுநீட்டும்வழிநீட்டல். கஞ்சுகம் - சட்டை. (௫) சேக்கை-ஆசனம். ஐந்தும் என்றது-ஐம்புலன்களை.

(௮) ஆனந்தகானம்-காசித்தலம். தற்பரம் - தத்பரம் என்னும் வடசொற்றிரிபு. தத்-அது, பரம்-பிரயோசனம், அல்லது - ஆசை. மானந்தமான என்றதை-மான் அந்தம்ஆன எனச்சொல்வகைசெய்து, தத்துவம்முப்பத்தாறும் கழிந்தவிடத்தே முத்தியாகையால்,பிரகிருதிமாயைக்கு அப்பாற்பட்ட எனப்பொருள்கொள்க.

ஞானந்தருமிந்நகரிம்மையிற்சீவன்முத்தி
மானந்தமானபரமுத்திமறுமைநல்கும். (அ)

ஈண்டுள்ளவர்க்கெம்விளையாடலைக்காட்டியிச்சை
வேண்டும்பலசித்தியுநல்குவம்வேதமாதி
மாண்டங்குமெண்ணெண்கலைஞானமும்வல்லமல்லாற்
சேண்டங்குமெல்லாப்பொருளும்வலசித்தரேம்யாம். (௯)

உன்னுனமக்குப்பெறல்வேண்டுவதொன்றுமில்லை
தென்னுவெனவண்ணகைசெய்தனர்சித்தயோகர்
மன்னுமிவர்தம்மிறுமாப்புஞ்செருக்கும்வீறு
மென்னுலளவிட்டறிவேனெனவெண்ணித்தேர்வான். (௧0)

தேரும்பொழுதோருழவன்னொருசெல்வக்கன்ன
லாருங்கமுகென்னவயிர்ப்புறக்கொண்டுதாழப்
பாருந்திசையும்புகழ்பங்கயச்செங்கைதாங்கி
நீரும்பிறையுங்கரந்தார்தமைநேர்ந்துசொல்வான். (௧௧)

வல்லாரில்வல்லேமெனவும்மைமதித்தநீரிக்
கல்லானைக்கிந்தக்கரும்பையருத்தினெல்லாம்
வல்லாருநீரேமதுரைப்பெருமானுநீரே
யல்லாலெவர்நும்மனம்வேட்டதளிப்பனென்றான். (௧உ)

என்னுமுகிலைத்தளையிட்டவன்கூறக்கேட்டுத்
தென்னுவருதியெனப்புன்னகைசெய்துசித்தர்
மின்னுல்வருவதெமக்கேதுநினக்குநாமே
யுன்னுசைதீரத்தருகின்றதலாமலுண்டோ. (௧௩)

செல்லாவுலகத்தினுஞ்சென்றொருவிஞ்சைகற்ருேர்
பல்லாருநன்குமதிக்கப்பயனெய்துவார்க
ளெல்லாமறிந்தவெமக்கொன்றிலுமாசையில்லை
கல்லானைகன்னற்கறிக்கின்றதுகாண்டியென்ருர். (௧௪)

கடைக்கண்சிறிதேகுறித்தார்முன்கடாக்கல்யானை
மடைக்கண்டிறந்துமதமூன்றும்வழியவிண்வா

---

(௯) எல்லாப்பொருளும்வல்லசித்தரென்றதால், ஆக்கிஞசித்தரெனப்பெயர்கூறினுரென்க. (௧௧) செல்வம் என்றதற்கு, ஈண்டுச் செழுமை என்பதேபொருள்.

(௧௫) கடாக்கல்யானை என்றது—சாதியடை. கடாம் - மும்மதம். விண்வாய் - மேகத்தின்வாய்.

யடைக்கும்படிவாய்திறந்தார்த்துப்புழக்கைநீட்டித்
தொடைக்குன்றனன்கைச்சுவைத்தண்டைப்பறித்ததன்றே. (கரு)

பறித்துக்கடைவாய்வழிசாறளிபாய்ந்தூநக்கக்
கறித்துக்குதட்டிப்பருகிக்கரமூசலாட
நெறித்துத்தருக்கிநிழல்சீறிநிமிர்ந்துநிற்ப
மறித்துக்கடைக்கண்குறித்தார்பினுமாயம்வல்லார். (கசு)

மட்டுற்றதாரான்கழுத்திற்கண்டமாலைதன்னை
யெட்டிப்பறித்ததிகல்காஞ்சுகிமாக்கள்சீறிக்
கிட்டிக்களிற்றைப்புடைப்பான்கிளர்கோல்கொண்டோச்சச்
சிட்டத்தவர்கண்சிவந்தானையைச்சீறிநோக்க. (கஎ)

கண்டாவளியைக்களிறுண்டதுகண்கள்சேப்புக்
கொண்டானரசன்சிவயோகரிற்கோபமூளத்
தண்டாவரசன்றமருட்டறுகண்ணர்சீறி
வண்டாரிதழிமறைத்தாரையடிக்கவந்தார். (கஅ)

அப்போதிளமூரலரும்பியசித்தசாமி
கைப்போதமைத்துக்கடிந்தோர்தமைநின்மினென்ன
மைப்போதகமன்னவர்வைத்தடிபேர்க்கலாற்று
தெப்போதரியநிலையோவியம்போலநின்றார். (ககூ)

மத்தக்களிற்றான்வெருளித்தழன்மாறியன்பு
பொத்தப்புதைந்தமனத்தற்புதம்பொங்கிச்சோரச்
சித்தப்பெருமானடிமாமுடிதீண்டப்பாச
பெத்தத்தமியேன்பிழையைப்பொறுமென்றுவீழ்ந்தான். (உ0)

அன்புக்கிரங்குங்கருணைக்கடலானவைய
ரின்புற்றுவேண்டும்வரங்கேளெனத்தாழ்ந்துவேந்த
னன்புத்திரப்பேரருள்வாயெனநல்கிச்செங்கை
வன்புற்றவேழமிசைவைத்தருணாட்டம்வைத்தார். (உக)

---

(கஎ) கண்டமாலை-கண்டசரம். கண்டத்திலணிந்த முத்தின் வரிசையாலாகிய கோவை என்பதுபொருள். சிட்டத்தவர்-சித்த மூர்த்திகள். சிட்டம் - ஒழுக்கம்.

(ககூ) மைப்போதகம் அன்னவர்-கரியயானையையொத்த வீரர் கள். (உ0) பொத்தல்-போர்த்தல். பாசபெத்தம் என்றது-ஆணவாதி மலபந்தங்களை. (உக) வன்புற்றவேழம்-கல்யானை.

கலிவிருத்தம்.

தழைக்குநீள்கதிர்த்தண்முத்தமாலையைப்
புழைக்கைநீட்டிக்கொடுத்ததுபோதக
மழைக்கைநீட்டினன்வாங்கினனீதியிற்
பிழைக்கலாதபெருந்தகைவேந்தனே. (உஉ)

முத்தமாலிகைவாங்குமுன்முன்னின்ற
சித்தசாமிதிருவுருக்கண்டிலன்
மத்தயானைவடிவமுமேனைய
வொத்ததாகவுரவோன்வெருவினன். (உங)

இந்தவாடலெமக்குயிராயவிவ்
வந்தமில்லியருள்விளையாட்டென
முந்தைவேதமுதல்வனைமீளவும்
வந்துவந்தனைசெய்தனன்மன்னனே. (உச)

முழுதுணர்ந்தமுதல்வநின்னாடலை
யிழுதையேனறியாதளந்தேனென
வழுதிறைஞ்சியபராதமீந்துகை
தொழுதுநின்றுதுதிக்கத்தொடங்கினன். (உரு)

கொச்சகக்கலிப்பா.

வேதியாய்வேதவிளைபொருளாய்வேதத்தி
னீதியாய்நீதிநெறிகடந்தநீளொளியா
யாதியாயீறாய்நடுவாயவைகழிந்த
சோதியாய்நின்றாயென்சோதனைத்தோநின்னியல்பே. (உசு)

நின்னான்மொழிந்தமறைநின்னடிகள்வந்தித்தும்
பன்னாளருச்சித்தும்பாதந்தலைசுமந்து
முன்னுமம்வாசித்துமுன்னையறியேனென்று
சொன்னாலடியனேன்சோதனைத்தோநின்னியல்பே. (உஎ)

பெரியதினும்பெரியதுமாய்ச்சிறியதினுஞ்சிறியதுமா
யரியதினுமரியதுமாயெளியதினுமெளியதுமாய்க்

---

(உரு) இழுதை - அறிவில்லாதவன். (உஎ) பாதம்தலைசுமந்து என்றது—பாதுகையாகித் தாங்குதலை. உன்னுமம் வாசித்தும் என்றது-வேதமுழுதும் சிவன்திருநாமங்களே கூறப்படுதலை.

(உஅ) பெரிது-மகத்து. சிறிது - அணு. கரியது-அதுபகுதிப் பொருளது. கரி-சாட்சி. காண்பான் என்றது-ஆன்மாவை. காட்சி-விடயப்பொருள். துரியம்-மேலானபொருள்.

கரியதுமாய்க்காண்பானுங்காட்சியுமாயவைகடந்த
துரியமுமாய்நின்றுயென்சோதனைத்தோநின்னியல்பே. (உ அ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

என்றுபல முறைபழிச்சி மனையெய்தி விக்ரமனை யீன்றுபண்ணுட், டொன்றுமுறை கோலோச்சி விக்கிரமன் சுவன்மிசைப்பார் சுமத்திப்பாசம், வென்றுகளைந் தருட்சித்த சாமிதிரு வருணேக்கால் விளைபேரின்ப, மன்றமது வீழ்வண்டிற் கலந்திருந்தா னபிடேக மாறன்மன்னே. (உகூ)

கல்லானைக்குக்கரும்பருத்தியபடலம் முற்றிற்று.

ஆக படலம் ௩0 - க்கு - திருவிருத்தம் - க௩அ௫.

---

## இருபத்திரண்டாவது;

## யானையெய்தபடலம்.



கலிவிருத்தம்.

கட்டவிழ்கடுக்கையர்கலானைகழைதின்ன
விட்டதிருபஞ்சவனிடத்தமணரேவி
விட்டமதயானைவிழமேவலர்புரத்தைச்
சுட்டகணைவிட்டுயிர்தொலைத்தமுறைசொல்வாம். (க)

விக்கிரமபாண்டியன்வெலற்கரியசெங்கோ
றிக்குநிலனுந்திறைகொள்செல்வநிறைவெய்த
வக்கிரமவெங்கலியரும்பகையொதுங்கச்
சக்கரமுருட்டியிடர்சாய்த்துமுறைசெய்வான். (உ)

புத்தரமணுதியபுறக்களையகழ்ந்து
நித்தமறையாகமநெறிப்பயிர்வளர்த்து

---

(உகூ) விக்கிரமன்-பராக்கிரமத்தையுடையவன். சுவல்-தோண்மேல். (க) பஞ்சவன்-விக்கிரமபாண்டியன். (௩) புறக்களை என்றது-முக்கூற்றுப் புறச்சமயக்களைகளை. மறையாகமப் பயிர்வளர்த்தென்றது-வைதிகசைவங்களைவிருத்திசெய்தமையை. விதியாவது-அருளைநோக்காது அறத்தினையீட்டல். பத்தியாவது-அறத்தின்முதிர்ச்சியால், அருள்வழி நிற்றல்.

மெய்த்தவிதிபத்தியின்விளைந்தபயன்யாருந்
துய்த்திடமநுத்தொழினடத்திவருதூயோன். (௩)

மருவிதழியானுறையும்வானிழிவிமானத்
தருகுவடபக்கமுறவாலயமெழுப்பி
யுருவருவிரண்டினையுமொருவிவருசித்தர்
திருவுருவுகண்டுபணிசெய்தொழுகுநாளில். (௪)

செய்யகதிரோன்வழியசெம்பியனொருத்தன்
கையனவன்வென்றிபயில்காஞ்சிநகருள்ளான்
பொய்யமணர்கட்டுரைபுரத்துறையினின்றான்
மையின்மதிமாறனொடுமாறுபடநின்றான். (௫)

முடங்கன்மதிசெஞ்சடைமுடித்துவிடையேறும்
விடங்கரதுசேவடிவிழுங்கியமனத்து
மடங்கனிகர்தென்னனெதிர்வந்துபொரலாற்றா
தடங்கலனோர்வஞ்சனையினாலடமதித்தான். (௬)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அஞ்சனங்கவுஞ்சங்கோவத்தனந்திரிகூடங்காஞ்சி
குஞ்சரசையமேமகூடமேவிந்தமென்னு
மஞ்சிவர்வரைகளெட்டும்வைகுறுமமணர்தம்மி
லெஞ்சலில்குரவர்க்கோலைவேறுவேறெழுதிவிட்டான். (௭)

வடிவுபோலுள்ளமெல்லாமாசிருள்புதையநின்ற
வடிகண்மாராவாரெண்ணாயிரவருமார்த்தார்வேய்ந்த
முடிகெழுவேந்தன்விட்டமுடங்கலைநிமிர்த்துவாசித்
திடிகெழுகார்போற்குன்றினிழிந்துவேறிடத்திற்செல்வார். (௮)

யாவருமொருங்குகூடியிருள்வழிகொள்வதேய்ப்பக்
காவல்வல்லரணஞ்சூழ்ந்தகாஞ்சிமாநகரத்தெய்திப்
பூவலர்தாரான்கோயிற்புறங்கடைபுகுந்துவேந்த
னேவலர்விடுப்பவுள்போயிறைமகனிருக்கைபுக்கார். (௯)

---

(௪) உருஅருஇரண்டினையும் ஒருவிவரு சித்தர் என்றது-பஞ்சபூத பரிணாமமாகிய தூலவுருவும், மூலப்பகுதியின் காரியமாகிய சூக்குமவுருவும் மாயாகாரியமாதலால் அவற்றைக்கடந்து அருளுருவாய்வந்தமையை. (௭) கவுஞ்சம், இது கிரவுஞ்ச மென்பதன்றிரிபு. குஞ்சரசையம் என்றது—யானைகள் வசிக்கும் சையைகிரியை. சையம்-சகிக்கத் தக்கது என்னும் பொருளது. (௮) அடிகள்-இது சமணருள் ஆசிரியராய்நின்றவர்க்குச் சிறப்புப்பெயர். வேறிடம் என்றது - காஞ்சி நகரை; தம திருக்கைக்கு வேறான இடம் என்பது பொருள்.

மன்னவன்முடிமேற்பீலிவைத்தனராக்கங்கூற
வன்னவனவரைநோக்கிவசியமுன்னாறும்வல்லீர்
தென்னனையாபிசாரஞ்செய்துயிர்செகுத்தாலுங்கட்
கென்னதுநாடுபோதிதருவல்போயியற்றுமென்றான். (௧0)

தவம்புரிந்தவமேசெய்வார்தாமதற்குடன்பட்டேகி
நிவந்ததெண்டிரைநீர்ப்பாலிநெடுங்கரைக்காதமூன்றிற்
கவர்ந்தகன்சாலைகோலியோசனையகலங்கல்லி
யவம்படுவேள்விக்குண்டங்கோணமெட்டாகக்கண்டார். (௧௧)

விடம்பொதிகாட்டம்பெய்துநிம்பநெய்விராயநஞ்சி
னுடம்புடையுயிரின்கோழூன்கறிப்பொடியூறுமெண்ணெ
யிடம்படவாயங்காந்தவெரிக்குழிபுதையப்பெய்து
கொடும்பழிவேள்விசெய்தார்கொல்லாதவிரதம்பூண்டார். (௧௨)

மாடுளபொதும்பர்நந்தாவனமுளசோலையுள்ள
காடுளகருகிச்சாயக்கயலுளவோடையுள்ள
கோடுளவாவியுள்ளகுளமுளவறப்பத்தாவிச்
சேடுளமுகிலுந்தீயச்சிகையெழுகுண்டத்தீவாய். (௧௩)

கூற்றெழுதோற்றம்போலவஞ்சனக்குன்றம்போலக்
காற்றெழுசெவியுநால்வாய்கௌவியமருப்புமாறு
ஊற்றெழுமதமுமூசலாடியவொற்றைக்கையு
மேற்றெழுவிடம்போர்சீறியெழுந்ததோர்தறுகண்யானை. (௧௪)

அந்தமாவேள்வித்தீயுமவியமும்மதமுஞ்சோர
வந்தமாகளிற்றைநீபோய்வழுதியமதுரையோடுஞ்
சிந்தவேதொலைத்தியென்னாத்தென்றிசைசெல்லவேவி
முந்தவேவிடுத்தமாசுமூழ்குடலமணப்பேய்கள். (௧௫)

---

(௧0) பீலி-மயிற்றோகை. வசியமுன்னாறும் என்றது—வசியம், வயஸ்தம்பம், வாதம், அதிரிசியம், அஞ்சனம், ஆகருஷ்ணம் என்பவற்றை. ஆபிசாரம்-சத்துரு மாரணயாகம்.

(௧௨) விடம்பொதிகாட்டம்-விஷத் தன்மையையுடைய எட்டி விறகு. நிம்பநெய் - வேப்பெண்ணெய். நஞ்சினுடம்புடை யுயிரின் கோழ் ஊன் என்றது—விஷம்பொருந்திய சரீரத்தையுடைய சர்ப்பத்தினது கொழுவியதசையை. கறிப்பொடி-மிளகுத்தூள்.

(௧௩) மாடுளபொதும்பர்முதல் காடுளவென்பதுகாறும் உள்ள உயிர்கள், ஓரறிவுயிர்முதல் ஐயறிவுயிர்காறு முள்ளனவும்; ஓடையுளவென்பதுமுதல் குளமுளவென்பது வரையில், மலரும் ஏனையுயிர்களும் ஆதலால்கருகி; வறப்பவெனப்பொதுவினைதந்து கூறினார்.

கலிவிருத்தம்.

அருளற்றிருளுடலிற்புதையமணக்கயவர்களுட்
டெருளற்றருமறையிற்படர்செயலற்றிகபரமெய்ப்
பொருளற்றவனனிகத்தொடுபுறமொய்த்திடமதமா
வெருளற்றிடிகுரலிற்படிவெடிபட்டிடவருமால். (௧௬)

அடியின்னளவகல்பாதலமுடியின்னளவண்ட
மிடியின்னளவெழுகார்செவியெறிகாலளவகில
மடியும்மளவுளர்கான்மதமழைமின்னளவுலக
முடிவின்னெழுகடல்கண்ணழலளவாமுதுவடவை. (௧௭)

கூற்றஞ்சிடவருமிக்கரிகுரலஞ்செவிமுழைவா
யேற்றஞ்செயமடங்குஞ்செவியெறிகால்வழிவிழித்தீ
யூற்றஞ்செயமடைவாயுடைந்தொழுகுங்கடமதநீர்
நாற்றஞ்செயத்திசைவேழமுநடுக்கஞ்செய்துநலியும். (௧௮)

இடிக்கும்புயல்வயிற்றைக்கிழித்திடியேற்றினையுதிர்க்கும்
வெடிக்கும்பிளிறொளியாற்றிசைவிழுங்கிச்செவிடாக்குந்
துடிக்கும்புழைக்கையோச்சிவிண்டொடுகுன்றினைச்சுற்றிப்
பிடிக்குங்கடல்கலக்குந்தனிப்பெருமத்தெனத்திரிக்கும். (௧௯)

உருமுக்குரலொலியிற்றுளரொலிவிட்டெறிசெவியிற்
றிருமுட்பிறையெயிறிற்றழலெறிகட்டிருளுடலிற்
றருமுக்கடவருவித்துரலடியிற்றெனநிலமேல்
வருமுக்கிரவடவைக்கனல்வரினுப்பதமதமா. (௨0)

தெழிபட்டதிக்கயத்தின்செவிதீயப்பகையோடும்
வழிபட்டொருகடுங்கூற்றெனவருகுஞ்சரவரவை
விழிபட்டவர்மொழியாலுணர்விரைபட்டலர்வேம்பன்
சுழிபட்டலைபுனல்போன்மனஞ்சுழன்றுனினைந்தழன்றான். (௨௧)

---

(௧௭) பாதலம்-பாதாளம். அண்டம்-வானுலகம். இடி-முழக்கம். உளர்கால்-சஞ்சரிக்கும் ஊழிக்காற்று. உலக முடிவின் எழுகடல்-மகாப்பிரளயகால சமுத்திரம். முதுவடவை-ஊழித்தீ.

(௧௮) முழைவாய்-குகையினிடம். ஊற்றம்-மிகுதி.

(௧௯) பிளிறல்-முழங்கல். புழை-துவாரம். திரிக்கும்-சுழற்றும்.

(௨0) உறுமு-இடி. ஒலி-காற்று. முக்கட வருவி-மூன்றுமத நீராகிய ஆறு. ஒலியிற்று, செவியிற்று என்பன, இடையில் இன்சாரியைபெற்றுவந்த ஒன்றன்பாற் படர்க்கைக் குறிப்பு வினைமுற்றுகள். (௨௧) தெழி-முழக்கம். பகைஎன்றது-பகைவர்களாகிய சமணர்களை. விழிபட்டவர்-கண்டோர். பொறை யாற்றிய-சுமக்கப்பட்ட.

மைப்போதகம்பொறையாற்றியமணிக்கோயின்முன்குறுகாக்
கைப்போதகமுரித்தான்கழற்காற்போதகமுறத்தாழ்
திப்போதகந்தனையுந்தொலைத்தெனைக்காத்தியென்றிரந்தா
னப்போதகல்வானின்றொருதிருவாக்கெழுந்தன்றே. (உஉ)

விட்டார்வலிகெடநாமொருவிற்சேவகனாகி
யொட்டார்விடவருவெங்கரியுயிர்வௌவுதுமுதனின்
மட்டார்பொழிற்கடிமாநகரயற்கீட்டிசைமருங்கோ
ரட்டாலமண்டபஞ்செய்யெனவதுகேட்டெழுந்தரசன். (உங)

அகங்கவ்வியகளிப்பெய்திவந்தட்டாலமண்டபம்பொன்
னகங்கவ்வியதெனத்தூன்றொருநாளன்கினிலடுத்தே
சகங்கவ்வியபுகழான்செய்ததறுகட்களிமதமா
முகங்கவ்வியவிற்சேவகன்வருவானதுமொழிவாம். (உச)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நீனிறனீத்தநீந்துநிழன்மதியிரண்டுண்டென்ன
வானிறவலயச்சங்கவார்குழைநுழைவித்தம்பூம்
பானிறவெகினங்காணப்படர்சடைமறைத்துத்தோற்றுங்
கானிறைகுஞ்சிச்சூட்டிற்கடிமயிற்கலாபஞ்சூடி. (உரு)

கருங்கடன்முளைத்தசெக்கர்க்கதிரெனக்குருதிக்கச்சை
மருங்குறவீக்கிச்சோரிவாயுடைவாளுங்கட்டி
யிரங்குநான்மறைகளேங்கவிருநிலந்தீண்டுதாளிற்
பொருங்கழல்வளைத்துவாளிப்புட்டிலும்புறத்துவீக்கி. (உசு)

வீங்கியதடந்தோளிட்டவார்சிலைவில்லிளேடும்
பாங்குறையிமையப்பாவைபாதியேயன்றிமுற்றும்
வாங்கியவண்ணம்போன்றுமல்லதுமாலுமோர்பா
லோங்கியவண்ணம்போன்றுமொளிநிறம்பசந்துதோன்றி. (உஎ)

(உஉ) மைப்போதகம்-கரியதிக்கு யானைகள். மணிக்கோயில் என்றது-இந்திரவிமானத்தை. கைப்போதகம்-துதிக்கையை யுடையயானை. கால்போது-திருவடித்தாமரை. போதகம்-யானை.

(உங) ஒட்டார்-பகைவர். வௌவல்-கொள்ளை கொள்ளல். கவ்விய-பொருந்திய. (உச) பொன்னகம்-மகம்மேரு. (உரு) நீத்தம்-வெள்ளம். ஈண்டுகடலின்மேல்நின்றது. வலயம்-வட்டவடிவம். பூ-தாமரைமலர். பானிறவெகினம் என்றது-வெண்மையாகிய அன்ன பட்சியாய்த்தேடிய பிரமனை. சூடு-உச்சிக் கொண்டை. நீலம் நிறம்-நீனிறமெனக் கடை குறைந்து நின்றது. (உசு) குருதிக் கச்சை-உதிரநிறம் வாய்ந்தகச்சை. வாளிப்புட்டில்-அம்பறாத்தூணி.

காமனுங்காமுற்றஞ்சுங்காளையாம்பருவந்தோன்றத்
தாமுலகளந்தவென்றித்தனிவிற்சேவகனுய்த்தோன்றி
மாமறைமகுடமன்னமண்டபத்தேறித்தென்னர்
கோமகனிடுக்கண்டீர்ப்பான்குஞ்சரவரவுநோக்கா. (உஅ)

அஞ்சுகூவிளிச்சேய்த்தென்னவதுவரவறனிலாதான்
வெஞ்சினக்கோலினேன்றாண்மிதித்துமெய்குழையவாங்கிச்
செஞ்சிலைநெடுநாண்பூட்டித்திருவிரறெறித்துத்தாக்கிக்
குஞ்சரமெட்டுமஞ்சக்கோளரிமுழக்கங்காட்டி. (உகூ)

இங்கிதநெடுங்கோதண்டமிடங்கையிலெடுத்துநார
சிங்கவெங்கணைதொட்டாகந்திருகமுன்னிடத்தாள்செல்ல
வங்குலியிரண்டாலையன்செவியுறவலித்துவிட்டான்
மங்குலின்முழங்கும்வேழமத்தகங்கிழிந்ததன்றே. (௩௦)

கொண்டலினலறிச்சீறிவீழ்ந்ததுகொடியவேழம்
பிண்டதுபாருஞ்சேடன்சென்னியுப்பிளந்ததண்டம்
விண்டதுபோலுமென்னத்துண்ணெனவெருவிப்போன
பண்டையதருக்கும்வீறும்படைத்தனதிசைமால்யானை. (௩௧)

புதைபடக்கரித்தோல்போர்த்தபுண்ணியமூர்த்திதாளா
லுதைபடக்கிடந்தகூற்றமொத்ததுமத்தயானை
சுதைபடுமதிக்கோவேந்தன்றொழுகுலச்சிறுவனைத்தான்
பதைபடுமமணர்காலபடரெனப்படரிற்பட்டார். (௩௨)

இருள்கிடந்தனையதானையிட்டசிந்துரங்கார்மாலை
யிருண்முகத்தொதுங்கிச்செல்லுமிரவிசெங்கிரணம்போன்ற
திருண்முழுதுண்ணக்காலையெழுகதிர்வட்டமன்ன
திருளினைமறைத்தகண்டனெய்தவாய்ப்பெய்யுஞ்செந்நீர். (௩௩)

(உஅ) உலகளந்த என்றது - உலகமுற்றுந் தங்கீழ்ப்படுத்தின மையை. (உகூ) கூவிளிச்சேய்த்து-கூப்பிடுதூரத்தது. வெஞ்சினக் கோல் - கொடுங்கோல். தாக்கி என்றது - குணத்தொனிசெய்த மையை. கோள்-வலிமை.

(௩௦) முன்னிடத்தாள்செல்ல என்றது - விற்றொடுத் தம்பினை யெய்வார்க்குரிய பைசாசம், மண்டலம், ஆலீடம், பிரத்தியாலீடம் என்னும் நால்வகை நிலைகளுள், ஆலீடநிலையை. அதாவது - வலக் கால்மண்டலித்து இடக்கால் முந்துறநிற்றல்.

(௩௨) சுதை-அமுதம். தொழுகுலச்சிறுவன் - மார்க்கண்டன். படர்-துன்பம்; ஓரிடத்து நில்லாது படர்ந்து செல்வது.

பொய்யருமனத்தார்தேற்றும்புன்னெறியொழுக்கம்பூண்ட
வெய்யகோன்கொடுங்கோறன்னைவெண்மருப்பாகத்தாங்கி
மையன்மாவடிவங்கொண்டுவந்தவெங்கலியைத்தென்னன்
செய்யகோலையன்சிங்கவாளியாய்ச்சிதைத்ததன்றே. (௩௪)

உருமுவீழ்ப்புண்டகுன்றினும்பன்மாவம்புதொட்ட
பெருமுழைவாயும்வாயும்பெருகினவருவிச்சோரி
கருமுகின்மானச்சேனங்கழுதுகள்பூதமொய்த்த
திருமணித்தடங்கோள்வீங்கத்தென்னவனுவகைபூத்தான். (௩௫)

ஆனையின்புண்ணீருண்ணவடுத்தகாருடற்பேயென்னச்
சேனைபின்செல்லப்போந்ததிணியிருளமணர்தம்மை
மீனவன்கண்டுசீறவேந்தவன்குறிப்பினிற்கு
மானவெஞ்சினவேன்மன்னர்வல்லைபோய்முடுக்கலுற்றார். (௩௬)

எடுத்தனர்கையிற்றண்டமெறிந்தனர்மறிந்துசூழ்போய்த்
தடுத்தனர்கரகந்துளாத்தகர்த்தனர்பீலியோடுந்
தொடுத்தனருடுத்தபாயைத்துணிபடக்கிழித்துக்கால்வாய்
விடுத்தனர்மானம்போக்கிவிட்டனர்சில்லோர்தம்மை. (௩௭)

எறியுண்டுசெய்தமாயமிழப்புண்டுசேனையோடு
முறியுண்டுநெடுக்கம்பாவமூழ்குண்டுமாழ்கிச்சாம்பிப்
பறியுண்டதலையர்யாரும்பழிப்புண்டுபோயுந்தாமு
முறியுண்டகரகத்தோடுமொதுங்குண்டுபதுங்கிப்போனார். (௩௮)

மாதங்கந்தடிந்தட்டாலைமண்டபத்திருந்தவீரன்
பாதங்கள்கையாற்பற்றிப்பாண்டியனிரந்துவேண்டிப்
போதங்கள்கடந்தாயென்றும்பொலியவிங்கிருத்தியென்ன
வேதங்கட்கருத்தஞ்சொன்னவேதியனதற்குநேர்ந்தான். (௩௯)

பின்னுஞ்சில்வரங்கணல்கப்பெற்றுநான்மாடக்கூடன்
மன்னுஞ்சின்மயனைவந்துவந்தித்துவருநாட்காம
னென்னுஞ்சின்மலர்பூத்தண்டாரிராசசேகரனைப்பெற்று
மின்னுஞ்சில்லியந்தேர்வேந்தன்மேதினிபுரக்குமன்னே. (௪0)

---

(௩௪) வெய்யகோன் - சோழன். மையல்மா-மதமயக்கத்தையுடையயானை. (௩௫) முழை-மலைக்குகை.

(௩௭) கரகம்-கமண்டலம். துணி - துண்டம்.

(௪0) சின்மயன் - ஞானமே திருமேனியாகவுடைய சோமசுந்தரக்கடவுள். சில்லி - தேருருள்.

வம்புளாய்மலர்ந்தவாரான்வரவிடுமெத்தக்குன்றிற்
சிம்புளாய்வடிவங்கொண்டசேவகனேவல்செய்த
வம்புளாய்த்தூணம்விள்ளவன்றவதரித்தவாபோற்
செம்புளாய்க்கொடியநாரசிங்கமாயிருந்ததன்றே. (சுக)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

உலகெலா மழித்துமீள வுண்டாக்கு முருத்திரன் வீரசத்தியி னிற், சிலதரித்திறவா வவுணன்மார்பிடந்த சிங்க நாயகனையுங் கெய்தி, யலகின்மா தவஞ்செய் துரோமசன்றன்பே றறியவோர் தீர்த்தமுண்டாக்கி, யிலகுபே றடைந்தான் பிரகலாதனு நோற்றீறிலாப் பெருவரமடைந்தான். (சுஉ)

யானையெய்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ருக - க்கு - திருவிருத்தம் - கசஉஎ.

---

## இருபத்துமூன்றாவது,

## விருத்தகுமாரபாலரான படலம்.

கலிநிலைத்துறை.

தழையுலாங்கையரேவியதந்திமேல்விடைமே
லழகர்சேவகஞ்செய்தவாறறைந்தனமவரே
கிழவனுகிப்பின்காளையாய்க்கிஞ்சுகச்செவ்வாய்க்
குழவியாய்விளையாடியகொள்கையைப்பகர்வாம். (க)

தென்னன்விக்கிரமன்புயத்திருநிலச்செல்வி
மன்னிவாழுநாண்மதுரையின்மறையவனொருவ
னன்னவன்விருபாக்கனுமவன்குடிவாழ்க்கை
மின்னனாள்வடமீனனாள்பெயர்சுபவிரதை. (உ)

அனையர்தங்களுக்கரும்பெறன்மகவின்றியனந்த
புனிதநல்லறஞ்செய்தொழிலொழுக்கமும்பூண்டு

(சுக) வம்பு - மணம். மத்தக்குன்று - மதமயக்கத்தை யுடைய மலைபோன்றயானை. சிம்புள்-சரபம். விள்ள-பிளக்க. செம்புள் ஆய்-பருந்துகள்பின்தொடர்ந்துஆராயும்.அல்லது செம்புளாய்க்கொடிய கருடக்கொடியையுடைய. (சுஉ) வீரசத்தி-அருட்சத்தி.

(க) தழை - மயிற்றோகை. தந்தி - யானை.

(உ) விருபாக்கன் - மேல் நோக்கிய திருக்கண்ணை யுடையவனென்னுங் காரணம் பற்றிச்சிவபெருமானுக் கமைந்ததோர்பெயர்; ஈண்டு அந்தணனுக்கு இடுகுறியாய் அமைந்துநின்றது.

(ங) புனிதநல்லறம் என்றது - சிவபுண்ணியங்களை.

நனையவார்குழலன்னையரெழுவர்பானண்ணி
யினியமாதவஞ்செய்தொருபெண்மகவீன்ருர். (ங)

பேருங்கௌரியென்றழைத்தனர்பிராயமோரைந்திற்
சாருங்கௌரியும்பிறவிநோய்தணிப்பதற்குறுதி
தேருஞ்சிந்தையாடந்தையைவணங்கியிச்சென்ன
மீருந்தெய்வதமந்திரமியாதெனவினவ. (ச)

அந்தணனுமதிசயித்தரும்பெறன்மகட்குச்
சிந்தையார்வமோடிறைவிதன்மனுவினைச்செப்பத்
தந்தைபாலதுதெளிந்துநாத்தழும்புறப்பயின்ருண்
முந்தைநாளருந்தவக்குறைமுடித்திடவந்தாள். (ரு)

தாதைதன்றவக்கொழுந்தினுக்கிசையமாசைவ
மாதவத்தனுயாதியாச்சிரமத்தில்வழங்கும்
வேதவித்துமாய்மரபினுன்மேம்படுவானைப்
போதுபோதுமென்றுளத்தொடுபுகன்றுகொண்டிருந்தான். (சு)

பருவநாலிரண்டாகமேற்கடிமணப்பருவம்
வருவதாகவங்கொருபகல்வைணவப்படிவப்
பிரமசாரியாய்க்கடைதொறும்பிச்சைபுக்குண்பா
னொருவன்வந்தனன்பலிக்கவணயற்புலத்துள்ளான். (எ)

பிச்சைவேண்டினனவற்குத்தன்பெண்ணினைக்கொடுப்பா
னிச்சைகூர்ந்தருந்தவத்தினல்வருந்தியீன்றெடுத்த
விச்சைவேதியன்மனையொடுசுற்றமும்வினவா
தச்சமின்றிநீரெடுத்தவனங்கையிற்பெய்தான். (அ)

கலிக்குநூபுரச்சீறடிக்கன்னிதன்விதியும்
பலிக்குவந்தவனல்வினைப்பகுதியுந்துரப்ப
வொலிக்குமந்திரச்சிரகநீரொழுக்கினுன்முந்திச்
சலிக்குமன்னையுந்தமர்களுங்கேட்டுளந்தளர்வார். (கூ)

---

(ங) அன்னையர் எழுவராவார் - அபிராமி, மகேஸ்வரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி.

(ச) உறுதி-இது தொழிலாகு பெயராய்ப்பயன்மேல் நிற்றலால்திருவருட்பயன் என்பதுபொருள். (ரு) தெளிந்து - சிந்தித்து.

(சு) மாசைவன் - வைதிகப் பிராமணருட் சிவ தீட்சை பெற்றவன். ஆதியாச்சிரமம் - பிரமசரியம். மரபுஎன்றது-கோத்திரசூத்திரங்களை.

(எ) பருவம்-வயது. (கூ) சீறடி-சிற்றடி. துரப்ப-செலுத்த.

குலனுமோர்கிலன்கோத்திரமோர்கிலன்குடிமை
நலனுமோர்கிலனொழுக்கமுங்கல்வியுநண்ணுந்
தலனுமோர்கிலன்கன்னியைத்தத்தஞ்செய்தானெனப்
புலனுமோர்ந்தவன்விதிவழிமதியெனப்புலந்தார். (கo)

மற்றவன்குடிகோத்திரஞ்சூத்திரமற்று
முற்றறிந்துநம்மரபினுக்கொக்குமான்மாயோன்
சொற்றதந்திரவயிணவத்தொடக்குண்டுதிரியுங்
குற்றமொன்றினிமறுப்பதென்கொடுப்பதென்றிசைந்தார். (கக)

தாயுமொக்கலுமொத்தபின்றாதையும்வேதத்
தாயுமெண்மனத்தாதியாமறநிலையாற்றாற்
றேயுநுண்ணிடைக்கன்னியைச்செம்பொனாற்புதைத்துக்
காயுமாரழன்முன்னரக்காளைக்கொடுத்தான். (கஉ)

தெய்வமங்கலவரிசைகள்செய்துதான்பயந்த
மௌவலங்குழற்கன்னியைமணமகனோடுங்
கௌவையம்புனல்வேலிசூழ்கடிநகர்விடுத்தான்
சைவமங்கலவேதியத்தாபதனிப்பால். (கங)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

இல்லார்க்குக்கிழியீடு நேர்பட்டாலெனப்பல்லாரில்லந்தோறுஞ், செல்லாநின் றிரந்துண்டு திரிந்தமகன் மணமகளுய்ச்செல்வநல்க, வல்லாளை மணந்துவரு வான்போற்றம்மனைபுகுதவன்கட்சீலப், பொல்லாருய் வைணவத்துப் புக்கொழுகுதாய்தந்தை பொருர்களாகி. (கச)

(கo) புலன் என்றது அதனாலுணரும்நூல்களின்மேனின்றது.

(கக) மாயோன் சொற்றதந்திரம்-திருமால் கூறிய பஞ்சராத்திராகமம். ஐந்துராத்திரியிற்செய்யப்பட்டதாதலினப் பெயர்வந்தது. சூத்திரமாவது - பேதாயனம், ஆபஸ்தம்பம், ஆஸ்வலாயனம், திராகியாயனம், சத்தியாஷாடம் முதலியன.

(கஉ) எண்மணத்து ஆதியென்றது-பிரமவிவாகத்தை, அதாவது பிரமசாரிக்குக் கன்னியைத் தீமுன்னர்க்கொடுப்பது. எண்மணமாவன-பிரமம், பிராசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம் என்பன. (கங)மௌவல்-வன்மல்லிகை. கௌவை - ஒலி. புனல்வேலி-வயல். கடி-காவல்.

(கச) கிழியீடு-பொன் முடிப்பு. செல்வம் நல்கவல்லாள்-இலக்குமி. வன்கண்-கொடுமை.

வந்தமணவாட்டிசிவ சிந்தனையுஞ்சைவதய வடிவுநோக்கி, வெந்தவுடல்போன்மனமும் வெந்தவளை வேறொதுக்கிவேண்டாராகி, நிந்தனைசெய் தொழுகுவாரவளையொருநாணீத்துநீங்கிவேற்றூர்த், தந்தமர்மங் கலங்காண்பான் றனியேவைத் தகம்பூட்டித் தாங்கள் போனார். (கரு)

உண்மாசு கழுவுவது நீறென்றே யுபநிடத முரைப்பக்கேட்டு, மண்மாசு படப்பூசும் வடிவுடையாரகன்றதற்பின்மனையில்வைகும், பெண்மாசு கழியவொருசிவனடியார்தமைக்காணப்பெருமலின்றென், கண்மாசு படுவதெனக் கனிந்தொழுகு தலையன்பாற்கவலைகூர்வாள். (கசு)

சிவனடியார்க்கன்பிலாச்சிந்தையேயிரும்பேவல்செய்தநாளு, மவனடியார்திறத்தொழுகாவாக்கையே மரஞ்செவிகண் ணுதியைந்தும், பவனடியா ரிடைச்செலுத்தாப்படிவமே பாவைமறைபரவுஞ் சைவ, தவநெறியல் லாநெறியே பவநெறியென் றளியளாய்த் தளர்வாள் பின்னும். (களை)

எனைத்துயிர்க்கு முறுதியிகபரமென்ப வவைகொடுப்பானெல்லாந்தானு, யனைத்துயிர்க்கு முயிராகு மரனென்பவவனறிவார்க்கங் கம்வாக்கு,மனத்துறுமெய்ப் பத்திவழிவருமென்பவப்பத்திவழி நிற்பார்க்கு, வினைத்துயர்தீர்த் திடவெடுத்த வடிவென்ப தவனடியார் வேடமன்றே. (கஅ)

என்னவிருந் தலமருவா ளிருக்குமிடத் தவளுள்ளத்தெண்ணியாங்கே, தென்னவனுயிருந்தரசு செய்தபிரானவட்க ருளுஞ் செவ்விநோக்கிக், கன்னமுரங் கரஞ்சிரந்தோள் கண்டமுங் கண்டிகை பூண்டு கையிற்றம்போற்,பன்னெடுநாட் பழகியதோர்தனிப் பெரிய புத்தகமும் பக்கஞ்சேர்த்தி. (ககூ)

---

(கரு) வெந்தவுடல் என்றது-வைணவக் கோட்பாட்டின்படி சுடப்பட்ட வுடலினையுடையராதலின். தமர்-சுற்றம்.

(கசு) உண்மாசு என்றது - மும்மலங்களை. நீறு-அணிந்தோர் வினைகளை நீற்றுவது. தலையன்பு - சிவநேசம்.

(களை) மறைபரவும் சைவதவநெறிஎன்றது-வேதங்களைப்போல முத்திநிலையை சோபானமார்க்கங்களாக மலைவுபடக்கூறாது முற்படக்கூறி அந்நெறியில் நிற்பார்க்கு முத்திதருஞ்சமயம் சைவசமயமேயாதலின். (கஅ) எனைத்துயிர் என்றது - விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னுமூவகையான்மாக்களை, பயன்-உறுதி இகம், இப்பிறப்பு, பரம், மறுபிறப்பு. மெய்ப்பத்தி-சிவபத்தி.

(ககூ) அலமரல் - வருந்தல்.

கரிந்தநீள் கயன்முள்ளி னரையுழுது திரைகவுளுந கனைக்கு நெஞ்சுஞ், சரிந்தகோ வணவுடையுந் தலைப் பனிப்ப முத்தரியந் தாங்குந்தோளும், புரிந்தநூல் கிடந்தலையும் புண்ணியநீ றணிமார்பும் பொலியநீழல், விரிந்ததோர் தனிக்குடையுந் தண்டேந்திக் கவிழ்ந்தசையு மெய்யுந்தாங்கி. (உ0)

ஒருத்தரா யுண்டிபல பகல்கழிந்த பசியினர்போ லுயங்கிவாடி, விருத்தவே தியராய்வந் தகம்புகுதக் கண்டெழுந்து மீதூரன்பின், கருத்தளாய்த் தவிசிருத்திக் கைதொழுது சிவனையிங்குக் காணவென்ன, வருத்தமா தவமுடையே னெனமுனிவர் பசித்துன்பால் வந்தேமென்றார். (உக)

இற்பூட்டிப் போயினரெமரங்க ளெனக்கௌரி யியம்பமேரு, விற்பூட்டிப் புரம்பொடித்த வேதியர்நின் கைதொட்டு விடுமென்யாத்த, கொற்பூட்டு விடுந்திறந்து கடிதடிசில் சமைத்தியெனக் குமரிதாளி, லற்பூட்டு மடவரலு மவ்வாறே யட்டில் புகுந்தடிசிலாக்கி. ()

தையன்மா தவக்கொழுந்து புறம்போந்து சிரகநீர் தளிர்க்கைதாங்கி, யையனே யமுதுசெய வெழுந்தருளுமென வெழுந்தவடிகள்பாதச், செய்யதா மரைவிளக்கி யந்நீர்தன் சென்னியின்மேற்றெளித்துப்பாச, மையன்மா சிருள்கழுவி யகம்புகுவித் தாசனமேல் வைத்துப்பின்னர். (உங)

நகைமலரிட் டருச்சித்து நல்லபரி கலந்திருத்தி நறுவீமுல்லை, முகையனைய பாலடிசில் வெள்ளிமலை யெனப்பருப்பு முதுகிற்செம்பொற், சிகரமெனப் பல்வேறு கருனைபுறந் தழீஇக்கிடந்த சிறுகுன்றிட்ட, வகையென நெய் யருவியெனப் படைத்தனைய சிற்றுண்டி வகையும்பெய்து. (உச)

செய்யவா யிடையிடையே முகமனுரை யின்னமுது செவியிலூட்டத், தையலாள் வளைக்கையறு சுவையமுது வாயூட்டத் தளர்

---

(உ0) கவுள்-கபோலம். பனிப்பு-நடுக்கம்.

(உக) உயங்கல்-மயங்கல். தவிசு-ஆசனம்.

(உஉ) கொல் என்னுஞ் சாதிப்பண்பு கொல்லன்மேல் நிற்றலால் பண்பாகுபெயர். அல்லது-ஈறுதொக்க தெனினுமமையும்.

(உச) பரிகலம்-உண்கலம். திருத்தி-புநிதப்படுத்தி. இதுமங்கலவழக்கு. கருனை-பொரிக்கறி. (உரு) முகமன்-உபசாரம். அமுது-தேவாமிர்தம். பூ வில் என்றது—மன்மதன் தேவர்கள்மேல் தனது பாணங்களை யெய்யும்வில், மலர்வில்லாதலின்.

தயாக்கை, யையர்தாந் திருவமுது செய்தமு துண்டவரெனமூப் ப கன்றுபூவிற், கையதே மலர்வாளிக் காளைவடிவா யிருந்தார் கன்னி காண. (உரு)

பூசியவெண் ணீறுபோய்க் கலவையாய்க் கண்டிகைபோய்ப் பொன்செய்பூணுங், காசணிபொற் குண்டலமுங் கடகமுமாய் மூப் புப்போய்க் காளையான, தேசுருவங்கண்டு நடுநடுங்கி வளைக் கரநெ ரித்துத் திகைத்து வேர்த்துக், கூசியொரு புறத்தொதுங்கி நின்று ளக்கற்புமலர்க் கொம்பரன்னாள். (உகூ)

ஆனபொழு தருங்கடிநன் மணங்குறித்து மனையிற்றீர்ந் தய லூர்புக்க, தேனுழுகு துழாயலங்கற் றீர்த்தனுக்கன் புடையார் போற் றிரியும்வஞ்ச, மானமுடை யார்மீண்டு மனைபுகலும் பதினு று வயதின்மேய, பானன்மணி கண்டனுதற் காப்பணிந்தோர் பசு ங்குழவிப் படிவங்கொண்டான். (உஎ)

எழுதரிய மறைச்சிலம்பு கிடந்துபுறத் தலம்பவன்ப ரிதயமெ ன்னுஞ், செழுமலரோ டையின்மலர்ந்து சிவானந்தத் தேன்றதும் பு தெய்வக்கஞ்சத், தொழுதகுசிற் றடிப்பெரிய விரல் சுவைத்து மைக்கணீர் துளும்பவாய்விட், டழுதணையா டையிற்கிடந்தா ன னைத்துயிரு மீன்றுகாத் தழிக்குமப்பன். (உஅ)

தாய்விட்டுப் போனதொரு தனிக்குழவி யெனக்கலங்கித் தா ங்கித்தேடி, யாய்விட்டுப் பிரமனழ மறைகளழ வன்புடையா ளன் பிற்பட்டு, வாய்விட்டுக் கிடந்தழுத மகவினைக்கண் டனங்கனையா ண் மாமியென்னுங், காய்விட்டு மதக்கொடியா ளிம்மகவே தெனக் கேட்டாள் கௌரிதன்னை. (உகூ)

நத்தனயன் றனக்கரிய நாயகனுக் கன்புடையாணவில்வாடே வ, தத்தனயந் தருமனைவி யொடுபோந்து சிறுபோது தையலாயீ ண், டித்தனயன் றனைப்பார்த்துக் கோடியென வைத்தகன்று னெ ன்னுமுன்னனஞ், சித்தநய னங்கலங்கச் சீறிமண வாட்டிதன்மேற் செற்றங் கொண்டாள். (௩0)

என்புபூண் டிகொட்டிற் பொடியாடு முருத்திரனுக் கிடைய ருத, வன்புபூண் டான்மகவுக் கன்புடையாய் நீயுமெமக் காகாயெ ன்று, துன்புபூண் டயர்வாளை மகவையுங்கொண் டகத்தைவிடத் துரத்தினர்கள், வன்புபூண் டொழுகுவை ணவம்பூண்டு பொறை யிரக்க மானநீத்தார். (௩க)

---

(உஎ) பானல்-நீலோற்பலம். அலம்ப-ஒலிக்க.
(உகூ) விட்டுமதம்—வைணவமதம் விட்டு-இது ஆசிரியச் சிதைவு.
(௩0) நத்தன்-சங்கினையுடையவன். நந்து-சங்கு.

தாயிலாப் பிள்ளைமுகந் தனைநோக்கித் தெருவினிடைத் தள ர்வாளுள்ளங், கோயிலாக் கொண்டுறையுங் கூடலு யகனைமனக் கு றிப்பிற்கண்டு, வேயிலாக் கியதடந்தோட் கௌரிதிரு மந்திரத்தை விளம்பலோடுஞ், சேயிலாக் கிடந்தழுத குழவிவிசும் பிடைவிடை மேற் றெரியக்கண்டாள். (௩௨)

மழவுருநீத் தடலேற்றின் வருவார்தம் மிடத்தணங்கின் மனு வையோதிப்,பழகியபார்ப் பனமகளைப் பார்ப்பதியின் வடிவாக்கிப் பலருங்கண்டு, தொழவிடைமே லேற்றிவிசும் பாருகமலர்மாரிசுரர் கடேற்ற, வழகரெழுந் தருளினார் களிதூங்கி யதிசயித்தா ரவனி மாக்கள். (௩௩)

விருத்தகுமாரபாலரானபடலம் முற்றிற்று.

ஆ படலம் - ௩௨ - க்கு - திருவிருத்தம் - கசசுo.

---

இருபத்துநான்காவது,

## கான்மாறியாடினபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருத்தராய்மதுராபுரிமேவியசித்தராகியசெல்வர்
விருத்தராயிளையவருமாய்மழவுமாய்வேடங்கொண்டடலேற்றி
னெருத்தராய்விளையாடியவாடலையுரைத்தனமினிமன்று
ணிருத்தராயவர்மாறிநின்றாடியநிலைசிறிதுரைசெய்வாம். (க)

வேந்தன்மீனவன்கொடியவனுகியவிக்கிரமன்றன்றே
ளேந்துமண்பொறையிராசசேகரன்புயத்திறக்கியைந்தருநாடன்
பூந்தண்மாமலர்வேதியன்மாதவன் புரத்தின்மேற் பொலிந்தோங்கு
சாந்தநீறெனச்சண்ணித்தபுண்ணியத்தனிமுதனகர்சார்ந்தான். [ஞ்

---

(௩௨) சேய் இல் - தூரம் இல்லாத. எனவே சமீபத்தில் எ ன்பது பொருள்.

(உ) மீனம் வன்கொடியவன் - மீனமாகிய வலியகொடியையு டையவன். மாமலர்—இலக்குமிவசிக்குந் தாமரைமலர். வேதியன்- பிரமன். சண்ணித்தல்-பூசல்.

கண்ணகன்புவியிராசசேகரன்பொதுக்கடிந்துசெங்கோலோச்சி
வண்ணவெண்குடைநிழற்றுவானனந்தவடிவமாய்த்தனிமன்று
ளண்ணலாடியதிருநடத்தன்பினலாடனூலொழித்தேனை
யெண்ணுமூவிருபத்துமூக்கலையுங்கற்றிறைமுறைசெயுநாளில். ()

சிலம்பிவாயினூலிழைத்திடுபந்தரிற்செங்கண்மாவெருழவைகு
மலம்புதெண்டிரைப்பொன்னியந் தண்டுறையானைக்காவிறைக்கன்
கலந்தசிந்தையான்மூவிருபத்துநாற்கலைகளும்பயின்றுள்ள [பு
மலர்ந்தவன்கரிகாற்பெருவளத்தவன்வையகம்புரக்கின்றான். (ச)

பொன்னிநாடவன்வாயிலுள்ளானொருபுலவன்வந்தலர்வேம்பின்
கன்னிநாடனைக்கண்டுமுன்பரவுவான்கனைகழற்கரிகாலெம்
மன்னவற்கறுபத்துநாற்கலைகளும்வரும்வராதுனக்கொன்று
தென்னரேறனையாயதுபரதநூறெறிந்திலையெனச்சொன்னான். (ரு)

கேட்டமீனவன்மறுபுலவிஞ்சையன்கிளத்துசொல்லிகன்மான
மூட்டவாகுலமூழ்கியமனத்தனுய்முதுமறைச்சிரமன்று
ளாட்டமூன்றுடைநாயகனுடலைநானுமாடுதற்குள்ளம்
வேட்டதேகொலாமிதுவுமெம்பிரானருள்விதியெனவதுகற்பான்.

## எழுசீரடியாசிரியவிருத்தம்.

ஆடனூல்வரம்பு கண்டவராகி யவ்வழியாடலும் பயின்ற, நாடக நடைதேர் புலவரைத்துருவி நண்ணியவவர்க்கெலா மகிழ்ச்சி, வீடருஞ்சிறப்பா லறுவையும்பூணும் வெறுக்கையும் வெறுத்திடக் கொடுத்துப், பாடல்வண்டரற்றுந் தாரினன் பரதப்பனுவலுங் கசடறப் பயில்வான். (எ)

பாவமோடராகந்தாளமிம்மூன்றும்பகர்ந்திடுமுறையினற்பரத
மாவையினங்கமுபாங்கமேபிரத்தியாங்கமேயலர்முகராக
மோவறுசீர்சால்கரப்பிரசாரமுவமையில்சிரக்கரகருமந்
தாவறுகரகேத்திரங்கரகரணந்தானகமேசுத்தசாரி. (அ)

விண்டிடாத்தேசிசாரியேநியாயம்விருத்தியேபிரவிசாரம்பூ
மண்டலமுடனுகாசமண்டலமேமாசில்சுத்தக்கரணஞ்சீர்

---

(ச) கரிகாற்பெருவளத்தவன்-உறையூரிலிருந்தரசுபுரிந்த சோழன். இவனுக்கு இப்பெயர், ஓர்முநிவர் வாக்கின்படி இவனது தாயார் இவன்காலில் கரிக்கோடிட்ட காரணம்பற்றிவந்தது-இதனைச் செவ்வந்திபுராணத்திற்காண்க. வளவன் என்னுஞ்சொல், வளத்தவனெனவந்தது. வளமையையுடையானென்பதுபொருள்.

(சு) விஞ்சையன்-கவிஞன். ஆகுலம்-துன்பம். (எ) ஆடல்நூல் பரதநூல். அறுவை-ஆடை. (அ) பாவம் என்பது-மெய்ம்மயிர் சிலிர்த்தன்முதலிய பத்துச்சத்துவங்களில்ஒன்று. அது-வெகுண்டோனவிநயமுதலிய இருபத்து நான்குவகைத்தாய் நிற்கும்.

கண்டவுற்புலிதகரணமேயங்ககாரமேயிரேசிதமென்னக்
கொண்டநாலைந்துபேதமுங்கற்றுக்கோதறப்பயின்றபினவற்றுள்.
வருத்தமின்மனோபாவாதியாமெட்டுமகைநிருத்தங்களிற்சாரி
நிருத்தமாகியதாண்டவமகமார்க்கநிகழ்த்திடுந்தேசியேவடுகே
யருத்தமாகியசிங்களமெனமூன்றுமதுநிலையாறுமூவிரண்டு
திருத்தமாம்பதமுந்திகழிரேகாதிசெப்பியவங்கமீரெட்டும். (௧௦)
நால்வகைத்தாகுங்கரணமுமேலோர்நாட்டியவிருவகைக்கரமுங்
கால்வகைபுரிகைமுதற்பதினாறுங்கவான்மனையாதியாமிரண்டு
பாலதுமடிப்புவகையெழுநான்கும்பழிப்பறுசுத்தசாரியெனு
மேலுறுபூசாரிகள்பதினாறுமித்துணைக்ககனசாரிகளும். (௧௧)
எற்றதிக்கிராந்தமாதியாமுப்பத்திருவகைத்தேசிசாரிகளுங்
காற்றினுங்கடுந்தேர்ச்சக்கரமுதலாங்ககனசாரிகைகளேழைந்துஞ்
சாற்றுவித்துவற்பிராந்தமாதியவாஞ்சாரிபத்தொன்பதுமாகப் [கள்
போற்றிவையனைத்துமும்படப்புட்பபுடத்திலக்கணமுதற்பொருள்
ஆசவாத்தியமுன்பொருண்முதற்களாசமாதியாம்பாடபேதங்கள்
பேசியபதினொன்பதும்படகபேதமொன்றொழிந்தநாலைந்து
மாசறுமளகமாதியாம்பாடவகைகளுலேழுமற்றவற்றிற் [யும்.
பூசல்வார்த்திகந்தொட்டைவகைச்சச்ச புடாதியாந் தாளமாத்திரை
இளந்தமாத்திரையின்கதிகளுஞ்சொல்லுங் கீதமும்பாடமு மெழுத்
வளந்தருமணிபந்தாதிகீதத்தின்வகுத்தகட்டளையெழுநான்கு [தும்

---

(௯) நாலைந்துபேதம் என்றது - அங்கமுதல் இரேசித மீறுகக் கூறிய இருபதுபேதங்களாகிய பொதுவிலக்கணங்களை.

(௧௦) அகமார்க்கம்-அகக்கூத்து. அதாவது அகச்சுவை பற்றி நிற்பது. தேசியாவது, கீதத்துக்கு அடிசாரி முதலாகக் காற்சுற்றுத ல், எறிதல்முதலியன. வடுகு ஆவது. கால்களும், உடற்றாக்கு முத லியவுடல்வர்த்தனைகளுமுடையது.சிங்களமாவது-இவ்விரண்டிலக் கணங்களையுமுடையது. இவை-பதாகைமுதலிய கரகரணங்களும், காற்றுச்சுற்றுமுதலிய காற்புரிகைகளு முடைமையால் மெய்த்தொ ழிற்கூத்தெனவும் பெயர்பெறும். ஆறுமூவிரண்டு-பன்னிரண்டு. இ வற்றைவிரிக்கின் பெருகுமாதலின், குணநூல், சயந்தநூல், பெரு நாரை. பெருங்குருகு முதலிய நூல்களுட்காண்க.

(௧௧) இருவகைக்கரம்-எழிற்கை, தொழிற்கை. பாலது-பகுப் பினையுடையது, பால்-பகுதி. அது பகுதிப்பொருள் விகுதி.

(௧௩) பதினொறு ஒன்பதும் - இருபத்தைந்தும். ஒன்றொழிந்த நாலைந்து - பத்தொன்பது.

மளந்திடசரளையாதிகட்டளையேழைந்துநன்கமைந்துபாவாதி
விளம்பியமூன்றுகலப்புமீருகவிளைத்திடுங்கூத்தகமார்க்கம். (க௪)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

உரைத்தவிக்கூத்துக்கற்கும்போதுதன்னுடம்பிற்சால
வருத்தநோயெய்தியிந்தவருத்தநான்மறையுந்தேரு
வருத்தமாயறிவாய்வெள்ளியம்பலத்தாடிநின்ற
நிருத்தனுர்தமக்குமுண்டேயென்பதுநினைவிற்கொண்டான். (கரு)

கரியதாமரைக்கண்ணனுங்கமலநான்முகனுங்காண்டற்
கரியதாளொன்றேநோவவாற்றநாணிற்பதந்தோ
வுரியதாமிதனைக்கற்றுவருத்தமுற்ருேர்ந்துமீது
தெரியநானிருப்பதேயோவறனெனச்சிந்தைநோவான். (கசு)

வடுப்படுபிறவிப்பௌவவரம்புகாண்கின்றநாள்வந்
தடுப்பவர்யாவரேனுமவர்க்கெலாம்போகம்வீடு
கொடுப்பவர்செய்யுமிந்தக்கூத்தையெப்படிநாஞ்சென்று
தடுப்பதுதகாதென்றேனும்வருந்துமேசரணமென்னு. (கஎ)

இதற்கிதுதுனிவென்றுன்னியெழுந்துபோய்ச்சிவனிராவிற்
கதக்களிற்றெருருத்தலேந்துகதிர்மணிக்குடிமிக்கோயின்
மதக்கரியுரியினுற்குவரம்பறச்சிறந்தபூசை
விதப்படயாமநான்கும்விதிவழியியற்றல்செய்யா. (க அ)

விண்டகமலர்த்தாளேத்திவெள்ளியம்பலத்துளன்பர்
தொண்டகமலரநின்றசோதிமெய்ஞ்ஞானக்கூத்தைக்
கண்டகமகிழ்ந்துதாழ்ந்துகட்புனல்சோரச்செங்கை
முண்டகமுடிமேலேற்றிமுகிழ்த்துநின்றிதனைவேண்டும். (ககூ)

நின்றதாளெடுத்துவீசியெடுத்ததாணிலமீதூன்றி
யின்றுநான்காணமாறியாடியென்வருத்தமெல்லாம்

---

(கரு) இக்கூத்து என்றது-அகக் கூத்தினை. அருத்தம்-பொருள்.

(கசு) தெரிய என்றது-தெரிந்து என்னும்வினை யெச்சத்திரிபு.

(க அ) கதம்-கோபம். (ககூ) விண்டகமலர்த்தாள் என்றது, தனது இதயத்தில்மலர்ந்த தாமரைமலர் போன்ற திருவடிகளை. தொண்டகம்-தொண்டுபூண்டமனம். மெய்ஞ்ஞானக்கூத்து என்றது-முத்தியருளும் ஞானநடனத்தை. "ஊனநடன மொருபாலொருபாலாம், ஞானநடந்தா னடுவேநாடு" என்ற திருவருட் பயனுலுமுணர்க.

பொன்றுமாசெய்தியன்றேற்பொன்றுவலென்னுவன்பிற்
குன்றனுன்சுரிகைவாண்மேற்குப்புறவீழ்வேனென்ன. (உ0)

நாட்டினுன்குறித்துப்பாயநண்ணுமுன்னிடத்தாளூன்றி
நீட்டினுன்வலத்தாள்வீசிநிருமலன்மாறியாடிக்
காட்டினுன்கன்னிநாடன்கவலையும்பாசமூன்றும்
வீட்டினுன்பரமானந்தவேலையுள்வீட்டினுனே. (உக)

விளைகள்வாய்வீழ்ந்தவண்டின்மெய்யறிவின்பமென்னு
மளவிலாமுந்நீர்வெள்ளத்தாழ்ந்தவனெழுந்துபின்னு
முளமும்வாசகமுமெய்யுமுடையவனதுவேயாகப்
பளகிலாவன்புதானேபடிவமாய்ப்பழிச்சலுற்றான். (உஉ)

கலி விருத்தம்.

பெரியாய்சரணஞ்சிறியாய்சரணங்
கரியாகியவங்கணனேசரண
மரியாயெளியாயடிமாறிநடம்
புரிவாய்சரணம்புனிதாசரணம். (உங)

நதியாடியசெஞ்சடையாய்நகைவெண்
மதியாய்மதியாதவர்தம்மதியிற்
பதியாய்பதினெண்கணமும்பரவுந்
துதியாய்சரணஞ்சுடரேசரணம். (உச)

பழையாய்புதியாய்சரணம்பணிலக்
குழையாய்சரணங்கொடுவெண்மழுவா
ளுழையாய்சரணம்முருகாதவர்பால்
விழையாய்சரணம்விகிர்தாசரணம். (உரு)

இருளாய்வெளியாய்சரணம்மெனையும்
பொருளாகநினைந்துபுரந்தரன்மா

---

(உ0) பொன்றுவல் - இறப்பேன். சுரிகைவாள் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. சுரிகை - உடைவாள். (உக) பாசம் மூன்றுவன - ஆணவாதி மும்மலங்கள். (உரு) பழையாய், புதியாய் என்றமையை - "முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப்பழம்பொருளே. பின்னைப்புதுமைக்கும் பேர்த்துமப்பெற்றியனே என்னும்" திருவாசகத்தானுணர்க. பணிலம் — சங்கு.

(உசு) இருளாய், வெளியாய் என்றது - ஆன்மா, தான்மாத்திரையாயும், தனுகரணுதிகளோடு கூடியும் நிற்கும் கேவலசகல அவதரங்களில் தானுமவ்வாறு நின்றருளுதலை.

றெருளாதநடந்தெரிவித்தெனையா
ளருளாய்சரணம்மழகாசரணம். (உசு)

அயனத்தனெனப்படுமாடரவச்
சயனத்தவனைத்தருதத்துவநால்
வயனத்தவவானவர்வானவசே
ணயனத்தவனுயகனேசரணம். (உஎ)

கதவெங்கரியின்னுரியாய்சரண
முதலந்தமிலாமுதலேசரணென்
றதிர்பைங்கழனூபுரவண்டலறும்
பதபங்கயமுன்புபணிந்தரசன். (உஅ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

என்றுமிப்படியேயிந்தத்திருநடம்யாருங்காண
நின்றருள்செய்யவேண்டுநிருமலமானவெள்ளி
மன்றவவடியேன்வேண்டும்வரமிதுவென்றுதாழ்ந்தா
னன்றுதொட்டின்றுமெங்கோனந்நடநிலையாய்நின்றான். (உகூ)

கான்மாறியாடினபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௨௨ - க்கு - திருவிருத்தம் - கசஅகூ.

---

இருபத்தைந்தாவது,

## பழியஞ்சினபடலம்.



அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஈறிலான்செழியனன்புக்கெளியவனாகிமன்றுண்
மாறியாடியகூத்தென்சொல்வரம்பினதாமேகங்கை
யாறுசேர்சடையான்றேனோரும்பழியஞ்சித்தென்னன்
றேறலாமனத்தைத்தேற்றுந்திருவிளையாடல்சொல்வாம். (க)

இனையநாட்சிறிதுசெல்லவிராசசேகரன்றன்காதற்
றனையனுங்குலோத்துங்கற்குத்தன்னரசிருக்கைநல்கி

(உஎ) நால்வயனத்தவன் - நான்கு வேதங்களாகிய திருவாக்குகளையுடையவன். வசனம் - வயனம் எனத்திரிந்துநின்றது. சேல்நயனத்தவள் - அங்கயற்கண்ணி.

வினையெலாம்வென் றுஞானவெள்ளியம்பலத்துளாடுங்
கனைகழ னிழலிற்பின்னிக்கலந்துபேரின்பமுற்றான். (உ)

குரவன்செங்கோல்கைக்கொண்டகுலோத்துங்கவழுதிசெங்க
ணரவங்கம்பூண்டகூடலாதிநாயகனைநித்தம்
பரவன்பின்வழிபாடாறுப்பத்திமைநியமம்பூண்டா
னிரவஞ்சுங்க துப்பினல்லாரீரையாயிரவருள்ளான். (ங)

தொச்சகக்கலிப்பா.

அப்பதினுயிரவர்க்குமொவ்வொருத்திக்கவ்வாறு
யொப்பரியவாறுபதினுயிரங்குமரருளரவருட்
செப்பரியவல்லாண்மைச்சிங்கவிளவேறனையான்
வைப்பனையான்முதற்பிறந்தமைந்தன்பேரனந்தகுணன். (ச)

கலைபயின்றுபரிநெடுந்தேர்கரிபயின்றுபலகைவாள்
சிலைபயின்றுவருகுமரர்திறநோக்கிமகிழ்வேந்த
னலைபயின்றகடலாடைநிலமகளையடலணிதோண்
மலைபயின்றுகுளிர்தூங்கமகிழ்வித்துவாழுநாள். (ரு)

செய்யேந்துதிருப்புத்தூர்நின்றுமொருசெழுமறையோன்
பையேந்துமரவல்குன்மனைவியொடும்பானல்வாய்க்
கையேந்துகுழவியொடுங்கடம்புகுந்துமாதுலன்பான்
மையேந்துபொழின்மதுரைநகர்நோக்கிவருகின்றான். (சு)

வருவானுண்ணீர்வேட்டுவருவாளைவழிநிற்கும்
பெருவானந்தடவுமொருபேராலினீழலின்கீ
ழொருவாதபசுங்குழவியுடனிருத்திநீர்தேடித்
தருவான்போய்மீண்டுமனையிருக்குமிடந்தலைப்படுமுன். (எ)

இலைத்தலையபழுமரத்தின்மிசைமுன்னுளெய்ததொரு
கொலைத்தலையகூர்வாளிகோப்புண்டுகிடந்ததுகா
லலைத்தலையவீழ்ந்தும்மைவினையுலப்பவாங்கிருந்த
வலைத்தலையமாதேக்கிவயிறுருவத்தைத்தன்றால். (அ)

அவ்வாறவ்வணங்கனையாளுயிரிழந்தாளவ்வேலைச்
செவ்வாளியேறிட்டசிலையுடையானொருவேடன்

---

(ங) குரவன்-பிதா. ஆறு - ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம் நியமம் - கடன். கதுப்பு - கூந்தல். (சு) செய்-வயல்-பை-படம். பால்நல்வாய்-பால்மணங்கமழும்நல்லவாய். கடம்-காடு. மாதுலன்-மாமன். மை-மேகம். (அ) பழுமரம்-ஆலமரம். கோப்புண்டு-சிக்கிக்கொண்டு. உம்மை-முற்பிறப்பு.

வெவ்வாளியேறனையான்வெயிற்கொதுங்குநிழறேடி
யவ்வாலநிழலெய்தியயனின்றானிளைப்பாற. (௯)

தண்ணீர்க்குப்போவாயாவிதலைப்பட்டமறையவனு
முண்ணீர்கைக்கொண்டுமீண்டொருங்கிருந்தகுழவியொடும்
புண்ணீர்வெள்ளத்துக்காறூழ்ந்துயிரைப்புறங்கொடுத்த
பண்ணீரமழலைமொழிப்பார்ப்பனியைக்கண்ணுற்றான். (௧௦)

அயில்போலுங்கணையேறுண்டவ்வழிபுண்ணீர்சோர
மயில்போலவுயிர்போகிக்கிடக்கின்றாண்மருங்கணைந்தென்
னுயிர்போல்வாயுனக்கிதுவென்னுற்றதெனமத்தெறிதண்
டயிர்போலக்கலங்கியறிவழிந்துமணஞ்சாம்பினான். (௧௧)

இணையதோர்பெண்பழியையாரேற்றாரெனத்தேர்வா
னனையதோர்பழுமரத்தின்புறத்தொருசாரழல்காலு
முனையதோர்கணையோடுமுடக்கியகைச்சிலையேந்தி
வினையதோர்ந்தெதிர்நின்றவிறல்வேடன்றனைக்கண்டான். (௧௨)

கலிநிலைத்துறை.

காப்பணிதாளன்வாளொடுவீக்கியகச்சாளன்
கூர்ப்பகழிக்கோலேறிடுவில்லன்கொலைசெய்வா
னேற்பனகைக்கொண்டிவ்விடைநின்றானிவனேயென்
பார்ப்பனியைக்கொன்றின்னுயிருண்டுபழிபூண்டான். (௧௩)

என்னமதித்தேயேடாவேடாவென்னேழை
தன்னைவதைத்தாய்நீயேயென்னாத்தழல்கால்கண்
மின்னலெயிற்றுக்கூற்றெனவல்வாய்விட்டார்த்து
மன்னவனுணைப்பாசமெறிந்துவலித்தேகும். (௧௪)

மாண்டவளைத்தன்வெந்நிடையிட்டான்மகவொக்கற்
றாண்டவணைத்தான்றாய்முலைவேட்டழுதன்சேயைக்

---

(௯) ஆளி ஏறு-ஆண்சிங்கம். (௧௦) ஆவி-நீரோடை. கால்-கால்வாய். புறங்கொடுத்த-இழந்த.

(௧௧) அவ்வழிஎன்றது - அம்புதைத்தவாயினை. சாம்பல்-ஒடுங்கல். (௧௨) வினை அது ஓர்ந்து - மிருகங்களைக் கொல்லுந்தொழிலை ஆராய்ந்து. விறல்-வெற்றி. (௧௩) காப்பு-தொடுதோல். கச்சாளன்-கச்சையை யுடையவன். பகழி-அம்பு. (௧௫) வெந்-முதுகு ஒக்கல்-இடைப்பக்கம். தாண்ட-பொருந்த. அளியன் - கிருபையையுடையவன். இது ஈண்டு அந்தணன்மேல் நின்றது.

காண்டொறும்விம்மாக்கண்புனல்சோரக்கடிதேகா
வாண்டகைமாறன்கூடலணைந்தானளியன்றான். (கரு)
மட்டவிழ்தாரான்வாயின்மருங்கேவந்தெய்தா
வுட்டுகளில்லாவேடனைமுன்விட்டுயிரன்னாள்
சட்டகநேரேவிட்டெதிர்மாறன்றமர்கேட்பக்
கட்டழல்சிந்தாமுறையிடுகின்றான்கையோச்சா. (கசு)
கோமுறைகோடாக்கொற்றவரேறேமுறையேயோ
தாமரையாள்வாழ்தண்கடிமார்பாமுறையேயோ
மாமதிவானோன்வழிவருமைந்தாமுறையேயோ
தீமைசெய்தாய்போற்செங்கைகுறைத்தாய்முறையேயோ. (கஎ)
பிறங்குங்கோலான்மாறடுகொற்றம்பெறுவேந்த
னுறங்கும்போதுந்தன்னருளாணையுலகெங்கு
மறங்குன்றுவாக்காப்பதையென்பஃதியாதிம்
மறங்குன்றுதான்செய்கொலைகாவாவழியென்றான். (கஅ)

(கசு) துகள் - குற்றம். சட்டகம்-தேகம். (கஎ) கோமுறை - மநுநூன்முறை. தீமைசெய்தாய் போற்செங்கைகுறைத்தாய் என்றது-ஓர்பாண்டியன் நகர்சோதனை வருகையில் மறையவர்வீதியில் ஒருவீட்டிலொரு அந்தணன், தன்மனைவியோடு நான் காசிக்குப் போய்வருகிறேன் அதுவரையில் உன்னையும் உனதுகற்பையும் பாண்டியன் செங்கோல் பாதுகாக்குமென்றுசொல்லிய வார்த்தையை அப்பாண்டியன்கேட்டு, அன்றுமுதல் இராமுழுதும் அம்மனையின் புறத்தேகாவல் செய்துவருகையில், ஒருநாள் அவ்வீட்டில் வேற்றரவ முண்டாகக்கண்டு, அதனைச்சோதிக்கவேண்டி அவ்வீட்டின்கதவைத்தட்டினன். அப்போது காசியாத்திரைமுடித்து வீடுசேர்ந்த அந்தணன், யாரென்றுகேட்க, அக்குரலோசையால் வீட்டுக்குரிய அந்தணன்தா னென்றறிந்து அவ்வந்தணனுக்குச் சந்தேகத்தைவிளைத்தோமே என்கிற அச்சத்தோடு, அச்சந்தேகமொழிய எல்லாவீட்டுக் கதவுகளையுந்தட்டிக்கொண்டே யரண்மனைசேர்ந்தனன். மறுநாட்காலையில் மறையவர் யாவருமொன்றுசேர்ந்து இவ்வதிசயத்தை அரசனுக்கறிவிக்க, அதுகேட்டபாண்டியன் உங்கட்கொருசேரத்தீமைசெய்தது என்கையேயென் றதனைத்தறித்தனன். உடனே சோமசுந்தரக்கடவுள் பிரத்தியட்சமாய் அப்பாண்டியனுக்குப்பொற்கையளித் தருளினரென்னுஞ் சரித்திரத்தினை. இதனைக், "கொற்கையான்மாறன் குலசேகரப்பெருமான் பொற்கையனுனகதை போதாதோ" என்னுஞ்செய்யுளானுமுணர்க.

(கஅ) மாறு - பகை. கொற்றம் - வெற்றி. ஐ - சாரியை.

வாயிலுளார்தமன்னவன்முன்போய்மன்னூநங்
கோயிலின்மாடோர்வேதியன்மாதைக்கொலைசெய்தா
னுயினனென்றேர்வேடனைமுன்விட்டவிந்தாளைத்
தாயினன்வந்திங்கிட்டயர்கின்றான்றமியென்றார். (கசு)

இறைமகனஞ்சாவென்குடைநன்றாலென்காவ
லறமலிசெங்கோலஞ்சுபயந்தீர்த்தரசாளு
முறைமையுநன்றான்மண்கலிமூழ்கமுயன்றேந்தும்
பொறைமையுநன்றாலென்றுபுலந்துபுறம்போந்தான். (உ0)

வேதியனிற்குந்தன்மைதெரிந்தான்மெலிவுற்றான்
சாதியின்மிக்காய்வந்ததுனக்கென்றளர்கின்றா
யோதுதியென்னக்காவலனைப்பார்த்துரைசான்ற
நீதியுளாய்கேளென்றுரைசெய்வானிகழ்செய்தி. (உக)

இன்றிவளைக்கொண்டார்வடநீழலிடையிட்டுச்
சென்றுதணீர்கொண்டியான்வருமுன்னிச்சிலைவேடன்
கொன்றயனின்றானென்றுலையூட்டுங்கொலைவேல்போல்
வன்றிறன்மாறன்செவிநுழைவித்தான்மறையோனால். (உஉ)

அந்தணன்மாற்றந்தன்னையுமுட்கொண்டறநோக்குஞ்
சந்தனவெற்பன்மறவனைநோக்கத்தாழ்ந்தன்னு
னெந்தைபிரானேநாயடியேனின்றெய்ப்பாற
வந்துபுகுந்தேனந்தமரத்தின்மருங்கோர்சார். (உங)

ஐயேநானுங்கொன்றவனல்லேன்கொன்றாரைக்
கையேன்வேறுங்கண்டிலனென்றானிவளாகத்
தெய்யேறுண்டவாறெவனென்றாரெதிர்நின்றார்
மெய்யேயையாயானறியேனிவ்விளைவென்றான். (உச)

---

(கசு) கோயில்-அரசன்வீடு. அவிந்தாள்-இறந்தவள்-தாயினன்-முற்றெச்சம். (உ0) அஞ்சுபயம்என்றது - குடிகளுக்குத்தன்னாலும், தன்பரிசனத்தாராலும், பகைவராலும், கள்வராலும், ஏனைவிலங்கு முதலிய உயிர்களாலும் வருங்கெடுதிகளை. கலி-துன்பம். புலந்து-மனம்வாடி. (உஉ) வடம்-ஆல். (உங) சந்தனவெற்பு-பொதியமலை. மறவன் - வேடன். எய்ப்பு - இளைப்பு.

(உச) கையோன் - இழிகுலத்தவனுகியயான். கை - சிறுமை. எய் - முதனிலைத்தொழிற்பெயர். அம்பின்மேனிற்றலால் தொழிலாகுபெயர்.

இக்கொலைசெய்தான்யானலனென்னு துளனென்னத்
தக்கவனேயோதறுகண்மறவனுரைமெய்யோ
சிக்கவொறுத்தாலல்லதையுண்மைசெப்பானென்
ருெக்கவுரைத்தார்மந்திரருள்ளார்பிறரெல்லாம். (உ௫)

மன்னன்ருனுமற்றதுசெய்மின்னெனமள்ளர்
பின்னந்தண்டஞ்செய்தனர்கேட்கப்பிழையில்லான்
முன்னஞ்சொன்னசொற்பெயராுய்மொழியாநின்
றின்னந்தீரத்தேருமினென்ருனென்செய்வான். (உ௬)

ஆற்றவொறுக்குந்தண்டமுமஞ்சானறைகின்ற
கூற்றமுமொன்றேகொன்றகுறிப்புமுகந்தோற்ருன்
மாற்றவரேயோமாவோபுள்ளோவழிவந்த
கோற்ருெடியைக்கொன்றென்பெறவல்லான்கொலைசெய்வான். ()

கைதவனுமிக்கானவனேயோபிறரேயோ
செய்தவர்யாரேயிக்கொலைவேட்டஞ்செய்தோர்மா
வெய்தவிலக்கிற்றப்பியகோருனேறுண்டிம்
மைதவழ்கண்ணுண்மாய்ந்தனளேயோவறியேனல். (உ௮)

என்னுமுன்னித்தென்னவனின்னமிதுமுன்னூ
றன்னுலாயத்தக்கதையென்ருன்றகவின்ற
நன்னுரந்நூலாய்ந்திதுநூலாலமையாதான்
மன்னுதெய்வத்தாலேதேறும்வழியென்ருர். (உ௯)

வேந்தர்கள்சிங்கம்வேதியனைப்பார்த்திதுதீர
வாய்ந்துனதுள்ளக்கவலையொழிப்பேனஞ்சேனின்
னேந்திழையீமக்கடனிறுவிப்போதென்றேவித்
தேந்துணர்வேங்கைத்தார்மறவோனைச்சிறைசெய்தான். (௩௦)

மின்னனையாடன்செய்கடன்முற்ருமீண்டோனைத்
தன்னமர்கோயிற்கடைவயின்வைத்துத்தானேகிக்
கொன்னவில்வேலான்றங்கள்குடிக்கோர்குலதெய்வ
மென்னவிருந்தாரடிகள்பணிந்தானிதுகூறும். (௩௧)

---

(உ௫) தறுகண் - அஞ்சாமை. மந்திரர் - ஆலோசனைக்காரர்.

(உ௭) கோற்றொடி-கோல்போலத் திரண்ட வளையலையணிந்த முன்கையையுடையாள்எனநிற்றலால் விட்டஅன்மொழித்தொகை.

(உ௯) தகவில்தம் அன்னுர் என்றது - தகுதியினுற் றமக்குத் தாமேயொப்பாயுள்ள பெரியோரை. (௩௦) ஈமம்-சுடலை. வேங்கை-ஓர்மரம். துணர் - கொத்து.

கொச்சகக்கலிப்பா.

மன்றுமெணியேயிம்மறவன்றான்பார்ப்பனியைக்
கொன்றானேபிறர்பிறிதாற்கொன்றதோவிதுவறநூ
லொன்றாலுமளப்பரிதாக்கிடந்ததாலுன்னருளா
லென்றாழ்வுகெடத்தேற்றாயென்றிரந்தானவ்வேலை. (௩௨)

திருநகரின்புறம்பொருசார்குலவணிகத்தெருவின்க
ணொருமனையின்மணமுளதங்கந்தணனேடொருங்குநீ
வருதியுனதுளந்தேறாமாற்றமெலாந்தேற்றுதுமென்
றிருவிசும்பினகடுகிழித்தெழுந்ததாலொருவாக்கு. (௩௩)

திருவாக்குச்செவிமடுத்துச்செழியன்றன்புறங்கடையிற்
பெருவாக்குமறையவனேடொருங்கெய்திப்பெரும்பகல்போய்க்
கருவாக்குமருண்மாலைக்கங்குல்வாய்த்தன்னைவேற்
றுருவாக்கிக்கடிமனைபோயொருசிறைபுக்கினிதிருந்தான். (௩௪)

அன்றிறைவனருளாலங்கவர்கேட்கவம்மனையின்
மன்றன்மகன்றனக்களந்தநாளுலப்பமறலியிருட்
குன்றமிரண்டெனவிடுத்தகொடும்பாசக்கையினர்வாய்
மென்றுவருஞ்சினத்தவரிலொருவனிதுவினவுமால். (௩௫)

இன்றேயிங்கிவனுயிரைத்தருதிரெனவிரும்பகட்டுக்
குன்றேறுங்கோனுரையாற்கொள்வதெவன்பிணியுடம்பி
னொன்றேனுமிலனொருகாரணமின்றியுயிர்கொள்வ
தன்றேயென்செய்துமெனமற்றவனீதறைகிற்பான். (௩௬)

ஆற்றாலேறுண்டகன்னையருகொதுங்கும்பார்ப்பனியைக்
காற்றால்வீழ்த்தெவ்வாறுகவர்ந்தேமப்படியிந்தச்
சாற்றாரவாரத்திற்றாம்பறுத்துப்புறநின்ற
வீற்றாவைவெருளவிடுத்திவனாவிகவர்கென்றான். (௩௭)

அந்தமொழிகேட்டரசனருமறையோய்கேட்டனையோ
விந்தமொழியெனப்பனவனிவனிவ்வாறிறந்தாலென்
பைந்தொடியாளிறந்ததுமப்படியேயென்மனக்கவலை
சிந்தவிதுகாண்பேனென்றொருங்கிருந்தான்றென்னனெனும். (௩௮)

(௩௪) பெருவாக்குமறையவன் என்றது-சிவபெருமானருளிய வேதங்களை யுணர்ந்தவனாதலின்.

(௩௫) அளந்தநாள் என்றது-வினைப்பயனை. (௩௭) ஆறு-வழி. ஈற்று ஆ - கன்றையுடையபசு. (௩௮) பனவன்-பிராமணன்.

ஒட்டியபல்கிளை துவன்றியொல்லொலிமங்கலந்தொடங்கக்
கொட்டியபல்லியமுழங்கக்குழுமியவோசையின்வெருண்டு
கட்டியதாம்பிறப்புனிற்றுக்கற்றுவொன்றெதிர்ந்தோடி
முட்டியதான்மணமகனைமுடிந்ததாலவனுவி. (௩௯)

மணமகனேபிணமகனும்மணப்பறையேபிணப்பறையா
யணியிழையார்வாழ்த்தொலிபோயழுகையொலியாய்க்கழியக்
கணமதனிற்பிறந்திறுமிக்காயத்தின்வரும்பயனை
யுணர்வுடையார்பெறுவருணர்வொன்றுமிலார்க்கொன்றுமிலை. ()

கண்டானந்தணனென்னகாரியஞ்செய்தேனெனத்தன்
வண்டார்பூங்குழன்மனைவிமாட்சியினுங்கழிதுன்பங்
கொண்டான்மற்றவனொடுந்தன்கோயில்புகுந்தலர்வேப்பந்
தண்டாரானமைச்சர்க்கும்பிறர்க்குமிதுசாற்றினான். (சக)

மறையவனையின்னுமொருமணமுடித்துக்கோடியென
நிறையவரும்பொருளீந்துநீபோதியெனவிடுத்துச்
சிறையழுவத்திடைக்கிடந்தசெடித்தலையவிடிக்குரல
கறையுடல்வேடனைத்தொடுத்தகால்யாப்புக்கழல்வித்து. (சஉ)

தெளியாதேயாமிழைத்ததீத்தண்டம்பொறுத்தியென
விளியாவின்னருள்சுரந்துவேண்டுவனநனிநல்கி
யளியானுமனத்தரசனவனையவனிடைச்செலுத்திக்
களியானைவிழவெய்தகௌரியனைப்போய்ப்பணிவான். (சங)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

ஆதரம்பெருகப்பாவி யேன்பொருட்டெம் மடிகணீரரும்பழி யஞ்சு, நாதராயிருந்தீரெந்தையார்க்குண்டே நான்செயத் தக்கதொன்றெனாக், காதலிற்புகழ்ந்துபன்முறைபழிச்சிக்கரையின் மாபூசனைசிறப்பித், தேதமதகற்றியுலகினுக்குயிராயிருந்தனனிறைகுலோத்துங்கன். (சச)

பழியஞ்சினபடலம் முற்றிற்று.

ஆகு படலம் ௩௪ - க்கு திருவிருத்தம் - கங௩௩.

---

(௩௯) புனிறு - இளமை. (சக) மாட்சி - இது தொழிற்பெயர், மாள்-பகுதியாதலின், மாட்சியிலும் என்றதற்கு - மாண்டதிலும் என்பதுபொருள். (சஉ) அழுவம் - கொடியநிலம். செடி-முடைநாற்றம். கால்யாப்பு-விலங்கு. (சச) ஆதரம்-அன்பு. ஏதம்-குற்றம்.

சிவமயம்.

## இருபத்தாறவது,

# மாபாதகந்தீர்த்த படலம்.

கலிவிருத்தம்.

வேதநாயகன்வெம்பழியஞ்சிய
நாதனுனநலனி துநல்கிய
தாதையைக்கொலைசெய்ததநயன்மா
பாதகந்தனைத்தீர்த்தமைபாடுவாம். (க)

விரைசெய்மாலைக்குலோத்துங்கமீனவன்
றிரைசெய்நீர்நிலஞ்செங்கோல்செலத்தனி
யரசுசெய்யுமந்நாளிலவந்தியென்
றுரைசெய்மாநகராஞெருபூசுரன். (உ)

வெருவுங்காய்சினமாறியவேதியன்
மருவுங்காதன்மனையெனும்பேரினு
டிருவுங்காமனுந்தேவியுமண்புனை
யுருவுங்காமுறுமொப்பில்வனப்பினுள். (ங)

படியிலோவியப்பாவையொப்பாகிய
வடிவினுளவள்பான்மகனென்றொரு
கொடியபாவிபிறந்துகொலைமுதற்
கடியபாவக்கலன்போல்வளருநாள். (ச)

கோடிகோடியஞ்சிலைகோட்டியே
கோடிகோடிகொடுங்கணைபூட்டியே
கோடிகோடிவிகாரமுங்கூட்டியே
கோடிகோடியனங்கரெய்தார்கொலோ. (ரு)

---

(உ) பூசுரன் - அந்தணன். (ங) மண்புனை உருவு என்றது-சுதையாற்செய்த பதுமையை.

(ச) கொலைமுதல் கடிய பாவம் என்றது-கொலை, களவு, கள், காமம், குருத்துரோகம் என்னும் பஞ்சமா பாதகங்களை.

(ரு) விகாரமாவன - சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம், மோகம், மரணம்என்பன - இவை முறையே, தாமரை - மாம்பூ, அசோகு, முல்லை, நீலோற்பலம் என்னுமைந்து பாணங்களால் வருவன.

இளமைச்செவ்வியயாக்கையன்மையல்கூர்
வளமைக்காமமும்வல்வினையுந்நிறைத்
தளைவிட்டீர்த்தலிற்றன்னைவயிற்றிடை
விளைவித்தீன்றவடன்னைவிரும்பினான். (௬)

அன்னையென்னுமழிதகையாளகத்
தின்னுயிர்த்துணையும்மனக்காவலாய்
மன்னுநாணமடமுதனால்வருந்
தன்னைநீங்கலிற்றானுமொத்தாளரோ. (௭)

இன்பமோசிறிதாகுமிதில்வருந்
துன்பமோகரையில்லாத்தொடுகட
லென்பதாருமிவனாலறியவிவ்
வன்பதானவினையால்வருந்துவான். (௮)

மையனாகமதியைவிழுங்கவக்
கையனுமையைக்கலந்தொழுகுஞ்செய
லையன்றான்குறிப்பாற்கண்டயற்செவிக்
குய்யலாவண்ணமுள்ளத்தடக்கினான். (௯)

வேற்றோர்வைகல்வெளிப்படக்கண்டறஞ்
சாற்றுநாவினன்வேறொன்றுஞ்சாற்றிலன்
சீற்றமேல்கொடுசெல்வன்கொல்வேனென
வேற்றெழுந்தனனீன்றாள்விலக்குவாள். (௧௦)

தாயின்பநுகர்ந்தனைதந்தையைக்
காயிலென்பெறுவாயெனக்காமுகர்க்
காயிலன்னையிலப்பனிலென்பய
னேயிலின்னருளென்னறமென்னென்றான். (௧௧)

---

(௬) நிறையாவது - காமமுந்தீவினையும், தத்தம்வழியவன்மனத்தைநிறுத்தல் தளை - பாசம்.

(௭) அழிதகையாள் - அழிந்தகற்பினையுடையவள். நாணம்மடமுதல்நால்வர்என்றது-நாணம், மடம், பயிர்ப்பு, அச்சங்களை. இவற்றுள், நாணம்-பரபுருடரைக் காணவும்நாணல். மடம்ஆவது - தன்கணவன்குணத்தையன்றி மற்றோர்குணத்தை யறியாமை. அச்சமாவது - தன்கணவன் முன்னன்றி, ஏனையோர்சாயைதோன்றினும், ஆமைபோலக் கரசரணாதிகளொடுங்கிப்பதுங்கல். பயிர்ப்பாவது - தன்கணவன் சுகத்தையன்று யேனையோர்சுகத்தை அருவருத்தல்.

(௯) மையல் - மயக்கம். ஆய்-தாய். (௧௧) நேயில்-அன்பினால். என் என்னும் வினாவினைக்கு குறிப்புமுற்றை, அன்னையில், நேயில் என்பவற்றோடுங் கூட்டுக. நே - அன்பு.

மண்டொடுங்கருவிப்படைவன்கையிற்
கொண்டுதாதைகுரவனென்றேர்கிலான்
றுண்டமாகத்துணித்தானுய்வாய்முகத்
துண்டகாமநறவானுணர்விலான். (கஉ)

மைக்கருங்கங்குல்வாய்க்கொன்றதாதைக்குத்
தக்கதீத்தவிசிட்டன்னைதன்னொடுங்
கைக்கடங்குபொருளொடுங்கன்னெறி
புக்கனன்புடைசூழ்ந்தார்புளிநரே. (கங)

எய்யுங்கோனொடுவில்லரிடிக்குநேர்
செய்யுஞ்சொல்லினர்செல்லலைநில்லெனக்
கையிலுள்ளவுங்கைக்கொண்டுகாரிகைத்
தையறன்னையுந்தாங்கொடுபோயினார். (கச)

சென்றுசேணிடைச்சிக்கறவாழலா
மென்றவெண்ணமொன்றெய்தியவண்ணமொன்
றொன்றுநாமெண்ணத்தெய்வமொன்றெண்ணிய
தென்றவார்த்தையவனிடைப்பட்டதால். (கரு)

தாதைதன்றனயற்கினியார்துணை
மாதர்யாயைமறவர்கைக்கொள்ளவிப்
போதுதான்றுணையென்பவன்போன்றுமா
பாதகத்துருவாய்வந்துபற்றினான். (கசு)

ஆவவென்னுமழுஞ்சிவதாவெனும்
பாவம்பாவம்பழியிதுவோவைய
கோவெனுங்கைகுலைத்தெரியுந்கிழற்
பாவைபோலவிடாதுபின்பற்றுமால். (கஎ)

மேற்படி - வேறு.

நல்லதீர்த்தஞ்சிவதலநலோர்பக்கமுஞ்
செல்லவொட்டாதரன்சீர்த்திநாமஞ்செவிப்
புல்லவொட்டாதுளம்புகுதவொட்டாதுநாச்
சொல்லவொட்டாதுகண்டுயிலவொட்டாதரோ. (கஅ)

சுற்றுமுன்பின்புறச்சூழ்ந்துதன்கொடுக்கிறப்
பற்றிநின்றீர்க்குமாபாதகத்தாலலைந்

(கங) தீத்தவிசிட்டு-தீக்கடன்முடித்து. கல்நெறி-பாலைவனம்.
(கஎ) ஆவ - இது ஐயோவென்னு மிடைச்சொல். சிவதா-அபயச்சொல். (கக) கொடுக்கு - கொய்சகம்.

தெற்றினிச்செய்வதென்றுற்றலாதிடருழந்
துற்றுவேறுலகெலாமச்சமுற்றுழலுமால். (௧௯)

உறுகணேயாற்றநாளுற்றுழன் றுலகெலா
மறுகவேதிரியுமாபாதகன்வலியெலாஞ்
சிறுகுவான்சிவனருட்செயலினிப்பாதகங்
குறுகுநாள்குறுகுநாள்கூடலைக்குறுகினான். (௨௦)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அழிதகன்குறுகுவான்முன்னங்கயற்கண்ணிதந்தக்
குழையிருகாதுங்கோத்துக்கொலைகெழுபுலிப்பற்றாலி
நுழைமயிர்நெடுநாண்பின்னனென்பிடரலைப்பப்பூண்டோர்
பழிதகையாதவேடப்பாவையாய்ப்படிவங்கொள்ள. (௨௧)

கொலையிரும்பழிக்கன்றஞ்சுங்கூடலெம்பெருமான்கொன்றை
மிலையிருங்குஞ்சிவேங்கைமெல்லிணர்க்கண்ணிவேய்ந்து
கலையிருமருப்பிற்கோடிக்காதளவோடுந்தாடிச்
சிலையிருந்தடக்கைவேடத்திருவுருக்கொண்டுதோன்றி. (௨௨)

கொண்டல்கண்படுக்குமாடக்கோபுரமருங்கிற்போந்தின்
கண்டகக்கருக்குவாயகுரைக்குநாய்கதுவிக்காப்பப்
புண்டலைவாளிவில்லோர்புறங்கிடந்திமைப்பத்திங்கட்
டுண்டவாணுதலாளோடுஞ்சூதுபோராடல்செய்வான். (௨௩)

வெருவருவேழமுண்டவெள்ளில்போல்வறியனாகிப்
பருவரலுடனாங்கெய்தும்பாதகன்வரவுநோக்கி
யொருவருமுள்ளத்தாலுமுன்னருங்கொடியபாவி
வருவதுகாண்டியென்னுமாதரைநோக்கிக்கூறும். (௨௪)

அணங்குநோயெவர்க்குஞ்செய்யுமனங்கனலைப்புண்டாவி
யுணங்கினாருள்ளஞ்செல்லுமிடனறிந்தோடிச்செல்லா
குணங்குலனொழுக்கங்குன்றல்கொலைபழிபாவம்பாரா
விணங்குமின்னுயிர்க்குமாங்கேயிறுதிவந்துறவதென்று. (௨௫)

---

(௨௦) குறுகல் என்றதில் - முன்னது குறைதல்மேலும், பின்னது - அடைதல் மேலும் நின்றன.

(௨௨) தாடி - என்றது, மீசையை. (௨௩) போந்து - பனை. கண்டகம் - முள். (௨௪) பருவரல் - துன்பம். வேழமுண்டவெள்ளில் - யானைநோய் விழுந்தவிளங்கனி. இது, உள்ளீடின்றிநிற்கு மென்பது வழக்கு.

கள்ளுண்டல்காமமென்பகருத்தறைபோக்குச்செய்வ
தெள்ளுண்டகாமம்போலவெண்ணினிற்காணிற்கேட்கிற்
றள்ளுண்டவிடத்தினஞ்சந்தலைக்கொண்டாலென்னவாங்கே
யுள்ளுண்டவுணர்வுபோக்காதுண்டபோதழிக்குங்கள்ளுண். (உசு)

காமமேகொலைகட்கெல்லாங்காரணங்கண்ணோடாத
காமமேகளவுக்கெல்லாங்காரணங்கூற்றமஞ்சுங்
காமமேகள்ளுண்டற்குங்காரணமாதலாலே
காமமேநரகபூமிகாணியாக்கொடுப்பதென்றான். (உஎ)

கொலைப்பழிகோட்பட்டாங்கேகுறுகியான்முகங்கண்டேட
வலைப்படருழந்துசாம்பியழிவதென்பார்ப்பானென்னக்
கலைப்படுதிங்கள்வேணிக்கானவனருட்கணோக்கந்
தலைப்படச்சிறிதுபாவந்தணிந்துதன்னறிவுதோன்ற. (உஅ)

முற்பகலிழைத்தபாவமுதிர்ச்சியாற்பிறந்துதந்தை
தற்பகையானவாறுந்தாதையைவதைத்தவாறும்
பிற்பகலந்தப்பாவம்பிடித்தலைத்தெங்குந்தீரா
திப்பதிபுகுந்தவாறுமெடுத்துரைத்திரங்கிநின்றான். (உகூ)

மறப்பெரும்படிவங்கொண்டுமனத்தருள்சுரந்துநின்ற
வறப்பெருங்கருணைமூர்த்தியழிதகையவனைப்பார்த்தித்
திறப்பழியாங்குச்சென்றுமீங்கன்றித்தீராதென்றக்
கறைப்பழிதீரும்வண்ணங்கருதியோருறுதிகூறும். (௩0)

வருதிநின்றுமஞ்சொன்னோர்வருக்கமுநரகில்வீழக்
கருதிநீசெய்தபாவங்கழிப்பவரெவர்யாநோக்கந்
தருதலாலெளிதிற்றீரச்சாற்றுதுமையங்கையேற்
றொருபொழுதுண்டியீசனுறுதவரேவல்செய்தி. (௩க)

செங்கதிர்க்கடவுள்வானந்தீண்டுமுன்னெழுந்துதீந்தண்
பைங்கதிரறுகுகொய்துபசுக்களையருத்தியார்வம்
பொங்கமுப்போதுங்கோயிற்புறத்தொட்டித்தீர்த்தமாடிச்
சங்கரன்றனைநூற்றெட்டுமெய்வலஞ்சாரச்செய்தி. (௩உ)

---

(உஅ) கொலைப்பழி-பிரமகத்தி. கோட்பட்டு - விழுங்கப்பட்டு. கானவன்-வேடனாகியகடவுள். ஏட-இது இக்காலத்து எண்டாவென மருவியது. (உகூ) தற்பகன்-சயனத்தையடைந்தவன். தற்பம்-சயனம். தற்பகையானவாறும் எனவும்பாடம். (௩0) கறை-குற்றம்.
(௩க) வருக்கம்-மரபு. தவர்-சிவனடியார். (௩உ) புறத்தொட்டித்தீர்த்தம்-சிவாலயத்தின் புறத்திலுள்ள தீர்த்தத்தொட்டியி லிருக்கும் தீர்த்தம். இது-கங்காதீர்த்தத்திற்கொப்பென்பர். முப்போது-காலை, மாலை, உச்சி என்பன.

இத்தவநெறியினின்றலிப்பழிகழியுமென்னாச்
சித்தவன்புடையவேடத்திருவுருக்கொண்டகொன்றைக்
கொத்தவனுரைத்தான்கேட்டுக்கொடிச்சியாயிருந்தவம்மை
மத்தவன்கரித்தோல்போர்த்தமறவனைவினவுகின்றாள். (௩௩)

ஐயவிக்கொடியோன்செய்தபாவத்துக்களவில்காலம்
வெய்யநாலேழுகோடிநரகிடைவீழ்ந்தானேனு
முய்வகையிலாதபாவியிவனுக்கென்னுய்யுந்தேற்றஞ்
செய்வகையென்றுகேட்பச்செங்கண்மால்விடையோன்செப்பும். (௩௪)

அடுபழியஞ்சாநீசராயினுநினைக்கினச்சம்
படுபழியஞ்சான்செய்தபாதகத்தொடக்குண்டெங்கும்
விடுவதையின்றிவேறுகளைகணுமின்றிவீயக்
கடவனைக்காப்பதன்றேகாப்பன்றன்கருணைமூர்த்தி. (௩௫)

நெய்தற்போதனையவுண்கணேரிழைநீயாதொன்று
செய்தற்குஞ்செய்யாமைக்கும்வெறொன்றுசெயற்குமாற்றன்
மெய்தக்ககருணைவள்ளல்வேண்டினெவ்வினைஞரேனு
முய்தக்கோராதல்செய்கையுன்னருள்விளையாட்டன்றே. (௩௬)

என்றகமகிழ்ச்சிபொங்கவியம்பினுளியம்பலோடுங்
குன்றகநாடவேடக்குழகனுமறைந்துவெள்ளி
மன்றகநிறைந்தான்மேகமறைந்திடமறைந்துசெல்லு
மின்றகவிடாதுபின்போம்விளங்கிழைமடந்தையோடும். (௩௭)

ஆதனுங்கதுகண்டானுவற்புதமடைந்துகூட
னாதனூர்நவின்றவாற்றானன்னெறிவிரதச்செய்கை
மாதவவொழுக்கந்தாங்கிவருமுறைமதியமூன்றிற்
பாதகங்கழிந்துதெய்வப்பார்ப்பனவடிவமானான். (௩௮)

---

(௩௩) கொடிச்சி - வேட்டுவச்சி. (௩௫) களைகண் - பற்றுக்கோடு. (௩௬) செய்தற்கும் செய்யாமைக்கும் வேறு ஒன்று செயற்கும் என்றது - கர்த்தத்துவம், அகர்த்தத்துவம், அந்நியதாகர்த்தத்துவம் என்னு மூன்றிறைமைக் குணங்களை.

(௩௭) மின்தக - மின்னலைப்போல.

(௩௮) ஆதன்-அறிவில்லாதவன். ஆததாயியுங்கண்டானு, எனவும்பாடம். ஆததாயி - மாபாதகன். விரதம் என்றது-ஒருபொழுதுண்டலும், பசுக்களுக்குப் புல்லருத்தலுமாகியவற்றை. மாதவம் என்றது - ஏவல்செய்தலும், தீர்த்தமாடுதலுமாம்.

சொற்பதங்கடந்தவெந்தைசுந்தரநாதன்றாளிற்
பற்பலவடசொன்மாலைபத்தியிற்றொடுத்துச்சாத்தித்
தற்பரவறிவானந்தத்தனியுருவுடையசோதி
பொற்பதமருங்கிற்புக்கான்புண்ணியமறையோனம்மா. (௩௯)

அன்னையைப்புணர்ந்துதாதைகுரவனுமந்தனுளன்
றன்னையுங்கொன்றபாவந்தணித்துவீடளித்ததென்றாற்
பின்னைநீரிழிநோய்குட்டம்பெருவயிறீளைவெப்பென்
றின்னநோய்தீர்க்குந்தீர்த்தமென்பதோவிதற்குமேன்மை. (௪௦)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அழிந்தவேதியன்மா பாதகந்தீர்த்த தறிந்துவேந் தமைச்சரூரு ள்ளா, ரொழிந்தபாருள்ளார் வானுளார்வியப்ப முற்றுநல் லுரையு ணர்வெல்லாங், கழிந்தபேரருளிக் கயவன்மேல்வைத்த காரணம் யாதெனக் கண்ணீர், வழிந்துநான்மாடக் கூடனாயகனை வழுத்தி னார் மகிழ்ச்சியுட் டிளைத்தார். (௪௧)

மாபாதகந்தீர்த்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௰ - க்கு - திருவிருத்தம் - ௧௫௭௪.

---

## இருபத்தேழாவது,

# அங்கம்வெட்டினபடலம்.



அறுசீரடியாசிரியவிருத்தம்.

வேதகந்தரித்தமுக்கண்வேதியன்மறையோன்செய்த
பாதகந்தவிர்த்தவாறுபகர்ந்தனம்விஞ்சையீந்த
போதகன்மனைக்குத்தீங்குபுந்திமுன்னாகச்செய்த
சாதகன்றனைப்போராற்றித்தண்டித்ததண்டஞ்செல்வாம். (௧)

---

(௩௯) சொல்பதம் - சொல்லளவு. பதம் - அளவு.

(௧) வேதகம் - இரசகுளிகை. அதுசெம்பினையுருக்கித் தன்னோடுகூட்டி வேதித்துப் பொன்னாக்கியும், தான்பொன்னியல்பை க்காட்டாது தன்னுளடக்கி நிற்றல்போலத், தான் பசுக்களைவவ்வா றுசெய்தும் அவற்றினியல்பு சிறிதுந்தோன்றாது அறிவுதந்து நிற் கும் வண்ணந் தன்வியாபகத்துளடக்கி நிற்றலால் வேதகம்தரித்த என்றார். விஞ்சை என்றது-வாள்வித்தையை. போதகன்-ஆசிரியன் சாதகன்-மாணாக்கன்.

கூர்த்தவெண்கோட்டியானைக்குலோத்துங்கவழுதிஞாலங்
காத்தரசளிக்குநாளிற்கடிமதிலுடுத்தகூடன்
மாத்தனிநகருள்வந்துமறுபுலத்தவனுயாக்கை
மூத்தவனொருவன்வைகிமுனையவாள்பயிற்றிவாழ்வான். (உ)

வாள்வினைக்குரவனன்றன்வல்லமண்விடுத்தவேழந்
தோள்வினைவலியாலட்டசுந்தரவிடங்கன்றன்னை
யாள்வினையன்புந்தானும்வைகலுமடைந்துதாழ்ந்து
மூள்வினைவலியைவெல்லுமூதறிவுடையனம்மா. (ங)

கைவினைமறவாள்விஞ்சைக்காவலனவனைத்தாழ்ந்து
தெவ்வினைவெல்வான்கற்குஞ்சிங்கவேறனையார்தம்மு
ளுய்வினையுணராப்பாவிசித்தனென்றொருவனுள்ளா
னவ்வினைநிரம்பக்கற்றனாகலூழ்வலியாலன்னான். (ச)

மானவாள்விஞ்சையாலேதனைநன்குமதிக்கத்தக்க
தானதோர்செருக்கினாற்றன்னாசிரியற்குமாறாய்த்
தானுமோர்விஞ்சைக்கூடஞ்சமைத்துவாள்பலருங்கற்க
ஆனுலாம்படைவல்லானிலூதியமிதப்பக்கொள்வான். (ரு)

ஒருத்தனேயிருவர்வாளின்விருத்தியுமொருங்குகொள்ளுங்
கருத்தனாய்விருத்தனூரிற்கழிவதுகருதியன்னான்
வருத்துவாளிளைஞர்தன்பால்வரமனந்திரித்துநாளும்
விருத்தமேசெய்வான்றாயைவிரும்பினோற்கிளையோனன்னான். (சு)

தொடத்தொடப்பொறுக்குந்திண்மைத்தொன்னிலமனையானில்லா
விடத்தவன்றேவிபாற்போயிடனுண்டேயிடனுண்டேயென்
றடுத்தடுத்தஞ்சாதென்றுங்கேட்டுக்கேட்டகல்வானாக
நடைத்தொழிற்பாவையன்னநங்கைவாளாவிருந்தாள். (எ)

பின்னொருபகல்போய்ச்செங்கைபிடித்தனன்வலிப்பத்தள்ளி
வன்னிலைக்கதவநூக்கித்தாழக்கோல்வலித்துமாண்ட

---

(ங) ஆள்வினை என்றது - ஈண்டு சிவபணிவிடையை. மூள்வினை என்றது - ஆகாமியவினையை. ஆகலூழ் - ஆகூழ்.

(ரு) படைவல்லானென்றது - வாளாசிரியனை. ஊதியம் - வருவாய். (சு) விருத்தி - ஊதியம். திரித்து - வேறுபடுத்தி. விருத்தம்- வேறுபாடு. (எ) நடைத்தொழிற் பாவையன்னநங்கை என்றது-நடக்குந் தொழிலையுடைய பிரதமையையொத்த மாணிக்கமாலையை.

(அ) நூக்கி - சாத்தி.

தன்னிலைக்காப்புச்செய்தாடனிமனக்காவல்பூண்டா
ளந்நிலைபிழைத்ததீயோனனங்கத்தீவெதுப்பப்போனான். (௮)

அறங்கடைநின்றாருள்ளுமாற்றவுங்கடையனாகிப்
புறங்கடைநின்றான்செய்தபுலைமைதன்பதிக்குந்தேற்றாண்
மறந்தவிர்கற்பினாடன்மனம்பொதிந்துயிர்கடோறு
நிறைந்தநான்மாடக்கூடனிமலனைநினைந்துநொந்தாள். (௯)

தாதகநிறைந்தகொன்றைச்சடையவன்புறம்புசெய்த
பாதகமறுக்குங்கூடற்பகவனெவ்வுயிர்க்குந்தானே
போதகனாகித்தேற்றும்புண்ணியன்புலைஞன்செய்த
தீதகமுணர்ந்துதண்டஞ்செய்வதற்குள்ளங்கொண்டான். (௧௦)

கோளுடைக்குரவனேபோற்சித்தனைக்குறுகிச்சித்தா
காளையாநீயுஞ்சாலக்கழியமூப்படைந்தயாமும்
வாளமராடிநந்தம்வலிகளுமளந்துகாண்டு
நாளைவாவருதுநாமுநகர்ப்புறத்தொருசாரென்றான். (௧௧)

நாதனுங்குரவன்கூறநன்றெனவுவந்துநாலாம்
பாதகனதற்குநேர்ந்தான்படைக்கலக்குரவன்மீண்டு
போதருமளவில்வையம்புதையிருள்வெள்ளத்தாழ
வாதவன்வையமுந்நீர்வெள்ளத்துளாழ்ந்ததம்மா. (௧௨)

ஆசினன்குரவர்க்கின்னாவாற்றினோன்பாவம்போல
மாசிருடணிந்தகங்குல்வலிகெடவடிவாள்விஞ்சைத்
தேசிகனொருவனன்னான்றிணியுடல்சிதைப்பத்தீட்டுங்
காய்சினவாள்போற்கீழைக்கல்லிடைமுளைத்தான்வெய்யோன். ()

நன்றியைக்கொன்றுதின்றோனையகனணைக்கஞ்சும்
வன்றிறலரிமானூர்தித்தெய்வதம்வழிபட்டேத்தி
வென்றிவாள்பரவிக்கச்சுவீக்கிவாள்பலகையேந்திச்
சென்றுவாளுழவன்சொன்னசெருக்களங்குறுகினானே. (௧௪)

மதுகைவாளமர்க்குநென்னல்வந்தறைகூவிப்போன
முதுகடும்புலியேறன்னமுடங்குடற்குரவன்றானு

(௯) அறன்கடை - பாபம். மறந்தவிர்கற்பு - அறக்கற்பு.

(௧௦) புறம்பு-அயல்நாடு. பகவன் என்றது—ஐசுவரியம்,வீரியம், புகழ்,திரு,ஞானம், வைராக்கியம் என்னும் அறுகுணங்களையுமுடையவனாதலின். (௧௨) நாலாம்பாதகம்-காமம். (௧௩) ஆசு - குற்றம். திணிந்த - மிகுந்த, கீழைக்கல் - கீழ்த்திசையிலுள்ள உதயகிரி.

(௧௪) அரிமான்-சிங்கம். (௧௫) மதுகை - பலம். நென்னல்-நேற்றைப்போது. அறைகூவல்-அழைத்தல். கயவன் - கீழ்மகன்.

மதிர்கழல்வீக்கிக்கச்சுமசைத்துவெண்ணீறுஞ்சாத்திக்
கதிர்கொள்வாள்பலகைதாங்கிக்கயவனுக்கெதிரேவந்தான். (கரு)

மடங்கலேறென்றும்பைங்கணரியொன்றுமலைந்தாலென்ன
முடங்கல்வான்றிங்களொன்றுமுக்கணுநான்குதோளும்
விடங்கலுழ்மிடறுந்தோற்றுவென்றிவாள்விஞ்சைவேந்து
மடங்கலன்றானுநேரிட்டாடமராடல்செய்வார். (கசு)

எதிர்ப்பர்பின்பறிவர்நேர்போயெழுந்துவானேறுபோல
வதிர்ப்பர்கேடகத்துட்டாழ்வுற்றடங்குவர்முளைப்பர்வாளை
விதிர்ப்பர்சாரிகைபோய்வீசிவெட்டுவர்விலக்கிமீள்வர்
கொதிப்பர்போய்நகைப்பராண்மைகூறுவர்மாறிநேர்வர். (கஎ)

வெந்நிடுவார்போற்போவர்வட்டித்துவிளித்துமீள்வர்
கொன்னிடுவாண்மார்பேற்பர்குறிவழிபிழைத்துநிற்ப
ரிந்நிலைநாலைங்கன்னலெல்லைநின்றாடல்செய்தா
ரந்நிலையடுபோர்காண்பாரனைவருங்கேட்கவையன். (கஅ)

குரத்தியைநினைத்தநெஞ்சைக்குறித்துரைநாவைத்தொட்ட
கரத்தினைப்பார்த்தகண்ணைக்காத்தனைகோடியென்றென்
றுரைத்துரைத்தவற்றுக்கெல்லாமுறுமுறைதண்டஞ்செய்து
சிரத்தினைத்தடிந்துவீட்டித்திருவுருமறைந்துநின்றான். (கசு)

போர்கெழுகளங்கண்டாருட்பொருபடைக்கேள்விச்செல்வர்
வார்கெழுகழற்காலானைக்கண்டிலர்மனையிற்றேடி
யேர்கெழுகற்பினாளையெங்குற்றான்குரவனென்னக்
கூர்கெழுவடிவேற்கண்ணாள்போயினார்கோயிற்சென்றாள். (உ0)

என்றவப்போதேகோயிற்கேகினான்மீண்டான்றேடிச்
சென்றவர்சித்தன்றன்னைச்செருக்களத்தடுபோர்செய்து
வென்றனையேயின்னந்தவெங்களத்தெங்குந்தேடி
நின்றனைக்காணுதிங்குநேர்ந்தனம்யாங்களென்றார். (உக)

விரைசெய்தாரவன்யானங்கம்வெட்டினேனல்லேனீங்க
ளுரைசெய்வதெவன்யாரென்போற்சித்தனையுடன்றுமாய்த்து
வரைசெய்தோள்விந்தைக்கீந்தார்மற்றிதுசுற்றும்வையைத்
திரைசெய்நீர்க்கூடலெந்தைதிருவுளச்செயல்கொலென்றான். ()

(கஎ) பறிவர்-போவர். சாரிகை-சுற்றுதல். (கஅ) வட்டித்தல்-சுழலுதல். குறி-இலக்கு. நாலைங்கன்னல் - இருபதுநாழிகை.

மட்டித்தகலவைக்கொங்கைமனைவியுஞ்சித்தன்றன்னைக்
கிட்டிப்பல்காலும்வந்துகேட்டதுநெருநல்வாய்வந்
தொட்டித்தன்கையைப்பற்றியீர்த்ததுமுள்ளம்வெந்து
தட்டிப்போய்க்கதவந்தாழிட்டிருந்ததுஞ்சாற்றினளே. (உ௩)

அம்மனையருளிச்சொன்னபடியெலாமருளிச்செய்து
தெம்முனையடுவாள்வீரர்சித்தனைமாய்த்தாரீது
மெய்ம்மையாமென்றுகண்டமைந்தரும்விளம்பக்கேட்டா
னெம்மையாளுடையகூடலிறைவிளையாட்டேயென்றான். (உ௪)

கொடியைநேரிடையாளோடுங்கொற்றவாளிளையரோடுங்
கடியநான்மாடக்கூடற்கண்ணுதலடிக்கீழ்த்தாழ்ந்து
நெடியநான்முகனுந்தேறுநெறியதுசிறியவேழை
யடியனேனளவிற்றேநின்னருள்விளையாடலென்றான். (உ௫)

தண்மதிவழிவந்தோனுநகருளார்தாமும்பாதி
விண்மதிமிலைந்தவேணிவிடையவனுடனோக்கிக்
கண்மலர்வெள்ளத்தாழ்ந்துகனைகழலடியிற்றாழ்ந்து
பண்மலர்கீதம்பாடியாடினர்பழிச்சிநின்றார். (உ௬)

மேற்படி-வேறு.

அடியவருக்கெளியரிவர் பரதேசிகாவலென் றடிவீழ்ந்தேத்தி, வடியயில்வேற்குலோத்துங்கன் மாணிக்கமாலையெனு மனையாளோ டுந், தொடியணிதோண் முதுமகனைக்களிறேற்றி நகரைவலஞ் சூழ் வித்திப்பான், முடியணிவித்தனந்தகுணபாண்டியற்குத் தன்னிறை மைமுழுதுமீந்தான். (உ௭)

நிலைநிலையாப்பொருளுணர்ந்து பற்றிகந்துகரணமொரு நெறி யேசெல்லப், புலநெறிநீத்தருள்வழிபோய்ப் போதமாந்தன்வலியை ப்பொத்திநின்ற, மலவலி விட்டகலவரா வுமிழ்ந்தமதிபோல் விளங் கிமாறியாடுந், தலைவனடிநிழல்பிரியாப் பேரின்பக் கதியடைந்தான் றமிழர்கோமான். (உ௮)

அங்கம்வெட்டினபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௬ - க்கு - திருவிருத்தம் - க௬௦௨.

---

(உ௪) அம்மனை - தாய். (உ௫) மதிவழிவந்தோன்-பாண்டியன். (உ௮) நிலைப்பொருள் - சிவம். நிலையாப்பொருள் - வைகுந்த முதலியபதவிகள். பற்றுஎன்றது - யான், எனதுஎன்னுமிருவகை ப்பற்றுக்களை.

சிவமயம்.

## இருபத்தேட்டாவது,

# நாகமெய்தபடலம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

செங்கண்மால்விடைமேல்விடங்கர்செருக்களத்திடைவாளெடுத்
தங்கம்வெட்டியசேவகத்தையறைந்தனந்தமிழ்மாறன்மேற்
சங்கையிட்டமணீசராற்றியதறுகண்வேள்விமுளைத்ததோர்
வெங்கண்வாளரவைத்துணித்துவிளித்தவாறும்விளம்புவாம். (க)

கோதிலாதகுணத்தனந்தகுணப்பெருந்தகைமீனவ
ஞாதிநாயகனுருவமாகியவைந்தெழுத்தொடுகண்டிவெண்
பூதிசாதனமாவதேபொருளென்றுபத்திமைபூண்டுதன்
ஞூதையேமுதலாயமன்னவர்தம்மினுந்தலையாயினான். (உ)

இத்தகைச்சிவசாதனந்தனிலன்புமிக்கவனொழுகலா
லத்தன்மெய்த்திருவைந்தெழுத்தொலியாலுநீற்றொளியாலுமுட்
பைத்தவல்லிருளும்புறத்திருளுஞ்சிதைந்துபராபரன்
வித்தகத்திருவேடமானதுமீனவன்றிருநாடெலாம். (ங)

நாயினுங்கடையானமாசுடனள்ளிருட்புரைநெஞ்சரெண்
ணாயிரஞ்சமண்வேடரன்னதறிந்துகொண்டுவெகுண்டழற்
றீயிரும்பெனமானவெங்கனல்சுட்டிடத்தரியார்களாய்
மாயிருந்தமிழ்மாறனைத்தெறவஞ்சவேள்வியியற்றுவார். (ச)

எல்லைகாதமளந்துசாலையெடுத்தழற்படுகுண்டமுங்
கல்லியாரழலிட்டெழும்புகைகௌவியெண்டிசைகளுமுறச்
செல்லவானவுடுக்களும்பொரியிற்பொரிந்தனசிதறநீண்
டொல்லைதாவிவிசும்புதைவரவொட்டிவெங்கனன்மூட்டினார். (ரு)

அத்தழன்றெரிகுண்டநின்றுமகன்பிலத்தெழுவானெனப்
பைத்ததுஞ்சிருள்வாயும்வாயிருபாலும்வாலியபகிர்மதிக்
கொத்தடுஞ்சினமொழுகுபற்களுமூழியாரழல்விழிகளும்
வைத்தசைந்தொருவெற்புவந்தெனவந்துளானொருதானவன். (சு)

---

(க) விடங்கர் - பேரழகுடையவர். (ச) வஞ்சவேள்வி-ஆபிசார யாகம். (ரு) தைவரல்-தடவல். (சு) தழன்று - தொதித்து. பைத்தல்-பரத்தல். வாலிய - வெண்மையாகிய.

உதித்தசெங்கணரக்கவஞ்சனுருத்தெழுந்தெரிவடவையிற்
கொதித்தடும்பசிதாகமுங்கெ:டிதாலெனக்கொடியோரைநீர்
விதித்திடும்பணியாதெனக்கெனமீனவன்றனைமதுரையோ
டெதிர்த்தெடுத்துவிழுங்கிவாவெனவேவினுருடனேகினுன். (எ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பாயுடையவர்விடவிடநாகப்படிவுகொணி சிசரனிலனண்டந், தோயுடலினனுடல் விடமூறிச்சொரிதுளை யெயிறினன் வடவைச்செந், தீயுடையனவெனவெரிகண்ணன்றிணியிருள்வரைமுழையெனவிண்ட, வாயுடையவனெடுநெறிமுன்னி மழைநுழைவரையெனவருகின்ருன். (அ)

அரவிறையுறைபிலம்வெளிகாணவரையுடல் புதைபடநிலம்விள்ளா, வருவழியழலெழவுயிர்கான்முன்வளியுளர்கிளர்வலி விளிவெய்தப், பொருசினவிழியெதிர்படுபைங்கூழ்புகையெழவனமரைபொரிபொங்கர், கருகிட முதுசினை யிறைகொள்ளுங் ககநிரைசிறைசுருள்படவீழ. (கூ)

அகனிலம்வெருவுறநிலனேந்துமரவிறைவெருவுறவெயில்காலும்
பகன்மதிவெருவுறவிவைகௌவும்பணிகளும்வெருவுறவகறிக்கின்
புகர்மலைவெருவுறவடுதண்டப்புரவலன்வெருவுறவருசெங்கண்
ணகைமதிபுரையெயிறவன்மாடநகரெதிர்குடவயின்வருமெல்லை. ()

கண்டவர்கடிநகர்கடிதோடிக்கௌரியனடிதொழுதடிகேணங்
கொண்டல்கண்வளர்மதில்வளைகூடற் குடவயினொருபெருவிடநாக
மண்டமுமகிலமுமொருவாயிட்டயிறரவருவதையெனநீள்வாய் [ன்.
விண்டுகொண்டணைவதையெனலோடும்வெருவலன்மதிகுலமறவீர

மற்றிதுமுனமதகரிவிட்டோர்வரவிட வருவதையெனவெண்ண, முற்றிதுதனையும்விளித்தற்கெம்முடையவர் விடையவர்விடநாகஞ், சுற்றியசடையினருளரென்ருச் சுரருலகிழிசுடரெனநிற்குங், கற்றளியிடையுறையிறைமுன்போய்க்கனைகழலடிதொழுதறைகிற்பான்.

(அ) நிசிசரன் - இராக்கதன். (கூ) அரவுஇறை - பாம்புகளுக்கரசனுகிய ஆதிசேடன். கால் - பெருமூச்சு. வளி - காற்று. பொங்கர் - சோலை. ககம் - பட்சி.

(க0) இவை என்றது - சந்திரசூரியர்களை. பணி - இராகுகேதுக்கள். தண்டப்புரவலன் - தண்டாயுதத்தையுடையயமன். குடம்- மேற்கு.

(கஉ) கற்றளி - மாணிக்கவிமானம். தளி - கோயில்.

வழிவழியடிமைசெய்தொருபோதுமறவலன்வழிபடுமெடியேனின் மொழிவழிமுறைசெய்துவருவேனிம்முதுநகரடையவுமமணீச ரழிவதுகருதினர்விடுநாகமடைவதுனருள்வழியதனுவி கழிவதுகருதியவடியேனைக்கருணைசெய்தருளிதுகடனென்ருன். ()

அனுமதிகொடு தொழுதிறைபாத மகமதிகொடு புறனடைகின்ற, பனிமதிவழிவருதமிழ்மாறன் பகழியொடடுசிலையினனேகிக், குனி மதிதவழ்தருமதினீடுங் கொடியணி குடகடை குறுகான்முன், றனி வரையெனநிகர்தருகோபத் தழல்விழியரவினையெதிர்கண்டான். ()

எழுசீரடியாசிரியவிருத்தம்.

பல்பொறிப்பகுவாய்ப் படம்புடைபரப்பிப் பக்கமெண்டிசையொ டுவிசும்பிற், செல்கதிர்புதைத்துத் தினியிருள் பரப்பித் திங்களின் பகிர்புரைநஞ்சம், பில்கெயிறதுக்கிப் பெரிதுயிர்த் தகல்வாய் பிளந் துமாநகரெலாமொருங்கே, யொல்லெனக்கௌவி விழுங்குவான்சீ றியுருத்தனனுரகவாளவுணன். (கரு)

அடுத்தனனரச சிங்கவேறிடியே றஞ்சவார்த்தங்கையிற்சாப, மெ டுத்தனனெடுநா ணிருதலைவணக்கி யெரிமுகக் கூர்ங்கணை தொடுத் து, விடுத்தனன்விடுத்த சரமெலா முரகன்வெறுந்துகள் படக்கறித் துமிழ்ந்து; படுத்தனன்பொருதுபஞ்சவன்புராரி பங்கயச்சேவடிநி னையா. (கசு)

கொடியதோர் பிறைவா யம்பினைவிடுத்துக் கோளராவளையுட றுணித்தா, னிடியதோ வெனவார்த் தெரிநிறக்குருதி யிரங்கிவீழரு வியிற்கவிழ, நெடியதோருடலம்புரள்படக்கூர்வா னெளிதர விளிப வன்மேலைக், கடியதோராலா கலவெள்ளம்போலக் கக்கினுன்கறை யிருணஞ்சம். (கஎ)

தீவிடமுருத்துத்திணியிருள்கடுப்பத்திருநகரெங்கணுஞ் செறி ந்த, காவிடங்கூவல் கயந்தலைசதுக்கங் கழகமாவணமகழிஞ்சி, கோ விடமாட முபரிகைமேடை கோபுரமரங்கெலாம்பரந்து, தாவிடமய ங்கி யுறங்கினுர்போலச் சாம்பினுர்தனிநகர்மாக்கள். (கஅ)

---

(கரு) பொறி - புள்ளி. பகுவாய் - பிளந்தவாய். பில்கல்-சிந்து தல். (கசு) எரிமுகம் - தீக்கொப்புளிக்கும்முகம். கறித்து-கடித்து.

(கஎ) பிறைவாயம்பு - அர்த்தசந்திரபாணம். மேலை என்றது- திருப்பாற்கடல் கடைந்தநாளை. (கஅ) கா-சோலை. கூவல்-கிணறு. கயம்-குளம். சதுக்கம் - நாற்றெருக்கூடுமிடம். கழகம் - கல்விச்சா லை. இஞ்சி-மதில். கோஇடம் - அரசன்கோயில். அரங்கு - நாடக சாலை.

நிலைதளர்ந் துடலந் திமிர்ந்துவேர்வரும்பி நிறைபுலன்பொறிக ரணங்க, டலைதடுமாறி யுரைமொழிகுழறித் தழுதழுப்படைந்து நா வணங்கி, மலைதருகபமேனிமிர்ந்துணர்வழிந்து மயங்கிமூச்சொடுங் கியுள்ளாவி, யலைதர வூசலாடினுர் கிடந்தா ரன்னதொன்னகருளா ரெல்லாம். (கக)

தென்னவன் விடங்கண் டஞ்சுமால்போலச் சினகரமடைந்து தாழ்ந்தெந்தாய், முன்னவவாதி முதல்வவித்தின்றி முளைத்தவமு டிவிலாமுனிவ, வென்னவவன்பர்க்கெளியவயார்க்கு மிறையவவிந் நகர்க்கென்று, மன்னவவனுதிமறையவமுக்கண் வானவ நினைச்சர ணடைந்தேன். (உ0)

அடுத்துவந்தலைக்குமாழியைத்துரந்து மாழியுண்டேழுமொன் ருகத், தொடுத்துவந் தலைக்கும் பெருமழை தடுத்துந் துளைக்கைவி ண்டுழாவவெண்பிறைக்கோ, டெடுத்துவந்தலைக்குங் களிற்றினைவி ளித்துமிந்நகர்புரந்தனையின்று. மடுத்துவந்தலைக்கும் விடத்தினுன் மயங்கும் வருத்துமுங்களைதியென் றிரந்தான். (உக)

அருட்கடலனையவாதிநாயகன் றனவிர்சடையணிமதிக்கொழு ந்தின், பெருக்கடைய முதத்தண்டுளி சிறிதுபிலிற்றினுன் பிலிற்றி டலோடும், பொருக்கெனவெங்கும் பாலினிற்பிரைபோற் புரைய றக்கலந்துபண்டுள்ள, திருக்கிளர் மதுராநகரமாப்புனிதஞ் செய்தத ச்சிறுதுளியம்ம. (உஉ)

இரவிமுன்னிருளதெனவிறையருண் முன்னிருண்மலவலியெ னவெங்கும், பரவியவமுதால் விடமகன்றவசப் படிவொழிந்தியாவ ருமின்பம், விரவியகளிப்பின் மேவினுரிருந்தார் மீனவர் பெருந்த கைவேந்தன், னரவணி சடையார்க் கன்புருத்தானே யாகிமண்கா வல்செய்திருந்தான். (உங)

நாகமெய்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௭ - க்கு திருவிருத்தம் - கசூஉரு.

---

(கக) திமிர்ந்து - கம்பித்து. (உ0) வித்தின்றி முளைத்தவ என் றது - திருவருட்படிவங் கொண்டமையை. (உங) அவசம்-துக்கம்.

சிவமயம்.

இருபத்தோன்பதாவது,

# மாயப்பசுவைவதைத்தபடலம்.



கலிநிலைத்துறை.

சுருதியின்புறத்தவர்விமெராவினைச்சுருதி
கருதரும்பரனருளுடைக்கௌரியன்றுணித்த
பரிசிதங்கதுபொருதமண்படிறர்பின்விடுப்ப
வருபெரும்பசுவிடையினுன்மாய்த்ததும்பகர்வாம். (க)

பணப்பெரும்பகுவாயுடைப்பாந்தளையனந்த
குணப்பெருந்தகைதுணித்தபின்பின்வருகுண்டர்
தணப்பருங்குழாங்காலினுற்றள்ளுண்டுசெல்லுங்
கணப்பெரும்புயல்போலுடைந்தோடினகலங்கி. (உ)

உடைந்துபோனவரனைவருமோரிடத்திருள்போ
லடைந்துநாமுன்புவிடுத்தமால்யானைபோலின்று
தொடர்ந்தபாம்பையுந்தொலைத்தனர்மேலினிச்சூழ்ச்சி
மிடைந்துசெய்வதையாதெனவினயமொன்றோர்வார். (ங)

ஆவையூறுசெய்யார்பழியஞ்சுவாரதனை
யேவுவாமிதுவேபுணர்ப்பென்றுசூழ்ந்திசைந்து
பாவகாரிகள்பண்டுபோற்பழித்தழல்வளர்த்தார்
தாவிலாவுருவாகியோர்தானவன்முளைத்தான். (ச)

குண்டழற்கணின்றெழுந்தவக்கொடியவெம்பசுவைப்
பண்டுபோலவர்விடுத்தனர்கூடலம்பதிமே
லுண்டுமில்லையுமெனத்தமொற்றநூலுரைத்த
பிண்டியானுரைகொண்டுழல்பேயமண்குண்டர். (ரு)

கலிவிருத்தம்.

மாடமலிமாளிகையிலாடுகொடிமானக்
கோடுகெளிறேடுமுகில்குத்திமிசைகோத்துச்

---

(க) சுருதியின் புறத்தவர் என்றது - சமணர்புறச் சமயத்தருளொரு திறத்தராதலின். படிறர் - வஞ்சகர். (ரு) குண்டு - ஆழம். உண்டு - அஸ்தி. இல்லை - நாஸ்தி. தமொற்றநூல் - பூர்வாகமம், அங்காகமமுதலிய சமணநூல்கள். பிண்டி - அசோகு.

சேடன்முடியுங்கதிர்கொள்சென்னிவரையுந்து
ளாடவடியிட்டுலவைவயுஞ்சிடவுயிர்த்தே. (சு)

விடுத்திடுமுயிர்ப்பினெதிர்பூளைநறைவீபோ
ளடுத்திடுசராசரமனைத்துமிரிவெய்தக்
கடுத்திடுசினக்கனலினுக்குலகமெல்லா
மடுத்திடுதழற்கடவுள்வார்புனலைமான. (எ)

உடன்றிறைகொள்புள்ளொடுவிலங்கலறியோட
மிடைந்தபழுவத்தொடுவிலங்கலைமருப்பா
லிடந்தெறிமருத்தெனவெறிந்தளவிலோரைத்
தொடர்ந்துடல்சிதைத்துயிர்தொலைத்திடியினூர்த்தே. (அ)

மறலிவருமாறெனமறப்பசுவழிக்கொண்
டறலிவர்தடம்பொருநையாறுடையமாறன்
றிறலிமலர்மங்கையுறைதென்மதுரைமுன்னு
விறலிவருகின்றததுமீனவனறிந்தான். (கூ)

மீனவனுமாநகருண்மிக்கவருமுக்கண்
வானவனைமாமதுரைமன்னவனைமுன்னோர்
தானவனையாழிகொடுசாய்த்தவனையேத்தா
வானதுரைசெய்துமெனவாலயமடைந்தார். (க0)

நாதமுறையோபொதுவின்மாறிநடமாடும்
பாதமுறையோபலவுயிர்க்குமறிவிக்கும்
போதமுறையோபுனிதபூரணபுராண
வேதமுறையோவெனவிளித்துமுறையிட்டார். (கக)

நின்றுமுறையிட்டவரைநித்தனருணோக்கா
னன்றருள்சுரந்திடபநந்தியைவிளித்துச்
சென்றமணரேவவருதீப்பசுவைநீபோய்
வென்றுவருவாயெனவிளம்பினன்விடுத்தான். (கஉ)

கலிநிலைத்துறை.

தண்டங்கெழுகூற்றமுமஞ்சத்தறுகட்செங்கட்
குண்டந்தழன்றுகொதிப்பக்கொடுநோக்கெறிந்து

---

(சு) உலவை - காற்று. (எ) பூளை - ஒருவிதச்செடி. வீ-மலர்.
(அ) பழுவம் - சோலை. விலங்கல் — மலை. மருத்து - காற்று.
(கூ) அறல் - கருமணல். திறல் - பகை. விறல் - வெற்றி.
(க0) தானவன் - சலந்தராசுரன்.

துண்டந்துழாவக்கடைவாய்நுரைசோர்ந்துசென்னி
யண்டந்துழாவவெழுந்தன்றடலேறுமாதோ. (கங)

நெற்றித்தனியோடைநிமிர்ந்துமறிந்தகோட்டிற்
பற்றிச்சுடர்செம்மணிப்பூண்பிறைபையநாகஞ்
சுற்றிக்கிடந்தாலெனத்தோன்றவெள்ளாழியீன்ற
கற்றைக்கதிர்போற்பருமம்புறங்கௌவிமின்ன. (கச)

கோட்டுப்பிறைகால்குளிர்வெண்கதிர்க்கற்றைபோலச்
சூட்டுக்கவரித்தொடைத்தொங்கலுநெற்றிமுன்னூப்
பூட்டுத்தரளமுகவட்டும்பொலியப்பின்னன்
மாட்டுச்சதங்கைத்தொடைகல்லெனவாய்விட்டார்ப்ப. (கரு)

பணிநாவசைக்கும்படியென்னக்கழுத்தில்வீர
மணிநாவசைப்பநகைமுத்தின்வகுத்ததண்டைப்
பிணிநாண்சிறுகிண்கிணிப்பிப்பலமாலைத்தொங்க
லணிநாணலம்பச்சிலம்பார்ப்பவடிகணூன்கும். (கசு)

அடியிட்டுநிலங்கிளைத்தண்டமெண்டிக்கும்போர்ப்பப்
பொடியிட்டுயிர்த்துப்பொருகோட்டினிற்குத்திக்கொத்திட்
டிடியிட்டதிர்காரெதிரேற்றெழுந்தாங்குநோக்கிச்
செடியிட்டிருகண்ணழல்சிந்தநடந்ததன்றே. (கஎ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பால்கொண்டநிழல்வெண்டிங்கட்பகிர்கொண்டமருப்பிற்கொண்மூச்
சூல்கொண்டவயிற்றைக்கீண்டுதுள்ளியோர்வெள்ளிக்குன்றஞ்
கால்கொண்டுநடந்தாலென்னக்கடிந்துடன்றுவைச்சீற்ற
மேல்கொண்டுநாற்றம்பற்றிவீங்குயிர்ப்பெறிந்துகிட்டா. (கஅ)

குடக்கதுகுணக்கதென்னக்குணக்கதுகுடக்கதென்ன
வடக்கதுதெற்கதென்னத்தெற்கதுவடக்கதென்ன
முடுக்குறுமருப்பிற்கோத்துமுதுகுகீழாகத்தள்ளு
மெடுக்குறுமலையைக்கால்பேர்த்தெனத்திசைப்புறத்துவீசும். (ககூ)

---

(கங) துண்டம் - மூக்கு. அடல்ஏறு என்றது - அதிகாரநந்தியை. (கச) ஓடை - நெற்றிப்பட்டம். வெள் ஆழி - திருப்பாற்கடல். பருமம் - கவசம்.

(கரு) கோடு-கொம்பு. கால்-கக்குகின்ற. பூட்டுத் தரளமாவது-பருத்தமுத்து முற்படப்புனைதல். (கசு) கிண்கிணி - சிறுசதங்கை. பிப்பலம் - அரசிலை. (கஎ) செடி - ஒளி. (கஅ) நாற்றம்பற்றி என்றது - விலங்கினங்கள் மோப்பமுற்றுச் செல்லுதலை.

கொழுமணிச்சிகரகோடிசிதைபடக்குவட்டில்வீசும்
பழுமரச்செறிவில்வான்றேய்ப்பணைபிறவெறியும்வானின்
விழுமறப்பசுப்போல்வீழவேலைவாய்வீசுமிங்ஙன்
செழுமதிக்கோட்டுநந்தித்தேவிளையாடல்செய்து. (உ0)

பூரியரெண்ணியாங்கேபொருதுபிருற்றஞ்செய்யா
தாரியவிடைதன்மாண்டவழகினைக்காட்டக்காமுற்
றீரியநறும்பூவாளியேறுபட்டாவியோடும்
வீரியம்விடுத்துவீழ்ந்துவெற்புருவாயிற்றன்றே. (உக)

வாங்கினபுரிசைமாடமாநகரானுவின்பந்
தூங்கினவரவாய்வேம்பின்றேடவிழ்தாரான்றிண்டோள்
வீங்கினவிரவிதோன்றவீங்கிருளுடைந்ததென்ன
நீங்கினநாணமோடுநிரையமண்குழாங்களெல்லாம். (உஉ)

உலகறிகரியாத்தன்பேருருவினையிடபக்குன்றுக்
குலவுறநிறுவிற்சூக்கவடிவினுற்குறுகிக்கூடற்
றலைவனைவணங்கவீசன்றண்ணருள்சுரந்துபண்டை
யிலகுருவாகியிங்ஙனிருக்கெனவிருத்தினுனே. (உங)

அந்நிலைநகருளாருமரசனுமகிழ்ச்சிதூங்கிச்
சந்நிதியிருந்தநந்திதாளடைந்திறைஞ்சிப்போக
மின்னவிர்சடையானந்திவென்றிசால்வீறுநோக்கி
யின்னமுதனையாளோடுங்களிசிறந்திருக்குநாளில். (உச)

அவ்விடைவரைமேன்முந்நீரார்கலியிலங்கைக்கேகுந்
தெவ்வடுசிலையிராமன்வானரசேனைசூழ
மைவ்வரையனையதம்பிமாருதிசுக்கிரீவ
னிவ்விடல்வீரரோடுமெய்தியங்கிறுத்தான்மன்னே. (உரு)

அன்னதுதெரிந்துவிந்தமடக்கியமுனியங்கெய்தி
மன்னவற்காக்கங்கூறிமழவிடைக்கொடியோன்கூடற்
பன்னரும்புகழ்மையோதுபனுவலையருளிச்செய்ய
முன்னவன்பெருமைகேட்டுமுகிழ்த்தகைமுடியோனுகி. (உசு)

---

(உ0) பணை-கிளை. வானில்விழும் அறப்பசு என்றது-தூருவாசமுநிவர் சாபத்தால் கடலில்விழுந்த காமதேநுவை. (உக) பூரியர்-கீழ்மக்கள். ஈரிய - குளிர்ந்த. (உஉ) அரம்-ஓர்விதவாள்.

(உங) பேர்உரு-தூலவடிவம். பண்டை இலகு உரு-முன்னுள்ளசிலாவடிவம். சூக்கம்-இதுசூக்குமம் என்னும் பிராகிருதச்சிதைவு.

(உரு) விடைவரை-இடபக்குன்று. மைவரை-நீலமலை. தம்பி-இலக்குமணன். (உசு) விந்தமடக்கியமுநி - அகத்தியமுநிவர்.

முனியொடுகுறுகிச்செம்பொன்முளரியுண்மூழ்கியாதித்
தனிமுதலடியைவேணிமுடியுறத்தாழ்ந்துவேத
மனுமுறைசிவாகமத்தின்வழிவழாதருச்சித்தேத்திக்
கனிவுறுமன்பிலாழ்ந்துமுடிமிசைக்கரங்கள்கூப்பி. (உஎ)

புங்கவசீவன்முத்திபுராதிபபுனிதபோக
மங்கலமெவற்றினுக்குங்காரணவடிவமான
சங்கரினதுதெய்வத்தானங்களனந்தமிந்த
வங்கண்மாஞாலவட்டத்துள்ளனவவைகடம்மில். (உஅ)

கலிநிலைத்துறை.

அற்புதப்பெரும்பதியிந்தமதுரையீதாற்றப்
பொற்புடைத்தென்பதெவன்பலபுவனமுநின்பாற்
கற்புவைத்துயநீசெய்தகருமத்தின்விருத்தம்
வெற்புருக்களாய்ப்புடைநின்றுவிளங்கலான்மன்னே. (உகூ)

கண்டவெல்லையிற்றுன்பங்கள்களைதற்குமளவைக்
கண்டரும்பெருஞ்செல்வங்களளித்தற்குங்கருணை
கொண்டுநீயுறைசிறப்பினுற்குளிர்மதிக்கண்ணி
யண்டவாணவிவ்விலிங்கத்துக்கொப்புவேறுமோ. (௩0)

தோய்ந்திடும்பொழுதீட்டியதொல்வினைப்படல
மாய்ந்திடும்படிமாய்த்துநின்மங்கலபோக
மீந்திடும்படிக்கிருந்தமாதீர்த்தத்தினியல்பை
யாய்ந்திடும்பொழுததற்கொருதீர்த்தமொப்பாமோ. (௩க)

எத்தலத்தினுமொவ்வொன்றுவிழுமிதாமிந்த
மெய்த்தலத்திலிம்மூவகைவிழுப்பமும்விளங்கு
மத்தவர்தலாலித்தலமடைந்தவரெவர்க்குஞ்
சித்தசுத்தியும்பல்வகைச்சித்தியும்பயக்கும். (௩உ)

அடியனேனெண்ணுங்கருமமுஞ்சரதமேயாக
முடியுமாவரிதச்செயன்முடியுமெப்படியப்
படிபுரிந்தருள்கடிதெனப்பணிந்தனன்பரனு
நெடியவான்படுமமுதெனவெதிர்மொழிநிகழ்த்தும். (௩௩)

---

(உகூ) அற்புதம் - ஞானம். கற்பு — உறுதி. கருமத்தின் விருத்தம் - திருவிளையாடலின் சரித்திரம். (௩க) மங்கலபோகம்-சிவபோகம். (௩உ) சித்தசுத்தியாவது-நித்தநைமித்தியகருமங்களைச் சிவார்ப்பணமாகச் செய்தலால் வரும்பேறு. பல்வகைச்சித்தி என்றது-அணிமாமுதலிய வெண்வகைச்சித்திகளை. (௩௩) சந்தம்-உண்மை.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

இரவிதன்மரபின்வந்தவிராமகேளமக்குத்தென்கீழ்
விரவியதிசையிற்போகிவிரிகடற்சேதுகட்டிக்
கரவியவுள்ளக்கள்வன்கதிர்முடிபத்துஞ்சிந்தி
யரவமேகலையினளையருஞ்சிறையழுவநீக்கி. (௩௪)

மீண்டுநின்னயோத்தியெய்திவிரிகடலுலகம்பன்னு
ளாண்டினிதிருந்துமேனுள்வைகுண்டமடைவாயாக
வீண்டுநீகவலைகொள்ளேலெனவசரீரிகேட்டு
நீண்டவன்மகிழ்ந்துதாழ்ந்துநிருத்தனைவிடைகொண்டேகி. (௩௫)

மறைப்பொருளுரைத்தோன்சொன்னவண்ணமே யிலங்கையெய்தி
யறத்தினைத்தின்றபாவியாவிதின்றனையான்செல்வத்
திறத்தினையிளவற்கீந்துதிருவிராமேசங்கண்டு
கறைப்படுமிடற்றினனையருச்சித்துக்கருணைவாங்கி. (௩௬)

பற்றியபழியினீந்தியிந்திரன்பழியைத்தீர்த்த
வெற்றிகொள்விடையினனைமீளவும்வந்துபோற்றி
யற்றிரளனையகோதைகற்பினுக்கரசியோடுஞ்
சுற்றியசடையிராமன்றென்னகரடைந்தானிப்பால். (௩௭)

கலிநிலைத்துறை.

செங்கோலனந்தகுணமீனவன்றேயங்காப்பக்
கொங்கோடவிழ்தார்க்குலபூடணன்றன்னையீன்று
பொங்கோதைஞாலப்பொறைமற்றவன்பாலிறக்கி
யெங்கோனருளாற்சிவமாநகரேறினனே. (௩௮)

மாயப்பசுவைவதைத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் - ௩௮ - க்கு - திருவிருத்தம் - க௬௬௩.

---

(௩௪) விரவியதிசை - தெற்குங் கிழக்குங்கலந்த தென்கீழ்த் திசை.

(௩௬) பாவிஎன்றது - மகாபாதகனாகிய இராவணனை - இளவல்-இளையவனாகிய விபீடணன்.

(௩௭) பற்றியபழி - இராவணனைக்கொன்ற பிர்மகத்தி. கற்பினுக்கரசிஎன்றது-சானகியை.

(௩௮) கொங்கு - மகரந்தம்.

உ

சிவமயம்.

முப்பதாவது,

# மெய்க்காட்டிட்ட படலம்.

கொச்சகக்கலிப்பா.

பாவமெனவடிவெடுத்தபடிற்றமணர்பழித்தழல்செய்
தேவவருமறப்பசுவையேறுயர்த்தோன்விடைநந்திக்
காவலனைவிடுத்தழித்தகதையுரைத்துமட்டாலைச்
சேவகன்மெய்க்காட்டிட்டுவிளையாடுந்திறமுரைப்பாம். (க)

வெவ்வியமும்மதயானைவிறற்குலபூடணன்சமண
ரவ்வியவஞ்சனைகடந்தவனந்தகுணச்செழியன்பாற்
செவ்வியசெங்கோல்வாங்கித்திகிரிதிசைசெலவுருட்டி
யவ்வியவெங்கலிதுரந்துமண்காத்துவருகின்றான். (உ)

சவுந்தரசாமந்தனெனத்தானைகாவலனொருவன்
சிவந்தசடைமுடியண்ணலடியவரேசிவமாகக்
கவர்ந்தொழுகியருச்சிக்குங்கடப்பாட்டினெறிநின்றே
னுவந்தரசற்கிருமைக்குந்துணையாகியொழுகுநாள். (ங)

வல்வேடர்க்கதிபதியாய்வருசேதிராயனெனும்
வில்வேடனொருவனவன்விறல்வலியான்மேலிட்டுப்
பல்வேறுபரிமான்றேர்ப்பஞ்சவன்மேற்படையெடுத்துச்
செல்வேனென்றறவலித்தான்றென்னர்பிரானதறிந்தான். (ச)

தன்னதுதாணிழனின்றசாமந்தன்றனைப்பார்த்தெம்
பொன்னறைதாழ்திறந்துநிதிமுகந்தளித்துப்புதிதாக
வின்னமுநீசிலசேனையெடுத்தெழுதிக்கொள்கென்று
னன்னதுகேட்டசனடிக்கன்புளானென்செய்வான். (ரு)

தென்னவர்கோன்பணித்தபணிபின்றள்ளசிந்தையிலன்
புன்னவரனருள்வந்துமுன்னீர்ப்பவொல்லைபோய்ப்

(உ) அவ்வியம்-பொறாமை. திகிரி-சக்கரம். கலி - துன்பம்.

(ங) தானைகாவலன்-சேனாபதி. கடப்பாடு - உறுதி. இருமை-இம்மை, மறுமை. (ச) வலித்தல் - ஊக்கத்தாற்றுணிதல்.

(ரு) சாமந்தன் என்றது - சௌந்தரசாமந்த னென்னுஞ் சேனாபதியை. (சு) ஒல்லை - விரைவு. அறத்தாறு - தருமவழி. ஈட்டல்-சேர்த்தல்.

பொன்னறைதாழ்திறந்தறத்தாறீட்டியிடும்பொற்குவையுட்
டன்னதுளத்தவாவமையத்தக்கநிதிகைக்கவரா. (௬)

எண்ணிறந்தகளிப்பினொடெந்திருக்கோயிலிடத்தணைந்து
கண்ணிறைந்தபொன்முளரிக்கயந்தலைநீர்படிந்துதன்
றுண்ணிறைந்தமெய்யன்பினொளியுருவாய்முளைத்தெழுந்த
பண்ணிறைந்தமறைப்பொருளைப்பணிந்திறைஞ்சியிதுவேண்டும். ()

பண்ணியனுன்மறைவிரித்தபரமேட்டியெங்கோமா
னெண்ணியகாரியமுடிப்பாயிவையுனக்குமுன்னடிக்கீ
ழண்ணியமெய்யடிவர்க்குமாதக்கவெனவிரந்தப்
புண்ணியமாநிதிமுழுதுமவ்வழியேபுலப்படுப்பான். (அ)

அண்டமுகடுரிஞ்சிநிமிர்கோபுரமுமாயிரக்கான்
மண்டபமுங்கண்டிகையும்வயிரமணிகோளகையுங்
குண்டலமுந்தண்டரளக்குடைநிரையுங்கொடிநிரையுங்
கண்டனன்முன்னவனருளாற்பிறப்பேழுங்கரைகண்டோன். (௯)

வானுடர்க்கவியுணவின்வகைமுந்நூன்மன்றன்முத
னனவாஞ்சிறுவேள்விநான்மறையோர்க்கறுசுவையி
னனதபேருண்டிதுறவடைந்தோர்க்கருத்துபலி
தானுதிபலவேறுதருமநனிதழைவித்தான். (௧0)

எவரேனுமுருத்திரசாதனங்கண்டாலெதிர்வணங்கி
யவரேநம்பிறப்பறுக்கவடிவெடுத்தவரனென்று
கவராதவன்புள்ளங்கசிந்தொழுகவருச்சித்துச்
சுவையாறினமுதருத்தியெஞ்சியவின்சுவைதெரிவான். (௧௧)

இன்றைக்காயிரநாளைக்கிருமடங்குவருநாட்கு
மன்றைக்கன்றிருமடங்காவரசனதுபொருளெல்லாங்
கொன்றைச்செஞ்சடையார்க்குமடியார்க்குங்கொடுப்பதனைத்
தென்றற்கோன்செவிமடுத்தார்சேனைக்கோனிதுசெய்வான். (௧௨)

---

(அ) பரமேட்டி-உயர்ந்த நிலையிலுள்ளவன். அண்ணிய-கலந்த. ஆதக்க - ஆகக்கடவன. புலப்படுத்தல்-செலுத்தல்.

(௯) கோளகை-வாகுவலயம். (௧0) முந்நூன்மன்றல்-உபவீதகல்யாணம். பலி-பிச்சை. (௧௧) உருத்திரசாதனம் என்றது - விபூதி உருத்திராக்கமுதலிய சிவசின்னங்களை.

(௧௨) அன்றைக்கன்றிருமடங்காய் என்றது-ஒவ்வொருநாளும் இவ்விருமடங்காய்ச் செய்தமையை. தென்றற்கோன் என்றது-தென்றலுக்கிடமாகிய பொதியமலைக்குத் தலைவனாதலின்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

காவலனவையத்தெய்திக்காரியஞ்செய்வாரோடு
மேவினன்பிறநாட்டுள்ளவீரர்க்குவெறுக்கைபோக்கிச்
சேவகம்புதியவோலைசெலவிடுத்தழைப்பான்போலப்
பாவகஞ்செய்துதீட்டிப்பட்டிமையோலையுய்ப்பான். (௧௩)

எழுதுகதெலுங்கர்க்கோலையெழுதுககலிங்கர்க்கோலை
யெழுதுகவிராடர்க்கோலையெழுதுகமராடர்க்கோலை
யெழுதுககொங்கர்க்கோலையெழுதுகவங்கர்க்கோலை
யெழுதுகதுருக்கர்க்கோலையென்றுபொய்யோலைவிட்டான். (௧௪)

எங்குமிப்படியேயோலைசெலவிடுத்திருப்பவாறு
திங்களினளவுமந்தச்சேவகர்வரவுகாணு
தங்கதிர்வேலான்சேனைக்கரசனையழைத்துநாளை
வெங்கதிர்படுமுன்சேனையாவையும்விளித்தியென்றான். (௧௫)

என்றமன்னவனுக்கேற்கச்சாமந்தனிசைந்துவெள்ளி
மன்றவனடிக்கீழ்வீழ்ந்துவள்ளலேயரசனீந்த
குன்றுறழ்நிதியமெல்லாங்கொண்டெனைப்பணிகொண்டாயே
வன்றிறற்சேனையீட்டும்வண்ணம்யாதென்னநின்றான். (௧௬)

அடியவர்குறைவுதீர்த்தாண்டருள்வதேவிரதம்பூண்ட
கொடியணிமாடக்கூடற்கோமகன்காமற்காய்ந்த
பொடியணிபுராணப்புத்தேட்புண்ணியனருளினாலே
யிடியதிர்விசும்புகீறியெழுந்ததோர்தெய்வவாக்கு. (௧௭)

சூழ்ந்தெழுசேனையோடுந்தோற்றுதுநாளைநீயும்
வீழ்ந்தரசவையத்தெய்திமேவுதியென்னவிண்ணம்
போழ்ந்தெழுமாற்றங்கேட்டுப்பொருநரேறுவகைவெள்ளத்
தாழ்ந்தனன்முந்நீர்வெள்ளத்தலர்கதிரவனுமாழ்ந்தான். (௧௮)

மீனவன்காணமேருவில்லிதன்றமரைவன்கண்
மானவேன்மறவராக்கிவாம்பரிவீரனுகத்
தானுமோர்கூத்துக்கோலஞ்சமைந்துவந்தாடவிட்ட
நீனிறவெழினிபோலக்காரிருணிவந்ததெங்கும். (௧௯)

புண்ணியமனையிற்போகிப்புலர்வதெப்போழ்தென்றெண்ணி
யண்ணல்சாமந்தன்றுஞ்சானடிக்கடியெழுந்துவானத்

---

(௧௩) பட்டிமை - வஞ்சனை. (௧௮) மாற்றம் - சொல்.

(௧௯) தன்தமர் என்றது - தனது பிரமதகணங்களை. எழினி-திறை.

தெண்ணிறைமீனநோக்கிநாழிகையெண்ணியெண்ணிக்
கண்ணுதலெழுச்சிகாண்பானளந்தனன்கங்குலெல்லாம். (௨0)

தெருட்டருமறைகடேருச்சிவபரஞ்சுடரோனன்பன்
பொருட்டொருவடிவங்கொண்டுபுரவிமேற்கொண்டுபோது
மருட்படையெழுச்சிகாண்பான்போலவார்கலியின்மூழ்கி
யிருட்கெள்கழுவித்தூயவிரவிவந்துதயஞ்செய்தான். (௨௧)

பொருநரேறனையானேர்ந்துபோந்துநான்மாடக்கூடற்
கருணைநாயகனைத்தாழ்ந்துகைதொழுதிரந்துவேண்டிப்
பரவிமீண்டொளிவெண்டிங்கட்பன்மணிக்குடைக்கீழேகிக்
குருமதிமருமான்கோயில்குறுகுவான்குறுகுமெல்லை. (௨௨)

கரைமதியெயிற்றுச்சங்குகன்னன்முன்னனவென்றிப்
பிரமதகணமுங்குண்டப்பெருவயிற்றொருவனாதி
வரைபுரைகுறுந்தாட்பூதமறவமுங்குழுமிவீக்கு
குரைகழல்வலியநோன்றாட்கோளுடைவயவராகி. (௨௩)

நெட்டிலைவடிவாள்குந்தந்தோமரநேமிநெய்த்தோ
ரொட்டியகணிச்சிசாபமுடம்பிடிமுதலாவெண்ணப்
பட்டவெம்படைமூவாறும்பரித்தசெங்கையர்காலிற்
கட்டியகழலர்காலிற்கடியராய்ப்புறம்புகாப்ப. (௨௪)

வார்கெழுகழற்கானந்திமாகாளன்பிருங்கிவென்றித்
தார்கெழுநிகும்பன்கும்போதரன்முதற்றலைவர்யாரும்
போர்கெழுகவசந்தொட்டுப்புண்டரநுதலிற்றீட்டிக்
கூர்கெழுவடிவாளேந்திக்குதிரைச்சேவகராய்ச்சூழ. (௨௫)

கற்றைச்சாமரைகள்பிச்சங்கவிகைபூங்கொடிக்காடெங்கு
முற்றக்காரொலியுநாணத்தூரியமுழுதுமேங்கக்
கொற்றப்போர்விடையைத்தானேகுரங்குளைப்பரியாமேற்கொண்
டொற்றைச்சேவகராய்மாறியாடியவொருவர்வந்தார். (௨௬)

---

(௨௧) தெருள் - ஞானம். அன்பன் என்றது - சௌந்தரசாமந்தனை. ஆர்கலி-சமுத்திரம். (௨௨) பொருநர்-வீரர். குரு - நிறம்.

(௨௩) வீக்கல்-கட்டல். நோன்-வலிமை. (௨௪) நெய்த்தோர்-உதிரம். கணிச்சி-மழு. சாபம்-வில். உடம்பிடி-வேல். கால்-காற்று.

(௨௬) பிச்சம்-பீலிக்குடை. தூரியம் - வாச்சியம். குரங்கு-தொங்குகின்ற. உளை - புறமயிர். மாறியாடிய ஒருவர் கான்மாறியாடிய பெருமான்.

பல்லியமொலிக்குமார்ப்பும்பாய்பரிகலிக்குமார்ப்புஞ்
செல்லொலிமழுங்கமள்ளர்தெழித்திடுமார்ப்புமொன்றிக்
கல்லெனுஞ்சும்மைத்தாகிக்கலந்தெழுசேனைமேனாண்
மல்லன்மாநகர்மேற்சீறிவருகடல்போன்றதன்றே. (உஎ)

சேனையின்வரவுநோக்கித்திருமகன்றிருமுன்னேகுந்
தானையர்தலைவன்றென்னன்றாணிழல்குறுகிக்கூற
மீனவனுவகைபூத்துவெயின்மணிக்கடையிற்போந்தங்
கானமண்டபத்திற்செம்பொனரியணைமீதுவைகி. (உஅ)

தெவ்வடுமெகிழ்ச்சிபொங்கச்சேனையின்செல்வநோக்கி
யெவ்வெத்தேயத்திலுள்ளாரிவரெனவெதிரேநின்று
கௌவையின்மனச்சாமந்தன்கையிற்பொற்பிரம்புநீட்டி
யவ்வவர்தொகுதியெல்லாமணியணிநிறுவிக்கூறும். (உகூ)

கலிவிருத்தம்.

கொங்கரிவரையகுருநாடரிவரைய
கங்கரிவரையகருநாடரிவரைய
வங்கரிவரையவிவராரியர்களைய
வங்கரிவரையவிவர்மாளவர்களைய. (௩0)

குலிங்கரிவரையவிவர்கொங்கணர்களைய
தெலுங்கரிவரையவிவர்சிங்களர்களைய
கலிங்கரிவரையகௌடத்தரிவரைய
வுலங்கெழுபுயத்திவர்களொட்டியர்களைய. (௩க)

கொல்லரிவரையவிவர்கூர்ச்சரர்களைய
பல்லரிவரையவிவர்ப்பப்பரர்களைய
வில்லரிவரையவிவர்விதேகரிவரைய
கல்லொலிகழற்புனைகடாரரிவரைய. (௩உ)

கேகயர்களாலிவர்கள்கேழ்கிளர்மணிப்பூண்
மாகதர்களாலிவர்மராடரிவர்காஞ்சி
நாகரிகராலிவர்கணம்முடையநாட்டோ
ராகுமிவர்தாமெனமெய்காட்டியறிவித்தான். (௩௩)

இத்தகையசேட்புலனுளாரையிவணுய்த்த
வித்தகைமையென்னெனவினவியருள்செய்யே

---

(உகூ) தெவ் என்றது - சேதிராயனாகியபகைவனை. கௌவை-மனக்கவலை. (௩க) உலம் - திரண்டகல்.

லத்தநினரும்பொருளனைத்தும்வரையாதே
யுய்த்தலினடைந்தனர்களாலெனவுரைத்தான். (௩௪)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அந்நெடுஞ்சேனைதன்னுட்சேணிடையடன்மாவூர்ந்து
பின்னுறநிற்குமொற்றைச்சேவகப்பிரானைநோக்கி
மன்னவனிவர்யாரென்னச்சாமந்தன்வணங்கியைய
வின்னவர்சேனைவெள்ளத்தியாரையென்றறிவதென்றான். (௩௫)

அவரையிங்கழைத்தியென்றானரசன்றன்வழிச்செல்வார்போற்
கவயமிட்டவரும்போந்தார்காவலன்களிகூர்ந்தம்பொன்
னவமணிக்கலன்பொன்னுடைநல்கினுனுள்ளத்தன்பு
நவறிலான்பொருட்டுவாங்கித்தரித்துத்தன்றமர்க்குமீந்தார். (௩௬)

ஆய்ந்தவெம்பரிமாத்தூண்டியைங்கதிநடத்திக்காட்டி
யேய்ந்ததஞ்சேனைவெள்ளத்தெய்தினுரெய்துமெல்லை
வேய்ந்ததார்ச்சேதிராயன்வேட்டைபோய்ப்புலிகோட்பட்டு
மாய்ந்தனனென்றோரொற்றன்வேந்தன்முன்வந்துசொன்னான். ()

முரசதிரணிகநோக்கிமுகமலர்ந்துவகைபூத்த
வரசனுமனிகவேந்தற்களவில்சீர்த்தலைமையோடும்
வரிசைகண்மிதப்பநல்கிவந்துமெய்க்காட்டுத்தந்து
பரசியபதாதிதத்தம்பதிபுகச்செலுத்துகென்றான். (௩௮)

அறைந்தவார்கழற்காற்சேனைகாவலனனிகந்தத்தஞ்
சிறந்தசேனாட்டிற்செல்லச்செலுத்துவான்போன்றுநிற்ப
நிறைந்தநான்மாடக்கூடனிருத்தனந்நிலைநின்றாங்கே
மறைந்தனன்மனிதவேடங்காட்டியமறவரோடும். (௩௯)

கண்டனன்பொருனைநாடன்வியந்தனன்கருத்தாசங்கை
கொண்டனன்குறித்துநோக்கியீதுநங்கூடன்மேய

(௩௪) வரையாது - அளவில்லாமல். வரை - அளவு.

(௩௫) சேண்-தூரம். (௩௬) கவசம் - கவயம்எனத்திரிந்தது.

(௩௭) பரிமா - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ஐங்கதி யாவன - கவுரிதகம் - (மெல்லியநடை.) ஆக்கிரந்திதம் - (விரைவுடை.) வல்சிதம் - இருகாற்றூக்கி யாடிவருநடை.) இரேசிதம் - சுற்றிஓடல்.) புலிதம் - (முழுவோட்டம்) என்பன (௩௮) அனிகம்-சேனை. பரசல்-துதித்தல். (௪0) ஆசங்கை - சந்தேகம். அன்பு வடிவம் என்றது - பசுகரணங்கெட்டு சிவகரணமாய் நிற்றலை.

வண்டர்தம்பெருமான்செய்தவாடலென்றெண்ணிக்கண்ணீர்
விண்டனன்புளகம்போர்ப்பமெய்யன்புவடிவமானான். (௪௦)

தனக்குயிர்த்துணையாநின்றசாமந்தன்றன்னைநோக்கி
யுனக்கெளிவந்தார்கூடலுடையநாயகரேயென்று
லெனக்கவராவார்நீயேயென்றவற்கியாவுநல்கி
மனக்கவல்பின்றிவாழ்ந்தான்மதிவழிவந்தமைந்தன். (௪௧)

மெய்க்காட்டிட்டபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௧ - க்கு - திருவிருத்தம் - ௧௭௦௪.

---

## முப்பத்தோராவது,

## உலவாக்கிழியருளிய படலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அடியார்பொருட்டுப்பரிவயவராகிச்செழியன்காணவிடைக்
கொடியார்வந்துமெய்க்காட்டுக்கொடுத்தவண்ணமெடுத்துரைத்து
கடியார்கொன்றைமுடியாரக்கன்னிநாடன்றனக்கிசைந்த
படியாலுலவாக்கிழிகொடுத்தபடியையறிந்தபடிபகர்வாம். (௧)

வள்ளல்குலபூடணன்றிங்கள்வாரந்தொடுத்துச்சிவதரும
முள்ளவெல்லாம்வழாதுநோற்றொழுகும்வலியாற்றன்னாட்டி
லெள்ளலில்லாவேதியரையிகழ்ந்தானதனான்மழைமறுத்து
வெள்ளமருகவளங்குன்றிவிளைவஃகியதுநாடெல்லாம். (௨)

அரவோரெல்லாநிரப்பெய்தியாகங்கிடந்தநூலன்றி
மறைநூலிழந்துமுனிவேள்விவானோர்வேள்விதென்புலத்தி [பான்
னுறைவோர்வேள்வியிழந்திழிந்ததொழில் செய்தாற்றுதுயிர்வளர்ப்
புறநாடணைந்தார்பசியாலேபுழுங்கியொழிந்தகுடியெல்லாம். (௩)

எந்நாடணைவோமெனவிரங்கவிரங்கிமதிக்கோன்மதிநாளிற்
பொன்னுண்முளரித்தடங்குடைந்துசித்திக்களிற்றைப்பூசித்துத்
தன்னாதரவாற்கயற்கண்ணிதலைவன்றன்னையருச்சித்து
முன்னாவீழ்ந்துகரமுகிழ்த்துப்பழிச்சிமகிழ்ந்துமொழிகின்றான். (௪)

---

(௧) வயவர்-வீரர். உலவாக்கிழி-எடுக்க எடுக்கக் குறைபடாப் பொன்முடிப்பு. (௨) அஃகல்-சுருங்கல். (௩) நிரப்பு-வறுமை.
(௪) ஆதரவு - அன்பு.

அத்தவுலகி லுயிர்க்குயிர்நீயல்லையோவவ்வுயிர்பசியா
லெய்த்தவருத்தமடியேனைவருத்துமாறென்யானீட்டி
வைத்தபொருளுந்தருமத்தின்வழியேசென்றதினியடிகள்
சித்தமலர்ந்தென்னிடும்பைவினைதீரவருட்கண்செய்கவென. (ரு)

கோளாடரவமரைக்கசைத்தகூடற்பெருமான்குறையிரக்கு
மாளாவரசன்றவறுசிறிதகங்கொண்டதனைத்திருச்செவியிற்
கேளார்போலவாளாதேயிருப்பமனையிற்கிடைத்தமலன்
றாளாதரவுபெறநினைந்துதரையிற்கிடந்துதுயில்கின்றான். (சு)

அங்கண்வெள்ளியம்பலத்துளாடுமடிகள்வன்கனவிற்
சங்கக்குழையும்வெண்ணீறுஞ்சரிகோவணமுந்தயங்கவுரன்
சிங்கநாதங்கிடைந்தசையச்சித்தவடிவாயெழுந்தருளி
வெங்கண்யானைத்தென்னவர்கோன் முன்னின்றிதனைவிளம்புவார்.

ஏடாரலங்கல்வரைமார்பவெம்பாலென்றுமன்புடைமை
வாடாவிரதவிழுச்செல்வமுடையாய்வையமறங்கடிந்து [ன்
கோடாதளிக்குஞ்செங்கோன்மை யுடையாயுனக்கோர்குறையுளது
வீடாவளஞ்சேர்நாட்டிந்நாள்வேள்விச்செல்வமருகியதால். (அ)

மறையேநமதுபீடிகையாமறையேநமதுபாதுகையா
மறையேநமதுவாகனமாமறையேநமதுநூபுரமா
மறையேநமதுகோவணமாமறையேநமதுவிழியாகு
மறையேநமதுமொழியாகுமறையேநமதுவடிவாகும். (கூ)

வேதந்தானேநமதாணைச்சத்திவடிவாய்விதிவிலக்காய்ப்
போதங்கொளுத்தி நிலைநிறுத்திப் போகங்கொடுத்துப் பல்லுயிர்க்கு
பேதஞ்செய்யும்பிணியவிழ்த்தெம்பிரியாவீடுதருவதுதே [ம்
ஞதஞ்செய்யுந்தார்வேந்தேநமதுசெங்கோலதுவாகும். (க0)

அந்தமறைகடமக்குறுதியாவாரந்நூல்வழிகலிநோய்
சிந்தமகத்தீவளர்த்தெம்பாற்சிந்தைசெலுத்துமந்தணரா
லிந்தமறையோர்வேள்விமழைக்கேதுவாகுமிவர்தம்மை
மைந்தவிகழ்ந்துகைவிட்டாயதனுன்மாரிமறுத்தன்றால். (கக)

---

(சு) கோள்-வலிமை. (எ) உரன்-மார்பு. சிங்கநாதம்-மான்கொம்பினுற்செய்ததோர் வாத்தியம். சிங்கம், சிருங்கமென்பதன் றிரிபு.

(க0) சத்தி என்றது—திருவருளை. போதம்-அறிவு. பல்லுயிர் என்றது—மூவகையான்மாக்களை. பேதம்-ஐயந்திரிபுமுதலிய விகற்பங்கள். பிணி-அவிச்சை.

மும்மைப்புவனங்களுமுய்யமுத்தீவேட் குமிவர்தம்மை
நம்மைப்போலக்கண்டொழுகிநாளுநாளுவறம்பெருக்கிச்
செம்மைத்தருமக்கோலோச்சித்திகிரியுருட்டிவாழ்தியென
வும்மைப்பயன்போலெளிவந்தாருலவாக்கிழியொன்றுதவுவார். ()

இந்தக்கிழியிலெத்துணைப்பொன்னெடுத்துவழங்குந்தொறுநாங்க
டந்தவளவிற்குறையாததன்மைத்தாகுமிதுகொண்டு
வந்தவிலம்பாடகற்றென்றுகொடுத்துவேந்தன்மனக்கவலை
சிந்தத்திருநீறதுசர்த்திமறைந்தாரையர்திருவுருவம். (கங)

கண்டகனவுநனவாகத்தொழுதானெழுந்துகௌரியர்கோ
னண்டர்பெருமான்றிருவடிபோலம்பொற்கிழியைமுடித்தலைமேற்
கொண்டுமகிழ்ச்சிதலைசிறப்பநின்றோர்முகுர்த்தங்கூத்தாடித்
தண்டாவமைச்சர்படைத்தலைவர்தமக்குங்காட்டியறிவித்தான். ()

செங்கணரிமான்பிடர்சுமந்ததெய்வமணிப்பூந்தவிசேற்றிச்
சங்கமுழங்கமறைமுழங்கச்சாந்தந்திமிர்ந்துதாதொழுகத்
தொங்கலணிந்துதசாங்கவிறைத்தூபநறுநெய்ச்சுடர்வளைத்துக்
கங்கைமிலைந்தகடவுளெனக்கருதிப்பூசைவினைமுடித்தான். (கரு)

அடுத்துவணங்கிவலஞ்செய்திட்டம்பொற்கிழியைப்பொதுநீக்கி
யெடுத்துமுத்தீவினைஞர்க்கும்யாகங்களுக்கும்யாவர்க்கு
மடுத்துநாளும்வரையாறுவழங்கவழங்கவடியார்க்குக்
கொடுக்கக்குறையாவீட்டின்பமாயிற்றையர்கொடுத்தகிழி. (கசு)

---

(கஉ) மும்மைப்புவனம் என்றது—சொர்க்கமத்ய பாதலங்களை. முத்தீ என்றது—ஆகவநீய முதலிய மூன்றக்கினிகளை.

(கங) நாங்கள்-இதில்கள் பகுதிப்பொருள் விகுதி. இலம்பாடு-இது இன்மைபடுதல் என்னும்பொருளதாய் நிற்றலின் முதனிலை திரிந்த தொழிற்பெயர். (கச) தொழுதான் எழுந்து என்றதற்கு-எழுந்துதொழுதான் என்பதுபொருள். இதனை, "கொழுநற்றொழு தெழுவாள்" என்பது, எழுந்துகொழுநற்றொழுவாள், என முன்பின்னாகப் பொருள்படுமெனப் பிரயோக விவேகநூலார் கூறுதலானுமுணர்க. தொழுதான்-முற்றெச்சம்.

(கரு) தசாங்கம் என்றது-ஆவாகனம், தாபனம், சந்நிதானம், சந்நிரோதனம், அவகுண்டனம், தேனுமுத்திரை, பாத்தியம், ஆசமனீயம், அர்க்கியம், புட்பதானம், என்பவற்றை. விரைத்தூபம் என்றது-குந்துருக்கம், பச்சைக்கற்பூரம், காரகில், வெண்சந்தனம். கருஞ்சீதாரி என்பவற்றை. நறுநெய்-கபிலைப்பசுநெய்.

ஆயபொதியில்வளைபொன்னலசும்புசெய்துவிசும்பிழிந்த
கோயிலதனையகம்புறமுங்குயின்றஞானக்கொழுந்தனைய
தாயிலறுகாற்பீடிகைவான்றடவுகொடியநெடியபெரு
வாயில்பிறவுமழகெறிப்பவேய்ந்தான்மறையின்வரம்பறிந்தான். ()

முந்திக்குறையாநிதிக்கடலைமுகந்துமுகந்துநாடோறுஞ்
சிந்திக்குலபூடணக்கொண்டறெய்வதருமப்பயிர்வளர்ப்பப்
பந்தித்திறைமுந்நீர்மேகம்பருகிச்சொரியப்பலவளனு
நந்திக்கன்னிநாடளகைநகர்போற்செல்வந்தழைத்தன்றே. (௧அ)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

வையாகரணர்க ணையாயிகர்மறை வல்லோர்மறைமுடி சொல்லாய்வோர், மெய்யாமிருதிகள் பொய்யாவிரதிகள் வேள்வித்தழல்களை வாழ்விப்போர், பையாடரவணி யையானனனுரை பகர்வோருலகிய லகல்வோர்க, ளெய்யாதுறைதலி னையாதளகைய தென்னப்பொலிவது தென்னாடு. (௧௯)

உலவாக்கிழியருளியபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௧ - க்கு திருவிருத்தம் - ௧௭௨௩.

---

முப்பத்திரண்டாவது,

## வளையல்விற்றபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வேதந்தனதுவடிவென்றுவிண்ணின்றிழிந்தவிமானமறைக்
கீதன்செழியன்றனக்குலவாக்கிழிதந்தளித்தவழியிதுவப்
போதங்கடந்தபொருள்வணிகப்புத்தேண்மாடமணிமறுகு
பாதந்தடவநடந்துவளைபகர்ந்தபரிசுபகர்கிற்பாம். (௧)

---

(௧எ) பொதி-உலவாக்கிழி. வளைபொன்-பொன்னோடு. அசும்பு-ஒளி. தாய் இல் என்றது-அங்கயக்கண்ணியார்திருக்கோயிலை.

(௧அ) நந்தி - பெருகி. (௧௯) வையாகரணர்-இலக்கணிகள். நையாயிகர்-நியாயநூல்கற்றவர். மறைமுடி-உபநிடதம். ஐயானனன்—ஐந்துதிருமுகங்களையுடைய சிவபெருமான். உரை-சிவாகமம். உலகியல்-பாசபந்தம். நைதல்-வருந்தல்.

(௧) போதங்கடந்த - சுட்டறிவிற்கெட்டாத.

இறைவன்குலபூடணன்றிகிரியிவ்வாறுருட்டோண்முன்னுட்
சிறைவண்டறையுந்தாருவனதெய்வமுனிவர்பன்னியர்தந்
நிறைவன்றளந்துகாட்டுகெனநெடியோன்மகனைப்பொடியாக்கு
மறவன்றானோர்காபாலியாகிப்பலிக்குவருகின்றான். (௨)

வேதமசைக்குங்கோவணமுமெய்யினீறுமுள்ளாளக்
கீதமிசைக்குங்கனிவாயுமுள்ளேநகையுங்கிண்கிணிசூழ்
பாதமலரும்பாதுகையும்பலிகொள்கலனுங்கொண்டிரதி
மாதர்கணவன்றவவேடமெடுத்தாலொத்துவருமெல்லை. (௩)

விள்ளுங்கமலச்சேவடிசூழ்சிலம்பினொலியுமிடறதிரத்
துள்ளுங்கீதவொலியுங்கைத்துடியினொலியுந்தொளைச்செவிகீண்
டுள்ளம்பிளந்துநிறைகளைந்தீர்த்தொல்லைவருமுன்வல்லியர்கள்
பள்ளங்கண்டுவருபுனல்போற்பலிகொண்டில்லின்புறம்போந்தார்.

மேற்படி - வேறு.

ஐயங்கொண்டணைவாரையர்பரிகலத்தையமன்றிக்
கையம்பொன்வளையும்பெய்வார்கருத்துநாணன்றிக்காசு
செய்யும்பொன்மருங்குனுமிழப்பர்வேள்சிலையம்பன்றிக்
கொய்யுந்தண்மலர்க்கணம்புங்கொங்கையிற்சொரியச்சோர்வார் (௫)

மடமயிலனையாரெங்கள்வளையினைத்தருதிரென்றார்
கடல்விடமயின்றானுங்கள்கந்தரத்துள்ளதென்றான்
நடமதிக்கொம்பனாரெங்கலையினைத்தருதிரென்றார்
முடமதிமிலைந்தானுங்கண்முகமதியிடத்ததென்றான். (௬)

இடையறிந்தெம்மைச்சேர்மினென்றனரிளையரெங்கோன்
கடலமுதனையீர்நுங்கட்கிடையினிக்காணுமென்றான்
மடநலாரஃதேற்பண்டைவண்ணமீந்தில்விற்செல்ல
விடையளித்தருண்மினென்றார்வேலைபுக்குறங்குமென்றான். (௭)

---

(௨) தெய்வமுனிவர் என்றது-பிரமன்புதல்வராதலின். நிறை-கற்பு. நெடியோன்மகன்-மன்மதன். மறவன்-வீரன். காபாலி-கபாலம் ஏந்தினவன். கபாலம்-தலையோடு. பலி-பிச்சை.

(௩) உள்ளாளக்கீதம் என்றது—ஒற்றின் மாத்திரைதோன்ற உள்ளேயிசைக்கும் ஆளத்தியை; அதனைவழக்கில் கனம் என்பர்.

(௪) கீதம்-இராகம். துடி-தமருகம். வல்லியர் என்றது—வல்லிக்கொடிபோன்ற இடையினையுடைய ருஷிபத்தினிகளை.

(௫) ஐயம்-பிச்சை. நாண்-வெட்கம், மேகலை. அம்பு - பாணம், கண்ணீர். (௬) மடம்-இளமை. வளை-வளையல், சங்கு. கந்தரம் - கழுத்து. கலை-வஸ்திரம், ஒளி. முடம் - வளைவு.

(௭) இடை-சமயம், இடுப்பு. வண்ணம்-நிறம். விடை - உத்தரம், திருமால்.

நங்கையர்கபாலிக்கென்றுநடுவிலைபோலுமென்று
ரங்கணனடுவிலாமைநும்மனோர்க்கடுத்ததென்றான்
மங்கையரடிகளெஞ்சம்வலியகற்போலுமென்றார்
கொங்கலர்கொன்றையானுங்கொங்கையேவன்கலென்றான். (அ)

காதுவேலன்னகண்ணார்கங்கைநீர்சுமந்ததேதுக்
கோதுமினென்றார்நும்பாலுண்பலியேற்கவென்று
னேதுபோலிருந்ததையனிசைத்தசெப்பென்றாரீசன்
கோதுராவமுதன்னீர்நுங்கொங்கைபோலிருந்ததென்றான். (௯)

கறுத்ததையெவன்கொலையகந்தரமென்றார்வேளை
வெறுதநவன்மாரிபெய்தற்கென்றனன்விழியால்வேலை
யொறுத்தவர்யாவதென்றீருத்தரமென்றார்கூற்றைச்
செறுத்ததன்றென்பானின்றுநோக்கினாற்றெரிவதென்றான். (௧௦)

செக்கரஞ்சடையான்கண்ணிற்றம்முருத்தெரியநோக்கி
யிக்கொடியார்போற்கண்ணுளெம்மையுமிருத்தீரென்றார்
நக்கனுந்தனையன்னார்கண்ணிடைக்கண்டுநகைத்துநம்மின்
மிக்கவர்நுங்கணுள்ளார்விழித்தவர்க்காண்மினென்றான். (௧௧)

அஞ்சலிப்போதுபெய்வார்சரணமென்றடியில்வீழ்வார்
தஞ்செனத்தளிர்க்கைநீட்டித்தழுவியகிடக்குந்தோறு
மெய்ஞ்சுவானெஞ்சாதேத்தியெதிர்மறையெட்டுந்தோறும்
வஞ்சனையகல்வான்மையல்வஞ்சியர்க்கணியனோமோ. (௧௨)

அடுத்தெமைத்தழாதீரேனீரவிழ்ந்தபூங்கலையைமீள
வுடுத்துமினும்பால்யாங்கண்மையனேயுழப்பநோக்கிக்
கடுத்தெமர்முனியாமுன்னநங்கழற்றியவளையுங்கையி
லெடுத்திடுமென்றார்நாளையிடுதுமென்றேகினானே. (௧௩)

---

(அ) நடு-நடுவுநிலைமை, இடை. கல்-இளகாமை, மலை.

(௯) காதும் - கொல்லும். கங்கைநீர் - முன்னது, கங்காசலம். பின்னது, கம்-பிரமகபாலம். கை-கரம். எனச்சொல்வகைசெய்து. நீர், கபாலத்தைக்கையில் எனப்பொருள்கொள்க. செப்பு - சொல், கிண்ணம். (௧௦) கந்தரம் - கண்டம், மேகம். உத்தரம் - விடை, வடதிசை.

(௧௧) கொடியார்-கொடிபோன்ற இடையையுடையபெண்கள். உரு என்றது-பிரதிபிம்பத்தை. இருத்திர்-இது முன்னிலைப்பன்மை யேவற்பிறவினைமுற்று. (௧௨) போது - மலர். தஞ்சம் - துணை. எஞ்சுவான்-அப்பாற்படுவான். மையல்-காமமயக்கம். வஞ்சி-ஓர்கொடி.

(௧௩) எமர்-எமதுகணவர். முனிவு -கோபம்.

பிள்ளைவெண்டிங்கள்வேய்ந்தபிரான்கொண்டுபோனநாணு
முள்ளமுமீட்கலாற்றாதுயங்கினார்கலையுஞ்சங்குந்
துள்ளவைங்கணையான்வாளிதுளைப்பவெம்பசலையாகங்
கொள்ளைகொண்டுண்ணநின்றாரந்நிலைகொழுநர்கண்டார். (௧௪)

பொய்தவவடிவாய்வந்தநம்மனைப்பொன்னினன்னார்
மெய்தழைகற்பைநாணைவேரொடுங்களைந்துபோன
கைதவன்மாடக்கூடற்கடவுளென்றெண்ணித்தேர்ந்தார்
செய்தவவலியாற்காலமூன்றையுந்தெரியவல்லார். (௧௫)

மேற்படி - வேறு.

கற்புத்திரிந்தார்தமைநோக்கிக்கருத்துத்திரிந்தீர்நீளாழி
வெற்புத்திரிந்தமதிற்கூடன்மேயவணிகர்கன்னியராய்ப்
பொற்புத்திரியாதவதரிப்பீர்போமென்றிட்டசாபங்கேட்
டற்புத்திரிந்தாரெங்களுக்கீதகல்வதெப்போதெனமுனிவர். (௧௬)

அந்தமாடமதுரைநகர்க்கரசாகியசுந்தரக்கடவுள்
வந்துநும்மைக்கைதீண்டும்வழியிச்சாபங்கழியுமெனச்
சிந்தைதளர்ந்தபன்னியருந்தென்னர்மதுரைத்தொன்னகரிற்
கந்தமுல்லைத்தார்வணிகர்காதன்மகளிராய்ப்பிறந்தார். (௧௭)

வளர்ந்துபேதையிளம்பருவமாறியல்குற்புடையகன்று
தளர்ந்துகாஞ்சிமருங்கொசியத்ததும்பியண்ணாந்தரும்புமுலை
கிளர்ந்துசெல்லும்பருவத்திற்கிடைத்தாராகவிப்பான்மண்
ணளந்தவிடைபான்வந்துவளைபகரும்வண்ணமறைகிற்பாம். (௧௮)

கங்கைகரந்துமணிகண்டங்கரந்துநுதற்கண்கரந்தொருபான்
மங்கைவடிவுங்கரந்துழையுமழுவுங்கரந்துமழவிடையூ
ரங்கணழகர்வளைவணிகராகியேனமளந்தறியாச்
செங்கமலச்சேவடியிரண்டுந்திரைநீர்ஞாலமகள்சூட. (௧௯)

பண்டுமுனிவர்பன்னியர்பாற்கவர்ந்தவளையேபட்டுவடங் [போற்
கொண்டுதொடுத்து மீண்டவர்க்கே யிடுவேமெனுமுட் கோளினர்

(௧௪) உயங்கி-வாடி. துள்ள-சோர. பசலை-பசுமைநிறம்.

(௧௫) காலமூன்றாவது-இறப்பு, எதிர்வு, நிகழ்வு என்பன.

(௧௬) வெற்பு-சக்ரவாளகிரி. பொற்பு-அழகு. அற்பு-அன்பு.

(௧௮) பேதை-எழுவயதுப்பெண். கிளர்தல்-தோன்றல். பருவம் என்றது - மங்கைப்பருவத்தை.

(௧௯) கரத்தல் - ஒளித்தல். உழை - மான். ஏனம் என்றது-திருமாலாகியபன்றியை. (௨௦) வடம் - கயிறு. உட்கோள் - உட்கருத்து.

றெண்டர்தொடுத்தவைவண்ணத் துணர்த்தார்போலத் தோள்சுமந்
து, மண்டுவளையைவிலைபகர்ந்துவணிகமறுகில்வருகின்றார். (உ0)

மன்னுமறையின்பொருளுரைத்தமணிவாய்திறந்துவளைகொண்மி
னென்னுமளவிற்பருவமுகிலிமிழின்னிசைகேட்டெழுமயில்போற்
றுன்னுமணிமேகலையிழற்றத்தூயவணிகர்குலமகளிர்
மின்னுமணிமாளிகைநின்றும்வீதிவாயிற்புறப்பட்டார். (உக)

வளைகளிடுவாரெனத்தங்கண்மனமெல்லாந்தம்புடையொதுங்கத்
தளைகளிடுவார்வருகின்றார்தம்மைக்கொம்மைவெம்முலையார்
துளைகளிடுதீங்குழலிசைபோற்சுரும்புபாடக்கருங்குழன்மேல்
விளைகளொழுகநுடங்கிவருமின்போலடைந்துகண்டார்கள். (உஉ)

கண்டவடிவாற்றிளைப்பதற்குக்கழிபேரன்புகாதல்வழிக்
கொண்டுசெல்லவொருசார்தங்குணனாணமுதனான்கு
மண்டியொருசார்மறுதலைப்பமனமுழன்றுதடுமாற
வண்டர்பெருமான்விளையாடற்கமையச்சூழ்ந்தாரமுதனையார். ()

கலிவிருத்தம்.

இரங்குமேகலைசிலம்பன்றியேனைய
விரும்பியகுழைதொடிமின்செய்கண்டிகை
மருங்கிறச்சுமப்பினும்வளைகைக்கில்லெனி
னரும்பியமுலையினார்க்கழகுண்டாகுமோ. (உ௪)

செல்வநல்வணிகிரெஞ்செங்கைக்கேற்பன
நல்வளைதெரிந்திடுமென்றுநாய்கர்முன்
வல்வளரிளமுலைமகளிர்மின்னுமிழ்
கல்வளர்கடகமென்காந்தணீட்டினார். (உரு)

பண்டருகிளவியங்கயற்கட்பாவைகைத்
தண்டளிர்பற்றியதடக்கைமாதர்கைம்
முண்டகம்பற்றியேமுகிழ்த்துப்பல்வரி
வண்டுகளேற்றுவார்மையலேற்றுவார். (உசு)

---

ஐவண்ணம்-ஐந்துநிறம், அதாவது-வெண்மை, கருமை, செம்மை, பசுமை, பொன்மை என்பன. (உக) பருவமுகில் - கார்காலமேகம்.
(உஉ) தளை-விலங்கு. கள்-தேன். (உ௩) ஒருசார் - ஒருபட்சம். மறுதலைப்ப - முரண. (உ௪) தொடி-சூடகம். (உரு) நாய்கர் - வணிகர். வல் - சூதாடுகருவி. கல்-இரத்தினக்கல்.
(உசு) பண் - இசை. கிளவி - சொல். முண்டகம் - தாமரை. வரிவண்டு-கீற்றுகளையுடைய வளையல்.

புங்கவனிடுவளைபுடைத்துமீளவந்
தெங்களுக்கிடவிலையிடுதிராலெனக்
கொங்கவிழ்பைங்குழலெருத்தங்கோட்டிநின்
றங்கரநீட்டுவாராசைநீட்டுவார். (உஎ)

எமக்கிடுமெமக்கிடுமெனப்பின்பற்றியே
யமைத்தடந்தோளினாரனங்கன்பூங்கணை
தமைத்துளைபடுத்தவோர்சார்பிலாமையாற்
கமைப்புறுநாண்முதற்காப்புநீங்கினார். (உஅ)

முன்னிடுவளையெலாங்கழலமுன்புகுழ்ந்
தின்னவைபெரியவேறிடுமென்றிட்டபி
னன்னவுமணையவேயாகமீளவந்
தின்னமுஞ்சிறியவாவிடுமென்றேந்துவார். (உகூ)

பின்னிடுவளைகளுஞ்சரியப்பேதுற
முன்னெதிர்குறுகிநீர்செறித்தமொய்வளை
தன்னொடுகலைகளுஞ்சரிவதேயென
மின்னெனநுடங்கினார்வேனெடுங்கணார். (௩௦)

இவ்வளைபோல்வனயாமுன்கண்டிலே
மெய்வ்வளைவணிகரிவ்வரியவெள்வளை
யெவ்வயினுள்ளவின்றினியவாகியெம்
மெய்வ்வளர்பொடிப்பெழவீக்கஞ்செய்தவே. (௩க)

நாளையும்வளையிடநண்ணுமிங்கென்பார்
கோள்வளைவிலையிதுகொண்டுபோமென்பார்
வாள்விழியீர்பினுள்வாங்கிக்கோடுமென்
றுளரியேறனாராடிப்போயினார். (௩உ)

போயினவணிகர்தம்புடையின்மின்னெனப்
பாயினமகளிரும்பலருங்காணமுன்
மேயினவிண்ணிழிவிமானத்துள்ளொளி
யாயினதிருவுருவாகித்தோன்றினார். (௩௩)

---

(உஎ) புங்கவன் - வணிகன். எருத்தம் - பிடர். கோட்டி - வளைத்து. (உஅ) அமை-மூங்கில். அனங்கன் - உருவமில்லாதவன் (மன்மதன்.) கமைப்பு - சார்பு. (௩௦) பேதுறல் - மயங்கல். செறித்த - தொடுத்த. கலை - மேகலை. ௩க) மெய்வளை என்றது—கூனி யசரீரத்தை. பொடித்தல் - புளகித்தல். வீக்கம் - பூரிப்பு.
(௩௩) புடை - பக்கம். பாயின - பரவிய.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

மட்டலம்புகோதையார்முன்வளைபகர்ந்தவணிகர்தாம்
பட்டிசைந்தவல்குனங்கைபாகராகுமெனவியந்
துட்டதும்புமுவகைவெள்ளமுற்றெழுந்தகுமிழிபோற்
கட்டதும்புபுனலிலாழ்ந்துகளியடைந்தநகரெலாம். (௩௪)

உருவிலாளியுடல்பொடித்தவொருவர்கூடலிருவரான்
மருவிலார்திருக்கைதொட்டுவளைசெறித்தநீர்மையாற்
கருவின்மாதராகிநாய்கர்கன்னிமார்கண்மின்னுவேற்
பொருவில்காளையெனவரம்பில்புதல்வரைப்பயந்தனர். (௩௫)

பிறந்தமைந்தரளவிறந்தபெருமைகொண்டபெருமிதஞ்
சிறந்தவீரமாற்றலேற்றதிறல்புனைந்துவைகினர்
மறந்ததும்புவேனெடுங்கண்வணிகமாதர்சிறிதுநா
டுறந்தரன்றனருளடைந்துதுணையடிக்கண்வைகினர். (௩௬)

வளையல்விற்றபடலம் முற்றிற்று.

ஆக படலம் ௩௨ - க்கு - திருவிருத்தம் - ௧௭௫௧.

---

முப்பத்துமூன்றாவது,

## அட்டமாசித்தியுபதேசித்தபடலம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

கொத்திலங்குகொன்றைவேய்ந்தகூடலாதிமாடநீள்
பத்தியம்பொன்மறுகணைந்துவளைபகர்ந்தபரிசுமுன்
வைத்தியம்பினுமியக்கமாதர்வேண்டவட்டமா
சித்திதந்ததிறமினித்தெரிந்தவாறுசெப்புவாம். (௧)

மின்னலங்கல்வாகைவேல்விழுப்பெருங்குலத்தினிற்
றென்னவன்றனாணைநேமிதிசையெலாமுருட்டுநாண்

---

(௩௪) மட்டு-தேன். கோதை - மாலை. களி-மகிழ்ச்சி.

(௩௫) இருவர் - பிரமவிஷ்ணுக்கள். பொருவு-ஒப்பு.

(௩௬) திறல்-வெற்றி. மறம் - கொலைத்தொழில்.

(௧) பத்தி - வரிசை. அம்பொன்மறுகு-செல்வமலிந்ததிருவீதி.

(௨) வாகை-வெற்றி. ஆணை-ஆக்கினை. வரை-திருக்கயிலாயம். பராரை-பருத்த. அரை-ஆலம். கல்லாலவிருட்சம் - இதில் அமசாரியை.

முன்னைவைகலூழிதோறுமோங்குமொய்வரைக்கணே
மன்னுதன்பராரையாலநிழன்மருங்குமறைமுதல். (௨)

அடுப்பமாசில்வெள்ளிவெற்பருகிருக்குமரகதங்
கடுப்பவாமமிசையிருந்துகனகவெற்பன்மகளெனும்
வடுப்படாதகற்பினுண்மடித்துவெள்ளிலைச்சுருள்
கொடுப்பநேசமூறுபோகருவனாகிவைகினான். (௩)

பிருங்கிநந்தியேமுதற்பெருந்தகைக்கணத்தரு
மருங்கிருந்தசனகனாதிமாதவத்தர்நால்வரு
மொருங்கிறைஞ்சியுண்ணவுண்ணவமுதூறுசிவகதைக்
கரும்பருந்தவாய்மலர்ந்துகருணைசெய்யுமெல்லைவாய். (௪)

பௌவமூழ்குசூர்தடிந்தபாலனுக்குமுலைகொடுத்
தெய்வமாயவினைகடிரியக்கமாதராறுவருந்
தெவ்வநீறுமுழுதணிந்துசெய்யவேணிகண்டிகைச்
சைவவேடமாதவந்தரித்துவந்துதோன்றினார். (௫)

மந்திரச்சிலம்பலம்புமலரடிக்கண்வந்திசெய்
தெந்தையட்டசித்திவேண்டுமெங்களுக்கெனத்தொழா
வந்தளிர்க்கையவரிரப்பவண்ணறன்மடித்தலந்
தந்திருக்குமாதையங்கைசுட்டியீதுசாற்றுமால். (௬)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அலர்பசும்பொலங்கொம்பன்னவணங்கிவணிறைவாலெங்கு
மலர்பராசத்தியாகிமகேசையாய்அணிமாவாதிப்
பலர்புகழ்சித்தியெட்டும்பணிந்துகுற்றேவல்செய்யுஞ்
சிலதியராகிச்சூழ்ந்துசேவகஞ்செய்யவைகும். (௭)

இவளைநீர்சிந்தித்தான்முன்னீட்டியவினையைநீக்கித்
தவலருஞ்சித்தியெட்டுந்தருமெனக்கருணைபூத்துச்
சிவபரஞ்சோதியெட்டுச்சித்தியுந்தெளித்தல்செய்தா
னவரதுமறந்தாரும்மையாழ்வினைவலத்தான்மன்னோ. (௮)

---

(௩) வாமம் - இடப்பாகம். (௫) சூர் - சூரபன்மன். அறுவர் என்றது—கார்த்திகைப் பெண்களை.

(௬) மந்திரச்சிலம்பு என்றது—மந்திரவடிவாய்நின்ற வேதச் சிலம்பினை. எந்தை-அண்மைவிளி. அணங்கு என்றது—உமாதேவியை. மகேசைஎன்றது—ஆன்மாக்களுக்குப் பாகம்வருவித்துச் சிவபெருமான் றிருவடியிற்கூட்டுந் திரோதாயிசத்தியை.சிலதியர்-தாதியர். (௮) உம்மைவினை-பிராரத்தவினை.

செழுமதிப்பிளவுவேய்ந்ததேவுமக்குற்றநோக்கி
முழுமதிமுகத்தினுரைமுனிந்துநீர்பட்டமங்கைப்
பழுமரமுதலஞ்ஞானப்பாறையாய்க்கிடமினென்னக்
கழுமலுற்றவர்தாழ்ந்தென்றுகழிவதிச்சாபமென்றார். (௯)

இப்படிக்கருங்கலாகிக்கிடத்திராயிரம்யாண்டெல்லை
கப்புறமதுரைநின்றுமடுத்துமைத்தொடுத்தசாபத்
துப்பறநோக்கிநுங்கடொல்லுருநல்கிச்சித்தி
கைப்படுகனிபோற்காணக்காட்டுதும்போதிரென்றான். (௧0)

வஞ்சி விருத்தம்.

கொடியனார்களறுவரு, நெடியவானிமிர்ந்துகார்
படியும்பட்டமங்கையா, லடியிற்பாறையாயினர். (௧௧)

கதிர்கலம்பெய்காட்சிபோ, லுதிர்பழத்தினுடலெலாம்
புதைபடக்கிடந்தனர், மதரரித்தடங்கணார். (௧௨)

பருவமாயிரங்கழிந், தொருவமாடமதுரையெங்
குரவனெண்குணத்தினன், றிருவுளந்திரும்பினன். (௧௩)

தன்னதிச்சைகொண்டதோ, ரின்னருட்குரவனா
யங்நெடுங்கலாயினர், முன்னர்வந்துதோன்றினன். (௧௪)

இருட்டதும்புகோதையார், மருட்டதும்புவினைகெட
வருட்டதும்புகண்ணினாற், றெருட்டதும்பநோக்கினன். (௧௫)

அடிகணேக்கவம்புயங், கடிகொணெய்தல்காந்தள்பைங்
கொடிகொண்முல்லைகுமுதமேற், படியப்பூத்தபாறையே. (௧௬)

தாக்கவேதகத்திரும், பாக்கமுற்றபொன்னென
நீக்கமற்றவிருண்மல, வீக்கமற்றுவிட்டதே. (௧௭)

---

(௯) பட்டமங்கை - ஓர்சிவஸ்தலம். பழுமரமுதல் - ஆலடி. கழுமல் - துன்பம். (௧0) துப்பு - வலிமை.

(௧௩) ஒருவ - நீங்க. (௧௪) தன்னதிச்சை - சுதந்தரத்துவம்.

(௧௫) மருள்ததும்புவினை என்றது - போகமுறுத்தற்குமுதற் காரணமாய்நின்ற கன்மமலத்தை.

(௧௬) அடிகள் என்றது - ஞானாசாரியரா யெழுந்தருளிய சிவபெருமானை. அம்புயம், நெய்தல், காந்தள், முல்லை, குமுதம் என்றது-முகம், கண், கை, பல், வாய்என்னும் உவமேயங்களை விளக்கிநின்ற உவமானச்சொற்கள். (௧௭) வேதகம் - (அருணேக்காகிய) இரசகுளிகை. மலம் - ஆணவமலம்.

நிறையுமன்பெனுந்நதி, பொறையெனுங்கரைகடந்
திறைவனின்னருட்கடற், றுறையின்வாய்மடுப்பவே. (௧௮)

எழுந்திறையடிக்கணே, யழுந்துநேசமொடுதவக்
கொழுந்தனர்களறுவரும், விழுந்திறைஞ்சினாரரோ. (௧௯)

குமரற்கூட்டுமிளமூலை, யுமையொப்பார்கள்சென்னிமே
லமலச்சோதியங்கையாங், கமலப்போதுசூட்டினன். (௨௦)

சித்தியெட்டுமெந்நலார், புத்தியிற்கொளுத்தவே
கைத்தலத்தில்வைத்ததோர், முத்தெனத்தெருட்டுவான். (௨௧)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அணிமாமகிமாவிலகிமாவரியகரிமாப்பிராத்திமலப்
பிணிமாசுடையோர்க்கடைவரியபிராகாமியமீசத்துவமெய்
துணிமாயோகர்க்கெளியவசித்துவமென்றெட்டாமிவையுளக்கண்
மணிமாசறுத்தோர்விளையாட்டின்வகையாமவற்றின்மரபுரைப்பாம். (௨௨)

அறவுஞ்சிறியவுயிர்தொறுந்தான்பரமகாட்டையணுவாய்ச்சென்
றுறையுஞ்சிறுமைமணிமாவாமுவரிஞாலமுதன்மேலென்
றறையுஞ்சிவாந்தமாறுமுள்ளும்புறனுமகலாதே
நிறையும்பெருமைதனையன்றேமகிமாவென்னுநிரம்பியநூல். (௨௩)

இலகுமேருபாரம்போலிருக்கும்யோகிதனையெடுத்தா
லிலகுவானதூலமெனவிருப்பதிலகிமாவாகு
மிலகுவானபரவணுப்போலிருக்கும்யோகிதனையெடுத்தா
லிலகுமேருபாரமெனவிருப்பதன்றேகரிமாவாம். (௨௪)

பிலத்திலிருந்தோனயனுலகிற்புகுதன்மீண்டும்பிலமடைதல்
பலத்தின்மிகுந்தபிராத்தியதாம்பரகாயத்தினண்ணுதல்வான்
புலத்தினியங்கலிச்சித்தபோகமனைத்துந்தானிருக்குந்
தலத்தினினைந்தபடிவருதல்பிராகாமியமாந்தவக்கொடியீர். (௨௫)

விண்ணிலிரவிதன்னுடம்பின் வெயிலாலனைத்தும்விளங்குதல்போ
மண்ணிலுளவாம்பொருள்பலவுங்காலமூன்றும்வானத்தின் [ன்

(௧௮) மடுத்தல் - கலத்தல். (௨௦) குமரன்-குமாரக்கடவுள். அங்கையாம் கமலப்போது சூட்டினர் என்றது - பரிசதீட்சையை.

(௨௩) பரமகாட்டை - மிகச்சிறியது. காட்டை - பதினைந்து நிமிஷம்கொண்டதோர் காலவளவை.

(௨௫) பரகாயம் - வேற்றுடல். வான்புலம்-விண்ணுலகம். முத்தொழில் - சிருட்டி, திதி, சம்மாரங்கள்.

கண்ணிலுளவாம்பொருளுந்தன்காயத்தொளியாலிருந்தறித
லெண்ணிலிதுவுமறையொருசார்பிராகாமியமென்றியம்புமால். ()

ஈசனெனமுத்தொழிலுந்தன்னிச்சைவழிசெய்தெழுபுரவித்
தேசன்முதற்கோள்பணிகேட்பத்திகழ்வதீசத்துவமாகும்
பூசலவுணர்புள்விலங்குபூதமனிதர்முதலுலகும்
வாசவாதியெண்மருந்தன்வசமாக்கொள்கைவசித்துவமாம். (உஎ)

எம்மையுணர்ந்தயோகியர்களிவற்றைவிரும்பாரெனினுமவர் [ஞ்
தம்மைநிழல்போலடைந்துலகர்க்கனையார்பெருமைதனையுணர்த்து
செம்மையுடையவிவையென்னச்சித்தியெட்டுந்தெளிவெய்தக் [ன்.
கொம்மைமுலையாரறுவருக்குங் கொளுத்தினுனென்குணச்செல்வ

மேற்படி - வேறு.

தேவதேவுபதேசித்தசித்தியைச்சிலம்பன்செல்வி
பாவனைவலத்தானன்குபயின்றுவான்வழிக்கொண்டேகிப்
பூவலர்கதுப்பினல்லாரறுவரும்புரமூன்றட்ட
காவலனிரம்பிவைகுங்கைலைமால்வரையிற்புக்கார். (உகூ)

அட்டமாசித்தியுபதேசித்தபடலம் முற்றிற்று.

ஆகூ படலம் ௩௨ - க்கு திருவிருத்தம் - கஎஅஅ.

---

முப்பத்துநான்காவது,

## விடையிலச்சினையிட்டபடலம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

சந்துசூழ்மலயச்சிலம்பர்தவம்புரிந்தவியக்கிமார்க்
கந்தநாலிருசித்திதந்ததறைந்தனந்தனதடிதொழா
வந்துமீளவளவன்பொருட்டுவடாதுவாயிறிறந்தழைத்
திந்துசேகரன்விடையிலச்சினையிட்டவாறுவிளம்புவாம். (க)

---

(உஎ) தேசன் - (ஒளியையுடையவன்) சூரியன். கோள்-நவக்கிரகம். வாசவாதிஎண்மர் என்றது-இந்திரன்முதலிய திக்குப்பாலகரை. (உகூ) தேவதே - மகாதேவன். சிலம்பன் - பருவதராஜன். பாவனை - சிந்தனை. வலம் - பலம்.

(க) இலச்சினை - முத்திரை.

தோடுவெட்டிமலைத்துவாள்விதிர் துணைவிழிக்குயிலிளமுலைக்
கோடுவெட்டியகுறிகொண்மேனியர்குடிகொண்மாநகர்கடிகொள்
காடுவெட்டியகாரணக்குறிகாடுவெட்டியசோழனென் [பைங்
றேடுவெட்டியமண்டுசூழ்பொழிலெயில்கொள்கச்சியுளானவன். (௨)

உத்தமச்சிவபத்தரிற்பெரிதுத்தமன்புதுவிரைகலன்
மித்தையென்றுவெண்ணீறுகண்டிகையாரமென்றணிமெய்யினு
ணித்தவேதபுராணமாதிநிகழ்த்திடும்பொருள்கண்ணுத
லத்தனேபரதத்துவப்பொருளென்றளந்தறிகேள்வியான். (௩)

அங்கமாறொடுவேதநான்குமறிந்துமெய்ப்பொருளாய்ந்துளஞ்
சங்கைகொண்டனுதினமரன்புகழ்சாற்றுசைவபுராணநூல்
பொங்குமின்சுவையமுதுதன்செவிவாய்திறந்துபுகட்டியுண்
டெங்கணுயகனடியிணைக்கணிருத்துமன்புகருத்துளான். (௪)

முக்கணுயகன்முப்புரத்தைமுனிந்தநாயகன்மங்கையோர்
பக்கநாயகன்மிக்கவானவர்பரவுநாயகனரவணிச்
சொக்கநாயகனுடலுஞ்செவியான்முகந்துசுவைத்தருந்
தக்கபாலொடுதேன்கலந்துதருக்கியுண்பவனுயினன். (௫)

அங்கயற்கண்மடந்தைபாகனடித்தலந்தொழுமாசைமேற்
பொங்கிமிக்கெழுமன்பனும்மதுரேசன்மின்னுபொலங்கழற்
பங்கயப்பதமென்றுநான்பணிவேனெனப்பரிவெய்தியே
கங்குலிற்றுயில்வான்கயற்புரைகண்ணிபங்கனையுன்னியே. (௬)

அன்றுசெம்பியர்கோமகன்கனவின்கணேயருள்வெள்ளிமா
மன்றுணின்றவர்சித்தராயெதிர்வந்துமன்னவநின்றுளத்
தொன்றுமஞ்சலொருத்தனுகியுருத்திரிந்துதனித்துவந்
தின்றுவந்தனைசெய்துபோதியெனப்புகன்றனரேகினர். (௭)

கேட்டுவேந்தன்விழித்துணர்ந்துகிளர்ந்தவற்புதனுகியே
யீட்டுசேனையமைச்சுளார்பிறர்யாருமின்றிவழிக்கொளீஇ

(௨) குறி என்றது - வளைத்தழும்பு முலைத்தழும்புகளை. எடு எட்டிய - மலரிதழ்பொருந்திய. (௩) விரை - வாசனைத்திரவியம். கலன் - ஆபரணம். மித்தை-அநித்தியம் ஆரம் - சந்தனக்குழம்பு, முத்துவடம். (௪) மெய்ப்பொருள்என்றது - வேதாகமங்கள் கூறும் உண்மைப்பொருளாகிய சிவபெருமானை.

(௬) கங்குல் - இரவு. (௭) செம்பியர்என்றது - காடுவெட்டிய சோழனை. உருதிரிந்து - வேற்றுவடிவமாய்.

நாட்டமூன்றவனுமவாள்கொடுநல்லருட்டுணையாய்வழி
காட்டவன்பெனுமிவுளிமேல்கொடுகெங்குல்வாய்வருவானரோ. (அ)

கல்லுமாரழலத்தமும்பலகலுழியுங்குணகனைகடற்
செல்லுமாநதிபலவும்வானிமிர்கன்னலுஞ்செறிசெந்நெலும்
புல்லுமாநிலனுங்கழிந்துபுறங்கிடக்கநடந்துபோய்
வல்லுமாமுலையார்கணம்பயில்வையையந்துறையெய்தினான். (௯)

குறுகுமுன்னரதிர்ந்துவையைகொதித்தகன்கரைகுத்திமேவர்
பறியவன்சினைமுறியவிண்டொடுபைந்தருக்களையுந்தியே
மறுகிவெள்ளமெடுத்தலைத்தரமன்னவன்கரைதன்னினின்
றிறுதியில்லவனைத்தொழற்கிடையூறிதென்றநேரெய்துவான். ()

இழுதொடுஞ்சுவையமுதுபொற்கலனிட்டுணூதிருநண்கணீர்
வழியவந்துவிலக்குவாரின்வளைந்ததாறுபகற்செயும்
பொழுதெழும்பொழுதோமறுக்கம்விளைக்குமேயிகல்பூழியன்
வழுதியன்றியும்வையையும்பகையானதென்றுவருந்தினான். (௧௧)

வெள்ளநோக்கியமுங்குசெம்பியன்மெலிவுநோக்கிவிரைந்தெழீஇக்
கள்ளநோக்கிலகப்படாதவர்கனவுபோலவனனவில்வந்
துள்ளநோக்குடையன்பருக்கருளுருவமாகியசித்தர்தாம்
பள்ளநோக்கிவரும்பெரும்புனல்வற்றநோக்கினர்பார்த்தரோ. (௧௨)

வறந்தவாறுகடந்துவந்துவடக்குவாயிறிறந்துபோய்
நிறைந்தகாவல்கடந்துவீதிகணீந்திநேரியர்வேந்தனைச்
சிறந்தவாடகபுனிதபங்கயதிப்பியப்புனலாடுவித்
தறந்தவாதறைசாமகண்டர்தமாலயம்புகுவித்தரோ. (௧௩)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வெம்மைசெய்கதிர்கால்செம்பொன்விமானசேகரத்தின்மேய
தம்மையும்பணிவித்தெண்ணில்சராசரமனைத்துமீன்ற

---

(அ) இவுலி-குதிரை. (௯) அத்தம்-பாலைநிலம். கலுழி-காட்டாறு. குணம்-கிழக்கு. (௧௦) அலைதர-அலைக்க. அஞர்-துன்பம்.

(௧௧) பகல்செயும்பொழுது-பகலையுண்டாக்குஞ் சூரியன். மறுக்கம் - பெருந்துயர். பூழியன் - பாண்டியன். (௧௨) கள்ளநோக்கில்-வஞ்சகநிறைந்த புறச்சமயிகளிடத்தில், நனவு - விழிப்பு. உள்ளம் நோக்கு - அகப்பார்வை. (௧௩) நேரியர் - சோழர்; நேரி - இது சோழனுக் குரியதோர்மலை. திப்பியம் - இது திவ்ய என்னும் வடசொற்றிரிபு. (௧௪) பொன்விமானசேகரம்என்றது-பொன் விமானங்களுக்குக் கிரீடம்போல் விளங்கும் இந்திரவிமானத்தை. உள்ளம் என்றது - ஆன்மாவை.

வம்மையங்கயற்கணுளாமணங்கையும்பணிவித்துள்ளஞ்
செம்மைசெய்தின்பவெள்ளத்தழுத்தினூர்சித்தசாமி. (௧௪)

எண்ணியவெண்ணியாங்கேயான்பெறமுடித்தாய்போற்றி
பண்ணியன்மறைகடேருப்பான்மொழிமணுளபோற்றி
புண்ணியர்தமக்குவேதப்பொருளுரைபொருளேபோற்றி
விண்ணிழிவிமானமேயசுந்தரவிடங்கபோற்றி. (௧௫)

எவ்வுடலெடுத்தேன்மேனுனெண்ணிலாப்பிறவிதோறு
மவ்வுடலெல்லாம்பாவமறம்பொருட்டாகவன்றே
தெவ்வுடல்பொடித்தாயுன்றன்சேவடிக்கடிமைபூண்ட
விவ்வுடலொன்றேயன்றேவெனக்குடலானதையா. (௧௬)

இன்னன பலவுமேத்திமிறைஞ்சிப்பல்வரமும்வேண்டு
மின்னகுவேலினானவேந்தநீபோந்தவண்ணந்
தென்னவனறிந்தாலேதஞ்செய்யுமென்றூர்த்தார்க்கண்ணி
மன்னனைச்சித்தசாமியுத்தரவழிக்கொண்டேகா. (௧௭)

மண்ணினைவளர்க்கும்வையைவடகரையளவுநண்ணிப்
புண்ணியநீற்றுக்காப்புப்புண்டரநுதலிற்சாத்தி
யுண்ணிறைகருத்துக்கேற்பவுறுதுணையுனக்குண்டாகி
நண்ணுகவென்றுபொன்னிநாடனைவிடுத்துமீண்டு. (௧௮)

கலிவிருத்தம்.

காப்புச்செய்துகதவில்விடைக்குறி
யாப்புச்செய்தமைத்தீர்ஞ்சடைச்சித்தர்போய்த்
தூப்புக்கைவரைசூழ்வடமேருவிற்
கோப்புச்செய்தபொற்கோயிலின்மேயினூர். (௧௯)

கங்குலின்கருங்கைகுறைப்பானெனச்
செங்கைநீட்டித்தினகரன்றேன்றலு
மெங்கணுயகனிட்டகுறியறிந்
தங்கண்வாயிறிறப்பவரையுரு. (௨௦)

(௧௫) புண்ணியர் என்றது கண்ணுவர்முதலிய விருடிகளை.

(௧௭) ஏதம் - துன்பம். (௧௯) விடைக்குறி - இடபமுத்திரை. தூம்புஎன்றது - தூப்பு என வலித்தற் பெற்றது. தூம்பு - துளை, கோப்பு - கோவை.

(௨௦) செங்கை என்றது - சூரியகிரணத்தை, சூரியன்கிரணத்துக்கு; கரம் என்பது, ஓர்பரியாயநாமம்.

மற்றைவாயில்கண்மூன்றினும்வல்லைபோ
யுற்றுநோக்கினர்தாநென்னலொற்றிய
கொற்றமீனக்குறிபிழையாமைகண்
டெற்றிதாங்கொலொன்றேந்தன்முனெய்தினார். (௨௧)

போற்றிமன்னநம்பொன்னங்கயற்குறி
மாற்றியுத்தரவாயிற்கதவதி
லேற்றிலச்சினையிட்டனர்யாரையென்
றாற்றல்வேந்தவறிகிலம்யாமென்றார். (௨௨)

வையைநாடனும்வந்ததுநோக்குறீஇ
யையவின்னதோரற்புதமாயையைச்
செய்யவல்லவர்யாரெனத்தேர்கிலா
னையமெய்தியகன்மனைநண்ணினான். (௨௩)

மறுத்தவுண்டியன்மாமலர்ப்பாயலை
வெறுத்தகன்றரைமேற்பள்ளிகொள்ளவும்
பொறுத்தனன்றுயின்றானிருட்போழ்தினிற்
கறுத்தகண்டர்கனவினிற்கூறுவார். (௨௪)

மட்டலம்பியதாதகிமாலையா
னுட்டதும்பியொழுகியவன்பினாற்
கட்டிலங்கெயிற்கச்சியிற்காடெலாம்
வெட்டிநம்புடைவித்தியபத்தியான். (௨௫)

வந்துநயமைவழிபடவேண்டினா
னிந்தவாயிறிறந்தழைத்தின்னரு
டந்துமீளவிடுத்துப்பின்றாட்கொளீஇ
நந்தமால்விடைநாம்பொறித்தேமெனா. (௨௬)

அருளினானையந்தேற்றியகன்றபின்
மருளினீங்கிமலர்க்கண்விழித்தெழீஇ
வெருளினான்வெயர்த்தான்விம்மினான்பல
பொருளினாற்றுதித்தான்குலபூடணன். (௨௭)

வள்ளலன்புக்கெளிவந்தமாண்புகண்
டுள்ளவுள்ளநின்றூற்றெழுமற்புத

---

(௨௧) வல்லை - விரைவு. நென்னல் - நேற்றைப்போது. ஏந்தல் என்றது - பெருமையிற்சிறந்தபாண்டியனை.

(௨௩) தாதகி - ஆத்தி. கட்டு - காவல். (௨௭) வெருள் - அச்சம். விம்மல் - பூரித்தல். (௨௮) அற்புதவெள்ளம் - சிவஞானப்பெருக்கம். ஆனந்தவெள்ளம் - சிவபோகப்பெருக்கம்.

வெள்ளமும்பரமானந்தவெள்ளமுங்
கொள்ளைகொண்டுதன்கோமனைநீங்கினன். (௨௮)

அளியருமனத்தன்புடையன்பருக்
கெளியராடலையார்க்கும்வெளிப்படத்
தெளியுமாறுதெளிவித்துத்தன்னைப்போல்
விளிவிலாவின்பவெள்ளத்தழுத்தினன். (௨௯)

கொச்சகக்கலிப்பா.

கோடாதசெங்கோலும்வெண்குடையுங்கோமுடியு
மேடாரலங்கலிராசேந்திரற்களித்துத்
தோடாரிதழியான்ருட்கமலஞ்சூடிவா
ழுடாளரசுரிமைபெற்றானரபதியே. (௩௦)

விடையிலச்சினையிட்டபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௪ - க்கு திருவிருத்தம் - ௧௮௧௮.

---

முப்பத்தைந்தாவது,

## தண்ணீர்ப்பந்தல்வைத்த படலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

சம்புமதுரைப்பரனிரவுதனியேவந்துதனைப்பணிந்த
வெம்புகதிரோன்மருமானைவிடுத்துமீண்டுதொழிறுக்கி [கு
யம்பொற்கதவின் விடைபொறித்ததறைந்துந் தென்னனடுபடைக்
வம்புமலர்தோய்புனற்பந்தர்வைத்துக்காத்தவகைசொல்வாம். (௧)

தென்னனரசபுரந்தரன்கோல்செலுத்துநாளிற்காடெறிந்த, மன்னன்பின்னர்வெளிப்படையாப் போந்துபோந்துமதுரேசன், பொன்னங்கமலத்தாள்வணங்கிப்போவான்முன்னிப்பொரும்பொருனைக், கன்னிநாடன்கேண்மைபெறவிடுத்தான் வரிசைக்கையுறையே.

பொன்னிநாடன்வரவிடுத்தபொலம்பூணுடைமுதற்பிறவுங்
கன்னிநாடன்கைகவர்ந்துதானுங்கலக்குந்தொடர்பிஞ

(௧) வம்புமலர்தோய் புனல்-வாசமூட்டியநீர்.
(௩) பொன்னி-காவிரிநதி. கன்னிநாடு-பாண்டிநாடு. கையுறை-கைப்பொருள். சென்னி-சோழன்.

28

லூன்னிவேறுகையுறையுய்த்தறவுசெய்யவுவப்பெய்திச்
சென்னிகாதன்மகட்கொடுப்பானிசைந்தானந்தச்செழியற்கு. (௩)

செழியன்றனக்குவரையறுத்தசெய்திகேட்டுச்செம்பியர்கோன்
கழியன்புடையகுலமகளைத்தான்போய்க்கொள்வான்கருதிமதி
வழிவந்தவர்க்குத்தம்பியெனவந்தவரசசிங்கமெனும்
பழியஞ்சாதான்வஞ்சித்துப்பழனக்காஞ்சிப்பதிபுகுவான். (௪)

காஞ்சிப்பதிமுன்குறுகுமிளங்காவலோனைக்கடற்சேனை
தாஞ்சுற்றியவந்தெதிர்கொடுபோய்த்தம்முன் றனக்கென்றிருந்தமக
ளாஞ்சிற்றிடையைமணம்புணர்த்தியந்தமருகற்கரசுநிலை
வாஞ்சித்தரசபுரந்தரனைப்பிடிக்கமதித்தான்வனமெறிந்தான். (௫)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

மருமகன்றனுடனெழுந்துமாமனுனவளவர்கோன்
பொருமகன்றசேனையானைபுடைநெருங்கமதிவழித்
திருமகன்றன்மேலமர்த்திறங்குறித்துமுரசறைந்
துருமகன்றபல்லியம்மொலிப்பவந்துளானரோ. (௬)

திரண்டதிர்ந்தெழுந்துவந்தசென்னிசேனைதன்னகர்க்
கிரண்டுயோசனைப்புறத்திறுக்குமுன்னரொற்றராற்
றெருண்டுதென்னன்மாடநீடுகூடன்மேயசிவனதாள்
சரண்புகுந்துவேண்டுகென்றுசார்ந்துதாழ்ந்துகூறுவான். (௭)

அன்றுபாதியிரவில்வந்துனடிபணிந்துதமியனுய்ச்
சென்றசென்னியென்னுநின்னதிருவடிக்கணன்பிறு
னென்றுமந்நிலையனுயெனக்குவேண்டுவனவிடுத்
தொன்றுகேண்மைபுரிகுவானுளத்திலொன்றையுன்னிறுன். (௮)

அறத்தினுக்குளாகியன்றுநின்றநீயவன்செயு
மறத்தினுக்குளாகியின்றுவன்மைசெய்வதேயறப்
புறத்திஞர்புரம்பொடித்தபுண்ணியாவெனக்கரைந்
துறைத்துவேண்டினுன்வேலையும்பர்நாதனருளினுல். (௯)

---

(௪) செழியன், மதிவழிவந்தவன், என்றது—இராசேந்திரபாண்டியனை. பழனம்-வயல். (௫) இளங்காவலோன் - இளவரசாகிய அரசசிங்கபாண்டியன். தன்முன் - தனதுதமயன். வனமெறிந்தான்-காடுவெட்டிய சோழன். (௬) உருமு-இடி.

(௭) தெருண்டு-உணர்ந்து. (௯) அறப்புறம் - பாவம்; தருமத்திற்கு மாறுனது ஆதலின்.

மெய்துறந்தவாய்மையொன்றுவிண்ணினின்றுமண்ணலே
யைதுநுங்கள்சேனையோடுமோகவந்துநாளைநீ
யெய்திவந்ததெவ்வரோடெதிர்ந்துருத்துநின்றுபோர்
செய்திவென்றிசின்னதாதல்செய்துமென்றெழுந்ததால். (௧0)

காயவாணிசெவிநுழைந்தகாலைவேந்தரிந்திர
ஞயனரடிக்கணேயந்தவன்புமுவகையு
மாயவேலைவீழ்ந்துதாழ்ந்தகன்றுதன்னிருக்கைபோய்
மேயினனிமிர்ந்துகங்குல்விடியுமெல்லைநோக்குவான். (௧௧)

கழித்தகங்குலிறவிசும்புகண்விழிக்குமுன்னரே
விழித்தெழுந்துசந்தியாதிவினைமுடித்துவானநீர்
சுழித்தலம்புவேணியண்ணறாயபூசைசெய்தெழீஇத்
தெழித்தெழுந்தசேனையோடுசெருநிலத்தைநண்ணினன். (௧௨)

அலைசிறந்தசலதிமீதோராறுசெல்லுமாறுபோன்
மலைசிறந்தநேரிவெற்பன்மள்ளர்சேனைவெள்ளமேற்
கலைசிறந்தமதிநிறைந்தகன்னிநாடுகாவலான்
சிலைசிறந்தசிறியசேனைசென்றலைத்துநின்றதே. (௧௩)

உருமுவன்னகுரலினருலவையன்னசெலவினர்
வெருவுதீயின்வெகுளியார்வெடித்தவீரநகையினர்
செருவின்மானவணியினர்சினைஇமடித்தவாயின
ரிருவர்சேனைமள்ளரும்மெதிர்ந்துகைகலந்தனர். (௧௪)

மன்றலந்தெரியனேரிமலயவன்றமர்க்கெலாந்
தென்றலம்பொருப்பினன்றிரண்டநான்குகருவியு
மின்றயங்குசெய்யவேணிவிடையவன்றனருளின
லொன்றனந்தமாகவந்துருத்தெதிர்ந்துதோன்றுமால். (௧௫)

தேரினேதைகந்துகஞ்சிரிக்குமோதைசொரிமதக்
காரினேதைபேரியங்கறங்குமோதைமறவர்தம்
போரினேதைவீரர்தோள்புடைக்குமோதையோடுமுந்
நீரினேதையொன்றெனக்கலந்தொடுங்கநின்றதே. (௧௬)

(௧0) மெய்துறந்தவாய்மை-அசரீரி. ஆகவம்-போர்க்களம்.

(௧௧) காயவாணி-அசரீரி. வேந்தர் இந்திரன்-இராசேந்திரன்.

(௧௨) கண் என்றது-உவமவாகு பெயராய் உலகத்திற்குக்கண்ணாயுள்ள சூரியன்மேல்நின்றது. இதனை "வான்கண்விழியா வைகறையாமத்து" என்பதாலுமுணர்க. வானநீர்-ஆகாயகங்கை. தெழித்து-அதட்டி. (௧௩) சிலை-வில். (௧௪) உலவை - காற்று. சினைஇ-கோபித்து. (௧௬) கந்துகம்-குதிரை. கார் என்றது - யானையை.

சிலைபயின் றவீரரோடுசிலைபயின் றவீரரே
கலைபயின் றவாளரோடுகலைபயின் றவாளரே
கொலைபயின் றவேலரோடுகொலைபயின் றவேலரே
மலைபயின் றமல்லரோடுமலைபயின் றமல்லரே. (௧எ)

கரியுகைத்தபாகரோடுகரியுகைத்தபாகரே
பரியுகைத்தமறவரோடுபரியுகைத்தமறவர்தேர்க்
கிரியுகைத்தவலவரோடுகிரியுகைத்தவலவரே
யெரியுகைத்தெதிர்ந்தகாலெனக்கலந்துமலைவரால். (௧அ)

விடுக்கும்வாளியெதிர்பிழைப்பர்வெய்யவாளியெய்துபின்
றொடுக்கும்வாளிவில்லொடுந்துணிப்பர்பின்கணிப்பற
மடுக்கும்வாளிமார்புதைப்பவாங்கிமற்றைவாளிகொண்
டடுக்குமேவலாரையெய்தடர்ப்பர்கிள்ளிமள்ளரே. (௧௯)

சோனைமாரியிற்சரஞ்சொரிந்துநின்றுதுள்ளுவா
ரானவாளியெதிர்பிழைத்தொதுங்கிநின்றழற்சரங்
கூனல்வாளிசிலையிறத்தொடுத்தெறிந்துகூவுவார்
மீனகேதனத்துவேந்தன்வீரர்சென்னிவீரர்மேல். (௨௦)

தறிந்ததாடகர்ந்தசென்னிதரையுருண்டவரையெனச்
செறிந்ததோள்சரிந்ததேர்சிதைந்தபல்படைக்கல
முறிந்தயானைகையிருமுழங்கிவீழ்ந்தசெம்புனற்
பறிந்தபாறுபாரிடங்கள்பைத்தகூளிமொய்த்தவே. (௨௧)

மடலினீடுதாரலங்கன்மன்னர்சேனையின்னவா
றுடலினீழலடியகத்தொடுங்கவும்பருச்சியிற்
கடலினீடுகதிர்பரப்புகடவுளெய்துமளவுநின்
றடலினீடியிடைவிடாமலமருழந்ததாலரோ. (௨௨)

அந்தநாளனைத்தையும்மழிக்கநின்றவரனுதற்
சிந்துதீயெனக்கனன்றுறுத்துநின்றுதெறுதலா
லெந்தயாறுமறவறப்பவிம்பரன்றியும்பரும்
வெந்துவானயாறும்வற்றவேனில்வந்திறுத்ததால். (௨௩)

---

(௧அ) கிரிஎன்றது—உவமையாகு பெயராய்த்தேரினை யுணர்த்திநின்றது. (௧௯) கணிப்பு - அளவு. மேவலார் - பகைவர். கிள்ளி-சோழன்.

(௨௦) கூனல்-வளைவு. கேதனம்-கொடி. (௨௧) பறிந்த-பரவின. பாறு-பருந்து. பாரிடம்-பூதம். தகர்தல்-உடைபடல். (௨௨) கதிர் பரப்பு கடவுள் என்றது—சூரியனை. (௨௩) அந்தம்-முடிவு.

மண்பிளந்துபிலநுழைந்துவரைபிளந்துநிரையவா
யெண்பிளந்துநின்றபொங்கரிலையுகப்பிளந்துமேல்
விண்பிளந்துபரிதிநீடுவெங்கரங்கள்யாரையுங்
கண்பிளந்தழன்றுவீசுகானமெங்குமானதே. (௨௪)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஆயிடையலகைத்தேருமடைந்தவர்வெயர்வுமன்றித்
தூயநீர்வறந்தவந்தச்சுடுபுலந்தோய்ந்தகாலு
மீயுயர்மதிநிலாவும்வெய்யவாய்ச்சுடுநெல்லோருந்
தீயவர்தம்மைச்சேர்ந்தாற்றீயவராவரன்றே. (௨௫)

விளைமதவூற்றுமாறிவெகுளியுஞ்செருக்குமாறித்
தொளையுடைக்கைம்மான்றூங்குநடையவாய்ச்சாம்பிச்சோர்ந்த
வுளர்தருமூழிக்காலினேடுவோம்புரவியெய்த்துத்
தளர்நடையுடையவாகித்தைவருதென்றல்போன்ற. (௨௬)

கானலந்தேர்மேற்சூறைக்காலெனும்பாகன்றூண்ட
வேனில்வேந்தேறிச்சீறிவெப்பமாம்படைகள்வீச
மானிலங்காவல்பூண்டமானவரிருவர்தங்க
டானையுமுடைந்துதண்ணீர்நசைசுடச்சாம்பிற்றன்றே. (௨௭)

இரக்கமில்கொடியசெல்வர்மருங்குபோயிரப்பார்போல
வருப்பமொண்டிறைக்குங்கள்ளிநீழல்புக்கொதுங்குவாருந்
தருக்கறநிரப்பாலெய்த்தோர்தம்மினும்வறியர்பாற்சென்
றிரப்பர்போலிலைநீந்துக்கமரநிழலெய்துவாரும். (௨௮)

கொல்லிபம்பரிமான்றேரின்குறுநிழலொதுங்குவாரு
மல்லிருள்வட்டத்தோல்வெண்கவிகையுளடங்குவாருஞ்
செல்லிடம்பிறிதுகாணார்வீரவான்சென்றோர்நின்ற
கல்லுடனிழல்சேர்வாருமாயினர்களமரெல்லாம். (௨௯)

---

(௨௪) எண்பிளந்து-அளவைக்கடந்து, பொங்கர்-சோலை.

(௨௫) அலகைத்தேர்-கானற்சலம். புலம்-நிலம். மானவர்-மனிதர்; ஈண்டு சோழபாண்டியரைக் குறித்துநின்றது.

(௨௮) நிரப்பு-வறுமை. (௨௯) இபம்-யானை. வட்டத்தோல்-கேடகம். கல் என்றது - போர்க்களத்துப்புறங்கொடாதுயிர்விட்ட வீரர் போர்த்திறத்தைக் கல்லிலெழுதி அப்போர்க்களத்தில் நட்ட கல்லினை. இதனை "என்னைமுன்னில் லன்மின்தெவ்விர் பலரென்னை; முன்னின்றுகன்னின்றவர்" என்னுந்திருக்குறளானுமுணர்க.

ஆயதோரமையந்தன்னிலளவிலாவுயிர்க்குமீன்ற
தாயனுர்துலேபோல்யார்க்குஞ்சமநிலேயாயகூட
ஞயனுர்செழியன்ருனேநனந்தலேவேதநாற்காற்
பாயதோர்தண்ணீர்ப்பந்தர்பரப்பியப்பந்தர்நாப்பண். (௩0)

புண்டரநுதலுங்காதின்புறத்தணிமலரும்பாத
முண்டகமலர்மேலொற்றைக்கிண்கிணிமுழக்குங்கச்சிப்
புண்டதோலுடையுங்கண்டோருள்ளமுங்கண்ணுங்கொள்ளே
கொண்டபுன்னகையுமுள்ளக்கருணேயின்குறிப்புந்தோன்ற. (௩க)

அருமறையகத்துணின்ருங்கருந்தவராகிவேணிப்
பொருபுனல்பூரித்தாங்கோர்புண்ணியச்சிரகந்தாங்கி
யொருவருக்கொன்றேயாகியிலக்கருக்கிலக்கமாகித்
தருகுறும்புழையால்வாக்கித்தணித்தனர்தண்ணீர்த்தாகம். (௩உ)

சுந்தரப்புத்தேள்வைத்தநறுமலர்வாசத்தெண்ணீர்ப்
பந்தர்புக்கடைந்துநன்னீர்பருகியெய்ப்பகலவாற்றல்
வந்தபின்செழியன்றன்ஞேர்வளவன்மேலேறிச்சீறி
யந்தமிலனிகஞ்சிந்தித்தும்பைவேய்ந்தடுபோர்செய்தார். (௩௩)

கடலுடைத்தென்னப்பொன்னிகாவலன்ருனேசாய
மடலுடைவாகைவேய்ந்துவளவனேமருகஞேடு
மிடலுடைத்தருகட்சேனேவீரர்வெங்கையாற்பற்றி
யடலுடைக்கன்னிநாடர்க்கரசன்முன்கொண்டுபோந்தார். (௩௪)

கொடுவெந்தவளவன்றன்னேக்கோப்பெருஞ்செழியர்கோமான்
வடுவெந்ததம்பியோடுமாடநீள்கூடன்மேய
கடுவெந்தமிடற்ருர்முன்போய்விடுத்தெந்தைகருத்தியாதென்ன
நடுவெந்தநிலேயான்கேட்பநாயகனிகழ்த்துமன்ஞே (௩ரு)

அறவனீயல்லேயோவுன்னகத்தினுக்கிசைந்தசெய்கென்
றிறைவனதருளால்வானின்றெழுமொழிகேட்டுவையைத்
துறைவனுமறத்திஞற்ருற்சோழனேச்சிலமால்யானே
மறவயப்பரிபூண்மற்றும்வழங்கிஞன்விடுத்தான்பின்னர். (௩சு)

(௩0) நனந்தலே — நடு. (௩உ) பூரித்தல் — நிரப்பல். சிரகம்-கமண்டலம். குறும்புழை - சிறுதுவாரம். (௩௩) தும்பை வேய்ந்தென்றது - போர்த்திறங் குறித்தோரணிவது தும்பைமலர் மாலேயாதலின். (௩௪) வாகை என்றது - போர்செயித்து வெற்றி பூண்டோரணியுமாலே. (௩ரு) வடு - குற்றம். (௩சு) அறவன் - தருமநெறியிற் பிறழாதவன்.

வள்ளறன் றம்பியென் னுமன்னவர்சிங்கந்தன்னைத்
தள்ளருந்தறுகணுண்மைத்தருக்கறத்தானுள்செல்வ
முள்ளனசிறிதுமாற்றியொதுக்கியெவ்வுயிர்க்குந்தாயாய்ப்
பள்ளநீரகலங்காத்துப்பல்வளம்பழுக்கவாழ்ந்தான். (௩எ)

தண்ணீர்ப்பந்தல்வைத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் சச - க்கு - திருவிருத்தம் - கஅ௫௫.

---

முப்பத்தாறவது,

## இரசவாதஞ்செய்தபடலம்.

கலிநிலைத்துறை.

வரதன்மீனவன்படையிடைவந்துநீர்ப்பந்தர்
விரதனுகிநீரருத்தியவினையுரைசெய்தும்
பரதநூலியனுடகப்பாவையாளொருத்திக்
கிரதவாதஞ்செய்தருளியவாடலேயிசைப்பாம். (க)

பருங்கைமால்வரைப்பூழியன்பைந்தமிழ்நாட்டி
னிரங்குதெண்டிரைக்கரங்களாலீர்ம்புனல்வையை
மருங்கினந்தனமலர்ந்தபன்மலர்கடூஉய்ப்பணியப்
புரங்கடந்தவனிருப்பதுபூவணநகரம். (உ)

எண்ணிலங்குறைசராசரமிலிங்கமென்றெண்ணி
விண்ணினுள்களுங்கோள்களும்விலங்குவதியாக்கைக்
கண்ணினன்கதிர்முதற்பலகடவுளர்பூசை
பண்ணிவேண்டியநல்வரமடைந்ததப்பதியில். (௩)

கிளியுளார்பொழிற்பூவணக்கிழவர்தங்கோயிற்
றளியுளார்தவப்பேறனுடாதுகுபூந்தா
றணியுளார்குழலணங்கனுளந்தரத்தவர்க்கும்
களியுளார்தரமயக்குறூஉங்கடலமுதனையாள். (ச)

---

(க) வரதன் - கோரிய வரத்தைக்கொடுப்பவன். (௩) யாக்கைக்கண்ணினன் - இந்திரன். (ச) தளியுளார் - கோயிற்பணிவிடைபுரியும் பரத்தையர். அளி - வண்டு.

நரம்பினேழிசையாழிசைப்பாடலுநடநூ
னிரம்புமாடலும்பெண்ணலநீர்மையும்பிறவு
மரம்பைமாதரையொத்தனளறனெறியொழுகும்
வரம்பினாலவர்தமக்குமேலாயினாண்மன்னோ. (௫)

ஆயமாதர்பேர்பொன்னனையாளென்பவவட
னேயவாயமோடிரவிருணீங்குமுனெழுந்து
தூயநீர்குடைந்துயிர்புரைசுடர்மதிக்கண்ணி
நாயனாரடியருச்சனைநியமமுநடத்தி. (௬)

திருத்தர்பூவணவாணரைச்சேவித்துச்சுத்த
நிருத்தமாடிவந்தடியரைப்பொருளெனநினையுங்
கருத்தளர்யருச்சித்தவர்களிப்பவின்சுவையூ
ணருத்தியெஞ்சியதருந்துவாளஃதவணியமம். (௭)

மாதரிந்நெறிவழங்குநாண்மற்றவளன்பைப்
பூதலத்திடைத்தெருட்டுவான்போன்மலைவல்லி
காதனாயகன்றிருவுருக்காணியவுள்ளத்
தாதரங்கொடுத்தருளினார்பூவணத்தையர். (௮)

ஐயர்தந்தபேரன்புருவாயினாண்மழுமான்
கையர்தந்திருவுருவினைக்கருவினாற்கண்டு
மையகண்ணினாள்வைகலும்வருபொருளெல்லாம்
பொய்யிலன்புகொண்டன்பர்தம்பூசையினேர்வாள். (௯)

அடியர்பூசனைக்கன்றியெஞ்சாமையாலடிகள்
வடிவுகாண்பதெப்படியென்றுமடியிலச்செழியற்
கொடிவில்பொற்கிழிநல்கியவள்ளலையுன்னிப்
பிடியனாளிருந்தாளஃதறிந்தனன்பெருமான். (௧௦)

துய்யநீறணிமெய்யினர்கட்டங்கந்தொட்ட
கையர்யோகபட்டத்திடைக்கட்டினர்பூதிப்

---

(௫) வரப்பு - எல்லை. எழிசையாவன - குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம்.

(௬) ஆலயம் - மகளிர்கூட்டம். (௭) சுத்தநிருத்தமாவது - சாந்திக்கூத்து நான்கனுளொன்றாய், நூற்றெட்டுக்கரணங்களையுடையதான சொக்கக்கூத்து. (௮) மாதர் - இதில் அர்குற்றிய லுகரப்போலி. ஆதரம் - விருப்பம். (௯) கருவினாற்கண்டு என்றது - மெழுக்கினாற்கருவுருவமைத்தலை. (௧௦) மடி - சோம்பல். செழியன் என்றது - குலபூடணபாண்டியனை.

பையர்கோவணமிசையசையுடையினர்பவளச்
செய்யவேணியரங்கொருசித்தராய்வருவார். (௧௧)

வந்துபொன்னனையாண்மணிமாளிகைகுறுகி
யந்தமின்றிவந்தமுதுசெய்வாரொடுமெணுகிச்
சிந்தைவேறுகொண்டடைந்தவர்திருவமுதருந்தா
துந்துமாளிகைப்புறங்கடையொருசிறையிருந்தார். (௧௨)

அமுதுசெய்தருந்தவரெலாமகலவேறிருந்த
வமுதவாரியையடிபணிந்தடிச்சியரைய
வமுதுசெய்வதற்குள்ளெழுந்தருள்கெனவுங்க
ளமுதனையிங்கழைமினென்றருளலுமனையார். (௧௩)

முத்தராமுகிழ்வாணகையல்குலாய்முக்க
ணத்தரானவர்தமரெலாமமுதுசெய்தகன்றார்
சித்தராயொருதம்பிரான்சிறுநகையினரா
யித்தராதலத்தரியராயிருக்கின்றாரென்றார். (௧௪)

நவமணிக்கலன்பூத்தபூங்கொம்பரினடந்து
துவரிதழ்க்கனிவாயினாள்சுவாகதங்கிலவென்
றுவமையற்றவர்க்கருக்கியமாசனமுதவிப்
பவமகற்றியவடிமலர்முடியுறப்பணிந்தாள். (௧௫)

எத்தவஞ்செய்தேனிங்கெழுந்தருளுதற்கென்னுச்
சித்தர்மேனியும்படிவெழிற்செல்வமுநோக்கி
முத்தவாணகையரும்பநின்றஞ்சலிமுகிழ்ப்ப
வத்தர்நோக்கினாரருட்கணாலருள்வலைப்பட்டாள். (௧௬)

ஐயருள்ளெழுந்தருளுகவடிகணீரடியே
னுய்யவேண்டியபணிதிருவுளத்தினுக்கிசையச்
செய்யவல்லனென்றஞ்சலிசெய்யவுண்ணகையா
மையனோக்கியைநோக்கிமீனோக்கிதன்மனாளன். (௧௭)

வடியைநேர்விழியாய்பெருவனப்பினைசிறிதுன்
கொடியைநேரிடையெனவிளைத்தனையெனக்கொன்றை
முடியினானடியாரமென்முகிழ்முலைக்கொடிதாழ்ந்
தடியனேற்குவேறொருமெலிவிலையையா. (௧௮)

(௧௨) சிந்தைவேறு கொண்டடைந்தவர் என்றது - பொன்னனையாருக்கு இரசவாதஞ் செய்யவந்தமையை. சிறை-பக்கம்.

(௧௫) சுவாகதங்கில என்றதற்கு, நல்வரவல்லவா என்பது- பொருள். (௧௮) வடி - மாவடுவின்பிளவு.

எங்கணாயகர்திருவுருக்காண்பதற்கிதயந்
தங்குமாசையாற்கருவுருச்சமைத்தனன்முடிப்பேற்
றிங்குநாடொறுமென்கையில்வரும்பொருளெல்லா
முங்கள்பூசைக்கேயல்லதையொழிந்திலவென்றாள். (௧௯)

அருந்துநல்லமுதனையவளன்புதித்திக்கத்
திருந்துதேனெனவிரங்குசொற்செவிமடுத்தையர்
முருந்துமூரலாய்செல்வமெய்யிளமைநீர்மொக்கு
ளிருந்தவெல்லையுநிலையிலவென்பதுதுணிந்தாய். (௨0)

அதிகநல்லறநிற்பதென்றறிந்தனையறத்து
ளதிகமாஞ்சிவபுண்ணியஞ்சிவார்ச்சனையவற்று
ளதிகமாஞ்சிவபூசையுளடியவர்பூசை
யதிகமென்றறிந்தன்பரையருச்சனைசெய்வாய். (௨௧)

உறுதியெய்தினையிருமையுமுன்பெயர்க்கேற்ப
விறுதியில்லவன்றிருவுருவீகையாற்காணப்
பெறுதியாகநின்மனைக்கிடைப்பித்தளையீய
மறுதியானபல்கலன்களுங்கொணர்தியென்றறைந்தார். (௨௨)

ஈயம்செம்பிரும்பிரசிதமென்பவுப்புணர்ப்பாற்
றோயும்பித்தளைவெண்கலந்தராமுதற்றொடக்கத்
தாயும்பல்வகையுலோகமுங்கல்லெனவலம்பத்
தேயுஞ்சிற்றிடைகொண்டுபோய்ச்சித்தர்முன்வைத்தாள். ()

வைத்தவேறுவேறுலோகமுமழுவுழைகரந்த
சித்தசாமிகணீற்றினைச்சிதறினர்பாவித்
தித்தைநீயிராவெரியிலிட்டெடுக்கினன்பொன்னா
மத்தைநாயகன்றிருவுருக்கொள்கெனவறைந்தார். (௨௪)

மங்கைபாகரைமடந்தையுமிங்குநீர்வதிந்து
கங்குல்வாயமுதருந்தியிக்காரியமுடித்துப்
பொங்குகாரிருள்புலருமுன்போமெனப்புகன்றா
ளங்கயற்கணாடனைப்பிரியாரதற்கிசையார். (௨௫)

(௨0) முருந்து – மயிலிறகினடி. (௨௧) அறத்துளதிகமாஞ்சிவ புண்ணியமென்றது–அருள்வழிநின்றியற்றுவதாகலின். (௨௧) உன் பெயரக்கேற்ப என்றது–அவ்வடியவள்பெயர் ஏமநாதையாதலின்.

(௨௩) இரசிதம்-வெள்ளி. புணர்ப்பு - ஒன்றோடொன்று சேர்தல். (௨௪) பாவித்து என்றது - பொன்னாகக்கடவதென்றுநினைத்தமையை.

சிறந்தமாடநீண்மதுரையிற்சித்தர்யாமென்று
மறைந்துபோயினுர்மறைந்தபின்சித்தராய்வந்தா
ரறைந்தவார்கழலலம்பிடவெள்ளிமன்ருடி
நிறைந்தபேரொளியாயுறைநிருத்தரென்றறிந்தாள். (உசு)

மறைந்துபோயினுரெனச்சிறிதயர்ச்சியுமனத்தி
னிறைந்ததோர்பெருங்கவற்சியைநீக்கினுரென்ஞச்
சிறந்ததோர்பெருமகிழ்ச்சியுமுடையளாய்ச்சித்த
ரறைந்தவாறுதீப்பெய்தனளுலோகங்களனைத்தும். (உஎ)

அழலடைந்தபினிருண்மலவலிதிரிந்தரன்ரு
ணிழலடைந்தவர்காட்சிபோனீப்பருங்களங்கங்
கழலவாடகமானதாலதுகொண்டுகனிந்த
மழலையீர்ஞ்சொலாள்கண்டனள்வடிவிலான்வடிவம். (உஅ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மழவிடையுடையான்மேனிவனப்பினைநோக்கியச்சோ
வழகியபிரானேவென்ஞவள்ளிமுத்தங்கொண்டன்பிற்
பழகியபரனையாஞப்பரிவிஞற்பதிட்டைசெய்து
விழவுதேர்நடத்திச்சின்ஞள்கழிந்தபின்வீடுபெற்ருள். (உகூ)

நையுநுண்ணிடையினுளந்நாயகன்கபோலத்திட்ட
கையுகிர்க்குறியுஞ்சொன்னகாரணக்குறியுங்கொண்டு
வெய்யவெங்கதிர்கால்செம்பொன்மேனிவேருகிநாலாம்
பொய்யுகத்தவர்க்குத்தக்கபொருந்துருவாகிமன்னும். (௩௦)

இரசவாதஞ்செய்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் சடு - க்கு - திருவிருத்தம் - கஅஅ௫.

---

(உசு) அயர்ச்சி - துன்பம். கவற்சி - வருத்தம்.

(உஅ) இருண்மலம் - ஆணவமலம். தாள்நிழல் என்றது-திருவடிஞானச்செல்வத்தை. இதனை "சுத்தமாஞ்சத்திஞானச் சுடராகுஞ்சிவமொழிந்தச், சத்திதானின்ருமுன்னைத் தகவிலாமலங்கள்வாட்டி, அத்தனையரு ளுமெங்கு மடைந்திடுமிருளகற்றி, வைத்திடுமிரவிகாட்டும் வளரொளிபோன்மகிழ்ந்தே" என்பதானுமுணர்க. களங்கம் - மாசு. ஆடகம் - பொன். (௩௦) கபோலம்-கவுள்.

சிவமயம்.

முப்பத்தேழாவது,

# சோழனைமடுவில்வீட்டியபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மின்னனையார்பூங்கொன்றைவேணியரிரதவாதம்
பொன்னனையாண்முன்செய்துபோந்ததுபுகன்றேமார்த்தார்
மன்னனைமடுவில்வீட்டிமலரடிக்கன்பனான
தென்னனையமரிற்காத்ததிருவிளையாடல்சொல்வார். (க)

பொன்னெடுந்தேரிராசபுரந்தரன்புரந்தராதி
பன்னெடுந்தேவரேத்தப்பரனுலகடைந்தானிப்பா
லந்நெடுந்தகையோன்மைந்தனடலிராசேசனென்போ
னிந்நெடுந்தகையோன்மைந்தனிராசகம்பீரனென்போன். (உ)

மற்றிவன்குமரன்பாண்டிவங்கியதீபனன்னான்
பொற்றிணிதடந்தோண்மைந்தன்புரந்தரசித்தாமன்னான்
வெற்றிகொள்குமரன்பாண்டிவங்கியபதாகன்வீரம்
பற்றியசுந்தரேசபாதசேகரனவன்சேய். (ங)

பலர்புகழ்சுந்தரேசபாதசேகரனுந்தென்ன
னலைபுனலுடுத்தகூடலடிகளுக்கன்பனாகிக்
கொலைபுணர்வேலால்வெவ்கோற்குறும்பெனுங்களைகடீர்த்து
மலர்தலையுலகமென்னும்வான்பயிர்வளர்க்குநாளில். (ச)

பத்துமான்றடந்தேர்நூறுபனைக்கைமாநூற்றுப்பத்துத்
தத்துமானயுதமள்ளர்தானையிவ்வளவேயீட்டி
யித்துணைக்கேற்பநல்கியெஞ்சியபொருள்களெல்லாஞ்
சித்துருவானகூடற்சிவனுக்கேசெலுத்துமன்னோ. (ரு)

கண்டிகைமகுடமாதிக்கலனிரைகுயின்றுந்திங்கண்
மண்டலமிடறுஞ்சென்னிக்கோபுரமாடமாதி
யெண்டிசையிருள்கால்சீப்பவெரிமணியிழைத்துவேய்ந்துந்
திண்டிறலுடையானின்னதிருப்பணிபிறவுஞ்செய்தான். (சு)

---

(ச) குறும்பு - குறுநிலமன்னர். (ரு) பனைக்கைமா - பனைமரம் போன்ற துதிக்கையினையுடையயானை. தத்தும்-தாண்டிச்செல்லும். நூற்றுப்பத்து - ஆயிரம். மள்ளர் - காலாட்கள். அயுதம், பதினாயிரம். சித்துருவு-அறிவுருவம். (சு) பிறஎன்றது-நித்தநைமித்திய முதலியகடன்களை.

கல்லுமாறகன்றமார்பன்கருவியின்சிறுமைநோக்கி
மல்லுமாறுததிண்டோள்வளவர்கோனொருவன்காலிற்
செல்லுமாயிரம்பரிக்கோர்சேவகனென்போன்றானே
வெல்லுமாறெண்ணிவஞ்சிவேய்ந்துகொண்டெழுந்துபோந்தான்.

பல்வகைக்கருவியீட்டப்படையொடும்பரவைசீறிச்
செல்வதுபோலக்கன்னித்தீம்புனனாடுநோக்கி
மல்வரையாததோளான்வரவறிந்தெழுந்துமேருக்
கல்வரிசிலையான்முன்போய்க்கைதவன்றாழ்ந்துகூறும். (அ)

பொன்னதுவனையவேணிப்புனிதவிப்பூமிநேமி
யுன்னதுவலத்தினாலேயுருட்டுமென்வலத்தைநோக்கா
னன்னதுவலத்தினாலென்றானையின்சிறுமைநோக்கி
யென்னதுதேயங்கொள்வானெண்ணினான்போலுமன்னோ. (௯)

காவிரிநாடன்சேனைக்கடலிடையெரிபோன்மூண்டு
மேவினனென்றுகூறிமீனவன்வேண்டவானிற்
பூவிரிவாகைநீயேபுனையநாம்பொருதுமென்னு
நாவிரியாதமாற்றநாயகன்கூறக்கேட்டான். (௧௦)

எல்லியங்கமலச்செவ்வியெனமுகமலர்ந்துநாத
னல்லியங்கமலச்செந்தாளகந்தழீஇப்புறம்புபோந்து
பல்லியந்துவைப்பத்தானைப்பரவையுட்பரிமாவூர்ந்து
கொல்லியம்பொருப்பன்சேனைக்கடலெதிர்குறுகினானே. (௧௧)

பண்ணுதலிசைவண்டார்க்கும்பசுந்தொடைச்செழியன்றானை
யெண்ணுதலிலவாஞ்சென்னியிரும்படைக்கடனேராறாய்
நண்ணுதலெனப்போய்ப்பொன்னிநாடவன்றமர்கட்கெல்லாங்
கண்ணுதலருளாலங்கோர்கடலெனத்தோன்றிற்றம்ம. (௧௨)

கடலெனவருமாவூர்ந்துகைதவன்சேனைமுன்போ
யடலணிமேருக்கோட்டியாலவாய்நெடுநாண்பூட்டி

(எ) கல் - மலை. மாறு - பகை. கருவி என்றது—சேனையை. வஞ்சி-பகைமேற் செல்வோரணியும்மாலை.

(அ) கருவியீட்டம்-ஆயுதத்தொகுதி. பரவை - கடல். கைதவன்-பாண்டியன். (௯) நேமி-ஆக்கினைசக்கரம். (௧௦) நாவிரியாதமாற்றம்-அசரீரிவாக்கு. (௧௧) எல்-பகல். அல்லி-அகவிதழ். கொல்லியம்பொருப்பன்-கொல்லிமலைக் கரசனாகியசோழன். (௧௩) ஆலவாய் என்றது-வாசுகியை. துழாய்க்கோல்என்றது, திருத்துளபமாலையைப்பூண்ட திருமாலாகியபாணத்தை. மிடல்-வெற்றி.

மடலவிழ்துழாக்கோனாட்டிவாயெரிபுரத்திலூட்டி
மிடலணிகூடற்கோமான்வேடுருவாகிநின்றான். (௧௩)

கங்குல்வாய்த்திங்கள்போலக்காதணிதந்தத்தோடுங்
கங்குல்வாய்முளைத்தமீன்போற்கதிர்முத்தவடமுங்குஞ்சிக்
கங்குல்வாய்ச்சிலைபோல்வெட்சிக்கண்ணிசூழ்கலாபச்சூட்டுங்
கங்குல்வாய்கிழிக்குந்தந்தக்கடகமுமின்னுக்கால. (௧௪)

அண்டத்தாரமரர்நாமமன்றுதொட்டடையத்தோற்று
கண்டத்தாரிருளேயெங்குங்கலந்தெனக்கறுத்தமேனி
கொண்டத்தாராரினாற்கோர்கூற்றெனக்கொல்வேலேந்திச்
சண்டத்தீயென்னநின்றான்காவிரித்தலைவன்காண. (௧௫)

சீறியாயிரம்பரிக்கோர்சேவகன்வந்தேனென்னக்
கூறினனெதிர்த்தான்வெள்ளிக்குன்றவன்பத்துநூறு
மாறிலாப்பரிக்குமட்டோர்வயவனீயன்றேவெண்ணி
லீறிலாப்பரிக்குமொற்றைச்சேவகன்யானேயென்றான். (௧௬)

என்றசொல்லிடியேறென்னவிருசெவிதுளைப்பக்கேட்டு
நின்றவனெதிரேமின்னுநீட்டிச்சென்மேகம்போலச்
சென்றுவேல்வலந்திரித்துச்செயிர்த்தனனெதிர்த்துச்சீற
வன்றிறனூற்றுப்பத்துவயப்பரிக்கொருவனஞ்சா. (௧௭)

யாமினியிந்தவேலாலிறப்பதற்கையமில்லை
யாமெனவகன்றான்மாவோடாயிரம்பரிக்கோர்மள்ளன்
காமனைவெகுண்டவேடன்மறைந்தனன்கங்குற்சோதி
மாமகனதுகண்டோடும்வளவனைத்துரந்துசென்றான். (௧௮)

துரந்திடுமெள்விலோடுஞ்சோழனுந்திரும்பிநோக்கிக்
கருந்தடங்கண்ணிபாகங்கரந்தவேடுவனைக்காணான்
வருந்துயரச்சந்தீர்ந்தான்மதுரையினளவும்பற்றிப்
புரந்தரற்புறங்கண்டானைப்புறங்கண்டுமுடுக்கிப்போனான். (௧௯)

காலொன்றுமுடுக்கப்பட்டகனலொன்றுநடந்தாலொத்து
வேலொன்றுதடக்கைநேரிவேந்தனுன்முடுக்குண்டோடுஞ்

---

(௧௫) அண்டம்-விண்ணுலகம். ஆர்-பொருந்தல். நாமம் - அச்சம். தார்-மாலை. ஆர்-ஆத்தி. சண்டத்தீ-வடவைத்தீ.

(௧௮) கங்குல்சோதிமாமகன் என்றது—இரவில்விளங்கும்சந்திரன் மரபிற்றோன்றிய சுந்தரேசபாத சேகரபாண்டியனை.

(௧௯) புரந்தரன்-இந்திரன்.

சேலொன்றுகொடியினுன்றன்செழுநகர்விரைந்துசெல்வான்
மாலொன்றுகளிற்றினுங்கோர்மதுமலர்க்கிடங்கில்வீழ்ந்தான். (௨0)

மீனவன்மதுரைமூதூர்மேற்றிசைக்கிடங்கில்வீழ
மானவெம்புரவியோடும்வளவனும்வீழ்ந்தான்கூடற்
கோனவனருளால்வானேர்குரைகடல்கடையத்தோன்று
மானையினெழுந்தான்றென்னன்கோழிவேந்தாழ்ந்துபோனன். ()

எழுசீரடியாசிரியவிருத்தம்.

பிலத்தளவாழ்ந்த கடிமலர்க்கிடங்கிற் பெருந்தகையவிந்தவன்றுகில்பூண், கலத்தரும்பேழை படைபரிமான்றேர் கரியெலாங்கவர்ந்துதண்பொருகைத், தலத்தவன்றங்க ணுயகரணியத் தக்கதூசணிகலனல்கி, நலத்தகையவர்பே ரருட்கடற்கன்பு நதியெனப்பெருகிவீற்றிருந்தான். (௨க)

சோழனைமடுவில்வீட்டியபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௪௬ - க்கு - திருவிருத்தம் - க௬0எ.



முப்பத்தேட்டாவது,

## உலவாக்கோட்டையருளியபடலம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

மின்பனிக்கதிர்வேணிவானவன்மீனவன்றனைமானவேன்
முன்பனிக்கவலந்திரித்துமுடுக்கிநேரியடுக்கலான்
பின்பனிக்கமலத்தடத்திறவிட்டவாறிதுபெருமைசா
லன்பனுக்குலவாதகோட்டையளித்தவாறுகிளத்துவாம். (க)

கலிநிலைத்துறை.

பொடியார்க்குமேனிப்புனிதர்க்குப்புனிதவேற்றுக்
கொடியார்க்குவேதக்குமிக்கிணையானகூடற்
படியார்க்குஞ்சீர்த்திப்பதியேருழவோருணல்லா
னடியார்க்குநல்லானறத்திற்கும்புகழ்க்குநல்லான். (௨)

(௨க) ஆனை என்றது—பாற்கடலிற்றேன்றிய வெள்ளையானையை. கோழி - உறையூர். (௨௨) அவிந்தவன்- இறந்தசோழன்.

(க) பனிக்க-நடுங்க. அடுக்கல்-மலை. (௨) பொடி-திருநீறு. குடுமி-உச்சி. உழவோர்-வேளாளர்.

அனையானறத்திற்கருள்போன்றவளான்றகற்பின்
மனையாண்மரபின்வழுவாததருமசீலை
யெனையாருநன்குமதிக்கவிருக்குநீரா
டனையாள்பதிக்குக்கதிக்குத்தனிச்சார்புபோல்வாள். (௩)

பல்லேருழவின்றெழில்பூண்டுபயன்கள்கொள்வான்
வில்லேருழவன்கடன்கொண்டுமிகுந்தவெல்லா
மில்லேருழத்திமடைச்செல்வமியற்றியேந்த
வல்லேறுகண்டனடியாரையருத்துநீரான். (௪)

தொகைமாண்டதொண்டர்சுவையாறுதழீஇபநான்கு
வகைமாண்டமாறுபடுமுண்டிமறுத்தருந்த
நகைமாண்டவன்பின்றலையாயவனல்கநல்கப்
பகைமாண்டசெல்வமணற்கேணியிற்பல்குநாளின். (௫)

இந்நீரவாயவள்ங்குன்றினுமின்மைகூராத்
தன்னீர்மைகுன்றுனெனுந்தன்மைபிறர்க்குத்தேற்ற
நன்னீர்வயலின்விளைவஃகிநலிவுசெய்ய
மின்னீரவேணிமதுரேசர்விலக்கிஞரே. (௬)

குன்றுவிருத்திக்கடன்கொண்டுகொண்டன்பர்பூசை
நன்றுநடத்தத்தொடுத்தான்கடன்றனுங்கிட்டா
தொன்றுலுங்கொண்டவிரதத்துக்குறுதியின்றி
நின்றுனுடம்பையொறுக்கின்றநியமம்பூண்டான். (௭)

கொடுப்பாரவரேவிளைவுங்கடன்கோளுமாற்றித்
தடுப்பாரெனின்மற்றதையாவர்தடுக்கவல்லா
ரடுப்பார்விழுமங்களைவாரடியார்க்குநல்லூண்
மடுப்பானியமந்தடைபட்டுவருந்துகின்றுன். (௮)

விண்ணுறுகுடும்விடையான்றமர்க்கூட்டியன்றி
யுண்ணுதவன்றன்னுயிர்க்குத்துணையாயகற்பிற்

---

(௩) தனையாள்பதி-தன்னைக்கொண்டகணவன்.

(௪) வில் ஏர் உழவன் என்றது—வில்லாகிய ஏரால் பகைப்புலத்தையுழும் அரசனை. கடன்-அரசிறைப்பணம். இல்லேருழத்தி என்றது-தருமசீலையை. மடை-சோறு. அல்லேறுகண்டன் - நீலகண்டன்.

(௫) நான்குவகை என்றது—உண்ணல், தின்னல், நக்கல், பருகல்களை. மருத்தருந்த என்றது—முற்சிகைமாற்றிப் பிற்சிகையுண்ணுதலை. இதனை அறுசுவையுண்டி யமர்ந்தில்லாளூட்ட என்னும், நாலடியாரிற்காண்க. கேணி-கிணறு. (௭) விருத்திக்கடன்-வட்டிக்குவாங்குங்கடன். (௮) விழுமம்-துன்பம். கோள்-கொள்ளுதல்.

பண்ணார்மொழிதன்னொடும்பட்டினிவிட்டுநெஞ்சம்
புண்ணாகவாகம்பசித்தீயிற்புழுங்கப்பட்டான். (௯)

இறக்கும்முடம்பாற்பெறும்பேறினியாவதென்னா
வறக்குன்றனையான்மனையோடுமடைந்திச்செய்தி
நிறக்கின்றசெம்பொற்சிலையார்க்குநிகழ்த்தியாவி
துறக்கின்றதுவே துணிவென்றுதுணிந்துபோனான். (௧௦)

ஐயன்றிருமுன்னரடைந்தடிதாழ்ந்துவாழ்வோ
ருய்யும்படிநஞ்சமுதுண்டவொருவவுன்றன்
மெய்யன்பர்பூசைக்கிடையூறுவிளையவென்றன்
செய்யும்புலமும்விளைவின்றிச்சிதைந்தவென்னா. (௧௧)

விடனல்குசூலப்படையாய்கடன்வேறுகாணேன்
கடனல்கவல்லார்தமைக்காட்டுதிகாட்டிலாயேன்
மடனல்குமிந்தவுடம்பின்சுமைமாற்றுவேனென்
றுடனல்குகற்புக்குரியாளொடும்வேண்டுமெல்லை. (௧௨)

பஞ்சாதிவேதப்பொருள்சொன்னபரமன்வாக்கொன்
றஞ்சாதிவேளாண்டலைவாவுனகத்திலினன்றோர்
செஞ்சாதியாயசெழுவாலரிக்கோட்டையுய்த்தே
மெஞ்சாதிருக்குமெடுக்குந்தொறுமென்றுமாதோ. (௧௩)

நீநாளும்பூசித்ததில்வேண்டியகொண்டுநித்த
மானதவன்பர்க்கமுதூட்டியெவர்க்குமன்ன
தானதிநானதருமங்களுஞ்செய்திவீடு
மேனாளளிக்கின்றனமென்றுவிசும்பிற்கூற. (௧௪)

கேட்டின்பமெய்திக்கிளர்விம்மிதனாகிவேதப்
பாட்டின்பயனைப்பணிந்தில்லமடைந்துபண்டை
யீட்டுந்தவப்பேறெனக்கண்டனன்றொண்டர்க்கெந்தை
கூட்டுங்கதிபோலுலவாமற்கொடுத்தகோட்டை. (௧௫)

வானாறுசூடிதருகோட்டையைவைகறோறும்
பூநாறுசாந்தம்புகையொண்சுடர்கொண்டருச்சித்

---

(௯) பட்டினிவிட்டு - பட்டினியிருந்து.

(௧௨) மடன் - அறியாமை. (௧௩) பஞ்சாதி - சந்தைகூட்டி வேதாத்தியயனஞ் செய்வோர் நிறுத்துதற்குவகுத்த ஐம்பது பதங் கொண்ட ஓர்முடிபு.

(௧௫) வேதப்பாட்டின் பயன் என்றது—சிவபெருமானை.

தானதசெவ்வியடிசிற்குமதற்குவேண்டு
நானகருவிவிலைக்கும்மதுநல்கவாங்கா. (௧௬)

மின்னார்சடையான்றமராய்ந்தவர்வேதச்செல்வர்
தென்னாடர்தெய்வம்விருந்தொக்கல்செறிந்துநட்டோர்
முன்னாமெவர்க்கும்முகில்போல்வரையாமனல்கி
யெந்நாளுநோயின்றளகாதிபனென்னவாழ்ந்தான். (௧௭)

மேற்படி - வேறு.

அன்பன்னடியார்க்கினியானனிநாளளந்தல்கித்
தன்பன்னியொடுமெயலார்சுற்றந்தமரோடும்
பின்பந்நிலையேயிமவான்மகளைப்பிரியாத
வின்பன்னுருவாய்ச்சிவமாநகர்சென்றிறைகொண்டான். (௧௮)

உலவாக்கோட்டையருளியபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௭ - க்கு திருவிருத்தம் - ௧௯௨௫.

---

முப்பத்தோன்பதாவது,

## மாமனாகவந்துவழக்குரைத்த படலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தாமநாறிதழியார்தந்தமர்க்கன்பன்வறுமைப்பட்டோ
னுமகாளுலவாக்கோட்டையருளியமுறையீதையன்
றேமனண்முல்லைத்தீர்ந்தார்ச்சிறுதகைவணிகற்காக
மாமனம்படிவங்கொண்டுவழக்குரைவண்ணஞ்சொல்வாம். (௧)

கன்னிநான்மாடக்கூடற்கடிநகர்வணிகமாக்க
டன்னின்மாநிதிக்கோனன்னானதனபதியென்னும்பேரான்
மன்னினனையான்கற்பின்மடவரல்சுசீலையென்பாள்
பொன்னினண்முளரிச்சேக்கைப்புண்ணியத்திருவினன்னாள். (௨)

---

(௧௬) நானகருவி என்றது—சமைத்தற்குவேண்டும் பலவித வுபகரணங்களை. (௧௭) ஆய்ந்தவர் என்றது - ஆகம ஆராய்ச்சியையுடைய சைவரை. ஒக்கல் - சுற்றத்தார். அளகாதிபன்-குபேரன்.

(௧௮) இன்பன் என்றது - சிவபெருமானை.

(௨) நிதிக்கோன் - குபேரன்.

எனவிவர்தமக்குமைந்தற்பேறின்றியிரங்குநாளிற்
றனபதிமருகன்றன்னைத்தகவுசான்மகவாக்கொண்டு
மனமகிழ்ச்சிறப்பானல்கமனைவியுந்தொழுதுவாங்கிப்
புனைவனபுனைந்துபோற்றிப்பொலிவுறவளர்த்துக்கொண்டாள். ()

தனபதிமகப்பேறற்றானாயினுந்தணவாக்காதன்
மனைவிமேல்வைத்தவாசைமயக்கினால்வருந்தியீன்ற
தனையனைமகவாத்தந்ததங்கைமேற்றீராப்பூசல்
வினைவிளைத்தொழுகவோர்நாளினையளும்வெகுண்டுசொல்வாள். ()

பெருமிதமுனக்கேன்பிள்ளைப்பேறற்றபாவிநீயென்
னருமைநன்மகனாலன்றோவிருமையுமடைவாயென்னப்
பெரிதுநாணடைந்துமேலைக்காயினும்பிள்ளைப்பேறு
தருதவம்புரிவேனென்னாத்தனபதிதவமேற்செல்வான். (௫)

தன்பெருஞ்செல்வமெல்லாமருமகன்றனக்கேயாக்கி
யன்புகொண்மனைவியோடுமருந்தவநெறியிற்சென்றான்
பின்பவன்வரவுதாழ்ப்பமருமகன்பெற்றவெல்லாம்
வன்பினால்வழக்குப்பேசிவௌவினார்தாயமாக்கள். (௬)

விளைநிலனடிமைபைம்பூண்வெறுக்கைநன்பசுக்களேனை
வளனுமாற்றவர்கைக்கொள்ளவன்சிறையிழந்தபுட்போற்
றளர்வுறும்கனுந்தாயுஞ்சார்பிலார்தம்மனோர்க்கோர்
களைகணாயிருக்குங்கூடற்கடவுளேசரணமென்னா. (எ)

வந்துவானகடுபோழ்ந்தமணிமுடிவிமானக்கோயிற்
சுந்தரநாதன்பாதத்துணைதொழுதிறைஞ்சியார்க்குந்
தந்தையுந்தாயுமாகுந்தம்பிரானீரேயெங்கட்
கெந்தையும்யாயுமென்னாவிரங்கிநின்றினையசொல்வாள். (அ)

என்மகன்றன்னைமைந்தனின்மையாலெவருங்காணத்
தன்மகனாகக்கொண்டுதகுதியாலன்றேகாணி
பொன்மனைபிறவுநல்கிப்போயினனெம்முனிப்பால்
வன்மையாற்றாயத்தார்களவையெலாம்வௌவிக்கொண்டார். (௯)

---

(௩) மருகன் என்றது - தங்கைகுமாரனை.

(௪) பூசல்வினை - போர்த்தொழில். (௬) தவநெறி என்றது - வானப்பிரஸ்த நிலையை. தாயமாக்கள் - ஞாதிகள். (எ) வெறுக்கை - திரவியம். களைகண் - பற்றுக்கோடு. (அ) தந்தையுந் தாயுமாகுந்தம் பிரான் என்றது - எவ்வுயிர்க்கும் வினைவழி அநந்தர் சீகண்டர் முகத்தாலூட்டுவோ னாதலின். (௯) எம்முன் என்றது - என் மூத்தோனென தனபதிவணிகனை விளக்கிநின்றது.

ஒருத்திநானொருத்திக்கிந்தவொருமகனிவனுந்தேறுங்
கருத்திலாச்சிறியன்வேறுகளைகணுங்காணேனைய
வருத்திசாலறவோர்தேறுமருட்பெருங்கடலேயெங்கு
மிருத்திநீயறியாய்கொல்லோவென்றுபார்படியவீழ்ந்தாள். (௰)

மாறுகொள்வழக்குத்தீர்க்கவல்லவரருளினாலே
சீறுகொள்வடிவேற்கண்ணாள்சிறுதுயிலடைந்தாண்மெய்யி
லூறுகொள்கரணமைந்துமுற்றறிகனவிற்கங்கை
யாறுகொள்சடையார்வேதச்செல்வராயடுத்துச்சொல்வார். (௧௧)

புலர்ந்தபின்றாயத்தோரைப்புரவலனவையாற்றால்
வலந்தருமன்றத்தேற்றிமறித்தனையிருத்தியாம்போந்
தலந்தருமறிவான்மூத்தோரனைவருமிசையவந்தச்
சலந்தருவழக்குத்தீர்த்துத்தருகுவம்போதியென்றார். (௧௨)

வேரியங்குவளையுண்கண்விழித்தனள்வியந்துகெட்டே
னாருமில்லார்க்குத்தெய்வந்துணையென்பதறிந்தேனென்னாக்
காரிருங்கயலுண்கண்ணாள்கணவனைத்தொழுதுவாழ்த்திச்
சீரிளங்குமரனோடுந்தெரிவைதன்மனையிற்சென்றாள். (௧௩)

சென்றவள்கங்குலெல்லைதெரிந்தபினெழுந்துவெள்ளி
மன்றவன்கோயில்வாயில்வந்துவந்தனைசெய்தம்பொற்
குன்றவனுரைத்தவாற்றாற்கொடுமைசால்வழக்குப்பூட்டி
வென்றவரிருக்கையெய்திவிளம்புவாள்பலருங்கேட்ப. (௧௪)

அட்டில்வாய்நெருப்பிடேலோரடியிடேலறத்தாறன்றிப்
பட்டிமைவழக்கால்வென்றுபோகொட்டேன்பலருங்கேட்க
விட்டனனரசனாணையறத்தவிசேறியான்றோ
ரொட்டியபடிகேட்டெங்களுரிப்பொருடந்துபோமின். (௧௫)

என்றனண்மறித்தலோடுமிழுக்குரையாடிமைது
வன்றிறல்வலியார்தள்ளியடித்தனர்மைந்தனோடுஞ்

---

(௰) தேறுங்கருத்து என்றது - நன்மை தீமைகளைப்பகுத்து அறியுங்கருத்தினை. அருத்தி-அன்பு. (௧௧) ஊறுகொள்கரணம் ஐந்தாவன - பரிசம், சத்தம், ரசம், ரூபம், கந்தங்களே. உற்றறிகனவு என்றது - சொப்பனவஸ்தையில் வாயுவாதிபிருபத்தைந்து தத்துவங்களும் உளவாதலின். (௧௨) புலர்தல் - விடிதல் மன்றம்-நியாய சபை. அலம் - அமைதி. சலம் - கொடுமை.

(௧௩) கெட்டேன், வியப்பிடைச்சொல். (௧௫) அட்டில்வாய்-சமைக்குமிடம். பட்டிமை - வஞ்சனை. அறத்தவிசு-நியாயபீடம். நட்டல்-தீர்மானித்தல். (௧௬) இழுக்கு - தவறு.

சென்றனன்முறையோவென்னுத்திருந்தறத்தவிசினோர்மு
ன்னின்றுரையாடினுள்கேட்டறிந்தனர்நீதிநூலோர். (௧௬)

அறத்தவிசிருப்போரேவலாடவரோடும்போந்து
மறித்தவைக்களத்திற்கூட்டிவந்தனள்வந்தவெல்லை
யறக்கொடிபாகர்வெள்ளியம்பலவாணர்தாமத்
திறந்தனபதியேயென்னத்திருவுருக்கொண்டுசெல்வார். (௧௭)

கலிவிருத்தம்.

பெருவிலைக்குண்டலம்பிடரிற்பத்திபாய்ந்
தெரிகதிர்கவிழ்ப்பவாளெறிக்குமங்கத
மருவரைத்தோள்கிடந்திமைப்பவாகமேற்
குருமணிக்கண்டிகைகுலாய்ப்பின்கோட்டவே. (௧௮)

முரலளிபுறவிதழ்மொய்ப்பச்செய்யதா
மரைசிறிதலர்ந்தெனமணிசெய்மோதிரக்
கரதலம்வீசியோர்கடுங்கணேறெனப்
பெருமிதநடைகொடுநடக்கும்பெற்றியார். (௧௯)

வாடியமுளரிபோன்மாறிட்டாறிடத்
தாடியுமலர்ந்தபோதொப்பமைந்தன்மே
லூடியதண்ணளிநயந்துமுட்கிடை
கூடியமுகத்தினர்குறுகுவாரவை. (௨௰)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அரசனிங்கில்லைகொல்லோவான்றவரில்லைகொல்லோ
குரைகழல்வேந்தன்செங்கோல்கொடியதோகோதினூல்க
ளுரைசெயுந்தெய்வந்தானுமில்லைகொலுறுதியான
தருமமெங்கொளித்ததேகொலென்றறத்தவிசிற்சார்வார். (௨௧)

தனபதிவரவுநோக்கிவஞ்சனைத்தாயத்தார்க
ளினைவுறுமனத்தராகிவிம்மிதமெய்திவெல்லு
மனவலியிழந்துபண்டுவழக்கலாவழக்கால்வென்ற
வினைநினைந்துள்ளமச்சநாணினுல்விழுங்கப்பட்டார். (௨௨)

---

(௧௭) ஏவலாடவர் - ஏவியவேவுகாரர். அறக்கொடி என்றது முப்பத்திரண்டறமும் வளர்த்தருளிய உமாதேவியாரை.

(௧௮) வாள் - கிரணம். அங்கதம் - வாகுவலயம். மணிக்கண்டிகை-முத்துவடம். (௧௯) மணி என்றது நீலரத்தினத்தை. ஏறு-இடபம். (௨௰) உட்கிடை-உள்ளக்கருத்து. (௨௧) ஆன்றவர் - அறிவாலமைந்தமுதியோர். நூல்-வேதாகமங்கள். (௨௨) இனைவு - வருத்தம்.

மாதுலராகிவந்தோர்மருகனைத்தம்பின்வந்த
தாதுலராதகோதைதன்னொடுந்தழீஇத்தங்கண்ட
மீதுலராதசாமவேதமார்ப்பவர்போல்வாய்விட்
டாதுலரானீரந்தோவையவென்றழுதுநைந்தார். (உங)

குடங்கையினெடுங்கணளுங்குமரனும்வணிகன்றாளிற்
றடங்கணீராட்டவீழ்ந்தார்தடக்கையாலெடுத்துப்புல்லி
மடங்கலேறனையான்றானுமற்றவர்தமைத்தன்கண்ணீர்
நெடுங்கடல்வெள்ளத்தாழ்த்திக்குமரனைநேர்ந்துநைவான். (உச)

ஐம்படைமார்பிற்காணேன்சிறுசிலம்படியிற்காணேன்
மொய்ம்பிடைமதாணிகாணேன்முகத்தசைசுட்டிகாணேன்
மின்படுகுழைகள்காணேன்வெற்றுடல்கண்டேனப்பா
வென்பெறுமென்றுபிள்ளைப்பணிகளுங்கவர்ந்தாரென்று. (உரு)

அனைவருமிரங்கவாய்விட்டழுதவரிளையாடன்னைத்
தனையனைக்கண்ணீர்மாற்றித்தடக்கையான்முதுகுதைவந்
தினையன்மின்னென்முன்வேறொன்றெண்ணன்மினென்னுவஞ்ச
வினைஞர்வல்வழக்குச்சோர்ந்துவிடுவதுகாண்மினென்று. (உசு)

நட்பிடைவஞ்சஞ்செய்துநம்பினுர்க்கூன்மாறாட்டத்
துட்படக்கவர்ந்துமேற்றோர்க்கிம்மியுமுதவாராயும்
வட்டியின்மிதப்பக்கூறிவாங்கியுஞ்சிலர்போலீட்டப்
பட்டதோவறத்தாறீட்டுநம்பொருள்படுமோவென்று. (உஎ)

மங்கலமாடமோங்குமதுரைநாயகனைநோக்கிச்
செங்கரஞ்சிறமேற்கூப்பிமாணிக்கந்தேற்றிவிற்கு
மெங்குலவணிகரேறேயெம்மனோர்வழக்கையிந்தப்
புங்கவரிடனுத்தீர்த்துத்தருகெனப்புலம்பியார்த்தார். (உஅ)

---

(உங.) மாதுலன் - மாமன். தாது-மகரந்தம். உலராத - அழியாத. ஆதுலர்-வறிஞர்.

(உச) குடங்கை - உள்ளங்கை, தாளில், உருபுமயக்கம்.

(உரு) ஐம்படை என்றது-பிள்ளைப் பருவத்தில் காத்தற்பொருட்டு, காக்குங்கடவுளாகிய திருமாலினது, சங்கு சக்கர கதா கட்க கோதண்டம் என்னும் பஞ்சாயுத வடிவமாகச்செய்யும் ஒருவகையாபரணம். மொய்ம்பு-தோள். மதாணி-வாகுவலயம்.

(உசு) வஞ்சவினைஞர் என்றது - ஞாதிகளை. (உஎ) ஊன்மாறாட்டம்-வஞ்சித்துக்கொல்லல்.

ஆவலித்தழுதகள்வர்வஞ்சரைவெகுண்டுநோக்கிக்
காவலன்செங்கோனுண்ணூல்கட்டியதருமத்தட்டி
னுவெனுத்துலைநாவிட்டெம்வழக்கையுநமராய்வந்த
மேவலர்வழக்குந்தூக்கித்தெரிகெனவிதந்துசொன்னார். (உ௬)

நரைமுதுபுலியன்னான்சொற்கேட்டலுநடுங்கிச்சான்றோ
ரிருவர்சொல்வழக்குமேற்கொண்டநுவதித்திரண்டுநோக்கித்
தெரிவழியிழுக்குஞாதிவழக்கெனச்செப்பக்கேட்டு
வெருவினர்தாயத்தார்கள்வலியரின்வேறுசொல்வார். (௩0)

தவலருஞ்சிறப்பினன்றதனபதிவணிகரல்ல
ரிவரெனவவையங்கேட்பவிருகையும்புடைத்துநக்குக்
கவளமானுரித்துப்போர்த்தகண்ணுதல்வணிகர்கோமா
னவரவர்குடிப்பேர்பட்டங்காணிமற்றனைத்துங்கூறும். (௩௧)

தந்தைதாய்மாமன்மாமிதாயத்தாரிவரையீன்றார்
மைந்தர்களுடன்பிறந்தார்மனைவியர்கிளைஞர்மற்று
மந்தமில்குணங்கள்செய்கையாதியவடையாளங்கண்
முந்தையின்வழுவாவண்ணமுறையினன் மொழிந்தான்முன்னோன்

அனையதுகேட்டவான்றோரனைவருநோக்கியந்தத்
தனபதிவணிகர்தாமேயிவரெனச்சாற்றலோடு
மனவலித்தாயத்தார்தம்வழக்கிழுக்கடைந்ததீது
நனைவழிவேம்பன்றேரிற்றண்டிக்குநம்மையென்ன. (௩௩)

இல்லினுக்கேகிமீள்வன்யானென்றுங்குளத்திற்கேகி
யொல்லையில்வருவேனென்றுமொவ்வொருவார்த்தையிட்டு
வல்லெழுவனையதோளாரனைவரும்வன்காறள்ளச்
செல்லெழுமுகில்போற்கூட்டஞ் சிதைந்தனரொளித்துப் போனார்.

அனையவர்போகநின்றவறனவின்மன்றத்துள்ளோர்
தனபதிவணிகர்தந்ததனமெலாந்தத்தமைந்தற்
கெனமனையெழுதிவாங்கியீந்தனரீந்தவெல்லை
மனமொழிகடந்தநாய்கர்மறைந்துதங்கோயில்புக்கார். (௩௫)

(உ௬) ஆவலித்து – வாய்திறந்து. துலை - துலாக்கோல். தூக்கி-ஆராய்ந்து. விதத்தல், மிகுத்துச்சொல்லல்.

(௩0) அநுவதித்தல்-முற்குறித்த பொருளைப் பற்றித் திரும்பச்சொல்லும் நியாயம். தெரிவழிஎன்றது-உத்தேசம், இலக்கணம், சோதனை என்னும் போதப்பிரகாரங்களால் ஆராயும்வழியை.

(௩௧) தவல்-கெடுதல். கவளமான்-யானை. (௩௩) நனை-தேன்.
(௩௪) எழு-தூண். (௩௫) மனை-சாதனம்.

இம்மெனப்பலருங்காணமறைந்தவரிருந்தண்கூடற்
செம்மலென்றறிந்துநாய்கச்சிறுவனுக்குவகைதூங்க
விம்மிதமடைந்துவேந்தன்வரிசையுள்வெறுப்பநல்கிக்
கைம்மறிவணிகர்கோயில்புதுக்கினன்கனகங்கொண்டு. (ருசு)

கலிநிலைத்துறை.

பூதநாயகன்பூரணசுந்தரப்புத்தேள்
பாதசேகரன்வரகுணபாண்டியன்புயத்தி
லோதநீருலகின்பொறைசுமக்கவைத்தும்பர்
நாதர்சேவடித்தாமரைநகைநிழலடைந்தான். (ருஎ)

மாமனாகவந்துவழக்குரைத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் சகூ - க்கு - திருவிருத்தம் - ககூசுஉ.

---

நாற்பதாவது,

## வரகுணனுக்குச்சிவலோகங்காட்டியபடலம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

பண்கொண்டவேதமுத லிடையீறுநாடரிய பரமாமனாகி யொருவணிக, னென்கொண்ட காணிபொருள் கவர்ஞாதி மாதுலரை யெதிரேறி வென்றபடியிதுவாந், தண்கொண்டநேமிவர குணதேவ னெய்துபழி தன்னைத்துடைத் தனையமனவன், கண்கொண்டு காணவுயர்சிவலோகமதுரைதனில் வருவித்தகாதையினிமொழிவாம்.

இயமானனிந்திரவி யெரிவானிலஞ்சலிலமெறிகாலெனும்பகுதியிருநான், மயமான சுந்தரனை மனவாய்மெய் யன்பினிறை வழிபாடடைந்தவர குணனாய்ச், சயவேலைவென்றவடி வினனீறில் வென்றிபெறு சதவேள்வியிந்திரனைநிகர்வோ, னியன்மேனிகொண்டவொளியினிலேழ்பசும்புரவி யினதேசுவென்றவர குணனே. (உ)

---

(க) ஞாதிமாதுலர் - தாயாதிகளானமாமன்மார். மன்னவன் என்பது—இடைகுறைந்து மனவன் எனநின்றது.

(உ) இயமானன்—ஆன்மா. எரி-நெருப்பு. சலிலம்-சலம். கால்-காற்று. இருநான்மயம் என்றது—ஆன்மாமுதலிய எட்டுப் பொருள்களும் இறைவனது மூர்த்தமாதலின். சதம் - நூறு. இயல்-இலக்ஷணம். இனன் - சூரியன்.

மறையாதிகலைபலவு மகமாதிபலவினையும் வழுவாதுநிறுவுதலி ன்மலர்மே, லிறையாகிமலர்வனிதை பிரிவான திருமகளிர்கபோக ம்விளையமுறைசெயலாற், கறையாழிவளைகளணி கரனாகியிகல்செ ய்பொறிகரணதிபகைகளையுநெறியா, லறைவாய்மையுரையின்முழு துணர்வாலெவ்வுயிருநிறை யரனாகியுலகுமுறைசெயுநாள். (௩)

வேட்டஞ்செய்காதலொரு நாட்டங்கவேகிவன மேட்டெங்கு மாதடவியெரியா, நாட்டஞ்செய்காயுழுவை நீட்டுங்கையானைமுக நாட்டும்பலேனமிவைமுதலா, வோட்டஞ்செய்தேரிரவி கோட்டின் கணேறியிரு ளூட்டந்திமாலைவருமளவாக், கோட்டஞ்செய்வார் சி லையின் மாட்டம்பினூறியுயிர் கூட்டுண்டுமாநகரில்வருவான். (௪)

காலிற்கடும்புரவி மேலிற்கடிந்துவரு காலக்கடந்தனிலொர் மறையோன், மாலுற்றயர்ந்துமுகம் வேர்வைக்குறுந்திவலை வாரக் கிடந்துவிழிதுயில்வோன், மேலக்கடும்புரவிகால்வைப்பவந்தணனு ம் வீவுற்றவிந்தனனதறியான், கோலிற்செலும்பரியின் மீனத்தனுந் தனது கோயிற்புகுந்தனனவளவே. (௫)

மேற்படி – வேறு.

கனவட்டத்தடியிடறப் பொறிவிட்டப்புலனவியக் கரணத்துட் பொதியுயிர்விட்டவனாகந், தனையொக்கற்பனவரெடுத்தனர்கிட்டிக் குரிசில்கடைத்தலையிட்டத் திறமொழியத்தமிழ்மாற, னினைவுற்று ப்பனவர்கையிற் கனகக்குப்பைகணிறைவித் தெமதிக்குற்றவனை எடுத்தெரிமாலை,புனைவித்தக்கடன்முடிவித்தனன்மற்றப்பழிபடரிற் புலைதயப்பற்றியதிடைவிட்டகலாதே. (௬)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பற்றியபழிக்குத்தீர்வுபழமறைக்கிழவர்சொன்ன
பெற்றியினைவேறுண்டிநதிக்கரைபெருநூற்கேள்வி

(௩) மலர்மேலிறை – பிரமன். மலர்வனிதை-இலக்குமி. திரு மகளிர்என்றது – அஷ்டலட்சுமிகளை. ஆழி – கடல். வளைகளணிக ரன்-திருமால். பொறி – பஞ்சேந்திரியம்.

(௪) மேடு – மேட்டுநிலம். மாதடவி – மிருகங்களைநாடி. உழு வை-புலி. உம்பல்ஏனம்-ஆண்பன்றி. கோடு – அத்தமனகிரி. கோ ட்டம் – வளைவு. (௫) கடம் – காடு. திவலை-துளி. வீவுற்று-அறிவழி ந்து. கோல்-அம்பு. மீனத்தன் – பாண்டியன். (௬) கனவட்டம்-பா ண்டியன்குதிரை. ஒக்கல்-சுற்றம். பனவர் – அந்தணர். குரிசில்எ ன்றது-வரகுணபாண்டியனை. எமதிக்கு-தென்திசை. எரிமாலைபு னைவித்துஎன்றது-தகனக்கிரியையை. படர் – துன்பம். (௭) தீர்வு- பிராயச்சித்தம். ஐவேறுண்டியாவன – நக்கல், பருகல், உண்ணல், தின்னல், உரிஞ்சல். மூவராந்தாரு என்றது – முதற்பாகம் பிரமன் மூர்த்தமும், இடைப்பாகம் திருமால் மூர்த்தமும், இறுதிப்பாகம் உருத்திர மூர்த்தமுமாயுள்ள அரசமரத்தை. தூர்வை – அறுகு. சுரபி – பசு.

முற்றியமறையோர்க்கீந்துமூவராந்தாருவேந்தைச்
சுற்றியுந்தூர்வைகொய்துசுரபிகள்சுவைக்கவீந்தும். (எ)

அகமருடணத்தாலோமமாற்றியுமானைந்தாவி
னகைமணிக்கோடுதோய்த்தகளிர்புனல்குடித்துந்தான
வகைபலகொடுத்துநீங்காவலியதாயிழுதுபெய்த
புகையழலெனமேலிட்டுப்புலப்படவளைந்ததன்றே. (அ)

கலிநிலைத்துறை.

எங்கும்பெருமூச்செறியுங்கையெறியுங்குன்றி
ஞேங்குஞ்சிறுகுமுடன்றூர்த்திடுமுன்னும்பின்னும்
பாங்குந்தொடருஞ்சிரிக்கும்பகுவாயைமெல்லு
நீங்குங்குறும்பழிதாவெனநேர்ந்துபற்றும். (கூ)

மாசுண்டதெய்வமணிபோற்பணிவாயிற்பட்ட
தேசுண்டதீந்தண்மதிபோலொளிதேம்பிவண்டு
மூசுண்டதானமுகமாவுண்டவெள்ளில்போலக்
காசுண்டபூணனறைபோயகருத்தனானன். (கo)

மறையோர்கள்பின்னும்பழிமேலிடுவண்ணநோக்கி
யிறையோயிதுநான்முகன்சென்னியிறுத்தகூட
லறவேதியனைத்தினமாயிரத்தெண்காற்சூழ
லுறவேயொழிக்கப்படுமின்னமுரைப்பக்கேட்டி. (கக)

ஆனுவிரதநெறியாலிரண்டைந்துவைகல்
வானுடனையம்முறையால்வலஞ்செய்துவந்தா
யானுலதற்குவழிகாட்டுமென்றையர்கூறப்
போனனரசன்புனிதன்றிருக்கோயில்புக்கான். (கஉ)

விழியாயிரத்தோன்பழிதீர்த்தனைவேதியன்றன்
கழியாதமாபாதகந்தீர்த்தனைகௌவைக்கங்கைச்
சுழியாறலைக்குஞ்சடையாயெனைத்தொட்டலைக்கும்
பழியானதுந்தீர்த்தருளென்றுபணிந்துவீழ்ந்தான். (கங)

---

(அ) அகமருடணம்-பாவம்போக்குமந்திரம். ஆனைந்து-பஞ்சகௌவியம். ஆவினகைமணிக்கோடு என்றது-பசுவின்கொம்பு; அல்லது கட்கமென்னும் புண்ணியமிருகத்தின் கொம்பினை. அம்மிருகத்துக்கும் கோவென்பதோர் பரியாயநாமமாதலின்.

(கூ) பாங்கு-இடைப்பக்கம். பணி-(இராகுவென்னும்) பாம்பு.

(கo) வெள்ளில் - விளங்கனி. காசு - இரத்தினம்.

(கங) கௌவை-ஒலி.

எண்ணும்படியம்முறையால்வளர்ந்தேத்தவையன்
விண்ணின்றியம்புமரசேபரிமேதவேள்வி
நண்ணும்பயனோரடிவைப்பினினண்ணவெம்மைப்
பண்ணும்வலத்தான்மகிழ்ந்தேம்பழியஞ்சன்மன்னே. (௧௪)

பொன்னேமுத்தங்கொழிக்குந்துறைப்பொன்னிநாட
னின்னேடமராற்றகினைந்தெழுநீயுநேர்வா
யன்னேனுனக்குப்புறகிட்டகன்றேடுநீயும்
பின்னேடியெட்டிப்பிடிப்பாரிற்றுரத்துமெல்லை. (௧௫)

எமையாமருச்சித்திருக்குந்தலத்தெய்துவாயா
லமையாதவன்கட்பழிமாற்றுதுமென்னச்சேற்க
ணுமையாண்மணாளனருள்வாழ்த்தியுரகனுச்சிச்
சுமையாறுதோளான்றெழுதான்றனிருக்கைபுக்கான். (௧௬)

ஆர்த்தார்முடியோன்சிலநாள்கழித்தாற்றலேற்ற
போர்த்தாவுவேங்கைக்கொடித்தானைபுடவிபோர்ப்பப்
பேர்த்தார்கலிவந்தெனப்பேரியமார்ப்பக்கன்னிப்
பார்த்தாமவேன்மீனவனுட்டிற்படர்ந்தவெல்லை. (௧௭)

மிடைந்தேறுநேரிப்பொருப்பன்படைவேலைமேற்சென்
றடைந்தேறிமீனக்கொடியானமராடவாழி
கடைந்தேறுவெற்பிற்கலங்கிற்றெனக்கிள்ளிசேனை
யுடைந்தேகவெந்கிட்டுடைந்தோடினனுள்ளம்வெள்கா. (௧௮)

சுறவக்கொடியண்ணறுரந்துபின்பற்றிச்செல்வோன்
புறவக்கடிமுல்லையுந்தாமரைப்போதுமேந்தி
நறவக்கழிநெய்தலங்கானலின்ஞாங்கர்மொய்த்த
விறவப்புலவுகமழுவீர்ந்துறைப்பொன்னிசேர்ந்தான். (௧௯)

பூசத்துறையிற்புகுந்தாடியப்பொன்னித்தென்சார்
வாசத்திடைமாமருதைப்பணிதற்குவையைத்

---

(௧௬) எமையாமருச்சித்திருக்குந்தலம் என்றது - யாவரும்பூசித்துப் பேறடையவேண்டுமென்னுந் திருவருட்பாங்கால், சிவபெருமான் உமாதேவியார்சகிதமாய் பூசித்தருளிய திருவிடைமருதூரை.

(௧௭) எல்லை - காலம். (௧௮) ஆழிகடைந்தேறுவெற்பு என்றது-மந்தரகிரியை. வெந்கிட்டு - புறங்காட்டி.

(௧௯) சுறவம் - மீன். புறவம் — முல்லைநிலம். நறவம் — தேன். ஞாங்கர்-பக்கம். இறவம்-இருல்மீன். புலவு-புலால்நாற்றம்.

(௨௦) பூசத்துறை என்றதனுல் தைமாதப் பூரணைநாளென விளங்குகின்றது - பூசற்றுறை எனவும்பாடம்.

தேசத்தவன்கிழ்த்திசைவாயில்கடந்துசெல்லப்
பாசத்தளையும்பழியும்புறநின்றவன்றே. (௨0)

சுருதிச்சுரும்புபுறஞ்சூழ்ந்துகுழறத்தெய்வ
மருதிற்சிறந்தபெருந்தேனைக்கண்வாயங்கார்ந்து
பருகிப்படிந்துதழல்வாய்வெண்ணெய்ப்பாவையொப்ப
வுருகிச்செயலற்றுரையற்றுணர்வாகிநின்றான். (௨௧)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நிராமயபரமானந்தநிருத்தநான்மாடக்கூடற்
பராபரவிமையாமுக்கட்பகவபார்ப்பதிமணாள
புராதனவகிலநாதபுண்ணியமருதவாண
வராவணிசடையாவென்றென்றளவிலாத்துதிகள்செய்தான். (௨௨)

சொற்பதங்கடந்தசோதிதுதித்தடிபணிந்தவேந்தை
மற்பெருந்தோளாய்கீழைவாயிலிற்பிரமசாயை
நிற்பதந்நெறியாற்செல்லேனிழன்மதியுரிஞ்சுமேலைப்
பொற்பெருவாயினீங்கிப்போதிநம்மதுரைக்கென்றான். (௨௩)

வரகுணனதுகேட்டையன்மருதினைவளைந்துநீங்கற்
கருமையால்வாயிற்றோறுமடிக்கடிவீழ்ந்துவீழ்ந்து
வரைதொளைத்தன்னமேலைவாயிலாற்போவானன்ன
திருமணிக்கோபுரந்தன்பெயரினாற்செய்துசென்றான். (௨௪)

திருப்பணிபலவுஞ்செய்துதென்றிசைவழிக்கொண்டேகிச்
சுருப்பணிநெடுநாண்பூட்டுஞ்சுவைத்தண்டச்சிலையாற்காய்ந்த
மருப்பணிசடையான்கோயில்வழிதொறுந்தொழுதுபோற்றிப்
பொருப்பணிமாடக்கூடற்பொன்னகரடைந்தான்மன்னோ. (௨௫)

தொடுபழிதொலைவித்தாண்டசுந்தரத்தோன்றல்பாதக்
கடிமலரடைந்துநாளுங்கைதொழுதுலகமெல்லாம்
வடுவறுசெங்கோலோச்சும்வரகுணனறவோர்நாவா
லடுசுவையமுதமன்னவரன்புகழ்செவிமடுப்பான். (௨௬)

---

(௨௧, கண்வாய்-கண்ணுகியவாய். தெய்வமருதிற்சிறந்தபெருந்தேன் என்றது-சிவபெருமான் உமாதேவியாருக்குத், தான்றிருக்கோயில் கொண்டெழுந்தருளியதலங்களை காட்டிக்கொண்டு. திருவிடைமருதூருக்கு நேரேவருகையில், தமதுபிரிவாற்றாது திருக்கயிலையானது மருதவிருட்சவடிவாகநிற்கக்கண்டு, அதனிழலில்எழுந்தருளி நின்றமையை. இதனை ஷை தலபுராணத்துட்காண்க.

(௨௨) நிர்ஆமயன்-பிணியில்லாதவன்,பகைவன், ஐஸ்வரியமுதலியஆறுகுணங்களையுடையவன். (௨௩) சொற்பதம்-சொல்லளவை

வேதமாகமம்புராணமிருதிகண்முதலாநூலு
மோதுவதுலகின்மிக்கதுருத்திரவுலகமென்னும்
போதமதகங்கொண்டந்தப்பொற்பதிகாணவேண்டுங்
காதல்செல்வழியேயீசன்கங்குலிற்கோயிலெய்தா. (உஎ)

கலிநிலைத்துறை.

மாழைமான்மடநோக்கிதன்மணாளனைவணங்கிப்
பீழையேழ்பவங்கடந்துநின்னடிநிழல்பெற்றோர்
சூழநீசிவபுரத்தில்வீற்றிருப்பதுதொழுதற்
கேழையேற்கொருகருத்துவந்தெய்தியதெந்தாய். (உஅ)

என்றகாவலனன்பினுக்கெளியராய்வெள்ளி
மன்றவாணரவ்வுலகையிவ்வுலகிடைவருவித்
தின்றுகாட்டுதுமிவற்கெனத்திருவுளத்தெண்ண
மொன்றினாரஃதுணர்ந்ததாலுருத்திரவுலகம். (உகூ)

கோடிமாமதிக்கடவுளர்குரூஉச்சுடர்பரப்பி
நீடியோரிடத்துதித்தெனமின்மினிநிகர்த்து
வாடிவானிருசுடரொளிமழுங்கவானிழிந்து
தேடினார்க்கரியானுறைசிவபுரந்தோன்ற. (௩0)

ஆண்டநாயகனந்தியையழைத்தெமக்கன்பு
மாண்டகாதலான்வரகுணவழுதிநம்முலகங்
காண்டல்வேண்டினன்காட்டெனக்கருணையாலேவல்
பூண்டவேத்திரப்படையினன்றெழுதனன்போந்தான். (௩க)

வருதியாலெனப்பணிந்தெழுவரகுணற்கொடுபோய்க்
கருதியாயிரம்பெயருடைக்கடவுணன்முகத்தோன்
சுருதியாதியீறளப்பருஞ்சுயம்பிரகாசப்
பருதியாள்சிவபுரமிதுபாரெனப்பணித்தான். (௩உ)

---

(உஅ) மாழை - பொன். பீழை - துன்பம்; இது - ஆத்மிகம், தெய்விகம், பௌதிகங்களைக்குறித்து நின்றது.

(௩0) குரு - நிறம். இருசுடர் - சந்திரசூரியர். தேடினார் என்றது - பிரமவிஷ்ணுக்களை.

(௩க) கருணை - திருவருள். ஆயிரம்பெயருடைக்கடவுள் என்றது-ஈண்டு திருமாலையுணர்த்திநின்றது. ஈறளப்பருஞ் சுயம்பிரகாசப்பரிதி என்றது - சூரியன்முதலிய எல்லாப் பொருள்களுக்கும் ஒளிதரும் பேரொளியாதலின்.

கருப்புரங்கமழ்ந்துளர்பசுங்கால்களாலுதையுண்
டருப்பினஞ்சிதைந்தாயிரப்பத்தியோசனைபோய்
மருக்கமழ்ந்துநூறுயிரம்வாலிதழ்க்கமல
மிருக்குமோடைகள்புடைதொறுந்தழுவியயாறும். (௩௩)

வரம்பின்மாதரார்மதுரவாய்திறந்துதேன்வார்க்கு
நரம்பினேழிசையாழிசைநகைமலர்த்தருவின்
சுரும்பினேரிசைநாரதர்தும்புருவிசைக்கு
மிரும்புநீர்மெழுகாக்கியவின்னிசையெங்கும். (௩௪)

அமுதவாவியும்பொன்மலரம்புயத்தடமுங்
குமுதவாயரமாதராங்குயிலினம்பயிலு
நிமிரவாள்விடுமரகதநெடியபைங்காவுந்
திமிரமாசறக்கழுவியதேவர்வாழ்பதமும். (௩௫)

அலம்புபாற்கடல்போற்புறத்தமுதநீரகழும்
பொலஞ்செய்ஞாயில்சூழ்புரிசையும்பொன்செய்கோபுரமு
நலங்கொள்பூவியல்வீதியுநவமணிகுயின்ற
துலங்குமாளிகைப்பந்தியுஞ்சூளிகைநிரையும். (௩௬)

ஐம்புலங்களும்வைகலும்விருந்ததாவருந்த
வெம்புநால்வகையுண்டியும்வீணையுஞ்சாந்துஞ்
செம்பொனாரமுமாடலின்செல்வமுந்தெய்வப்
பைம்பொன்மேகலையோவியப்பாவையொப்பாரும். (௩௭)

படர்ந்தவார்சடையுருத்திரர்பணைத்திறுமாந்த
வடங்கொள்பூண்முலையுருத்திரமகளிரோடமரு
மிடங்கொண்மாளிகைப்பந்தியுமிகல்விளைதுன்பங்
கடந்தசெல்வமுங்கவலையில்போகமுங்காட்டி. (௩௮)

முண்டகாசனன்பதமிதுமூவுலகளந்த
தண்டுழாயவன்புரமிதுதனிமுதல்வடிவங்

---

(௩௩) பசுங்கால்-தென்றல். அரும்பு - அருப்பெனவலித்தற் பெற்றது. (௩.௪)நீர்மை-தன்மை. இதில்ஈறுபோய்நின்றதுவிகாரம்

(௩௫) திமிரம்-இருள். (௩௬) ஞாயில் மதிலுறுப்பு. சூளிகை-வீட்டிறப்பு. (௩௭) ஐம்புலன்களும் வைகலும் விருந்ததா வருந்த என்றது - மெய், வாய், கண், மூக்கு, செவிஎன்னும் பஞ்சேந்திரியங்களும்முறையே - ஓவியப்பாவையொப்பார், நால்வகையுண்டி, செம்பொனாரம்ஆடலின்செல்வமுதலியன, சாந்து, வீணை முதலியவற்றை நுகர்தலை.

(௩௯) முண்டகாசனன்-பிரமன். தனிமுதல்-சிவபெருமான்.

கொண்டுவீறுசாலுருத்திரர்கோப்பதியின்ன
வெண்டிசாமுகங்காவலருறைவிடமிவைகாண். (௩௯)

புலருமுன்புனலாடிநீறுடிநம்புனித
னிலகுமாலயம்விளக்கிநந்தனப்பணியியற்றி
மலர்கொய்தாய்ந்தனர்தொடுத்தரன்புகழ்செவிமடுத்திவ்
வுலகவாணராய்ப்போகமுற்றுறைகுநரிவர்காண். (௪0)

தூயராகியைஞ்சுத்திசெய்தகம்புறமிரண்டி
னேயராய்விதிநெறியினுன்முகமனீரெட்டாற்
காயம்வாய்மனவொருமையாலர்ச்சித்துக்கடவு
ளுயனுரருகுறைபதநண்ணினுரிவர்காண். (௪௧

கிளர்ந்தகாலினலங்கியைநிமிர்த்துமேற்கிடைத்து
வளர்ந்தபிங்கலையிடைநடுவெழியுகுமதியின்
விளைந்தவின்னமுதுண்டுநெம்விடையவன்வடிவங்
குளந்தனிற்குறித்தவனுருக்கொண்டவரிவர்காண். (௪௨)

முக்கணுயகன்பொருட்டெனவேள்விகணமுடித்துத்
தொக்கவேதியரிவர்புனற்சாலையித்தொடக்கத்
தக்கபேரறம்புகழ்பயன்றமைநன்குமதிக்கும்
பொக்கமாறியநிராசையாற்புரிந்தவரிவர்காண். (௪௩)

மறையினூற்றினூற்றந்திரமரபினுன்மெய்யி
னிறையுநீற்றினர்நிராமயநிருத்தனைந்தெழுத்து

(௪0) புலர்தல்-விடிதல். இவ்வுலகம் என்றது-நிலவுலகை.

(௪௧) ஐஞ்சுத்தியாவன—பூதசுத்தி - தத்துவங்களைச் சடமென்றுணர்தல். ஆன்மசுத்தி - அவ்வாறுணர்தல் ஆன்மபோதத்தாலன்று திருவருளா லென்றறிதல். திரவியசுத்தி - ஆன்மாவுக் குணர்வில்லையென்றுணர்ந்து, கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறியும் பொருள்முற்றும் திருவருளென்றுணர்தல். மந்திரசுத்தி - ஸ்ரீபஞ்சாக்கரத்தைமுறைப்படி மாறியுச்சரித்ததனுண்மையுணர்தல். இலிங்கசுத்தி-அநாதிமுத்த சித்துருவாகியசிவம், பசுபாசங்களிற் பிறிவறநின்று அவற்றைச்சேட்டிப்பிக்குந்தன்மையையுணர்ந்து அச்சிவம் இலிங்கத்தினுமெழுந்தருளியிருக்குமென்றுணர்தல். முகமன்-உபசாரம்

(௪௨) கால்-பிராணவாயு. அங்கியைநிமிர்த்து என்றது—உடலமத்தியில் அக்கினிமண்டலமாதலின் அவ்வக்கினியை வன்னிபீசத்தாலெழுப்பி அதிற்றேய்ந்து நிற்றலை. மதியென்றது—நாசிநுனியாகிய சந்திரமண்டலத்தை. (௪௮) புனற்சாலை - தண்ணீர்ப் பந்தல். பொக்கம்-குற்றம்.

(௪௪) தந்திரம் - சிவாகமம். முருக்கல் - கெடுத்தல்.

மறையுநாவினர்பத்தராயரன்புகழ்கேட்கு
முறையினாலிவர்வினைவலிமுருக்கினார்கண்டாய். (௪௪)

மறைகளின்சதவுருத்திரமந்திரநவின்றோர்
நிறைகொள்கண்டிகைநீறணிநீரரியாரேனுங்
குறிகுணங்குலன்குறித்திடாதன்பரைச்சிவனென்
றறியுமன்பினாற்பிறவிவேரறுத்தவரிவர்காண். (௪௫)

ஆனஞ்சாடியபரஞ்சுடரிறைசிவஞான
தானஞ்செய்தவர்தருப்பணஞ்செய்தவர்சாம
கானஞ்செய்தவற்காலயங்கண்டுதாபித்தோ
ரூனஞ்சேர்பிறப்பறுத்துவாழுத்தமரிவர்காண். (௪௬)

சிவனையர்ச்சனைசெய்பவர்க்கிசைவனசெய்தோ
ரவனெனக்குறித்தடியரைப்பூசைசெய்தாறு
சுவையவின்னமுதருத்தினோர்தொண்டர்தம்பணியே
தவமெனப்புரிந்துயர்ச்சரியைச்சார்ந்தவரிவர்காண். (௪௭)

ஆதிசுந்தரக்கடவுளுக்காலயம்பிறவு
நீதியாலருச்சனைபிறபணிகளுநிரப்பிப்
பூதிசாதனவழிநிலம்புரந்திவணடைந்த
கோதிலாதநின்குடிவழிக்கொற்றவரிவர்காண். (௪௮)

என்றுவேத்திரங்கொடுகுறித்தெம்மிறைநந்தி
கொன்றைவேணியனடியர்தங்குழாத்தினைத்தேற்றி
நின்றுவீழ்ந்துவீழ்ந்தஞ்சலிமுகிழ்த்திடநெறியே
சென்றுவானவர்நாயகன்றிருமுன்புவிடுத்தான். (௪௯)

மறைகளாகமம்வடிவெடுத்திருபுடைவாழ்த்த
நறைகொள்யாழ்தழீஇத்தும்புருநாரதர்பாட
வறைகொள்வண்டிமிர்கொம்பரினரம்பையராடக்
குறைகொள்வானவர்பதங்கிடையாதிறைகொள்ள. (௫௦)

---

(௪௫) நீரர் - தன்மையையுடையவர்.

(௪௬) சிவஞானமாவது—பரஞானம் - சிவனோடிரண்டற்று அபேதவுருவாய்நிற்றல். அபரஞானம் - காமிகமுதலியதிவ்யாகமங்கள்; என இரண்டுவகைப்படும். சிவஞானதானமாவது—ஆகமத்தினுண்மையைப் பக்குவான்மாக்களுக் குணர்த்தலும், ஆகமாதிகள் கொடுத்தலும். அவற்றை எழுத அலேகங்கள்தருதலும். தருப்பணம்-சிவப்பிரீதியாகத் தருப்பித்தல்.

(௪௯) தேற்றி-விளக்கி. (௫௦) பதம்-சமயம். இறை-தங்கல்.

மதங்கவிழ்க்குமால்வரைமுகமைந்தனுஞ்சூரன்
கதங்கவிழ்த்தவேற்கந்தனுங்கருதலன்வேள்வி
விதங்கவிழ்த்தவாள்வீரனும்வெயின்முடித்தார்தேன்
பதங்கவிழ்ப்பவீழ்ந்தேயினபணிவழிநிற்ப. (௫௧)

தூங்குதானையையொதுக்கிவாய்துணைக்கரம்பொத்தி
யோங்குமாலயன்றங்குறையொதுங்கிநின்றுரைப்ப
வாங்குவான்சிலையிந்திரன்முதற்றிசைவாணர்
தாங்கடாம்புரிகாரியக்குறைநின்றுசாற்ற. (௫௨)

எழுவினேறுதெண்டேந்தியுமென்றெயிறதுக்கிக்
குழுமுபாரிடத்தலைவருங்கோடிகூற்றொதுங்கி
விழுமமூழ்கிமெய்பனித்திடவிதிர்க்குமுக்குடுமிக்
கழுமுளேந்தியகணத்தவர்கடைதொறுங்காப்ப. (௫௩)

சித்தர்வானவர்தானவர்சாரணர்திணிதோள்
வைத்தயாழினர்கின்னரர்மாதவரியக்கர்
பைத்தபாரிடர்காருடர்பாதலவாணர்
சுத்தயோகியர்முதல்கணத்தொகையெலாம்பரவ. (௫௪)

இனிவரும்பிறப்பறுத்தெமைக்காத்தியாலெனத்தங்
கனிவரும்பியவன்பெழுகருணையாரமுதைப்
பனிவருந்தடங்கண்களாற்பருகிமெய்பனிப்ப
முனிவர்சங்கரசிவசிவவெனமுறைமுழங்க. (௫௫)

வரந்தவாதனயாவர்க்கும்வரன்முறைவழங்கி
முருந்தவாநகைமலைக்கொடிமுகிழ்நகையரும்பத்
திருந்தவாயிரங்கதிர்விடுசிங்கமெல்லணைமே
லிருந்தநாயகனிருக்கைகண்டிறைஞ்சினானிறைவன். (௫௬)

உரைகளுந்தடுமாறமெய்யுரோமமுஞ்சிலிர்ப்பக்
கரையிறந்தவின்னருட்பெருங்கடலிலன்பென்னுந்
திரையிறந்தவாநீர்த்திடமிதந்துபோய்ச்செப்பின்
வரையிறந்தவானந்தவாரமுதைவாய்மடுத்தான். (௫௭)

---

(௫௧) வரைமுகமைந்தன் - விநாயகக்கடவுள். கதம் - கோபம். கருதலன் என்றது—பகைவனுகிய தக்கனை. வீரன்-வீரபத்திரக்கடவுள்.

(௫௨) தூங்கல் - அசைதல். தானை-வஸ்திரம்.

(௫௩) எழு - வளைதடி. விழுமம் - துன்பம். கழுமுள் - சூலம்.

தன்புலன்களுங்கரணமுந்தன்னவேயாக்கி
யன்புடம்புகொண்டவனெதிரருட்சிவலோகம்
பின்புபண்டுபோன்மதுரையாப்பிராட்டியுந்தானு
முன்பிருந்தவாறிருந்தனன்சுந்தரமூர்த்தி. (௫௮)

வேந்தர்சேகரன்வரகுணன்விண்ணிழிகோயி
லேந்தல்சேவடியிறைஞ்சிநின்றிறையருட்பெருமை
யாய்ந்தவாவுதன்னகம்புகவின்பமோடன்பு
தோய்ந்துதாரைநீர்துளும்பநாக்குழறிடத்துதிப்பான். (௫௯)

கொச்சகக்கலிப்பா.

நாயினேனென்னைநடுக்கும்பழியகற்றித்
தாயினேராகித்தலையளித்தாய்தாள்சரணஞ்
சேயினேன்காணச்சிவலோகங்காட்டிப்பின்
கோயினேர்நின்றவருட்குன்றேநின்றாள்சரணம். (௬௦)

மாழாந்துசெய்யும்வினைவழிபோம்வன்னரகிற்
றாழாதடியனேற்கன்புதந்தாய்தாள்சரண
மேழாகிநான்குவகையாயெழுபிறப்பும்
பாழாகவென்னைப்பணிகொண்டாய்தாள்சரணம். (௬௧)

வெங்கட்பழியின்வினையேனைவேறாக்கித்
திங்கட்குலக்களங்கந்தீர்த்தாய்நின்றாள்சரண
மங்கட்சிவபுரமுண்டன்புடையார்க்கென்பதையின்
றெங்கட்குக்காட்டியிசைவித்தாய்தாள்சரணம். (௬௨)

கலிநிலைத்துறை.

என்னவேத்தியின்னருண்முகந்தீறிலாவன்பாற்
பின்னர்வேறுபல்பூசையும்பிறக்குவித்திருந்தான
மன்னரேறடையார்க்கொருமடங்கலேறடல்வேற்
றென்னரேறெனத்தோன்றியவரகுணதேவன். (௬௩)

(௫௮) தன்னவேயாக்கி என்றது - புலனுதிகளன்பின்வழிநின்றமையை. (௫௯) தாரை - கண். (௬௦) சேய் - தூரம். (௬௧) மாழாந்து - மயங்கி. வினை-ஆகாமியவினை. எழாகி நான்குவகையாய் என்றது - தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன தாவரமென எழுவகைப் பிறப்பும்; அண்டசம், சுவேதசம், சராயுசம், உற்பீசம் என்னும் நால்வகையுளடங்குதலை.

(௬௩) பிறங்கு, பிறக்குளன வலித்தற்பெற்றது.

என்றதென் மலைமுனிவனையிருடிகணோக்கி
யன்றுவாசவன்பழிகரிசாபமந்தணனைக்
கொன்றுதாயொடுங்கூடியகொடுவினைமுதலாத்
துன்றுபாவமுமதுரையிற்றொலைத்தனனன்றே. (௬௪)

பரமனென்குணன்பசுபதிவரகுணற்பற்றும்
பிரமவன்பழியிடைமருதிடைவிட்டுப்பெயர
வரமளித்தவாறென்னைகொல்வள்ளலேயிதனைத்
திரமுறப்புகலெமக்கெனமுனிவர்கோன்செப்பும். (௬௫)

பூதநாயகன்சுந்தரன்புண்ணியமூர்த்தி
யாதலாலன்னதலத்துறையடியவரஞ்சிப்
பாதகஞ்செயாதொழுகுறூஉம்படிநினைந்தினைய
தீதுறூஉம்பழிதனையிடைமருதினிற்றீர்த்தான். (௬௬)

என்றகத்தியமுனியிறையிறைகொடுத்தியம்ப
நன்றெனச்சிரம்பணித்துமெஞ்ஞானவானந்தந்
துன்றிநற்றவர்சுந்தரச்சோதிசேவடிக்கீ
ழொன்றுமற்புதவானந்தவுத்தியுட்களித்தார். (௬௭)

கொச்சகக்கலிப்பா.

அன்னதனித்தொன்மதுரையன்றுதொடுத்தின்றெல்லை
தன்னனையதாயகிலதலங்கள்சிகாமணியாகிப்
பொன்னகரின்வளஞ்சிறந்துபூவுலகிற்சிவலோக
மென்னவிசைபடப்பொலிந்ததேழிரண்டுபுவனத்தும். (௬௮)

வரகுணனுக்குச்சிவலோகங்காட்டியபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௪௬ - க்கு திருவிருத்தம் - ௨௦௩௦.

---

(௬௫) அன்ன, இனைய, என்பன, சுட்டுத்திரிபுகள்.
(௬௭) முனியிறை - முனிசிரேஷ்டர். இறை - விடை.

சிவமயம்.

நாற்பத்தோராவது,

# விறகுவிற்றபடலம்.



அறுசீரடியாசிரியவிருத்தம்

நெடியவன்பிரமன்றேடநீண்டவன்றென்னற்கேழின்
முடியதாஞ்சிவலோகத்தைக்காட்டியமுறையீதையன்
படிமிசைநடந்துபாடிப்பாணன்றன்விறகாளாகி
யடிமையென்றடிமைகொண்டவருட்டிறமெடுத்துச்சொல்வாம். (க)

மன்றலந்தெரியன்மார்பன்வரகுணன்செங்கோலோச்சிப்
பொன்றலங்காவலானிற்பொலியுநாளேமநாத
னென்றொருவிறல்யாழ்ப்பாணன்வடபுலத்திருந்தும்போந்து
வென்றிகொள்விருதினோடும்விஞ்சைசூழ்மதுரைசார்ந்தான். (௨)

பூழியர்பெருமான்கோயில்புகுந்துவேத்தவையத்தெய்திச்
சூழிமால்யானையானைத்தொழுதுபல்புகழ்கொண்டாடி
யேழிசைமழலைவீணையிடந்தழீஇச்சுருதிகூட்டி
வாழியின்னிசைத்தேன்மன்னனஞ்செவிவழியப்பெய்தான். (௩)

முகையுடந்தவிழ்ந்தமாலைமுடித்தலைதுளக்கித்தூசு
பகலவிர்மணிப்பூணல்கிப்பல்லுணுக்கருவிநல்கி
யகன்மனைவேறுகாட்டியரசர்கோன்வரிசைசெய்ய
விகலறுகளிப்பினோடுமிசைவல்லானில்லிற்புக்கான். (௪)

மீனவன்வரிசைபெற்றசெருக்கினும்விருதினானு
மானமேல்கொண்டுதென்னாடின்னிசைபாடவல்ல
தானயாழ்ப்புலவர்வேறிங்கில்லெனத்தருக்குஞ்செய்தி
கோனறிந்துழையர்க்கூவிப்பத்திரற்கொணர்திரென்றான். (௫)

உழையரால்விடுக்கப்பட்டபத்திரனுவரிவென்றான்
கழல்பணிந்தருகிற்பக்கௌரியனேக்கிப்பாணி

---

(க) நெடியவன் - திருமால். ஏழின்முடி என்றது—ஏழுலகத்திற்கும் மகுடம்போல் விளங்கும் சிவலோகத்தை. இதனை, "புவலோகங்கடந்துபோய்" என்னுஞ் செய்யுளிற்காண்க.

(௨) பொன்தலம் காவலான் - விண்ணுலகத்தையாளும் இந்திரன். (௫) கோன்-வரகுணபாண்டியன். (சு) உழையர் - வேவுகாரர். தானம் - சத்தசுரங்களும் எழுமிடம். பாணி—தானம்.

பழகிசைவல்லானேடும்பாடுதிகொல்லோவென்ன
மழலையாழிடந்தோளிட்டபாணர்கோன்வணங்கிச்சொல்வான். (௬)

தென்னவர்பெருமயானுன்றிருவுளவலனுங்கூடன்
முன்னவனருளுமூட்டுமுயற்சியான்முயன்றுபாடி
யன்னவன்விருதுவாங்கியவனைவீறழிப்பனென்ருன்
மன்னவனுளைப்பாடுபோகெனவரைந்துசொன்னன். (எ)

இற்கண்ணேயிசைவல்லான்போயிருந்துழியனையான்பாங்கர்க்
கற்கும்பாண்மக்கண்மல்லலாவணங்கவலைமன்றம்
பொற்குன்றமனையமாடமறுகெங்கும்போகிப்போகிச்
சொற்குன்ருவகையாற்பாடித்திரிந்தனர்வீறுதோன்ற. (அ)

இவ்விசைகேட்டுநன்றென்றதிசயித்திசைவல்லான்பால்
வவ்விசைமைந்தர்பாடும்வண்ணமீதென்னைக்கெட்டே
னவ்விசைவல்லான்பாடுமுறையெற்ருேவவனைநாளைச்
செவ்விசைபாடிவெல்வதெவனெனத்திவவுக்கோலான். (௯)

மையணிமிடற்றினனைமதுரைநாயகனைவந்தித்
தையனேயடியேற்கின்றுனருட்டுணைசெய்யல்வேண்டு
மெய்யனேயென்றுபோற்றிவேண்டுகொண்டன்புதோய்ந்த
பொய்யறுமனத்தானில்லம்புக்கினிதிருந்தானிப்பால். (௧௦)

கலிநிலைத்துறை.

வருத்தனுகிவந்திரந்தவனிசைப்பகைமாற்ற
விருத்தனும்விறகாளெனவிண்ணிழிவிமானத்
தொருத்தனுரறிவாகியவுண்மையானந்தத்
திருத்தனுர்தமதிச்சையாற்றிருவுருக்கொள்வார். (௧௧)

அழுக்குமூழ்கியசிதரைசைத்தவிர்சடையமுத
மொழுக்குவெண்மதிவாங்கியேசெருகியதொப்ப
மழுக்கூனல்வெள்வாய்க்குயம்வலம்படச்செருகி
யிழுக்குதேய்செருப்பருமறைகடந்ததாளேற்றி. (௧௨)

(எ) ஊட்டும் - கூட்டிமுடிக்கும். வரைத்து - காலவரையரை செய்து. (அ) கவலை - முத்தெருக்கூடுமிடம். வீறு - பெருமை. (௯) திவவுக்கோலான் - வார்க்கட்டமைந்த வீணையில்வல்லபாணபத்திரன். (௧௨) சிதர் - கந்தை. குயம் - கொடுவாள். மழுக்கு - வலிக்கும் வழிவலித்தல்.

பழையதோர்பொல்லம்பொத்தியபத்தர்யாழ்க்கோரே
ருழையதாகவிட்டெருத்தலைத்தூசலாடியவொண்
குழையகாதினிற்களவிணர்க்குறியகாய்தூக்கித்
தழையும்வார்சிகைசரிந்திடச்சுமையடைதாங்கி. (கங)

தறிந்தவிந்தனந்தினந்தொறுந்தாங்கிநீள்பங்கி
பறிந்துதேய்ந்தழுந்தியதலையுடையராய்ப்பறிந்து
மறிந்தகங்கையும்பங்குறைமங்கையுங்காணு
தெறிந்தவிந்தனச்சுமைதிருமுடியின்மேலேற்றி. (கச)

என்புதோன்றியூனின்றியேயிளைத்தயாக்கையரா
யன்புதோன்றியேகண்டவரகங்கனிந்திரங்க
வன்புதோன்றியமனமொழிகடந்ததாண்மலர்பார்
முன்புதோன்றியதவத்தினுன்முடிமிசைச்சூட. (கரு)

திருமுகத்துவேர்வரும்பவாய்குவித்தொலிசெய்ய
வருவர்கற்சுமைதாங்கிமேற்சார்த்துவர்மடுநீர்
பருகுவாரெடுப்பார்தலைவெம்மைவேர்பறிய
விருகையாலடிக்கடியெடுத்தேந்தியூர்புகுவார். (கசு)

நடந்துகொள்ளுநர்க்கருவிலைபகர்ந்துநான்மாட
மிடைந்தவீதியுங்கவலையுமுடுக்கருமிடைந்து
தொடர்ந்தவேதமும்பிரமன்மால்சூழ்ச்சியும்பகலுங்
கடந்துபோகியவ்விசைவலான்கடைத்தலைச்செல்வார். (கஎ)

வரவுநேர்ந்தழைப்பவரெனவாம்பல்வாய்மலர
விரவுகான்றுவெண்மதிநகைத்தெழவுயிர்த்துணைவன்
பிரிவுநோக்கினுரெனக்கணீர்பில்குதாமரையி
னிரைகள்கூம்பிடக்கதிரவன்குடகடனீந்த. (கஅ)

பறவைவாயடைத்தருகணைப்பார்ப்பொடும்பெடையைச்
சிறகராலணைத்திரும்பொழிற்குடம்பையுட்செறிய
நறவவாய்ப்பெடையுண்டேதேனக்கிவண்டோடைப்
பொறைகொடாமரைப்பள்ளியுட்புகுந்துகண்படுக்க. (கக)

---

(கங) பத்தர் - வீணதண்டத்தின் புறத்திலுள்ள சுரைக்குடுக்கை. (கச) இந்தனம் - விறகு.

(கஎ) அருவிலை - அளவுக்கு மேற்பட்டவிலை. முடுக்கர் - முடுக்குச்சந்திகள்.

(கக) பெடை - பெண்வண்டு. குடம்பை - கூண்டு. பொறை - கனம். பள்ளி - படுக்கை.

புல்லெனீணிலைக்குரங்கினம்பொதும்பர்புக்குறங்க
முல்லையாய்மகாருய்த்தரக்கன்றுள்ளிமுந்திக்
கொல்லையானிரைமனைதொறுங்குறுகிடச்சிறுபுன்
கல்விமாணவச்சிறார்பயில்கணக்கொலியடங்க. (௨0)

புனைந்தவாழ்கடற்கரும்படாமுடம்பெலாம்போர்த்து
வனைந்தபூண்முலைநிலமகடுயில்வதுமானக்
கனைந்தகாரிருண்மெல்லெனக்கவிதரப்பிரிவா
லினைந்தகாதலர்நெஞ்சில்வேளெரிகணைநாட்ட. (௨௧)

திங்கள்வாணுதன்முயற்கறைத்திலகமுஞ்சிவந்த
மங்குலாடையுமயங்கிருளோதியும்வான்மீன்
பொங்குமாரமும்பொலிந்துதன்கொண்கனைப்பொருப்பன்
மங்கைதேடிவந்தாளெனவந்ததுமாலை. (௨௨)

எடுத்தவிந்தனமொருபுறத்திறக்கியிட்டேன்றி
யடுத்தவன்புறந்திண்ணைமீதமர்ந்திளைப்பாறித்
தொடுத்தவின்னிசைச்சிறிதெழீஇப்பாடினார்சுருதி
மடுத்தியாரவன்பாடுவோனென்றிசைவல்லான். (௨௩)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வண்டறைகொன்றையான்முன்வந்துநீயாரையென்றான்
பண்டருவிபஞ்சிபாணன்பத்திரனடிமையென்றான்
முண்டகமலரோன்மாயோன்புரந்தரன்முதன்மற்றேனை
யண்டருந்தன்குற்றேவலடிமையாக்கொண்டவம்மான். (௨௪)

கனியிசைக்கிழவன்றன்கீழ்க்கற்பவரனேகர்தம்மு
ணனியிசைக்கிழமைவேட்டோனுமவ்வினைஞனேன்
றனியிசைக்கிழவனேக்கித்தசையெலாமொடுங்கமூத்தா
யினியிசைக்கிழமைக்காகாயென்றெனைத்தள்ளிவிட்டான். (௨௫)

வெவ்விறகெறிந்துகட்டிவிலைபகர்ந்தேனுமைய
விவ்வயிற்றேம்புகேனென்றித்தொழில்பூண்டேனென்ன
நைவளந்தெரிந்தவேமநாதனும்விறகுமள்ளா
வவ்விசையொருகாலின்னும்பாடெனவையன்பாடும். (௨௬)

---

(௨0) உய்த்தர - செலுத்த. (௨௧) படாம் - போர்வை.

(௨௨) முயற்கறை - களங்கம். இது இருபெயரொட்டுப் பண்புத்தொகை. மங்குல் - ஆகாயம். ஓதி - கூந்தல். கொண்கன் - கணவன். பொருப்பன் - பர்வதராஜன்.

(௨௪) விபஞ்சி - யாழ்வல்லோன். (௨௫) கிழமை - உரிமை.

(௨௬) நை - இசைநூல். மள்ளன் - திண்ணியன்.

குண்டுநீர்வற ்திட்டன்னநெடுங்கொடிக்குறுங்காய்ப்பத்தர்த்
தண்டுநீணிறத்தநல்யாழிடந்தழீஇத்தெறித்துத்தாக்கிக்
கண்டுமாடகந்திரித்துக்கௌவியதிவவிற்பாவ
விண்டுதேனொழுகிற்றென்னவீக்கிமென்சுருதிகூட்டி. (உஎ)

விசையொடுதானந்தோறும்விரனடந்துசலாட
விசைமுதலேழிற்பல்வேறின்னிசையெழுஞ்சாதாரி
யசைவொடுவீதிப்போக்குமுடுகியலராகம்யார்க்கும்
நசைதருநரம்புகண்டமொற்றுமைநயங்கொண்டார்ப்ப. (உஅ)

வயிறதுகுழியவாங்கலழுமுகங்காட்டல்வாங்குஞ்
செயிரறுபுருவமேறல்சிரநடுக்குறஞ்கண்ணுடல்
பயிறருமிடறுவீங்கல்பையெனவாயங்காத்த
லெயிறுகாட்டலின்னவுடற்றொழில்குற்றமென்ப. (உகூ)

வெள்ளைகாகுளிகீழோசைவெடிகுரனாசியின்ன
வெள்ளியவெழாலின்குற்றந்தெரிந்துநின்றிரட்டலெல்லை
தள்ளியகழிபோக்கோசையிளைத்தனெட்டுயிர்ப்புத்தள்ளித்
துள்ளலென்றின்னபாடற்றொழிற்குற்றம்பிறவுந்தீர்ந்தே. (௩௰)

---

(உஎ) குறுங்காய் - சிறியகாய். நிறத்தநல் யாழ்என்றது—நிறம் ஐந்தும் அமைந்தயாழினை. இதனை, "மாத்திரைகளொன்பானுந்தானங்களெட்டானும் - எத்துங்கிரியை யென்றீரைந்துல் - கோத்துப்பதின்மூன் றெழுத்தாற் றொழிலைந்தும் பண்ணின் - மதியோர்களைந்துநிறமாம்" என்னுஞ் செய்யுளானுணர்க. மாடகம் - முறுக்காணி. திவவு - கட்டு.

(உஅ) தானம் - இடம். இசைமுதலேழ்-குரல்முதலியஎழிசைகள். வீதிப்போக்காவது—ந, த, முதலிய நாலெழுத்துகள் நேராய்ச்செல்லுதல். முடுகியல் என்றது—பெருவண்ணம், இடைவண்ணம், வனப்பு வண்ணங்களை. அராகம் - யாழ்த்திறம்.

(உகூ) பயிர் - குற்றம். (௩௰) வெள்ளை-வெள்ளோசை. காகுளி-பேய்கத்தினாற்போற்பாடுதல். கீழோசை - நிறமுந்தானமுங்குறைபடும் கட்டோசை. நாசி - நாசிப்பாட்டு; அதாவது, ஒருதானத்தே பாட வேறுதானத்தில் நழுவுவது. எழால் - சரீரவோசை. எறிந்துநின்றிரட்டல் - ஒருபண்ணைப்பாட வேறொரு பண்ணிலே விலங்கிநின்றிரட்டல். கழிபோக்கு - ஓர் ஓசையான தன்மைநீங்கிப் பலவோசையாய் வருதல். ஓசையிழைத்தல் - காகத்தைப்போற் கத்துதல். தள்ளித்துள்ளல் - பாடுந்திறத்தை யொதுக்கிப்பாடுதல்.

எழுதுசித்திரம்போன்மன்னியிழுமெனுமருவியோதை
முழவொலிகஞ்சநாதம்வலம்புரிமுரலுமோசை
கொழுதிசைவண்டின்றாரியெனவிசைக்குணனும்வேரல்
விழுமிலைசிரன்மீன்மேல்வீழ்வீழ்ச்சிபோற்பாடற்பண்பும். (௩௧)

பொருந்தமந்திரத்திஞெடுமெத்திமைதாரம்போக்கித்
திருந்தியதுள்ளறாங்கன்மெலிவதுசிறப்பச்செய்து
மருந்தனசெய்யுளோசையிசையோசைவழாமல்யார்க்கும்
விருந்தெனச்செவியின்மாந்தப்பாடினார்வேதகீதர். (௩௨)

கலிவிருத்தம்.

விரைசார்மலரோனறியாவிகிர்த
னரசாய்மதுரையமர்ந்தானென்னே
யரசாய்மதுரையமர்ந்தானவனென்
புரைசார்மனனும்புகுந்தானென்னே. (௩௩)

பாடன்மறையுந்தெளியாப்பரமன்
கூடல்கோயில்கொண்டானென்னே
கூடல்போலக்கொடியேனகமு
மாடலரங்காவமர்ந்தானென்னே. (௩௪)

நீலவண்ணன்றேறாநிமல
னாலவாயிலமர்ந்தானென்னே
யாலவாயானலரில்வாசம்
போலென்னுளமும்புகுந்தானென்னே. (௩௫)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பாணர்தம்பிரானைக்காப்பான்பருந்தொடுநிழல்போக்கென்ன
யாணரம்பிசைபின்செல்லவிசைத்தவின்னிசைத்தேனண்ட
வாணர்தஞ்செவிக்காலோடிமயிர்த்தொளைவழியத்தேக்கி
யாணரின்னமுதயாக்கையிசைமயமாக்கிற்றன்றே. (௩௬)

---

(௩௧) முழவு - மத்தளம். கஞ்சநாதம் - வெண்கலத்தாற்செய்த தாளமுதலிய கஞ்சக்கருவிகளினேசை. முரல் - முழக்கம். வேரல்- மூங்கில். சிரல் - மீன்குத்திப்பறவை. (௩௨) மந்தரம் - படுத்தல்.மத்திமை - நலிதல். தாரம் - எடுத்தல்.

(௩௩) விகிர்தன் - வேறுபாடுடையவன். புரை - களங்கம்.

(௩௫) நீலவண்ணன் - கரியநிறத்தையுடைய திருமால்.

(௩௬) அண்டவாணர் - ஆகாயவாசிகள். யாணர்-புதுமை. பருந்தொடு நிழல்போக்கென்ன என்றது-பருந்து பறக்கின்றவிடத்து முறையே யுயர்ந்தும் பின்னுமம்முறையே தாழ்ந்தும் பறத்தலையும் அவ்வாறு பறக்குங் காலதனிழல் அதனேடு செல்லுதலையும்.

தருக்களுஞ்சலியாமுந்நீர்ச்சலதியுங்கலியாநீண்ட
பொருப்பிழியருவிக்காலுநதிகளும்புரண்டுதுள்ளா
வருட்கடல்விளைத்தகீதவின்னிசையமுதமாந்தி
மருட்கெடவறிவன்றீட்டிவைத்தசித்திரமேயொத்த. (௩௭)

வீணைகைவழுக்கிச்சோர்வார்சிலர்சிலர்விரனடத்தும்
யாணரம்பெழாலுங்கண்டத்தெழாலும்வேறுகவேர்ப்பார்
நாணமோடுவகைதள்ளநாத்தலநடுங்கித்தங்கண்
மாணிழையவர்மேல்வீழ்வார்விஞ்சையர்மயங்கிச்சில்லோர். (௩௮)

போதுளான்பரமன்பாதப்போதுளானுளன்வேலை
மீதுளான்பரமானந்தவேலைமீதுள்ளானுளன்
றீதுளாங்கமலக்கண்போற்சதமகனுடலமெல்லாங்
காதுளானல்லேனென்றான்கண்ணுளான்கானங்கேட்டு. (௩௯)

முனிவருந்தவத்தராதிமுத்தர்மாசித்தரன்பின்
றுனிவரும்பழங்கண்டீர்ப்பான்சுந்தரத்தோன்றல்கீதங்
கனிவருங்கருணையென்னுங்கடலிலன்பென்னுமாற்றிற்
பனிவருங்கண்ணீர்வெள்ளம்பாய்ந்திடவின்பத்தாழ்ந்தார். (௪௦)

ஊடிவேறுதுங்கித்துன்பவுவரியுட்குளித்தார்தம்மிற்
கூடிவேறற்றவின்பக்குளிர்கடல்வெள்ளத்தாழ்ந்தார்
நாடிவேறிடைப்பிரிந்தார்மேன்மனநடத்திமேனி
வாடிவேளலைப்பச்சோர்ந்துமம்மர்நோயுழந்தார்மண்ணோர். (௪௧)

---

(௩௭) சலித்தல் - அசைதல். கலி - ஓசை. அருட்கடல் என்றது - கிருபாசமுத்திரமாகிய சிவபிரானை. அறிவன் - சிற்பநூல் வல்லவன். (௩௮) எழால் - ஓசை. மாணிழையவர் என்றது - மாட்சிமைப்பட்ட ஆபரணமணிந்த அவ்விஞ்சையர் மனைவியரை. விஞ்சையர் - வித்தியாதரர்.

(௩௯) கண்ணுளான் - நுதற்கண்ணையுடைய சிவபெருமான். போதுளான் - தாமரைமலரில் வசிக்கும் பிரமன். பாதப்போதுளானுளன் என்றது - கேட்ட இசை இன்பத்தோடிரண்டற்ற பேதமாயிருந்ததால், சிவபிரான் அடித்தாமரையின் கீழுள்ளவனுளனமையை. வேலை - திருப்பாற்கடல். பரமானந்தவேலை-பேரின்பக்கடல்- சதமகன் - இந்திரன். (௪௦) முனிவு-வெறுப்பு. அன்பினர்என்றது- அன்பின்என ஈறுதொக்குநின்றது. துனி-நடுக்கம். பழங்கண்-துன்பம். கனிவரும் - கனிந்த.

(௪௧) உவரி - கடல். நோய் - காமநோய்.

பைத்தலைவிடவாய்நாகம்பல்பொறிமஞ்ஞைநால்வாய்
மத்தமானரிமான்புல்வாய்வல்லியமருட்கையெய்தித்
தத்தமாறறியாவாகித்தலைத்தலைமயங்கிச்சோர
வித்தகைமாவும்புள்ளுமிசைவலைப்பட்டவம்மா. (௪௨)

வன்றரைகிழியவீழ்போய்வான்சினைகரிந்துநின்ற
வொன்றறிமரங்களெல்லாஞ்செவியறிவுடையவாகி
மென்றளிரீன்றுபோதுவிரிந்துகண்ணீருஞ்சோர
நன்றறிமாந்தர்போலநகைமுகமலர்ந்தமாதோ. (௪௩)

வாழியவுலகின்வானோர்மனிதர்புள்விலங்குமற்று
மாழியகரணமெல்லாமசைவறவடங்கவைய
னேழிசைமயமேயாகியிருந்தனவுணர்ந்தோருள்ள
மூழியிலொருவன்றாள்புக்கொடுங்கியதன்மையொத்த. (௪௪)

கண்ணிறைநுதலோன்சாமகண்டத்தினெழுந்தமுல்லைப்
பண்ணிறைதேவகீதஞ்சராசரவுயிரும்பாரும்
விண்ணிறைதிசைகளெட்டும்விழுங்கித்தன்மயமேயாக்கி
யுண்ணிறையுயிருமெய்யுமுருக்கியதிசைவல்லானை. (௪௫)

கலிநிலைத்துறை.

சிந்தைதோயுமைம்பொறிகளுஞ்செவிகளாப்புலன்க
ளைந்துமோசையாவிசைவலானிருந்தனனாகப்
பந்தநான்மறைநாவினற்பத்திரனுளாய்
வந்துபாடினானிந்தனச்சுவையொடுமறைந்தார். (௪௬)

யானறிந்தசாதாரியன்றிம்பருளிதனை
நானறிந்ததென்றொருவருநவின்றிலர்தேவ
கானமீதிவற்குணர்த்தினேன்கடவுளேயன்றி
யேனைமானிடர்வல்லரோவிதுவியப்பென்னா. (௪௭)

---

(௪௨) அரிமான் - சிங்கம். புல்வாய் - மான். வல்லியம் - புலி. ஆறு - செல்லும்வழி. தலைத்தலை - இடங்கள்தோறும். (௪௩) ஒன்றறிமரம் என்றது - விருட்சங்கள் ஓரறிவுயிராதலின். கண்ணீர் - கள்நீர் - கள்ளாகியநீர். நன்றறிமாந்தர் - நன்மை தீமைகளைப் பகுத்தறியும் மனிதர். (௪௪) ஆழியகரணம் - ஆழ்ந்த மனமுதலிய அந்தக்கரணங்கள். (௪௫) முல்லைப்பண் - சாதாரி. இசை வல்லான் - இசைநூலில்வல்ல ஏமநாதன். (௪௬) பந்தநான்மறை என்றது - பதம், கிறை, பாழி, சாகை, பஞ்சாதி, அநுவாகம், முதலியவுறுப்புகளாலமைந்த நான்குவேதங்களை.

இழுக்கிவிட்டவிக்கிழமகனிசையிதேலந்த
வழுக்கில்பத்திரன்பாடலெற்றேவெனமதியா
வழுக்கமுற்றெழுந்திசைவலானடுத்ததன்பண்டர்
குழுக்களுங்குலேகுலேந்திடவிருள்வழிக்கொண்டான். (௪௮)

மடக்குபல்கலேப்பேழையுமணிக்கலம்பிறவு
மடக்குபேழையுங்கருவியாழ்க்கோலுமாங்காங்கே
கிடக்கமானமுமச்சமுங்கிளர்ந்துமுன்னீர்த்து
நடக்கவுத்தரதிசைக்கணேநாடினனடந்தான். (௪௯)

சிவிகையோர்வழிவிறலியரோர்வழிசெல்லக்
கவிகையோர்வழிகற்பவரோர்வழிகடுகக்
குவிகையேவலரொருவழிகூடநாணுள்ளத்
தவிகையோவருமொருவழியகன்றிடவகன்றான். (௫௦)

அன்றுபத்திரன்கனவில்வந்தாடலேறழக
ரின்றுபத்திரவிசைவலானிடைவிறகாளாய்ச்
சென்றுபத்திரனடிமையாமென்றுபாண்செய்து
வென்றுபத்திரஞ்செய்துநின்வேண்டுகோளென்றார். (௫௧)

குஞ்சிநாண்மலர்க்கொன்றையாரங்ஙனங்கூறு
நெஞ்சினனினேப்பரியசொற்கேட்டலுநெஞ்ச
மஞ்சினனிதுசெய்யவோவடியனேன்மறைகட்
கெஞ்சினரையின்றிரந்தவாறென்றுகண்விழித்தான். (௫௨)

கண்மலர்ந்தெழுபத்திரன்கரையிலாவுவகை
வுண்மலர்ந்தெழுமன்புகொண்டேக்கவெங்கதிரோன்
விண்மலர்ந்தெழுமுன்புபோய்விசும்பிழிகோயிற்
பண்மலர்ந்தநான்மறைப்பொருளடித்தலம்பணிந்தான். (௫௩)

கடியகானகம்புகுதவோகட்டியவிறகை
முடியிலேற்றவோமுண்டகத்தாள்கணொந்திடவந்
தடியனேன்பொருட்டடாதசொற்பகரவோவஞ்சக்
கொடியனேன்குறையிரந்தவாவிளேந்ததேகுற்றம். (௫௪)

---

(௪௮) இழுக்கிவிட்ட - தள்ளிவிட்ட. வழுக்கு - குற்றம். அழுக்கம் - கவலே. பண்டர் - பாடற்கிழ்மக்கள். (௫௦) விறலியர் - பாடற்பெண்கள். ஓவர் - பாடற்கிழ்மக்கள்.

(௫௧) ஆடல் - போர். (௫௪) அடாதசொல் என்றது - பத்திரனடிமை என்றதை.

நெடியனேமுதல்வானவர்நெஞ்சமுஞ்சுருதி
முடியனேகமுங்கடந்தநின்முண்டகப்பாதஞ்
செடியனேன்பொருட்டாகவிச்சேணிலந்தோய்ந்த
வடியனேற்கெளிதாயதோவையநின்பெருமை. (௫௫)

நாதவந்தமுங்கடந்தமெய்ஞ்ஞானவானந்த
போதமென்பரஞ்சோதியின்றிருவுருபுடவிமானிடமா
யாதபந்தெறத்திரிந்தவிந்தனஞ்சுமந்தடியேன்
பேதையன்பளவாயதோபெருமநின்னுருவம். (௫௬)

மறிந்ததெண்டிரைகிடந்தவனுந்தியில்வந்தோ
னறிந்ததன்றரும்பொருள்வரம்பகன்றெழுவிசும்புஞ்
செறிந்தவண்டமுங்கடந்ததுசிறியனேன்பொருட்டாத்
தறிந்தவிந்தனஞ்சுமந்ததோதம்பிரான்முடியே. (௫௭)

என்னவந்தனைசெய்துநின்றேத்தியங்கயற்கண்
மின்னமர்ந்தபங்கொருவனைவலங்கொடுமீண்டு
மன்னர்தம்பிரானாகியவரகுணதேவன்
தன்னைவந்தடிபணிந்தனன்றந்திரிக்கிழவோன். (௫௮)

வந்தவேழிசைத்தலைமகன்வரவறிந்தரச
னந்தவேழிசைக்கிழவனையழையெனவுழையோர்
பந்தயாழ்மகனிருக்கைபோய்ப்பார்த்தனர்காணார்
சிந்தையாகுலமடைந்தவன்போனவாதெளியார். (௫௯)

எங்குளானெனத்தேடுவாரிவரெதிரயல்வா
யங்குளார்சிலரறிந்தவாறறைகுவாரவனேற்
றிங்குளான்விறகெடுத்தொருமுதுமகனிவன்பாற்
பொங்குமேழிசைப்பத்திரனடிமையாய்ப்போந்தான். (௬௦)

---

(௫௫) செடியன் - இழிதொழிலுடையவன்.

(௫௬) நாத அந்தம் - குடிலை. ஆதபம் - வெயில். நின்னுருவம் என்றது - நின்மலசொரூபத்தை. (௫௭) தெண்டிரைஎன்றது-திருப்பாற்கடலை. கிடந்தவன்-அறிதுயில்கொண்ட திருமால். உந்தியில்வந்தோன்-பிரமன். அரும்பொருள்வரம்பகன்றுஎன்றது - அணுவுக்கணுவாய்நிற்றலை. எழுவிசும்பு - பரந்தவிண்ணுலகம்.

(௫௮) தந்திரிக்கிழவோன் - வீணையில்வல்ல பாணபத்திரன். தந்திரி - வீணையினரம்பு; இது வீணைமேனிற்றலால் விட்டவாகுபெயர். (௫௯) பந்தம் - நரம்பின்கட்டு. ஆகுலம்-துன்பம். போன ஆறு என்பது, போனவா என ஈறுதொக்குநின்றது. ஆறு - வழி.

பாடினன்பின்புபட்டதுதெரிகிலேம்பாணு
ளோடினனெனக்கேட்டலுமொற்றர்போய்க்கொற்றஞ்
சூடினனவையடைந்தவர்சொல்லியவாறே
யாடினர்வியப்படைந்தனுமானமுற்றரசன். (சுக)

தன்னடைந்தவத்தந்திரித்தலைவனைநோக்கி
யென்னவாறவன்போனவாறிங்கினும்போன
பின்னையாதுநீசெய்தனையெனவிசைப்பெருமான்
றென்னர்கோனடிதொழுதுதன்செய்திமைமொழிவான். (சுஉ)

நென்னல்வாயடியேனினதாணிழனீங்கிப்
பின்னல்வார்சடைமௌலியெம்பிரானடிபணிந்தே
னின்னலார்குறையிரந்துமீண்டிருக்கைபுக்கிருந்தேன்
கன்னலார்மொழிபங்கரென்கனுவில்வந்தருளி. (சுங)

ஓடியுன்பொருட்டாகநாம்விறகெடுத்துழன்று
வாடிநின்பகைப்புறங்கடைவந்துசாதாரி
பாடிவென்றுநின்பகைவனைத்துரந்தனமெனச்சொல்
லாடினர்விழித்தேனிதுநிகழ்ந்ததென்றறைந்தான். (சுச)

ஏவன்மைந்தர்போய்விளங்கிவந்திசைத்ததும்வீணைக்
காவலன்கனுநிகழ்ச்சியுமொத்தலிற்கைக்கும்
பூவலங்கலாணிஃதுநம்பொன்னகர்க்கூடற்
றேவர்தம்பிரான்றிருவிளையாட்டெனத்தெளிந்தான். (சுரு)

இகழ்ந்தகூற்றெறிசேவடிக்கிடையறுநேசந்
திகழ்ந்தபத்திரனன்பையுந்தேவரைக்காப்பா
னகழ்ந்தவாழிநஞ்சுண்டவனருளையும்வியந்து
புகழ்ந்துபோய்மதுராபுரிப்புனிதனைப்பணியா. (சுசு)

பத்தர்யாழிசைக்கிழவனைப்பனைக்கைமானெருத்தில்
வைத்துமாடநீணகர்வலஞ்செய்வித்துமலர்ந்த
சித்தமாழ்ந்திடவரிசைகண்மிதப்புறச்செய்து
தத்துமான்றெடைத்தேரினன்றன்மனைபுகுவான். (சுஎ)

---

(சுக) பட்டது - நிகழ்ந்தது. கொற்றம்-வெற்றி. ஆடல்-சொல்லல். அனுமானம்-பிரத்தியட்சமாகிய காரியவேதுவைக்கொண்டு, அப்பிரத்தியட்சமாகிய காரண மவ்விடத் துண்டென்று நிச்சயிப்பது. (சுஉ) இங்கினும்-இங்குநின்றும். இதில் இன்னுருபு நீக்கப்பொருளது. (சுங) நென்னல்வாய்-நேற்றைப்போது.

(சுச) புறங்கடை-தலைவாயில். பகை - இதுசொல்லால் அஃறிணையேனும் பொருளாலுயர்திணையாதலால் வருமொழி வல்லெழுத்து இயல்பாய்நின்றது. (சுரு) கைக்கும்பூ-வேப்பமலர்.

(சுஎ) மாழ்தல்-மயங்கல். தத்துமான்-தாவுங்குதிரை.

தேவருந்தவமுனிவருந்தேவரிற்சிறந்தோர்
யாவருந்தமக்காட்செயவிருப்பவரிருதா
ணேவவந்துமக்காட்செய்து நுங்குறைமுடித்தா
ராவரேலுமக்கனைவருமேவலரன்றே. (௬௮)

ஆதலாலெனக்குடையர்நீருமக்குநானடியே
னீதலாலெனக்கும்மொடுவழக்குவேறிலைநா
னேதலாவதோர்குறையுளதின்றுதொட்டுமக்கு
வேதநாதனைப்பாடலேகடனெனவிடுத்தான். (௬௯)

அரசனல்கியவெறுக்கைபூணுடைகள்பிறவும்
பரசுநாவலர்மாணவர்யாவர்க்கும்பகிர்ந்து
வரிசையாலிசைக்கிளையொடுமனையில்வந்தெய்திக்
கரைசெயாமகிழ்சிறந்திசைக்காவலனிருந்தான். (௭௦)

விறகுவிற்றபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௪௧-க்கு - திருவிருத்தம் - ௨௬௦௦.

---

## நாற்பத்திரண்டாவது,

## திருமுகங்கொடுத்தபடலம்.



அறுசீரடியாசிரியவிருத்தம்.

முன்னவன்மதுரைமூதூர்முழுமுதலிசைவலானை
யின்னிசைப்பாடிவென்றதென்னுரைசெய்கேனந்தத்
தென்னவன்சேரன்மாடேதிருமுகங்கொடுத்துப்பாணர்
மன்னவன்றனக்குச்செம்பொன்வழங்கியவழக்குஞ்சொல்வாம். (௧)

இனிமதியெமக்கிதென்னுயாழ்வல்லோனன்றுதொட்டுப்
பனிமதிமருமான்கோயிற்பாணிசைக்கிழமைநீத்துக்
குனிமதிமிலைந்தநாதன்கோயின்முப்போதுமெய்திக்
கனிமதியன்பிற்பாடுங்கடப்படுநிழமம்பூண்டான். (௨)

இத்தொழிலன்றிவேறுதொழிலிவற்கின்மையாலே
பத்திரனிலம்பாடெய்தப்பொறுப்பரோபழனக்கூடற்
சித்தவெம்மடிகள்வேந்தன்பொன்னறைச்செல்வம்வௌவிப்
பத்தர்யாழிடத்தோளேந்திப்பாடுவான்காணவைப்பார். (௩)

---

(௧) மாடு - பக்கம். (௩) இலம்பாடு-இன்மைபடுதல். எனவே வறுமை என்பதுபொருள்.

சிலபொலங்காசுசின்னுண்மணிக்கலன்சின்னுள்செம்பொற்
கலைவகைச்சின்னுளம்பொற்சாமரைக்காம்புசின்னு
ளலர்கதிரரிமான்சேக்கையாடகத்தகடுசின்னுள்
குலமணிவருக்கஞ்சின்னுள்கொடுத்திடக்கொண்டுபோவான். (௪)

கைவரும்பொருளைத்தந்தகள்வருந்தானுமன்றி
யெவ்வெவர்தமக்குந்தோற்றுதெரியிலிட்டழித்துஞ்சின்னஞ்
செய்வனசெய்துந்தன்னைச்சேர்ந்தவரிரந்தோர்கைபார்த்
துய்பவர்பிறர்க்குமாறுதுதவியுட்கவலைதீர்ப்பான். (௫)

வைகலுங்கொடுப்போர்பின்னுண்மறுத்தனராகப்போய்ப்போய்க்
கைதொழுதிறைஞ்சிவாளாவருமவன்கலியின்மூழ்கி
யுய்வகைவேறுகாணுதொக்கலுமொக்கவாடிக்
கையறவுடையகோனுதுறங்கினுன்கனவினெல்லை. (௬)

சித்தவெம்பெருமான்வந்துசெப்புவானப்பாநிம்பத்
தொத்தவன்கோசந்தன்னிற்றும்பியுண்கனியின்வெளவி
யித்தனமின்றுகாறுமீந்தனமெம்பாலன்பு
வைத்தவனறிந்தாற்சங்கைமனத்தனுய்விகற்பங்கொள்வான். (௭)

மயலறக்கற்புக்காக்குமகளிர்போற்றுறவுகாக்க
முயலும்யோகரிலுட்காப்புமுரசெறிபுறஞ்சூழ்காப்புங்
கயலிலச்சினையுநிற்கக்கவர்ந்ததற்புதமிக்கள்வ
னுயிர்தொறுமொளித்தகள்வனொருவனேவறியேனென்பான். (௮)

கோமகனினையசெய்தியறியுமேற்கோசங்காப்போர்க்
காமுறுதண்டநின்போலன்பகத்தெம்மைவைத்த
தேமருபோந்தின்கண்ணிச்சேரமான்றனக்கிப்போது
நாமொருமுடங்கநீட்டிநல்குவம்போதியென்று. (௯)

மறைக்குரைசெய்தவாக்கான்மதிமலிபுரிசையென்னுஞ்
சிறப்பியற்சீர்சால்செய்யுட்பாசுரஞ்செப்பித்தீட்டிப்
பிறைச்சடைப்பெருமானல்கிமறைந்தனன்பெரும்பாண்செல்வ
னுறக்கநீத்தாடிப்பாடியுவகைமாகடலிலாழ்ந்தான். (௧௦)

---

(௪) பொலம் - பொன். அரிமான்சேக்கை - சிங்காதனம். ஆடகம் - பொன். வருக்கம் - கூட்டம். (௫) சின்னம் - உருவழித்தல்.

(௬) கலி - வறுமையால் வருந்துன்பம். கையறவு - துன்பம். நோனுது—ஆற்றுமல். (௭) கோசம் - கருவூலம். தும்பி - யானை.

(௯) ஆமுறும் - உண்டாகும். போந்தின்கண்ணி - பனைமாலை. முடங்கல் — ஓலை. (௧௦) சிறப்பியல் என்றது - சொல்லமைதி பொருளமதிகளை. சீர் என்றது - செய்யுளின்பத்தை.

கலிவிருத்தம்.

வாங்கியதிருமுகமணிப்பட்டாடையிட்
டாங்கிறையடிபணிந்தகன்றுபத்திர
னோங்கியகோயிலைவலங்கொண்டொல்லென
நீங்கிமேல்வரைப்புலநெறிக்கொண்டேகுவான். (௧௧)

கொல்லையுங்குறிஞ்சியுங்கொதிக்கும்வெம்பரற்
கல்லதரத்தமுங்கடந்துமுட்புறப்
பல்சுளைக்கனியடியிடறப்பைப்பைய
நல்வளங்கெழுமலைநாடுநண்ணினான். (௧௨)

அலைகடனெடுந்துகிலந்தநாடெனுந்
தலைமகண்டக்குவான்றடவுகுன்றுபூண்
முலையெனவிளங்கினமுகத்திற்றீட்டிய
திலகமேயானதுதிருவஞ்சைக்களம். (௧௩)

அறமகளாக்கமுமலரின்மேயசெந்
நிறமகளாக்கமுநீதிசான்றபோர்
மறமகளாக்கமும்வடசொற்றென்கலைத்
திறமகளாக்கமுஞ்சிறந்ததந்நகர். (௧௪)

மண்புகழந்நகர்மறுகின்மாடொரு
தண்புனற்சாலையிற்சார்ந்துளானிப்பால்
விண்புகழ்நீதியவ்வேந்தற்கன்றிராக்
கண்புனைநுதலினார்கனவிற்றோன்றினார். (௧௫)

தென்னவன்மதுரையிலிருக்குஞ்சித்தர்யா
னின்னிடைவந்துளேநின்னைக்கண்டுதா
னன்னிதிவேண்டநம்மோலைகொண்டுநம்
மின்னிசைப்பாணபத்திரனிங்கெய்தினான். (௧௬)

மற்றவற்கருநிதிகொடுத்துமன்னநீ
தெற்றெனவரவிடுகென்றுசித்தர்தாஞ்

(௧௧) மேல்வரைப்புலம் - மேற்றிசைக்கணுள்ள மலைநாடு.

(௧௨) கொல்லை - முல்லை. அத்தம்-பாலை. சுளைக்கனி-பலாக்கனி. பையப்பைய என்றதின் முதன் மொழியீற்றகரம் உடம்படுமெய்யொடுங்கெட்டுப் பைப்பைய என நின்றது.

(௧௪) அறமகளாக்கம் என்றது—ஞானச்செல்வத்தை. போர்மறமகளாக்கம் - வெற்றியால்வரும் பிரதாபச்செல்வம். கலைத்திறமகளாக்கம்-கல்விச்செல்வம்.

சொற்றனர்போயினர்சுக்குந்தண்ணளி
யொற்றைவெண்குடையினானுறக்கநீங்கினான். (௧௭)

கங்குல்வாய்க்கண்டவக்கனவைப்பெண்ணையந்
தொங்கலான்றமரொடுசொல்லிச்சேற்கணாள்
பங்கினன்றிருமுகங்கொணர்ந்தபத்திர
னெங்குளான்கொல்லெனத்தேடவெண்ணுவான். (௧௮)

மற்றவர்தமைத்துரீஇவருகதில்லெனக்
கொற்றவனேவலோர்குறுகிமாடமுந்
தெற்றியுநியமமுமன்றுஞ்சென்றுசென்
றெற்றிகழ்மணிநகரெங்குந்தேடுவார். (௧௯)

தருமநீர்ப்பந்தரிலிருக்குந்தந்திரி
வருமிசைக்கிழவனைக்கண்டுவல்லைபோய்த்
திருமகற்குணர்த்தினர்சேனையோடெழீஇப்
பெருமகன்பாணர்தம்பிரானைநண்ணினான். (௨௦)

கண்டனன்முகிழ்த்தகைக்கமலஞ்சென்னிமேற்
கொண்டனன்பாடினன்கூத்துமாடினன்
றண்டெனவீழ்ந்தனனன்பிற்றண்ணறு
வண்டெனமகிழ்ந்தனன்மன்னர்மன்னனே. (௨௧)

வாங்கினன்றிருமுகமலர்க்கணொற்றினன்
றாங்கினன்முடிமிசைத்தாமம்போன்மகிழ்
தூங்கினன்றடங்கணீர்துளிப்பமெய்யெலாம்
வீங்கினன்பொடிப்பெழவேந்தர்வேந்தனே. (௨௨)

எண்சீரடியாசிரியவிருத்தம்.

மின்னவிருஞ் செம்பொன்மணி மாடக்கூடன் மேயசிவன்யா மெழுதி விடுக்குமாற்ற, நன்னர்முகி லெனப்புலவர்க் குதவுஞ்சேர நரபாலன் காண்கதன்போ னம்பாலன்ப, னின்னிசையாழ்ப் பத்திரன்றன் மாடேபோந்தா னிருநிதியங் கொடுத்துவர விடுப்பதென்

(௧௮) பெண்ணை - பனை. தமர் என்றது-அமைச்சரை.

(௧௯) துருவி-தேடி. தில் என்னு மிடைச்சொல் காலத்தின் மேனிற்றலால், விரைந்து என்பது பொருள். இதனை, "விழைவே காலமொழியிசைக்கிளவியென்றம்மூன்றென்பதில்லைச்சொல்லே" என்னுஞ் சூத்திரத்தானுணர்க. (௨௧) தண்ணறுவண்டு - தேனைக்கண்டவண்டு. (௨௩) நன்னர்முகில் - உலகத்திற்கு நன்மை பயக்கு மேகம். சேரநரபாலன் என்றது—அண்மைவிளி.

னத், தென்னர்பிரான் திருமுகத்தின்செய்திநோக்கிச் சேரர்பிரான் களிப்பெல்லை தெரியானுகி. (உ௩)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பொன்னின்றளிகை மிசைவைத்துப் புழைக்கைமதமான்றலையேற்றி, மன்னுங்கொளையாழ்ப்புலவனைமுன் வைத்துப்பின்னேதானிருந்து,மின்னுங்கதிர்காலிணைக்கவரிவீசிப்பலவேறியங்கலிப்பத், தென்னென்றளியாரிசைத்தாரான்றிருமாநகரைவலஞ்செய்யா. ()

பஞ்சுதடவுஞ்சீறடியார்பலமங்கலங்கொண்டெதிர்போத
மஞ்சுதடவுநீள்குடுமிமாடமனையிற்கொடுபோகி
நஞ்சுதடவுமணிகண்டனன்பன்றனைநன்னீராட்டி
யஞ்சுதடவியோவியஞ்செய்தமைத்தமணிமண்டபத்தேற்றி. (உ௫)

அம்பொற்றவிசிட்டருச்சனைசெய்தாறுசுவையின்னமுதருத்திச்
செம்பொற்கலவைநறுஞ்சாந்தந்தீம்பூவாதிமுகவாசம்
பைம்பொற்கலத்துவெள்ளிலைதீம்பழுக்காய்பிறவுமுறைநல்கி
யும்பர்க்கிறைவன்றிருமுகத்திலுய்ப்பதெனலாலுய்த்துமென. ()

செம்பொனறையைத்திறந்தழைத்துக்காட்டியினையதிருவெல்லா
மும்பர்பெருமானடியீர்நீருடையீர்கவர்ந்துகொண்மினென [வ
விம்பர்நிழற்றும்வெண்குடையானிசைப்ப வெதிர்தாழ்ந்திசைக்கிழ
னம்பனருளுக்குரியீர்நீர்நல்கிற்றமையுமெனக்கென்ன. (உ௭)

மன்னன்றனெண்ணியவாற்றால்வழங்கவழங்கமறுத்துமறுத்
தின்ன நீருமிசைக்கிழவனிலங்கும்பொலம்பூணிருநிதியம்
பொன்னஞ்சிவிகைகரிபரிமான்பொற்பட்டாடைபலபிறவுந்
தன்னதென்னுமளவாற்றாற்றனேகொள்ளத்தார்வேந்தன். (உ௮)

பின்னேழடியோசேட்சென்றுபெருமைசான்றவரிசையினுற்
றன்னேரிசையான்றனைவிடுத்துமீண்டானுகத்தமிழ்மதுரை

(உ௪) தளிகை-தவிசு. கொளை - இசை. தென் என்றது—ஓரிசைப்பண். (உ௫) சீறடி-சிற்றடி. பலமங்கலம் என்றது—கண்ணடி, இடபம், விளக்கு, சீவற்சம், கவரி, சங்கு, சுவத்திகம், நிறைகுடம், வாசநீர்முதலிய அஷ்டமங்கலங்களை. அஞ்சு என்றது - பஞ்சவன்னப்பொடியை.

(உ௬) முகவாசம்-தூபம். பழுக்காய் - பாக்கு.

(உ௭) கவர்தல் - கைக்கொள்ளல். நல்கிற்று - நல்கியது.

(உ௮) தானெண்ணியவாற்றால் வழங்கவழங்க என்றது—சேனைமுதலிய அரசியல்முற்றுந் தந்தமையை. தன்னம் - சிறுமை.

மின்னேர்சடையாரிசைத்தொண்டன்ருனுமீண்டுவெயில்விரிக்கும்
பொன்னேர்மௌலிநிதிக்கிழவன்போலமதுரைநகர்புக்கான். (உ௯)

வந்துமதுரைப்பெருமானைவணங்கிக்கொணர்ந்தநிதியெல்லா
மிந்துமருமானகருள்ளார்யாருமறியயாவர்க்கு
முந்தைவேதமுதல்வர்க்கும்புலவோர்தமக்குமுறைநல்கிச்
சந்தயாழினிசைப்பாணர்தருமமனையான்வைகினுன். (௩௦)

திருமுகங்கொடுத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௧ - க்கு - திருவிருத்தம்-உ௧௩௦.

---

நாற்பத்துமூன்றுவது,

## பலகையிட்டபடலம்.

கொச்சகக்கலிப்பா.

கருந்துழாய்முகிலொருபாற்கலந்தவர்பத்திரற்குநிதி
திருந்துதாருதியனிடைத்திருமுகமீந்தளித்தநிது
வருந்தியாழவனிசைப்பமழைதூங்குநள்ளிரவி
லிருந்துபாடெனப்பலகையிட்டதூஉமினிப்பகர்வாம். (௧)

முன்புடையநாயகனைமுப்போதும்புகுந்திறைஞ்சி
யின்புறுமேழிசைக்கிழவனிருநிதியமருளியபி
னன்புசிறந்தரையிரவுமடைந்துபணிந்தடல்யிடையின்
பின்புறநின்றேழிசையும்பாடிவரும்பேறடைவான். (உ)

தொழுந்தகையன்பருந்தேவர்தொகுதிகளுந்தொழத்திங்கட்
கொழுந்தலையாதியலையக்குனிக்கின்றதனிக்கடவுள்
செழுந்தரளச்சிவிகையின்மேற்றேவிதிருப்பள்ளியறைக்
கெழுந்தருளும்போதுபணிந்தேத்துவானேரிரவில். (௩)

இன்னிசையாழ்ப்பெரும்பாணனெவ்விடையூறடுத்தாலுந்
தன்னியமநெறியொழுக்கந்தவானென்பதுலகறியப்

---

(உ௯) நிதிக்கிழவன் — குபேரன்.

(௧) உதியன் - சேரமான் பெருமான். (உ) அரையிரவு - நடு
ராத்திரி. (௪) தவான் — தவருன். கொண்மூ-மேகம்.

பொன்னியலுஞ்சடைமௌலிப்புராணர்திருவிளையாட்டா
லன்னிலையிற்கருங்கொண்மூவார்த்தெழுந்ததிசையெல்லாம். (௪)

தடித்துநிரைபுடைபரப்பித்தமொறித்திசைமயங்கத்
துடித்துவிடவாயரவஞ்சோர்ந்துசுருண்டலையொதுங்க
விடித்துவின்கணம்புதைப்பவிருள்கான்றுசலபதிமுன்
முடித்திடுவான்வரவழைத்தமுகிலேழும்வளைந்தெதன. (௫)

கருங்கடலைவிசும்பெடுத்துக்கவிழ்ப்பதெனவெண்டாரை
நெருங்கிருளினிருப்புக்கோனிரைந்ததெனநிறங்கரும
வொருங்குசொரிந்துள்ளுணராருள்ளம்போலுட்புறம்பு
மருங்கொடுகீழ்மேலென்றுதெரியாதமயங்கிருள்வாய். (௬)

மாமாரியிடைநனைந்துவருவானம்மாரிதனைப்
பூமாரியெனநினைந்துதிருக்கோயில்புகுந்தெய்திக்
காமாரிதனைப்பணிந்துகருணைமாரியினனைந்து
தேமாரிபொழிவதெனத்தெள்விளியாழ்வாசிப்பான். (௭)

விடைக்கடவுள்பின்னின்றுவீணையிடத்தோள்கிடத்திப்
புடைத்துநரம்பெறிந்துமிடற்றொலிபோக்கிப்பொலங்கொன்றைச்
சடைக்கடவுள்செவிவழிபோயருட்பைங்கூழ்தலையெடுப்பத்
தொடைத்தமிழினிசைப்பாணிச்சுவையமுதமடைதிறந்து. (௮)

நரம்புநனைந்திசைமழுங்கநனைந்துடலம்பனிப்பவிச்சை
வரம்பொழுகுவிரன்மிறைத்துவலிவாங்கமயிர்சிலும்
நிரம்பியசேறடிபுதைப்பநின்றுநிறையன்பிசையா
யரும்புதல்போலென்புருக்குமமுதவிசைபாடுமால். (௯)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மாதர்நகையாய்மதுரேசருண்பலிக்கெம்மனைவாய்வந்து
காதன்முகத்தரும்பிக்காட்டியென்சிந்தைகவர்ந்தாற்போலுங்
காதன்முகத்தரும்பக்கையறவுதீரக்கலப்பேன்பாதி
பேதையுருவாயிருந்தார்நாணிவிழித்தாவிபிழைத்தேன்போலும். ()

---

(௫) தடித்து-மின்னி. அளை-பிலம். உடு-நட்சத்திரம். சலபதி-வருணன். (௬) நிறங்கருகாஎன்றது—வெள்ளியமழைத் தாரைகள் நிறந்திரிந்து நிற்றலை. உள்-உணரார். உள்ளம் - தம்மையறியாதவர் மனம்.

(௭) காமாரி - காமனைத்தகித்தகித்தவன். பைங்கூழ் - பயிர்.

(௯) மிறைத்து - விரைத்து. (௧0) கையறவு - காமநோய்.

ஒண்ணுதலாய் வெண்டலைகொண் டுண்பலிக்கிநம்மனையினூடே கூடற், கண்ணுதலாருள்ளாளக் கானமிசைத்தென்னுள்ளங் கவர்ந்தார்போலுங், கண்ணுதலார் பாடுமெவினயங்கண்டாகங் கலப்பேன் பாதி, பெண்ணுருவ மாயிருந்தார் வெள்கிவிழித்தாவி பெற்றேன் போலும். (௧௧)

ஐயரியுண்கண்ணாய் திருவாலவாயுடையா ரையங்கொள்வான், மையனகைசெய்தென் வனமுலையின்மேற்செங்கை வைத்தார்போலு, மையனகைசெய்தென் வனமுலைமேற்கைவைப்பமாழ்கிச்சோர்வேன், றையலிடங்கண்டுநடுநடுங்கிவிழித்தாவிதரித்தேன்போலும்.

மேற்படி - வேறு.

பாடுவாரிருவர்க்கன்றுபரிசிலாக்கொடுத்தசங்கத்
தோடுவார்செவியிலூட்டுந்தொண்டுகண்டிதன்மேனின்று
பாடுவாயுனக்கேயிந்தப்பலகையென்றூழ்ந்தவன்பி
ளுடுவார்விசும்பிற்கூறிநகைமணிப்பலகையிட்டார். (௧௩)

இறையருளாணையஞ்சியிட்டபொற்பலகையேறி
நறைகெழுமதுரகீதம்பாடிநான்மறைகள்சூடு
மறைகழலகத்துட்கொண்டுபலகையுமங்கைகொண்டு
மறைவழியாழ்வல்லோன்றன்மனைவயிற்செல்லுமெல்லை. (௧௪)

மின்னுமாமேகநீங்கிவிசும்புவாய்விளங்கித்தென்றன்
மன்னுமாமலையின்மேயமாதவன்குடித்தவைகற்
பொன்னுமாமணியுமுத்தும்புலப்படக்கிடந்தவேலை
யென்னமீன்விளங்கித்தோன்றவேகியில்புகுந்தானிப்பால். (௧௫)

பாயிருட்படலங்கீண்டுபரிதிகண்விழித்துச்செங்கை
யாயிரம்பரப்பிமுந்நீரலைகடனீந்துமெல்லை
மாயிருஞாலங்காக்கும்வரகுணனிரவுதங்க
ணுயகன்பாடற்கீந்தநல்லருட்பரிசில்கேட்டான். (௧௬)

இன்னிசைக்கரசையிட்டபலகைமீதிருத்திமன்னர்
மன்னவனிவனேயெங்கண்மதுரைநாயகனென்றுன்னி
மின்னிவர்மணிப்பூணல்கிவிளைநிலமிகவுநல்கி
நன்னிதிவெறுப்பனல்கிவரிசையாநடத்திவந்தான். (௧௭)

(௧௧) வெண்தலை - பிரமகபாலம். உள்ளாளக்கானம் - தேவகாந்தருவம். (௧௨) ஐயரி-பஞ்சரேகை, அல்லது அழகியரேகை. மையல்நகை-காமக்குறிப்புணர்த்தும் புன்னகை. வனம் - சந்தனக்கோலம்.

(௧௩) இருவர் என்றது-அச்சுவதரன், கம்பளனென்னுமிருவரை, இதனை—"அச்சுவதரனற்கம்பளன்னென வறையாநின்ற, நச்செயிற்றரவிரண்டை நகுமணிக்குழையிரண்டா, வைச்சனன்" என்பதாலுணர்க. (௧௫) மாமலை என்றது—பொதியமலையை, மீன்-நட்சத்திரங்கள். பரிசில் - கொடை.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

இறையருள் வரிசைபெற்ற பத்திரனுமேறுயர்த் தவரைநாற் போது, முறையினல்வழிபட்டொழுகுவானுக முடிகெழுவரகுண வேந்து,மறைமுதலடிகள்வந்துவந்தனையால்வழுத்துவான்சில்பகல் கழிய, நிறைபெருஞ்சுடரோன் றிருவுருவடைந்து நெறியினற் சிவ புரமடைந்தான். (௧அ)

பலகையிட்டபடலம் முற்றிற்று.

ஆக படலம் ௪௨ - க்கு - திருவிருத்தம் - ௨௧௪அ.

---

நாற்பத்துநான்காவது,

## இசைவாதுவென்றபடலம்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

கூடலம்பதியிலாடகமேருக்கொடியவிற்குரிசிலடியவனுக்குப், பாடலின்பரிசிலாகியசெம்பொற்பலகையிட்டபடிபாடினமன்னுன், வீடரும்பொருவில்கற்புடையாளோர் விறலியைப்பரமனிறையருள் பற்றி, மாடகஞ்செறியும்யாழ்வழிபாடி வாதுவென்றவரலாறுமிசைப்பாம். (௧)

வரகுணன்கதியடைந்தபினம்பொன்மௌலிசூடியவிராசவிராசப்[ற் புரவலன்புவிமடந்தையைவேட்டுப்புயந்தழீஇக்கொடுநயந்தருநாளி பரவுமன்பதைபுரந்தொழுகந்தப்பஞ்சவற்குரியரஞ்சனவுண்கண் மரபின்வந்தமடவார்பலரேனைமையல்செய்யுமடவார்பலர்மாதோ.()

அன்னபோகமடவாருளொருத்தியரசனுக்கமுதுமாவியுமாகு, மின்னனுண்மதுரகீதமிசைக்கும் விஞ்சையின்றுறைவலாளவளுக்கும், பன்னகாபரணனின்னிசைபாடும்பத்திரன் பொருவில்கற்புடையாட்கு, மன்னுகீதவினையாலிகன்மூளவழுதிகாதன்மடமாதுபொருளாய். (௩)

---

(௧அ) ஏறு - இடபக்கொடி. திருவுருவடைந்து என்றது-சாரூபபதமுற்றமையை. நாற்போது-காலை. நண்பகல்-மாலை. நடு-நிசி.

(௧) வீடு-விடுதல். விறலி-பாடினி. மாடகம்-நால்வகை விரலளவான பாலிகைவடிவாய் நரம்பை. வலித்தல், மெலித்தல் செய்யும் கருவி. (௨)நயம்—இன்பம். மையல்செய்யுமடவார்என்றது - காமக்கிழத்தியரை. (௩) பன்னகம்-பாம்பு.

பாடினிக்கெதிரோர்பாடினிதன்னைப் பாடவிட்டிவள் படைத்தசெருக்கை, யீடழிப்பலெனவெண்ணியெழீஇத்தன் னிறைமகற்கஃதிசைத்தலுமந்தத், தோடிறப் பொருகயற்கணிஞடான் சொன்னவாறெழுகுமன்னவர்மன்ன, ஞடியத்தகையவிறலியைவீழ நாட்டினும் வரவழைத்துவிடுத்தான். (௪)

பந்தயாழ்முதுகுதைவரவிட்டுப்பாடலாயமிருபக்கமுமொய்ப்ப, வந்தபாடினி மடந்தையுமன்னர் மன்னனைத் தொழுதொர்கின்னரமாதிற், சந்தவேழிசைமிழற்றினணின்று டன்னைநோக்கி யொருமின்னிடையாண்மேற், சிந்தைபோக்கிவருதீப்பழிநோக்காத்தென்னருக்கரசனின்னதுசெப்பும். (௫)

பத்திரன் மனைவிதன்னை யெம்முன்னர்ப் பாடுதற்கழையதற்கவளாற்று, துத்தரஞ்சொலினும்யாமவள்சார்பாயுனைவிலக்கினும்விடாதுதொடர்ந்தே, சித்தநாணமுறவஞ்சினமிட்டுச் செல்லனில்லெனவளைந்துகொளென்ஞ, வெய்த்தநுண்ணிடையிஞளையிருக்கைக் கேகிநாளைவருகென்றுவிடுத்தான். (௬)

கலிநிலைத்துறை.

பின்னரின்னிசைப்பத்திரன்பெருந்தகைவிறலி
தன்னையங்கழைத்துளத்தொன்றுபுறத்தொன்றுசாற்று
மென்ஞெடின்னிசைபாடுவாருளர்கொலோவிங்கென்
றுன்னிவந்திருக்கின்றனளிசைவலாளொருத்தி. (எ)

ஆடமைத்தடந்தோளிஞயவளொடுங்கூடப்
பாடவல்லையோபகரெனப்பாடினிபகர்வாள்
கோடருந்தகைக்கற்புமிக்கூடலெம்பெருமான்
வீடருங்கருணையுமெனக்கிருக்கையால்வேந்தே. (அ)

பாடிவெல்வதேயன்றிநான்பரிபவமுழந்து
வாடுவேனலேனென்றுரைவழங்கலுமதுக்கா
லேடுவார்குழலவளையுமிருக்கையுய்த்திருந்தா
னீடுவார்திரைப்பொருநையந்தண்டுறைநிருபன். (௯)

மற்றைவைகலவ்விருவரைப்பஞ்சவன்மதுரைக்
கொற்றவன்றனதவையிடையழைத்துநேர்கூட்டிக்

---

(௪) கயற்கணி என்றது-காமக்கிழத்தியை. ஆயம்-மகளிர்கூட்டம். (௬) வஞ்சினம்-சபதம். (அ) கோடருந்தகைக்கற்பு என்றது-மாறுபடுதலில்லாத பெருந்தகைமையையுடைய அறக்கற்பினை.

(௯) பரிபவம் - துன்பம்.

கற்றவேழிசைகேட்குமுன்கலத்தினும்போந்த
வெற்றிவேன்மதர்நெடுங்கணாள்விறலியைவைதாள். (௧0)

குற்றமெத்தனையெத்தனைகுணங்கள்யாழ்க்கோலுக்
குற்றதெய்வமேதிசைப்பதெவ்வுயிருடம்புயிர்மெய்
பெற்றவோசையெவ்வளவவைக்குத்தரம்பேசி
மற்றெனோடுபாடில்லையேல்வசையுனக்கென்றாள். (௧௧)

இருமையும்பெறுகற்பினாளிளம்புவாள்கலத்தின்
வருமரும்பெறற்கல்வியும்வாதின்மேலூக்கப்
பெருமையும்பலர்விரும்புறுபெண்மையின்செருக்குந்
திருமகன்சவையறியவாய்திறக்கவேண்டாவோ. (௧௨)

நெய்யுண்பூங்குழன்மடவரானின்னொடும்வாது
செய்யும்பூசலுக்கெதிரலாற்றீயவாய்திறந்து
வையும்பூசலுக்கெதிரலேன்மானம்விற்றுன்போ
லுய்யும்பாவையரேயதற்கெதிரெனவுரைத்தாள். (௧௩)

வென்றிமீனவன்விலக்குவான்போலெதிர்விலக்கித்
துன்றுதார்குழன்மடந்தைமீர்பாடுமின்றோற்றோர்
வென்றமாதரார்க்கடிமையாய்விடுவதேசபத
மென்றுமானமுண்டாக்கலுமீழநாட்டரிவை. (௧௪)

முந்தியாழிடந்தழீஇக்குரல்வழிமுகிழ்விரல்போ
யுந்தவேபெருமிதநகையுட்கிடந்தரும்பச்

(௧௧) குற்றமாவன—செம்பகை-பண்ணொடுவராத இன்பமில்லாத ஓசை. ஆர்ப்பு - மாத்திரைகடந்தொலித்தல். கூடம் - இசைவழிப்படாது மயங்குதல். அதிர்வு - இழுமெனும் ஓசையின்றிச் சிதறியுரைக்கும் உச்சரிப்புடையதுமுதலியனவும்; நீர்நின்றிளகியதும், மெல்கியதும், வெந்ததும். தக்கநிலத்திற் பிறவாததும் இடிவீழ்ந்ததும், நோயுற்றதுமானமரங்களும். குணமாவன-அக்குற்றங்களொழிந்த, கொன்றை, கருங்காலி, முருக்கு. குமிழ், தணக்குமுதலிய மரங்கள். தெய்வங்களாவன - விஸ்வாமித்திரன், சமதக்கினி, சந்திரன், சூரியன், கௌதமன், காசிபன், ஈசன். தெய்வம்பொருளானுயர்திணையேனும் சொல்லா லஃறிணையாதலால் யா என்னும் அஃறிணைப்பன்மைப் பயனிலைகொண்டது.

(௧௨) கலத்தின்வரு மரும்பெறற்கல்விஎன்றது-ஈழப்பாடினி, மரக்கலமேறிவந்தது கற்றகல்வியாலாதலால் உடையாள் தன்மையைஉடமைமேலேற்றிக்கூறியது. (௧௩) பூசல் - போர்.

(௧௪) குரல் என்றது-குரலென்னுமோர் நரம்பினை. அன்புவந்தகாதலாள் என்றது - பாண்டியனதுகாமக்கிழத்தியை.

சந்தவேழிசையிறைமகன்றாழ்செவிக்கன்பு
வந்தகாதலாண்மழலையினமுதெனவார்த்தாள். (௧௫)

வீணைவாங்கினண்மாடகமுறுக்கினள்விசித்து
வாணரம்பெறிந்திருசெவிமடுத்தனரியக்கர்
நாணமெல்விரனடைவழிநாவிளையமுதம்
பாணர்கோமகன்விறலியும்பலர்செவிநிறைத்தாள். (௧௬)

அரசனுட்கிடையறிந்திலரவைக்களத்துள்ளார்
விரைசெய்வார்குழற்பாடினிபாடலைவியந்தார்
புரைசைமானிரைப்பூழியனிலங்கையிற்போந்த
வரைசெய்குங்குமக்கொங்கையாள்பாடலைமகிழ்ந்தான். (௧௭)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தென்னவனுட்கோளெல்லைதெரிந்தனரவையத்துள்ளா
ரன்னவன்புகழ்ந்தவாறேபுகழ்ந்தனரவளைத்தானே
முன்னவனருளைப்பெற்றுமும்மையுந்துறந்தோரேனு
மன்னவன்சொன்னவாறேசொல்வதுவழக்காறன்றோ. (௧அ)

பொன்றளிரனையாண்மையற்புதுமதுநுகர்ந்துதீது
நன்றறியாதகன்னிநாடவனவையைநோக்கி
யின்றொருநாளிற்றேரத்தக்கதோவிதுவென்றந்த
வென்றடுவேற்கணுரைப்போமெனவிடுத்தான்மன்னோ. (௧௯)

மருவிவாயமேத்தவிருந்திருண்மனைவந்தெய்திப்
புரவலன்றனதுபாட்டைப்புகழ்ந்ததேபுகழ்ந்ததாகப்
பெருமிதந்தலைக்கொண்டாளுப்பெருங்களிப்படைந்துமஞ்சந்
திருமலரணைமேலார்வந்திளைத்தினிதிருந்தாளிப்பால். (௨௦)

வணங்குறுமருங்கிற்கற்பின்மடவரன்மதங்கிதானு
மணங்கிறைகொண்டநெஞ்சளங்கயற்கண்ணிபாகக்
குணங்குறிகடந்தசோதிகுரைகழலடிக்கீழெய்தி
யுணங்கினள்கலுழ்கண்ணீரளொதுங்கிநின்றிதனைச்சொன்னாள். ()

(௧௬) விசித்து-கட்டமைத்து. (௧௭) உட்கிடை-உள்ளக்கருத்து. புரசை - யானைகட்டுங்கயிறு. இது புரைசை எனப் போலியாயிற்று.

(௧அ) மும்மை என்றது-மண், பெண், பொன், என்னு மீஷணத்திரயங்களை. (௨௦) விருந்தினள் என்றது - ஈழநாட்டுப் பாடினியை. மதங்கி - பாணஸ்திரி.

தென்னவனுகிவையஞ்செய்யகோல்செலுத்திக்காத்த
மன்னவவழுதிவாரவழிவழக்குரைப்பதானு
னன்னவன்கருத்துக்கேற்பவவையருமனையரானுர்
பின்னடுநிலைமைதூக்கிப்பேசுவார்யாவரையா. (உஉ)

உன்னருடுணைசெய்தென்பாலுறுகணேய்துடைப்பதென்ன
மின்னனுய்நீயோநாளைவெல்லுமாசெய்துமஞ்சே
லென்னவாகாயவாணியீறிலானருளாற்கேட்டு
மன்னருங்கற்பினுடன்மனைபுகுந்திருந்தாண்மன்னே. (உ௩)

அன்றுபோன்மற்றைஞான்றுமழைத்தனன்பாடல்கேட்டுக்
குன்றுபோற்புயத்தானென்னற்கூறியவாறேகூற
மன்றுளார்பலருமன்னவண்ணமேசொன்னர்கேட்டு
நின்றபாண்மடந்தைபாண்டிநிருபனைநோக்கிச்சொல்வாள். (உ௪)

தென்னரேறனையாய்ஞாலமனுவழிச்செங்கோலோச்சு
மன்னரேறனையாய்வாரவழக்கினையாதலாலீ
சொன்னவாறவையுஞ்சொல்லத்துணிந்ததுதுலைநாவன்ன
பன்னகாபரணர்முன்போய்ப்பாடுகேம்பாடுமெல்லை. (உ௫)

இருவரேம்பாட்டுங்கேட்டுத்துணிந்திவல்வென்றாளென்று
வொருவர்சந்நிதியிற்சொன்னுற்போதுமென்றுரைத்தாள்பாண்டித்
திருமகனனையவாறேசெய்மினீர்செய்மினென்ன
மருவளர்குழலினர்தமனைபுகுந்திருந்தார்பின்னுள். (உ௬)

கலிவிருத்தம்.

தென்றனுடனுமந்திரச்செல்வரு
நன்றுநீதுணர்நால்வகைக்கேள்வியோ
ரொன்றவேகியொளிவிடுவெள்ளிமா
மன்றவாணர்மாமண்டபத்தெய்தினர். (உ௭)

எய்தியம்மடமாதரையிங்குறச்
செய்திரென்னத்திருமகனேவலோர்
நொய்திநேடிநொடித்தழைத்தாரொடு
மைதிகழ்ந்தவிழியார்வருவரால். (உ௮)

---

(உஉ) வாரம்-பட்சபாதம். உறுகண் - துன்பம். துடைப்பது- இது துவ்விகுதியீற்றுவியங்கோள்வினைமுற்று. இதனைக் "கொள்ளப்படாது மறப்பதறிவிலன் கூற்றுக்களே" என்பதாலு முணர்க.

(உ௭) நால்வகைக்கேள்வியாவன - கீதஞானம், இலயஞானம், சுருதிஞானம், தாளஞானங்கள்.

படிமையார்தவப்பாடினிவந்தெனக்
கடிமையாவளின்றையமின்றெலனக்
கொடுமையார்மனக்கோட்டச்செருக்கொடுங்
கடுமையாகவந்தாள்கலத்தின்வந்தாள். (உகூ)

கற்புமிக்கெழுகற்புங்கருத்தினிற்
சிற்பரஞ்சுடர்சேவடிமேல்வைத்த
வற்புமிக்கெழுமெல்லவந்தாளரோ
பொற்புமிக்குளபத்திரன்பொன்னனாள். (௩௦)

அலங்குமாரமோடங்கதமாதிபல்
கலன்கடாங்கிக்கலைஞர்குழாத்திடை
யிலங்குமாடமதுரைக்கிறைவரும்
புலங்கொளுவலர்போல்வந்துவைகினர். (௩க)

அந்தவேத்தவைதன்னிலருங்கலம்
வந்தவேய்த்தடந்தோளிசைமாதராண்
முந்தவேத்திசைபாடினண்முந்தையோர்
சிந்தைவேட்டொன்றுஞ்செப்பினரில்லையால். (௩உ)

வீணைதோளிடனேந்தியவெண்மலர்
வாணிபாடவிருக்கையின்வைகியே
யாணரம்பெறிந்தின்னிசையோர்ந்தெழீஇப்
பாணர்கோமகன்பன்னியும்பாடுமால். (௩௩)

---

(உகூ) கோட்டம்-கோணல். கடுமை-விரைவு.

(௩௦) கற்புகளிரண்டினுள்முன்னையது கல்வியறிவின்மேலது.

(௩க) இறைவர்-சோமசுந்தரக்கடவுள்.

(௩உ) எத்திசை என்றது-நால்வகைவருணவாழ்த்தினை; அதாவது, பிராமணர்முதலிய நால்வகைவருணப்பூதரைச், சிறுதேவபாணியாற்றுதித்து, மூவடிமுக்கால் வெண்பாவால், அவர்களணியையும், மாலையையும்,ஆடையையும், நிறத்தையுங்கொடியையுந் துதித்து அவர்களாலொன்று பெறுதல். இவற்றின் விரிவை மதிவாணனாரிசை நூலுட்காண்க.

(௩௩) வாணிபாடுஅஇருக்கையின்வைகிஎன்றது-கலைமகள்பாடும் அவ்வாசனத்தில் பத்திரன்மனைவியாருமிருந்தமையை. வாணி இருக்கையாவது - ஒன்பான்வகைப்பட்டவிருத்திகளுள், பதுமாசனம்; அது காலடிகளைமாற்றிக் குதிமேலாயிருத்தல். "பதுமமுகமுற் கட்டிதமேயொப்படி, இருக்கைசம்புடமயமுகம் சுவத்திகம், தனிப் புடமண்டிலமேகபாதம், உளப்படவொன்பதும், ஆருந்திரிதலில் லாதிருக்கை" எனவருஞ் சூத்திரத்தால் ஒன்பான் விருத்தியுங் காண்க. அகரச்சுட்டுப்பதுமாசனத்தின் உயர்ச்சிமேல்நின்றது.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

குடங்கைநீரும்பச்சிலையுமிடுவார்க்கிமையாக்குஞ்சரமும்
படங்கொள்பாயும்பூவணையுந்தருவாய்மதுரைப்பரமேட்டி
படங்கொள்பாயும்பூவணையுந்தருவாய்கையிற்படுதலைகொண்
டிடங்கடோறுமிரப்பாயென்றேசுவார்க்கென்பேசுவனே. (௩௪)

தேனுர்மொழியார்விழிவழியேசெல்லாதவர்க்கேவீடென்று
நானுவேதப்பொருளுரைத்தாய்நீயேமதுரைநம்பரனே
நானுவேதப்பொருளுரைத்தாய்நீயேபாதிநாரியுரு
வானுயென்றுபிறர்பழித்தாலடியேன்விடையேதறைவேனே. (௩௫)

வரதனுகியெவ்வுயிர்க்குமாயாவிருத்திவலியடக்கிச்
சரதமானவீட்டின்பந்தருவாய்மதுரைத்தனிமுதலே
சரதமானவீட்டின்பந்தருவாய்வீடுபெறுவார்போல்
விரதயோகநிலையடைந்தாயென்பார்க்கென்னுன்விளம்புவனே. ()

எழுசீரடியாசிரியவிருத்தம்.

கண்ணுதன்மதுரைப் பிரானையிவ்வாறு கருதியபாணியாற் கனிந்து, பண்ணுதல்பரிவட் டணைமுதலிசைநூல் பகர்முதற்றெழிலிருநான்கு, மெண்ணுறுவார்தல் வடித்திடன்முதலா மெட்டிசைக்கரணமும்பயப்ப, மண்ணவர்செவிக்கோ வானவர்செவிக்கும் வாக்கிணுவிளையமுதம். (௩எ)

---

(௩௪) குடங்கை - உள்ளங்கை. இமையாக்குஞ்சரமும் படங்கொள்பாயும் பூவணையும் என்றது, முறையே இந்திரனும், திருமாலும், பிரமனும், அடைந்தவாழ்வு சிவபெருமானைவழிபட்ட வழிபாட்டாலென்பது தோன்றநிற்றலால் குறிப்பெச்சம். ஏசுவார் என்றது - புறச்சமயிகளை.

(௩௬) வரதன் - அருட்கொடையையுடையவன். மாயாவிருத்திவலியடக்கி என்றது-தனுகரணபுவனபோகங்களாய்க்கன்மத்துக்கேற்ற சரீரங்களைக்கொடுத்தலாகிய மாயாமலத்தின் றெழிலை, அழுக்கைக்கொண்டே யழுக்கை யொழித்தல்போல மாயையைக்கொண்டேயொழித்தலை. விருத்தி-தொழில். சரதம்-நித்தியம். வீடுபெறுவார் சிவயோகிகள். யோகநிலையென்றது-சநகாதிகளுணரவுணர்த்திய சிவயோகநிலையை.

(௩எ) முதற்றெழிலிருநான்காவன-பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, கையூழ், விளையாட்டு, குறும்போக்கு என்பன. இசைக்கரணமெட்டாவன-வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், எள்ளல், பட்டடை என்பன. வாக்கினுள் - வார்த்தாள்.

இடையினேடேனைப் பிங்கலையியக்க மிகந்துமூலந்தொடுத்தி யக்கி, நடுவுறுதொழிலாற் பிரமரந்திராந்த நடைபெறவிசைக்குமு ள்ளாள, மிடறுவீங்காள்கண் ணிமைத்திடாளெயிறு வெளிப்படா ள் புருவமேனிமிராள், கொடிறது துடியாள் பாடலுமதுகேட் டனை வருங்குதுகுலமடைந்தார். (௩அ)

கன்னிநாடுடையான் கைதவனெனும்பேர்க் காரணந்தேற்று வானெனத்தா, னின்னிசையறிஞ ஞகியுமுன்போ லியம்புவாஞெ ருப்படுகின்றான், முன்னவனருளாற் றன்மனக்கோட்ட முரண் கெடப் பொதுமையாஞேக்கி, யின்னவடானே வென்றனளென் று னினையவாறனைவரு மொழிந்தார். (௩கூ)

கரியுரைமொழிந்த கைதவனிலங்கைக் கைதவப்பாடினிகழுத் திற், புரிகுழன்மாதை யிருத்தெனவிருத்தும் போதுமையிடங்கரந் திருந்த, வரியநாவலரீ தற்புதமீதற் புதமென வறைந்தவைகாண, விரிகதிர்மின்போன் மறைந்தனர்யாரும் வியந்தனர் பயந்தனன் வேந்தன். (௪0)

செங்கணேரழகராடலீதென்றேயாவருந்தெளிந்தனரேத்தி
யங்கணுயகர்தங்கருணையின்றிறனுமடியவரன்பையுந்தூக்கித்
தங்[illegible]ருவிபெருகவானந்தத்தனிப்பெருஞ்சலதியிலாழ்ந்தார்
வங்கமேல்வந்தாள்பிடர்மிசையிருந்தமாணிழைவிறலியைமன்னன்.

இறக்குவித்தவட்கு முந்தமுத்தார மெரிமணிக் கலன்றுகில் வரிசை, பெறக்கொடுத்தேனை யவட்குமுண்மகிழ்ச்சி பெறச்சிலவ ரிசைதந்தவையிற், சிறக்கவந்தொருங்கு வைகிவானிழிந்த தெய்வ தக்கோயில்புக்கிருந்த, வறக்கொடியிடஞ்சேர் பெரும்புலவோர்க்கு மருங்கலஞதிகணல்கா. (௪உ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மன்னவர்வலிகளெல்லாந்தெய்வத்தின்வலிமுன்னில்லா
வன்னமாதெய்வஞ்செய்யும்வலியெலாமரண்மூன்றட்ட
முன்னவன்வலிமுன்னில்லாவெனப்பலர்மொழிவதெல்லா
மின்னபாண்மகளிற்காணப்பட்டதென்றிறும்பூதெய்தா. (௪௩)

(௩அ) உள்ளாளம் என்றது-இச்செய்யுளிற்கூறிய இலக்கணத் தோடு கந்தருவராற்பாடப்படும்பாட்டு. (௩கூ) கைதவன்-தவங்கை. கூடினவன் - வஞ்சகன். (௪க) சலதி - கடல்.

(௪உ) தெய்வம் - என்றது - விஷ்ணுமுதலியதேவர்களை.

மின்னியல்சடையினானைவிடைகொடுவலஞ்செய்தேகி
யின்னியமியக்கஞ்செய்யவெழில்கொடன்கோயிலெய்தித்
தொன்னிதிபெற்றான்போலச்சுகுணபாண்டியனைப்பெற்று
மன்னியமகிழ்ச்சிவீங்கவைகினானிராசராசன். (௪௪)

இசைவாதுவென்றபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௫௩ - க்கு திருவிருத்தம் - உ௧௯௨.

---

நாற்பத்தைந்தாவது,

## பன்றிக்குட்டிக்குமுலைகொடுத்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

இருளைக்கந்தரத்ில்வைத்தோன்றன்னிடத்தென்றுமன்பின்
றெருளைத்தந்தவட்குமாறுந்தெரிவையையிசையால்வெல்ல
வருளைத்தந்தளித்தவண்ணமறைந்தனந்தாயாய்ப்பன்றிக்
குருளைக்குமுலைதந்தாவிகொடுத்தவாறெடுத்துச்சொல்வாம். (௧)

முறையென விமையோர்வேண்டமுளைத்தநஞ்சயின்றுசான்று
யுறையெனமிடற்றில்வைத்தவும்பரான்மதுரைக்காரந்
திறையெனவெறிநீர்வையைத்தெற்கதுகுருவிருந்த
துறையெனவுளதோர்செல்வத்தொன்மணிமாடமூதூர். (௨)

தருநாதனுதிவானோர்தங்குருவிருந்துநோற்பக்
குருநாதனெனப்பேர்பெற்றுக்கோதிலாவரந்தந்தேற்றில்
வருநாதன்சித்திரத்தேர்வலவனுருடனேகஞ்சத்
திருநாதன்பரவவைகியிருக்குமச்சிறந்தவூரில். (௩)

சுகலனென்றொருவேளாளனவன்மனைசுகலையென்பா
ளிகலருங்கற்பினாள்பன்னிருமகப்பெற்றாள்செல்வப்
புகலருஞ்செருக்காலன்னபுதல்வரைக்கடியாராகி
யகலருங்களிப்புமீதூரன்பினால்வளர்க்குநாளில். (௪)

---

(௧) கந்தரம்-கழுத்து. மாறுந்தெரிவை என்றது-ஈழப்பாடினியை. குறளை-விலங்கின்குட்டி. (௨) திறை-இறைப்பணம்.

(௩) தருநாதன் - இந்திரன். குரு - பிரகஸ்பதி. சித்திரத்தேர்வலவன் - சித்திரரதன் என்னுமோர் காந்தருவன். கஞ்சத்திரு - இலக்குமி.

தந்தையுந்தாயுமாயத்தறுகண்மிக்குடையராகி
மைந்தரும்வேடரோடுகூடிவெங்கானில்வந்து
வெந்தொழில்வேட்டஞ்செய்வார்வெயில்புகாப்புதற்கீழெய்தி
யைந்தவித்திருந்துநோற்குங்குரவனையங்குகண்டார். (ரு)

கைத்தலம்புடைத்துநக்குக்கல்லும்வெம்பரலும்வாரி
மெய்த்தவன்மெய்யிற்றூக்கவீசினார்வினையைவெல்லு
முத்தமன்வீக்கஞ்செய்தார்தவத்தினுக்குவரென்றுன்னிச்
சித்தநொந்தினையவஞ்சத்தீயரைச்செயிர்த்துநோக்கா. (சு)

தொழுந்தொழின்மறந்துவேடத்தொழிலுழந்துழல்வீர்நீர்மண்
ணுழுந்தொழிலுடையநீராற்பன்றியினுதரத்தெய்திக்
கொழுந்தழலனையவேனக்குருளையாய்த்தந்தைதாயை
யிழந்தலமுறுமினென்னுவிட்டனன்கடியசாபம். (எ)

பாவத்தையனையமைந்தர்பன்னிருபேருமஞ்சிச்
சாவத்தையேற்றெப்போதுதணிவதிச்சாபமென்ன
வாவத்தையகற்றுமீசனருட்கழனினைந்துவந்த
கோவத்தைமுனிவுசெய்தக்கடவுளர்குரவன்கூறும். (அ)

என்னையாளுடையகூடலேகநாயகனேயுங்கட்
கன்னையாய்முலைதந்தாவியளித்துமேலமைச்சராக்கிப்
பின்னையானந்தவீடுதருமெனப்பெண்ணோர்பாகன்
றன்னையாதரித்தோன்சொன்னான்பன்னிருதநயர்தாமும். (கூ)

தொன்மைசால்குருவிருந்ததுறையதன்புறத்தவான
பன்மைசால்கானவாழ்க்கைப்பன்றிகட்சரசாய்வைகுந்
தன்மைசாறனியேனத்தின்றன்பெடைவயிற்றிற்சென்று
வன்மைசால்குருளையாகிப்பிறந்தனர்வழக்கான்மன்னோ. (க0)

ஆனநாளொருநாளெல்லையரசருக்கரசனான
மீனவன்மதுரைநீங்கிமேற்றிசைக்காணநோக்கி

---

(ரு) தறுகண் - கொடுமை. குரவன் - பிரகஸ்பதி. ஐந்து என்றது - புலன்களின்மேனிற்றலாற் பண்பாகுபெயர். (சு) பரல்-பருக்கைக்கல். உவர்-இவர்கள். வீக்கம் - அழிவு.

(எ) தொழுந்தொழில் மறந்து என்றது-தாம்பிறந்தவேளாளக்குலத்திற்குரிய, பெரியோரை வழிபடலைக்கைவிட்டமையை. ஏனம்-பன்றி. அலமுறல்-வருந்தல். (அ) ஆவத்து - இடையூறு. கடவுளர் - தேவர். (க0) கானவாழ்க்கை - இது இடைப்பிறவரல்.

(கக) மானம் மா - பெரியமிருகம். அடவி - காடு. தண்டாநீங்காத.

மானமாவேட்டஞ்செய்வான்மத்தமாவுகைத்துத்தண்டாச்
சேனைதன்புறம்பேமொய்ப்பச்செல்கின்றான்செல்லுமெல்லை. (௧௧)

மாவழங்கிடங்கடேரவல்லதோல்வன்காலொற்றர்
பாவடிச்சுவடுபெற்றிப்படர்ந்துநாறழல்புலால்வாய்த்
தீவிழியுழுவையேனந்திரிமருப்பிரலைபுல்வாய்
மேவிடனறிந்துவல்லேவிரைந்துவந்தெதிரேசொன்னார். (௧௨)

மறத்துறைவேட்டமாக்கள்வல்லைபோயொடியெறிந்து
புறத்துவார்வலைகள்போக்கிநாயான்புறம்புபோர்ப்ப
நிறைத்துமாவொதுக்கிநீட்டும்படைஞராய்நிரைசூழ்நிற்ப
வறத்துறைமாறாக்கோலலானைமேல்கொண்டுநிற்ப. (௧௩)

சில்லரித்துடிகோடெங்குஞ்செவிடுறச்சிலையாநிற்பப்
பல்வகைப்பார்வைகாட்டிப்பயில்விளியிசையாநிற்பர்
வல்லியமிரலைமையன்மானினம்வெருளாநிற்ப
வில்லிறவலித்துவாங்கிமீளிவெங்கணைகோர்த்தார். (௧௪)

கலிநிலைத்துறை.

செறிந்தமான்முறிந்ததாள்சிதைந்தசென்னிசெம்புனற்
பறிந்தவாறுவெண்ணிணம்பரிந்துவீசுகையிரு
மறிந்தவேழுயர்ந்தவேழமாண்டவெண்குவல்லியம்
பிறிந்தவாவியோடும்வாய்பிளந்தவாய்விழுந்தவே. (௧௫)

தொட்டபுற்கிழங்குவாடைதொடவிரைந்துகண்ணியுட்
பட்டவும்பொறித்துவைத்தபார்வைவீழ்ந்தடுத்தவுங்
கட்டியிட்டவலைபிழைத்துஞமலிகௌவநின்றவு
மட்டிலாதவொட்டிநின்றுமள்ளர்வேலின்மாய்ந்தவே. (௧௬)

---

(௧௨) தோல்வன்கால்-தொடுதோல்மாட்டிய முருட்டுக்கால்கள். அழல் - கோபத்தின்மேல் நிற்றலால் உவமையாகுபெயர். திரிமருப்புஇரலை—திரிகியகொம்புகளையுடையகலைமான். புல்வாய்-மான்.

(௧௩) மறம் - கொலைத்தொழில். ஒடி எறிதல் - சூலைபோக்குதல். வார்வலை - வராலாகியவலை. அறம்-நூன்மேனிற்றலால்தானியாகுபெயர். (௧௪) சில்லரி-ஒலிக்கும் ஒருகட்பறை. சில்-ஒலி. பார்வைகாட்டல்-புலிபோலப் புலியையும் மான்போல மானையும் காட்டுதல். பயில்விளி-அம்மிருகங்கள் தம்முளழைக்குஞ் சைகைபோல விளித்தல். (௧௫) எழுயர்ந்தவேழம் - எழுமுழமுயர்ந்தயானை.

* பிரிந்த என்பது எதுகைநோக்கிப், பிறிந்த எனநின்றது.

(௧௬) தொட்ட - கல்லிய. புற்கிழங்கு என்றது - பார்வைவலைகளைப்போல மிருகங்களைப் படுக்குங் கருவியாய்நின்ற,ஓர்புல்லின் கிழங்குகள்.

பட்டமாவொழிந்துநின்றமறவிலங்குபல்சில
வட்டமாவளைந்துடுத்தவலையினுந்தியப்புறத்
தெட்டிநின்றகொலைஞர்மேலெதிர்ந்துமீளவெயில்வளைந்
தொட்டினுரைமலையுமாப்பொறிக்கணங்களொத்தவே. (௧௭)

வல்லியந்தொளைத்தகன்றுமான்றொளைத்தகன்றுவெங்
கல்லியங்குமெண்கினைத்தொளைத்தகன்றுகயவுவாய்
வெல்லிபந்தொளைத்துமள்ளர்விட்டவாளியிங்ஙனஞ்
சொல்லினுங்கடிந்துபோய்த்துணித்தமாவளப்பில். (௧௮)

மடுத்தவாளியிற்பிழைத்துவலையைமுட்டியப்புறத்
தடுத்தமானைவெளவிநாயலைத்துநின்றவாதிநா
ளுடுத்தபாசவலையினின்றுமுய்குவாரையொய்யெனத்
தடுத்தவாவிளைத்துநின்றதையலாரையொத்தவே. (௧௯)

மதியைநேர்வகிர்ந்துகௌவியனையவான்மருப்புவெங்
கதியவேழமீதுதாதுகாலுநீலமுகையினி
னுதியவேனுழைந்தசெம்புணூழில்வீழுமுதிரநீர்
முதியகானவரையின்மீதுமொய்த்ததீயையொத்தவே. (௨0)

மள்ளரோசைதுடியினோசைவயிரினோசைவாளிபோய்த்
தள்ளவீழ்விலங்கினோசைதப்பியோடுமானின்மேற்
றுள்ளுநாய்குரைக்குமோசைகானமூடுதொக்குவா
னுள்ளுலாயுடன்றொலிக்குமுருமினோசைபுரையுமால். (௨௧)

இன்னவேறுபல்விலங்கெலாமலைத்திலங்குவேன்
மன்னரேறுதென்னர்கோமகன்குடக்கினேகுவா
னன்னபோதொரேனமேனவரசிருக்குமடவிவாய்
முன்னரோடிவந்துநின்றுவந்தசெய்திமொழியுமால். (௨௨)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

எங்களுக்கரசேகேட்டியிங்குளவிருகமெல்லாந்
திங்களுக்கரசன்கொன்றுவருகின்றனென்றுசெப்ப

(௧௭) எயில் - மதில். ஒட்டல் - போர்செய்தல். (௧௮) கல்லென்றது - மலைகளை. கயவுவாய் - பெரியவாய். சொல் - முனிவர்களிடுஞ்சாபம். பாசம் - ஆணவமலம்.

(௨0) தாது - மகரந்தம். காலும் - சிந்தும். முகை - அரும்பு. நீலமுகையினில் நுதிய என்பது - பண்புபற்றிய வுவமையாதலால் விடம்பூசிய என்னும்பொருளதாய் நின்றது. நூழில்-யானை.

(௨௧) வயிர்-ஊதுகொம்பு. (௨௨) ஏன அரசு-பன்றிவேந்து.

வெங்களிப்படைந்துபன்றிவேந்தனுமடுபோராற்றச்
சங்கையுற்றெழுந்துபோவான்றன்னுயிர்ப்பெடையைநோக்கா. ()

இன்றுபாண்டியனைநேரிட்டிருஞ்சமராடிவென்று
வன்றிறல்வாகையோடுவெருகுவனேயோவென்றிப்
பொன்றுவனேயோநீயுன்புதல்வரைப்பாதுகாத்து
நன்றிவணிருத்தியென்னநங்கைப்பேடின்னகூறும். (உச)

ஆவியங்கேகவிந்தவாகமிங்கிருப்பதேயிப்
பாவியோமேனுளிந்தப்பறழினைவகுத்ததெய்வ
மாவமராடிவென்றுவருதியேல்வருவேனன்றி
நீவிளிந்திடத்துமாய்வேனிழலுக்குஞ்செயல்வேறுண்டோ. (உரு)

போதுகமெழுகவென்னுப்பொருக்கெனவெழுந்துநீலத்
தாதுறழேனப்பாட்டிதன்புடைதழுவிச்செல்லும்
பேதுறுபறழைநூக்கிப்பின்றொடர்ந்தணைந்துசெல்லக்
காதெயிற்றெறுழிவேந்தன்காலெனநடந்தானன்றே. (உசு)

பல்வகைச்சாதியுள்ளபன்றியின்கணங்களெல்லாம்
வெல்படைத்தருகட்சேனைவீரராய்முன்புசெல்லச்
செல்லெனத்தெழித்துச்செங்கட்டீயுகமானமென்னு
மல்லல்வாம்புரவிமேல்கொண்டெழுந்தனன்வராகவீரன். (உஎ)

முற்படுதூசியாகநடக்கின்றமுரட்காற்பன்றி
மற்படுசேனைநேரேவருகின்றமன்னர்மன்னன்
வெற்படுதடந்தோள்வன்றாள்வீரர்மேற்சீறிச்செல்லப்
பிற்படவொதுங்கிவீரர்பெய்தனரப்புமாரி. (உஅ)

சொரிந்தனசோரிவெள்ளஞ்சொரிந்தனவீழ்ந்தயாக்கை
சரிந்தனகுடர்களென்புதகர்ந்தனவழும்புமூளை
பரிந்தனசேனங்காகம்படர்ந்தனவுயிருமெய்யும்
பிரிந்தனவேனநின்றபிறைமருப்பேனவீரர். (உகூ)

(உச) நேரிட்டு - எதிர்த்து. (உரு) ஆவி என்றது—உயிர் போன்ற கணவனை. பறழ் - குட்டி. தெய்வம் என்றது—பழவினையை. வகுத்தது என்பதில் துவ்வீறுதொகுத்தல். (உசு) நீலத்தாதுறழ் எனப்பாட்டி என்றது-நீலோற்பலத்தின் மகரந்தத்தையொத்த கருநிறம்வாய்ந்தபெண் பன்றியை. பேதுறல்-மயங்கல். நூக்கல்-தள்ளல். காது எயிறு - வக்கிரதந்தம். எறுழி - பன்றி. கால் - வாயு.

(உஅ) தூசி-அணி. அம்பு-அப்பெனவலிந்துநின்றது.

(உகூ) படர்தல் - பிரிதல்.

பதைத்தனரெரியிற்சீறிப்பஞ்சவன்படைமேற்பாய்ந்து
சிதைத்தனர்சிலரைத்தள்ளிச்செம்புனல்வாயிற்சோர
வுதைத்தனர்சிலரைவீட்டியுரம்புதைபடக்கோடேன்றி
வதைத்தனர்சிலரைநேரேவகிர்ந்தனர்சிலரைமாதோ. (௩௦)

தாள்சிதைந்தாருஞ்சில்லோர்தலைசிதைந்தாருஞ்சில்லோர்
தோள்சிதைந்தாருஞ்சில்லோர்தொடைசிதைந்தாருஞ்சில்லோர்
வாள்சிதைந்தாருஞ்சில்லோர்வரையறுத்தலரோன்நீட்டு
நாள்சிதைந்தாருஞ்சில்லோர்நராதிபன்சேனைவீரர். (௩௧)

கண்டனர்கன்னிநாடுகாவலனமைச்சர்சீற்றங்
கொண்டனர்முசலநேமிகூற்றெனவீசியார்த்தார்
விண்டனர்மாண்டார்சேனைவீரருமனையவெல்லைப்
புண்டவழெயிற்றுவேங்கைப்புடைநின்றபேடைநோக்கா. (௩௨)

ஏவியசேனையெல்லாமிறந்தனவினிநாஞ்செய்ய
லாவதென்வாளாநாமுமழிவதிங்கென்னைத்தப்பிப்
போவதேகருமமென்றுபுகன்றதத்துணையைநோக்கிச்
சாவதையஞ்சாவேனத்தனியரசொன்றுசாற்றும். (௩௩)

நுண்ணறிவுடையராகிநூலொடுபழகினாலும்
பெண்ணறிவென்பதெல்லாம்பேதமைத்தாதலானுன்
கண்ணறிவுடைமைக்கேற்றகாரியமுரைத்தாய்மான
மெண்ணறிவுடையோர்க்கெல்லாமிழுக்குடைத்தன்றேவீதால். ()

தூங்கிருள்வறுவாய்ச்சிங்கமிரண்டுறைதுறையின்மாடோர்
லாங்கிருமருப்புக்கேழல்வந்துநீர்பருகிமீளும்
வீங்கிருளுடற்காரேனமொன்றுறைதுறையில்வீரந்
தாங்கிருமடங்கனீர்க்குத்தலைப்படவஞ்சுமன்றே. (௩௫)

அத்திடமரபின்வந்துபிறந்துளேனுதலாலே
கைத்திடுதாரான்வீரங்கவர்ந்திசைதிசையும்வானும்
வைத்திடவல்லேனன்றிமடிந்திடவல்லேனாகிற்
பொய்த்திடுமுடம்பேயன்றிப்புகழுடம்பழிவதுண்டோ. (௩௬)

கலிநிலைத்துறை.

நீநில்லெனத்தன்படைதன்னைநிறுத்திநீத்தென்
கானில்லெனவாழ்கருமாவின்கணங்களெல்லா

---

(௩௧) வாள்-கைமேல் நின்றதுவிடாத ஆகுபெயர்.
(௩௫) தூங்கல்-தங்கல். காரேனம் என்பதில்—கருமை பெரு மைமேல்நின்றது. (௩௬) திடம் - வீரம்.

மூனில்லுயிருண்டனமென்றினியோடல்கூடற்
கோனில்லெனவார்ப்பவன்போலக்கொதித்துநோந்தான். (௩௭)

நிலத்தைக்கிளைத்துப்பிலங்காட்டிநிமிர்ந்ததுள்வான்
றலத்தைப்புதைப்பத்தனியேனவரவுநோக்கி
வலத்தைப்புகழ்ந்தான்வியந்தான்சிலைவாங்கிவாளிக்
குலத்தைச்சொரிந்தான்பொருனைத்துறைக்கொற்கைவேந்தன். ()

குறித்துச்செழியன்விடுவாளியைக்கோலவேந்தன்
பறித்துச்சிலவாளியைவாய்கொடுபைம்புலென்னக்
கறித்துச்சிலவாளியைக்கால்கொடுதேய்த்துத்தேய்த்து
முறித்துச்சிலவாளியைவாலின்முறித்துநின்றான். (௩௯)

மானம்பொறாதுமதியின்வழிவந்தவேந்தன்
றானம்பொறாதுகவிழ்க்கும்புகர்த்தந்திகையி
லூனம்பொறாதமுசலங்கொடுத்தேறியுய்த்தா
னேனம்பொறாதார்த்திடியேற்றினெழுந்ததன்றே. (௪0)

தந்திப்பொருப்பைத்துணிக்கென்றுதழன்றுசீற்ற
முந்திக்கதலிக்கொழுந்தண்டெனவூசற்கையைச்
சிந்திப்பிறவாளெயிற்றேச்சிச்சிதைத்துவீட்ட
முந்திக்கடுந்தேர்மிசைப்பாய்ந்தனன்மூரித்தாரான். (௪௧)

திண்டேர்மிசைநின்றடனேமிதிரித்துவிட்டான்
கண்டேனவேந்தன்விலக்கிக்கடுங்காலிற்பாய்ந்து
தண்டேருடையத்தகர்த்தான்பரிதன்னிற்பாய்ந்து
வண்டேறுதாரான்விடவேலைவலந்திரித்தான். (௪௨)

சத்திப்படைமேல்விடுமுன்னர்த்தறுகண்வீரன்
பத்திச்சுடர்மாமணித்தார்ப்பரிமாவின்பின்போய்
மொத்திக்குடர்செம்புனல்சோரமுடுகிக்கோட்டாற்
குத்திச்செகுத்தான்பொறுத்தானலன்கூடல்வேந்தன். (௪௩)

மண்ணிற்குதித்துவலிகண்டுவராகவேந்தை
யெண்ணித்தலையிற்புடைத்தான்கையிருப்புத்தண்டாற்

---

(௩அ) பிலம்-பாதலம். பொருநை-தாம்பிரபர்ணி. கொற்கை-வையைத்துறை. (௩௯) கோலம்-பன்றி. புகர்-புள்ளி. முசலம்-இருப்புலக்கை. (௪௧) ஊசல்கை-ஊசல்போலாடுந்துதிக்கை. (௪௩) சத்திப்படை-வேற்படை. மணித்தார்-கிண்கிணிமாலை.

புண்ணிற்படுசெம்புனலாறுபுடவிபோர்ப்ப
விண்ணிற்புகுந்தான் சுடர்கீறிவிமானமேலால். (சச)

வேனிற்கிழவோனில்விளங்கிவியந்துவானோர்
தேனிற்பொழிபூமழைபெய்யநனைந்துதெய்வக்
கானத்தமுதுண்டிருகாதுகளித்துவீர
வானத்தமுதுண்டரமங்கையர்கொங்கைசேர்ந்தான். (சரு)

கலிவிருத்தம்.

பின்றுணையாயபெடைத்தனியேன
மென்றுணைமாயவிருப்பதுகற்போ
வென்றிலனேனும்விசும்படைவேனு
லென்றிகல்வேந்தையெதிர்த்ததுருத்தே. (சசு)

விறனவில்பேட்டைவிளிப்பதுவேந்தற்
கறனலவென்றவனுள்வினைமள்ளர்க்
கிறைமகனனசருச்சரனென்றோர்
மறமகனேர்ந்தமராடவளைந்தான். (சஎ)

நனிபொழுதாடமராடினனஞ்சிற்
கனிசினவன்பெடைகாய்சினவேடத்
தனிமகனைத்தரைவீட்டினதாற்ற
லினியிலையென்னவிளைத்துயிர்சோர்வான். (சஅ)

இரும்புசெய்தண்டினையிம்மெனவோச்சிப்
பொரும்படைசென்னிபுடைத்துவிளிந்தான்
விருந்தினராயிருவோரும்விமானத்
தருந்திறல்வானமடைந்தனரன்றே. (சகூ)

வன்றிறன்மன்னவர்மன்னவனுந்தன்
பொன்றிகழ்மாநகர்புக்கனனிப்பாற்
பன்றிவிழுந்துபருப்பதமாகா
நின்றதுபன்றிநெடுங்கிரியென்ன. (ரு0)

---

(சச) விண் - வீரசுவர்க்கம். சுடர்கீறி என்றது - சூரியமண்டலத்தின் வழியேசென்று திவ்யதேகம் பெறுதலை.

(சரு) வேனிற்கிழவன் - மன்மதன். (சஎ) விறல் - வெற்றி. விளித்தல்-மாய்த்தல். ஆள்வினை மள்ளர்க்கிறைமகன் என்றது-வேட்டமாக்களின் தலைவனுகிய சருச்சரனை. (ரு0) பருப்பதம் - மலை. பன்றிநெடுங்கிரி-வராகமலை.

அன்றுதொடுத்ததனுக்கதுபேரா
யின்றும்வழங்குவதிம்பரிலந்தக்
குன்றிலருந்தவர்விஞ்சையர்கோபம்
வென்றவரெண்ணிலர்வீடுறநோற்பார். (௫௧)

கலிநிலைத்துறை.

என்றுகூறியவருந்தமிழ்க்கிறைவனைநோக்கித்
துன்றுமாதவரறிவிலாச்சூகரவுருவக்
குன்றின்மீதருந்தவரெலாங்கோதறநோற்று
நின்றகாரணம்யாதெனக்குறுமுனிநிகழ்த்தும். (௫௨)

வேனில்வேளெனவிளங்குவிச்சாதரனென்னுந்
தானயாழ்மகன்புலத்தியன்றவத்தினுக்கிடையூ
றானபாண்செயப்பன்றியாச்சபித்தனனறவோ
னேனமாகுவோனுய்வதென்றெனக்கெனமுனிவன். (௫௩)

மன்னர்மன்னனுந்தென்னவன்வந்துநின்வனத்திற்
றுன்னுபல்வகைவிலங்கெலாந்தொலைத்துனைமாய்க்கும்
பின்னரிவ்வுருப்பெறுகெனப்பணித்தனனியக்க
னன்னவாறுவ ÷ திறந்துபின்பழவுருவடைந்தான். (௫௪)

ஆயபுண்ணியவிஞ்சையனுகமாய்க்கிடந்த
தூயநீரதாலவ்வரைமீமிசைத்துறந்த
பாயகேள்வியரிறைகொளப்பட்டதெவ்வுயிர்க்கு
நாயனூர்மதுரேசருநயந்தவணுறைவார். (௫௫)

என்றகத்தியன்விடைகொடுத்தியம்பினனிப்பாற்
பன்றியேற்றையும்பாட்டியும்பைம்புனத்திட்டுச்
சென்றவிந்தபின்பன்னிருகுருளையுந்திசைப்புற்
றன்றலக்கணுழந்தமையாரளந்துரைப்பார். (௫௬)

ஓடுகின்றனதெருமரலுறுவனநிழலைத்
தேடுகின்றனதாய்முலைத்தீயபால்வேட்டு
வாடுகின்றனதாகவெம்பசிநனிவருத்த
வீடுகின்றனவெயில்சுடவெதும்புகின்றனவால். (௫௭)

---

(௫௨) அருந்தமிழ்க்கிறைவன் - அகத்தியமுநிவன்.

(௫௪) பணித்தல் - அருளிச்செய்தல். (௫௫) இறைகொளல்- தங்கல். (௫௬) ஏறு-ஐகாரச்சாரியைபெற்று இடையில் வல்லொற்றுவிரிந்து ஏற்றையெனநின்றது. (௫௭) தெருமரல் - சுழலல்.

இன்னவாறிவையணங்குறுமெல்லைவேல்வல்ல
தென்னராகியதேவர்கடேவரங்கயற்கண்
மின்னனாளொடுமின்னவிர்விமானமீதேறி
யன்னகானகத்திச்சையாலாடல்செய்திருந்தார். (௫அ)

ஏனமென்பறழுருகணோய்க்கிரங்கினரிச்சை
யானவன்புதந்தத்துயரகற்றுவானின்ற
மானவன்புடைப்பேடையின்வடிவெடுத்தயருங்
கானவன்பறழ்கலங்கணர்கலங்கநேர்வந்தார். (௫௯)

கிட்டுகின்றதந்தாயெதிர்குட்டியுங்கிட்டி
முட்டுகின்றனமொய்ப்பனமுதுகுறத்தாவி
யெட்டுகின்றனகால்விசைத்தெறிவனநிலத்தை
வெட்டுகின்றனகுதிப்பனவோடுவமீள்வ. (௬0)

ஏனமின்னமுங்காண்பரிதாகியவேன
மானமெய்ம்மயிர்முகிழ்த்திடத்தழுவிமோந்தருளின்
மானமென்முலையருத்திமாவலனும்வன்றிறனு
ஞானமும்பெருந்தகையுநற்குணங்களுநல்கா. (௬௧)

துங்கமாமுகமொன்றுமேசூகரமுகமா
வங்கம்யாவையுமானிடயாக்கையவாக்கிக்
கங்கைநாயகன்கடவுளர்நாயகன்கயற்கண்
மங்கைநாயகன்கருணையாந்திருவுருமறைந்தான். (௬௨)

இம்மையிப்பவத்தன்னையாயினிவருபவமுஞ்
செம்மைசெய்தசேதனத்தையுஞ்சேதனஞ்செய்தா
ரெம்மையெப்பவத்தாயினுமெனைப்பலவுயிர்க்கு
மம்மையப்பராய்க்காப்பவரவரலாலெவரே. (௬௩)

பன்றிக்குட்டிக்குமுலைகொடுத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௫௪ - க்கு திருவிருத்தம் - ௨௨௫௫.

---

(௫அ) இச்சை என்றது. இச்சாசத்தியை. (௫௯) அன்புதந்து- அன்புகூர்ந்து. மானம் - மிகுதி. அணர்-பசித்துன்பம். (௬௧) ஏனம் இரண்டனுள் முன்னையது, திருமாலாகிய பன்றியை. பின்னது சோமசுந்தரக்கடவுளருளுருவாகியபன்றியை. (௬௨) சூகரம்-பன்றி.

(௬௩) செம்மை - புனிதம். சேதனம் - அறிவுள்ளது. அசேதனம் - பகுத்தறிவில்லாதது.

சிவமயம்.

நாற்பத்தாராவது,

# பன்றிக்குட்டிகளைமந்திரிகளாக்கியபடலம்.

கலிநிலைத்துறை.

தந்தைதாயிழந்தலமருங்குருளையைத்தாயாய்
வந்துநாயகன்முலைகொடுத்தருளியவகையீ
தந்தவாறிருமைந்தருமந்திரராகி
யெந்தையார்சிவபுரம்புகுந்திருந்தவாறிசைப்பாம். (க)

ஆதிநாயகன்றிருவுருமறைந்தபினனைய
கோதிலாறிரண்டேனமாக்குமாருங்காலைச்
சோதியாறிரண்டருக்கர்போற்றோன்றியப்பொருப்பி
லோதியாய்ந்தபல்கலைஞராயொருங்குவீற்றிருந்தார். (உ)

அனையராயவர்வைகுநாளறைபுனற்கூடற்
புனிதநாயகனருட்டிறமுயிர்க்கெலாம்பொதுவா
யினியவாவனவென்பதையாவருந்தேற
வனிதைபான்மொழிமங்கைதன்மணாளனைவினவும். (ங)

வெவ்விலங்கினும்வெய்யவாயசேதனவிலங்கா
மிவ்விலங்கெயிற்றேனமென்குருளைகட்கிரங்கிக்
கைவ்விலங்கினையெய்தநீகருணையாய்முலைதந்
திவ்விலங்கறிவகற்றியதியாதெனவிறைவன். (ச)

அகிலவேதமுமாகமபேதமுநம்மைச்
சகலசீவதயாபரனென்றுரைசால்பா
விகலில்சேதனமசேதனமாகியவிரண்டும்
புகலில்வேறலவெமக்கவைபொதுமையவதனால். (ரு)

தாயிழந்துவெம்பசித்தழலகஞ்சுடத்தழன்று
காயுமாதபம்புறஞ்சுடக்கானிடைக்கிடந்து

(க) தந்தை என்றது-முற்பிறப்பில் ரிங்கியென்னும் பெயரையுடைய யக்ஷனாகிய பன்றியரசை. (உ) அருக்கர் - சூரியர்.

(ங) உயிர்க்கெலாம் என்றது-பிரமன்முதல் பிபீலிகாந்தங் காறுமுள்ள ஆன்மகோடிகளை. (ச) கைவிலங்கு-யானை. ஆய்-தாய்.

(ரு) அகிலம்-அழிவில்லாதது. ஆகமபேதமென்றது, இருபத்தெட்டு சிவாகமங்களை. (சு) ஆதபம்-வெயில். (எ) களைவில்பாசம் என்றது-ஆன்மபோதத்தோடு கலந்துநின்ற ஆணவமலத்தை.

தீயுமேனமென்குருளைகடெருமரவிரங்கி
யாயுமாமுலையளித்துயிரளித்தனமதனால். (சு)

அளவிலாற்றலுந்திறனுநல்லரும்பெறற்கல்வி
விளைவுஞானமுங்கிடைத்தனர்மீனவற்கினிமேல்
வளைவிலாதகோலமைச்சராய்வளம்பலபெருக்கிக்
களைவில்பாசநீத்தெம்பெருங்கணத்தவராவார். (எ)

என்றுநாயகனுயகிக்கிறைகொடுத்தியம்பி
யன்றுமீனவன்கனவில்வந்தரசகேள்பன்றிக்
குன்றிலேனமாமுகத்தராய்ப்பன்னிருகுமரர்
வென்றிவீரராய்வைகுநர்மிக்கறிவுடையார். (அ)

அவரைநின்கடைக்கமைச்சராக்கோடியென்றளவில்
சிவபரஞ்சுடரருள்செயச்செழியர்கோவேந்தன்
கவலருங்களிப்புடையனுய்க்கணமலர்ந்தெழுமான்
றவழ்நெடுந்திரைக்கருங்கடறத்திநீந்தெல்லை. (கூ)

மாண்டகேள்விசான்மந்திரர்க்குணர்த்தியம்மலைமேற்
காண்டகேனமாவீரரைக்கொணர்கெனக்கருணை
பூண்டகாவலனமைச்சரும்போயவர்க்கண்டு
வேண்டவீரருமீண்டினூர்மீனவன்றிருமுன். (கo)

வந்திறைஞ்சியவராகமாமைந்தரைநேர்கண்
டந்தமில்களிப்படைந்துவேந்தமைச்சியற்கிழமை
தந்துவேறுபல்வரிசையுந்தக்கவாநல்கிக்
கந்துசீறியகடகரிக்கைதவன்பின்னர். (கக)

பழையமந்திரக்கிழார்மடப்பாவைபோல்வாரை
விழவுசால்கடிமங்கலம்விதியினுற்புணர்த்தி
யழகிதாமெனநடத்தினனையரும்வீரக்
கழலினுற்கொருகவயமுங்கண்ணுமாய்நடப்பார். (கஉ)

கலிநிலைத்துறை.

உடம்பாறிரண்டிற்குயிரொன்றெனவொன்றியைவாய்
விடம்பாயரவம்விழுங்கும்மிரையொத்துநெஞ்சந்

---

(கூ) கடை-திருவாயில். எல்லை என்றது-விடியற்காலையை.

(கக) கந்து-கட்டுத்தறி. (கஉ) கவயம்-கவசம்.

(கங) ஐவாய்-ஐந்துதலை. திடம் - உறுதி. கல்வியிடம்பாடு. நல்கும்பயன் என்றது-இம்மையில் ஒருவற்குகற்றகல்விபுகழையும், பொருளையும் பெருக்கி மகிழ்வுறுத்தி, மறுமையிலும் உயிர்சென்றுழிச்சென்று பயன்தந்து மகிழ்வுறுத்தலை.

திடம்பாடுகொள்ளவினைவாங்கிச்செழியன்கல்வி
யிடம்பாடுநல்கும்பயன்போன்மகிழ்வெய்தநின்றார். (௧௩)

நல்லாவின்பாலினறுந்தேன்கலந்தென்னப்பன்னூல்
வல்லாருமாகிமதிநுட்பருமாகிச்சோர்வில்
சொல்லாலடையார்மனமுங்களிதூங்கச்சொல்லிப்
பல்லார்பிறர்சொற்பயனுய்ந்துகவரவல்லார். (௧௪)

பழையேமிறையூழ்கொளப்பட்டமென்றேமாப்பெய்தா
ருழையேவல்செய்யுஞ்சிறார்போலவொதுங்கிவேந்தன்
விழைவேதததனைவிடம்போலவெறுத்துவெஃகா
ரழல்போலணுகாரகலார்நிழலன்னநீரார். (௧௫)

மறுக்குஞ்செயனீத்துநடக்கையின்வையத்தோரை
யொறுக்கும்பொருளும்பணிகேட்கையினுன்னலாரைச்
செறுக்கும்பொருளுங்கவரார்விளைசெல்வமாக்க
ளிறுக்கும்பொருளேயிறைவற்கிவரீட்டுஞ்செல்வம். (௧௬)

மறத்தானவேலான்மனக்கொள்கைதந்நெஞ்சுள்வான
நிறத்தாடிநீழலெனத்தோற்றநிறுத்துமற்ற

---

(௧௪) அடையார்மனமுங் களிதூங்கச்சொல்லி என்றது-வழுவின்மை, சுருங்குதல், விளங்குதல், இனிதாதல், விழுப்பயன் தருதல், என்னுங்குணங்களொருங்கமைந்து பகைவரும் நட்பினை விரும்பும்வண்ணம் சொல்லும் சொல்லாற்றலையுணர்த்திநின்றது. பல்லார் என்றது-பரிசனங்களை. பிறர் என்றது-பகைவர்முதலாயினோரை. கவரல்-ஈண்டு, உண்மையுணர்தலின்மேலது.

(௧௫) ஊழ்கொளல்-நன்குமதிக்கப்படல். ஏமாப்பு-இறுமாப்பு. விழைவு-விருப்பம். ஈண்டு அரசன்விரும்பும் பொருண்மேல் நின்றது. வெஃகல்-விரும்பல்.

(௧௬) மறுக்குஞ்செயல் நீத்துநடத்தல் - தீக்கொளுத்தல்,நஞ்சிடுதல், திருடுதல், ஆறலைத்தல், சூறையாடல், பிறர்மனைநயத்தல் முதலியதீச்செயல்களைவிலக்கி அரசன்கோற்கீழடங்கியொழுகுதல். ஒறுக்கும்பொருளுங்கவரார் என்றது-தங்கோற் கீழ்வாழுங்குடிகள் குற்றஞ்செய்யின் அவரைத்தூயராக்குதற்பொருட்டுத்துன்பஞ்செய்தல், பொருட்கோடல், கொல்லுதல் என்னும்மூவகை ஒறுத்தலில் ஒரோவழிதுன்பஞ்செய்யும் ஒறுப்பொன்றேயன்றி வினைப்பொருள்கோடல்முதலியவின்மை. ஒன்னாரைச் செறுக்கும்பொருளுங் கவரார் என்றது-பகைவர்பால்திறைகோடலேயன்றி அவர்கருவூலப்பொருள்முதலியகவராமையை. விளைசெல்வம்-விளைதல்முதலியவற்றால்வரும் செல்வம். (௧௭) வானநிறத்தாடி என்றது - ஆகாயத்தைப்போலப் புகைநிறம்வாய்ந்த கண்ணாடியை. நிறுத்து என்றது-அரசனது மனக்கொள்கையை, இங்கிதம், வடிவு, தொழில்,சொல் முதலியவற்றாலளக்காது மனத்தொடு கண்ணுமுகமுங்கலந்தன ஆதலால் அவற்றாலளந்தமையை. இழைத்தல்-செய்தல்.

தறத்தாறெனிலாற்றுவரன்றெனிலாக்கமாவி
யிறத்தான்வரினுமனத்தானுமிழைக்கவெண்ணு. (கஎ)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

இன்னவாறெழுகும் பன்னிருவோரு மீகையுந்தருமமும் புகழுந், தென்னர்கோமகற்கு வைகலும்பெருகத் திசையெலாம்விசய முண்டாக்கிப், பன்னகாபரணன் சிவபுரமடைந்து பரன்கணநாத ருட்கலந்து, மன்னிவீற்றிருந்தார் மன்னர்மன்னவனும் வான்பதம டைந்துவீற்றிருந்தான். (கஅ)

பன்றிக்குட்டிகளைமந்திரிகளாக்கியபடலம் முற்றிற்று.

ஆ படலம் ருரு - க்கு - திருவிருத்தம் - உஉஎங.

---

நாற்பத்தேழாவது,

## கரிக்குருவிக்கு உபதேசஞ்செய்தபடலம்.

கொச்சகக்கலிப்பா.

வரிக்குருகிப்பத்திரற்குப்பலகையிட்டமணிகண்ட
னரிக்குருளைவடிவானவடல்வீரர்க்கரசன்பாற்
பரிக்குமமைச்சியலளித்தபரிசுரைத்தாம்பசுபதியாற்
கரிக்குருவிகுருமொழிகேட்டருளடைந்தகதைபகர்வாம். (க)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மன்னவனிராசராசன்வானவர்க்கரசனுன
பின்னவன்குமரனுனபெருவலிமடங்கலன்னுன்
றுன்னலரடுபோர்சாய்க்குஞ்சுகுணபாண்டியனீர்ஞால
மின்னறீர்த்தறக்கோலோச்சியீர்ங்குடைநிழற்றுநாளில். (உ)

ஆற்றல்சாலொருவன்மேனுளாற்றவுமறனேயாற்றி
மாற்றமில்சிறிதுபாவஞ்செய்ததன்வலத்தால்வந்து
தேற்றமில்கயவாயாகிச்செனித்தலாற்காகமாதி
கூற்றெனவூற்றஞ்செய்யக்குருதிசோர்தலையதாகி. (ங)

---

(க) வரி – இசைப்பாட்டு. அரி-பன்றி. (உ) வானவர்க்கரசனு னபின்-இந்திரபதமடைந்தபின். (ங)மேனுள்-முற்பிறப்பு. கயவாய்-கரிக்குருவி.

புட்கெலாமெளிதாயூறுபாடஞ்சிப்புறத்துள்வைகி
யுட்கிநீள்வனத்துட்போகிவழிமருங்கொருசார்நிற்குங்
கட்கவிழ்ந்தொழுகப்பூத்தகவிழிணர்மரமேல்வைகி
வெட்கமீதூரச்சாம்பிவெய்துயிர்த்திருக்குமெல்லை. (௪)

விடையவனீறுபூசுமெய்யவன்பூண்டகண்டித்
தொடையவன்புறம்புமுள்ளுந்தூயவன்குடையுங்கையி
லுடையவன்றருமதீர்த்தயாத்திரையொழுக்கம்பூண்ட
நடையவனொருவனந்தநறுந்தருநிழலிற்சார்ந்தான். (௫)

இருந்தவன்சிலரைநோக்கியியம்புவானெவர்க்கும்பேறு
தருந்தலந்தீர்த்தமூர்த்தித்தன்மையிற்சிறந்தவன்பு
வருந்தமிழ்மதுரைபொற்றாமரைத்தடஞ்சுந்தரேசப்
பெருந்தகையென்றுசான்றோர்பேசுவராதலாலே. (௬)

ஓரிடத்தினையமூன்றுவிழுப்பமுமுள்ளதாகப்
பாரிடத்தில்லையேனைப்பதியிடத்தொன்றேயென்றுஞ்
சீருடைத்தாகுங்கூடற்செழுநகரிடத்தமூன்றும்
பேருடைத்தாகுமென்றாற்பிறிதொருபதியாதென்றான். (௭)

இம்மதுரேசன்சேவித்தேத்துவோர்க்கெளியனாகிக்
கைம்மலர்நெல்லிபோலக்கருதியவரங்களெல்லா
மிம்மையினுடனேநல்குமேனையதலத்துவானோ
ரம்மையினன்றிநல்காராதலாலதிகனென்றான். (௮)

மற்றதுகேட்டுக்கொம்பர்வைகியகயவாய்ஞானம்
பெற்றதுபறவையாகிப்பிறந்ததும்பிறவுந்தேற்ற
முற்றதுநாமிச்சன்மமொழிப்பதற்கறவோனிங்ஙன்
சொற்றதேயுறுதியென்றுதுணிவுகொண்டெழுந்ததன்றே. (௯)

ஆய்மலர்க்கானநீங்கியாடகமாடக்கூடற்
போய்மலர்க்கனகஞ்சப்புண்ணியப்புனறோய்ந்தாம்பல்
வாய்மலர்க்கயலுண்கண்ணுண்மணாளனைவலஞ்செய்தன்பிற்
றோய்மலர்க்கழலினையகத்தினுற்றெழுதர்ச்சித்தே. (௧0)

(௪) புறம் - நகர்ப்புறம். உட்கல் - வருந்தல். கவிழிணர்மரம் - மாமரம்; "கீழிணர்நின்ற மேற்பகைமாவின்" என்றார்பிறர். சாம்பி - சோர்ந்து. (௫) கடைப்பிடி - ஈறுதொக்குக்கடைஎனநின்றது.

(௭) சீர் - திருவிழாச்சிறப்பு. விழுப்பம் - மேன்மை.

(௧0) அகத்தினுற்றெழுது என்றது - மானதபூசையை.

இன்னணமூன்றுவைகல்கழிந்தபினெம்பிராட்டி
தன்னமர்காதலானைத்தாழ்ந்தெதிர்நோக்கிஐய
வென்னையிக்கயவாய்செய்யுஞ்செயலிதன்வரவியாதென்ன
முன்னவனதன்றன்செய்திவரவெலாமுறையாற்கூறு. (௧௧)

பத்திமைநியமம்பூண்டபறவைமேற்கருணைநாட்டம்
வைத்திமையாதமுக்கண் மறைமுதலொருசேய்க்கன்று
நித்தியநிலைமைநல்கிநேர்ந்தவெங்கூற்றைக்காய்ந்த
சத்தியஞானமித்திஞ்சயத்தினையுபதேசித்தான். (௧௨)

கலிவிருத்தம்.

உவமையற்றவனுரைத்தமந்திரஞ்
செவிமடுத்தலுஞ்சிற்றுணர்ச்சிபோய்ப்
பவமகற்றிடப்படுகரிக்குரீஇ
கவலைவிட்டரன்கழல்வழுத்துமால். (௧௩)

எண்ணிலாவுயிர்க்கிறைவபோற்றிவான்
றண்ணிலாமதிச்சடிலபோற்றியென்
புண்ணியப்பயன்போற்றியங்கயற்
கண்ணிநாதநின்கருணைபோற்றியால். (௧௪)

தெளிதலின்றியேசெய்ததீமையால்
விளியுமென்னையுமாளல்வேண்டுமோ
வெளியரெங்குளாரென்றுதேர்ந்துதேர்ந்
தளியையாவதுன்னருளின்வண்ணமே. (௧௫)

உம்மைநல்லறமுடையநீர்மையா
லிம்மையிம்மனுவியம்பினுயிது
வம்மைநன்னெறிக்கேதுவாதலான்
மும்மையுந்நலமுடையமொய்ம்பினேன். (௧௬)

ஆயினும்மெனக்கையவோர்குறை
தீயபுள்ளெலாமூறுசெய்தெனைக்
காயுமானமுங்கழியக்கண்டபே
ரேயெனும்படிக்கெளியனுயினேன். (௧௭)

---

(௧௨) சேய் - மார்க்கண்டன். மித்திஞ்சயம்-மரணத்தைத்தவிர்க்கும், மூன்றெழுத்தாலாகியதோர் வேதமந்திரம். (௧௩) பவம்-மறுபிறப்பு. சடிலம் - சடை. (௧௬) உம்மை - முற்பிறப்பு. அம்மை-மறுமை. மும்மை என்றது - உம்மை, இம்மை, அம்மைகளை. மொய்ம்பு-வலி. (௧௭) ஏ - இழிவுக்குறிப்பையுணர்த்துமோரிடைச்சொல்.

என்னவக்குரீ இயம்பவெம்பிரா
னன்னபுட்கெலாம்வலியையாகெனப்
பின்னுமக்குரீ இதாழ்ந்துபேதையேற்
கின்னுமோர்வரந்தருதியென்றதால். (௧அ)

வலியையென்பதென்மரபினுக்கெலாம்
பொலியவேண்டுமெப்போதுநீசொன
வொலியமந்திரமோதியோதிநாங்
கலியைவெல்லவுங்கருணைசெய்கென. (௧௯)

ஆவதாகவென்றமரநாயகன்
மூவெழுத்தினுன்முடிந்தவம்மனு
தாவிறெய்வதமிருடிசந்தமோ
டோடிலோசைமூன்ருெடுதெருட்டினுன். (௨0)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

குருமொழிபயின்றுமுள்வாய்க்குருவிதன்குலனுந்தன்போ
லருமறைமுதல்வனீந்தவாற்றலாற்பறவைக்கெல்லாம்
பெருமைசால்வலியானென்னும்பெயரவாயுலகின்மன்னக்
கருமணிகண்டன்செம்பொற்கனைகழலடிசேர்ந்தன்றே. (௨௧)

இக்கரிக்குருவிதானேற்றெய்தியவரத்தைத்தன்போ
லொக்கலுமெளிதாவெய்தப்பெற்றதாலுலகின்மேன்மை
தக்கவனொருவன்வாழத்தன்கிளைவாழ்வதென்ன
மிக்கவரெடுத்துக்கூறும்பழமொழிவிளங்கிற்றன்றே. (௨௨)

மேற்படி - வேறு.

ஈசனடிக்கன்பில்லார்போலெளியாரில்லையாவர்க்கு
மீசனடிக்கன்புடையார்போல்வலியாரில்லையாவர்க்கு
மீசனடிக்கன்பின்மையினுலெளிதாய்த்திரிந்தவிக்கயவா
யீசனடிக்கன்புடைமையினுல்வலிதாயிற்றேயெவ்வுயிர்க்கும். (௨௩)

கரிக்குருவிக்கு உபதேசஞ்செய்தபடலம் முற்றிற்று.

ஆகூ படலம் ௫௯ - க்கு - திருவிருத்தம்-௨௨௯௯.

---

(௨0) மூவெழுத்தினுன் முடிந்தவம் மநு என்றது-திரியம்பக மநுவை. சந்தஸ்-காயத்திரிசந்தஸ். ஓசைமூன்ருவன-அநுதாத்தம், உதாத்தம், ஸ்வரிதங்கள். (௨௧) முள்வாய் - முள்போலக்கூரிய வாய் என நிற்றலால் பண்புவமத்தொகை. (௨௨) ஒக்கல் - தன்சாதிப்பறவைகள்.

சிவமயம்.

நாற்பத்தேட்டாவது,

## நாரைக்குமுத்திகொடுத்தபடலம்.

கலிவிருத்தம்.

அத்திதந்தவிமானமழகியார்
பத்திதந்தபறவைக்குமந்திர
சித்திதந்ததிறனிதுநாரைக்கு
முத்திதந்தகருணைமொழிகுவாம். (௧)

தேக்குநீர்வையைநாட்டொருதென்புவத்
தாக்குமாடவைப்பொன்றுளதவ்வயில்
வீக்கும்யாழ்செயும்வண்டுக்குவீழ்நற
வாக்குதாமரைவாவியொன்றுள்ளதால். (௨)

ஆழமிக்ககயந்தலையத்தலை
வாழுமீனமனைத்தையும்வாய்ப்பெய்து
சூழநந்துமுத்தீனுந்துறைக்கணே
தாழ்வதோர்செய்யதாண்மடநாரையே. (௩)

சிறியநாண்மழையின்றியச்சேபிதழ்
வெறியதாமரையோடைவியன்கரை
யிறைகொணுரையிருவினைப்பௌவமும்
வறியதாகிவறப்பவறந்ததால். (௪)

நுரைசெறித்தனநோன்சிறைநாரையு
மிரைவிரும்பியவாவியிகந்தொரீஇ
விரையவந்தொருகானிடைவீழ்ந்ததாற்
புரையிலோர்க்கிடனுகுமப்பொங்கர்வாய். (௫)

முத்தரானமுனிவர்குழாத்தொடுஞ்
சுத்தவானந்தவாரியுட்டோய்ந்துதன்
சித்தமாசுகழீஇச்சிவமாகிய
சத்தியத்தவமாமுனிதங்குமால். (௬)

---

(௨) மாடவைப்பு - நகரம். (௩) கயந்தலை - தடாகம். நந்து- சங்கு. தாழ்தல் - வசித்தல். (௫) புரையிலோர் என்றது-தவசிகளை. புரை-குற்றம். (௬) சுத்தவானந்தவாரி என்றது - பரஞானத்தால் வந்த சிவானந்தவெள்ளத்தை.

கூப்பிடெல்லைகுணித்துச்சதுரமாய்
யாப்பமைந்துசுற்றெங்கும்படித்துறைக்
கோப்பமைந்துகுளிர்சந்தியாமடங்
காப்பமைந்தோர்கயந்தலையுள்ளதால். (எ)

விரைசெய்சண்பகம்பாதிரிவேங்கைதே
னிறைசெய்வஞ்சியிலஞ்சிகுராமரா
நிறைசெய்கிஞ்சுகநீண்மருதாதியா
வுரைசெய்பன்மரமும்புறத்துள்ளவால். (அ)

அந்தவாவியின்பேரதோதீர்த்தமென்
றிந்தஞாலமியம்புவதாலிரை
யுந்தவாவுகொடுக்கவெழுந்துமுன்
வந்தநாரையதன்கரைவைகுமால். (கூ)

ஆய்ந்தமாதவரப்புனிதத்தடந்
தோய்ந்துதோய்ந்தங்கெழுந்தொறுந்தோட்புறஞ்
சாய்ந்தவார்சடைக்கற்றையிற்றத்துமீன்
பாய்ந்துபாய்ந்துபுரள்வனபார்த்தரோ. (கO)

ஈண்டையித்தவத்தோர்திருமேனியைத்
தீண்டவெத்தவஞ்செய்தனவேகொலென்
றூண்டைமீனமக்காகாவெனவிரை
வேண்டுநாரைவெறுத்தங்கிருந்ததால். (கக)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தன்னிகர்தவத்தோர்யாருந்தடம்படிந்தேறிநித்த
மன்னியகருமமுற்றிச்சந்தியாமடத்தில்வைகி
மின்னியமகுடஞ்சூடிவேந்தனுயுலகங்காத்த
பொன்னியற்சடையான்கூடற்புராணநூலோதுகின்றார். (கஉ)

அண்ணலெம்பெருமான்செய்தவருள்விளையாட்டுமாதிப்
பண்ணவன்சிறப்புங்கூடற்பழம்பதிச்சிறப்புந்தீர்த்தத்
தெண்ணறுஞ்சிறப்புஞ்சேர்ந்தோர்க்கெளிவருமிறைவனென்னும்
வண்ணமுமெடுத்துக்கூறக்கேட்டங்குவதியுநாரை. (கங)

---

(எ) குணித்து-வரையறுத்து. கோப்பு-கோவை. (அ) அதோ தீர்த்தம்-அச்சோததீர்த்தம். இரை-உணவு. அவாவு-விருப்பம்.

(கO) தோட்புறம்-பிடர்.

மடம்படுமறிவுநீங்கிவல்வினைப்பாசம்வீசித்
திடம்படுமறிவுகூர்ந்துசிவபரஞ்சோதிபாதத்
திடம்படுமன்புவாவென்றீர்த்தெழவெழுந்துநாரை
தடம்படுமாடக்கூடற்றனிநகரடைந்துமாதோ. (கச)

வாங்கியதிரைசூழ்பொற்றாமரைபடிந்திமையாவேழந்
தாங்கியவிமானமேயதலைவனைத்தாழ்ந்துசூழ்ந்து
தேங்கியவருட்கணோக்கத்தெரிசித்துத்திருமுன்வைகி
யோங்கியகருணைமேனியுள்ளுறத்தியானஞ்செய்து. (கரு)

இந்நிலைநியமமூவைந்தெல்லைஞான்றியன்றுபின்னா
ளந்நிலையொழுகுநாரையாடககமலந்தோய்வான்
வன்னிலைமதில்சூழ்ஞாங்கர்வந்துழிப்பசியால்வெந்து
மின்னிலைவேல்போற்றுள்ளுமீன்கவர்ந்துண்குமென்னா. (கசு)

சிறிதுளத்துள்ளிநாதன்றிருவருள்வலத்தாற்பின்ன
ரறிவுவந்தச்சோவிந்தவறப்பெருந்தீர்த்தத்துள்ளே
யெறியுமீனருந்தவாசையெழுந்ததேயெனக்கிப்போதிப்
பிறவியென்றொழிவதென்னாப்பேரஞரடைந்துபின்னும். (கஎ)

சுந்தரச்செம்மல்பாதத்துணைமலரன்பிற்றோய்ந்து
சிந்தைவைத்திருக்குமெல்லைதேவருமறையுஞ்செய்யும்
வந்தனைக்கரியானுரைமனநினைவடிவாய்த்தோன்றி
யெந்தமக்கினியாய்வேண்டும்வரமென்கொலியம்புகென்றான். (கஅ)

கலிவிருத்தம்.

செய்யகான்மடநாரையுஞ்சென்றுதாழ்ந்
தையனேயிப்பிறவியறுத்துநின்
மெய்யர்வாழ்சிவலோகத்தின்மேவிநா
னுய்யவேண்டுமொன்றின்னமுமுண்டரோ. (கக)

வள்ளலென்மரபுள்ளவுமற்றைய
புள்ளுமிந்தப்புனிதமலர்த்தடத்

---

(கச) மடம் படுமறிவு என்றது—அறியாமையை. வல்வினை-ஆகாமியவினை. திடம்படுமறிவு - ஞானோதயம்.

(கரு) வாங்கல்-வளைதல். தேங்கிய வருட்கணோக்கந் தெரிசித்து என்றது—சஞ்சிதகன்மமொழிந்தமையை.

(கசு) எல்லை-நாள். ஞாங்கர்-பக்கம். (கஎ) அஞர்-துன்பம்.

துள்ளமீனுயிருண்ணினெக்காலமுந்
தள்ளொணுதபழிவந்துசாருமே. (உO)

என்றுமித்தடமீனிலவாகநீ
நன்றுசால்வரநல்கெனவெள்ளிமா
மன்றுளானும்வரந்தந்துபோயினன்
சென்றுநாரைசிவலோகஞ்சேர்ந்ததால். (உக)

இயங்களைந்துமியம்பவிமானமேற்
புயங்கனுன்குமுக்கண்களும்பொற்பவான்
வியங்கொள்பூமழைவெள்ளத்துளாழ்ந்துபோய்
வயங்கொணந்திகணத்துள்வதிந்ததே. (உஉ)

அன்றுதொட்டின்றளவும்பொற்ருமரை
யென்றுரைக்குமெழின்மலரோடையிற்
சென்றுகைத்துத்திரிகின்றமீனலா
லொன்றுமற்றனநீர்வாழுயிர்களும். (உந)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தன்கிளையன்றிவேற்றுப்பறவைகடாமுந்தன்போ
னன்கதியடையவேண்டிற்றேகொலிந்நாரைசெய்த
வன்பினில்வியப்போவீசனருளினில்வியப்போவன்பர்க்
கின்புருவானவீசனன்பருக்கெளிதேதையே. (உச)

கலிவிருத்தம்.

மறக்குறும்புகளைக்கட்டுமெண்ணின்மே
லறப்பெரும்பயிராக்கியதன்பயன்
சிறக்கநல்கிடவுண்டுசெருக்குவான்
றுறக்கமெய்தியிருந்தான்சுகுணனும். (உரு)

நாரைக்குமுத்திகொடுத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ருஎ - க்கு - திருவிருத்தம் - உஙஉக.

---

(உஉ) வியம்-பெருமை. வயம் - வெற்றி. (உரு) மறக்குறும் பென்றது - பாவங்களை.

உ

சிவமயம்.

திருவாலவாய்க்காண்டம்.

நாற்பத்தோன்பதாவது,

# திருவாலவாயானபடலம்.



சோமசுந்தரக்கடவுள் வணக்கம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பாயுடையார்விடுத்தபழி யழல்வழுதியுடல்குளிப்பப்பதிகமோதுஞ், சேயுடையாரணந்திளைக்குஞ் செவியுடையாரளவிறந்ததிசைகளெட்டுந், தோயுடையார் பொன்னிதழித் தொடையுடையார் விடவரவஞ் சுற்றுமால, வாயுடையார்புகழ்பாடப் பெறுவேமேல் வேண்டுவதிம் மனிதயாக்கை. (௧)

அங்கையற்கண்ணம்மையார் வணக்கம்.

வேதனெடுமாலாதிவிண்ணாடர்மண்ணாடர்விரதயோகர்
மாதவர்யாவருங்காணமணிமுறுவல்சிறிதரும்பிமாடக்கூட
ணாதனிருதிருக்கரந்தொட் டம்மியின்மேல்வைத்தகயனாட்டச்செல்[வி
பாதமலரெழுபிறவிக்கடனீந்தும்புணையென்பர்பற்றிலாதோர். (௨)

மேற்படி - வேறு.

ஓலவாய்மறைகடேறுவொருவன்றன்னுலகந்தன்னைச்
சேலவாயுழலுநாரைக்கருளியசெயலீதம்ம
நீலவாய்மணிநேர்கண்டானெடியநான்மாடக்கூட
லாலவாயாகச்செய்தவருட்டிறமெடுத்துச்சொல்வாம். (௩)

சித்திரமேருவென்றதிரண்டதோட்சுகுணன்பின்பு
சித்திரவிரதன்சித்ரபூடணன்றிண்டேர்வல்ல
சித்திரதுவசன்வென்றிச்சித்திரவருமன்வன்றோட்
சித்திரசேனன்சீர்சால்சித்ரவிக்கிரமனென்போன். (௪)

---

(௧) பழியழல்-அபிசாரயாகத்தின்சடத்தீ. சேய்-திருஞான சம்பந்தப்பிள்ளையார். ஆரணம் - திருநெறித்தமிழ்வேதம்.

(௩) ஓலம்-ஒலி. நீலவாய்மணி-நீலரத்தினம்; இதில் நீலம் என்பது நீல் எனக் கடைகுறைந்து நின்றது. (௪) சித்திரம்-அழகு.

மணிகெழுதேரிராசமார்த்தாண்டனிராயசூடா
மணியணிமுடியிராசசார்த்தூலவழுதிசிந்தா
மணிநிகர்துவிசராசகுலோத்தமண்மடங்காவென்றி
மணிதிகழ்பொலம்பூணுயோதனப்பிரவீணன்மன்னே. (௫)

இயம்பருந்திறலிராசகுஞ்சரன்பரவிராச
பயங்கரன்கைக்கும்பைந்தாருக்கிரசேனன்பாரைச்
சயங்கெழுதோண்மேலேந்துசத்துருஞ்சயன்வீமத்தேர்
வயங்கெழுமன்னன்வீமபராக்ரமவழுதிமாதோ. (௬)

பெய்வளைவிந்தைசேர்ந்தபிரதாபமார்த்தாண்டப்பேர்த்
தெவ்வடுசிலையான்றேர்விக்கிரமகஞ்சுகன்றேரார்போர்
வெளவியசமரகோலாகலனெனும்வாகைவேலா
னவ்வியமவித்தசிந்தையதுலவிக்கிரமனென்போன். (௭)

எழில்புனையதுலகீர்த்தியெனவிருபத்திரண்டு
வழிவழிமைந்தராகிவையகங்காத்தவேந்தர்
பழிதவிரதுலகீர்த்திபாண்டியன்றன்பாலின்பம்
பொழிதரவுதித்தகீர்த்திபூடணன்புரக்குநாளில். (அ)

கருங்கடலேழுங்காவற்கரைகடந்தார்த்துப்பொங்கி
யொருங்கெழுந்துருத்துச்சீறியும்பரோடிம்பரெட்டுப்
பொருங்கடகரியுமெட்டுப்பொன்னெடுங்கிரியுநேமிப்
பெருங்கடிவரையும்பேரப்பிரளயங்கோத்ததன்றே. (௯)

அப்பெருஞ்சலதிவெள்ளத்தழிந்தனவழிவிலாத
வெப்பெரும்பொழிலுமேழுதீபமுமிவற்றுட்டங்கி
நிற்பனசெல்வவானதிணைகளுநீண்டசென்னிப்
பர்ப்பதவகையுமீறுபட்டனவாகவங்கண். (௧0)

தேனிழிகுதலைத்தீஞ்சொற்சேனெடுங்கண்ணிகோயில்
வானிழிவிமானம்பொற்றாமரைவிளையாட்டின்வந்த
கானிழியிடபக்குன்றங்கரிவரைநாகக்குன்ற
மானிழிவரைவராகவரைமுதலழிவிலாத. (௧௧)

(௫) சிந்தாமணி-கேட்டதைக்கொடுக்குமோர் தெய்வமணி.

(௬) வீமத்தேர் வயங்கெழுமன்னன் - வெற்றிமிகுந்த பீமரத பாண்டியன். (௭) விந்தை-ஜயலட்சுமி. தேரார்-பகைவர்.

(௯) நேமிப்பெருங்கடிவரை - சக்கரவாளகிரி. பொழில்-நாடு; இது ஈண்டு, நவகண்டங்களை யுணர்த்திநின்றது. நிற்பன செல்வ வானதிணை — நிலையியற்பொருள், இயங்கியற்பொருள். பர்ப்பதம்-மலை. (௧௧) கான்-மணம்.

வெள்ளநீர்வறப்பவாதிவேதியன்ஞாலமுன்போ
லுள்ளவாறுதிப்பநல்கியும்பரோடிம்பரேனைப்
புள்ளொடுவிலங்குநல்கிக்கதிருடற்புத்தேண்மூவர்
தள்ளருமரபின்முன்போற்றமிழ்வேந்தர்தமையுந்தந்தான். (கஉ)

கலிவிருத்தம்.

அங்கியைமதிமரபென்னுமாழியுட்
டங்கியகலையென்னன்கிரட்டிதன்னெடும்
பொங்கியநிலாமதிபோலத்தோன்றினன்
வங்கியசேகரவழுதிமன்னனே. (கங)

தாளணிகழலினன்றங்கணாயகன்
கோளணிபுரிசைசூழ்கோயில்சூழவோர்
வாளணிகடிநகர்சிறிதுவைகவைத்
தாளரியேறெனவவனிகாக்குநாள். (கச)

செய்யகோன்மனுவழிசெலுத்துநீர்மையாற்
பொய்கெழுகலிப்பகைபுறந்தந்தோடத்தன்
வையகம்பல்வளஞ்சுரப்பவைகலு
மெய்கெழுமன்பதைமிக்கவாலரோ. (கரு)

பல்குறுமானிடப்பரப்பெலாமொருங்
கல்குறவிடங்குறைவாகவாய்மதுப்
பில்குறுதாரினன்பிறைமுடித்தவன்
மல்குறுகோயிலின்மருங்கரெய்தினன். (கசு)

கறையணிகண்டனைத்தாழ்ந்துகைதொழு
திறையவநின்னருள்வலியினிந்நிலப்
பொறையதுவாற்றுவேற்கீண்டிப்போதொரு
குறையதுண்டாயினதென்றுகூறுவான். (கஎ)

இத்தனைமாக்களுமிருக்கத்தக்கதாப்
பத்தனங்காணவிப்பதிக்கணாதியே

---

(கஉ) ஆதிவேதியன்-சிவபெருமான்; அல்லது ஆதி - சிவபெருமான், வேதியன், பிரமன்எனப்பொருள்கூறுவதுமொன்று. கதிருடற்புத்தேண் மூவர் என்றது—ஒளியுருவாகிய சோமசூர்யாக்கினிகளை. தமிழ்வேந்தர்-சேரசோழபாண்டியர்.

(கங) வங்கியசேகரன்-வம்சசேகரன். (கச) கோள் - நவக்கிரகம். (கரு) மன்பதை - மக்கட்கூட்டம். (கசு) அல்கல் - வசித்தல். (கஅ) பத்தனம் - நகரம்.

வைத்தறைசெய்திடும்வரம்புகாண்கிலே
னத்தமற்றதனையின்றறியக்காட்டென்ருன். (கஅ)

நுண்ணியபொருளினுநுண்ணிதாயவர்
விண்ணிழிவிமானநின்றெழுந்துமீனவன்
றிண்ணியவன்பினுக்கெளியசித்தராய்ப்
புண்ணியவருட்கடலாகிப்போதுவார். (கசூ)

கலிநிலைத்துறை.

பாம்பினற்கடிசூத்திரங்கோவணம்பசுந்தாட்
பாம்பினற்புரிநூல்சன்னவீரம்வெம்பகுவாய்ப்
பாம்பினற்குழைகுண்டலம்பாதகிண்கிணிநாண்
பாம்பினற்கரகங்கணம்பரித்தனர்வந்தார். (உ0)

வந்தயோகர்மாமண்டபமருங்குநின்றங்கைப்
பந்தவாலவாயரவினைப்பார்த்துநீயிவனுக்
கிந்தமாநகரெல்லையையளந்துகாட்டென்று
ரந்தவாளராவடிபணிந்தடிகளைவேண்டும். (உக)

பெருமவிந்நகரடியனேன்பெயரினல்விளங்கக்
கருணைசெய்தியென்றிரந்திடக்கருணையங்கடலு
மருணயந்துநேர்ந்தனையதேயாகெனப்பணித்தா
னுருகெழுஞ்செலவுரகமுமொல்லெனச்செல்லா. (உஉ)

கீட்டிசைத்தலைச்சென்றுதன்கேழ்கிளர்வாலை
நீட்டிமாநகர்வலம்படநிலம்படிந்துடலைக்
கோட்டிவாலைவாய்வைத்துவேற்கொற்றவற்கெல்லை
காட்டிமீண்டரன்கங்கணமானதுகரத்தில். (உங)

சித்தர்தஞ்சினகரத்தெழுந்தருளினர்செழியன்
பைத்தவாலவாய்கோலியபடிசுவரெடுத்துச்
சுத்தநேமிமால்வரையினைத்தொட்டகழ்ந்தெடுத்து
வைத்ததாமெனவகுத்தனன்மஞ்சுசூழிஞ்சி. (உச)

தென்றிசைப்பரங்குன்றமும்வடதிசையிடபக்
குன்றமுங்குடக்கேடகநகரமுங்குணபாற்
பொன்றலங்கிழித்தெழுபொழிற்பூவணநகரு
மென்றுநாற்பெருவாயில்கட்கெல்லையாவகுத்தான். (உரு)

(உ0) கடிசூத்திரம்-அரைஞாண். பசுமை-இன்மை.
(உஉ) உரு-அச்சம் உரகம்-மார்பாற் செல்வது, பாம்பு.
(உச) இஞ்சி-மதில்.

அனையநீண்மதிலாலவாய்மதிலெனவறைவர்
நனையவார்பொழினகரமுமாலவாய்நாமம்
புனையலாயதெப்போதுமப்பொன்னகர்தன்னைக்
கனையவார்கழற்காலினன்பண்டுபோற்கண்டான். (உசு)

கொடிகணீன்மதின்மண்டபங்கோபுரம்வீதி
கடிகொள்பூம்பொழிலின்னவும்புதியவாக்கண்டு
நெடியகோளகைகிரீடம்வாணிழன்மணியாற்செய்
தடிகள்சாத்தியகலன்களும்வேறுவேறமைத்தான். (உஎ)

பல்வகைப்பெருங்குடிகளும்பரப்பெலாநிரப்பிச்
செல்வவானவன்புரந்தரன்புரத்தினுஞ்சிறப்ப
மல்லன்மாநகர்பெருவளந்துளும்பிடவளர்த்தான்
றொல்லைநாட்குலசேகரன்போல்வருதோன்றல். (உஅ)

திருவாலவாயானபடலம் முற்றிற்று.

ஆ படலம் ருஅ - க்கு திருவிருத்தம் - உஙசகூ.

---

ஐம்பதாவது,

## சுந்தரப்பேரம்பெய்தபடலம்.



அறுசீரடியாசிரியவிருத்தம்.

அங்கணருரகமணிந்தருள்வடிவமடைந்தரசகமகிழக்
கங்கணவிடவரவங்கொடுகெடிநகர்கண்டருண்முறையிதுவாஞ்
சங்கணிகுழையினர்பஞ்சவன்வழிபடுதம்பெயரெழுதியகூர்
வெங்கணைகொடுவளவன்படைமுடுகியவென்றியையினிமொழிவாம் (க)

வெங்கயனீள்கொடிவங்கியசேகரன்வெண்குடைநீழலின்வாய்
வங்கமுலாவியதெண்கடன்ஞாலமடந்தையுமாசறுசீர்ச்
செங்கமலாலமங்கையும்வாலியதிண்பதுமாலயமே
னங்கையுமோவறமங்கலமானநயம்பெறுவாழ்வுறுநாள். (உ)

---

(உஎ) கோளகை-வட்டம். (உஅ) செல்வவானவன்-குபேரன்.

(க) வளவன்-விக்கிரமச்சோழன். வென்றி, இது காரியவாகு பெயராய்த்திருவிளையாடலாகிய காரணத்தை விளக்கிநின்றது.

(உ) ஓவு - ஒழிவு.

வேழமறப்படைசூழவெதிர்த்தவர்வீறுகெடுத்தடியிற்
றாழவடர்த்திகல்வாகைதொடுத்தலர்தார்புனைவிக்கிரம
சோழன்மதிக்குலநாயகனைப்பொருசூள்கருதித்தொலையா
வாழ்கடலுக்கிணையாமனிகத்தொடுமோட்டமருக்கெழுவான். (ரு)

கயபதிகாய்சினநரபதிபாய்துரகதபதியேமுதலா
வயமிகுதோள்வடதிசையினராதிபர்வலிகெழுசேனையினே
டியமிடியேறிமிழிசையெனவாய்விடவிரதமதேறிநடாஅய்ப்
பயன்மலிகாவிரிநதியருகேயுறைபதிகொடுமேயினனால். (சா)

சிலைத்தெழுசெம்பியன்வெம்படைமள்ளர்செயிர்த்துமதிக்கடவுட்
குலத்தவனாட்டினிருந்தெழிலானிரைகொண்டுகுறும்புசெய்து
மலர்த்தடமேரியுடைத்துநகர்க்குவரும்பலபண்டமுமா
றலைத்துமுடுக்கிநடுக்கம்விளைத்துமமர்க்கடியிட்டனரால். (௬)

மாறனறிந்தினியென்செய்துநேரியன்வன்படையோவளவின்
றேறியெதிர்ந்தமராடினெனக்கரிதிக்குறையைப்பிறையோ
டாறணிபூரணசுந்தரனெந்தையடித்தலமுன்குறுகாக்
கூறியிரந்துவரம்பெறுகென்றிறைகோயிலடைந்தனனால். (சு)

அடைந்துபணிந்தருணயகனேயடியேனுடுவிக்கிரமன்
றொடர்ந்தமராடவயற்புலமன்னவர்தொகையொடுபாசறைவாய்ப்
படர்ந்திறைகொண்டனனேபொரவொத்தபதாதியெனக்கிலையே
மிடைந்துவரும்படைமிக்கவிடத்தரண்வேறுளதோவிறைவா. (எ)

என்னையினிச்செயுமாறெனமாறனிரந்துமொழிந்திடலு
முன்னவன்வானிடைநின்றசரீரிமொழிந்தருள்வான்முதனீ
யன்னவனோடமராடபினுமுமடைந்துதவித்துணையாய்
நின்னதுவாகையெனப்பொருகின்றனநீயினியஞ்சலென. (அ)

சிந்தைகளித்திருகண்களித்திருசெங்கைகுவித்திறைவ
னந்திமதிச்சடையந்தணனைத்தொழுதன்றுபுறப்படமுன்
வந்தனனொற்றுவனந்திவரைக்கயல்வந்ததுவிக்கிரமன்
வெந்தறுகட்படையென்றரசற்குவிளம்பினனப்பொழுதே. (கூ)

---

(ரு) பொருசூள்-போர்த்தொழிலைக் குறிக்கும் வஞ்சினம்.

(சா) துரகம் - குதிரை. (௬) குறும்பு - கொடுந்தொழில். ஆறலைத்தல் - வழிபறித்தல். அடியிடல்-தொடங்கல்.

(சு) ஏறி - மேற்சென்று. (எ) பாசறை - படைவீடு.

(கூ) நந்திவரை - இடபமலை.

அரசனியம்பலவதிரவலம்புரியலறவலங்குளைமா
ணிரதமணைந்திடவிசைகொடுசிந்தைபினிடவலவன்கடவப்
புரசைநெடுங்கரிதிரையெறியுங்கடல்பொருபரிவிண்டொடுதேர்
விரைசெய்நறுந்தொடைவிருதர்கணம்புடைவிரவநடந்தனனால். (௰)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அளந்துசூழ்திருவாலவாய்மதிலின்புறத்தகழாழிபோல்
வளைந்தசோழனெடும்படைக்கெதிர்வஞ்சிவேய்ந்தெழுபஞ்சவன்
கிளர்ந்தசேனையதிர்ந்துகிட்டினகிட்டியவ்விருபடைஞரும்
களஞ்சிறந்திடவஞ்சினங்கொடுகைவகுத்தமர்செய்வரால். (கக)

சையமொத்தெழுதேரினரொடுசையமொத்தெழுதேரரு
மையன்மைக்கரிவீரரோடெதிர்மையன்மைக்கரிவீரருங்
கொய்யுளைப்பரிவயவரோடிகள்கொய்யுளைப்பரிவயவருங்
கையழற்படைவீசிமின்விடுகாரெனப்பொருவாரரோ. (கஉ)

முடங்குவெஞ்சிலைவில்லரோடுமுடங்குவெஞ்சிலைவில்லரும்
விடங்கலுழ்ந்திடுவேலரோடுவிடங்கலுழ்ந்திடுவேலரு
மிடங்கைதோல்வளவாளரோடுமிடங்கைதோல்வலவாளரு
மடங்கலேறுமடங்கலேறுமலைப்பதென்னமலைப்பரால். (கங)

அரவினன்னிலமம்புயம்பொறையாற்றுமீனவனுற்றல்கூர்
புரவியின்னிரைவையமேல்கொடுபோந்தநேரியர்வேந்தனேர்
விரவிமின்னியமுரசியம்பமிடைந்துவெஞ்சமராடுமா
றிரவிதன்னொடுமெதியவன்பொரவேகினனிகராகுமால். (கச)

துள்ளுமாவொலிதானயாறுதுளும்புமாவொலிதூண்டுதேர்
தள்ளுமாவொலிபடையொடும்படைதாக்குமாவொலிபொருநரார்த்
தெள்ளுமாவொலிமள்ளர்பைங்கழலேங்குமாவொலிவீங்கியந்
தெள்ளுமாவொலிவேறுபாடுதிரிந்துகல்லெனலாயதே. (கரு)

துடித்தவாளரவென்னவீசியதூங்குகையினவீங்குநீர்
குடித்தகாரொடுகார்மலைந்திடுகொள்கைபோலவுடன்றுடன்

---

(௰) உளை - புறமயிர். (கக) வஞ்சி - போர்மேற்செல்வோ ரணியுமாலை. (கச) அரவு-ஆதிசேடன். வையம்-தேர்.

(கரு) துள்ளுமா, தேர்தள்ளுமா என்பன-குதிரைகளை. தானயாறுதுளும்புமா – யானை. இச்செய்யுளில்வரும் எனைமா என்னு மோரெழுத் தொருமொழிகள் பெருமை என்னும்பொருளன.

றிடித்தவாயினவசனியேறினிருப்புலக்கையெடுத்தெறிந்
தடித்தசோரியொடாவிசோரவீழ்ந்தவெஞ்சினவானையே. (கசு)

எய்தவாளிவிலக்குவார்பிறிதெய்யும்வாளிதமார்புதோள்
செய்தபோதவராண்மைகண்டுசிரித்துவென்றுவியப்பரால்
வைதவாவடிவேலெறிந்திடவருவதைக்குறிவழியினூற்
கொய்ததார்மறவாளெறிந்துகுறைத்துவேறுபடுத்துவார். (கஎ)

பின்னிடாதிருபடையுமொத்தமராடுமெல்லைபெரும்படைச்
சென்னிதன்றுணையானவுத்தரதேயமன்னவர்படையொடுந்
துன்னிஞாலமுடிக்குநாளெழுசூறைதள்ளவகிர்ந்தெழும்
வன்னியென்னவுடன்றெதிர்ந்தனர்வழுதிசேனையுடைந்ததே. ()

மின்னிலங்கிலைவாளொடுஞ்சிலைவில்லிழந்தனர்வீரரே
பன்னலம்புனைதேரொடுங்கரிபரியிழந்தனர்பரகரே
தென்னவன்பெருவலியிழந்தனனென்றுசெம்பியன்வாகையுந்
தன்னதென்றுதருக்குமேல்கொடுசெங்கெடுத்துமுழக்கினன். (கக)

அந்தவேலையின்முன்னருந்தமதருளெனக்குளிர்கடிபுனற்
பந்தர்நீழலளித்துமோடைபடுத்தியும்பகைசாயவே
வந்தவேடரவண்ணமேயொருமானவேடரசராய்வலஞ்
சிந்தவாகுலமூழ்குமீனவர்சேனைகாவலராயினர். (உ0)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

குன்றவில்வேடன்சாபங்குழைவித்துச்சுந்தரேச
னென்றதன்னாமந்தீட்டியிட்டகூர்ங்கணைகடேண்டி
வென்றனமென்றுவாகைமிலைந்துவெஞ்சங்கமார்த்து
நின்றவன்சேனைமீதுநெறிப்படச்செலுத்தாநின்றான். (உக)

அம்முனைவாளியொவ்வொன்றடல்புனைநூறுநூறு
தெம்முனைவீரர்தம்மைச்செகுத்துயிருண்ணநோக்கி
யிம்முனைவாளியொன்றுக்கித்துணைவலியாதென்று
வெம்முனைமறவேற்சென்னிவியந்தனுமானமெய்தா. (உஉ)

(கசு) அசனி-இடி. (கஎ) வை-கூர்மை.

(கஅ) உத்தரதேயம்-வடதேயம். சூறை - சண்டமாருதம். வன்னி - வடவாமுகாக்கினி. (உஉ) நூறுநூறு - இதுபண்புத்தொகையாய் பதினாயிரமென்னும் எண்மேனின்றது. அநுமானம்-புகையைக்கண்டு நெருப்புண்டெனவறிதல்.

அன்னகூர்வாளிதன்னைக்கொணர்கெனவதனைவாசித்
தின்னதுசுந்தரேசனெனவரைந்திருப்பதீது
தென்னவற்காலவாயான்றுணைசெய்தசெயலென்றஞ்சிப்
பொன்னிநாடுடையான்மீண்டுபோகுவான்போகுவானை. (உங)

செருத்துணையாகிவந்தவுத்தரதேயத்துள்ளார்
துருக்கரொட்டியர்வேறுள்ளார்யாவருஞ்சூழ்ந்துநில்லென்
றுருத்தனர்வைதுநீபோர்க்குடைந்தனைபோதியீதுன்
கருத்தெனினுண்மையாவர்கண்ணதுன்மானமென்னும். (உச)

செல்லலைவருதியென்னுச்செயிர்த்தெழுந்திடியினார்த்துக்
கல்லெழுவனையதிண்டோட்கௌரியன்படைமேற்சென்று
வில்லிறவலித்துவாங்கிவேறுவேருகிநின்று
சொல்லினுங்கடியவாளிதொடுத்தனர்விடுத்தார்தூர்த்தார். (உரு)

வடுத்தவாமருமச்செம்புண்மறமகனுகிநின்ற
கடுத்தவாமிடற்றுமுக்கட்கண்ணுதற்சாமிதான்முன்
னெடுத்தவாடகவிலன்னவிருஞ்சிலைவாளியொன்று
தொடுத்தவாடவர்தாம்விட்டசுடுசரந்தொளைத்துப்பின்னும். (உசு)

பத்தம்புதொடுத்துநூற்றுப்பத்துமான்றேரைச்சாய்த்தான்
பத்தம்புதொடுத்துநூற்றுப்பத்துவெங்களிற்றைமாய்த்தான்
பத்தம்புதொடுத்துநூற்றுப்பத்துவாம்பரியைக்கொன்றான்
பத்தம்புதொடுத்துநூற்றுப்பத்துமானிடரைவென்றான். (உஎ)

நூறம்புதொடுத்துநூறுநூறுவெம்பரிமேலெய்தா
னூறம்புதொடுத்துநூறுநூறுவெங்கரிமேற்பெய்தா
னூறம்புதொடுத்துநூறுநூறுதேர்சிதையவிட்டா
னூறம்புதொடுத்துநூறுநூறுசேவகரையட்டான். (உஅ)

ஆயிரம்வாளியானூருயிரம்பரியைக்கொன்று
ஞயிரம்வாளியானூருயிரங்கரியைவென்று
ஞயிரம்வாளியானூருயிரந்தேரைச்சாய்த்தா
ஞயிரம்வாளியானூருயிரம்பேரைத்தேய்த்தான். (உகூ)

தடிந்தனதோளுந்தாளுந்தகர்ந்தனசென்னிமண்ணிற்
படிந்தனமடிந்தோர்யாக்கைபரிந்தனதும்பைத்தாம

---

(உரு) சொல் என்றது-முனிவரிடும்சாபத்தை.
(உசு) மருமம்-மார்பு.

மடிந்தனமைடில்யானைமாண்டனதாண்டுமேபாய்மா
னெடிந்தனகொடுஞ்சிமான்றேரொதுங்கினவொழிந்தசேனை. (௩௦)

ஆவிமுன்னேகத்தாமுமருக்கமண்டலத்தாறேகத்
தாவுவவென்னவாடுந்தலைபலசிலைவாள்பட்டுக்
கூவிளியெடுத்துவீழுங்குறைத்தலையாடப்பாதிச்
சாவுடனின்றுகைகள்கொட்டுவதாளமென்ன. (௩௧)

தறைவிழத்தனதுசென்னிவீட்டினார்தம்மைநின்ற
குறையுடற்கைவேல்குத்திநூக்குவகுரவைபாடி
யெறிபடுதலைகள்வாய்மென்றெயிறதுகறித்துவீழ்ந்து
கறுவினமார்பந்தட்டிநிற்பனகவந்தயாக்கை. (௩௨)

ஒருவழிபட்டுவீழுமிருதலையொன்றற்கொன்று
மருவியகேண்மைத்தாகிவாலெயிறிலங்கநக்குப்
பிரிவறவந்தாய்நீயுமென்றெதிர்பேசிப்பேசிப்
பரிவுறமொழிந்துமோந்துபாடிநின்றூடல்செய்த. (௩௩)

மாகவாறியங்குசேனம்வல்லிருட்குவையினன்ன
காகம்வன்கழுகுவெம்போர்க்களனிடையவிந்துவீழ்ந்தோ
ராகமேற்சிறகடிக்கொண்டசைவனவேடைநீக்கப்
பாகநின்றாலவட்டம்பணிப்பனபோன்றவன்றே. (௩௪)

வெள்ளமாச்சோரியீர்ப்பமிதக்கின்றதேர்கள்வெம்பேய்ப்
பிள்ளைகண்மூழ்கிக்கீழ்போய்மறித்தெனப்பெயர்ந்துவீழ்வ
தெள்ளுநீர்க்கடலின்மீதூர்சிதைக்கலநிரையுந்தாக்கித்
துள்ளிமற்றவற்றைச்சாய்க்குஞ்சுறவமும்போன்றவன்றே. (௩௫)

கத்திநின்றொருபாலீர்ப்பக்கருங்கொடிசேனந்துண்டங்
கொத்திநின்றொருபாலீர்ப்பக்குடவயிற்றழல்கட்பூதப்
பத்திநின்றொருபாலீர்ப்பப்பட்டவராகங்கூளி
பொத்திநின்றொருபாலீர்ப்பவைம்பொறிபோலமன்னோ. (௩௬)

துடுவைவான்முறங்காறள்ளுந்துணைச்செவியரிசிகோட்டி
ஞுடுவைநேர்மணியின்குப்பையுரலடியுலக்கைதிண்கோ

(௩௦) ஒழிந்தசேனை என்றது - வில் வாட்சேனைகளை.

(௩௧) குறைத்தலை-கவந்தம். பாதிச்சாவுடல் - முற்றுஞ்சாகாதவுடல். (௩௨) கறித்து-கடித்து. குரவை-கை கோத்தாடல்.

(௩௪) மாகம் - ஆகாயம். வேடை-வெப்பம்.

(௩௬) கொடி-காக்கை. துண்டம் - மூக்கு. கூளி - பேய்.

(௩௭) துடுவை-துடுப்பு. உடு - நட்சத்திரம். மணி-முத்து. கடம்-கதுப்பு.

டகெலங்கடந்தீச்சோரிமத்தகமடுப்பென்றியானைப்
படுகளம்விசயச்செல்வியமெடைப்பள்ளிமானும். (௩எ)

பிணத்தினைக்கோலிப்புண்ணீராற்றினைப்பெருக்கியுண்பேய்க்
கணத்தினையுதைத்துநூக்கிக்கரையுடைத்தொருவன்பூத
நிணத்தொடும்வருமந்நீத்தநேர்படவிருந்துகையா
லணைத்துவாய்மடுக்கும்வைகையருந்தியபூதமென்ன. (௩அ)

புரத்தினுளுயர்ந்தகூடற்புண்ணியனெழுதியெய்த
சரத்தினிலவிந்தார்சென்னிக்குற்றுழிச்சார்வாய்வந்த
வரத்தினையறுக்கும்வைவேலயற்புலவேந்தர்நச்சு
மரத்தினையடுத்தசந்துங்கதழெரிமடுத்ததென்ன. (௩௯)

மாசறுகாட்சியான்றன்வாளியாலவிந்தோர்தம்மை
மூசுவண்டென்னச்சூழ்ந்துமொய்த்தனபைத்தகூளி
காய்சினச்சேனங்காகங்கழுகினம்பற்றியீர்த்துப்
பூசலிட்டொன்றோடொன்றுபோர்செய்வான்றொடங்கிற்றம்ம. ()

வெஞ்சினமறக்கோனம்பிவிடுகணைவெள்ளத்தாழ்ந்து
வஞ்சினமுறுதன்சேனைமடிந்ததுகண்டுமொழாந்
தெஞ்சினபடையுஞ்சூழவேதிலார்நகையுஞ்சூழத்
துஞ்சினமறமுஞ்சூழச்சோழனுமுடைந்துபோனான். (சக)

வில்லொடுமேகமன்னவெஞ்சிலைவேடவேந்தன்
மல்லொடுபெயின்றதென்னன்மலர்முகச்செவ்விநோக்கி
யல்லொடுமெதிவந்தென்னவருணைசிறிதுபூத்துச்
செல்லொடுபகைபோற்கொண்டதிருவுருமறைந்துபோனான். ()

பாடுவாயளிதேனூட்டும்பைந்தொடைச்செழியன்வென்றிக்
கோடுவாய்வைத்திட்டார்த்துக்குஞ்சரமுகட்டிலேறித்
தோடுவாய்கிழிக்குங்கண்ணார்மங்கலந்துவன்றியேந்த
நீடுவார்திரைநீர்வேலிநீண்மதினகரிற்புக்கான். (ச௩)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

சிலைவிற்சேவகஞ்செய்துவாகைவாங்கித் திருவளித்தசேவகற்குச் சிறந்தபூசை, நிலைவித்தாய்மணிப்பொலம்பூணிறுவிச்சாத்திநிழல்வி

(௩அ) நூக்கி-தள்ளி. (௩௯) புத்தினுளுயர்ந்த கூடல் என்றது-காசி, அயோத்தி, மாயை, காஞ்சி, அவந்திகை, துவாரகைமுதலியவற்றிற்கும் மேற்பட்டுநிற்கும் மதுரையை. (சக) துஞ்சினமறம் என்றது-தோல்வியை. (ச௩) வென்றிக்கோடு-ஜயசங்கம்.

ரிக்கும்வெயின்மணியானெடியமேரு,மலைவிற்றனென்னவரிச்சிலை யுநாமம்வரைந்தகடுங்கூர்ங்கணையும்வனைந்துசாத்தி, யலைவித்தாழ்க டலுலகுக்கலச்செங்கோலறம்பெருக்கு வங்கியசேகரனுமண்ணல்.

சுந்தரப்பேரம்பெய்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௫௯ - க்கு திருவிருத்தம் - ௨௩௯௩.

---

ஐம்பத்தோராவது,

## சங்கப்பலகைதந்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வேடுருவாகிமேருவில்லிதன்னுமக்கோலெய்
தாடமராடித்தென்னனடுபகைதுரந்தவண்ணம்
பாடினஞ்சங்கத்தார்க்குப்பலகைதந்தவரோடொப்பக்
கூடிமுத்தமிழின்செல்வம்விளக்கியகொள்கைசொல்வாம். (௧)

வங்கியசேகரன்கோல்வாழுநாண்மேலோர்வைகற்
கங்கையைந்துறைசூழ்கன்னிக்கடிமதிற்காசிதன்னிற்
பங்கயமுளரிப்புத்தேள்பத்துவாம்பரிமாவேள்வி
புங்கவர்மகிழ்ச்சிதூங்கமறைவழிபோற்றிச்செய்தான். (௨)

நிரப்பியவழிநாணன்னீராடவானீண்டவீணை
நரப்பிசைவாணிசாவித்திரியெனுநங்கைவேத
வரப்பிசைமனுவாங்காயத்திரியெனுமடவாரோடும்
பரப்பிசைக்கங்கைநோக்கிப்படருவான்படருமெல்லை. (௩)

நானவார்குழலிஞரம்மூவரிஞவின்செல்வி
வானவாறியங்கும்விஞ்சைமாதராளொருத்திபாடுங்
கானவாறுள்ளம்போக்கிநின்றனள்கமலயோனி
யானவாலறிவனேகியந்நதிக்கரையைச்சேர்ந்தான். (௪)

---

(௪௪) அலைவி-ஐம்படை. இதனை முன்னர்காண்க.

(௧) நாமக்கோல்-திருப்பெயரெழுதிய அம்பு. (௨) கோல்வாழு நாள்-செங்கோல் செல்லுங்காலை. கன்னி-அழிவில்லாத.

(௩) வழிநாள்-பின்னுள். வரம்பு-வரப்பென வலிந்துநின்றது. வீணைஎன்றது-பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டி யாழென்னு நால்வகையாழினை. (௪) நானம்-வாசனை.

நாமகள்வரவுதாழ்ப்பநங்கையரிருவரோடுந்
தாமரைக்கிழவன்மூழ்கித்தடங்கரையேறுமெல்லைப்
பாமகள்குறுகியென்னையன்றிநீபடிந்தவாறென்
னுமெனவெகுண்டாள்கேட்டவம்புயத்தண்ணல்சொல்வான். (ரு)

குற்றநின்மேலதாகநம்மைநீகோபங்கொள்வ
தெற்றெனவினையதீங்கையெண்ணுறுமாக்கடோற்ற
முற்றனையொழித்தியென்னுவுரைத்தனன்சாபமேற்கும்
பொற்றொடிமடக்கையஞ்சிப்புலம்புகொண்டவலம்பூண்டாள். (சு)

ஊனிடரகன்றேயுன்றனுயிர்த்துணையாவேனிந்த
மானிடயோனிப்பட்டுமயங்குகோவென்னவண்டு
தேனிடையழுந்திவேதஞ்செப்பும்வெண்கமலச்செல்வி
தானிடரகலநோக்கிச்சதுமுகற்றலைவன்சாற்றும். (எ)

முகிழ்தருமுலைநின்மெய்யாமுதலெழுத்தைம்பத்தொன்றிற்
றிகழ்தரும்ஆகாராதிஹாகாரமீறுச்செப்பிப்
புகழ்தருநாற்பத்தெட்டுநாற்பத்தெண்புலவராகி
யகழ்தருகடல்சூழ்ஞாலத்தவதரித்திடுவவாக. (அ)

அத்தகுவருணமெல்லாமேறிநின்றவற்றவற்றின்
மெய்த்தகுதன்மையெய்திவேறுவேறியக்கந்தோன்ற
வுய்த்திடும்அகாரத்திற்குமுதன்மையாயொழுகுநாதர்
முத்தமிழாலவாயெம்முதல்வரம்முறையான்மன்னே. (கூ)

தாமொருபுலவராகித்திருவுருத்தரித்துச்சங்க
மாமணிப்பீடத்தேறிவைகியேநாற்பத்தொன்ப
தாமவராகியுண்ணின்றவரவாக்கறிவுதோற்றி
யேமுறப்புலமைகாப்பானென்றனன்கமலப்புத்தேள். (க0)

அக்கரநாற்பத்தெட்டுமவ்வழிவேறுவேறு
மக்களாய்ப்பிறந்துபன்மாண்கலைகளின்வகைமைதேர்ந்து
தொக்கவாரியமுமேனைச்சொற்பதினெட்டுமோய்ந்து
தக்கதென்கலைநுண்டேர்ச்சிப்புலமையிற்றலைமைசார்ந்தார். (கக)

---

(சு) மாக்கள்தோற்றம்-மானிடப்பிறவி. (எ) ஊனிடர் - பிறவித்துன்பம். (அ) முகிழ்-தாமரையரும்பு. மெய்-தேகம். முதலெழுத்து-உயிரும்மெய்யுமாகிய வெழுத்துக்கள்.

(கூ) வருணம். எழுத்து. (கக) பல்மாண் கலைகளின் வகைமை என்றது – பலவகைப்பட்ட. அறம்பொருளின்ப வீடுகளையுணர்த்து நூல்களினுண்ணியபொருள்களை. ஆரியம்-வடகலை.

கழுமணிவயிரம்வேய்ந்தகலன்பலவன்றிக்கண்டிக்
கொஃழுமணிக்கலனும்பூணுங்குளிர்நிலாநீற்றுமெய்யர்
வழுவறத்தெரிந்தசெஞ்சொன்மாலையாலன்றியாய்ந்த
செழுமலர்மாலையாலுஞ்சிவார்ச்சனைசெய்யுநீரார். (கஉ)

புலந்தொறும்போகிப்போகிப்புலமையால்வென்றுவென்று
மலர்ந்ததண்பொருநைநீத்தவளங்கெழுநாட்டில்வந்து
நிலந்தருதிருவினன்றநிறைநிதிச்செழியன்செங்கோ
னலந்தருமதுரைநோக்கிநண்ணுவார்நண்ணுமெல்லை. (கங)

பற்பலகலைமாண்டேர்ச்சிப்பனுவலின்பயனுய்நின்ற
வற்புதமூர்த்தியெந்தையாலவாயடிகளங்கோர்
கற்பமைகேள்விசான்றகல்வியின்செல்வராகிச்
சொற்பதங்கடந்தபாதமிருநிலந்தோயவந்தார். (கச)

அவ்விடைவருகின்றுரைநோக்கிநீராரைநீவி
ரெவ்விடைநின்றும்போதுகின்றனிரென்னவன்னுர்
வெவ்விடையனையீர்யாங்கள்விஞ்சையரடைந்தோர்பாவம்
வெளவிடுபொருநைநாட்டின்வருகின்றேமென்னலோடும். (கரு)

தனிவருபுலவர்நீவிர்தண்டமிழாலவாயெங்
கனிவருகருணைமூர்த்திகனைகழலிறைஞ்சல்வேண்டு
மினிவருகென்னநீரேயெங்களுக்களவில்கோடி
துனிவருவினைகடீர்க்குஞ்சுந்தரக்கடவுளென்றார். (கசு)

மறையினுெறுழுகும்பன்மாண்கலைகள்போன்மாண்டகேள்வித்
துறையினுெறுழுகுஞ்சான்றோர்சூழமீண்டேகிக்கூடற்
கறையினர்கண்டத்தாரைப்பணிவித்துக்கரந்தாரொற்றைப்
பிறையினர்மகுடந்தோற்றுதறிஞராய்வந்தபெம்மான். (கஎ)

விம்மிதமடைந்துசான்றோர்விண்ணிழிவிமானமேய
செம்மலைவேறுவேறுசெய்யுளாற்பரவியேத்திக்
கைம்மலையுரியினர்தங்காருெழுதிறைஞ்சிமீண்டு
கொய்ம்மலர்வாகைச்செவ்வேற்செழியனைக்குறுகிக்கண்டார். (கஅ)

(கஉ) கழுமணி - சாணைதீர்ந்த மாணிக்கம். (கச) சொற்பதங் கடந்தபாதம் - ஆகமவளவைக்கெட்டாத் திருவடி. (கரு) விஞ்சையர் - புலவர்கள். (கசு) தனிவருபுலவர் என்றது - சோமசுந்தரக் கடவுளை. (கஎ) கலைகள் என்றது - வேதாங்கங்களை.

மறமலிநேமிச்செங்கோன்மன்னவன்வந்தசான்றோ
ரறமலிகேள்விநோக்கியவைக்களக்கிழமைநோக்கித்
திறமலியொழுக்கநோக்கிச்சீரியர்போலுமென்று
நிறைமலியுவகைபூத்தநெஞ்சினனிதனைச்செய்தான். (கக)

திங்களங்கண்ணிவேய்ந்தசெக்கரஞ்சடிலநாதன்
மங்கலம்பெருகுகோயில்வடகுடபுலத்தின்மாடோர்
சங்கமண்டபமுண்டாக்கித்தகைமைசால்சிறப்புநல்கி
யங்கமர்ந்திருத்திரென்னவிருத்தினனறிஞர்தம்மை. (உ0)

வண்டமிழ்நாவினூர்க்குமன்னவன்வரிசைநல்கக்
கண்டுளம்புழுங்கிமுன்னைப்புலவரக்கழகத்தோரை
மண்டினர்மூண்டுமூண்டுவாதுசெய்தாற்றன்முட்டிப்
பண்டையபுலனுந்தோற்றுப்படருழந்தெய்த்துப்போனூர். (உக)

இனையர்போல்வந்துவந்துமறுபுலத்திருக்குங்கேள்வி
வினைஞருமதமேற்கொண்டுவிஞய்விஞய்வாதஞ்செய்து
மனவலியிளைப்பவென்றுவைகுவோரொன்றைவேண்டிப்
புனையிழைபாகநீங்காப்புலவர்முனணணிஞரே. (உஉ)

மூந்துநூன்மொழிந்தார்தம்மைமுறைமையால்வணங்கியெம்மை
வந்துவந்தெவரும்வாதஞ்செய்கின்றார்வரிசையாக
வந்தமில்புலமைதூக்கியளப்பதாயெம்மனோர்க்குத்
தந்தருள்செய்திசங்கப்பலகையொன்றென்றுதாழ்ந்தார். (உங)

பாடியபாணற்கன்றுவலியவேபலகையிட்டார்
பாடியபுலவர்வேண்டிற்பலகைதந்தருளார்கொல்லோ

---

(கக) மறம் - வெற்றி. அவைக்களக்கிழமை - நல்லவை, நிறையவை என்னும் கல்விச்சபைகட்குரிய உரிமைத்திறம். நல்லவை நிறையவை என்றதை-"புகழுந்தருமநெறி நின்றோர்பொய்-காமம்-இகழுஞ்சினஞ்செற்ற மில்லோர்-நிகழ்கலைகள்-எல்லாமுணர்ந்தோ ரிருந்தவிடமன்றோ - நல்லாரவைக்குநலன் எனவும், நலனடக்கஞ் செம்மை நடுவுநிலைநான்கும் - குலனென்றறிவுடையோர் கோதில்-புலனில்லோர்-சென்றுமொழிந்தனவுங்கேட்டோர் செறிந்தவிடம்-அன்றோநிறைந்தவவை எனவும்வருஞ்சங்கச்செய்யுள்களாலறிக.

(உ0) வடகுடபுலம் – வடமேற்குத்திசை. (உக) மண்டினர் – நெருங்கினர். (உஉ) மதமேற்கோடலாவது - தாங்கொண்டதை விடாமை. ஒன்று என்னும்வரையறைப்பண்பு, புலவர் சீர்தூக்குங் கருவிமேல் நிற்றலால் பண்பாகுபெயர்.

(உங) முந்துநூல் - முதனூல்.

பாடியபுலவராகும்படியொருபடிவங்கொண்டு
பாடியபுலவர்காணத்தோன்றினர்பலகையோடும். (௨௪)

சதுரமாயளவிரண்டுசாணதிப்பலகையம்ம
மதியினும்வாலிதாகுமந்திரவலியதாகு
முதியநும்போல்வார்க்கெல்லாமுழம்வளர்ந்திருக்கைநல்கு
மிதுநுமக்களவுகோலாயிருக்குமென்றியம்பியீந்தார். (௨௫)

நாமகளுருவாய்வந்தநாவலர்தமக்குவெள்ளைத்
தாமரையமளிதன்னைப்பலகையாத்தருவதென்னக்
காமனைமுனிந்தார்நல்கக்கைக்கொடுகளிறுதாங்கு
மாமணிக்கோயிறன்னைவலந்துதங்கழகம்புக்கார். (௨௬)

நாறுபூந்தாமநாற்றிநறும்பனிதோய்ந்தசாந்தச்
சேறுவண்மலர்வண்சேசெழும்புகைதீபமாதி
வேறுபல்வகையாற்பூசைவினைமுடித்திறைஞ்சிக்கீர
னேறினன்கபிலனேடுபரணனுமேறினனே. (௨௭)

இருங்கலைவல்லோரெல்லாமிம்முறையேறியேறி
யொருங்கினிதிருந்தார்யார்க்குமொத்திடங்கொடுத்துநாதன்
றருஞ்சிறுபலகையொன்றேதன்னுரைசெய்வோர்க்கெல்லாஞ்
சுருங்கிநின்றகலங்காட்டித்தோன்றுநூல்போன்றதன்றே. (௨௮)

மேதகுசான்றோர்நூலின்விளைபொருள்விளங்கத்தம்மி
லேதுவுமெடுத்துக்காட்டுமெழுவகைமதமுங்கூறும்
போதவைதெளிந்தவெள்ளைபூவையேபுறம்புபோந்து
வாதுசெய்வார்கள்வந்தான்மறுத்துநேர்நிறுத்துமன்றே. (௨௯)

கலிவிருத்தம்.

ஆயவாறெண்புலவருமாய்ந்துணர்
பாயகேள்விப்பயன்பெறமாட்சியாற்
றூயபாடறொடங்கினர்செய்துகொண்
டேயவாறிருந்தாரந்தவெல்லைவாய். (௩௦)

பலருஞ்செய்தபனுவலுமாண்பொருண்
மலருஞ்செல்வமுஞ்சொல்லின்வளமையுங்

---

(௨௫) வாலிது - புனிதமுள்ளது. மந்திரவலி என்றது - அன்றன்று தன்னினின்று முழம்வளர்ந்து இடங்கொடுப்பதாதலின்.

(௨௮) அகலங்காட்டல் - பொருள் விரிந்துநிற்றல்.

(௨௯) ஏது - காரணம். காட்டு - உதாரணம். எழுவகை மதமாவன - உடன்படல். மறுத்தல்முதலியன.

குலவுஞ்செய்யுட்குறிப்புமொத்தொன்றியே
தலைமயங்கிக்கிடந்தவத்தன்மையால். (௩க)

வேறுபாடறியாதுவியந்துநீர்
கூறுபாடலிதுவென்றுங்கோதிலென்
றேறுபாடலிதுவென்றுஞ்செஞ்சவே
மாறுபாடுகொண்டார்சங்கவாணரே. (௩உ)

மருளுமாறுமயக்கறவான்பொருட்
டெருளுமாறுசெயவல்லகள்வர்சொற்
பொருளுமாமதுரேசர்புலவர்மு
னருளுநாவலராய்வந்துதோன்றினர். (௩௩)

வந்தநாவலர்வந்திக்குநாவலர்
சிந்தையாகுலஞ்செய்யமயக்குறும்
பந்தயாப்பைக்கொணர்கெனப்பாவல
ரெந்தையீங்கிவையென்றுமுன்னிட்டனர். (௩௪)

தூயசொல்லின்பொருளின்றொடர்ச்சியு
மாயநாவலரவ்வவர்தம்முது
வாயபாடல்வகைதெரிந்தவ்வவர்க்
கேயவேயெடுத்தீந்தனரென்பவே. (௩௫)

வாங்குசங்கப்புலவர்மனங்களித்
தீங்குநீரெமரோடுமொருத்தரா
யோங்கிவாழ்திரென்றொல்லெனத்தங்களைத்
தாங்குசெம்பொற்றவிசிலிருத்தினர். (௩௬)

பொன்னின்பீடிகையென்னும்பொன்னூரமேற்
றுன்னுநாவலர்சூழ்மணியாகவே
மன்னினூர்நடுநாயகமாமணி
யென்னவீற்றிருந்தார்மதுரேசரே. (௩௭)

நதியணிந்தவர்தம்மொடுநாற்பத்தொன்
பதின்மரென்னப்படும்புலவோரெலா
முதியவான்றமிழ்பின்னுமுறைமுறை
மதிவிளங்கத்தொடுத்தவண்வாழுநாள். (௩அ)

---

(௩உ) செஞ்சவே-இது நேரேஎன்னும்பொருள்தந்துநின்றது.
(௩௪) பந்தம் - தளை.

கலிநிலைத்துறை.

வங்கியசேகரன்வங்கியசூடாமணிதன்னைப்
பொங்கியதேசார்முடிபுனைவித்துப்புவிநல்கி
யிங்கியல்பாசவினைப்பகைசாயவிருந்தாங்கே
சங்கியல்வார்குழையானடியொன்றியசார்புற்றான். (௩௧)

சங்கப்பலகைதந்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௫௦ - க்கு - திருவிருத்தம் - உ௫௩உ.

---

ஐம்பத்திரண்டாவது,

## தருமிக்குப்பொற்கிழியளித்தபடலம்.

கலிநிலைத்துறை.

சொற்குவைதேரும்பாவலர்மேவத்தொகுபீட
மற்குவைகண்டத்தண்ணலளித்ததறைந்தேமாற்
றற்குவைதந்தானுய்குவலென்னுந்தருமிக்குப்
பொற்குவைநல்கும்வண்ணமெடுத்துப்புகல்கிற்பாம். (க)

மன்னவர்மன்னன்வங்கியசூடாமணிமாறன்
றென்னவராகித்திகிரியுருட்டுந்தென்கூடன்
முன்னவரன்னங்கண்டறியாதமுடிக்கேற்பப்
பன்மலர்நல்குநந்தனம்வைக்கும்பணிபூண்டான். (௨)

மாதவிபாதிரிதாதகிகூவிளமந்தாரந்
தாதவிழ்மல்லிகைமுல்லையிலஞ்சிதடங்கோங்கம்
வீதவழ்கொன்றைகரந்தைசெழுங்கரவீரந்தண்
போதவிழ்நந்திசெருந்திகுருந்தம்புன்னாகம். (௩)

முண்டகமென்கடிநீலமுதற்பலமுப்போது
மெண்டிசையுங்கமழும்படிநந்தனமெங்குந்தே
னுண்டிசைவண்டெடிந்துமுரன்றிடவுண்டாக்கி
வண்டிமிர்சண்பகநந்தனமுந்தனிவைத்தானல். (௪)

---

(க) உவைஎன்றது - பொற்கிழியை. (௩) மாதவி-குருக்கத்தி. தாதகி - ஆத்தி. இலஞ்சி - மகிழ். வீ - வண்டு. கரவீரம்-அலரி.

(௪) வண்டிமிர்சண்பகம் என்றதுஜாதியடை.

பொய்த்திடுநுண்ணிடைமங்கலமங்கையர்பொன்பூண்டா
ரொத்தெழுசண்பகமொய்த்தவரும்பருடைந்தெங்கும்
வைத்திடுநந்தனவாசம்விழுங்கிமணங்கான்று
பைத்துமலர்ந்தனகண்டுமகிழ்ந்துபரித்தேரான். (ரு)

செருக்கியவண்டுவிழாமலர்கொய்துதெரிந்தாய்ந்து
நெருக்கியவிண்டைநிரைத்தொடைதொங்கனெடுந்தாம
மருக்கிளர்கண்ணிதொடுத்தணிவித்துவணங்காரூர்
கருக்கியகண்ணுதலார்திருமேனிகவின்செய்தான். (சு)

அன்னவியன்பொழின்மாமதுரேசரடித்தாழ்வோன்
பொன்னவிர்சண்பகமாலைபுனைந்தபுதுக்கோலந்
தன்னைவியந்தவர்சண்பகசுந்தரர்தாமென்று
முன்னரிறைஞ்சினனிம்பமணிந்தமுடித்தென்னன். (எ)

அன்னதொர்நாமம்பெற்றனரின்றுமணிக்கூடன்
முன்னவரந்தத்தாமமவர்க்குமுடிக்கேற்று
மின்னதொர்நீராற்சண்பகமாறனென்றேபேர்
மன்னிவிளங்கினன்வங்கியசூடாமணிதானும். (அ)

சண்பகமாறன்சண்பகசுந்தரர்தம்பாடே
நண்பகமாறுநன்பணிசெய்யுநன்னாளிற்
பண்பகர்சொல்லார்தம்புடைமாரன்படுபோர்மூண்
டெண்பகவெய்வானாகியவந்தன்றிளவேனில். (கூ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மனிதர்வெங்கோடைதீர்க்கும்வசந்தமென்காலும்வேறு
துனிதவிரிளங்கால்வேண்டுஞ்சோலையுஞ்சோலைவேண்டும்
புனிதநீர்த்தடமும்வேறுபுதுமலரோடைவேண்டும்
பனிதருமதியும்வேறுபான்மதிவேண்டுங்காலம். (கo)

அண்டவான்றருமேற்சிறிச்சிவந்தெழுந்தாங்குதேமா
தண்டளிரீன்றுவர்னந்தைவரநிவந்தகாசு
கொண்டிடையழுத்திச்செய்தகுழையணிமகளிர்போல
வண்டிறைகொள்ளப்பூத்துமலர்ந்தனசெருந்தியெல்லாம். (கக)

---

(சு) இண்டை-தண்ட வடிவாகத் தொடுத்தமாலை. தொடை-சரமாகத்தொடுத்தமாலை. தாமம் - கோத்தமாலை. கன்னி - வட்டமாகத்தொடுத்தமாலை. வணங்கார்-பகைவர்.

(கூ) எண்பக-அளவிறப்ப. (கo) இளங்கால்-தென்றல்.

செங்கதிர்மேனியான்போலவிழ்ந்தனசெழும்பலாச
மங்குலூர்செல்வன்போலமலர்ந்தனகாஞ்சிதிங்கட்
புங்கவன்போலப்பூத்தபூஞ்சினைமரவஞ்செங்கை
யங்கதிராழியான்போலலர்ந்தனவிரிந்தகாயா. (கஉ)

தரைகிழித்தெழுநீர்வைகைத்தடங்கரையெக்கரல்கு
லரவமேகலைசூழ்ந்தென்னவலர்ந்துதாதுகுப்பஞாழன்
மரகதந்தழைத்துவெண்முத்தரும்பிப்பொன்மலர்ந்துவாங்குந்
திரைகடற்பவளக்காடுசெய்வனகன்னிப்புன்னை. (கங)

ஊடினர்போலவெம்பியிலையுதிர்ந்துயிரன்னாரைக்
கூடினர்போலவெங்கங்குழைவரத்தழைத்துநீங்கி
வாடினர்போலக்கண்ணீர்வாரமெய்பசந்துமைய
னீடினரலர்போற்பூத்துநெருங்கினமரங்களெல்லாம். (கச)

விழைதருகாதலார்தாமெலிவுறமெலிந்துநெஞ்சங்
குழைவுறக்குழைந்துநிற்குங்கோதிலாக்கற்பினார்போன்
மழையறுங்கோடைதீப்பமரந்தலைவாடவாடித்
தழைவுறத்தழைத்துநின்றதழீஇயபைங்கொடிகளெல்லாம். (கரு)

சேட்டிகைத்தென்காறள்ளத்தெண்மதுச்சிதறத்தும்பி
நீட்டிசைமுரலச்சாயாநின்றுபூங்கொம்பராட
னாட்டியப்புலவனாட்டநகைமுகம்வெயர்வைசிந்தப்
பாட்டிசைத்தாடாநின்றபாவைமார்போன்றவன்றே. (கசு)

மலர்ந்தசெவ்வந்திப்போதும்வகுளமுமுதிர்ந்துவாடி
யுலர்ந்துமொய்த்தளித்தேனக்கக்கிடப்பனவுள்ளமிக்க
குலந்தருநல்லோர்செல்வங்குன்றினுந்தம்பாலில்லென்
றலர்ந்தவர்க்குயிரைமாறியாயினுங்கொடுப்பரன்றே. (கஎ)

நாறியதண்ணந்தேமாநறுந்தளிர்கோதிக்கூவி
யூறியகாமர்ப்பேட்டையுருக்குவகுயின்மென்சேவல்

---

(கஉ) கதிர்-சூரியன். மங்குலூர்செல்வன் - இந்திரன். மங்குல்-மேகம். மரவம் - குங்குமமரம். ஆழியன்—திருமால்.

(கங) எக்கர் - மேடு. அரவம் - ஒலி. ஞாழல் - குங்குமமரம். மரகதம் - பசிய இலைகள். (கச) குழை - தளிர். கண்ணீர் - கண்களினின்றுஞ் சிந்தும்நீர்; கள்ளாகியநீர். பசந்து-பசுமையாய்; பசலை பூத்து. அலர் - அல்லாதவர். (கசு) திகை - திக்கு. நீட்டிசை-நெட்டிசை. (கஎ) அலம்-துன்பம். உள்ளமிக்க என்றது—பெருந்த எண்ணத்தை. (கஅ) நாறல்-தளிர்த்தல். மாறிய வேந்தன் என்றது—குறுநிலமன்னரை.

வீறியசெங்கோல்வேந்தன் வெளிப்படத்தேயங்காவன்
மாறியவேந்தன்போலவொடுங்கியமயில்களெல்லாம். (கஅ)

பொங்கரினுழைந் துவாவிபுகுந் துபங்கயந் துழாவிப்
பைங்கடிமயிலேமுல்லேமல்லிகைப்பந்தர்தாவிக்
கொங்கலர்மணங்கூட்டுண்டுகுளிர்ந் துமெல்லென் றுதென்ற
லங்கங்கேகலேகடேருமறிவன்போலியங்குமன்றே. (கசு)

தாமரைகளாஞ்சிதாங்கத்தண் குயின் முழவமேங்க
மாமருதமருங்கிள்ளேமங்கலமியம்பத் தும்பி
காமரமிசைப்பமுள்வாய்க்கைதைவாளெடுப்பவேனிற்
கோமகன் மகுடஞ்சூடியிருப்பதக்குளிர்பூஞ்சோலே. (உ0)

கலேயினுனிறைந்தவிந் துகாந்தமண்டபத்திற்செய்த
மலேயினுமெழு துமாடமருங்கினுநெருங்குசோலேத்
தலேயினுங்கமலவாவித்தடத்தினுந்தண் முத்தார
முலேயினுமன் றிக்கோடைமுடிவிடங்காணூர்மைந்தர். (உக)

நிலந்தருதிருவினுன் றநிழன்மணிமாடக்கூடல்
வலந்தருதடந்தோண் மைந்தர்வானமும்வீழும்போக
நலந்தருமகளிரோடுநாகநாடவர்தஞ்செல்வப்
பொலந்தருவனேயகாட்சிப்பூம்பொழினுகர்வான்போவார். (உஉ)

மேற்படி - வேறு.

மாத்தாண் மதமாநெ ருத்தின் மடங்கலெனச்செல்வாரும்
பூத்தாரொலிவாம்பரிமேற்புகர்மாவெனப்போவாரும்
பாத்தார்பரிதியெனவாம்பரித்தேருகைத் தூர்வாருந்
தேத்தாருளர்வண்டலம்பச்சிலம்பினடக்கின்றுரும். (உங)

நீலப்பிடிமேற்பிடிபோநெறிக்கொள்வாருந்தரள
மாலேச்சிவிகைமிசைவெண் மலராளெனச்செல்வாரு
மாலேக்கரும்பன் றுணேபோலளித்தார்ப்பரியூர்வாருங்
கோலத்தடக்கைபற்றிக்கொழுநருடன்போவாரும். (உச)

(உ0) காமரம்-இசைப்பாட்டு. (உக) செய்தமலே - செய்குன்றம். வீழும்-விரும்பும். பொலந்தரு - பொற்றருவாகிய கற்பகம். வானம்-இடவாகுபெயர்.

(உங) புகர்மா - யானே. பாத்தார்பரிதி - பன்னிருபகுதியவாயசூரியர்கள். சிலம்பு-மலே. (உச) கரும்பன்-மன்மதன். துணேஎன்றது-இரதிதேவியை.

சுருப்புக்கமழ்தேங்கண்ணித்தொடுபைங்கழலாடவருங்
கருப்புச்சிலைமன்னவனுற்கருவிப்படையன்னவரும்
விருப்புற்றெறிநீர்வைகைவெள்ளைத்தரளந்தெள்ளிப்
பொருப்பிற்குவிக்கும்புளினம்புறஞ்சூழ்சோலைபுகுவார். (உரு)

கூந்தற்பிடியும்பரியுமூர்வார்கொழுநர்தடந்தோ
ளேந்தச்சயமாதென்னத்தழுவாவிழிந்துபொழில்வாய்ப்
பூந்தொத்தலர்பொற்கொடிதாதுகுமாறென்னப்புனைந்த
சாந்தக்கலவையுகப்போய்வனமங்கையர்போற்சார்ந்தார். (உசு)

ஏமாசலமென்முலையார்நடையோவியமேயென்னப்
பூமாதவிசேர்வாரும்புன்னைநிழல்சேர்வாருந்
தேமாநிழல்சேர்வாருஞ்செருந்திநிழல்சேர்வாருங்
காமாயுதசாலைகள்போற்கைதைநிழல்சேர்வாரும். (உஎ)

கோடும்பிறைவாணுதலார்குழலைக்கருவிக்காரென்
றூடுந்தோகையவர்கண்ணுக்கிக்கணையென்றஞ்சி
யோடுங்கொடியினன்னுருருமாந்தளிரென்றயில்வா
னுடுங்குயிலன்னவர்பண்ணிசைகேட்டொதுங்கிநாணும். (உஅ)

நீடுந்தரங்கமிரங்குநிறைநீர்நிலையேயன்றிப்
பாடுஞ்சுரும்புண்கழுநீர்பைந்தாட்குமுதம்பதுமங்
கோடும்பூத்தவென்னக்கொடியேரிடையார்குழையுந்
தோடுங்கிடந்தவதனத்தொகையாற்பொலிவசோலை. (உகூ)

பிடிகளென்னநடந்தாருடன்போய்க்கொழுநர்பெருந்தண்
கொடிகண்மிடைந்தவில்லிவியக்கர்போலக்குறுகிக்
கடிகொள்பனிநீர்தெளித்துவேடைதணித்துங்கன்று
மடிகள்பிடித்துஞ்சேடியவர்கைக்குதவியாவார் (ங0)

மைவார்தடங்கண்மடவார்வளைப்பார்கொம்பின்மலரைக்
கொய்வார்குமிழ்மோந்துயிர்ப்பார்குழையுஞ்செவியுங்குழலும்
பெய்வார்மகிழ்ச்சிசெய்வார்பேராமையல்கூர
வெய்வார்கணைபோற்றைப்பக்கொழுநர்மார்பத்தெறிவார். (ஙக)

---

(உரு) படையன்னவர் - மன்மதன் சேனையாகிய பெண்கள். தெள்ளி - கொழித்து. புளினம் - மணற்குன்று.

(உசு) கூந்தற்பிடி - புறமயிரினையுடைய பெண்யானை. தொத்து - கொத்து. வனமங்கையர் - வனதேவர்கள்.

(உஎ) ஏமாசலம் - பொன்மலை. கைதை - தாழை.

(உஅ) கருவிக்கார்-சூன்முதிர்ந்தமேகம். (உகூ) தரங்கம்-அலை. கோடு - பூங்கொம்பு. (ஙக) குமிழ் என்றது - நாசியை.

முத்தேர்நகையார்வளைப்பமுகைவிண்டலர்பூங்கொம்பர்ப்
புத்தேள்வண்டும்பெடையும்புலம்பிக்குழலிற்புகுந்து
தெத்தேயெனப்பாண்செய்துதீந்தேனருந்துந்துணையோ
டொத்தேழிசைபாடிக்களுண்ணும்பாணரொத்தே. (௩உ)

மேற்படி - வேறு.

இம்பர்வீடளிக்குந்தெய்வமகளிரேயென்பார்கூற்றம்
வம்பலமெய்யேபோலும்வளைக்கையார்வளைப்பத்தாழ்ந்து
கம்பமுற்றடிப்பூச்சிந்திமலர்முகங்கண்ணீர்சோரக்
கொம்பரும்பணிந்ததென்றுலுலகியல்கூறற்பாற்றே. (௩௩)

மைக்கணுளொருத்தியெட்டாசிமிர்கொம்பைவளைக்குந்தோறுங்
கைக்குநேர்படாமைவாடுங்கடிமலர்க்கொடிபோனிற்பத்
தைக்கும்பூங்கணைவேளன்னுனொருமகன்றலைப்பட்டென்னை
யெய்க்கின்றாய்தோண்மேலேறிப்பறியெனவேந்திநின்றான். (௩௪)

தையலாளொருத்தியெட்டாமலர்க்கொம்பைத்தளிர்க்கைநீட்டி
யையநுண்மருங்குநோவவருந்தலுமாற்றாக்கேள்வ
னெய்யெனவிதுவுமென்னையூடியமகளிரேயோ
கொய்யெனவளைத்துநின்றான்கண்முத்தங்கொழிப்பநின்றாள். ()

மைக்குழலொருத்திகாதில்வட்டப்பொன்னோலையூடே
திக்கயமனையான்கொய்தசெருந்திப்பூச்செருகிநோக்கி
யிக்குழையழகிதென்றானிடுமெய்கைக்கிடுதியென்னு
யக்குழையோடும்வீசியன்பனுக்கலக்கண்செய்தாள். (௩௬)

மயிலிளம்பெடையன்னாளோர்மாதர்மாங்குடம்பைசெல்லுங்
குயிலிளம்பெடைதன்னாவிச்சேவலைக்கூவநோக்கி
யயிலிளங்களிறன்னானைக்கடைக்கணித்தளியுந்தேனும்
பயிலிளஞ்சோலைமாடோர்மாதவிப்பந்தர்சேர்ந்தாள். (௩எ)

யாசிழையொருத்தியாற்றாப்புலவியாள்பைந்தாரான்முன்
பூசகில்வாசங்காலிற்போக்கியும்புனைபூண்காஞ்சி
யோசையைச்செவியிலுய்த்துங்கலவியினுருவந்தீட்டுந்
தூசினையுடுத்தும்போர்த்துந்தூதுவிட்டவள்போனின்றாள். (௩அ)

---

(௩உ) புத்தேள்-புதுமை. (௩௩) கம்பம்-நடுக்கம்.

(௩௬) எங்கை என்றது—தங்கையாயமைந்த பரத்தையை.

(௩எ) குடம்பை-கூண்டு. களிறன்னான் என்றது-கணவனை. அளி-ஆண்வண்டு. தேன்-பெண்வண்டு. மாதவி - குருக்கத்தி.

(௩அ) புலவி - ஊடல்.

வாய்ந்தநாண்மலர்கொய்தீவான்மெய்யிலம்மலர்த்தேந்தாது
சாந்தமான்மதம்போற்சிந்திக்கிடப்பவோர்தையல்யாரைத்
தோய்ந்தசாந்தென்றாளுள்ளத்துன்னையுஞ்சுமந்துகொய்த
வாய்ந்தசண்பகத்தாதென்றுனெய்சொரியழலினின்றாள். (௩௯)

பிணியவிழ்கோதையாளோர்பேதைதன்பதிதன்னூட
றணியவந்தடியில்வீழத்தன்னிழலனையான்சென்னி
மணியிடைக்கண்டுகெங்கைமணாளனையொப்பீரெம்மைப்
பணிவதென்னென்றுநக்குப்பரிவுமேற்பரிவுசெய்தாள். (௪௦)

மதுகைவாளொருவனங்கோர்மங்கைதன்வடிவைநோக்கிப்
பதுமமேயடிகைகாந்தள்பயோதரங்கோங்குகாவிப்
புதுமலர்விழிவாயாம்பற்போதுநும்மூரலெப்போ
ததனைவாய்திறந்துகாட்டிப்போமினென்றடுத்துநின்றான். (௪௧)

விடைத்தனியேறன்னானோர்விடலையோர்வேற்கணான்முன்
கிடைத்துநும்மிடத்தென்னெஞ்சங்கெட்டுவந்தொளித்ததல்குற்
றடத்திடையொளித்ததேயோதனத்திடையொளித்ததோபூம்
படத்தினைத்திறந்துகாட்டிப்போனெனப்பற்றிச்சென்றான். (௪௨)

மாந்தளிரடியார்சாய்ப்பவனைந்தபூஞ்சினைவண்டன்னார்
கூந்தலிற்கிடந்தசெம்மற்கோதைமேல்வீழ்ந்தகற்பி
னேந்திழையவரைநீத்துப்பலர்நுகர்ந்தெச்சிலாக்கும்
பூந்தொடியவரைத்துய்க்கும்பேதையர்போன்றதன்றே. (௪௩)

கலிவிருத்தம்.

புல்லிமைந்தர்பொருள்கவர்ந்தாரென
வல்லியன்னமடந்தையர்கொய்தலி
னல்லிநாண்மலரற்றபின்கைப்பொரு
ளில்லியென்னவிளைத்தனகாவெலாம். (௪௪)

மையுண்கண்ணியர்மைந்தரொடம்மலர்
கொய்யுஞ்செல்வநுகர்ந்துகொழுங்கணு
மெய்யுந்தோயிற்கொழுநரின்வேற்றுமை
செய்யும்பொய்கைதிளைப்பச்சென்றாரரோ. (௪௫)

---

(௩௯) உன்னையும்என்றஉம்மை, நாயகன்கருத்தில் உயர்வுசிறப்பும்மையாகவும் - நாயகியின்கருத்தில் இறந்ததுதழீஇய எச்சவும்மையாகவும்பொருள் பயந்துநின்றது. (௪௦) பிணி-கட்டு. பரிவு-துன்பம். (௪௧) மூரல்-பல். மதுகை-பலம். (௪௨) படம்-வஸ்திரம்.

(௪௩) செம்மல்-பழம்பூ. பூந்தொடியவர் என்றது-விலைமாதரை.

அன்னமன்னவராடுங்கயந்தலை
நன்னர்நீலநளினங்குமுதமென்
றின்னவன்றியெழின்முல்லைசண்பகம்
பொன்னங்கோங்கமும்பூத்ததுபோன்றதே. (சசு)

கலிநிலைத்துறை.

குரவவோதியர்கயந்தலைகுறுகுமுன்கயலு
மரவும்யாமையுமலவனுமன்னமுமகன்ற
பருவரால்களுமிரிந்தனபகைஞர்மேலிட்டு
வருவரேலெதிர்நிற்பரோவலியிழந்தவரே. (சஎ)

பண்ணெனுஞ்சொலார்குடைதொறும்பன்மலர்வீழ்ந்த
தண்ணெனுந்திரையலைதொறுநிரைநிரைதாக்கல்
கண்ணுநீலமுமுகங்களுங்கமலமும்வாயும்
வண்ணவாம்பலுந்தத்தமின்மலைவனவனைய. (சஅ)

கூழைபாசியின்விரிந்திடமலர்ந்துநீர்குடையு
மாழையுண்கணார்கொங்கையுமுகங்களுமருங்கர்
சூழரும்பொடுமலர்ந்தசெந்தாமரைத்தொகுதி
யாழ்தரங்கநீரிடைக்கிடந்தலைவனவனைய. (சகூ)

தூயநீர்குடைந்தேறுந்தன்றுணைவியைத்துணைவன்
வாயுங்கண்களும்வேறுற்றவண்ணங்கண்டென்க
ணேயவின்னுயிரனையவளெங்குளாளென்றான்
காயும்வேற்கணாள்முலைதுளிப்பாட்டினாள்கண்ணீர். (ருO)

மங்கைநல்லவளொருத்திநீராடுவொன்மகிழ்ந
னங்கைபற்றினளேகுவாளவன்குடைந்தேறும்
பங்கயக்கணொளொருத்தியைப்பார்த்தனன்சீசீ
யெங்கையெச்சினீராடலேனெனக்கரைநின்றாள். (ருக)

வனைந்தபைங்கழலான்புனலாடலின்மார்பி
னனைந்தகுங்குமத்தலையெறிநளினமொட்டழுந்தப்
புனைந்தகொங்கையால்வடுப்படப்பொறித்தவள்யாரென்
றினைந்தழுங்கினளெண்ணெய்சொரியெரியெனவொருத்தி. (ரு௨)

(சசு) முல்லை, சண்பகம், கோங்கு என்பன - நீராட்டயரும் மகளிரது, பல், மேனி, தனம் இவற்றை இலக்கணையால் விளக்கி நின்றது.

(சகூ) கூழை - கூந்தல். (ரு௨) மொட்டு - அரும்பு.

வீழ்ந்தகாதலன்செய்ததீங்காகியவேலாற்
போழ்ந்தநெஞ்சினுள்புலவிநோய்பொருளவன்காண
வாழ்ந்தநீரிடையழுந்துவாள்போன்றயர்ந்தயலே
தாழ்ந்தவன்னத்தைநோக்கிக்கைதாவெனவிரந்தாள். (ருங)

கரும்புபோன்மொழியாளொருகாரிகைவதனஞ்
சுரும்புசூழ்கமலங்களுட்கமலமாய்த்தோன்ற
விரும்புகாதலனையுற்றுமெலிந்தனன்மெல்ல
வரும்புமுல்லைகண்டையத்தினீங்கிச்சென்றணைந்தான். (ருச)

களித்தகாதலன்மொக்குள்வாய்த்தன்னிழல்கண்டு
தெளித்துவாணகைசெய்யமாற்றாளென்றுசீறித்
தளிர்க்கைநீட்டினள்கண்டிலடடவினள்சலத்து
ளொளித்தியோவெனுவுதைத்தனள்பேதைமாதொருத்தி. (ருரு)

நாறுசுண்ணமென்கலவையுநானமுந்தம்மின்
மாறிவீசிநின்றுவோர்மாலைதாழகலத்
தூறுபாடறவந்தரத்தளிகவர்ந்துண்ப
வாறுசெல்பவர்பொருள்வெளவுமரட்டரேபோல. (ருசு)

கொய்யுநீலமுங்கமலமுங்கொண்டுகொண்டனங்க
னெய்யும்வாளியினெறிவராலெறிந்திடுமெலரைக்
கையினுற்புடைத்தெறிந்தவர்கதிர்முகம்படக்கண்
டைதுவாணகைசெய்தகமகிழ்ச்சியுளாழ்வார். (ருஎ)

வாசமென்பனிநீரொடுசுண்ணமும்வாரி
வீசுவாரிளம்பிடியொடுவேழமாநிரைபோற்
காசுலாந்தொடிவில்லிடக்கைகளாலள்ளிப்
பூசுசாந்தவையழிந்திடப்புனிதநீரிறைப்பார். (ருஅ)

அப்பெரும்புனற்றடங்குடைந்தாடுவோராயத்
தொப்பருந்தனியொருமகளொருவன்றன்முகத்துத்
துப்பைவென்றசெந்துவரிதழ்ச்செய்யவாய்த்தூநீர்
கொப்பளித்தனளாம்பலந்தேனெனக்குடித்தான். (ருகூ)

ஆழமவ்விடைச்செல்லெலைநில்லெனவடுத்தோர்
வேழமன்னவன்விலக்குவான்போலொருவேற்க

---

(ருங) வீழ்தல்-விரும்பல். கைதா-கைகொடு; தாழை.
(ருரு) மொக்குள்-நீர்க்குமிழி. தன்னிழல் என்றது—மனைவியின் பிரதிபிம்பத்தை. (ருசு) ஊறுபாடு - கவலை. அரட்டர்-குறுநிலமன்னர். (ருஅ) வில் - ஒளி. (ருகூ) துப்பு-பவளம். துவர்-செம்மை.

ணேழைதன்னைக்கையால்வளைத்தேந்திவண்டறைதார்
சூழுமார்பணைத்திரதிதோடோய்ந்தவனொத்தான். (சுo)

மாசினுனமுஞ்சூடியமாலையுமெய்யிற்
பூசுசாந்தமுமார்பமும்பொய்கைக்குக்கொடுத்து
வாசமெய்யினிலம்புயவாசமுமயங்க
வாசைமைந்தரோடிளையவரகன்கரையடைவார். (சுக)

தையலார்சிலர்நனைந்தநுண்டானையுட்பொதிந்த
மெய்யெலாம்வெளிப்படக்கரையேறுவான்வெள்கி
யையதாபொலந்துகிலெனவன்பரைக்கூய்க்கண்
செய்யமாயனைக்கேட்குமாய்ச்சிறுமிபரொத்தார். (சுஉ)

உலத்தைவென்றதோளாடவருச்சிவேற்பொறித்த
வலத்தகத்தொடுகுங்குமமளைந்துசெம்புனலாய்
மலர்த்தடங்குடைந்தவர்க்குநீராசனவட்டக்
கலத்தையொத்தனசுற்றநின்றுரொத்தகடிக்கா. (சுங)

பட்டும்பன்னிறக்கலிங்கமும்பன்மணிக்கலனுங்
கொட்டுஞ்சாந்தமுநானமுங்குங்குமச்சேறுங்
கட்டுந்தாமமுந்தமதுகட்டழகெலாங்கவர
மட்டுண்கோதையராடவர்மனமெலாங்கவர்ந்தார். (சுச)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

காவியுங்கமலப்போதுங்கள்ளொழுகாம்பற்போது
மாவியுட்பூத்தபோலவாடியுட்பூப்பநோக்கி
யேவிரண்டன்னகண்ணுலனங்கனையேவல்கொள்ளும்
பூவிரிபொலங்கொம்பன்னுர்புதுமதுநுகரப்புக்கார். (சுரு)

பொன்னினும்வெள்ளியாலும்பளிங்கினும்புலவன்செய்த
நன்னிறக்கலத்திற்கூர்வாணட்டெனவாக்கிச்சேடி
மின்னனாரளித்ததேறற்சிறுதுளிவிரலிற்றெள்ளித்
துன்னிவீழ்களிவண்டோச்சித்தொண்டையங்கனிவாய்வைப்பார். ()

---

(சுக) மைந்தர் என்றது—கணவரை. (சுங) அலத்தகம்-செம்பஞ்சுக்குழம்பு.

(சுரு) காவி-நீலோற்பலம். ஏ-அம்பு. (சுசு) சிறுதுளிவிரலிற்றெள்ளி என்றது—கள்ளுண்போர் மதுவைவிரலாற் றெட்டுத்தெறித்துப் பின்னருண்ணும் முறைமையை. தொண்டை-கோவை.

வள்ளத்துவாள்போல்வாக்குமதுக்குடந்தன்பாற்பெய்த
கொள்ளைத்தெண்மதுவைக்கொள்ளைகொளவந்தவள்ளமீதென்
றுள்ளத்துவெகுண்டுவைவாளுன்றிமார்பிடப்பதொத்த
கள்ளைச்சூழ்காளைவண்டுசெருச்செயல்காண்பவொத்த. (சுஎ)

தணியலுண்டுள்ளஞ்சோருமொருமகடணியலுண்பான்
பிணியவிழ்கோதையாளோர்பெண்மகள்கலத்தில்வாக்குந்
துணிமதுத்தாரைதன்னைவாளெனத்துணிந்துபேதாய்
திணிகதிர்வாளால்வள்ளஞ்சிதைத்தியோவென்றுநக்காள். (சுஅ)

மலர்தொறுஞ்சிறுதேனக்கித்திரிவண்டுமெடவார்தங்கைத்
தலனெடுத்தோச்சவோடாதழீஇத்தடஞ்சாடிமொய்ப்ப
விலமெனப்பல்லோர்மாட்டுமிரந்திரந்தின்மைநீங்கா
தலமரும்வறியோர்வைத்தநிதிகண்டாலகல்வரேயோ. (சுகூ)

உண்டவளொருத்திகள்வாயுதிக்குந்தன்முகமுங்கண்ணுங்
கண்டுதாமரைகள்வேலைமுளைத்ததக்கள்ளையார
மொண்டுணுப்பேதைத்தும்பியம்மதுமுளரிவார்தே
னுண்டுளிசெறிவதென்னுநொடித்துக்கைபுடைத்துநக்காள். (எ0)

மங்கையாளொருத்திதானுண்டெஞ்சியமதுவுட்டோன்றுந்
திங்களைநோக்கியென்னைப்பிரிவின்கட்டியாய்ச்சுட்டா
யிங்குவந்தகப்பட்டாயேயினிவிடேன்கிடத்தியென்று
வங்கொருவள்ளங்கொண்டுசேமித்தாளருந்தல்செய்யாள். (எக)

வெவ்வியநறவமுண்டவிளங்கிழையொருத்திகையிற்
கௌவியவாடிதன்னிற்கருங்கயனெடுங்கட்சேப்புங்
கொவ்வைவாய்விளர்ப்புநோக்கியென்னலங்கூட்டுண்டேகு
மௌவியமனத்தான்யாரென்றயர்கின்றாளயலாரெள்ள. (எஉ)

ஒருத்திகள்ளுண்கின்றுடன்னுருவமந்நறவுட்டோன்ற
வொருத்தியென்னுடன்வந்துண்பாள்காணெனவுண்டதோழி
யொருத்திவந்தென்செய்வாடன்னுருவமுநோக்கிப்பேதா
யொருத்தியோவிருவரென்றுளெச்சிலென்றுகுத்துநக்காள். (எங)

---

(சுஎ) காண்ப என்றது—பகரவீற்றுயர் திணைப்பலர்பாற்படர்க்கைவினை முற்றுதலின், காண்போர் எனப்பொருள்பயந்துநின்றது.

(சுஅ) தணியல் - கள். (எ0) வேலை - கடல். (எக) சேமித்தல்- சிறைப்படுத்தல். (எஉ) விளர்ப்பு-வெண்மை. கூட்டுணல் - கொள்ளைகொள்ளல்.

சாடியுண றவமுண்டாடன் னுறுவே றுபாட்டை
யாடியுண்ணேக்கிநாணேவல்லனேவெனத்தான்கைக்கொண்
டோடினர்பிறருமுண்டோவுயிரன்னுன்வந்திங்கென்னைத்
தேடினென்செய்கேனென்னைத்தேடித்தாசேடியென்றுள். (எச)

களித்தவளொருத்திநின்றவாடியுட்கணவன்றன்பி
ஞெளித்தவனுருவுந்தானுநேர்படவுருத்துநோக்கித்
துளித்தகண்ணீரளாகியேதிலாடோடோய்ந்திப்பங்
குளித்தனையிருத்தியோவென்றுதைத்தனள்கோபமூண்டாள். (எரு)

இளம்புளிந்தயிர்விராயவின்சுவைபொதிந்தசோறு
வளம்படவிருந்திஞேமெருந்துவார்வசந்தவீணை
களம்படுமெழாலிஞேடுகைவிரனடத்திக்காம
னுளம்புகுந்தலைப்பவெண்ணெய்ப்பாவைபோலுருகிச்சோர்வார். ()

இவ்விளவேனிற்காலத்தின்னுயிர்த்துணைவியோடுஞ்
செவ்வியசெங்கோனேமிச்செண்பகமாறனேர்நாள்
கைவ்வினைவல்லோன்செய்தகதிர்விடுகொந்தக்குன்றில்
வெவ்வியவேடைநீப்பானிருந்தனன்வேறுவைகி. (எஎ)

மாந்தளிரீன்றுகோங்குவண்டளவரும்பித்தண்டேங்
காந்தள்செங்கமலமாம்பல்சண்பகங்கழுநீர்பூத்துச்
சாய்ந்தமென்கொடியுந்தானுந்தனியிடத்திருப்பானேரே
யாய்ந்ததோர்நாற்றந்தோன்றவசைந்ததுவசந்தத்தென்றல். (எஅ)

வெவ்வியவேலான்வீசும்வாசமோந்தீதுவேறு
திவ்வியவாசமாகவிருந்ததுதென்றல்காவில்
வெளவியவாசமன்றுகாலுக்கும்வாசமில்லை
யெவ்வியல்வாசமேயோவிதுவெனவெண்ணங்கொள்வான். (எகூ)

திரும்பித்தன்றேவிதன்னைநோக்கினுன்றேவியைம்பா
விரும்பித்தைவாசமாகியிருந்ததுகண்டிவ்வாசஞ்

(எசு) வசந்தவீணை என்றது—பாலையாழினை. எழால்என்றது-பெரும்பாலை எழனுள், நாகநாதம் ஆசரி, தோடி, கௌளி, காந்தாரம், செந்துருத்தி, உதயகிரிமுதலிய செம்பாலையை.

(எஎ) கைவினை - சிற்பத்தொழில். (எஅ) தளவு-முல்லை மாந்தளிர்முதலிய உவமானச்சொற்கள், மேனிமுதலிய உவமேயங்களை யுணர்த்திநின்றது. (எகூ) திவ்ய—திவ்-விண்ணுலகில்,ய-பிறப்பது.

(அ0) ஐம்பால் என்றது—முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சைஎன ஐம்பகுப்பினவாயமைந்த கூந்தலை. பித்தை-கூந்தல்.

சுரும்பிற்குந்தெரியாதென்னுச்சூழ்ந்திறும்பூதுகொண்டீ
தரும்பித்தைக்கியல்போசெய்கையோவெனவையங்கொண்டான்.

ஐயுறுகருத்தையாவராயினுமறிந்துபாடல்
செய்யுநரவர்க்கேயின்னவாயிரஞ்செம்பொனென்றக்
கையுறைவேலானீந்தபொற்கிழிகைக்கொண்டேகி
மெய்யுணர்புலவர்முன்னுத்தூக்கினுர்வினைசெய்மாக்கள். (அக)

வங்கத்தார்பொருள்போல்வேறுவகையமைகேழ்விநோக்கிச்
சங்கத்தாரெல்லாந்தம்மிற்றனித்தனித்தேர்ந்துதேர்ந்து
துங்கத்தார்வேம்பனுள்ளஞ்சூழ்பொருடொவியுற்ற
பங்கத்தாராகியெய்த்துப்படருறுமனத்தரானுர். (அஉ)

கலிவிருத்தம்.

அந்தவேலையிலாதிசைவரில்
வந்தமாணவன்மணஞ்செய்வேட்கையான்
முந்தையாச்சிமமுயலும்பெற்றியான்
றந்தைதாயிலான்றருமியென்றுளான். (அங)

ஒருவனுன்முகத்தொருவன்மார்புறை
திருவனுடருந்தேவனுலுரு
வருவனுலகன்றுனைத்தன்கலி
வெருவநாடிமுன்வீழ்ந்துவேண்டுவான். (அச)

தந்தைதாயிலேன்றனியனுகிய
மைந்தனேன்புதுவதுவைவேட்கையேன்
சிந்தைநோய்செயுஞ்செல்லறீர்ப்பதற்
கெந்தையேயிதுபதமென்றேத்தியே. (அரு)

நெடியவேதநூனிறையவாகம
முடியவோதியமுறையினிற்கெனும்

---

(அக) கிழி-முடிப்பு. (அங) மாணவன்-பிரமசாரி.

(அச) ஒருவன் என்றது-தனக்கோர் ஒப்புயர்விகந்துநின்றசிவ பெருமானை. திரு-இலக்குமி. உருவருவநாலகன்றுன் என்றது-மகேஸ்வரன், உருத்திரன், திருமால், பிரமன்என்னும் உருவமும், சிவம், சத்தி, நாதம், விந்து என்னும்அருவமும்; சதாசிவமென்னும் அருவுருவமுமாகிய முத்திரப்பட்ட தத்துவங்களை யதிட்டித்து நிற்கும் சிவமுதற் பிரமனீருகிய முத்திறத்தொன்பது வர்க்கங்களிலும் வேற்றுமையின்றிக் கலந்துநின்று. அவ்வத்தொழில்களைநடத்தித், தன்னியல்பு சிறிதும் விகாரமின்றிநிற்கும் சுத்தசிவத்தை.

(அரு) செல்லல் - வறுமை.

வடிவிலில்லறவாழ்க்கையின் றிநின்
னடியருச்சனைக்கருகனவனே. (அசு)

ஐயயாவையுமறிதியேகொலோ
வையைநாடவன்மனக்கருத்துணர்ந்
துய்யவோர்கவியுரைத்தெனக்கருள்
செய்யவேண்டுமென்றிரந்துசெப்பினான். (அஎ)

தென்னவன்குலதெய்வமாகிய
மன்னர்கொங்குதேர்வாழ்க்கையின்றமிழ்
சொன்னலம்பெறச்சொல்லிநல்கினா
ரின்னநீர்ந்தவனிறைஞ்சிவாங்கினான். (அஅ)

பொற்றளிர்ச்சடைப்புவனநாயகன்
சொற்றபாடல்கைக்கொண்டுதொன்னிதி
பெற்றெடுத்தவன்போன்றுபீடுறக்
கற்றநாவலர்க்கழகநண்ணினான். (அகூ)

கல்வியாளர்தங்கையினீட்டினான்
வல்லையாவரும்வாங்கிவாசியர்ச்
சொல்லின்செல்வமும்பொருளுந்தூக்கியே
நல்லநல்லவென்றுவகைநண்ணினார். (கூ0)

அளக்கில்கேள்வியாரரசன்முன்புபோய்
விளக்கியக்கவிவிளம்பினார்கடன்
னுளக்கருத்துநேரொத்தலாற்சிரந்
துளக்கிமீனவன்மகிழ்ச்சிதூங்கினான். (கூக)

உணர்ந்தகேள்வியாரிவரொடொல்லைபோய்
புணர்ந்தவாயிரம்பொன்னுமின்றமிழ்
கொணர்ந்தவேதியன்கொள்கவின்றெனு
மணந்ததாரினான்மகிழ்ந்துநல்கினான். (கூஉ)

வேந்தனேவலால்விபுதர்தம்மொடும்
போந்துமீண்டவைப்புறம்புதூங்கிய
வாய்ந்தபொற்கிழியறுக்குநம்பியை
நேர்ந்துகீரனில்லெனவிலக்கினான். (கூங)

---

(கூங) விபுதர் என்றது—தெய்வத்தன்மை பொருந்திய சங்கப் புலவரை.

குற்றமிக்கவிக்கென்றுகூறலுங்
கற்றிலானெடுங்காலம்வெம்பசி
யுற்றவன்கலத்துண் ணுமெல்லைகைப்
பற்றவாடினான்பண்புபற்றினன். (௯௪)

உலர்ந்தநெஞ்சுகொண்டொதுங்கிநாயக
னலந்தருங்கழனண்ணினானவன்
மலர்ந்தபாடல்கொண்டறிஞர்வைகிடத்
தலர்ந்தசிந்தைகொண்டடைந்தமைந்தனே. (௯௫)

செய்யுள்கொண்டுபோய்த்திருமுன்வைத்துளப்
பையுள்கொண்டவப்பனவனென்னைநீ
மையுள்கண்டவிவ்வழுவுபாடலைக்
கையுணல்கினாய்கதியிலேற்கெனா. (௯௬)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வறுமைநோய்பிணிப்பப்பன்னாள்வழிபடுமடியேனின்பாற்
பெறுபொருளிழந்தேனென்றுபேசிலேன்யார்க்குமேலாங்
கறைகெழுமிடற்றோய்நின்றன்கவிக்குற்றஞ்சில்வாழ்நாட்சிற்
றறிவுடைப்புலவர்சொன்னாலாருனைமதிக்கவல்லார். (௯௭)

எந்தையிவ்விகழ்ச்சிநின்னதல்லதையெனக்கியாதென்னாச்
சிந்தைநோயுழந்துசைவச்சிறுவனின்றிரங்கயார்க்கும்
பந்தமும்வீடும்வேதப்பனுவலும்பயனுமான
சுந்தரவிடங்கனங்கோர்புலவனாய்த்தோற்றஞ்செய்தான். (௯௮)

கண்டிகைமதாணியாழிகதிர்முடிவயிரம்வேய்ந்த
குண்டலங்குடிகொண்டாகத்தழகெலாங்கொள்ளைகொள்ளத்
தண்டமிழ்மூன்றும்வல்லோன்றானெனக்குறியிட்டாங்கே
புண்டரநுதலிற்பூத்துப்பொய்யிருள்கிழித்துத்தள்ள. (௯௯)

விரிகதிர்ப்படாத்திற்போர்த்தமெய்ப்பையுளடங்கிப்பக்கத்
தெரிமணிக்கடகத்திண்டோளிளையவரடைப்பையோடுங்
குருமணிக்களாஞ்சியம்பொற்கோடிகந்தாங்கமுத்தாற்
புரிமதிக்குடைக்கீழ்ப்பொற்காற்கவரிபால்புரண்டுதுள்ள. (௧00)

சொல்வரம்பிகந்தபாதமென்பதுதோன்றவேத
நல்லபாதுகையாய்ச்சூடநவின்றனகற்றுப்பாட

(௯௫) அவன்என்றது - சோமசுந்தரக்கடவுளை.
(௯௬) பையுள் - கவலை. (௯௯) பொய்யிருள்-மலவிருள்.

வல்லவர்மறையினாறுமனுமுதற்கலைபோற்பின்பு
செல்லநூலாய்ந்தோர்வைகுந்திருந்தவைக்களத்தைச்சேர்ந்தான். ()

ஆரவைகுறுகிநேர்நின்றங்கிருந்தவரைநோக்கி
யாரைநங்கவிக்குக்குற்றமியம்பினரென்னமுன்னங்
கீரனஞ்சாதுநானேகிளத்தினேனென்றானின்ற
சீரணிபுலவன்குற்றம்யாதெனத்தேராக்கீரன். (கOஉ)

சொற்குற்றமின்றுவேறுபொருட்குற்றமென்றான்றூய
பொற்குற்றவேணியண்ணல்பொருட்குற்றமென்னையென்றான்
றற்குற்றம்வருவதோரான்புனைமலர்ச்சார்பாலன்றி
யற்குற்றகுழற்குநாற்றமில்லையேயென்றனையன். (கOஙு)

பங்கயமுகமென்கொங்கைப்பதுமினிகுழலோவென்ன
வங்கதுமனைத்தேயென்றானாலவாயுடையான்றெய்வ
மங்கையர்குழலோவென்னவன்னதுமந்தாரத்தின்
கொங்கலரளைந்துநாறுங்கொள்கையாற்செய்கைத்தென்றான். ()

பரவிநீவழிபட்டேத்தும்பரஞ்சுடர்திருக்காளத்தி
யரவுநீர்ச்சடையார்பாகத்தமர்ந்தஞானப்பூங்கோதை
யிரவினீர்ங்குழலுமற்றேவெனவஃதுமற்றேயென்று
வெருவிலான்சலமேமுற்றச்சாதித்தான்விளைவுநோக்கான். (கOகு)

கற்றைவார்சடையானெற்றிக்கண்ணினைச்சிறிதேகாட்டப்
பற்றுவானின்னுமஞ்சானும்பரார்பதிபோலாக
முற்றுநீர்கண்ணானுனுமொழிந்தநும்பாடல்குற்றங்
குற்றமேயென்றான்றன்பாலாகியகுற்றந்தேரான். (கOசு)

கலிநிலைத்துறை.

தேய்ந்தநாண்மதிக்கண்ணியானுதல்விழிச்செந்தீப்
பாய்ந்தவெம்மையிற்பொறாறுபொற்பங்கயத்தடத்து
ளாய்ந்தநாவலன்போய்விழுந்தாழ்ந்தனனவனைக்
காய்ந்தநாவலனிம்மெனத்திருவுருக்கரந்தான். (கOஎ)

தருமிக்குப்பொற்கிழியளித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் சுக - க்கு - திருவிருத்தம் - உகுஙகூ.

---

(கOக) மறையினாறும் என்றது—சிட்சைமுதலியசடங்கங்களை.
(கOஉ) ஆரவை - நிறையவை.
(கOஙு) பொற்குற்றவேணி என்றதில்-குற்றஎன்பது குறுகிய வென்னும் பொருளது. (கOச) மந்தாரம்-பஞ்சதருக்களிலொன்று.

சிவமயம்.

ஐம்பத்துமூன்றாவது,

# கீரனைக்கரையேற்றியபடலம்.

கலிநிலைத்துறை.

மாரனைப்பொடிகண்டவனந்தணமைந்தனுக்
காரநற்கனகக்கிழியீந்ததறைந்தன
மேரனத்திரள்சூழ்மலரோடையிடத்தினுங்
கீரனைக்கரையேற்றியவாறுகிளத்துவாம். (க)

தாழ்ந்தவேணியனெற்றிமுளைத்ததழற்கணாற்
போழ்ந்தநாவலனுடகபங்கயப்பொய்கைவாய்
வீழ்ந்தரும்படர்வேலையில்வீழ்ந்தனன்விம்முறச்
சூழ்ந்தநாவலர்கண்டுபொறாதுதுளங்குவார். (உ)

என்றவேந்தனிலாக்குடியீட்டமுமின்கதிர்
கான்றநாயகமாமணிபோகியகண்டியு
மான்றஞானமிலாதவர்கல்வியுமானதே
சான்றகீரனிலாதவைகூடியசங்கமே. (ங)

ஐயசொற்பொருடன்வடிவானவராலவாய்
மைதழைத்தமிடற்றினர்தம்மொடும்வாதுதான்
செய்தவிப்பிழையோபெரிதெப்படிதீருமோ
யுய்வதற்புதமேயெனயாவருமுன்னினர். (ச)

எய்திவெள்ளிமலைபெயர்த்தானுமிறுத்ததன்
கையில்வீணைதொட்டின்னிசைபாடக்கனிந்தவன்
செய்ததீங்குபொறுத்ததுமன்றித்திண்டேரொடு
மொய்கொள்வாளுங்கொடுத்தனன்புண்ணியமூர்த்தியே. (ரு)

யாவராலுமகற்றரிதிப்பிழையாவர்க்குந்
தேவராமவரேதிருவுள்ளந்திரும்பினாற்
போவதேயிதுவேதுணிபென்றுபுகன்றுபோய்ப்
பாவலோர்பரன்றாணிழலிற்பணிந்தேத்துவார். (சு)

திருத்தனேசரணஞ்சரணம்மறைச்சென்னிமே
னிருத்தனேசரணஞ்சரணந்நிறைவேதநூ
லருத்தனேசரணஞ்சரணந்திருவாலவா
யொருத்தனேசரணஞ்சரணங்களுனக்குநாம். (எ)

---

(எ) திருத்தன் - விசுத்ததேகமுடையவன்.

பாயுமால்விடைமேல்வருவோர்பல்லுயிர்க்கெலாந்
தாயுந்தந்தையுமாகுநின்றண்ணளிதாமரைக்
கேயுமாதவன்போனல்லதீயவியற்றினார்க்
காயுமின்பமுந்துன்பமுமாக்குவதாதலால். (அ)

அத்தகற்றசெருக்கினறிவழிகீரனின்
வித்தகக்கவியைப்பழுதென்றவிதண்டயான்
மத்தகக்கண்விழித்துவெதுப்பின்மலர்ந்தபொன்
முத்தகக்கமலத்திடைவீழமுடுக்கினாய். (கூ)

இருணிறைந்தமிடற்றடிகேளினியிப்பிழை
கருணைசெய்துபொருத்தருளென்றுகபிலனும்
பரணனும்முதலாகியபாவலர்யாவருஞ்
சரணமென்றுவிழுந்திறந்தாரடிசாரவே. (க0)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அக்கீரவேலையாலமயின்றவெங்கருணைவள்ள
லிக்கிரமழலைத்தீஞ்சொலிறைவியோடெழுந்துபோந்து
நக்கீரன்கிடந்தசெம்பொனளினப்பூந்தடத்துஞாங்கர்ப்
புக்கிரமதுரத்தீஞ்சொற்புலவர்தங்குழாத்துணின்றான். (கக)

அனற்கணானோக்கினான்பின்னருட்கணானோக்கவாழ்ந்த
புனற்கணேகிடந்தகீரன்பொறிபுலன்கரணமெல்லாங்
கனற்கனார்தமவேயாகக்கருணைமாகடலிலாழ்ந்து
வினைக்கணேயெடுத்தயாக்கைவேறிலன்புருவமானான். (கஉ)

போதையாருலகமீன்றபுனிதையார்பரஞானப்பூங்
கோதையார்குழற்குத்தீங்குகூறியகொடியநாவின்
றீதையார்பொறுப்பரேயோவவரன்றித்திருக்காளத்திக்
காதையார்குழையினாரைக்காளத்திகைலையென்னா. (கங)

எடுத்தசொன்மாறிமாறியிசையநேரிசைவெண்பாவாற்
றொடுத்தவந்தாதிசாத்தத்துணைச்செவிமடுத்துநேர்வந்

(கூ) விதண்டை - பிறர்கூறுங் கூற்றாலக் கூற்றை மறுத்துத் தன்னுட்கோளை நாட்டல்.

(கக) கீரம்-பால்; இது க்ஷீரமென்பதின்றிரிபு. இக்கு-கரும்பு. நக்கீரன் - உயர்ந்தசொல்லையுடையவன். (கங) போதம்-ஞானம்.

(கச) எடுத்தசொன்மாறிமாறி என்றது - ஒருபாசுரத்தில்கைலையையும், மற்றொரு பாசுரத்தில் காளத்தியையும், சிறப்பித்துப் பாடியதை.

தடுத்தவன்கையைப்பற்றியகன்கரையேற்றினர்தாள்
கொடுத்தெழுபிறவிவேலைக்கொடுங்கரையேற்றவல்லார். (கச)

கைதந்துகரையேறிட்டகருணையங்கடலைத்தாழ்ந்து
மைதந்தகயற்கணுளை வந்தித்துத்தீங்குநன்கு
செய்தந்தோர்க்கிகலுமன்புஞ்செய்தமைபொருளாச்செய்யுட்
பெய்தந்துபாடுகின்றான்பிரானருணுடுகின்றான். (கரு)

அறனிலானிழைத்தவேள்வியழித்தபேராண்மைபோற்றி
மறனிலாத்தண்டிக்கீந்தமாண்பெருங்கருணைபோற்றி
கறுவிவீழ்கூற்றைக்காய்ந்தகனைகழற்கமலம்போற்றி
சிறுவனுக்கழியாவாழ்நாளளித்தருள்செய்திபோற்றி. (கசு)

சலந்தரனுடலங்கீண்டசக்கரப்படையாய்போற்றி
வலந்தருமதனைமாயோன்வழிபடக்கொடுத்தாய்போற்றி
யலர்ந்தசெங்கமலப்புத்தேணடுச்சிரமரிந்தாய்போற்றி
சிலந்தியைமகுடஞ்சூட்டாவரசருள்செல்வம்போற்றி. (கஎ)

திரிபுரம்பொரியநக்கசேவகம்போற்றிமூவர்க்
கருளியதலைமைபோற்றியனங்கனையாகந்தீய
வெரியிடுநயனம்போற்றியிரதிவந்திரப்பமீளக்
கரியவன்மகனுக்காவியுதவியகருணைபோற்றி. (கஅ)

நகைத்திடவந்தவந்தநகுசிரந்திருகிவாங்கிச்
சிகைத்திருமுடிமேல்வைத்ததிண்டிறல்போற்றிகோயி
லகத்தவிசுடரைத்தூண்டுமெலிக்கரசாளமூன்று
சகத்தையுமளித்ததேவர்தம்பிரான்சரணம்போற்றி. (ககூ)

பொருப்பகழ்ந்தெடுத்தோன்சென்னிபுயமிறமிதித்தாய்போற்றி
யிருக்கிசைத்தவனேபாடவிரங்கிவாள்கொடுத்தாய்போற்றி
தருக்கொடுமிருவர்தேடத்தழற்பிழம்பானாய்போற்றி
செருக்குவிட்டவரேபூசைசெய்யநேர்கின்றாய்போற்றி. (உ0)

பருங்கைமால்யானையேனம்பாய்புலியரிமான்மீன
மிருங்குறள்யாமைகொண்டவிகல்வலிகடந்தாய்போற்றி

---

(கரு) பெய்தந்து - அமைத்து. (கசு) அறனிலான் - தக்கன். சண்டி - சண்டேசுரநாயனர். (கஅ) மூவர் என்றது-வித்துன்மாலி, தாருகாக்கன், கமலாக்கனென்னுந்திரிபுராதிகளை. கரியவன்-திருமால். (ககூ) நகுசிரம் - வெண்டலை.

குரங்குபாம்பெறும்புநாரைகோழியாணலவன்றேரை
கருங்குரீஇக்கழுகினன்புக்கிரங்கியகருணைபோற்றி. (உக)
சாலநானிழைத்ததீங்குக்கென்னையுந்தண்டஞ்செய்த
கோலமேபோற்றியஞ்சிக்கொடியனேன்றொடுத்தபுன்சொன்
மாலைகேட்டென்னையாண்டமலைமகண்மணாளபோற்றி
யாலவாயடிகள்போற்றியம்மைநின்னடிகள்போற்றி. (உஉ)

கலிநிலைத்துறை.

ஆவலந்தனேனடியனேற்கருளருளென்னக்
கோவமும்பிரசாதமுங்குறித்துரைபனுவற்
பாவலங்கலாற்பரனையும்பங்கிலங்கயற்கட்
பூவைதன்னையுமுறைமுறைபோற்றியென்றேத்தா. (உங)
தேவதேவனைப்பின்பெருந்தேவபாணியொடுந்
தாவிலேழிசையேழுகூற்றிருக்கையுஞ்சாத்திப்
பூவர்சேவடிசென்னிமேற்பூப்பவீழ்ந்தெழுந்தான்
பாவலோர்களுந்தனித்தனிதுதித்தனர்பணிந்தார். (உச)
துதித்தகீரனுக்கின்னருள்சுரந்துநீமுன்போன்
மதித்தநாவலர்குழாத்திடைவதியெனமறைநூ
லுதித்தநாவினர்கருணைசெய்துருக்கரந்தயன்சேய்
விதித்தகோயில்புக்கமர்ந்தனர்விளங்கிழையோடும். (உரு)
கற்றகீரனுங்கலைஞருங்கழகமண்டபத்தி
லுற்றவாடகக்கிழியறுத்தந்தணற்குதவிக்
கொற்றவேந்தனும்வரிசைகள்சிலசெயக்கொடுப்பித்
தற்றநீங்கியகல்வியின்செல்வராயமர்ந்தார். (உசு)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

சண்பகமாறனென்னுந்தமிழர்தம்பெருமான்கூட
லம்பகநுதலினானையங்கயற்கண்ணினாளை
வம்பகநிறைந்தசெந்தாமரையடிவந்துதாழ்ந்து
நம்பகநிறைந்தவன்பாற்பல்பணிநடத்திவைகும். (உள)

கீரனைக்கரையேற்றியபடலம் முற்றிற்று.

ஆ படலம் சுஉ - க்கு திருவிருத்தம் - உருசுசு.

---

(உஉ) மாலை-திருவந்தாதி. (உங) பனுவல்-கோபப்பிரசாதம்.
(உச) ஏழிசைஎன்றது - சப்தசுரங்களை.
(உரு) அயன்சேய் - விஸ்வகர்மன்.

உ

சிவமயம்.

ஐம்பத்துநான்காவது,

# கீரனுக்கு இலக்கணமுபதேசித்தபடலம்.



அறுசீரடியாசிரியவிருத்தம்.

கொன்றையந்தெரியல்வேந்தைகூடலெம்பெருமான்செம்பொன்
மன்றலங்கமலத்தாழ்ந்துவழிபடுநாவலோனை
யன்றகன்கரையேறிட்டவருளுரைசெய்தேமிப்பாற்
றென்றமிழனையான்றேறத்தெருட்டியதிறனுஞ்சொல்வாம். (க)

முன்புநான்மாடக்கூடன்முழுமுதலாணையாற்போ
யின்புறவறிஞரீட்டத்தெய்தியாங்குறையுங்கீரன்
வன்புறுகோட்டந்தீர்ந்துமதுரையெம்பெருமான்றாளி
லன்புறுமனத்தனாகியாய்ந்துமற்றிதனைச்செய்வான். (உ)

கட்டவிழ்கடுக்கையண்ணல்கண்ணினாலவிந்தகாளை
மட்டவிழ்மலரோனாலுமாயவனாலுங்காக்கப்
பட்டவனல்லனன்னானுதல்விழிப்படுதீநம்மைச்
சுட்டபோதுருப்பந்தீர்த்துக்காத்ததிச்சுவணகஞ்சம். (ஙு)

இப்பெருந்தடமேயெம்மையெம்மையுங்காப்பதென்னாக்
கப்பிலாமனத்தான்மூன்றுகாலமுமூழ்கிமூழ்கி
யப்பனையாலவாயெம்மடிகளையடியார்சேம
வைப்பினையிறைஞ்சிநித்தம்வழிபடுநியமம்பூண்டான். (ச)

மையறுமனத்தான்வந்துவழிபடுநியமநோக்கிப்
பையரவாரம்பூண்டபரஞ்சுடர்மாடக்கூட
லையனுமணியனாகியகமகிழ்ந்தவனுக்கொன்று
செய்யநன்கருணைபூத்துத்திருவுளத்திதனைத்தேர்வான். (ரு)

இலக்கணமிவனுக்கின்னுந்தெளிகிலவிதனாலாய்ந்த
நலத்தசொல்வழூஉச்சொலென்பதறிகிலனவைதீர்கேள்விப்
புலத்தவர்யாரைக்கொண்டுபோதித்துமிவனுக்கென்னா
மலைத்தனுவளைத்தமுக்கண்மன்னவனுன்னுமெல்லை. (சு)

---

(க) தமிழ்-கருவியாகுபெயராய் நூலின்மேல் நின்றது.

(உ) கோட்டம்-மாறுபாடு. (ஙு) சுவணகஞ்சம்-பொற்றாமரை.

(ச) கப்பிலாமனம்-பிளவுபடாதமனம்; எனவே ஒன்றுபட்ட மனம் என்பதுபொருள்.

பங்கயச்செங்கைகூப்பிப்பாலினேர்மொழியாள்சொல்வா
ளங்கணுவங்கைநெல்லிக்கனியெனவனைத்துங்கண்ட
புங்கவாநினதுசங்கைக்குத்தரம்புகலவல்லா
ரெங்குளாரேனுமென்னெஞ்சுதிப்பதொன்றிசைப்பேனையா. (எ)

பண்டொருபோதுவெள்ளிப்பனிவரையிடத்துன்பாங்கர்ப்
புண்டவிழ்குலிசக்கோமான்பூமகன்மாயப்புத்தே
ளண்டருஞ்சனகனுதியருந்தவர்பிறருமீண்டிக்
கொண்டனரிருந்தாரிந்தக்குவலயம்பொருதுமாதோ. (அ)

தாழ்ந்ததுவடகீழெல்லையுயர்ந்ததுதென்மேற்கெல்லை
சூழ்ந்ததுகண்டுவானோர்தொழுதுனைப்பரவியைய
வூழ்ந்திடுமரவம்பூண்டோயொருவனின்னுப்பானங்கே
வாழ்ந்திடவிடுத்தாலிந்தவையநேர்நிற்குமென்றார். (கூ)

பைத்தலைபுரட்டுமுந்நீர்ப்பௌவமுண்டவனேயெம்மை
யொத்தவனனையான்வாழ்க்கைக்குரியளாகியவுலோபா
முத்திரையிமவான்பெற்றமுகிழ்முலைக்கொடியொப்பாளென்
றத்திருமுனியைநோக்கியாயிடைவிடுத்தாயன்றே. (கo)

விடைகொடுபோவானென்றைவேண்டினனேகுந்தேயத்
தொடைபெறுதமிழ்நாடென்றுசொல்லுபவந்தநாட்டி
னிடைபயின்மனித்தரெல்லாமின்றமிழாய்ந்துகேள்வி
யுடையவரென்பகேட்டார்க்குத்தரமுரைத்தல்வேண்டும். (கக)

சித்தமாசகலவந்தச்செந்தமிழியனூறன்னை
யத்தனேயருளிச்செய்தியென்றனனனையான்றேற
வைத்தனைமுதனூறன்னைமற்றதுதெளிந்தபின்னு
நித்தனேயடியேனென்றுநின்னடிகாண்பேனென்றான். (கஉ)

கடம்பமாவனத்திலெம்மைக்கண்டனையிறைஞ்சியுள்ளத்
திடம்பெறயாதுவேட்டாயவையெலாமெம்பாற்பெற்றுத்
திடம்பெறமலயத்தெய்தியிருக்கெனவிடுத்தாய்சென்று
குடம்பெறுமுனியுமங்கேயிருக்கின்றான்கொடியினோடும். (கங)

இனையதுன்றிருவுள்ளத்துக்கிசைந்ததேலிவற்குக்கேள்வி
யனையமாதவனைக்கூவியுணர்த்தெனவணங்குகூற
வினையநாணிகழ்ச்சியெல்லாமறந்திடாதின்றுசொன்ன
யனையதேசெய்துமென்னுவறிவனைநினைந்தானையன். (கச)

---

(கூ) ஊழ்த்தல் - கருதல். (கo) பைத்தல் - பரத்தல்.
(கங) கொடி என்றது—உலோபாமுத்திரையை.
(கடு) அஞ்சலி - கூப்புகரம்.

கலிநிலைத்துறை.

உடையநாயகன்றிருவுளமுணர்ந்தனன்முடிமே
லடையவஞ்சலிமுகிழ்த்தனனருந்தவவிமானத்
திடைபுகுந்தனன்பன்னியோடெழுந்தனனகல்வா
னடையனுகிவந்தடைந்தனனற்றமிழ்முனிவன். (கரு)

இயங்குமாதவத்தேரினும்பன்னியோடிழிந்து
புயங்கனுலயம்புகுந்துநாற்புயம்புடைகிளைத்துத்
தயங்குசெம்பவளாசலந்தன்னையுமதன்பால்
வயங்குமிந்திரநீலமால்வரையையும்பணியா. (கசு)

பெருகுமன்புளந்துளும்பமெய்யானந்தம்பெருக
வருகிருந்தனனுவயிற்கீரனுமம்பொன்
முருகவிழ்ந்ததாமரைபடிந்திறைவனைமுன்போ
லுருகுமன்பினுலிறைஞ்சுவானெல்லைவந்தடைந்தான். (கஎ)

இருந்தமாதவச்செல்வனையெதிர்வரநோக்கி
யருந்தவாவிவற்கியற்றமிழமைந்திலவெம்பாற்
றெரிந்தநீயதையரிறபத்தெருட்டெனப்பிணியு
மருந்துமாகியபெருந்தகைசெய்யவாய்மலர்ந்தான். (கஅ)

வெள்ளைமாமதிப்பிளவணிவேணியங்கருணை
வள்ளலார்பணிசிரத்தினுமனத்தினுந்தாங்கிப்
பள்ளமேழையும்பருகினேன்பணியுநக்கீர
னுள்ளமாசறவியாகரணத்தினையுணர்த்தும். (கக)

இருவகைப்புறவுரைதழீஇயெழுமதமொடுநாற்
பொருளொடும்புணர்ந்தையிருகுற்றமும்போக்கி
யொருவிலையிரண்டழகொடுமுத்தியெண்ணான்கு
மருவுமாதிநூலினைத்தொகைவகைவிரிமுறையால். (உ0)

(கசு) புயங்கன் - கரும்பாம்பையணிந்த சிவபெருமான். பவளமலை நீலமலை என்றது—சிவபெருமானையும் உமாதேவியையும்.

(கஅ) பிணியுமருந்துமாகி என்றது—தம தாணைவழி யொழுகாத உயிர்களுக்கு நோயும், அவ்வழியினிற்பவர்க்கு மருந்துமாகி நிற்றலை.

(கக) பள்ளம்-கடல். (உ0) புறவுரை-நூல்நுதலிய பொருளல்லாதவை; எனவேபாயிரம் என்பதுபொருள். எழுவகைமதமாவன, உடன்படல்முதலியன. நாற்பொருளாவன, அறம், பொருள், இன்பம், வீடு. ஐயிருகுற்றமாவன-குன்றக்கூறல் முதலியன. ஐயிரண்டழகாவன-சுருங்கச்சொல்லன்முதலியன. உத்தி எண்ணான்காவன: நுதலிப்புகுதல்முதலியன. ஆதிநூல் - முதனூல்.

கருத்துக்கண்ணழிவாதியகாண்டிகையானும்
விருத்தியானுநூற்கிடைப்பொருளைக்கறவிளக்கித்
தெரித்துரைத்தனனுரைத்திடுதிறங்கண்டுநூலி
னருத்தமேவடிவாகியவாதியாசிரியன். (உ௧)

தருக்குமின்பமுங்கருணையுந்தழையமாதவனைத்
திருக்கரங்களான்மகிழ்ச்சியுட்டிளைத்திடத்தழுவிப்
பெருக்கவேண்டியபேறெலாம்பீடுறநல்கி
யிருக்கையிற்செலவிடுத்தனனாலவாயிறைவன். (உஉ)

பொன்னனாளொடுங்குறுமுனிவிடைகொடுபோன
பின்னையாருயிர்க்கிழத்திதன்பிரானைநேர்நோக்கி
யென்னைநீயிவற்குணர்த்திடாதித்தவப்பொதியின்
மன்னனானுணர்த்தியதெனமதுரைநாயகனும். (உ௩)

தன்னைநித்தலும்வழிபடுந்தகுதியோர்சாலப்
பொன்னளிப்பவர்தொடுத்தமற்சரமிலாப்புனிதர்
சொன்னசொற்கடவாதவர்துகடவிர்நெஞ்சத்
தின்னவர்க்குநூல்கொளுத்துவதறனெனவிசைப்ப. (உ௪)

இவனெடுத்தமற்சரத்தினல்யாமுணர்த்தரதத்
தவனைவிட்டுணர்த்தினமெனச்சாற்றினன்கேட்டுக்
கவலைவிட்டகமகிழ்ச்சிகொண்டிருந்தனள்கதிர்கா
னவமணிக்கலம்பூத்ததோர்கொடிபுரைநங்கை. (உ௫)

கற்றகீரனும்பின்புதான்முன்செய்தகவிகண்
முற்றுமாய்ந்தசொல்வழுக்களும்வழாநிலைமுடிபு
முற்றுநோக்கினனறிவின்றிமுழுதொருங்குணர்ந்தோன்
சொற்றபாடலிற்பொருள்வழுச்சொல்லினேனென்னு. (உ௬)

மறையினந்தமுந்தொடாததாணிலந்தொடவந்த
நிறைபரஞ்சுடர்நிராமயநிருத்தற்குப்பிழைத்தேன்
சிறியகேள்வியோர்கழியவுஞ்செருக்குடையோரென்
றறிஞர்கூறியபழஞ்சொலென்னளவிற்றேயம்ம. (உ௭)

அட்டமூர்த்திதன்றிருவடிக்கடியனேன்பிழைக்கப்
பட்டதீங்கினலெனையவனுதல்விழிப்படுதீச்

---

(உ௧) கண்ணழிவு-பதச்சேதம். துளக்கம்-சந்தேகம்.

(உஉ) மாதவன்-அகத்தியமுனிவர். (உ௩) பொன்னனாள் என்றது—உலோபாமுத்திரையை. (உ௪) மற்சரம்-அழுக்காறு.

(உ௭) மறையினந்தம்-உபநிடதம். (உ௮) விழுமம்-துன்பம்.

சுட்டதன்றியென்னெஞ்சமுஞ்சுடுவதேயென்றென்
றுட்டதும்பியவிழுமநோயுவரியுளாழ்ந்தான். (௨அ)

மகவையீன்றதாய்கைத்திமெருந்துவாய்மடுத்துப்
பகைபடும்பிணியகற்றிடும்பான்மைபோலென்னை
யிகலிழைத்தறிவுறுத்தினுய்க்கேழையேன்செய்யத்
தகுவதியாதெனவரம்பிலாமகிழ்ச்சியுட்டாழ்ந்தான். (௨௯)

மாதவன்றனக்காலவாய்மன்னவனருளாற்
போதகஞ்செய்தநூலினைப்புலவரேனோர்க்கு
மாதரஞ்செயக்கொளுத்தியிட்டிருந்தனனமலன்
பாதபங்கயமூழ்கியபத்திமைக்கீரன். (௩௦)

கீரனுக்கு இலக்கணமுபதேசித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ருங - க்கு - திருவிருத்தம் - ௨௫௯௬.

---

ஐம்பத்தைந்தாவது,

## சங்கத்தார் கலகந்தீர்த்தபடலம்.



அறுசீரடியாசிரியவிருத்தம்.

காமனைப்பொடியாக்கண்டகண்ணுதறென்னூல்கீர
நாமநற்புலவற்கிந்நலமிதுபொலம்பூங்கொன்றைத்
தாமனச்சங்கத்துள்ளார்தலைதடுமாற்றந்தேற
ஆமனைக்கொண்டுபாடலுணர்த்தியவொழுக்கஞ்சொல்வாம். (க)

அந்தமில்கேள்வியோரெண்ணறுவரும்வேறுவேறு
செந்தமிழ்செய்துதம்மிற்செருக்குறுபெருமைகூறித்
தந்தமின்மாறுய்த்தத்தந்தராதரமளக்கவல்ல
முந்தைநூன்மொழிந்தவாசான்முன்னர்வந்தெய்தினரே. (௨)

தொழுதனரடிகள்யாங்கடொடுத்தவிப்பாடற்முள்
விழுமிதுந்தீதுந்தூக்கிவேறுபாடளந்துகாட்டிப்
பழுதறுத்தையந்தீரப்பணிக்கெனப்பணிந்தார்கேட்டு
முழுதொருங்குணர்ந்தவேதமுதல்வனுமுக்கண்மூர்த்தி. (௩)

---

(௩௦) நூல் இறையனாரகப்பொருள்.

(௨) எண்ணறுவராவார்—சங்கப்புலவர் நாற்பத்தெண்மர். ஆசான் என்றது—சோமசுந்தரக்கடவுளை.

இருவருந் துருவநீண்டவெரியழற்றூணிற்றோன்று
முருவெனவறிவானந்தவுண்மையாயுலகுக்கெல்லாங்
கருவெனமுளைத்தமூலவிலிங்கத் துணின்றுங்காண்டற்
கரியதோர்புலவனுகித்தோன்றியொன்றருளிச்செய்வான். (ச)

கலிவிருத்தம்.

இம்மாநகருள்ளாளொருவணிகன் றனபதியென்
றம்மாநிதிக்கிழவோன்மனைகுணசாலினியனையார்
தம்மாதவப்பொருட்டால்வெளிற்றறிவாளரைத்தழூவும்
பொய்ம்மாசறவினன்போலவதரித்தானொருபுத்தேள். (ரு)

ஓயாவிறன்மதனுக்கிணையொப்பானவனூமச்
சேயாமவனிடைநீருரைசெய்யுட்கவியெல்லாம்
போயாடுமினனையானதுபுந்திக்கிசைந்தானன்
றுயாவருமதிக்குந்தமிழதுவேயெனவறைந்தான். (சு)

வன்றுண்மழவிடையாயவன்மணிவாணிகனூம
னென்றுலவன்கேட்டங்ஙனமிப்பாடலிற்கிடக்கு
நன்றுனவுந்தீதானவுநயந்தாய்ந்ததன்றன்மை
குன்றுவகையறிவானெனமன்றுடியகூத்தன். (எ)

மல்லார்தடம்புயவாணிகமைந்தன்றனக்கிசையச்
சொல்லாழமும்பொருளாழமுங்கண்டான்முடிதுளக்காக்
கல்லார்புயம்புளகித்துளங்களிதூங்குவன்கலக
மெல்லாமகன்றிடுமுங்களுக்கென்றுலயஞ்சென்றான். (அ)

பின்பாவலரெல்லாம்பெருவணிகக்குலமணியை
யன்பாலழைத்தேகித்தமதவையத்திடையிருத்தா
நன்பான்மலர்நறுஞ்சாந்துகொண்டருச்சித்தனர்நயந்தே
முன்பாலிருந்தருந்தீந்தமிழ்மொழிந்தாரவைகேளா. (கூ)

மகிழ்ந்தான்சிலர்சொல்லாழ்ச்சியைமகிழ்ந்தான்சிலர்பொருளை
யிகழ்ந்தான்சிலர்சொல்வைப்பினையிகழ்ந்தான்சிலர்பொருளைப்

---

(ச) கரு என்றது—மேருமுதலிய திவ்யக்ஷேத்திரங்களி லெழுந்தருளிய அருட்குறியினை; அல்லது உலகத்தேற்றத்திற்குக் காரணமாய்நின்ற வெனப்பொருள் கோடலுமொன்று.

(ரு) வெளிற்றறிவு-மந்தபுத்தி. பொய் - அஞ்ஞானம். ஒருபுத்தேள் என்றது—முருகக்கடவுளை; இதனைவலைவீசியபடலத்தினும். இறையனாரகப்பொருள் நக்கீரர் உரையினும் காண்க.

(சு) ஆடல் - சொல்லல்.

புகழ்ந்தான்சிலர்சொல்லின்பமும்பொருளின்பமுமொருங்கே
திகழ்ந்தான்சிலர்சொற்றிண்மையும்பொருட்டிண்மையுந்தேர்ந்தே.

இத்தன்மையனுகிக்கலைவல்லோர்தமிழெல்லாஞ்
சித்தங்கொடுதெருட்டுஞ்சிறுவணிகன்றெருள்கீரன்
முத்தண்டமிழ்கபிலன்றமிழ்பரணன்றமிழ்மூன்று
மத்தன்மையனறியுந்தொறுமறியுந்தொறுமெல்லாம். (கக)

நுழைந்தான்பொருடொறுஞ்சொற்றொருநுண்டீஞ்சுவையுண்டே
தழைந்தானுடல்புலனைந்தினுந்தனித்தான்சிரம்பனித்தான்
குழைந்தான்விழிவழிவேலையுட்குளித்தான்றனையளித்தான்
விழைந்தான்புரிதவப்பேற்றினைவிளைத்தான்களிதிளைத்தான். ()

பல்காசொடுகடலிற்படுபவளஞ்சுடர்தரள
மெல்லாநிறுத்தளப்பானெனவியல்வாணிககுமரன்
சொல்லாழமும்பொருளாழமுந்துலைநாவெனத்தூக்க
நல்லாறறிபுலவோர்களுநட்டாரிகல்விட்டார். (கங)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

உலகினுட்பெருகியந்தவொண்டமிழ்மூன்றும்பாடற்
றிலகமாய்ச்சிறந்தவாய்ந்ததெய்வநாவலருந்தங்கள்
கலகமானவையிற்றீர்ந்துகாசறுபனுவலாய்ந்து
புலமிகுகோட்டிசெய்துபொலிந்தனரிருந்தார்போலும். (கச)

சங்கத்தார்கலகந்தீர்த்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் சுச - க்கு திருவிருத்தம் - உசுகo.

---

(கஉ) பொருடோறும் என்றது—காமம், கருணை, நகை, வீரம், உருத்திரம், அச்சம், குறிப்பு, வியப்பு, சாந்தம்என ஒன்பான்வகைப் பட்டபொருட்சுவைகளை. சொற்றொறும் என்றது - குணம், அலங் காரம் என்னும் சொற்சுவைகளை. புலனைந்தினுந் தனித்தான் என் றது-சத்தாதியைம்புலங்களுள் சத்தத்தின்வழியே நின்றமையை.

(கங) காசு - மணி.

(கச) தமிழ் மூன்றுவன - நக்கீரர், கபிலர், பரணர்கூறியதமி ழ்நூல்கள். தெய்வநாவலர்-சங்கப்புலவர்.

சிவமயம்.

ஐம்பத்தாறவது,

# இடைக்காடன் பிணக்குத்தீர்த்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

குடைக்காடன் பசிக்கன்னக் குழியருத்தி வேட்கையறக்கொடுத்த கங்கைச், சடைக்காடன் புலவரிகறணிவித்தமுறையிதுமேற் றனனைப்பாடுந், தொடைக்காடன் பகன்றிகழ்ந்த தென்னவனை முனிந்துதன்னைத் தொழுதுபோன, விடைக்காடனுடன்போய்ப் பின் பெழுந்தருளிப் பிணக்கறுத்த வியல்பு சொல்வாம். (க)

இந்திரன்றன் பழிதுரத்தி யரசளித்துப்பின்புகதி யின்பமீந்த, சுந்தரன்பொன்னடிக்கன்பு தொடுதருநறுஞ்சண்பகத்தார் தொடுத்துச்சாத்தி, வந்தனைசெய் திருத்தொண்டின் வழிக்கேற்பச் சண்பகப்பூ மாறவேந்த, னந்தரசூடாமணியாஞ் சிவபுரத்து ணிறைசெல்வமடைந்தா னிப்பால். (உ)

ஆற்றன்மிகுபிரதாபசூரியன்வங்கிசத்துவசனளவில்சீர்த்தி
சாற்றறியவிரிபுமருத்தனன்சோழவங்கிசாந்தகன்றுன்வென்றி
மாற்றறியபுகழ்ச்சேரவங்கிசாந்தகன்பாண்டிவங்கிசேசன்
றேற்றமுறுபரித்தேர்வங்கிச்சிரோமணிபாண்டீச்சுரன்றுமன்னே.

துணிவுடையகுலத்துவசன்வங்கிசவிபூடணமாறன்சோமசூடா
மணிகுலசூடாமணியேயிராசசூடாமணியேமாற்றூர்போற்றிப்
பணியவரும்பூபசூடாமணியேகுலேசபாண்டியனேயென்னக்
கணிதமுறுபதினைவர்வழிவழிவந்துதித்துநிலங்காவல்பூண்டோர். ()

அத்தகைய பாண்டியருட் குலேசபாண் டியனென்னு மரசன்றேண்மேல், வைத்தவனி தலம்புரப்போ னிலக்கணமு மிலக்கியமும் வரம்புகண்டோ, னெத்தகைய பெருநூலு மெல்லைகண்டோனுதலிஞ லிவனுக்கேற, முத்தமிழோர் பயில்சங்க மிடங்கொடுத்த தனையமணி முழவுத்தோளான். (ரு)

கழிந்தபெருங் கேள்வியின னெனக்கேட்டு முழுதுணர்ந்த கபிலன் றன்பாற், பொழிந்தபெருங் காதன்மிகு கேண்மையின

(க) தென்னவன்-குலேசபாண்டியன். (உ) அந்தரசூடாமணியாஞ்சிவபுரம் என்றது-புவலோகம்முதலிய எழுலகங்களுக்குந்தலைமையாய் விளங்குஞ் சிவபுரத்தினை. (ங) இரிபுமருத்தனன் - பகைவரைமர்த்தனஞ்செய்பவன். (ரு) பெருநூல் - அறுபத்துநான்கு கலைகள்.

னிடைக்காட்டுப்புலவன்றென்சொன், மொழிந்தரசன்றனைக்காண்டு மெனத்தொடுத்த பனுவலொடுமூரித்தீந்தேன், வழிந்தொழுகு தாரானைக் கண்டுதொடுத் துரைப்பனுவல் வாசித்தானால். (சு)

வழுக்காதசொற்சுவையும் பொருட்சுவையும் பகிர்ந்தருந்தவல்லோனுள்ளத். தழுக்காற்றாற்சிரந்துளக்கா னகமகிழ்ச்சிசிறிதுமுகத்தலர்ந்து காட்டா, னெழுக்காயுந் திணிதோளா னென்றமுறையான்வாளாவிருந்தானய்ந்த, குழுக்காதனண்புடையான் றனைமானம்புறந்தள்ளக் கோயில்புக்கான். (எ)

சன்னிதியில்வீழ்ந்தெழுந்து தமிழறியும் பெருமானே தன்னைச்சேர்ந்தார், நன்னிதியேதிருவாலவாயுடைய நாயகனேநகுதார்வேம்பன், பொன்னிதிபோலளவிறந்த கல்வியுமிக்குளனென்று புகலக்கேட்டுச், சொன்னிறையுங்கவிதொடுத்தே னவமதித்தான்சிறிது முடிதுளக்கானுகி. (அ)

பரிவாயின்மொழிகொடுத்து வருணித்தோர்க் ககமகிழ்ந்தோர் பயனுநல்கா, விரிவாயதடங்கடலே நெடுங்கழியேயடுங்கான விலங்கேபுள்ளே, பொரிவாயபராரைமர நிரையேவான்றோடு குடுமிப்பொருப்பேவெம்பு, மெரிவாயகொடுஞ்சுரமே யெனவிவற்றோடிணையொத் திருந்தானெந்தாய். (கூ)

என்னையிகழ்ந்தனனோசொல் வடிவாய்நின்னிடம்பிரியா விமயப்பாவை, தன்னையுஞ்சொற்பொருளான வுன்னையுமேயிகழ்ந்தனனென்றனக்கியாதென்று, முன்னைமொழிந்திடைக்காடன் றணியாதமுனிவீர்ப்பமுந்திச்சென்றா, னன்னவுரைதிருச்செவியினூறுபாடெனவுறைப்பவருளின்மூர்த்தி. (க0)

போனவிடைக்காடனுக்குங் கபிலனுக்குமகத்துவகைபொலியுமாற்றான், ஞானமயமாகியதன் னிலிங்கவுரு மறைத்துமையா நங்கையோடும், வானவர்தம்பிரானெழுந் தபுறம்போய்த் தன்கோயிலினேர்வடபால்வையை, யானைநதித்தென்பாலோ ராலயங்கண்டங்கணினிதமர்ந்தான்மன்னோ. (கக)

சங்கவான்றமிழ்த்தெய்வப்புலவோருமுடனெழுந் துசைலவேந்தன் மங்கைநாயகன்போனவழிபோயங்கிருந்தாரவ்வழிநாள்வைகற் கங்குல்வாய்புலரவரும்வைகறையிற்பள்ளியுணர்காலத்தெய்தியங்கணுயகனடியார்சேவிப்பாரிலிங்கவுருவங்குகாணார். (கஉ)

---

(எ) ஆய்ந்தகுழு - புலவர்கூட்டம். (க0) ஊறுபாடு - துன்பப்படுத்துவது; இது-ஈண்டு நாராசத்தைவிளக்கிநின்றது.

என்னவதிசயமோ வீதென்றயிர்த்தா ரிரங்கினரிதனையோடி, மன்னவனுக்கறிவிப்பான் வேண்டுமெனப்புறப்பட்டு வருவாராவி, யன்னவரைப்பிரிந்துறையுமணங்கனையா ரெனவுமலரணங்குநீத்த, பொன்னவிர்தாமரையெனவும் புலம்படைந்து பொலிவழிந்தபுரமுங்கண்டார். (கங)

அரசனிடைப்புகுந்துள்ளநடுநடுங்கி நாவுணங்கியரசே யாமொன் றுரைசெயவஞ்சுதுமுங்க ணயகனைத் திருப்பள்ளி யுணர்ச்சி நோக்கி, மரைமலர்ச்சேவடிபணியப் புகுந்தனமின்றுங்கவன்றன் வடிவங்காணேம், புரமுநனிபுலம்படைந்த தென்றழல்வேலெனச் செவியிற்புகுத்தலோடும். (கச)

வழுதியரியணையிலிருந் தடியிறவீழ் பழுமரம்போன் மண்மேல் யாக்கை, பழுதுறவீழ்ந்துயிரொடுங்கவறிவொடுங்கிமட்பாவைபடிந் தாங்கொல்லைப், பொழுதுகிடந்தறிவுசிறிதியங்க வெழுந்தஞ்சலிக் கைப்போதுகூப்பி, யழுதிருகண்ணீர்வெள்ளத் தாழ்ந்தடியேனென் பிழைத்தேனண்ணலண்ணல். (கரு)

கொலையினையோரவுணர்புரநொடிவரையிற்பொடியாகக்குனித்தமேருச், சிலையினையோபழையசிவபுரத்தினையோவருவிமணிதெறிக்கும்வெள்ளி, மலையினையோதம்மைமறந் துனைநினைப்பார் மனத்தினையோவாழ்த்தும்வேதத், தலையினையோவெங்குற்றாயெங்குற்றாயென்றென்றுதளருமெல்லை. (கசு)

சிலர்வந்துமன்னவோரதிசயங்கண்டனம்வைகைத்தென்சாரக, வலர்வந்தோன்படைத்தநாண்முத லொருகாலமுங்கண்டதன்று கேள்வித், தலைவந்தபுலவரொடுமாலவாயுடையபிரான்றனே செம்பொன், மலைவந்தவல்லியொடும் வந்திறைகொண்டுறைகின்றான் மாதோவென்றார். (கஎ)

அவ்வுரைதன்செவிநுழைந்து புகுந்தீர்ப்ப வெழுந்தரசனச்சத் தாழ்ந்து, தெவ்வர்முடித்தொகையிடறுங் கழற்காலா னடந்தேகிச் செழுநீர்வையை, கௌவைநெடுந்திரைக்கரத்தாற் கடிமலர்தூஉய்ப் பணியத்தென்கரைமேல்வந்து, மௌவலிளமுகைமூரன் மாதினொடுமிருக்கின்றமணியைக்கண்டான். (கஅ)

படர்ந்துபணிந்தன்புருக்குங் கண்ணீர்சோர்ந்தானந்தப் பௌவத்தாழ்ந்து, கிடந்தெழுந்துநாக்குழறித்தமொறி நின்றிதனைக்கிளக்

(கசு) ஓர்-தேர்ந்த. (கசு) அலர்வந்தோன்-பிரமன்.
(கஅ) தெவ்வர் - பகைவர். கௌவை - ஒலி.

கும்வேதந், தொடர்ந்தறியாவடிசிவப்ப நகர்புலம்பவுலகீன்ற தோகையோடிங், கடைந்தருளுங்காரணமென் னடியேனுற்பிழையுளதோவையாவையா. (௧௯)

அல்லதையென்றமராலென் பகைஞராற்களவரா லரியகானத், தெல்லைவிலங்காதிகளா லிடையூறின்றமிழ்நாட்டி லெய்திற்றுலோ, தொல்லைமறையவரொழுக்கங் குன்றினரோதவந்தருமஞ்சுருங்கிற்றுலோ, வில்லறனுந்துறவறனும் பிழைத்தனவோ யானறியேனெந்தாயெந்தாய். (௨0)

கள்ளேறுகடுக்கைநறுஞ் சடையானேபோற்றி பெருங்கருணைபோற்றி, வெள்ளேறுகொடியுயர்த்த விடையானே போற்றியருள்விகிர்தாபோற்றி, புள்ளேறுகொடியுயர்த்த புனிதனயன்றேருதபுனிதாபோற்றி, வள்ளேறுசிறுகுழவிமதிநுதலங் கயற்கண்ணிமணாளபோற்றி. (௨௧)

பாதமலரிணைபோற்றிபன்னிரண்டுகையானைப்பயந்தாய்போற்றி
வேதமுடிகடந்தபரஞானத்திலானந்தவிளைவேபோற்றி [ற்றி
போதவடிவாய்நால்வர்க் கசைவிறந்துநிறைந்தபரம்பொருளேபோ
மாதவளநீறணிந்தமன்னுவங்கயற்கண்ணிமணாளபோற்றி. (௨௨)

பொக்கமுடையார்செய்யும்பூசை தவங்கண்டுநகும்புராணபோற்றி, தக்கன்மகம்பொடியாகத் திருப்புருவநெரித்தகொடுந் தழலேபோற்றி, செக்கமலக்கண்ணிடந்த கண்ணனுக்குத் திகிரியருள் செல்வாபோற்றி, மைக்குவளையணையமணிகண்டா வங்கயற்கண்ணி மணாளபோற்றி. (௨௩)

மேற்படி - வேறு.

தென்னவனின்னவண்ணமேத்தினுன்செம்பொற்கூடன்
மன்னவன்கேட்டாகாயவாணியால்வையைநாட
வுன்னதுசோத்தநாங்கேட்டுவந்தனமினியதாயிற்
றின்னமொன்றுளதுகேட்டியென்றனனருளிச்செய்வான். (௨௪)

இயம்பரும்பதிகடம்முலாளவாயேற்றமீங்குச்
சயம்புவாயனந்தமுள்ளதானவரியக்கர்சித்தர்
வயம்புரியரக்கர்வானோர்முனிவரர்மனிதருள்ளார்
நயம்பெறவிதியாற்கண்டநங்குறியனந்தமுண்டால். (௨௫)

(௨௧) வள் - கூர்மை. விகிர்தம்-வேறுபாடு. (௨௨) பன்னிரண்டுகையான்-குமாரக்கடவுள். (௨௩) பொக்கம்-பொய்நெறி.

(௨௩) செங்கமலம் - செக்கமலமென வலிந்துநின்றது.

(௨௪) சோத்தம்-இழிந்தோர்செய்யும்வந்தனம். இதனை "சோத்துன்னடியமென்றோரைக்குழுமி" என்னுந் திருக்கோவையார்க்கு நச்சினார்க்கினியரெழுதிய வுரையானுமுணர்க.

அக்குறிகளின்மேம்பட்டகுறியறுபத்துநான்கா
மிக்குறிகளின்மேம்பட்டகுறிகளெட்டினையவெட்டுத்
திக்குறைவானோர்பூசைசெய்தனவிவற்றியாம்வந்து
புக்குறைகுறிநந்தோழன்பூசித்தகுறியதாகும். (உசு)

அறைந்தவித்தெய்வத்தானமனைத்துமோரூழிக்காலத்
திறந்தநந்தோழன்கண்டவிலிங்கமாமதனாலிங்கே
யுறைந்தனமுறைதலாலேயுத்தரவாலவாயாய்ச்
சிறந்திடத்தகுவதின்றுமுதலிந்தத்தெய்வத்தானம். (உஎ)

ஓங்குதண்பணைசூழ்நீபவனத்தைநீத்தொருபோதேனு
நீங்குவமல்லேங்கண்டாயாயினுநீயும்வேறு
தீங்குளையல்லைகாடன்செய்யுளையிகழ்தலாலே
யாங்கவனிடத்தியாம்வைத்தவருளினால்வந்தேமென்னா. (உஅ)

பெண்ணினைப்பாகங்கொண்டபெருந்தகைப்பரமயோகி
விண்ணிடைமொழிந்தமாற்றமீனவன்கேட்டுவானோர்
புண்ணியாசிறியோர்குற்றம்பொறுப்பதுபெருமையன்றோ
வெண்ணியபெரியோர்க்கென்னாவேத்தினனிறைஞ்சினானே. (உகு)

அடிபணிந்தேத்தினனையருள்சுரந்தசையுமின்னுங்
கொடியணிமனையிற்போக்கிக்கோமளவல்லியோடு
முடனுறைபுலவரோடுமொல்லைதன்கோயில்புக்கான்
வடதிருவாலவாயில்வந்துவீற்றிருந்தவள்ளல். (௩0)

மின்மதிச்சடையினான்பினடந்துபோய்விடைகொண்டேகு
மன்னவன்றன்னைப்பாடிவந்தவன்றன்னைமாட்சித்
தன்மைசால்சங்கவாணர்தம்மொடுங்கொடுபோயென்றும்
பொன்மகள்காணிகொண்டபுரிசைசூழ்கோயில்புக்கான். (௩க)

விதிமுறைகதலிபூகங்கவரிவால்விதானந்தீபம்
புதியதார்நிறைநீர்க்கும்பங்கதலிகைபுனைந்தமன்றற்
கதிர்மணிமாடத்தம்பொற்சேக்கைமேற்கற்றோர்சூழ
மதிபுனைகாடன்றன்னைமங்கலவணிசெய்தேற்றி. (௩உ)

---

(உசு) தோழன் என்றது-குபேரனை.

(உஎ) உத்தர ஆலவாய் - வடமதுரை. (உஅ) காடன்-இடைக்காடன். இதுமுன்மொழிகெட்டுப் பின்மொழியிற் பொருள்சிறந்து நின்றது; இதனைத் தார்க்கிகர் நாமைகதேசநாமக்கிரகணம் என்பர்.

(௩க) விதானம் - மேற்கட்டி. கதலிகை - துவசம். சேக்கை- ஆதனம்.

சிங்கமான்சுமந்தபொன்னஞ்சேக்கைமேலிருந்துவெள்ளைக்
கொங்கவிழ்தாமந்தூசுகுளிர்மணியாரந்தாங்கி
மங்கலமுழவவார்ப்பமறையவராக்கங்கூற
நங்கையர்பல்லாண்டேத்தநன்மொழிப்பனுவல்கேட்டு. (௫௩)

அறிவுடைக்காடனுக்குமருமைமாண்புலமையோர்க்கு
முறைமையாலாரந்தூசுமுகிழ்முலைக்கொடியினன்னார்
நிறைநிதிவேழம்பாய்மான்விளைநிலநிரம்பநல்கி
யறைகழற்காலிற்பின்னேழடிநடந்திதனைவேண்டும். (௫௪)

புண்ணியப்புலவீர்யானிப்போழ்திடைக்காடனார்க்குப்
பண்ணியகுற்றமெல்லாம்பொறுக்கெனப்பரவித்தாழ்ந்தா
னுண்ணியகேள்வியோருமன்னநீநுவன்றசொல்லாந்
தண்ணியவமுதாலெங்கள்கோபத்தீத்தணிந்ததென்னு. (௫௫)

இன்னமுமாலவாயெம்மிறையவன்கருணைநோக்காற்
பன்னரும்புகழ்மைகுன்றாப்பாக்கியமுனக்குண்டாக
வென்னநல்லாக்கங்கூறியேகினாராகவந்த்த்
தென்னவன்குலேசன்செய்ததவமுருத்திரிந்தாலென்ன. (௫௬)

எரிமருத்தவனிமுன்னாமெண்வகைமூர்த்தியன்பு
புரிமருத்துவனைச்சூழ்ந்தபொருபழிதுடைத்தோன்சோதி
விரிமருத்துடல்வான்றிங்கண்மிலைந்தவனருளின்வந்தா
னரிமருத்தனாந்தென்னனடலரிக்குருளையன்னான். (௫௭)

கலிநிலைத்துறை.

பரிசிலைப்புல்லவருக்கருள்குலேசன்பலபகல்கழீஇத்
திரிமருப்பிரலைவெம்மழுவெடுத்தவன்மதிச்சென்னிமேல்
வரிசிலைப்படைபொறித்தவனெனப்பெறுவரமைந்தனு
மரிமருத்தனிடத்தவனிவைத்தரனடியெய்தினான். (௫௮)

இடைக்காடன்பிணக்குத்தீர்த்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௬௫ - க்கு - திருவிருத்தம் - ௨௬௪௮.

---

(௫௩) வெள்ளைக்கொங்கவிழ் தாமந்தூசுகுளிர்மணியாரந்தாங் கிளென்றது-பாட்டுடைத்தலைவன், வெண்மலர்மாலையும், வெள்ளாடையும், வெள்ளணியுந் தரித்துக்கேட்கவேண்டுமென்னுஞ் சம்பிரதாயத்தை. (௫௫) தண்ணியவமுது - நீர், இன்சொல்லாகிய அமிர்தம் எனச்செம்மொழிச்சிலேடைப் பொருள்தந்துநின்றது. (௫௭) எரி-நெருப்பு. மருத்து-காற்று. மருத்துவன்-இந்திரன். மருத்துடல்-அமிர்தம்நிறைந்தவுடல். மருந்து-அமுதம். (௫௮) பரிசில் - பேறு. இரலை-மான்.

சிவமயம்.

ஐம்பத்தேழாவது,

## வ லை வீ சி ன ப ட ல ம்.



அறுசீரடியாசிரியவிருத்தம்.

மின்றிரித்தன்னவேணிவேதியனிடைக்காடன்பின்
சென்றுமீண்டனையான்கொண்டபிணக்கினைத்தீர்த்தவண்ண
மின்றுரைசெய்துமுந்நீரெறிவலைவீசிஞாழன்
மன்றலங்குழலினாளைமணந்துமீள்வண்ணஞ்சொல்வாம். (க)

அந்தமிலழகன்கூடலாலவாயமர்ந்தநீல
கந்தரனுலகமீன்றகன்னியங்கயற்கணாளாங்
கொந்தவிழலங்கற்கூந்தற்கொடிக்குவேறிடத்துவைகி
மந்தணமானவேதமறைப்பொருளுணர்த்துமாதோ. (உ)

காதனின்னருளாற்கூறுநான்மறைப்பொருளையெல்லாம்
யாதுகாரணத்தான்மன்னோவறிகிலேமெம்பிராட்டி
காதரமடைந்தாள்போலக்கவலையுஞ்சிறிதுதோன்ற
வாதரமிலளாய்க்கேட்டாளஃதறிந்தமலச்சோதி. (ங)

அராமுகமனையவல்குலணங்கினைநோக்கியேனை
யிராமுகமனையவுள்ளத்தேழைமார்போலவெம்பாற்
பராமுகையாகிவேதப்பயனொருப்படாதுகேட்டாய்
குராமுகையவிழ்ந்தகோதாயுற்றவிக்குற்றந்தன்னால். (ச)

விரதமுமறனுமின்றிமீன்படுத்திழிஞரான
பரதவர்மகளாகென்றுபணித்தனன்பணித்தலோடு
மரதனவாரந்தாழ்ந்தவாரமென்முலையாளஞ்சி
வரதநிற்பிரிந்துவாழவல்லனோவென்றுதாழ்ந்தாள். (ரு)

வீங்குநீர்ச்சடையானீங்குமெல்லியல்பரிவுநோக்கி
வாங்குநீர்க்கானல்வாழ்க்கைவலைஞர்கோன்மகளாய்வைகி
யாங்குநீவளர்நாள்யாம்போந்தருங்கடிமுடித்துமென்னாத்
தேங்குநீரமுதன்னாளைச்செலவிடுத்திருந்தானிப்பால். (சு)

---

(க) ஞாழல் - குங்குமமரம். மந்தணம் — இரகசியம்.
(ங) காதரம் - மறதி. அல்லது தீவினைப்பகுதி. (ச) அராமுகம்-பாம்பின்படம். இராமுகம் - இருள். (ரு) பரதவர் - நெய்தனில மாக்கள். (சு) கானல் - கடற்கரைச்சோலை.

அன்னதுதெரிந்துநால்வாயைங்கரக்கடவுடாதை
முன்னர்வந்திதனுலன்ருேமூண்டதிச்செய்தியெல்லா
மென்னவீர்ங்கவளம்போலாங்கிருந்தபுத்தகங்களெல்லாந்
தன்னெடுங்கரத்தால்வாரியெறிந்தனன்சலதிமீதால். (எ)

வரைபகவெறிந்தகூர்வேன்மைந்தனுந்தந்தைகையி
லுரைபெறுபோதநூலையொல்லெனப்பறித்துவல்லே
திரைபுகவெறிந்தாஞகச்செல்வநான்மாடக்கூட
னரைவிடையுடையநாதனந்தியைவெகுண்டுநோக்கா. (அ)

அடுத்துநாமிருக்குஞ்செவ்வியறிந்திடாதிவரைவாயில்
விடுத்துநீயிருந்தாய்நீங்குவிளைந்ததுன்றனக்குமிந்தத்
தொடுத்ததீங்கொழியவின்ருேர்சுறவுருவாகிவைய
முடுத்தகாரோதநீர்புக்குழல்கெனப்பணித்தான்மன்னே. (கூ)

வெருவருஞ்செலவின்வேழமுகத்தனைவிதித்தசாபப் •
பெருவலிதன்னைச்சாரும்பெற்றியாற்சாபங்கூறு
னருவரைநெஞ்சுபோழ்ந்தவள்ளிலைவடிவேற்செங்கை
முருகனைவணிகர்தம்மின்மூங்கையாகென்ருனிப்பால். (கo)

நாயகனேவலாலேநாயகிவலைஞர்மாத
ராயதுநந்திப்புத்தேளடுசுறவாகிமுந்நீர்
மேயதுங்கருணைவள்ளன்மீன்படுத்தணங்கைவேட்டுப்
போயதுமவட்குக்கேள்விபுகன்றதுமுறையிற்சொல்வாம். (கக)

கலிநிலைத்துறை.

சூழும்வார்திரைவையையந்துறைகெழுநாட்டுட்
கீழையார்கலிமுகத்ததுநெய்தலங்கீழ்நீ
ராழநீள்கருங்கழியகழ்வளைந்துகாரளைந்து
தாழைமூதெயிலுடுத்ததோர்தண்டுறைப்பாக்கம். (கஉ)

முடங்குமுள்ளிலையாற்புதைந்தெதிரெதிர்மொய்த்து
நுடங்குகைதைபோதொடுவெளிநூக்கநின்றசைவ
மடங்குமெய்யராக்கையிருங்கேடகவட்டத்
தடங்கிவாள்பணித்தாடமராற்றுவாரனைய. (கங)

---

(கூ) செவி-அமையம். சுறவு-மகரமீன். (கo) மூங்கை-உருத்திரசன்மஞகியஉளமன். (கஉ) பாக்கம்-நெய்தநிலத்தூர். கீழ்நீர் - கூவல். (கங) வளி - காற்று.

புலவுமீனுணக்கோசையும்புட்களோப்பிசையும்
விலைபகிர்ந்திடுமமலையுமீன்கொள்கம்பலையும்
வலையெறிந்திடுமரவமும்வாங்குமாரவமு
மலையெறிந்திடுபரவைவாயடைப்பனமாதோ. (௧௪)

வாட்டுநுண்ணிடைநுளைச்சியர்வண்டலம்பாவைக்
கூட்டுகின்றசோறருகிருந்துடைந்தபூங்கைதை
பூட்டுகின்றனநித்திலம்பொருகடற்றரங்கஞ்
சூட்டுகின்றனகடிமலர்சூழல்சூழ்ஞாழல். (௧௫)

நிறைந்ததெண்கடலாடிநீணெறியிடைச்செல்வோர்க்
கறந்தெரிந்தபோற்பொதிந்தசோறவிழ்ப்பனதாழை
சிறந்தமுத்தொடுபசும்பொனும்பவளமுந்திரட்டிப்
புறந்தெரிந்திடக்கொடுப்பனமலர்ந்தபூம்புன்னை. (௧௬)

கொன்றமீன்பகர்பரதவர்குரம்பைகடோறுஞ்
சென்றுதாவிமேற்படர்வனதிரைபடுபவள
மன்றல்வார்குழனுளைச்சியர்மனையின்மீனுணக்கு
முன்றில்சீப்பனகடலிடுமுழுமணிக்குப்பை. (௧௭)

கூற்றம்போன்றகண்ணுளைச்சியர்குமுதவாய்திறந்து
மாற்றம்போக்கினர்பகர்தருங்கயற்குநேர்மாறுந்
தோற்றம்போக்குவதவர்விழித்துணைகளக்கயன்மீ
னூற்றம்போக்குவவவர்குழனகைமலர்க்கைதை. (௧௮)

அலர்ந்தவெண்டிரைக்கருங்கழிக்கிடங்கரினரும்பர்
குலைந்தவிழ்ந்துதேன்றுளும்பியகுமுதமேயல்ல
கலந்தருங்கடலெறிகருங்காற்பனங்கள்வாய்
மலர்ந்தருந்தியகுமுதமுமொய்ப்பனவண்டு. (௧௯)

ஆயபட்டினத்தொருவன்மேலாற்றியதவத்தாற்
றூயவானவர்தம்மினுந்தூயனுய்ச்சிறிது
தீயதீவினைச்செய்தியாற்றிண்டிமில்வாணர்
மேயசாதியிற்பிறந்துளான்மேம்படுமெனையான். (௨0)

---

(௧௫) வண்டல்-மகளிர் விளையாடுமிடம். சோறுஎன்றது-மகரந்தத்தை. (௧௭) குரம்பை - சிறுகுடில். உணக்கல் - காயச்செய்தல்.

(௧௮) நேர்மாறுந்தோற்றம் போக்குவ என்றது - கயலைவென்றமையை. (௧௯) குமுதமிரண்டனுள் முன்னையது-அல்லிமலர்மின்னையது - அல்லிமலர்போன்ற பெண்களதுவாய்.

(௨0) திமில்-தோணி.

செடியகாருடற்பரதவர்திண்டிமினடத்தா
நெடியவாழியிற்படுத்தமீன்றிறைகொடுநிறைக்கும்
கடியவாயிலோனவர்க்கெலாங்காவலோனேற்றுக்
கொடியவானவனடிக்குமெய்யன்புசால்குணத்தோன். (உக)

மகவிலாமையாலாற்றநாண்மறுமையோடிம்மைப்
புகலிலாளெனவருந்துவாளொருபகற்போது
தகவுசால்பெருங்கிளையொடுஞ்சலதிமீன்படுப்பா
ணகலவார்கலிக்கேகுவானதன்கரையொருசார். (உஉ)

தக்கமேருமாமலைமகளோடையிற்றவத்தான்
மிக்கமீனவன்வேள்வியின்விரும்பியமகவாய்ப்
புக்கநாயகிதன்பதியாணையாற்புலவு
தொக்கமீன்விலைவலைஞன்மேற்றவப்பயன்றூர்ப்ப. (உங)

இச்சையாலவனன்பினுக்கிரங்குவாள்போலச்
செச்சைவாய்திறந்தழுதொருதிருமகவாகி
நெய்ச்சபாசிலைப்புன்னைநன்னீழலிற்கிடந்தாண்
மைச்சகாருடற்கொடுந்தொழில்வலைஞர்கோன்கண்டான். (உச)

கார்கொணீர்த்திருமாதுகொல்கரந்துநீருறையும்
வார்கொள்பூண்முலைமடந்தைகொல்வனத்துறைவாழ்க்கைத்
தார்கொள்பூங்குழலணங்குகொறடங்கணுமிமைப்ப
வார்கொலோமகவாகியீண்டிருந்தவளென்னு. (உரு)

பிள்ளையின்மையேற்கிரங்கியெம்பிரான்றமிழ்க்கூடல்
வள்ளனல்கியமகவிதுவேயெனவலத்தோ
டுள்ளவன்புகூர்ந்தெடுத்திருதோளுறப்புல்லித்
தள்ளருந்தகைக்கற்பினுடனதுகைக்கொடுத்தான். (உசு)

பிறவியந்தகன்றெரிந்துகண்பெற்றெனக்கழிந்த
வறியனீணிதிபெற்றெனவாங்கினுள்வலைஞ
ரெறியும்வேலையினார்த்தனர்கையெறிந்திரட்டிக்
குறியவாணகைவலைச்சியர்குழறினார்குரவை. (உஎ)

---

(உக) செடி - முடைநாற்றம்.

(உங) ஓடை - மலர்த்தடம். மேரு என்றது - இமயமலை மகம் மேருவின் ஓர் கிளையாதலின்.

(உச) செச்சை - செந்நிறம். நெய்ச்ச, மைச்ச என்றது-நெய்த்த, மைத்த என்பதன் போலி. (உஎ) இரட்டி - வீசி.

பிழையில்கற்புடைமனைவியும்பெறுதுபெற்றெடுத்த
குழவியைத்தடங்கொங்கையுங்கண்களுங்குளிரத்
தழுவிமுத்தமிட்டுச்சிமோந்தன்புளந்ததும்ப
வழகிதாகியமணிவிளக்காமெனவளர்ப்பாள். (உ௮)

புலவுமீன்விலைப்பசும்பொனாற்செய்தபல்பூணு
மிலகுமாரமும்பாசியுங்காசிடையிட்டுக்
குலவுங்கோவையுஞ்சங்கமுங்குலத்தினுக்கிசைய
வலகிலாதபேரழகினுக்கழகுசெய்தணிந்தாள். (உ௯)

தொண்டைவாய்வலைச்சிறுமியர்தொகையொடுந்துறைபோய்
வண்டலாடியுதித்திலமாமணிகொழித்துங்
கண்டன்ஞாழல்சூழ்கானலங்கடிமலர்கொய்துங்
கொண்டலோதிபின்றாழ்தரக்குரைகடல்குளித்தும். (௩0)

தளர்ந்தபைங்கொடிமருங்குலுந்தன்னுயிர்த்தலைவ
னளந்தவைகலுங்குறைபடவவனிடத்தார்வங்
கிளர்ந்தவன்புமொண்கொங்கையுங்கிளரநாட்சிறிதில்
வளர்ந்துவைகினள்வைகலுமுயிரெலாம்வளர்ப்பாள். (௩௧)

ஆலவாயுடைநாயகனேவியவாறே
மாலைதாழிளமதிச்சடைமகுடமுங்கரங்க
ளுலுமாகியவடிவுடைநந்தியுஞ்சுறவக்
கோலமாகிவெண்டிரைக்கடல்குளித்தினிதிருந்தான். (௩௨)

குன்றெறிந்தவேற்குழகனுங்கரிமுகக்கோவு
மன்றெறிந்ததந்திரமெலாஞ்சிரமிசையடக்காக்
கன்றெறிந்தவனறிவருங்கழன்மனத்தடக்கா
நின்றெறிந்தகன்மத்தெனவுழக்கிடாநிற்கும். (௩௩)

இட்டுந்தோணியைப்படகினைக்கிழிபடவிசைபோய்த்
தட்டுஞ்சோங்கினைமேலிடுசரக்கொடுங்கவிழ
முட்டுஞ்சீறிமேல்வரும்பலசுறவெலாமுடுக்கி
வெட்டுங்கோடுகோத்தேனையமீனெலாம்வீசும். (௩௪)

---

(உ௯) காசு - மணி. (௩0) வண்டலாடல் – சிற்றில் விளையாடல். கண்டல் - செந்தாழை.

(௩௩) குன்று - கிரவுஞ்சமலை. தந்திரம் - ஆகமநூல். கன்றெறிந்தவன் – திருமால். கல் என்றது - மந்தரகிரியை. (௩௪) தோணி-படகு, சோங்கு என்னுமிவைகள், மரக்கலத்தின் வேறுபாடுகள்.

தரங்கவாரிநீர்கலக்கலாற்றந்திரங்கொடுமே
லிரங்குவான்புலவோர்க்கமுதீகையாலெண்ணூர்
புரங்கண்மூன்றையும்பொடித்தவனுணையாற்புனலிற்
கரங்களுன்கையுங்கரந்தமீன்மந்தரங்கடுக்கும். (ருரு)

தள்ளுநீர்த்திரைபோய்நுளைச்சேரிகள்சாய்ப்பத்
துள்ளுநீர்குடித்தெழுமழைசூலிறப்பாயு
முள்ளுநீண்மருப்புடையமீன்மொய்கலமந்தத
தெள்ளுநீர்த்துறைநடையறவின்னணந்திரியும். (ருசு)

எற்றிதாலெனத்துறைமகன்யாமிதுபிடிக்கும்
பெற்றியாதெனக்கிளையொடும்பெருவலைப்பாசம்
பற்றியாழியூர்படகுகைத்தெறிந்தனன்படவைச்
சுற்றிவாய்கிழித்தெயிற்றிறப்பாய்ந்ததுசுறவம். (ருஎ)

படவுடைப்பவோர்தோணிமேற்பாய்ந்துமத்தோணி
விடவுறத்தெறித்தெறிந்திடவிசைத்தொருசோங்கி
னிடைபுகுந்துநீள்வலையெறிந்திங்ஙனம்வெவ்வே
றுடல்புகுந்துழலுயிரெனப்பாதலுமுழல்வான். (ருஅ)

முன்னர்வீசினூற்பின்னுறமுளைத்தெழுமுயன்று
பின்னர்வீசினுன்முன்னுறப்பெயர்ந்தெழும்வலத்தி
லுன்னிவீசினுலிடம்படவுருத்தெழுமிடத்தின்
மன்னிவீசினுல்வலத்தெழுமகரவேறதுதான். (ருகூ)

எறிவலைப்படுமெகமலர்ந்தீர்ப்பவனுள்ள
மறுதலைப்படவலையினும்வழீஇப்பொருளாசை
நெறிமலர்க்குழனலலவர்நினைவெனநினைவுற்
றறிபவர்க்கரிதாம்பரம்பொருளெனவகலும். (சுo)

எவலாளரோடின்னவாறின்னமீன்படுத்தற்
காவதாங்தொழிலியற்றவுமகப்படாதாக
யாவரேயிதுபடுப்பவரென்றிருங்கானற்
காவலாளரும்பரதருங்கலங்களுருழந்தார். (சுக)

---

(ருரு) அமுதென்றது-ஆகமப்பொருளை. (ருசு) சூல்-கரு.
(ருஎ) துறைமகன் - நெய்தனிலத்தலைவன். (ருகூ) மகர வே றென்றது-கடல்வாழ்சுறவு மேறெனப்படுமே என்னு மிலக்கணம் பற்றி. (சுo) நல்லவர் என்றது - விலைமாதரை.
(சுக) ஆவதாங்தொழில்-பிடித்தற்குக்கூடியதொழில்.

சங்கலம்புதண்டுறைகெழுநாடனிச்சலதித்
துங்கமந்தரமெனக்கிடந்தலமருஞ்சுறவை
யங்கணேந்தெவன்பிடிப்பனவணியானீன்ற
மங்கைமங்கலக்கிழானெனமனம்வலித்திருந்தான். (௪௨)

நந்திநாதனுமினையனுயங்கயனாட்டத்
திந்துவாணுதலாளுமங்கனையளாயிருப்பத்
தந்திராலிரண்டேந்தியதமனியவிமானத்
துந்துநீர்ச்சடையார்மணமுன்னினார்மன்னோ. (௪௩)

உயர்ந்தசாதியுந்தம்மினுமிழிந்தவென்றுன்னிக்
கயந்தநெஞ்சுடைவலைக்குலக்கன்னியைவேட்பான்
வியந்துகேட்பதெவ்வாறவர்வெறுக்குமுன்னவருக்
கியைந்தமீன்வலையுருவெடுத்தேகுதுமென்னா. (௪௪)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கருகிருண்முகந்தாலன்னகச்சினன்கச்சோடார்த்த
சுரிகையன்றேண்மேலிட்டதுகிலினன்குஞ்சிசூட்டு
முருகுகொப்பளிக்குநெய்தற்கண்ணியன்மூத்தவாறே
யிருவருமறையுந்தேடியிளைப்பவோர்வலைஞனானான். (௪௫)

முழுதுலகீன்றசேற்கண்முதல்வியையருளிலார்போ
லிழிதொழில்வலைமாதாகச்சபித்தவாறென்னையென்றும்
பழிபடுசாபமேறூர்பரதராய்வரவும்வேண்டிற்
றழகிதுநன்றுநன்றேயாலவாயடிகள்செய்கை. (௪௬)

தன்பெருங்கணத்துளானோர்தலைவனுஞ்சலதிவாண
னென்பதுதோன்றவேடமெடுத்தெறிவலைதோளிட்டு
வென்புறமலைப்பக்காவிமீனிடுகுடம்பைதாங்கிப்
பின்புறநடந்துசெல்லப்பெருந்துறைப்பாக்கம்புக்கான். (௪௭)

கழித்தலைக்கண்டற்காடுங்கைதையுங்கானுநெய்தற்
சுழித்தலைகிடங்குநீத்துச்சுஃறெனுந்தோட்டுப்பெண்ணை
வழித்தலைசுமந்துவார்கள்வார்ப்பவாயங்காந்தாம்பல்
குழித்தலைமலர்பூங்கானற்கொடுவலைச்சேரிசேர்ந்தான். (௪௮)

---

(௪௨) கிழான்-உரியவன். (௪௪) கயம்-பெருமை.

(௪௮) தோடு-மடல். பெண்ணை-பனை. சுஃறு - ஒலிக்குறிப்பு. கைதை-வெண்தாழை.

பெருந்தகையமுதனாளைப்பெருதுபெற்றெடுப்பானேற்ற
வருந்தவவலைஞர்வேந்தனதிசயமகத்துட்டோன்ற
வருந்தகையுடையகாளைவலைமகன்வரவுநோக்கித்
திருந்தழகுடையநம்பியாரைநீசெப்புகென்றான். (௪௯)

சந்தநான்மறைகடேறாத்தனியொருவடிவாய்த்தோன்றி
வந்தமீன்கொலைஞன்கூறுமதுரையில்வலைஞர்க்கெல்லாந்
தந்தைபோற்சிறந்துளானோர்தனிவலையுழவனல்ல
மைந்தன்யான்படைத்துக்காத்துத்துடைக்கவும்வல்லனாவேன். ()

அல்லதுவான்மீனெல்லாமகப்படவலைகண்டோச்ச
வல்லவனாலேனென்னமற்றிவன்வலைஞன்கோலம்
புல்லியமகன்கொன்முன்னம்புகன்றசொல்லொன்றிப்போது
சொல்லியதொன்றிரண்டுஞ்சோதனைகாண்டுமென்னா. (௫௧)

தொண்டுறைமனத்துக்கானற்றுறைமகனஃதேலிந்தத்
தண்டுறையிடத்தோர்வன்மீன்றழலெனக்கரந்துசீற்றங்
கொண்டுறைகின்றதையகுறித்ததுபிடித்தியேலென்
வண்டுறைகோதைமாதைமணஞ்செயத்தருவேனென்றான். (௫௨)

சிங்கவேறனையான்காலிற்சென்னடைப்படவிற்பாய்ந்து
சங்கெறிதரங்கந்தட்பத்தடங்கடல்கிழித்துப்போகிக்
கிங்கரனானகாளைவரையெனக்கிளைத்ததோண்மேற்
றூங்கலிற்கிடந்துஞான்றதொகுமணிவலையைவாங்கி. (௫௩)

செவ்விதினோக்கியாகந்திருகநின்றெறிந்தான்பக்கங்
கௌவியமணியில்வீசவிசையொலிகறங்கிப்பாயப்
பைவிரித்துயிர்த்துநாகம்விழுங்கவாய்ப்பட்டமீன்போல்
வெவ்வினைச்சுறவேறையன்விடுவலைப்பட்டதன்றே. (௫௪)

மாசறுகேளிரன்பின்வலைப்படும்வலைஞர்கோன்றாய்
வீசியவலையிற்பட்டமீனினைச்சுருக்கிவாங்கிக்

---

(௪௯) நம்பி - ஆணிற் சிறந்தனன். (௫௦) சந்தம் ஆவது-உக்தைமுதலிய சந்தோபேதங்களுக்கு அக்ஷர சங்கியை கற்பிப்பது. படைத்துக் காத்துத்துடைக்கவும் வல்லனென்றது—தமதியற்கைக்குணமும், கடல்வாணராதலின் கடலிற்குரிய முத்தொழிற் குணமுந்தமக்குளவென்பதும் தோன்றநின்றது.

(௫௧) வான்மீன் - பெரியமீன், நட்சத்திரங்கள்.

(௫௩) கிங்கரன்-பணிசெய்வோன். (௫௫) கேளிர் என்றது—அடியார்களை. தாய் - தாவி.

காசெறிதரங்கமுந்நீர்க்கரையிடையிட்டான்கள்வாய்
மூசுதேனென்னவார்த்துமொய்த்தனபரதச்சாதி. (ருரு)

கிளையுநங்கோனும்வீசுவலைஞராய்க்கிளர்தோளாற்றல்
விளைவொடுமுயன்றுபன்னுள்வினைசெயப்படாதமீனிவ்
விளையவனொருவன்றனேயொருவிசையெறிந்தானீர்த்தா
னளியநங்குலத்தோர்தெய்வமகனிவனுகுமென்றார். (ருசு)

கைதைசூழ்துறைவனேகைகைமிகப்பம்பையேங்க
நொய்தெனுநுசுப்பிற்கள்வாய்நுளைச்சியர்குரவைதூங்கப்
பைதழைபகுவாய்க்கச்சைப்பரதவற்கலங்கன்ஞாழல்
செய்தெழுங்கோதைமாதைத்திருமணம்புணர்த்தினனே. (ருஎ)

அந்நிலைவதுவைக்கோலமாயினமருகனுரு
மின்னிலைவேற்கணுளும்விண்ணிடைவிடைமேற்கொண்டு
தன்னிலைவடிவாய்த்தோன்றத்தடங்கரைமீனுந்தானு
நன்னிலைவடிவேபோன்றுநந்தியாய்முந்தித்தோன்ற. (ருஅ)

கொற்றவெள்விடைமேற்காட்சிகொடுத்தவர்கருணைநாட்டம்
பெற்றலின்மேலைச்சார்பாற்பிணித்தவிப்பிறவிவாழ்க்கைச்
சிற்றறிவொழிந்துமுந்நீர்ச்சேர்ப்பநல்லறிவுதோன்றப்
பொற்றனுமேருவீரன்பூங்கழலடிக்கீழ்த்தாழ்ந்தான். (ருகூ)

இரக்கமிலிழிந்தயாக்கையெடுத்துழலேழையேனைப்
புரக்கவின்றென்போல்வந்தபுண்ணியவடிவம்போற்றி
யரக்கெறிபவளச்செவ்வாயணங்கினை மணந்தென்பாசந்
கரக்கவெள்விடைமேனின்றகருணையேபோற்றியென்றான். (சுO)

அகவிலான்பரவிநின்றவன்பனைநோக்கிப்பன்ஞண்
மகவிலாவருத்தநோக்கியுமையைநாமகளாத்தந்து
தகவினுன்மணந்தேநீயித்தரணியிற்றனதனென்ன
நகவிலாப்போகமூழ்கிநம்முலகடைவாயென்ன. (சுக)

பெண்ணினைவதுவைக்கீந்தபெருந்துறைச்சேர்ப்பற்கன்று
தண்ணளிசுரந்துநல்கித்தருமமால்விடைமேற்றேன்றி

---

(ருசு) தெய்வமகன் என்றது—வருணனை.

(ருஎ) பம்பை-நெய்தற்பறை. பகுவாய்-வினைத்தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகை நிலைத்தொடராய் அரவின்மேல்நின்றது. (ருஅ) தந்நிலை வடிவம்-தமக்குரிய அருளுருவம்.

(சுக) அகம்-அடியரிருதயம். தகவினுல் என்றது—எண்வகை மணங்களுள் பிரமமணம் புணர்ந்தமையை.

விண்ணிடைநின்றான்சென்றான்வேத்திரப்படையர்ளுேடு
முண்ணிறையன்பரோடுமுத்தரகோசமங்கை. (சுஉ)

அங்கிருந்தனுதிமூர்த்தியாதிநான்மறைகளேத்துங்
கொங்கிருங்கமலச்செவ்விக்குரைகழல்வணங்கிக்கேட்ப
பங்கிருந்தவட்குவேதப்பயனெலாந்திரட்டிமுந்நீர்ப்
பொங்கிருஞ்சுதைபோலட்டிப்புகட்டினுன்செவிகளார. (சுந)

மேற்படி - வேறு.

அவ்வேலையன்புடையாரறுபதினுயிரவர்க்குமளித்துப்பாச
வெவ்வேலைகடப்பித்துவீடாதபரானந்தவீடுநல்கி
மைவ்வேலையனையவிழியங்கயற்கணங்கையொடுமதுரைசார்ந்தா
நிவ்வேலைநிலம்புரக்கமுடிகவித்துப்பாண்டியனென்றிருந்தமூர்த்தி.

வலைவீசினபடலம் முற்றிற்று.

ஆ படலம் சுசு - க்கு - திருவிருத்தம் - உஎகஉ.

---

ஐம்பத்தேட்டாவது,

## வாதவூரடிகளுக்கு உபதேசித்தபடலம்.

கொச்சகக்கலிப்பா.

கலைவீசுமதிச்சடையோன்கடற்றுறைவன்றலைச்சென்று
வலைவீசியவன்பாசவலைவீசும்பரிசிதுமே
லலைவீசும்புனல்வாதவூரரைவந்தவிச்சைவலி
நிலைவீசிப்பணிகொண்டநெறியறிந்தபடிமொழிவாம். (க)

தொடுத்தவறுமையும்பயனுந்தூக்கிவழங்குநர்போல
வடுத்தவயற்குளநிரப்பியறம்பெருக்கியவனியெலா
முடுத்தகடலொருவற்குமுதவாதவுவரியென
மடுத்தறியாப்புனல்வைகைக்கரையுளதுவாதவூர். (உ)

---

(சுந) சுதை-அமுதம். அட்டி-திரட்டி.

(சுச) அறுபதினுயிரவராவார்—சிவபெருமானனுக்ஞையால், திருவுத்தரகோச மங்கையில் ஞானுேபதேசம்பெற வீற்றிருந்த அடியார்களும், சிவயோகிகளுமென்க.

(க) அவிச்சை - அஞ்ஞானம்.

விழவறாநகரெங்கும்விருந்தறாமனையெங்கு
மழவறாமகிழ்வெங்குமறையறாகிடையெங்கு
முழவறாவரங்கெங்குமுகிலறாபொழிலெங்கு
முழவறாவயலெங்குமுட்டபறாவுயிரென்ன. (ரு)

ஆயவளம்பதியதனினமாத்தியரிலருமறையின்
றூயசிவாகமநெறியின் றுறைவிளங்கவஞ்சனையான்
மாயனிடும்புத்தவிருளுடைந்தோடவக்தொருவர்
சேயவிளம்பரிதியெனச்சிவனருளாலவதரித்தார். (சு)

பேர்வாதவூரரெனப்பெற்றுத்தம்பிறங்குமறைச்
சார்வாயநூல்வழியாற்சடங்கெல்லாநிறைவெய்தி
நீர்வாயவிளமதிபோனிரம்புவார்வேதமுதற்
பார்வாயெண்ணெண்கலையும்பதினாறாண்டினிற்பயின்றார். (எ)

இத்தகையோர்நிகழ்செய்தியறிந்தவர்சென்றியம்பவரி
மர்த்தனபாண்டியன்கேட்டுவரவழைத்துமற்றவரைச்
சித்தமகிழ்வரிசையினாற்சிறப்பளித்துத்தன்கோயில்
வித்தகன்மதியமைச்சின்றொழில்பூட்டிமேம்படுத்தான். (சு)

செற்றமிகுங்கருவிகளின்றிறநூலுமனுவேந்தன்
சொற்றபெருந்தொன்னூலுந்துளக்கமுறவிளக்கமுற
கற்றறிந்தோராதலினாற்காவலற்குக்கண்போன்ற
முற்றுணர்ந்தவமைச்சரினுமுதலமைச்சராய்நிகழ்வார். (எ)

பல்லாதார்முரணடக்கிப்பொருள்கவர்வாரென்பதெவன்
செல்லாதபல்வேறுதீபத்துச்செங்கோன்மை
வல்லாருந்தத்தமதேத்தரியபொருள்வரவிடுத்து
நல்லாராயொப்புரவுநட்படையநடக்கின்றார். (அ)

---

(ரு) மழவறாமகிழ்வுஎன்றது-பொன், மணி, நெல்முதலியவற்றால் வரும்மகிழ்ச்சி, மகவில்லாத விடத்து சிறப்படையா வெனும் பொருள்பயந்துநின்றது-மழவு-பிள்ளைகள். (சு) மாயனிடும்புத்தவிருள் என்றது-திரிபுராதியரை வஞ்சித்தற்பொருட்டுமாயையில்வல்ல திருமால்நிறுத்திய புத்தசமயமாகிய பேரிருளை.

(சு) சிறப்பென்றது—அமைச்சியற் கேற்பத் தென்னவன் பிரமராயனென் றரசனுலமைத்த சிறப்புப்பெயரை. (எ) கருவி-சேனை. கருவிகளின்றிறநூல்-போர்ப்பயிற்சியை யுணர்த்தும் நூல். தொன்னூல் என்றது—மநுநூன்முதலிய தருமசாத்திரங்களை.

(அ) புல்லாதார் - பகைவர். தீபம் - தீவு.

அண்ணலரிமருத்தனனுக்கடல்வாதவூரமைச்சர்
கண்ணுமிடுகவசமும்போற்காரியஞ்செய்தொழுகுவார்
தண்ணளிசெய்தவனியெலாந்தங்கிளைபோற்குளிர்தூங்க
வண்ணமதிக்குடைநிழற்றிமுறைசெய்துவாழுநாள். (கூ)

கலிநிலைத்துறை.

மெய்ம்மையாம்பொருள்விவேகமும்வேறுபாடாய
பொய்ம்மையாம்பொருள்விவேகமும்புந்தியுட்டோன்ற
விம்மையாசையுமறுமையிலாசையுமிகந்து
செம்மையாகியகருத்தராய்ப்பரகதிதேர்வார். (கo)

புத்தராதியோர்புறவுரைநெறிகளும்பொய்யா
நித்தவேதநூறழுவியவகவுரைநெறியுஞ்
சித்தமாசறுத்தரனருட்டெளிவியாவதனுன்
மித்தையாணவத்தொடக்கறுவில்லையாம்வீடும். (கக)

பத்திசெய்தரனருட்பெறும்பத்தருக்கன்றி
முத்தியெய்தரிதெனமறைமொழிவதப்பொதுநூல்
சத்தியப்பொருட்டெளிவெலாஞ்சத்திநிபாதர்க்
குய்த்துணர்த்தியதாகமமென்பர்மெய்யுணர்ந்தோர். (கஉ)

வேதவாகமச்சென்னியில்விளைபொருளபேதம்
பேதமாகியபிணக்கறுத்திருட்பிணியவிழ்த்து
நாதனுகியதன்னையுமென்னையுநல்கும்
போதனுகியகுருபரன்வருவதெப்பொழுதால். (கங)

கரவிலாதபேரன்பினுக்கெளிவருங்கருணைக்
குரவனூரருளன்றியிக்கொடியவெம்பாசம்
புரையில்கேள்வியாற்கழிப்பதுபுணையினுலன்றி
யுரவுநீர்க்கடல்கரங்கொடுநீந்துவதொக்கும். (கச)

(கo) மெய்ம்மையாம்பொருள் என்றது-தனக்கோர் ஆக்கக்கேடுகளின்றிச்சுட்டறிவிற்படாதுநின்றசத்ததனை. வேறுபாடாயபொய்ம்மையாம் பொருள்என்றது-ஆக்கக்கேடுக ளுடைத்தாய்க்கால மிடமுதலியவற்று லேகதேசப்படுதலும், அதுவதுவாய்ப் பலவேறுவகைப்படுதலும் உடைத்தாய்ச் சுட்டறிவிற்பட்டு நிற்கும் அசத்ததனை.

(கக) புறவுரைநெறி என்றது - புறப்புறச்சமயம் புறச்சமயங்களை. அகவுரைநெறிஎன்றது அகப்புறச்சமயம் அகச்சமயங்களை.

(கஉ) பொதுநூல்-பலபொருள் படத்தோன்றுந் தன்மையதாயவேதம். சத்திநிபாதம்-திருவருட்பதிவு. சத்தி-திருவருள்-பாதம்-பதிவு. நி-அனு சுவர்க்கம்.

என்றிவ்வாதவூர்மறையவரின்பவீடெய்தத்
துன்றுமாசையாற்றொடக்குண்டுசுருதியாகமநூ
லொன்றுகேள்வியோர்வருந்தொறுமுணர்ந்தவரிடைத்தாஞ்
சென்றுகாண்டொறுமளவலாய்த்தேர்குவாரானார். (கரு)

எண்ணிலாரிடத்தளந்தளந்தறிபொருளெல்லா
முண்ணுநீர்விடாய்க்குவரிநீருண்டவரொப்ப
வண்ணலாரகத்தமைவுறாதரசனுக்குயிருங்
கண்ணுமாயமைச்சுரிமையுங்கைவிடாதியல்வார். (கசு)

கள்ளக்காதலனிடத்தன்புகலந்துவைத்தொழுகு
முள்ளக்காரிகைமடந்தைபோலும்பரைக்காப்பான்
பள்ளக்காரியுண்டவனிடத்துள்ளன்புபதிந்து
கொள்ளக்காவலனிடையுறத்தொழிலுமுட்கொண்டார். (கஎ)

இன்னசெய்கையினொழுகுவாரொருபொழுதேகித்
தென்னர்தம்பிரானவையிடைச்சென்றெதிர்நின்று
ரன்னபோதபெரிநிரைகாப்பவரரசன்
முன்னர்வந்துதாழ்ந்தொருசிறைநின்றிதுமொழிவார். (கஅ)

மறந்தவாதவேல்வலவநம்வயப்பரிவெள்ளத்
திறந்தவாம்பரிபோகநின்றெஞ்சியவெல்லா
நிறைந்தநோயவுநெடிதுமூப்புடையவுமன்றிச்
சிறந்தவாம்பரியொன்றிலைதேர்ந்திடினென்றார். (கசு)

மன்றல்வேம்பனும்வாதவூர்வள்ளலைநோக்கி
யின்றுநீர்நமதறைதிறந்திருநிதியெடுத்துச்
சென்றுவேலையந்துறையில்வந்திறங்குவதெரிந்து
வென்றிவாம்பரிகொடுவரப்போமென்றுவிடுத்தான். (உ0)

உள்ளம்வேறுபட்டமைச்சியநெறியினின்றொழுகும்
வள்ளலார்நிதியறைதிறந்தரும்பெறல்வயமான்
கொள்ளவேண்டியபொருளெலாங்கொண்டுதொழிறுக்கி
வெள்ளைமாமதிவேந்தனைவிடைகொடுபோவார். (உக)

---

(கஅ) சிறை-பக்கம். இன்ன, அன்ன என்பன - இகர அகரச் சுட்டின்திரிபுகள். (கசு) வலவன் - சமர்த்தன். எஞ்சிய-இதுவினை முதற்பொருண்மேல் நிற்றலால் வினைமுற்றுப்பெயர்.

(உ0) வேம்பன் - அரிமர்த்தனபாண்டியன். அறை என்றது-பொக்கிஷசாலையை. (உக) மதிவேந்தன் - சந்திரவமிசத்திற் றோன்றிய அரசன்.

எடுத்தபொற்சுமையொட்டகத்திட்டுமுன்னேக
விடுத்துவிண்டொடுதிண்டிறல்விடையவன்கோயி
லடுத்தவிழ்ந்தபொன்னம்புயத்தடம்படிந்தனைய
மடுத்தடங்கரைச்சித்தியைங்கரத்தனைவணங்கா. (உஉ)

கருணைநாயகியங்கயற்கண்ணியெம்பிராட்டி
யருணநாண்மலர்ச்செய்யசீறடித்தலமிறைஞ்சி
வருணனூர்பெருவயிற்றுநோய்வலிகெடுத்தாண்ட
தருணநாண்மதிச்சடையுடையடிகண்முன்றாழா. (உங)

ஒன்றுவேண்டுமிப்பொருளெலாமுனக்குமைம்பொறியும்
வென்றுவேண்டுநின்னன்பர்க்குமாக்குகவெள்ளி
மன்றுவேண்டிநின்றாடியவள்ளலென்குறையீ
தென்றுவேண்டிநின்றேத்துவார்க்கிறைவனின்னருள்போல். (உச)

ஆதிசைவனுமருச்சகனொருவனேரணைந்து
பூதியீந்தனனமக்கிதுபோலிலைநிமித்த
மீதுநன்னெறிக்கேதுவென்றிருகையேற்றணிந்து
வேதநாதனையிறைஞ்சினார்விடைகொடுமீண்டார். (உரு)

கலிவிருத்தம்.

இன்னியமதிர்ந்தனவெழுந்தனபதாதி
துன்னியவிணைக்கவரிதுள்ளினதுகிர்க்காற்
பொன்னியன்மதிக்குடைநிழன்றனபொலங்கொண்
மின்னியுமணிச்சிவிகைமேற்கொடுநடந்தார். (உசு)

மற்றிவர்வழிப்படுமுன்மாறிநடமாடும்
வெற்றிவிடையாரிவர்வினைத்தொகையினொப்பும்
பற்றியவிருட்டுமலபக்குவமுநோக்கா
வுற்றடிமைகொண்டுபணிகொண்டருளவுன்னா. (உஎ)

---

(உஉ) திண்டிறல் - ஒருபொருட்கிளவிகள்.

(உங) அருணம் - செம்மைநிறம். (உரு) பூதி - (ஐஸ்வரியத்தைத்தருவது) திருவெண்ணீறு. ஏது - சாதனம். (உசு) மதிக்குடை-முத்தாலாகியகுடை. அதிர்ந்தன முதலியனமுற்றெச்சங்கள்.

(உஎ) வினைத்தொகையினொப்பும் என்றது-சிவபுண்ணியமுதிர்ச்சியாற் சுகதுக்கங்களைத் தருதற்குக்காரணமாகிய கன்மமலம் ஒன்றற்கொன்று எறுதுதுலைபோலத் தம்முளொத்தலாகிய இருவினையொப்பினை. மலபக்குவமும் என்றது - தனது சத்திகெடுதற்குரிய காரணங்களோடுங்கூடிப்பதனழியும் பருவமுடையதாயமலபரிபாகத்தை.

சந்தமறைதீண்டரியதங்கருணையாலோ
ரந்தணர்குலக்குரவனாகியடிநீங்கா
மைந்தர்பலர்தம்மொடுபெருந்துறையில்வந்தோர்
கொந்தலர்நெருங்கியகுருந்தடியிருந்தார். (உஅ)

பொருங்கடலனீகமொடுபோய்ப்புறவடுத்த
விருங்கடமளப்பிலகடந்தெழுபிறப்பாங்
கருங்கடல்கடக்கவருவார்கருணைவெள்ளப்
பெருங்கடனிறைந்துறைபெருந்துறையடைந்தார். (உகூ)

அடுத்திடவடுத்திடவகத்துவகைவெள்ள
மடுத்திடமுகிழ்த்தகைம்மலர்க்கமலமுச்சி
தொடுத்திடவிழிப்புனறுளித்திடவினைக்கே
விடுத்திடுமெனத்தருள்விளைந்திடநடந்தார். (௩௰)

பித்திதுவெனப்பிறர்நகைக்கவருநாலாஞ்
சத்திபதியத்தமதுசத்தறிவுதன்னைப்
பொத்தியமலத்தினும்வெரீஇச்சுமைபொறுத்தோ
னொத்திழிபிணிப்புறுமொருத்தனையுமொத்தார். (௩க)

நெருப்பிலிடுவெண்ணெயெனநெஞ்சுருகவென்னை
யுருக்குமிதனாலெனையொளித்தமலவாற்றல்
கருக்குமவனாகியெனையாள்கருணைவெள்ள
மிருக்குமிடனேயிதெனவெண்ணிநகர்புக்கார். (௩௨)

காயிலையடைந்தகழுமுட்படைவலத்தார்
கோயிலையடைந்துகுளிர்வான்புனல்குடைந்து
வாயிலையடைந்துடலமண்ணுறவிழுந்து
வேயிலையடைந்தவரைமெய்ப்புகழ்வழுத்தா. (௩௩)

---

(உஅ) மைந்தர் என்றது - திருவடிஞான சம்பந்திகளாயுள்ள மாணவர்களை. (உகூ) அநீகம் - சேனை. புறவு - முல்லைநிலம். இருங்கடம்என்றது - பாலைநிலத்தை. (௩௰) உவகை-ஆராமகிழ்ச்சி. முகிழ்த்த - கூப்பிய. வினை என்றது - சிவன்றிருப்பணிகளை.

(௩க) நாலாஞ்சத்திபதிய என்றது-மந்ததரம், மந்தம், தீவிரம், தீவாதரம்என்னு நான்கனுள் தீவிரதரசத்திநிபாதத்தை. சத்தறிவு என்றது - சிவத்தொடுகலந்து பேரின்பநுகருஞ் சிவஞானவுணர்ச்சியை. பொத்தியமலம் என்றது - கன்மம், மாயை, ஆணவமென்னு மும்மலங்களை. (௩௨) ஆற்றல் - வன்மை.

(௩௩) வே இல் - மூங்கிலாகிய இடம்.

ஆலயமருங்குவலமாகவருவார்முன்
மூலமறையோதிமுடியாதபொருடன்னைச்
சீலமுனிவோர்தெளியமோனவழிதேற்றுங்
கோலமுறைகின்றதோர்குருந்தையெதிர்கண்டார். (ருச)

கலிநிலைத்துறை.

வேதநூலொருமருங்கினுமெய்வழிச்சைவப்
போதநூலொருமருங்கினும்புராணத்துட்கிடந்த
கீதநூலொருமருங்கினுங்கிளைகெழுசமய
பேதநூலொருமருங்கினும்வாய்விட்டுப்பிறங்க. (ருரு)

சுருதிகூறியவறமுதனான்குமத்தொன்னூற்
கரியதாங்கதிக்கேதுவென்றாகமங்காட்டுஞ்
சரியையாதிநாற்பாதமுந்தலைதெரிந்துணர்ந்த
பெரியமாணவர்கழகமும்வினாவிடைபேச. (ருசு)

சரியைவல்லமெய்த்தொண்டருஞ்சம்புவுக்கினிய
கிரியைசெய்யுநன்மைந்தருங்கிளர்சிவயோகந்
தெரியுஞ்சாதகக்கேளிருந்தேசிகத்தன்மை
புரியும்போதகச்செல்வருமளவிலர்பொலிய. (ருஎ)

(ருச) முனிவோர்-சநகாதிகள். மோனம்-மௌனநிலை. கோலம் - ஆசிரியத்திருக்கோலம். (ருரு) சைவப்போத நூல் - ஆகமம். கீதநூல் என்றது-இசையமைந்த கலை மிருதிமுதலியநூல்களை.

(ருசு) அறமுதனான்காவன-தர்மார்த்தகாமமோட்சங்கள், சரியையாதிநாற்பாதமாவன-சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய சோபான மார்க்கங்கள். தலைதெரிந்து என்றது - பாகுபாடு செய்தாராய்ந்தறிந்தமையை.

(ருஎ) சரியையாவது-புறத்தொழிலொன்றால் உருவத்திருமேனியைநோக்கிச்செய்யும்வழிபாடு. கிரியையாவது-புறத்தொழி லகத்தொழிலிரண்டாலும் அருவுருவத்திருமேனியை நோக்கிச்செய்யும்வழிபாடு. யோகமாவது - அகத்தொழிலொன்றால் அருவுருவத்திருமேனியை நோக்கிச்செய்யும்வழிபாடு. இவற்றுள்சரியை, தாதமார்க்கமாதலால் மெய்த்தொண்டரெனவும்-கிரியை, புத்திரமார்க்கமானதால், மைந்தரெனவும், யோகம், சகமார்க்கமாதலாற்கேளிர் எனவுங்கூறினர். சாதகக்கேளிர் என்றது - இறைவன்திருவடியிலன்புமிகுந்து தமதுமலங்களை யொழிப்பவராதலின். போதகச்செல்வர் - போதகாசிரியர்.

ஒழித்தநோன்பின ராடலர்பாடலருலகம்
பழித்தசெய்கையரழுகையர்நகையினர்பாசங்
கழித்தகண்களாலரனுருக்கண்டுகொண்டுலகில்
விழித்தகண்குருடாத்திரிவீ ரரும்பலரால். (௩அ)

கரவிலுள்ளமாம்விசும்பிடைக்காசறவிளங்கும்
பரசிலாச்சுடர்க்குதயமீறின்மையாற்பகலு
மிரவுநேர்படக்கண்டிலரியன்றுசெய்நித்த
விரதமாதிநோன்பிழந்துறைவிஞ்சையர்பலரால். (௩௯)

உடையுங்கோவணமுண்டிங்கைப்பலியுறவென்
றடையுங்கேளிருமரனடியார்கண்டிகலன்கண்
படையும்பாரிடமாயினும்பகலிராமுதலீ
றிடையின்றாமிடத்துறங்குவதிஃதவர்வாழ்க்கை. (௪0)

இத்தகைப்பலதொண்டர்தங்குழாத்திடையால
மொத்தபைங்குருந்தடியினில்யோகவாசனத்திற்
புத்தகத்தெழுதியசிவஞானமெய்ப்போதங்
கைத்தலந்தரித்திருப்பதோர்கருணையைக்கண்டார். (௪௧)

மன்றுளாடியவானந்தவடிவமும்வடவா
லொன்றிநால்வருக்கசைவறவுணர்த்தியவுருவு

(௩அ ஒழிந்தநோன்பினர் என்றது-விதிவிலக்கின்றிச்செய்வனவெல்லாந் தவமாக்கொண்டமுருவோராதலின். பாசங்கழித்தகண்ணினலரனுருக்கண்டுகொண்டுலகில்விழித்தகண் குருடாய்த்திரிவீரர் என்றது-முப்பத்தாறு கருவிகளுங்கழன்று அருளிடத்தேநின்றுஞேயத்தழுந்துவதாகிய சாக்கிராதீதாவஸ்தையை யுடையவராதலின்.

(௩௯) கரவு-மும்மலங்களின்குணம். பரசிலாச்சுடர் என்றது-நிட்களசிவத்தை. உதயமீறின்மை என்றது-தோற்றக்கேடுகளின்றி நிற்றலை. பகலுமிரவுநேர்படக்கண்டிலர்என்பது-கேவலசகலங்களினீங்கிய சுத்தநிலையினின்றமையை. நித்தவிரதமாதி நோன்பிழந்துறைவிஞ்சையர் என்றது - உறங்கினவன் கையிலுள்ள பாக்குத்தானேதவிர்தல்போல ஞானநிட்டை மேலீட்டால் நித்தியகன்மமுதலியதவங்கள் தாமேயொழியப்பெற்றவராதலின்.

(௪0) பலி-பிச்சை. பாரிடம்-பூமி. பகலிராமுதலீறிடை யின்றாமிடத்து என்றது - சுத்தநிலையாகிய சாக்கிராதீதம், கேவலசகத்தோற்றம், கேடுநிலைகளினிகந்து நிற்றலை. (௪௧) ஆலம் - வடவாலவிருட்சம். (௪௨) நால்வர் - சநகாதியர் - உருவும் என்றது—தட்சணமூர்த்தத்தை.

மின்றநாயினேற்கெளிவந்தவிவ்வுருவென்று
வன்றநாயகன்குறிப்புளத்துணர்த்திடவறிந்தார். (சஉ)

முன்பணிந்தனரணிந்தனரஞ்சலிமுடிமே
லென்புநெக்கிடவுருகினரினியராயெளிவந்
தன்பெனும்வலைப்பட்டவரருள்வலைப்பட்டார்
துன்பவெம்பவவலையறுத்திடவந்ததொண்டர். (சங)

காலமுங்கனுக்காட்சியுநித்தமுங்கடிந்தார்
சீலமாணவர்செவ்விதேர்தேசிகனென்ன
மூலவாகமமோதினுன்முறுக்கவிழ்கழுநீர்
மாலைசாந்தணிந்தடியின்மேல்வன்கழல்வீக்கி. (சச)

அண்ணல்வேதியரொழுக்கமுமன்புங்கண்டியாக்கை
யுண்ணிலாவுயிர்பொருட்புனலுடன்கவர்ந்துள்ளக்
கண்ணினுன்மலங்கழீஇப்பதகமலமுஞ்சூட்டி
வண்ணமாமலர்ச்செங்கரஞ்சென்னிமேல்வையா. (சரு)

சூக்கமாகுமைந்தெழுத்தினிற்சுற்றியபாச
வீக்கநீக்கிமெய்யானந்தம்விளைநிலத்துய்த்துப்
போக்குமீட்சியுட்புறம்பிலாப்பூரணவடிவ
மாக்கினுரொருதீபகம்போல்வருமண்ணல். (சசு)

---

(சங) துன்பவெம்பவம் என்றது—ஆதிதெய்விகம், ஆதிபௌதிகம், ஆதியான்மிகமுதலிய பிறவித்துன்பங்களை.

(சச) காலம்-தீட்சாகாலங்கள், நிமித்தம்-சகுனம். செவ்வி-பக்குவம். ஆகமமோதினுன்-சிவபெருமான். கழல்-வீரகண்டை.

(சரு) வேதியர்-திருவாதவூரர். உள்ளக்கண்ணினுன் மலங்கழீஇ என்றது—அருளுக்கால் மும்மலங்களிற் சிமிழ்ப்புண்டு கிடந்த ஆன்மாவையம்மலங்களினீக்கி, யேகதேசவறிவினைக்கழித்து வியாபகவறிவைத்தருஞ்சட்சுதீட்சையை. பதகமலமுஞ்சூட்டி என்றது-திருவருட் பதிவுசெய்தமையை. செங்கரஞ் சென்னிமேல் வையா என்றது—சீடர்மலவாதனையைத் தவிர்க்க உள்ளும் புறம்பும் தம் வண்ணமாகச்செய்யும் பரிசதீட்சையை.

(சசு) சூக்கமாகுமைந்தெழுத்து என்றது—தூலம், சூக்குமம், அதிசூக்குமம் என்னுமுத்திறப்பட்ட ஸ்ரீபஞ்சாக்கரங்களுள் சூக்கும பஞ்சாக்கரத்தை. சூக்குமம்-பிராகிருதச்சிதைவு. பாசவீக்கம் நீக்கி என்றது—நமவொழித்துரைத்தமையை-இதனை, "நகரமாகியசேரியை நஞ்செனவெறுத்து, மகரமாகியவேரெலா மயலறக்களைந்து" என்னுந்திருவாக்கால்தெளிக. விளைநிலத்துய்த்து என்றது-உச்சாரணை முறையினன்றித் திருவருளிடமாகத் தம்பாலழுத்தினமையை, தீவகம்-பார்வைமிருகம்.

பார்த்தபார்வையாலிரும்புண்டநீரெனப்பருகுந்
தீர்த்தன்றன்னையுங்குருமொழிசெய்ததுந்தம்மைப்
போர்த்தபாசமுந்தம்மையுமறந்துமெய்ப்போத
மூர்த்தியாயொன்றுமறிந்திலர்வாதவூர்முனிவர். (சஎ)

தேனும்பாலுந்தீங்கன்னலுமமுதுமாய்த்தித்தித்
தூனுமுள்ளமுமுருக்கவுள்ளொளியுணர்ந்தின்ப
மானவாறுதேக்கிப்புறங்கசிவதொத்தொழியா
ஞானவாணிவந்திறுத்தனளன்பர்தந்நாவில். (சஅ)

தொழுதகையினர்துளங்கியமுடியினர்துளும்ப
வழுதகண்ணினர்பொடிப்புறுமியாக்கையர்நாக்குத்
தழுதழுத்தவன்புரையினர்தமையிழந்தழல்வா
யிழுதையன்னமெய்யினர்பணிந்தேத்துவாரானார். (சகூ)

பழுதிலாதசொன்மணியிணைப்பத்திசெய்தன்பு
முழுதுமாகியவடத்தினன்முறைதொடுத்தலங்க
லழுதுசாத்துமெய்யன்பருக்ககமகிழ்ந்தையர்
வழுவிலாதபேர்மாணிக்கவாசகனென்றார். (ருo)

பாட்டிற்கின்புறுகுருபரன்பாதமேற்கண்ணீ
ராட்டிச்சொன்மலரணிந்துதற்போதவின்னமுதை
யூட்டித்தற்பரஞானமாமோமவெங்கனலை
மூட்டிச்சம்புவின்பூசைமேன்முயற்சியாரானார். (ருக)

ஆசைவெம்பவவாசனையற்றுமாணிக்க
வாசகப்பிரான்றேசிகன்மாணவரோது
மோசையாகமவுபனிடப்பொருளெலாங்கேட்டு
நேசமங்குவைத்திருந்தனனதுகண்டுசிருத்தன். (ருஉ)

எண்சீரடியாசிரியவிருத்தம்.

தித்திக்குமணிவார்த்தை யின்னஞ்சின்னாட் டிருச்செவியிலருத்தவுங்கைச் செம்பொனெல்லாம், பத்திப்பேரன்பளித்துக் கவர்ந்துவேண்டும் பணிகொடுபாண்டியனையிவர் பண்புதேற்றி, முத்திக்கேவிடுத்திடவும் புத்தைவாது முடிந்திடவுந்திருவுள்ள முன்னமெ

(சஎ) தீர்த்தன்-ஞானசாரியன். மெய்ப்போதம்-ஞானநிட்டை.

(சஅ) ஊன்-உடல். ஒளி-திருவருட்பிரகாசம். (சகூ) தமை-என்றது—தற்போதத்தை. (ருக) தற்போதம்-சிவபோதம்.

(ருஉ) பவவாசனை-பிறவிக்கேதுவாய மலவாசனை.

(ருங) பாண்டியனை-உருபுமயக்கம்.

ய்தி, யெத்தித்தொண்டரைக்கருமஞ் சிறிதுண்டிங்கே யிருத்தியெ னவுருக்கரந்தானடியரோடும். (ருங)

கனவில்வருங்காட்சியெனக் கருணைமூர்த்தி காட்டிமறைத்த லுமன்பர்கலக்கத்தாழ்ந்து, நனவுகொல்லோகனவுகொல்லோவின் றுநாதன் ஞமலிக்குத்தவிசிட்ட நலம்போலென்னை, நினைவரியதி ருமேனிகாட்டியாண்டு நீத்ததையென்றையுற்று நெஞ்சந்தேறி, யி னவடியாருடன்கூட்டா தேகினுயோ வென்னையுமென் வினையையு மிங்கிருத்தியெந்தாய். (ருச)

வஞ்சவினைகொள்கலனு முடலைத்தீவாய் மடுக்கிலேன்வரையு ருண்டுமாய்ப்பேனல்லே, னஞ்சொழுகுவாளாலுங் குறைப்பேனல் லே னுதனேயதுவுநின துடைமையன்றே, யஞ்சினேன்றுனேயு மழியாதாவி யையனேநினைப்பிரிந்து மாற்றகில்லே, னென்செய் கோவெந்தாயோ வெந்தாயோவென் றிரங்கினுர்புரண்டழுதாரினை யசொல்வார். (ருரு)

வறியனுமொருபிறவிக் குருடன்கையில் வந்தபெருவிலைமணி போன்மழலைதேருச், சிறியனுமொருமதலைகையிற்கொண்ட செம் பொன்மணிவள்ளம்போற்றேவர்யார்க்கு,மறிவரியாய்சிறியேனையெ ளிவந்தாண்டவருமையறியேன்றுன்பத்தழுவத்தாழப், பிறிவறியாவ ன்பரொடுமகன்றுய்கல்லாப் பேதையேன்குறையலதெம் பிரானு லென்னே. (ருசு)

கலிநிலைத்துறை.

மண்ணுதியாறுறுமனந்துழாவித்தமொறிப்
புண்ணுகியெனக்காணுதுழல்கின்றேனைப்போதவருட்
கண்ணுலவைமுழுதுங்கரையநோக்கியொன்யானென்
றெண்ணுவெனத்தந்தாயெங்குற்றுயோவெந்தாயே. (ருஎ)

---

(ருரு) வஞ்சவினைக் கொள்கலனுமுடல் என்றது-புண்ணியமு ம்பொன்விலங்குபோல்வதாதலின். கலன்—மரக்கலம்.

(ருசு) அழுவம்-பரப்பு. இதுபரவை என்றுற்போலக்கடல்மே ல்நின்றது. துன்பத்துஎன்றதில் அத்து தவிர்வழி வந்தசாரியை.

(ருஎ) மண்ணுதியாறுறும் என்றது - பிருதிவிமுதல் நாதத த்துவமீறுகிய முப்பத்தாறுதத்துவங்களை. எனைக்காணுது உழல்கின் றேனென்றது-தன்னையடுத்த பலநிறங்களாகிய பொதுவியல்பை த்தன்பாற் காட்டிநிற்கும் பளிங்குபோல ஆன்மாவும் தன்னுற்சார ப்பட்ட தத்துவங்களி னியல்பாகிய பொதுவியல்பே தன்பாற்காட் டிநிற்கும்பெத்த நிலையை. அவைஎன்றது - மந்திரம், பதம், வன் னம், புவனம், தத்துவம்-கலைஎன்னு மத்துவாக்களை.

வானுதியைந்துமுதல்வகுத்தவோசைமுதலைந்து
மானுதியங்குமனமாதிநான்கும்வழியடைப்பத்
தேனுதியறுசுவையுங்கழியவூறுந்தெள்ளமுதம்
யானுரநல்கினையாலெங்குற்றுயோவெந்தாயே. (ருஅ)

மாசாய்மறைக்குமலவலியுநானும்வேறின்றி
யாசாவிகாரமலமாயினேனைப்பொருட்படுத்திப்
பேசாதவின்புருவினின்றேடென்னைப்பின்வைத்த
வீசாவெனையிங்கிட்டெங்குற்றுயோவெந்தாயே. (ருகூ)

மேற்படி-வேறு.

என்றுவாய்திறந்தரற்றினுரிரங்கினுர்புனிற்றுக்
கன்றுநீங்கியவானெனக்கரைந்தநெஞ்சினராய்ச்
சென்றுகோபுரவாயிலின்புறம்புபோய்த்திரண்டு
நின்றகாவலன்றமர்களைநேர்ந்தனர்நோக்கா. (சுO)

துங்கவாரியிற்கடும்பரித்தொகையெலாமாடித்
திங்களின்றலைவருமெனமுன்புபோய்த்தென்னர்
புங்கவன்றனக்குணர்த்துமின்போமெனவிடுத்தா
ரங்கணுயகன்பெருந்துறைநாயகனன்பர். (சுக)

புரசைமாவயப்புரவிதேர்ப்பொருநர்போய்ப்பொறிவண்
டிரைசெய்தார்முடிவேந்தன்முனிறைஞ்சினுருள்ள
துரைசெய்தாரதுகேட்டொன்றுமுரைத்திலனிருந்தா
னிரைசெய்தார்ப்பரிவரவினைநோக்கியநிருபன். (சுஉ)

வள்ளல்வாதவூர்முனிகளுமன்னவன்பரிமாக்
கொள்ளநல்கியபொருளெலாங்குருந்தில்வந்தாண்ட

(ருஅ) வானுதியைந்தாவன —பஞ்சபூதங்கள். ஓசைமுதலைந்தாவன-சத்தமுதலிய தன்மாத்திரைகள். ஆனுது-நீங்காது மனமாதிநான்காவன - அந்தக்கரணங்கள். வழியடைப்ப என்றது - மேற்கூறிய தநுகரணபுவன போகங்களுக்கேதுவாகிய பிறவிநீக்கத்தை. தேனுதியறுசுவை - தேன், பால், கன்னல், கனி, சீனி, கற்கண்டு. தெள்ளமுதம் என்றது — அமுதம் நரைதிரை மூப்புக்களை யொழித்தல்போல, இதுஆணவாதி மும்மலங்களை ஒழித்தலின் உவமவாகுபெயராய்சிவானந்தத்தை யுணர்த்திநின்றது. சுவை-இது சுவைப்பொருள் மேனிற்றலாற் பண்பாகுபெயர். (ருகூ) ஆசாவிகாரம்என்றது-இச்சைகாரணமாய்வரும் தநுகரண புவனபோகங்களை.

(சுஉ) புரசைமா-யானை. புரசை-கழுத்திடுகயிறு.

பிள்ளைவாண்மதிச்சடைமுடிப்பெருந்துறைமறையோர்க்
குள்ளவாதரம்பெருகமுன்வேண்டியாங்குய்ப்பார். (சுங)

சிறந்தபூசைக்குந்திருவிழாச்சிறப்புக்குஞ்செல்வ
நிறைந்தவாலயத்திருப்பணித்திறத்துக்குநிரப்பி
யறந்தவாதபேரன்பர்க்குஞ்செலுத்தியத்தலத்தே
யுறைந்தவாவறவின்னணமொழுகுநாள்கழிப்பார். (சுச)

எல்லைகூறியகுளிர்மதியடுக்கவந்தெய்த
மல்லல்யானையானின்னமும்வயப்பரிவந்த
தில்லையாலிதுவென்னெனவோலையுமெழுதிச்
செல்லவுய்த்தனன்வாதவூரமைச்சர்தந்திருமுன். (சுரு)

மன்னவன்றிருமுகங்கண்டுமுறைமையால்வாங்கி
யன்னவாசகந்தெரிந்துகொண்டாதியீறில்லா
முன்னவன்றிருவருட்கடன்மூழ்கியமுனிவ
ரென்னவேறினிச்செய்யுமாறென்றுநின்றயர்வார். (சுசு)

சிந்தையாகியசெறுவினுட்சிவமுதலோங்கப்
பந்தபாசம்வேரறக்களைந்தருட்புனல்பாய்ச்சி
யந்தமாதியின்றாகியவானந்தபோகந்
தந்ததேசிகவுழவன்றன்கோயிலைச்சார்ந்தார். (சுஎ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

என்னாயகனேபொன்னுடரேறேயேறுகொடியுயர்த்த
மன்னுதென்னுபெருந்துறையெம்மணியேவழுதிபொருளெல்லா
நின்னாலயத்துநின்னடியாரிடத்துஞ்செலுத்துநெறியளித்தாய்
பின்னவனுக்கென்கொண்டுபரிமாச்செலுத்தப்பெறுமாறே. ()

என்றுவிறைஞ்சியெழுந்தேத்தியிரந்தாரெதிரேபெருந்துறையின்
மின்னார்சடைமேற்பிறைமுடித்தோன் விசும்பினிறைந்ததிருவாக்
மன்னனவற்குப்பரியெல்லாம்வருமென்றோலைவிடுதியெனச் [கான்
சொன்னதுகேட்டகத்துவகைதுளும்பிவரைந்துசுருள்விடுத்தார்

அந்தவோலைப்பாசுரமுமறையக்கேட்டுநின்றாங்கோர்
சிந்தையானுமகிழ்சிறப்பவிருந்தான்புரவித்தேரோடும்

---

(சுரு) குளிர்மதி-கடகமாதம். (சுஎ) செறுவு-வயல். சிவமுதல் என்றது-அன்பென்னும் பைங்கூழை; இதனை "அன்புசிவமிரண் டென்பரறிவிலார்-அன்பேசிவமாவதாருமறிகிலர், அன்பே சிவமா வதாருமறிந்தபின், அன்பேசிவமாயறிந்திருப்பாரே" என்ற திரும ந்திரத்தாலறிக.

வந்தவாதிச்செங்கதிரோன்மறைந்தானவனுல்வையமெலாம்
வெந்தவேடைதணிப்பான்போன்முளைத்தானுதிவெண்கதிரோன்.

அன்றுதுயிலும்வாதவூரடிகள்கனவிற்சுடர்வெள்ளி
மன்றுகிழவர்குருந்தடியில்வடிவங்காட்டியெழுந்தருளி
வென்றிவேந்தன்மனங்கவரும்விசயப்பரிகொண்டணைகின்றே
மின்றுநீமுன்னேகுதியென்றருளிச்செய்யவெழுந்திருந்தார். (எக)

கனவினிடத்துந்தேவர்க்குங்காண்டற்கரியகருணையுரு
நனவினிடத்துங்கனவிடத்துமெளிதேயன்றேநமக்கென்ன
நினைவினிடைக்கொண்டிருக்கின்றார்நிருத்தானந்தச்சுடருள்ளத்
தினவிருளைத்தின்றெழுவதெனவெழுந்தானிரவிபிரவொதுங்க. ()

எழுந்தாருடையபெருந்துறையாரிருதாள்பணிந்தாரினிப்பிறப்பி
லழுந்தார்வழிக்கொண்டாரடைந்தாரகன்றார்நெறிகளவிர்திங்கட்
கொழுந்தார்சடையார்விடையார்தென்கூடலணைந்தார்பாடளிவண்
டுழுந்தார்வேந்தன்பொற்கோயிலுற்றார்காணப்பெற்றுரால். (எங)

மன்னர்பெருமானெதிர்வந்தமறையோர்பெருமான்வழிபாடு
முன்னர்முறையாற்செய்தொழுகிமுன்னேநிற்கமுகநோக்கித்
தென்னர்பெருமானெவ்வளவுசெம்பொன்கொடுபோயெவ்வளவு
நன்னரிவுளிகொண்டதெனக்கேட்டான்கேட்டநான்மறையோர். ()

பொன்னுமளவோவிலைகொண்டபுரவித் தொகையுமனைத்தவைதா
பின்னர்வரக்கண்டருளுதியெம்பெருமானிதனுற்றுரங்கபதி [ம்
யென்னுநாமம்பெறுதிமதியென்றுரென்றமந்திரர்க்குத்
தென்னன்சிறந்தவரிசைவளஞ்செய்துவிடுப்பச்செல்கின்றார். (எரு)

பொன்னங்கமலத்தடம்படிந்துபுழைக்கைமதமாமுகக்கடவு
டன்னங்கமலசரணிறைஞ்சித்தனியேமுளைத்தசிவக்கொழுந்தை
மின்னங்கயற்கட்கொடிமருங்கில்விளைந்ததேனைமுகந்துண்டு
முன்னங்கருத்துமொழியுடம்புமூன்றுமன்பாய்த்தோன்றினார். ()

மன்னேயென்னையாட்கொண்டமணியேவெள்ளிமன்றாடு
மன்னேயடியேன்வேண்டியவாறரசனீந்தநிதியெல்லா
முன்னேகொண்டென்பணிகொண்டாய்முனியாதரசனிமகிழ
வென்னேபுரவிவரும்வண்ணமென்றுவேண்டிநின்றிடலும் (எஎ)

---

(எ0) ஆதிச்செங்கதிர், ஆதிவெண்கதிர் என்றது-சூரியசந்திரர்கள்செல்லும் மேஷவீதி, ரிஷபவீதி, மிதுனவீதிஎன்னு மூன்றனுள், ஆடிமாதம் மேடவீதியாகியமுதல்வீதியாதலின். (எ௨) இனஇருள் என்றது-ஆணவமலவிருளை. (எச) இவுளி-குதிரை.

மெய்யன்புடையாயஞ்சலைநீவேட்டவண்ணம்விண்ணிரவி
வையம்பரிக்கும்பரியனையவயமாக்கொண்டுவருதுமென
வையன்றிருவாக்ககல்விசும்பாறெழுந்ததாகவதுகேட்டுப்
பொய்யன்பகன்றார்சிவன்கருணைபோற்றிமனையிற்போயினார். ()

மேற்படி - வேறு.

கடிமனையடைந்தவெல்லைவாதவூர்க்காவலோரை
மடிமையில்சுற்றத்தோருங்கேளிருமாண்டகாத
லடிமையுள்ளாருமேதிலாளரும்பிறருமீண்டி
யிடிமழைவாய்விட்டென்னப்புந்திகளினையசொல்வார். (எகூ)

மந்திரக்கிழமைபூண்டுமன்னவர்கருமஞ்செய்வ
தந்தணர்க்கறனையல்லவமைச்சியலறத்துநின்றால்
வெந்திறலரசர்க்கேற்றசெய்வதேவேண்டுமென்னத்
தந்திரமநுநூல்வல்லோர்சாற்றுவாரன்றேவையா. (அ௦)

அரைசியலமைச்சுநீதியாய்ந்தநுங்கட்குநாங்க
ளுரைசெய்வதெவனீர்செய்வதொன்றுநன்றுவதில்லை
விரைசெறிதாராற்கின்றுவெம்பரிவருவதாக
வரையறைசெய்தீர்நாளையென்சொலவல்லீரையா. (அ௧)

தழுவியகிளைஞர்நட்டோர்சார்வுளோர்தக்கசான்றோர்
குழுவினைக்காக்கவேண்டுங்குறிப்பிலீர்போலுநீவி
ரொழுகுறுசெயலினாலேயுஞ்செயலுமக்கேசால
வழகிதுபோலுமென்னக்கழறினாரதுகேட்டையன். (அ௨)

சுற்றமுந்தொடர்புநீத்தேந்துன்பமுமின்பமற்றேம் [ஞ்
வெற்றுடன்மானந்தீர்ந்தேம் வெறுக்கைமேல் வெறுக்கைவைத்தே
செற்றமுஞ்செருக்குங்காய்ந்தேந்தீவினையிரண்டுந்தீர்ந்தேங்
கற்றைவார்சடையான்கோலங்காட்டியாட்கொண்டவன்றே. (அ௩)

தந்தைதாய்குரவனாசான்சங்கரனிராசைபெண்டிர்
மைந்தர்பல்லுயிருஞ்சுற்றமாசிலாவீசனன்ப
ரந்தமில்பிறவியேழுமடுபகையென்பதோர்ந்தே
மெந்தையார்கருணைகாட்டியெம்மையாட்கொண்டவன்றே. (அ௪)

---

(எஅ) வையம்-தேர் (எகூ) வாய்விடல்-ஒலித்தல்.

(அ௦) தந்திரமநுநூல் என்றது - அறுபத்துநான்கு கலைகளுள் மநுநூலு மொன்றாதலின். (அ௩) வெறுக்கை - செல்வம்.

(அ௪) குரவன் - போதகாசிரியன். ஆசான் - ஞானாசிரியன். நிராசை - ஆசையின்மை.

ஊரெலாமட்டசோறுநம்மதேயுவரிசூழ்ந்த
பாரெலாம்பாயறுன்னற்கோவணம்பரிக்குமாடை
சீரெலாஞ்சிறந்தசாந்தந்தெய்வநீறணிபூண்கண்டி
நீரெலாஞ்சுமந்தவேணிநிருத்தனுட்கொண்டவன்றே. (அ௫)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

இறக்கினுமின்றே யிறக்குகவென்று மிருக்கினுமிருக்குக வேந்த, னொறுக்கினுமொறுக்க வுவகையுமுடனே யூட்டினு மூட்டுக வானிற், சிறக்கினுஞ்சிறக்க கொடியதீநரகஞ் சேரினுஞ்சேருக சிவனை, மறக்கிலம்பண்டைப் பழவினைவிளைந்தான் மாற்றுவார் யாரெனமறுத்தார். (அசு)

வாதவூரடிகளுக்கு உபதேசித்தபடலம் முற்றிற்று.

ஆகூ படலம் ௫௭ - க்கு - திருவிருத்தம் - ௨௭௬௮.

---

## ஐம்பத்தோன்பதாவது,

## நரிபரியாக்கியபடலம்.



அறுசீரடியாசிரியவிருத்தம்.

அரிகணைதொடுத்துவேழமட்டவன்செழியன்வாயிற்
றெரிகலையமைச்சரேற்றைத்தேசிகவடிவத்தீண்டி
வரிகழல்சூட்டியாண்டவண்ணமிவ்வண்ணமைய
னரிகளைப்பரிகளாக்கிநடத்தியவாறுஞ்சொல்வாம். (க)

சுற்றமாம்பாசநீவித்துகளறுத்திரு : தார்தம்மை
மற்றைநாளழைத்துவேந்தன்வந்திலபோலுமின்னங்
கொற்றவாம்பரிகளென்னக்குறுமதிமுடித்தானன்ப
ரிற்றைநாண்முதனூண்மூன்றிலீண்டுவவிறைவவென்னு. (௨)

சிந்துரநுதன்மால்யானைச்செல்வவப்பரிக்குவேறு
மந்துரையகன்றவாகவகுக்கசூழ்தண்ணீரூட்ட
கந்துறைதடங்கள்வேறுதொடுகநீணகரமெங்கு
மிந்துறைமாடமெல்லாமழகுசெய்திடுகவென்றார். (௩)

---

(அ௫) துன்னம்-தைத்தல்.

(க) அரிகணை-நாரசிம்மாஸ்திரம். இதில்ககரமெய்தொகுத்தல்.

(௨) பாசத்தைச் சுற்றமென்றது, உயிர்ச்சார்பாய்நிற்றலின்.

(௩) மந்துரை - குதிரைலாயம்.

காவலன் கருமஞ்செய்வோர்கந் துகப்பந்தியாற்றி
யோவறநகரமெங்குமொளிபெறவழகுசெய்யத்
தாவுதெண்கடலேழ்கண்டசகரர்போல்வைகன் மூன்றில்
வாவியுங்குளனுந்தொட்டார்மண்டொடுகெருவிமாக்கள். (௪)

வரையறைசெய்தமூன் றுவைகலுங்கழிந்தபின்னாட்
கரையறுபரிமாவீண்டக்கண்டிலயின்னமென்னா
விரையரைவண்டார்தண்டார்வேம்பனும்விளித்துவந்த
வுரையறைநாவினுரையொறுப்பவனைத்துச்சீறு. (௫)

என்னிவன்பரிமாக்கொண்டதென்றவைவருவதென்னாற்
தன்னெதிர்நின்றவஞ்சத்தறுகணர்சிலரைநோக்கிக்
கொன்னுமிக்கள்வன்றன்னைக்கொண்டுபோய்த் தண்டஞ்செய்தெம்
பொன்னெலாமறுவுகொண்டுவாங்குமின்போமினென்றான். (௬)

கற்றிணிதோளான்சீற்றங்கண்டெதிர்நில்லாதஞ்சிச்
சுற்றியபாசம்போலத்தொடர்ந்துகொண்டேகிமள்ள
ரெற்றினிவகைதான்பொன்னுக்கியம்புமென்றெதிர்த்துச்சீறிச்
செற்றமில்சிந்தையார்மேற்செறிந்தகல்லேற்றினாரே. (௭)

பொன்னெடுஞ்சைலங்கோட்டிப்புரம்பொடிபடுத்தவீரர்
சொன்னெடுந்தாளையுள்கிநின்றனர்சுமந்தபார
மந்நெடுந்தகையார்தாங்கியாற்றினாரடைந்தவன்பர்
தந்நெடும்பாரமெல்லாந்தாங்குவாரவரேயன்றோ. (அ)

சிலையதுபொறைதோற்றாதுசிவனடிநிழலினின்றார்
நிலையதுநோக்கிமாயநெறியிதுபோலுமென்னாக்
கொலையதுவஞ்சாவஞ்சர்கொடுஞ்சினந்திருகிவேதத்
தலையதுதெரிந்தார்கையுந்தாள்களுங்கிட்டியார்த்தார். (௯)

அக்கொடுந்தொழிலுமஞ்சாதிருந்தனரரனையுள்கி
யிக்கொடுந்தொழிலினார்தாமினிநனிபொறுப்பரென்னாப்
புக்கதுகாண்டற்குள்ளம்பொறானெனவிரவிப்புத்தேண்
மிக்கதன்னொளிகண்மாழ்கிவிரிகடலழுவத்தாழ்ந்தான். (௧௦)

சுந்தரவிடங்கரன்பர்சூழ்துயரகற்றநேரே
வந்தெழுகாட்சிபோலவந்ததுசெக்கர்வான

---

(௫) கரை - அளவு. விரை - வாசனை.

(௬) தறுகணர் - கொடுமையாளர். என் என்றது இகழ்வின் மேனின்ற வினாவிடைச்சொல். அறுவு - அறுதி.

(௯) வேதத்தலை-உபநிடதம். (௧௦) அழுவம்-பரப்பு.

மிந்தவர்மார்பந்தூங்குமேனவெண்கோடுபோன்ற
தந்தரவுடுக்களெல்லாமயன்றலைமாலையொத்த. (௧௧)

சுழிபடுபிறவித்துன்பத்தொடுகடலழுவத்தாழ்ந்து
கழிபடுதனையுங்காப்பான்கண்ணுதன்மூர்த்திபாதம்
வழிபடுமவரைத்தேருன்வன்சிறைப்படுத்ததென்னன்
பழிபடுபுகழ்போலெங்கும்பரந்ததுகங்குலீட்டம். (௧௨)

கங்குல்வந்திறுத்தலோடுங்கருஞ்சிறையரையிற்போக்கிச்
சங்கிலிநிகளம்பூட்டித்தவத்தினைச்சிறையிட்டென்னச்
செங்கனல்சிதறநோக்குஞ்சினங்கெழுகாவலாளர்
மங்குலினிருண்டகண்டர்தொண்டரைமறுக்கஞ்செய்தார். (௧௩)

மிடைந்தவர்தண்டஞ்செய்யவெஞ்சிறைவெள்ளத்தாழ்ந்து
கிடந்தவர்கிடந்தோன்பூமேலிருந்தவன்றேடக்கீழ்மே
னடந்தவர்செம்பொற்பாதநகைமலர்புணையாப்பற்றிக்
கடந்தனர்துன்பவேலைபுலர்ந்ததுகங்குல்வேலை. (௧௪)

அந்தமிலழகன்றன்னையங்கயற்கண்ணியோடுஞ்
சுந்தரவமளிப்பள்ளியுணர்த்துவான்றொண்டர்சூழ
வந்தனைசெய்யுமார்ப்புமங்கலசங்கவார்ப்பும்
பந்தநான்மறையினார்ப்பும்பருகினர்செவிகளார. (௧௫)

போதவானந்தச்சோதிபுனிதமெய்த்தொண்டர்க்காக
நாதமாமுரசமார்ப்பநரிப்பரிவயவர்சூழ
வேதவாம்பரிமேற்கொண்டுவீதியில்வரவுகாணுங்
காதலான்போலத்தேர்மேற்கதிரவனுதயஞ்செய்தான். (௧௬)

கயனெடுங்கண்ணியோடுங்கட்டவிழ்கடிப்பூஞ்சேக்கைத்
துயிலுணர்ந்திருந்தசோமசுந்தரக்கருணைவெள்ளம்
பயினெடுஞ்சிகரநோக்கிப்பங்கயச்செங்கைகூப்பி
நயனபங்கயநீர்சோரநாதனைப்பாடலுற்றார். (௧௭)

---

(௧௩) நிகளம் - விலங்கு. மங்குல் - மேகம். கருஞ்சிறை என்றதில் - கருமை இழிவின்மேலது. (௧௪) கிடந்தோன் என்றது-திருமாலை. பூமேலிருந்தவன் - பிரமன். வேலையிரண்டனுள், முன்னது - கடல், பின்னது - பொழுது. (௧௫) அமளிப்பள்ளி - படுக்கை; இது ஒருபொருட்கிளவி. (௧௬) போதம் - அறிவு. நாதம் - நாததத்துவம். வயவர் - வீரர். (௧௭) பூஞ்சேக்கை - மலர்ப்பள்ளி. துயிலுணர்தல் - நித்திரையினின்றும் எழுதல்.

கொச்சகக்கலிப்பா.

எந்தாயனைத்துலகுமீன்றுயெத்தேவர்க்குந்
தந்தாய்செழுங்குவளைத்தாராய்பெருந்துறையில்
வந்தாய்மதுரைத்திருவாலவாயுறையுஞ்
சிந்தாமணியேசிறியேற்கிரங்காயோ. (௧அ)

மூவாமுதலாய்முதுமறையாயம்மறையுந்
தாவாதசோதித்தனிஞானபூரணமாய்த்
தேவாதிதேவாய்த்திருவாலவாயுறையு
மாவார்கொடியாயடியேற்கிரங்காயோ. (௧௯)

முன்னுமுதுபொருட்குமுன்னுமுதுபொருளாய்ப்
பின்னும்புதுமைக்கும்பின்னுகும்பேரொளியாய்த்
தென்னுமதுரைத்திருவாலவாயுறையு
மென்னுயகனேயெளியேற்கிரங்காயோ. (௨௦)

மண்ணுய்ப்புனலாய்க்கனலாய்வளியாகி
விண்ணுயிருசுடராயித்தனையும்வேறுகிப்
பண்ணுயிசையாய்ப்பனுவலாயெங்கண்ணுங்
கண்ணுயென்னுறுகண்காணுவாறென்கொல்லோ. (௨௧)

பொங்குஞ்சினமடங்கல்போன்றுருத்துவெங்கூற்ற
மங்கும்புரியாவருந்துன்பத்தாழ்ந்துநான்
மங்கும்படியறிந்தும்வந்தஞ்சலென்கிலையா
லெங்குஞ்செவியுடையாய்கேளாயோவென்னுரையே. (௨௨)

பூட்டியருட்பாசமிருபாதம்பொறித்துடலிற்
கூட்டியடியாருளகப்படுத்தாட்கொண்டருமை
காட்டியவோவின்றென்னைக்கைவிட்டாய்வெய்யரெனை
யாட்டியொறுக்குமிடத்தாரேன்றுகொள்வாரே. (௨௩)

ஊராருனைச்சிரிப்பதோராயென்றுன்னடிமைக்
காராயடியேனயர்வேனஃதறிந்தும்
வாராயரசன்றமரிழைக்கும்வன்கண்ணேப்
பாராயுன்றன்மையிதுவோபரமேட்டி. (௨௪)

(௧அ) செழுங்குவளைத்தாராய் என்றது - ஆசிரியத்திருக்கோலமாயெழுந்தருளினமைபற்றி. (௧௯) மூவாதஎன்றது - ஈறுகெட்டு மூவாஎனநின்றது; மூத்தலில்லாதஎன்பதுபொருள். ஆஆர்கோடி, இடபக்கொடி. (௨௦) "முன்னும்—ஒளியாய் - என்றதை" முன்னைப்பழம்பொருட்கு முன்னைப்பழம்பொருளேயென்னுந் திருவாசகத்தாலுணர்க. (௨௨) அங்கும் என்றது - இயமபுரியை.

கலிநிலைத்துறை.

என்றிரங்குவோரிரங்கொலியிளஞ்சிறாரமுகை
சென்றுதாயர்தஞ்செவித்துளை நுழைந்தெனச்செல்லக்
குன்றிருஞ்சிலைகோட்டியகூடனாயகன்கேட்
டன்றுவன்சிறைநீக்குவான்றிருவுளத்தமைத்தான். (உரு)

நந்தியாதியாம்பெருங்கணநாதரைவிளித்தான்
வந்தியாவரும்பணிந்தனர்மன்னவற்கின்று
முந்தியாவணிமூலநாள்வந்ததுமுனிவு
சிந்தியாமுனம்பரியெலாஞ்செலுத்துவான்வேண்டும். (உசு)

யாவரும்புனத்தியங்குறுநரியெலாமீட்டித்
தாவரும்பரியாக்கியத்தாம்பரிநடத்துஞ்
சேவகஞ்செய்வோராகிமுன்செல்லுமின்யாமும்
பாவகம்படவருதுமப்படியெனப்பணித்தான். (உஎ)

ஏகநாயகனாணைபூண்டெழுகணத்தவரு
நாகநாடரும்வியப்புறநரியெலாந்திரட்டி
வேகவாம்பரியாக்கியவ்வெம்பரிநடத்தும்
பாகராயினரவர்வரும்பரிசதுபகர்வாம். (உஅ)

தூக்கியார்த்தசெம்பட்டினர்சுரிகையர்தொடுதோல்
வீக்குகாலினரிருப்புடற்காப்பினர்வெருளி
னோக்குபார்வையர்புண்டரநுதலினரிடியிற்
றூக்கியார்ப்பெழுநகையினர்தழன்றெழுசினத்தோர். (உகூ)

வட்டத்தோல்வரிபுறங்கிடந்தசையவைவடிவா
ளொட்டகையினர்சிலர்நெடுந்தோமரஞ்சுழல
விட்டகையினர்சிலர்வெரிநிடைநெடுவிசிகப்
புட்டில்வீக்கிவிற்றூக்கியபுயத்தினர்சிலரால். (௩௦)

செம்படாஞ்செய்தபோர்வையர்சிலர்பசும்படத்தான்
மொய்ம்புவீக்கியகவயத்தர்சிலர்கருமுகில்போ
லம்புயம்புதைகாப்பினர்சிலர்சிலரவிரும்
பைம்பொன்வாணிறப்படாஞ்செய்குப்பாயத்தர்சிலரால். (௩க)

(உரு) இரங்கொலி-முறையீடு. (உசு) பெருங்கணநாதராவார்—நந்தி, பிருங்கி, மகாகாளர், கும்போதரர், முதலாயினோர்.

(உஎ) பாவகம் - பாவனை. தாவும் - தாம்எனநின்றது இடைக்குறை. (உகூ) உடற்காப்பு - கவசம்.

(௩௦) வட்டத்தோல்-கேடகம். வை-கூர்மை. வெரிந்-முதுகு. விசிகப்புட்டில் - அம்பறாத்தூணி. விசிகம் — அம்பு. (௩க) குப்பாயம் - சட்டை.

பிச்சவொண்குடையார்பலர்கவரிவால்பிறங்கத்
தைச்சதண்குடையார்பலர்சல்லிசூழ்நாற்றி
வைச்சவண்குடையார்பலர்வாணிலாமுத்த
மொய்ச்சவெண்குடையார்பலர்மொய்ம்பினரிவருள். (௩௨)

தருமமாதிநாற்பொருளெனுந்தாளதுஞான
கருமகாண்டமாஞ்செவியதுகாட்சியைக்கடந்த
வொருமையாம்பரமபரமாமுணர்வெனுங்கண்ண
தருமையாம்விதிமுகத்ததுநிடேதவாலதுவால். (௩௩)

தந்திரங்களாற்புறவணிதரித்ததுவிரித்த
மந்திரங்களாற்சதங்கைதார்மணிச்சிலம்பணிந்த
தந்தரஞ்சுழல்சோமனுமருக்கனுமிதிக்குஞ்
சுந்தரப்பதம்பொறைகொளத்தாங்கிருபுடைத்தால். (௩௪)

மாண்டதாரகப்பிரமமாங்கலினம்வாய்கிழியப்
பூண்டதாற்புறச்சமயமாம்பொருபடைமுரிய
மூண்டுபோரெதிர்விளைத்திகன்முடிப்பதுமுளரி
யாண்டகோமுகமந்திரமாகமேவியதால். (௩௫)

அண்டகோடிகளனைத்துமோர்பிண்டமாவடுக்கி
யுண்டநீரதாமுதுகின்மேலுபநிடக்கலனை
கொண்டவாலியவைதிகப்புரவிமேற்கொண்டான்
றொண்டர்பாசவன்றொடரவிழ்த்திடவருஞ்சோதி. (௩௬)

ஆனமந்திரக்கிழார்பொருட்டன்றியும்வென்றி
மீனவன்பிறப்பறுக்கவும்வார்கழல்வீக்கி
வானநாயகனேந்தியமறையுறைகழித்த
ஞானவாள்புறவிருளையுநக்கிவாளெறிப்ப. (௩௭)

---

(௩௨) பிச்சம்-வெண்குடை. (௩௩) நாற்பொருள்—அறம்பொருள் இன்பம் வீடுஞானம். பரம் அபரமாம்உணர்வுஎன்றது—பரஞானம், அபரஞானங்களை. நிடேதம்-விலக்கு.

(௩௪) தந்திரம்-சிவாகமம். தந்திரங்களாற் புறவணி தரித்தது என்றது—வேதங்களை விளக்கஞ்செய்வன ஆகமங்களாதலின். இருபுடைத்து என்றது—குளம்பின்மேலிடத்துள்ள புடைப்புகளை.

(௩௫) தாரகம்—பிரணவம். முளரி ஆண்டகோ-பிரமன். மந்துரை-லாயம். (௩௬) கல்லணை - இது கலணைஎன தொகுத்தற்பெற்றது. வாலிய-தூய.

(௩௭) மந்திரக்கிழார்-வாதவூரடிகள். மீனவன் - அரிமருத்தனபாண்டியன்.

சாய்ந்தகொண்டையுந்திருமுடிச்சாத்தும்வாள்வைரம்
வேய்ந்தகண்டியுந்தொடிகளுங்குழைகளும்வினையைக்
காய்ந்தபுண்டரநுதலும்வெண்கலிங்கமுங்காப்பு
மாய்ந்ததொண்டர்தமகம்பிரியாதழகெறிப்ப. (௩அ)

பிறக்குமாசையோர்மறந்துமிங்கணுகன்மின்பிறப்பை
மறக்குமோசையோரிம்மெனவம்மினன்பரைவேர்
தொறுக்குநோய்களைவானெனவொருவனும்பிறவி
யறுக்கவந்தனனென்பபோற்பரிச்சிலம்பலம்ப. (௩௯)

கங்கையைச்சடைமுடியின்மேற்கரந்தனையவள்போ
லெங்கடம்மையுங்கரந்திடென்றிரந்துகாவேரி
துங்கபத்திரியாதியாகதிகளுஞ்சூழப்
பொங்கிவீழ்வபோலொலியலுங்கவரியும்புரள. (௪0)

வாவிநாறியவாலிதழ்த்தாமரைமலரோ
னுவினுளுமைநாயகனுன்மறைபரியா
மேவினனெனத்தானொருவெண்குடையாகிப்
பாவினலெனமுடியின்மேற்பானிலாக்கால. (௪௧)

முறையினேதியபுராணமூவாறுநாமொழியு
மிறைவனுமிவன்படைத்தளித்தழிப்பவனிவனே
மறையெலாமுறையிடும்பரம்பொருளெனவாய்விட்
டறையுமாறுபோலியங்களீரொன்பதுமார்ப்ப. (௪௨)

மிடைந்தமாயவாம்பரித்திரண்மேற்றிசைநோக்கி
நடந்தநாயகனுன்மறைப்புரவியுநாப்ப
ணடைந்ததாலெழுந்தூளிகளண்டமுந்திசையும்
படர்ந்தபோம்வழியாதெனமயங்கினன்பரிதி. (௪௩)

பள்ளமாக்குவதிடரினைப்பள்ளத்தைமேடு
கொள்ளவாக்குவபாரெலாம்விலாழிகொப்புளித்து
வெள்ளமாக்குவதூளியால்வெள்ளத்தைவெறிதா
யுள்ளதாக்குவபுள்ளுவவுருக்கொண்டபரிமா. (௪௪)

---

(௩அ) வினை என்றது—சஞ்சிதவினையை. கலிங்கம்-வஸ்திரம்.
(௩௯) பரி-வேதக்குதிரை. (௪0) ஒல்லியல்-ஈயோட்டுங்கருவி.
(௪௧) நாறல்-தோன்றல். (௪௨) இயம்-வாத்தியம்.
(௪௩) மாயவாம் புரவி என்றது—மாயையாலமைந்த நரிகளாகிய குதிரைகளாதலின்.
(௪௪) விலாழி-வாய்நுரை. புள்ளுவம்-வஞ்சகம்.

கொய்யுளைப்பரியெழுந்ததூள்கோப்பவான்கங்கை
வையையொத்ததேழ்பசும்பரிசெம்பரிமாவாச்
செய்தவொத்ததுசிந்துரந்திசைக்கயமுகத்துப்
பெய்தவொத்ததாலொத்ததுபெரும்பகன்மாலை. (சரு)

விளம்புகின்றவச்சம்புவெம்பரித்திரண்மிதிக்குங்
குளம்புகிண்டியவெழுந்ததூள்குன்றிறகரிந்தோன்
வளம்புகுந்தடைவார்குரவழிபுரிவேள்விக்
களம்புகைந்தெழுதோற்றமேயல்லதுகடாதால். (சகூ)

மட்புலந்திசைவான்புதைபூழியுண்மறைந்து
கொட்புறும்பரிச்சதங்கைதாரொலியினுங்குளிர்வான்
பெட்புறுங்குரலொலியினுஞ்செவியினிற்பிறிது
கட்புலங்களாற்கண்டிலர்வழிவரக்கண்டோர். (சஎ)

கலிவிருத்தம்.

தரங்கமெறிமுத்திரைவிலர்ழியலதார்மா
விரங்குமொலியல்லதிரையேங்குமொலியின்ன
துரங்கமலமற்றிவைசுரர்க்கரசனின்றும்
புரங்கொலவிடுத்திடவரும்புணரியென்பார். (சஅ)

இம்பருலகுள்ளவலபண்டினையபாய்மா
வும்பருலகாளிபரியேகொலதுவொன்றே
வெம்பரிதிவெம்பரிகொலேழவைகளேழும்
பைம்பரிகள்யாவினையபாய்பரிகளென்பார். (சகூ)

வெம்பணிகளைப்பொரவெகுண்டெழுவதேயோ
பைம்புனலுடுத்தமுதுபார்முதுகுகீறு
மும்பருலகைப்பொரவுருத்தெழுவதேயோ
வம்பரமுகட்டளவடிக்குரமழுத்தும். (ருo)

---

(சரு) பெரும்பகல்-நடுப்பகல். (சகூ) சம்பு-நரி-சிவபெருமான். இது செம்மொழிச் சிலேடை. குரம் - குளம்பு. கடாது - ஒவ்வாது. (சஎ) பூழி-புழுதி. கொட்புறல் - கொள்ளிவட்டம்போற்சுழலுதல். வான்-மேகம்.

(சஅ) சுரர்க்கரசன்-இந்திரன். (சகூ) பைம்பரிகள்-பச்சைக்குதிரைகள். யா-பலவின்பாலில் வந்த வினாவிடைச்சொல்.

(ருo) பணிகள்-பாதலத்தில் வசிக்கும் ஆதிசேடன்முதலியசர்ப்பங்கள். உம்பருலகு-தேவருலகம். அம்பரம்-ஆகாயம். அடிக்குரம் - காற்குளம்பு.

உத்தரதிசைப்புரவிதெற்கடையுமாறு
மத்தகையதெற்குளவடக்கடையுமாறு
மித்தகைகுடக்கொடுகுணக்கடையுமாறுஞ்
சித்தர்விளையாடலின்வெளிப்படுதல்செய்யா. (ருக)

மறைமரபுசாலவரும்வன்னியிவைபொன்னித்
துறைவனுளமுஞ்சுடுமிரும்பனைதொடுக்கு
மறவனுளமுஞ்சுடுமமைச்சரையொறுக்கு
மிறைவழுதியுள்ளமுமினிச்சுடுவதென்பார். (ருஉ)

முந்தையொருமந்திரிபொருட்டரசன்முன்னு
வந்தமிலனீகமொடரும்பரியில்வந்தாங்
கிந்தமறைமந்திரியிடும்பைதணிவிப்பான்
வந்தனர்கொலிப்பரிவரும்பொருநரென்பார். (ருங)

காமனிவனேகொலறுகாலுழுகடப்பந்
தாமனிவனேகொல்பொருதாரகனைவென்றோன்
மாமனிவனேகொன்மலைவன்சிறகரிந்த
நாமனிவனேகொலெனநாரியரயிர்த்தார். (ருச)

அடுத்திடுவர்கண்ணிறையவண்ணலழகெல்லா
மடுத்திடுவர்கைவளையைமாலைவிலையென்னக்
கொடுத்திடுவர்மாலைகள்கொடுத்திடுதியன்றே
லெடுத்திடுதியெங்கள்வளையெங்கள்கையிலென்பார். (ருரு)

எந்தன்முடிமாலைமலர்சிந்தினவெடுத்துக்
கூந்தலின்மிலைந்துமதன்வாகைமலர்கொள்வார்
சாந்தனையசிந்தினதனந்தடவியண்ணற்
றோய்ந்தளவிலாமகிழ்துளும்பினவராவார். (ருசு)

பொட்டழகன்மார்பிலிடுபோர்வைகவசப்பே
ரிட்டதுமெய்நம்முயிர்தடுத்தமையினென்பார்

---

(ருஉ) மறைமரபு என்றது - வேதத்தின் வழிநூலாகிய அஸ்வ சாஸ்திரத்தை. வன்னி - குதிரை. பொன்னித்துறைவன் - சோழன். பனைதொடுக்கு மறவன் - பனைமாலைசூடிய சேரன். வழுதி-அரிமருத்தன பாண்டியன் (ருங) தந்திரி என்றது - சேனை காவலராகியசவுந்தர சாமந்தரை. பொருநர் - வீரர்.

(ருச) கடப்பந்தாமன்-கடப்பமாலைசூடிய முருகக்கடவுள். தாருகனைவென்றோன் மாமன்-தாருகாசுரனை வதைத்தமுருகக்கடவுள்மாமனாகிய திருமால். மலைவன் சிறகரிந்தநாமன்-இந்திரன். நாரியர்-பெண்கள்.

கட்டழகன்மாலையதுகண்ணியெனவோதப்
பட்டதுமெய்நம்முயிர்படுத்தமையினென்பார். (ருஎ)

கலிநிலைத்துறை.

இச்சையால்வடிவெடுப்பவனிந்திரசால
விச்சைகாட்டுவானெனப்பரிவீரனிலுலகைப்
பிச்சதேற்றிடமயக்கியுங்காமனிற்பெரிது
நச்சமாதரைமயக்கியுமிங்கனநடந்தான். (ருஅ)

தாவுகந்துகமிந்தியமொத்தனசயமா
வாவுதிண்கணமள்ளர்கண்மனங்களையொத்தார்
மேவியம்மனந்தொறுமிடைவிடாதுநின்றியக்கு
மாவியொத்ததுநடுவருமருமறைப்பரியே. (ருகூ)

துன்னுமின்னியமுழக்கமுந்துரகதவொலியு
மன்னவீரர்வாயரவமுந்திசைசெவியடைப்பக்
கன்னிமாமதில்சூழ்கடிநகர்க்கரைக்காத
மென்னவெய்திஞன்மறைப்பரிப்பாகனவ்வெல்லை. (சுO)

தாழிசையொருபோகு கொச்சகம்.

கண்டவர்கடிதோடிக்கடிநகர்குறுகிக்கார்
விண்டவழ்மணிமாடத்தடுசிறைமிடைகின்ற
கொண்டலினனையார்முன்குறுகினர்மலர்செவ்வி
முண்டகவதனத்தார்முகிழ்நகையினர்சொல்வார். (சுக)

மன்னவனெறிகோடாமந்திரரடலேறே
பன்னிறவெழுமுந்நீர்ப்பறவைகள்வருமாபோற்
றுன்னினவருகின்றதுரகதமுளவெல்லாம்
பொன்னெயின்மணிவாயில்புகுவனவிதுபோதில். (சுஉ)

ஒல்லையிலதுமன்னற்குரையுமினெனமேரு
வில்லவனருள்பெற்றவேதியர்பெருமான்போய்ச்
செல்லதுதளையிட்டதிருமகனருகெய்தி
மல்லணிதிணிதோளாய்வருவனபரியென்றார். (சுங)

---

(ருஅ) பிச்சு-மயக்கம்; இது பித்து என்பதன்போலி.
(ருகூ) கந்துகம், சயமாஎன்பன-குதிரைகள்.
(சுக) கொண்டலினனையார் என்றது-மேகம்கைம்மாறுவேண்டாதுலகிற்கு இன்பந்தருவதுபோல, ஆன்மாக்களுக்குப்பிறபிவெப்பொழித்துப் பேரின்பந்தரும் அருமைத் திருவாசகமருளியவாதவூரடிகளை. (சுஉ) எழுமுந்நீர்-எழுகடல். (சுங) செல்-மேகம்.

மருத்தெனவருகின்றமாக்கடலெனமன்னன்
றிருத்தணிகடகப்பூண்டெரித்திடவுடல்வீங்கப்
பெருத்தெழுமகிழ்தூங்கிப்பெருவிலைமணியார
மருத்திகொள்கலைநல்கியமைச்சரைமகிழ்வித்தான். (சூச)

ஏந்தரியணைநீங்கியெழுதியதலைவாயிற்
போந்தருகொளிர்மாடம்புகுந்தரியணைமேவிக்
காந்தளின்விரனல்லார்கவரிகள்புடைவீச
வாய்ந்தவர்புறஞ்சூழவடபரிவரவேற்பான். (சூரு)

பரனருள்விளையாடல்காட்டியபரிவெள்ளம்
வருவனசிறுகாலந்தாழ்த்தலுமதிவேந்தர்
புரவலன்மனம்வெள்கிப்பொய்யிதுவெனவுள்கி
யருகணையுழையோரைக்குறித்தனனழல்கண்ணான். (சூசூ)

மன்னவனிளைவாற்றான்மந்திரர்பெருமானைத்
துன்னினர்கொடுபோயத்தோள்வலிமறமள்ள
ருன்னரிதெனவஞ்சாதொறுத்தனருரவோர்தந்
தென்னவர்தமையுள்கிச்சேவடிதுதிசெய்வார். (சூஎ)

கலிநிலைத்துறை.

பூவார்முளரிப்புத்தேளறியாநெறிதந்தாய்
பாவார்தென்சொற்பனுவன்மாலைப்பணிகொண்டாய்
தேவாதேவர்க்கரசேசிறியேனுறுதுன்ப
மாவாவென்னுவஞ்சேலென்னுயறனேயோ. (சூஅ)

நெஞ்சேயுரையேசெயலேயெல்லாநினவென்றாய்
வஞ்சேபோலுமஃதேலின்றுவாராயோ
பஞ்சேரடியாள்பாகாகூடற்பரமேட்டி
யஞ்சேலென்னலிதுவோவருளுக்கழகையா. (சூகூ)

காவிநேருங்கண்டாநாயிற்கடையான
பாவியேனைப்பொருளாக்கொண்டென்பணிகொண்டா
யாவியோடிவ்வுடலுநினதேயன்றேவின்
றேவிவாளாதிருந்தால்யாரென்னுடையானே. (எ0)

---

(சூச) மருத்து-காற்று. திருந்தளன்றது - அகரவீறுதொக்குவ லித்தற்பெற்று திருத்தென நின்றது. (சூரு) ஆய்ந்தவர்என்றது - அமைச்சர், புரோகிதர் முதலாயினோரை.

(சூசூ) உழையோர்-தண்டலாளர். (சூஎ) உரவோர்-பெரியோர். தென்னவர்என்றது-சோமசுந்தரக்கடவுளை. (சூஅ) நெறிஎன்றது-திருவடிஞானத்தை. (சூகூ) வஞ்சகம்-இதுகடைக்குறையாய்வஞ்செ னநின்றது. (எ0) காவி-நீலோற்பலம். ஒவி-கைவிட்டு

அறுசீரடியாசிரியவிருத்தம்.

என்றிரந்திரங்குமன்பரிருசெவியூடேயெங்குங்
கன்றிளஞ்செவியினல்லான்கனைகுரலோசைபோல
வொன்றியசின்னங்காளங்காகளமொலிக்குமோசை
வென்றிகொள்புரவிச்செந்தூடிசையெலாம்விழுங்கக்கண்டார். (எக)

வழுதியுமறிந்துவாதவூரரைவிளித்துவந்த
தொழுகுலவமைச்சர்தம்பாற்றுகடவிரன்புகூர்ந்தெம்
பழுதறுகருமநம்போற்பரிக்குகர்யாரையென்று
வெழுதருமகிழ்ச்சிமேற்கொண்டவளவளாயிருக்குமெல்லை. (எஉ)

பாயிருட்படலங்கீறிப்பல்கதிர்பரப்பித்தோன்றுஞ்
சேயிளம்பரிதிவானோரனையராய்ச்சிறந்தகாட்சி
மேயினபாகரோடும்விலாழியாற்பரவைசெய்யும்
வாயினவாகிவந்தமாயவாம்பரிகளெல்லாம். (எங)

வண்டுழுதாரினான்றன்மரபின்மன்னவருமுன்னாட்
கண்டறியாதகாட்சிக்கவனவாம்பரியைநோக்கி
யண்டர்நாயகன்போனாமுமாயிரங்கண்பெற்றா லு
முண்டமையாவென்றுள்ளக்குறிப்பொடுமுவகைபூத்தான். (எச)

தானெனமகிழ்ச்சியென்னத்தலைதடுமாறிவேந்தன்
மானவெம்பரிமேல்வந்தவயவரைவியந்துமிக்கா
ரானவரிவருள்யாரென்றமைச்சரைவினவவையா
யானதுவறியேனென்றார்யாரையுமறியவல்லார். (எரு)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அண்டமெலாமாதாரமாகத் தாங்குமானந்தத் தனிச்சோதியண்டந்தாங்குஞ், சண்டமறைப்பரிதனக்காதாரமாகித் தரிக்கவொருகா

---

(எஉ) அளவளாய் - மனங்கலந்து. (எங) சேயிளம்பரிதி வானோர் என்றது - துவாதசாதித்தர்களை. (எரு) மானம் - பெருமை. இது அளத்தற்கரிய வேதத்தின்மேல் நின்றமையால் பண்பாகுபெயர்.

(எசு) சண்டம் - வேகம். அண்டந்தாங்குஞ் சண்டமறைப்பரி என்றது – இலக்குமியின்சாபத்தால் கோட்டான்வடிவமான பிரமனிட்ட முட்டையில் தோன்றிய வேதப்பரியை. இதனை – "மிக்க செழுமறை நாவில் கமலநாதன் விழிப்புனலே விண்ணோர்களெண்மர்தம்பால், மைக்கடன்மேலமிர்தத் திலங்கிமீதில் மல்குகருப்பையிலூகவண்டந்தன்னிற், றெக்கவெழுபேரமெனு மிவற்றிற்றோன்றுந்தொன்மையவாய்" எனவரும் வாதவூரடிகள் புராணத்தானுமுணர்க. அண்டம்-முட்டை. குதிரையேற்றம் என்றது-ஐங்கதிபேதமும், இருவகைச்சாரியும், நாகபந்தம், விருத்தம், நெடுவீதிமுதலிய விசித்திர விகற்பங்களையும்.

லத்துமசைவிலாத, புண்டரிகத்தாளசையப் பாசநீக்கும்புனைகரத்தா ற்பரிபூண்டபாசம்பற்றிக், கொண்டரசனெதிர்போந்து மன்னுவெ ங்கள்குதிரையேற்றஞ்சிறிது காண்டியென்றார். (எசு)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

இசைத்தவைங்கதியுஞ்சாரியொன்பதிற்றிரட்டியாதி
விசித்திரவிகற்பந்தோன்றவேந்தனுமவையுமன்றித்
திசைப்புலத்தவருமேலைத்தேவருமருளமேற்கொண்
டசைத்தனரசைவற்றெல்லாவுலகமுமசைக்கவல்லார். (எஎ)

ஆண்டகையவர்போனின்றவடுகணத்தவருந்தத்தங்
காண்டகுபுரவியெல்லாநடத்தினர்காட்டக்கண்டு
பாண்டியனவரைநோக்கிநுங்களிற்பதியாந்தன்மை
பூண்டவர்யாவரென்றானிவரென்றார்புரவிவீரர். (எஅ)

சுட்டுதற்கரியசோதிசுருதிவாம்புரவியோடு
மட்டவிழ்தாரினான்முன்வருதலுங்கருணைநாட்டம்
பட்டுளமயங்கித்தன்னைமறந்தெழீஇப்பாண்டிவேந்தன்
றட்டவிழ்கமலச்செங்கைதலைமிசைக்கூப்பிநின்றான். (எகூ)

பின்னவனுணையாலேமறைப்புண்டபெருநீர்க்கூடன்
மன்னவனறிவுதோன்றவின்றொருவயமாவீரன்
றன்னைநாங்கண்டெழுந்துதடங்கரங்கூப்பிநின்ற
தென்னெனத்தவசின்மீளவிருந்திடநாணிநின்றான். (அ0)

நிற்கின்றான்முகத்தைநோக்கிநேர்நின்றமறைமாவீரர்
பொற்குன்றம்புயத்தாயுன்றன் பொருளெலாங் கொண்டுபோந்து
சொற்குன்றாவமைச்சன்றானேநமக்குநஞ்சூழனீங்கான்
மற்குன்றாநமர்க்குமாரவழங்கினான்வழங்கலாமே. (அக)

வானவர்தமக்கேயன்றிமனிதருக்கிசையத்தக்க
வானவன்றறிஞரிட்டவிலைவரம்பகன்றநூலின்

(எஎ) ஐங்கதியாவன-மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வாநரகதி, இடபகதி. (பின்னிரண்டையுநீக்கி, சசகதி, சரகதிஎனக் கூட்டியுரைப்பதுமொன்று.) இருவகைச்சாரியாவன-வலசாரி இடசாரிகள். இவற்றை அஸ்வநூலுட் காண்க. (எகூ சுட்டுதற் கரிய சோதிஎன்றது-மனவாக்கிற் ககோசரப்பட்டு நின்றவராதலின்.

(அஉ) அறிஞர்-குதிரைநூலுணர்ச்சியில் வல்லவர். நூலின்மானமுள்ளன என்றது - அசுவநூலிற்கூறிய இலக்கணங்கள்முற்றுமுடைமையை. ஊனமில்பரி என்றது - "கொம்புகன்னந்திருகு கன்னநஞ்சபாதம் கொள்ளிக்கால் வெள்ளிக்கண் டினிகுன்று, வெம்புதழற்சுடலை முகப்பரனேர்கண்ட-மண்டப்பாழ்விலங்கிபலவண்டமாதல், செம்பொறியாமக்கினி சித்திரங்கள்மூன்று, சிறந்தினிய மட்டிற்பாலறுபாறென்றே - அம்புவியோர்மொழிந்த பழுது" என வாதவூரடிகள் புராணத்தில் வருதல்காண்க.

மானமுள்ளனவாய்நல்லவாசிகளுனக்குவந்த
ஊனமில்பரிமாவிற்கும்வாணிபமுரைப்பக்கேட்டி. (அஉ)

இன்னவாம்பரிகளென்பாலின்றுநீகயிறுமாறி
நின்னவாக்கொள்ளுநீரானின்னவாம்பரியேநாளை
யென்னவாயிருந்தவேனுமெனக்குமுன்றனக்குங்கொண்டு
மன்னவாகருமமில்லைபரிவிலைவழக்கீதென்றார். (அங)

அப்பொழுதரசன்றானுமகமகிழ்ந்ததற்குநேர்ந்தெம்
மெய்ப்புகழமைச்சர்தம்மின்மேம்படுவோதவூர
ரொப்பருந்திறத்தராகியும்மிடைநட்பான்மிக்க
துப்புறவுடையரானாரெனநனிசொல்லினானே. (அச)

உரகதவாரந்தோற்றுதுயர்மறைப்பரிமேல்வந்தார்
மரகதநிறத்துநிம்பமாலைதாழ்மார்பினாற்குக்
குரகதங்கயிறுமாறிக்கொடுப்பவர்பொதுமையாய
துரகதவிலக்கணங்கள்சொல்லுவான்றொடங்கினாரே. (அரு)

காயும்வேன்மன்னவோரிக்கடும்பரியமையம்வந்தான்
ஞாயிலுந்தாண்டிச்செல்லுநாட்டமுநுழையாச்சால
வாயிலுநுழையுங்கண்டவெளியெலாம்வழியாச்செல்லுந்
தீயவெம்பசிவந்துற்றாற்றின்றாதவெனினுந்தின்னும். (அசு)

கலிவிருத்தம்.

பொருவில்சீரிலக்கணப்புரவியொன்றுதா
னொருவனதிடைவதிந்துறையினெல்லென
மருவுறுந்திருமகன்மல்லற்செல்வமும்
பெருகுறுங்கீர்த்திகள்பல்கும்பெற்றியால். (அஎ)

நெய்த்திடுமொந்தளிர்நிறத்தநாவின
வைத்திடுகுளம்புகளுயர்ந்தவார்ந்துநே
ரொத்திடுமெயிற்றினவுரமுங்கண்டமும்
பைத்திடுமராப்படம்போன்றபாடலம். (அஅ)

---

(அங) பரிவிலை-வழக்கு அசுவவாணிப வழக்கம்.

(அச) துப்புரவு-ஐம்புலநுகர்ச்சி. (அரு) உரகதம்-சர்ப்பம்.

(அசு) ஓரிக்கடும்பரி என்றது-ஒப்பில்லாத வேகத்தையுடைய இந்தக் குதிரைகள்-நரியாகிய வேகத்தையுடைய குதிரைகள் எனக்கவர் பொருள்படநின்றது. அமையம்—போர்ச்சமையம். ஞாயில்-மதிலுறுப்பு. (அஅ) பாடலம்-பாடலமென்னும் பெயரையுடையகுதிரைகள்.

அகலியநுதலின்வாய்ந்தகுஞ்சிபோ
னிகரறுகொய்யுளைநிறமொன்ருயின
புகரறுகோணமூன்ருகிப்பொற்புறு
முகமுடையனவயமொய்கொள்கோடகம். (அகூ)

முட்டியசமரிடைமுகத்தில்வாளினல்
வெட்டினுமெதிர்ப்பதாய்க்குரங்குவேங்கைதோல்
பட்டிமைநரியரிசரபம்பாய்முய
லெட்டியகதியினவிவுளியென்பவே. (கூ0)

உன்னதநீளமுண்டாகிச்சங்குவெண்
கன்னலின்வாலியவிலாழிகால்வதாய்ப்
பின்னமாகியதனிவன்னம்பெற்றுமை
வன்னமுமுடையதுவன்னியாவதே. (கூக)

திணிதருகழுத்தினிற்சிறந்ததெய்வத
மணியுளதாகியெண்மங்கலத்ததா
யணிதருபஞ்சகல்யாணமுள்ளதாய்க்
குனிதருநீரதுகுதிரையாவதே. (கூஉ)

குங்குமங்கருப்புரங்கொழுந்திண்காரகிர்
பங்கமான்மதமெனக்கமழும்பாலதாய்ச்
சங்கமுமேகமுஞ்சரபமுங்கொடுஞ்
சிங்கமும்போலொலிசெய்வதாம்பரி. (கூஙு)

நாலுகால்களுங்கடைந்தெடுத்துநாட்டினற்
போல்வதாய்க்கொட்புறும்போதுசுற்றுதீக்
கோலையொப்பாகிமேற்கொண்டசேவகன்
காலினுளடங்குவதாகுங்கந்துகம். (கூச)

---

(அகூ) கோணமூன்று-முக்கோணம். இது கோடகமென்னுங் குதிரையினிலக்கணங் கூறியது. (கூ0) தோல்-யானை. பட்டிமை-வஞ்சகம். அரி - சிங்கம். இச்செய்யுள் இவுளிஎன்னுங் குதிரையினிலக்கணங் கூறியது. (கூக) உன்னதம்-உயரம். வெண்கன்னல்-வெள்ளைக்கரும்பு. பின்னமாகிய வன்னம் என்றது - கபிலநிறத்தை.

(கூஉ) தெய்வதமணி என்றது-கழுத்தில் வலமாகச் சுழித்திருக்குந் தேவமணியை. எண்மங்கலம்-பஞ்சகல்யாண மென்பவற்றின் விரிவை, இப்படலம்-கக0-வது செய்யுளிற்காண்க.

(கூஙு) அகிற்பங்கம்-அகிற்குழம்பு. (கூச) கொட்புறல்-சுற்றிவருதல். சுற்றுதீக்கோல்-கொள்ளிவட்டம்.

அரணமுந் துருக்கமுமா றுந்தாண்டிடு
மூரன துவாகியிம்முற்றிலக்கணப்
புரணமெல்லாநிறைபுரவிபோந்தன
விரணவேலாய்வயதெட்டுச்சென்றதால். (கூடு)

பகைத்திறமுருக்குமிப்பரிகண்மன்னநீ
யுகைத்திடத்தக்கவென்றோதிவேதநூற்
சிகைத்தனிச்சேவகர்திரும்பித்தம்மனோர்
முகத்தினைநோக்கினார்மொய்த்தவீரரும். (கூசு)

வாம்பரிமறைக்கெலாம்வரம்புகாட்டுவ
தாம்படிகண்டவரறிவும்பிற்படப்
போம்படிமுடுக்கினார்புரவியாவையும்
வேம்பணிதோளினான் வியப்பமெய்தியே. (கூஎ)

ஆத்தராய்மருங்குறையமைச்சர்யாரையும்
பார்த்தசையாமுடியசைத்துப்பைப்பயப்
பூத்தவாணகையொடுமகிழ்ச்சிபொங்கினான்
றீர்த்தனூநடத்தினான்றெய்வமாவினை. (கூஅ)

இருவகைச்சாரியுமெதிர்ந்துவட்டமாய்
வருவழிஞெகிழிபோன்மறுகெலாமொரு
துரகதமேநிலைநின்றதோற்றமொத்
தொருவறநடத்தினரொருகணத்தினே. (கூகூ)

இந்நிலையலமருமிவுளிமேலொரு
மின்னிலைவேலினான் வினவத்தங்கையின்
மன்னியகங்கணம்விடுத்துமாநகர்
தன்னிலைகாட்டியதன்மையொத்ததே. (௧௦௦)

பன்னிறமுடையவாம்பரியும்வீதியுட்
பின்னியவாவெனப்பின்னிவட்டமாய்த்
தன்னிகர்மதுரயாந்தையல்கையணி
துன்னியபன்மணித்தொடியும்போன்றவே. (௧௦௧)

---

(கூடு) அரணம் - கோட்டை. துருக்கம்-மலைக்கோட்டை. புரணம் - ஒளி. (கூசு) வேதநூற்சிகைத் தனிச்சேவகர் என்றது - ஞானகாண்டத்தி னுட்கிடைசிவமே பொருளெனத் தேற்றுதலை.

(கூஎ) பரிமறை - அசுவநூல். ஞெகிழி - கொள்ளிவட்டம்.

(௧௦௦) வேலினான் என்றது - வங்கியசேகர பாண்டியனை.

இந்தியனுதலினுரிடித்தபொற்சுணஞ்
சிந்தியமறுகிடைநடக்குந்திண்பரிப்
பந்தியினெழுந்ததூள்சுவணப்பாரின்மா
வுந்தியவெழுந்தபொற்பூழியொத்ததே. (கOஉ)

தேவருமனிதருந்திருந்துகூடலார்
யாவருமுவப்புறவிவுளிவிட்டுமெண்
காவலன்முன்குறீஇக்கருணைமாக்கடன்
மாவருதிறனெலாம்வகுத்துத்தேற்றுமால். (கOங)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

வளங்கொள்காம்போசமிப்பரியிம்மாமந்தரமிந்தவாம்புரவி
விளங்குகாந்தாரமிக்குரங்குளைவான்மீகமிக்கந்துகஞ்சிந்து
துளங்கில்பாஞ்சாலமிக்கனவட்டந்துளுவமிக்குதிரையித்துரகங்
களங்கமிலிமயப்பருப்பதமிந்தக்கற்கியின்மண்டலங்கவிங்கம். (கOச)

ஆரியமிந்தப்பாடலமிந்தவச்சுவங்கூர்ச்சரமிந்தச்
சீரியதுரங்கங்கேதையமிந்தத்திறலுறுகொய்யுளையவனம்
வேரியம்பணைசூழ்மக்கமிக்கொக்குவிரிபொழில்வனயுசமிந்தப்
போரியலிவுளிபல்லவமிந்தப்பொலம்புனைதார்நெடும்பாய்மா. (கOரு)

கற்றவர்புகழ்சவ்வீரமிக்கோரங்கன்னிமாராட்டமிவ்வன்னி
கொற்றவர்பயில்வாசந்திகமிந்தக்கோடகங்காடகங்கன்ன
லுற்றகான்மீரமிவ்வயமிந்தவுத்தமகோணமாளவமிவ்
வெற்றிசேர்குந்தங்கந்தரமிந்தவிறல்புனையரிசவுராட்டம். (கOசு)

விரிபொழிற்சாலிவேய்மிகுகிள்ளைவேறுதீவாந்தரமிந்தத்
துரகதமிந்தக்குரகதங்கொண்டல்சூழ்குருக்கேத்திரமின்ன
பரவுபல்வேறுதேயமுமுள்ளபரியெலாமிவன்றருபொருளின்
விரவியநசையாற்கொணர்ந்திவர்வந்தார்வேந்தகேளிந்தவாம்பரியுள்

வெண்ணிறஞ்செவப்புப் பொன்னிறங்கறுப்பும்வேறறவிரவிய நான்கு, வண்ணமுள்ளனவும்வேறுவேறுய மரபுமைவண்ணமும்வந் த, வெண்ணியவிவற்றின்சிறப்பிலக்கணத்தே யியம்புதுங்கேளென விகல்கா, யண்ணலங்களிற்றுற்கருமறைப்பரிமேலழகியா ரடைவுற விரிப்பார். (கOஅ)

---

(கOஉ) சுவணப்பாரின்மா என்றது - தெய்வலோகத்திலுள்ள உச்சைச்சிரவ மென்னுங் குதிரையை. பூழி - புழுதி.

(கOச) குரங்கு உளை - வளைந்த புறமயிர். மண்டலம் - நாடு. பரிமுதலியன சாதியொருமை. (கOசு) கன்னி - அழிவில்லாதது.

வெள்ளிநித்திலம்பால் சந்திரன்சங்கு வெண்பனிபோல்வது வெள்ளைத், துள்ளியபுரவி மாதுளம்போது சுகிர்ந்தசெம்பஞ்சியின் குழம்பிற், றெள்ளியநிறத்த செம்பரிமாமை சிறைக்குயில்வண்டுகார் முகில்போ, லொள்ளியகரிய பரியெரியழலா னுரோசனைநிறத்த பொற்பரியே. (கOகூ)

தெரிதரவகுத்த விந்நிறநான்குஞ் செறிந்தனமிச்சிரமிதன்பே, ருரைசெய்வர்முகமார்புச்சிவால்காலென் றுரைத்தவெட் டுறுப்பி னும் வெண்மை, விரவியதட்ட மங்கலந்தலைவால் வியனுரமென்ற விம்மூன்று, மொருவியவுறுப்போரைந்திலும்வெள்ளையுள்ளதுபஞ் சகல்யாணி. (ககO)

அணிகிளர்கழுத்தில்வலஞ்சுழித்திருந்தாலறிந்தவரதனையேதெய்வ
மணியெனவிசைப்பர்முகந்தலைநாசிமார்பமிந்நான்குமிவ்விரண்டு
பணிதருசுழியுநுதனடுப்பின்னைப்பக்கமுமொவ்வொருசுழியுந்
துணிதரவிருப்பதிலக்கணமுளதிச்சுழியிலதிலக்கணவழுவே. ()

பிரிவுறவுரத்திலைஞ்சுழியுளதுபேர்சிரீவற்சமாநுதலி
லிருசுழியாதன்முச்சுழியாதலிருக்கினுநன்றதுவன்றே
லொருவறநான்குசுழிவலம்புரியாயுள்ளதுநல்லதுவன்றி [ர்.
யிருசுழிமுன்னங்கால்களின்மூலத்திருக்கினுநல்லதென்றிசைப்பா
களநடுவிரட்டைச்சுழியுடைப்பரிதன்கருத்தனுக்கறமிடிகாட்டு
மளவறுதுன்பமரணமுண்டாக்குமவைகணைக்காலுளவாகி
லுளபயந்துன்பநிகளபந்தனமேலுதடுமுற்காலடிகபோலம் [கும்.
வளர்முழந்தாளிந்நான்கினுஞ்சுழிகண் மன்னினுந்தலைவனைவதைக்

இச்சுழியுடைய புரவிபந்தியில்யாத் திருக்கினும்பழுதிவைகிட க்க, வச்சமில்பரிக்குப் பிராயநாலெட்டா மவத்தைபத் தாகுமொவ் வொன்றில், வைச்சதுமூன்று வருடமுமிரண்டு மதியமும்பன்னிரு நாளு, நிச்சயித்தளந்தா ரின்னமுமொருசார் நிகழ்த்திடு மிலக்கண மதுகேள். (ககச)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

எவ்வண்ணமேபதமிகுந்திருந்தாலும்வெள்ளைகலந்திருந்ததானு, லவ்வண்ணப்பரிநன்றுகரும்புரவிக்ககடேனுமகன்மார்பேனுஞ், செ

(கOகூ) சுகிர்ந்த-சீவிய. மை-கருமை. உரோசனை - கோரோசனை. (ககO) உறுப்போரைந்தாவன - உச்சியும் நான்கு கால்களுமாகிய வைந்துறுப்புகள். (ககங) களநடு-கண்டத்தினடு. மிடி-வறுமை. அவை என்றது—அவ்விரட்டைச் சுழிகளை. நிகளபந்தனம்-தளைபூணல். (ககச) அவத்தை - தசை. (ககடு) அகடு-வயிறு. வாருணம்-வயிற்றிலும் மார்பிலும் வெண்மைகலந்த கரும்புரவி.

வ்வண்ணமிருக்கினதுசயமுளதப்படிவெண்மை சேர்ந்தாலந்த,மை வ்வண்ணப்பரியின்பேர் வாருணமாஞ்சயங்கொடுக்கு மாற்றார்போ ரில். (ககரு)

மகவளிக்கும்பிடர்வெளுப்பு மகிழ்வளிக்கு முரவெளுப்பு மணி த்தார்க்கண்டத், தகவெளுப்புப் பொருள்கொடுக்கு முகவெளுப்புச் சயங்கொடுக்கு மதன்பின்பக்கத், தகவெளுப்புச் சுகம்பயக்கு மிட வெளுப்புச் சந்தானந் தழைக்குஞ்செல்வ, மிகவளர்க்குந் தனம்பல தானியநல்கும் வலப்புரத்து வெள்ளைமாதோ. (ககசு)

நற்புறம்வான் முகமூன்றும் வெளுத்தபரி வென்றிதரு நாபி தொட்டு, முற்புறமெல்லாம்பரிதி யெனச்சிவந்து மதியெனப்பின் முழுதும்வெள்கும். பொற்புடைய வயப்பரிக்குப் பகல்விசயமதியெ னமுற்புறம்புவெள்கிப். பிற்புறமெல்லாங்கதிர்போற் சிவந்தபரிக்கி ராவிசயம் பெருக்குமன்றே. (ககஎ)

வந்தனவாலிவ்விரண்டு வகைப்பரியும்புரவியடி வைத்தாலொ த்த, பந்தெனவுநின்றலோ மலையெனவுமொலித்தாலோ பகடேறு ம், வெந்தறுகணரியெனவும் வேகத்தாற்காற்றெனவு மிதிக்குங்கூத் தாற், சந்தநடமகனெனவு நடக்கிலரிகளிறெனவுந் தகையவாகி. ()

குலமகள்போற் கவிழ்முகமுங் கருநெய்த லெனக்கண்ணுங் கொண்டுகார்போ, னிலவியசீர் வண்ணமுங்கார் நெய்தலெனக்கடி மணமு நிறைந்துநாற்ற. மலரகில்சந் தெரிமணிப்பூ ணலங்கரிக்கி லானுத மகிழ்ச்சியெய்தி, யிலகுவதுத்தமவாசி யென்றுரைப்பர்பரி வேதத் தல்லைகண்டோர். (ககக)

நூறுவிரலுத்தமவாம் பரிக்குயர்வீ ரெட்டுவிர னூறுநீக்கிக், கூறுவிரன்மத்திமவாம் பரிக்கறுபத்தொன்றதமக் குதிரைக்கென்ப, வீறில்புகழாயவொரு நரிப்பரியைப்பூசனஞ்செய் திறைஞ்சிப்பாச, மாறுவராலெனமணித்தார் சதங்கைசிலம்பணிவித்து மதிக்கோமா றன். (கஉO)

கொத்தவிழ்த்தார் நறுஞ்சாந்தங் கொண்டுசெழும் புகைதீபங் கொடுத்துப்பூசை, பத்திமையாற் செய்திறைஞ்சி யெதிர்நிற்பவால வாய்ப் பரனைநோக்கிக், கைத்தலந்தஞ் சிரமுகிழ்த்து வாழியெனப் பரிகொடுத்தான் கயிறுமாறி, முத்தொழிலின் மூவராய் மூவர்க்குந் தெரியாத முக்கண்மூர்த்தி. (கஉக)

---

(ககஎ) புறம்-முதுகு. கதிர்-சூரியன். (ககஅ) அரி-சிங்கம். நடமகன்-நாட்டியப்புலவன். களிறு - யானை. (ககக) கார்நெய்தல்-கருநெய்தல். (கஉO) ஈரெட்டு விரனூறுநீக்கிக்கூறுவிரல்-எண்பத் துநான்குவிரலளவு. பூசனம்-பூசை. ஒருநரிப்பரியை-ஒருநரியாகிய குதிரையை. ஒருநர் இ பரியை-எனப்பிரித்துச் செம்மொழிச் சிலே டையாக்குங்கால் ஒருநர் என்பதில் நகரம்பெயரிடைநிலை.

## மேற்படி - வேறு.

உபனிடக்கலனைவாசியொன்றலானின்றமாயக்
கவனவாம்புரவியெல்லாங்கொடுத்திடக்கவர்ந்துவீறு
தவனனில்விளங்குந்தென்னன்றன்பெருங்கோயிலுய்ப்பப்
பவனமுங்கடலும்போலக்கொண்டுபோய்ப்பந்திசேர்த்தார். (கஉஉ)

வாசிவாணிபர்க்குத்தென்னன்வெண்டுகில்வரிசையாக
வீசினன்பாணற்கேவல்செய்தவர்வெள்குவாரோ
கூசிலாநேசர்க்காப்பான்குதிரையினிழிந்தேற்றந்தத்
தூசினையிரண்டாங்கங்கையெனமுடிசூடிநின்றார். (கஉங)

இனையதூசிவன்பாலூர்தியிழிந்துநின்றேற்றுச்சென்னி
புனைவதென்னிவர்கையோடும்புனைந்ததிக்குடையும்பூண்ட
கனலராப்பூணுமன்னன்கவருமோவென்றுதம்மில்
வினவினர்வெகுண்டுசொன்னார்கணத்தனிவீரரெல்லாம். (கஉச)

அறந்தருகோலான்வெவ்வேறடுபரிவயவர்யார்க்கு
நிறந்தருகலிங்கமீந்தானேர்ந்தவைவாங்கியன்பிற்
சிறந்தருள்வடிவாய்வந்தார்செழுமறைப்புரவியோடு
மறைந்தனர்மறைந்தாரொக்கமாயவாம்பரிமேல்வந்தார். (கஉரு)

இருமைக்குந்துணையாய்நின்றவிருபிறப்பாளர்க்கேற்ப
வருமைத்தாஞ்சிறப்புநல்கியவரிடத்தவரையுய்த்துப்
பருமத்தயானைவேந்தன்பகற்கதிர்வானத்துச்சி
வருமப்போதெழுந்துசெம்பொன்மாடநீள்கோயில்புக்கான். (கஉசு)

எனமந்திரருந்தத்தமில்புகப்புரவிபார்த்த
மாநகராருந்தத்தமனைபுகப்பரியின்பாக
ரானவர்தாமுங்கோயிலடைந்துதம்விளையாட்டெல்லா
மீனெடுங்கண்ணிஞட்குவிளம்பினரிருந்தாரன்றே. (கஉஎ)

நரிபரியாக்கியபடலம் முற்றிற்று.

ஆ படலம் சுஅ - க்கு - திருவிருத்தம் - உகூஉரு.

---

(கஉஉ) தவனன்-சூரியன் பவனம்-காற்று.

(கஉச) ஓடு - பலிப்பாத்திரம். திக்குடை - திக்காகிய ஆடை. கனல்-விஷம். (கஉசு) பருமம்-கவசம். (கஉஎ) பரியின்பாகர் என்றது—வேதப்புரவியின்மேல் வந்த சோமசுந்தரக்கடவுளை.

சிவமயம்.

அறுபதாவது,

# பரிநரியாக்கியபடலம்.

கலிநிலைத்துறை.

ஞானநாயகனானையானரிபரிவெள்ள
மானவாறுரைசெய்துமீண்டப்பரிநரியாய்ப்
போனவாறுகண்டமைச்சரைப்புரவலன்கறுப்ப
வானவாறுபோல்வைகைநீர்வந்தவாறுரைப்பாம். (க)

நெருங்குதூரியமுழக்கமுந்தானையுநிமிர
மருங்கிலாதவர்வந்தெதிர்மங்கலமேந்த
வரங்கொல்வேலினனருளியவரிசையோடணைந்து
புரங்கொல்வேதியர்க்கன்பர்தந்திருமனைபுகுந்தார். (உ)

உடுத்தசுற்றமுங்கழகமுமொட்டியநட்பு
மடுத்தகேண்மையால்வினவுவாரவரவர்க்கிசைய
வெடுத்தவாய்மையான்முகமனுமகிழ்ச்சியுமீந்து
விடுத்தவாதவூராளிகள்வேறிடத்திருந்து. (ங)

கரந்தைசூடியவாலவாய்க்கண்ணுதனுமன்
றிரந்தவண்ணமேயாங்கொடுபோகியவெல்லாம்
பரந்தவன்பருந்தானுங்கொண்டெம்மையும்பணிகொண்
டரந்தைதீர்த்தனனன்றியுமரசனுக்கிசைய. (ச)

நல்லவாம்பரிசெலுத்தினனமக்கினிக்கவலை
யில்லவாம்படியாக்கினனின்னமொன்றுலகை
வெல்லவாம்படிதன்னருள்விளைக்குமானந்தம்
புல்லவாம்படியெமைத்தவம்பூட்டுவான்வேண்டும். (ரு)

என்றவாதரந்தலைக்கொளவிகபரத்தாசை
யொன்றுமின்றியேயுணர்வினுக்குள்ளுணர்வாகத்

---

(உ) தூரியம்-வாத்தியம். தானை-சேனை. நிமிர-நெருங்க. மருங்கு-இடை. அரங்கொல்வேல்-அரத்தினலராவிச்செய்தவேல். புரம்-திரிபுரம். (ங) கழகம் என்றது—இடவாகுபெயராய்க் கல்விபயின்றூர்மேல் நின்றது. (ச) அரந்தை-பிறவித்துன்பம்.

(ரு) உலகை என்றது—அவனவளதுவென்று சுட்டப்படும்பிரபஞ்சத்தை.

துன்றுபூரணமாகியசுந்தரச்சோதி
மன்றுளாடியசேவடிமனம்புதைத்திருந்தார். (சு)

நாளையுந்திருவாலவாய்நாயகன்றமரை
யாளமண்சுமந்தருளுமென்றதனையுங்காண்பா
னூளைவெம்பரித்தூளிபோர்ப்புண்டமெய்கழுவி
மீளவேண்டுவான்போற்கடல்குளித்தனன்வெய்யோன். (எ)

ஈசனுடல்வெம்பரிக்குழாத்தெழுந்தசெந்தூளான்
மாசுமூழ்கியவண்டத்தைவானிலாவென்னுந்
தூசிலானவைதுடைப்பவனெனமணித்தொகுதி
வீசுமாழியுண்மூளைத்தனன்வெண்மதிக்கடவுள். (அ)

சேயதாரகைவருணமாத்தீட்டியவான
மாயவேட்டினையிருளெனுமஞ்சனந்தடவித்
தூயவாணிலாவென்னும்வெண்டுகிஞற்றுடைப்பான்
பாயவேலையின்மூளைத்தனன்பனிமதிக்கடவுள். (கூ)

கள்ளொழுக்குதார்மீனவன்கடிமனைபுகுந்த
புள்ளுவப்பரிநள்ளிருட்போதுவந்தெய்தப்
பிள்ளையாகியமதிமுடிப்பிரான்விளையாட்டா
லுள்ளவாறுதம்வடிவெடுத்தொன்றொடொன்றுசாவும். (கO)

சங்கினோசையும்பிணப்பறையோசையுஞ்சரிந்த
மங்குலோதியரழுகுரலோசையும்வடந்தாழ்
கொங்கைசேப்புரக்கையெறியோசையுங்குளிர
வெங்குநாஞ்செவிபருகுவமின்னமுதென்ன. (கக)

வாம்பரித்திரளாகிநாமணித்தரைச்சுமந்து
தாம்புசநகிலிதொடக்குண்டுமத்திகைதாக்க
வேம்பலுற்றனம்பகலெலாமிப்பொழுதீண்டு
நாமபடைத்தனநம்முருநம்விதிவலத்தால். (கஉ)

கானகந்தனிலொழுகுநாண்முதலிந்தக்கவலை
யானதுன்பநாமறிந்திலமின்னமுமார்த்த
மானவன்றொடர்வடுக்களுமத்திகைத்தழும்பும்
போனவன்றினிப்புலருமுன்போவதேகருமம். (கந)

---

(சு) பூரணம்-நிறைவு. (எ) தமர் என்றது—வாதவூரடிகளை. (அ) தூசு-வஸ்திரம். (கூ) தாரகை-நட்சத்திரம். வருணம்-எழுத்து. (கஉ) மத்திகை-குதிரைச்சம்மட்டி. எம்பல்-வருத்தம். விதிவலம்-ஆகூழின்வன்மை. (கந) புலர்தல்-விடிதல்.

உள்ளமாரநாந்தின்பதற்கூன்சரிந்தொழுகு
நொள்ளைநாகிலநந்திலநுழைந்தளையொதுங்கும்
கள்ளநீள்கவைக்கான்ஞெண்டுமிலவினிக்கடலை
கொள்ளினேடுமைம்பயறுபுற்கொள்வகையடாதால். (க௪)

நாடிக்காவலன்றமருளார்நகருளார்கண்டாற்
சாடிக்காய்வரேபுலருமுன்சங்கிலித்தொடர்நீத்
தோடிப்போவதேசூழ்ச்சியென்றூக்கமுற்றொருங்கே
கூடிப்பேசினவூளைவாய்க்குறுநரிக்குழாங்கள். (க௫)

வெறுத்தகாணமுங்கடலையும்விரும்பினகோழுன்
றுறுத்தநாகுநந்தலவனைச்சங்கிலித்தொடரை
முறித்தகால்களிற்கட்டியகயிற்றொடுமுளையைப்
பறித்தவூளையிட்டெழுந்தனபோம்வழிபார்ப்ப. (க௬)

நின்றநீணிலைப்பந்தியுணெருங்குமாநிரையைச்
சென்றுதாவிவாளெயிறுறச்சிதைபடக்கடித்து
மென்றுசோரியைக்குடிப்பனவீக்கியமுளையோ
டொன்றவோடவேயண்டத்திலூறுசெய்வனவால். (க௭)

ஊளையோசைகேட்டிம்மெனவுறக்கநீத்தெழுந்து
காளைவீரராய்மந்துரைகாப்பவர்கெருந
லாளிபோல்வருபரியெலாநரிகளாய்மற்றை
யோளிமானிரைகுடர்பறித்துண்பனகண்டார். (க௮)

காண்டலுஞ்சிலவலியுளகடியமுள்ளரணந்
தாண்டியோடினசிலநரிசாளரமுழையைத்
தூண்டியோடினசிலநரிசுருங்கையின்வழியா
லீண்டியோடினநூழில்புக்கேகினசிலவே. (க௯)

முடங்குகாலுடைச்சம்புவுமூப்படைந்தாற்ற
வடங்குமோரியுங்கண்குருடாகியநரியு
மொடுங்குநோயுழந்தலமருமிகலனுமோடு
மிடங்கள்கண்டிலபந்தியிற்கிடந்தனவேங்கி. (உ0)

---

(க௪) நொள்ளைநாகு-கட்புலனில்லாதநத்தைகள். நந்து-சங்கு. அளை-வளை. (க௫) சூழ்ச்சி-ஆலோசனை. ஊக்கம்-மனவெழுச்சி.

(க௭) அண்டம்-பீஜம். (க௮) ஒளி-ஒழுங்கு.

(க௯) அரணம்-கோட்டை. சாளரம்-பலகணி. முழை - துவாரம். சுருங்கை-கள்ளவழி. நூழில்-கரந்துறைவழி.

(உ0) ஓரி-கிழநரி. இகலன் சம்பு—நரி.

கிட்டியோடினர்வெருட்டுவோர்கீழ்விழக்கடித்துத்
தட்டியோடுவசிலவெதிர்தடுப்பவரடிக்கீ
ழொட்டியோடுவசிலகிடந்தூளையிட்டிரங்குங்
குட்டியோடணைத்தெயிலிறக்குதிப்பனசிலவே. (உக)

மறம்புனைந்தவேன்மீனவன்மாளிகைதள்ளிப்
புறம்படைந்தவிந்நரியெலாம்பொய்கையுய்யான
மறம்பயின்றநீண்மனைமறுகாலயங்கவலைத்
திறம்படர்ந்தபன்மாடநீணகரெலாஞ்செறிந்த. (உஉ)

மன்றுஞ்சித்திரகூடமுமாடமுமணிசெய்
குன்றுந்தெற்றியுமுற்றமுநாளொடுகோள்வந்
தென்றுஞ்சுற்றியபொங்கருமெங்கணுநிரம்பி
யொன்றுஞ்சுற்றமோவேளையிட்டுழல்வனநரிகள். (உங)

கரியினோசையும்பல்லியவோசையுங்கடுந்தேர்ப்
பரியினோசையுமின்றமிழோசையும்பாணர்
வரியினோசையுநிரம்பியமணிநகரெங்கு
நரியினோசையாய்க்கிடந்ததுவிழித்ததுநகரம். (உச)

விழித்தஞாளிகள்விழித்தனகேகையம்வெருவி
விழித்தகோழிகள்விழித்தனமதுகரம்வெருண்டு
விழித்தவோதிமம்விழித்தனகுருகினம்விரைய
விழித்தவாரணம்விழித்தனகருங்கொடிவெள்ளம். (உரு)

அட்டில்புக்கனநிணத்திணையழற்பசியுருக்கப்
பட்டடுக்கியகருங்கலமுருட்டுவபாகு
சுட்டசோறுபல்லுணவுவாய்மடுப்பனசூழ்ந்த
குட்டியுண்ணவுங்கொடுப்பனகூவிளிகொள்வ. (உசு)

(உஉ) உய்யானம் - பூந்தோட்டம். அறம்பயின்ற நீள் மனை- தருமசத்திரம். மறுகு - வீதி. கவலை - முத்தெருக்கூடுமிடம்.

(உங) தெற்றி - திண்ணை. முற்றம் - முன்றில். நாள்-நட்சத்திரங்கள். கோள் - நவக்கிரகங்கள். பொங்கர் - சோலை.

(உச) வரி — இசை. நகரம் — இடவாகுபெயராய் அஃறிணைச் சொல்லாய் நிற்றலால், விழித்ததுஎன அஃறிணையொருமை முடிபுதந்தார். (உரு) ஞாளி - நாய். கேகயம்-மயில். மதுகரம் - வண்டு. குருகினம் - பறவைக்கூட்டம். வாரணம்-யானை. கொடி-காக்கை.

(உசு) சுட்டசோறு-வெந்தஅன்னம். கூவிளி - பேரிறைச்சல்.

43

புறவுபூவைபைங்கிள்ளைகள்பூத்தலைச்சேவல்
பிறவும்வாருவவுறங்கியபிள்ளையைக்கொடுபோய்
நறவுநாறியகுமுதவாய்நகையெழநக்கி
யுறவுபோல்விளையாடுவவூறுசெய்யாவால். (உஎ)

பறிப்பவேறொடுமுன்றில்வாய்ப்படர்பசுங்கொடியைக்
கறிப்பனுகிளங்காயெலாங்கரும்புதேன்கவிழ
முறிப்பவாயிட்டுக்குதட்டுவவண்டுவாய்மொய்ப்பத்
தெறிப்பவூளையிட்டாடுவதிரிவனபலவே. (உஅ)

ஆயிரம்பொரிதிரிமருப்படல்கெழுமேட
மாயிரங்கருந்தாதுநேராக்கையவேன
மாயிரங்கவிரணயசூட்டவிர்தலைக்கோழி
யாயிரங்குறும்பார்ப்பொடுமாருயிர்செகுப்ப. (உகூ)

பின்றொடர்ந்துநாய்குரைப்பொடுதொடர்ந்திடப்பெயர்ந்து
முன்றொடர்ந்துயிர்செகுப்பனவெஞ்சினமூட்டி
வன்றடம்புயமள்ளர்போய்வலிசெயப்பொறாது
கன்றிவந்துசெம்புனலுகக்கடிப்பனவநந்தம். (௩0)

பன்றிவாய்விடுமிரக்கமும்பல்பொறிமுள்வாய்
வென்றிவாரணச்சும்மையுமேழகத்தொலியு
மன்றிநாய்குரைப்போசையுமாடவரார்ப்பு
மொன்றியூளைவாய்நரிக்குரற்கொப்பதுண்டொருசா. (௩க)

கங்குலெல்லைகாணியநகர்கண்விழித்தாங்கு
மங்குறேய்பெருவாயில்கடிறக்தலுமாறு
தெங்குமீண்டியநரியெலாமிம்மெனவோடிப்
பொங்குகாரிருட்டுணியெனப்போயினகானம். (௩உ)

ஈறிலாச்சிவபரஞ்சுடரிரவிவந்தெறிப்பத்
தேறுவாரிடைத்தோன்றியசிறுதெய்வம்போல

(உஎ) புறவு-புறா. பூ தலை சேவல்-முண்முருக்கம்பூவை யொத்த சூட்டுப்பொருந்திய தலையையுடையசேவல். ஊறு-துன்பம்.

(உகூ) பொரிதிரிமருப்பு - பொறுக்குப் பொருந்திய முறுக்கிய கொம்பு. கருந்தாது-இரும்பு.ஏனம் - பன்றி. ஆயிரம்-அளவின்மை மேனின்றது. (௩க) இரக்கம்-இதில் அம் பகுதிப்பொருள் விகுதி. இரக்கு-முழக்கம். வாரணம் - சேவற்கோழி. மேழகம் - ஆடு.

(௩௩) தேறுவாரிடைத்தோன்றிய சிறுதெய்வம்போல என்றது-சிவஞானத்தால் பதிலக்கணத்தையாராய்வாருக்குத்தத்துவங்கள்தோறும்நின்ற அவ்வத்தெய்வங்கள் பொய்த்தேவர்களாகக்கழிந்து தத்துவங்களைக் கடந்துநின்ற நிட்களசிவம்பொருளாய் னின்று விளங்கலை.

மாறிலாதபன்செங்கதிர்மலர்ந்துவாளெறிப்ப
வீறுபோயொளிமழுங்கினமீன்கணமெல்லாம். (ருரு)

அண்டருக்கரிதாகியமறைப்பொருளழுகைத்
தொண்டருக்கெளிதாகிமண்சுமந்தருள்வருத்தங்
கண்டருட்கழல்வருடுவொன்கைகளாயிரமுங்
கொண்டருக்கவெங்கடவுளுங்குணகடலுதித்தான். (ருச)

கவனவெம்பரிசெலுத்திமேற்கவலைதீர்ந்துள்ளே
சிவமுணர்ந்தவர்சிந்தைபோன்மலர்ந்தசெங்கமல
முவமையில்பரம்பொருளுணர்ந்துரையிறந்திருந்தோர்
மௌனவாயெனவடங்கினமலர்ந்தபைங்குமுதம். (ருரு)

பந்தியாளர்கள்யாதெனப்பகர்துமென்றச்சஞ்
சிந்தியாவெழுந்தொல்லைபோய்த்திரண்மதங்கவிழ்க்குந்
தந்தியானரசிறைகொளுமிருக்கையைச்சார்ந்து
வந்தியாவுடல்பணிப்புறவந்ததுமொழிவார். (ருசு)

காற்றினுங்கடுங்கதியவாய்க்கட்கினியனவாய்
நேற்றுவந்தவாம்பரியெலாநின்றவாம்பரிக்குக்
கூற்றெனும்படிநரிகளாய்நகரெலாங்குழுமி
யூற்றஞ்செய்துபோய்க்காட்டகத்தோடியவென்றார். (ருஎ)

கருத்துறுதவிச்சொல்லெனுங்கடியகால்செவியாந்
துருத்தியூடுபோய்க்கோபமாஞ்சுடுதழன்மூட்டி
யெரித்ததீப்பொறிசிதறிடக்கண்சிவந்திறைவ
னுருத்தவாறுகண்டமைச்சரும்வெருவினரொதுங்கி. (ருஅ)

அமுதமுண்டவனஞ்சமுண்டாலெனமுதனுட்
சமரவெம்பரிமகிழ்ச்சியுட்டாழ்ந்தவனவையே
திமிரவெங்குறுநரிகளாய்ச்சென்றவேயென்று
வமரரஞ்சியவாணையானரஞராழ்ந்தான். (ருகூ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அருகிருக்குந்தொல்லமைச்சர் தமைநோக்கிவாதவூ ராளியெ
ன்னும், கருகிருட்டுமனக்கள்வனம்முடையபொருண்முழுதுங்கவர்

---

(ருச) கைகளாயிரம் என்றது - சூரிய கிரணத்திற்குக் கரம் என்பதோர் பரியாயநாமமாதலின்

(ருரு) உள்ளே - சிவமுணர்ந்தவர் என்றது - ஆன்மாவிடத்து விரவிய சிவத்தைத் தரிசித்துநின்ற வாதவூரடிகளே.

(ருகூ) சமரம் - போர். திமிரம் - இருள். அஞர் - துன்பம்.

ந்துகாட்டிற், குருதிநிணக்குடர்பிடுங்கித்தின்று திரிநரிகளெல்லாங் குதிரையாக்கி, வரவிடுத்தானிவன்செய்த மாயமிதுகண்டீரோ மதி நூல்வல்லீர். (சO)

இம்மாயஞ்செய்தானை யென்செய்வதெனவுலகி லெமருக்கெல் லாம், வெம்மாசுபடுபாவம்பழியிரண்டும்படவிழுக்குவிளைத்துத்தீய, கைம்மாறுகொன்றான்றன் பொருட்டினியாமேதுரைக்கக் கடவே மென்று, சும்மாதுசிரந்தூக்கியெதிராடாதிருந்தாரச் சூழ்வல்லோர் கள். (சக)

அவ்வேலைமனக்கினியபரிசெலுத்தியரசகாரியநன்றாக்கி
வெவ்வேலைமனக்கவலைவிடுத்தனமென்றகமகிழ்ச்சிவிளைவுகூர
மைவ்வேலைவிடமுண்டவானவனைநினைந்தறிவுமயமாமின்ப [டே.
மெய்வ்வேலையிடைவீழ்ந்தார் விளைந்ததறியார்வந்தார் வேந்தன்மா

வந்தவரைச்சிவந்தவிழிப் பொறிசிதறக்கடுகடுத்துமறவோனோ க்கி, யந்தமிலாப்பொருள்கொடுபோய் நல்லவயப்பரிகொடுவந்தழகி தாகத், தந்தனையன்றே வரசகருமமுடித்திசைநிறுத்தத் தக்கோர் நின்போ, லெந்தவுலகுளரேயோ வெனவெகுண்டானதுகேட்டவீ சன்றொண்டர். (சங)

குற்றமேதப்புரவிக்கெனக்கேட்டார்கோமகனுங்குற்றமேது
மற்றதாலரையிரவினரியாகியயனின்றபுரவியெல்லாஞ்
செற்றுவார்குருதியுநிணஞ்சிதறக்குடர்பிடுங்கித்தின்றுநேர்வந்
துற்றபேர்க்கூற்றமிழைத்தூர்கலங்கக்காட்டகத்திலோடிற்றன்றே.

கண்ணுமிடுகவசமும்போற்காரியஞ்செய்தொழுகியதுங்காலம் பார்த்தெம், மெண்ணரிய நிதியீட்டங் கவர்வதற்கோ நின்னமைச்சி னியற்கைநன்றாற், புண்ணியவேதியர்மரபிற் பிறந்தனமென்றொரு பெருமை பூண்டாயேநீ, பண்ணியகாரியம்பழுது பிறராகிற்றண் டிக்கப் படுவரென்றான். (சரு)

தண்டலாளர்களிவனைக் கொடுபோய்நம்பொருண்முழுதுந்தடு த்துமீர்த்து, மிண்டினுல்வலிசெய்தும்வாங்குமெனவெகுண்டரசன் விளம்பக்கூற்று, மண்டுமேன்மறஞ்செய்யும் வலியுடையார் கதிரை யிருளடுத்துப்பற்றிக், கொண்டுபோனலென்னக் கொடுபுறம்போ யறவோரைக் கொடுமைசெய்வார். (சசு)

---

(சக) இழுக்கு - மறுவு. சும்மாது-இதில் து பகுதிப்பொருள் விகுதி; வாளாது என்றாற்போல. (சச) புரவி - சாதியொருமை.

(சரு) பிறராகில் தண்டிக்கப்படுவரென்றான் என்றது - அந்த ணரை அரசனொறுத்தல் மநுநூல்முறை யன்றென்பதை விளக்கி நின்றது. (சசு) தடுத்து என்றது - கீறிய கீற்றினின்றுந் தப்பாது நிறுத்துதலை.

கதிர்நோக்கிக்கனன்மூட்டுங்கடும்பகலுச்சியிலிரவிக்கடவுணே ர்நின், றெதிர்நோக்கநிலைநிறுத்திக் கரங்களிலுநுதலிலுங் கல்லேற் றிச்செந்தீப், பிதிர்நோக்கத்தவரொறுப்ப வாற்றாய் வீழ்ந்திருளை ப்பிளப்போன்செந்தீ, மதிநோக்கத்தனிச்சுடரை யழைத்தழுது து திசெய்வார் வாதவூரர். (சஎ)

கொச்சகக்கலிப்பா.

நாதவோநாதமுடிவிறந்தநாடகஞ்செய்
பாதவோபாதகனுமென்னைப்பணிகொண்ட
வேதவோவேதமுடிவின்விளைந்ததனிப்
போதவோபோதநெறிகடந்தபூரணவோ. (சஅ)

ஐயவோவென்னுடையவன்பவோவன்பர்க்கு
மெய்யவோமெய்யில்வினையேன்றலைவைத்த
கையவோசெய்யகழற்காலவோகாலனைக்காய்
செய்யவோவேதப்பரியேறுஞ்சேவகவோ. (சகூ)

அத்தவோகல்லாக்கடையேனையாட்கொண்ட
பித்தவோபொய்யுலகைமெய்யாகப்பேதிக்குஞ்
சித்தவோசித்தந்தெளிவித்தெனைத்தந்த
முத்தவோமோனமயமானமூர்த்தியவோ. (ருO)

ஒருபோகு கொச்சகக்கலிப்பா.

என்றேறியபுகழ்வேதியரிரங்குந்துதிசெவியிற்
சென்றேறலும்விடையேறுசுந்தரன்மற்றிவர்செயலை
மன்றேறவுமுடிமேனதிமண்ணேறவுமுதியா
ளென்றேறியதேரோடும்விண்ணடைந்தேறவுநினைந்தான். (ருக)

---

சஅ) நாத என்றது—நாததத்துவ வடிவனாய் ஆன்மாக்களைப் பெத்தத்திற் செலுத்தும் ஊனநடன முடைமையை. நாதமுடிவிற ந்தநாடகஞ்செய்பாதவோ என்றது - அப்பெத்தத்தைக் கழற்றிமு த்தியிற்செலுத்தும் ஞானநடன முடைமையை. போதவோபோத நெறிகடந்த பூரணவோ. என்றமை முறையே அபரஞானம், பர ஞானங்களை யருள்வோனென்பதை விளக்கின்றன.

(ருO) பொய்யுலகைமெய்யாகப்பேதிக்குஞ் சித்தஎன்றது-ஆன் மாக்களுக்குப் பக்குவம் வருவிக்கப் பொய்யாகிய அவனவளதுவெ ன்னும் பிரபஞ்சத்தை மெய்ம்மையாகப் பேதித்து வினைக்குத்தக்க படியூட்டுவோனாதலின். சித்தந்தெளிவித்தெனையாண்டமுத்தஎன் றது-சாதாரத் திருவுருக்கொண்டுவந்தருளி ஆன்மதரிசனமும், ஆ ன்மசுத்தியும், ஆன்மலாபமும் பெற அருளினமையை.

(ருக) மன்று-சபை. முதியாள் என்றது - வந்தியாகியமூதாட் டியை.

கங்கைப்புனம்வடிவாகியகௌவைத்திரைவையைச்
சங்கச்சரியறலாமலர்த்தாரோதியைநோக்கா
வங்கக்கடல்பேரூழியில்வருமாறெனவெவரு
மிங்கற்புதமடையப்பெருகென்றூனருள்குன்றான். (ருஉ)

தும்பைச்சடைமுடியானொருசொல்லாடவுமுன்னாள்
வம்பைப்பொருமுலையால்வரிவளையால்வடுவெழுத்துங்
கொம்பைத்தவங்குலைப்பானடுங்கோபங்கொடுநடக்குங்
கம்பைப்பெருநதியிற்கடுங்கதியால்வரும்வையை. (ருங)

பத்திக்குளிர்கமுகின்குலைபரியக்கரைமுரியக்
குத்திப்பழஞ்சிதறச்செறிகோட்டங்களைவீட்டி
முத்திக்கொடுகதலிப்புதன்முதுசாலிகள்பரித்துத்
தத்திப்பலதருவேரொடுந்தள்ளிக்கடுகியதே. (ருச)

பல்லாயிரஞ்செந்தாமரைபரப்பிக்கொடுவரலா
னல்லாயிரங்கண்ணுனெழினயக்குங்குளிர்நளினங்
கல்லாரமுங்கடிமுல்லையுங்கரும்புங்கொடுவரலால்
வில்லாயிரங்கொடுபோர்செயும்வேள்வீரனுமானும். (ருரு)

மணிமாலையும்மலர்மாலையுஞ்சிதருவிறுமருங்கே
யணிகாஞ்சியுமொளிசங்கமுமலறப்புடையெறியாக்
கணியாவெழின்முகதாமரைகண்ணீரொடுங்கவிழத்
தணியாமுனிவுடனோடியதடங்கண்ணியர்போலும். (ருசு)

வரையுந்தியமதுமுல்லையினெய்பாறயிர்மருதத்
தரையுந்தியகரும்பின்குறைசாரோடுவரன்றி
யிரையுந்தெழுதூநீர்வையையிந்நன்னகர்வைகுந்
திரையுந்தெழுகடறம்மிடஞ்சென்றூலவைபோலும். (ருஎ)

கல்லென்றதிர்சும்மைப்புனல்கடிமாமதிற்புறம்போ
யில்லங்களுஞ்சிறிதுச்சிலுமறித்திட்டிருங்கடல்வாய்ச்

---

(ருஉ) கங்கைப்புனல் வடிவாகிய வையைஎன்றது - குண்டோதரனிமித்தம் முன்கங்கையையே வையையாக வரச்செய்தமையை. கௌவை-ஒலி. சரி-வளை. அறல்-கருமணல். பேரூழி - மகாப்பிரளயகாலம்.

(ருங) வம்பு - கச்சு. (ருச) கோட்டம்-வயல். முந்தி-முத்தியென வலித்தற்பெற்றது. புதல்-புல். வாழையைப்புல்என்றது - புறக்காழனவே புல்லெனப்படுமே என்ற சூத்திரத்திற்காண்க.

(ருசு) இது செம்மொழிச் சிலேடையாதலின் நதிக்குக்கூறுங்கால். காஞ்சி-ஓர்விருட்சம். முகதாமரை - முகம்போலுள்ளதாமரை. கண்ணீர்-கள்ளாகிய நீர்எனப் பொருள்கொள்க.

(ருஎ) இரை - ஒலி. (ருஅ) துச்சில் - சிறு குடிசை.

செல்லுங்கலநாவாய்பலதிமில்போற்சுமந்தேகிப்
புல்லும்புரிசையுந்தள்ளியுள்புகுகின்றதையன்றே. (ருஅ)

மறுகும்பலபொருளாவணமணிவீதியுமன்றுஞ்
சிறுகுங்கணமதமாநிரைசேருந்தெருவும்போய்
முறுகுஞ்சினமொடுதெண்டிரைமூரிப்புனலுருவிக்
குறுகும்படிகண்டஞ்சினர்கொடிமாநகருள்ளார். (ருகூ)

சிலர்மைந்தரையெடுப்பார்களுஞ்சிலர்மைந்தரைக்காணு
தலமந்தழுவாழுஞ்சிலரங்கைத்தளிர்பற்றிக்
குலமங்கையர்தமைக்கொண்டெயப்போவார்களுங்குறுகுந்
தலமெங்கெனத்திகைப்பார்களுந்தமொறுகின்றாரும். (சுo)

பொன்னுள்ளனபணியுள்ளனபொருள்பேணல்செய்வாரு
மன்னுஞ்சிலபொருள்கைக்கொளமறப்பார்களுமாட
மின்னுங்கொடிநெடுமாளிகைமேலேறுகின்றாரு
மிந்நன்னகர்துயர்மூழ்குதற்கேதேதுவென்பாரும். (சுக)

நேற்றும்பரிநரியாயினநெடுமாநகரெங்கு
மூற்றஞ்செய்தவென்பார்களுமொருகாலமுமிந்த
வாற்றின்பெருக்கிலையென்றயர்வாருங்கடலரசன்
சீற்றங்கொடுமுன்போல்வருஞ்செயலேகொலென்பாரும். (சுஉ)

நங்கோமகன்செங்கோல்பிழைத்தனனேவெனநவில்வா
ரங்கோல்வளைபங்கன்விளையாட்டோவெனவறைவா
ரிங்காரிதுதணிப்பாரெனவிசைப்பாரிதுதணிப்பான்
பொங்காலமுண்டருள்சுந்தரனலதியாரெனப்புகல்வார். (சுங)

அடுத்தாயிரங்குண்டோதரரெதிரேற்றிருந்தகல்வாய்
மடுத்தாலுமிதடங்காதெனமதிப்பாரிதுதனையு
மெடுத்தாயிரமுககங்கையினிறைவன்சடையேறக்
கொடுத்தாலலதடங்காதிதன்கொடுங்கோபமதென்பார். (சுச)

வானுறிழிநதியாயிரமுகத்தால்வருவதுபோ
லானுதெழுநீத்தந்தணியாவாறுகண்டன்பு
தானுகியசிவனன்பரையொறுக்குந்தறுகண்ணர்
போனூர்தமதகத்தேயுளபொருள்பேணுதல்கருதா. (சுரு)

---

(ருஅ) புல் என்றது - கமுகு, தெங்குமுதலியவற்றை.

(ருகூ) கண்ண-இது இடைக்குறையாய் கணவென நின்றது.

(சுச) ஆயிரமுகம் - ஆயிரந் துறைகள்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வழுதிதன்றமர்விட்டேகமதுரைநாயகன்பாலேகி
யழுதிசைபாடுந்தொண்டிலகப்படும்பாதம்போற்றித்
தொழுதுகொண்டறிவாயூறுஞ்சுகப்பெருங்கடலின்மூழ்கி
யெழுதுசித்திரம்போன்மன்னியிருந்தனர்வாதவூரர். (சுசு)

பரிநரியாக்கியபடலம் முற்றிற்று.

ஆ படலம் சுக - க்கு - திருவிருத்தம் - உகூகக.

அறுபத்தோன்றாவது,

## மண்சுமந்தபடலம்.



எழுசீரடியாசிரியவிருத்தம்.

பண்சுமந்தமறைநாடரும்பொருள்பதஞ்சுமந்தமுடியார்மனம்
புண்சுமந்ததுயர்தீரவந்தபரிநரிகளாயடவிபோனபின்
விண்சுமந்தசுரநதியெனப்பெருகுவித்தவையையிதுவிடையவன்
மண்சுமந்துதிருமேனிமேலடிவடுச்சுமந்தகதையோதுவாம். (க)

கருங்கடற்றிரையிடைக்கிடந்துசுழல்கலமெனக்ககனமுகடளாய்
வரும்புனற்பரவையுட்கிடந்துநகர்மறுகிபுட்கமறவேலிஞ
ஞெருங்கமைச்சரைவிளித்துநீர்கரைசுமந்தொதுக்கிவருமோதநீர்ப்
பொருங்கதத்தினையடக்குவீரெனவமைச்சருந்தொழுதுபோயினர்.

வெறித்தடக்கைமதயானைமந்திரிகள்வேறுவேறுபலகுடிகளுங்
குறித்தெடுத்தெழுதியெல்லையிட்டளவுகோல்கிடத்திவரைகீறியே
யறுத்துவிட்டுநகரெங்கணும்பறையறைந்தழைத்துவிடுமொளெலாஞ்
செறித்துவிட்டவரவர்க்களந்தபடிசெய்மினென்றுவருவித்தனர். ()

மண்டொடுங்கருவிகூடையாளருமரஞ்சுமந்துவருவார்களும்
விண்டொடும்படிநிமிர்ந்துவண்டுபடுவிரிபசுந்தழைபலாலமுங்
கொண்டதிர்த்துவருவாரும்வேறுபலகோடிகூடியகுழாமுநீர் [ர்.
மொண்டருந்தவரு மேகசாலமெனவருபுனற்கரையின்மொய்த்தன

(உ) பரவை - பரப்பு. (ங) பறையறைந்து என்றது - இயற்றுவோன் றொழிலுக்கு ஏவுவானும் வினைமுதலாதலின்.

(ச) பலாலம்—வைக்கோல். மேகசாலம் - மேகபடலம்.

இட்டுவார்பரிநிறுத்துவாரரவுருட்டுவாரடிகிடத்துவா
ரிட்டுவார்தழைநிரப்புவார்விளியெழுப்புவார்பறையிரட்டுவார்
வெட்டுவார்மணலெடுத்துவார்செலவெருட்டுவார்கடிதுதுடுமெனக்
கொட்டுவார்கரைபரப்புவாருவகைகூருவார்குரவைகுழறுவார். (ரு)

கட்டுவார்கரை யுடைப்பநீர்கடுகல் கண்டுநெஞ்சது கலங்குவார், மட்டிலாதமுனி வென்னையன்னையினி யாறுகென்றெதிர் வணங்குவார், கொட்டுவார்மண லுடைப்படங்கமகிழ் கொள்ளுவார்குரவைதுள்ளுவா, ரெட்டுமாதிரமு மெட்டவாயொலி யெழுப்புவார்பறையிரட்டுவார். (சு)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

இந்நிலையூரிலுள்ளார்யாவர்க்குங்கூலியாளர்
துன்னிமுன்னளந்தவெல்லைத்தொழின்முறைமூண்டுசெய்வா
ரந்நிலைநகரின்றென்கீழ்த்திசையுளாளளவிலாண்டு
மன்னியநரைமூதாட்டியொருத்திபேர்வந்தியென்பாள். (எ)

செவியுணவானவேதசிரப்பொருளுணர்ந்துசெந்தீ
யவியுணவூட்டுமீசனன்பரினுற்றநோற்ற
தவநிறைபேறுதுய்ப்பாடாயிலார்க்கன்னையொப்பாள்
சுவையுறுபிட்டுவிற்றுண்டொழிலினுடமியளாவாள். (அ)

வைகலுமவித்தசெவ்விப்பிட்டினைமருங்குநான்கு
கைகளாய்முளைத்தமுக்கட்கரும்பினையரும்புமூரற்
செய்கதிர்முகத்தாநந்தத்தேறலையாலவாயெம்
மையனையகத்தானேக்கியன்பினலருத்துவிற்பாள். (கூ)

வளைந்தமெய்யுடையவந்தமாதவநரைமூதாட்டிக்
களந்தபங்கடைப்பான்கூலியாள்கிடையாமலாற்றத்
தளர்ந்தினியென்னேமன்னன்றண்டிக்கினென்செய்கேனென்
றுளந்தடுமாறிக்கூடலுடையநாயகனையுன்னு. (கo)

பிட்டுவிற்றுண்டுவாழும்பேதையேனிடும்பையென்ப
தெட்டுணையேனுமின்றியிரவியெங்கெழுகென்றிந்நாண்
மட்டுநின்னருளாலிங்குவைகினேர்கின்றுவந்து
விட்டதோரிடையூறையமீனவனுணையாலே. (கக)

---

(ரு) பரிநிறுத்தல்-குதிரைமரங்களைநிறுத்தல். அரவுருட்டல்-பாம்புபோல வைக்கோலாலுருட்டுதல். (சு) மாதிரம் - திசை.

(கக) எழுகென்று என்றதில் - எழுக என்னும் வியங்கோளீறுதொக்கது.

துணையின் றிமக்க ளின்றித் தமரின்றிச் சுற்றமாரும்
பணையின் றியேன் றுகொள்வார் பிறரின் றிப்பற்றுக்கோடாம்
புணையின் றித்துன்பத்தாழ்ந் துபுலம்புறும் பாவியேற்கின்
றிணையின் றியிந்தத் துன்பமெய்துவதற னோவெந்தாய். (கஉ)

தேவர்க்குமரியனுகுந்தேவனேயன்பராவார்
யாவர்க்குமெளியனுகுமீசனேவேந்தனுணைக்
காவற்செங்கோலார்சீற்றங்கடுகுமுன் கூலியாளா
யேவற்செய்வாரைக்காணேனேழையேனினியென்செய்கேன். ()

கூலியாள்வருவதுண்டோவென் றுதன் கொங்கைமுற்றத்
தாலிபோற்கண்ணீர்சோர்வாள்குறித்துமுன் பருத்தும்பிட்டை
வேலைநீர்ஞாலங்காணமிசைந்தவரிடும்பைதீர்ப்பான்
பாலினேர்மொழியாள்பாகமறைத்தருட்படிவங்கொள்வான். (கச)

குறட்குநீரருத்திவையைக்குடிஞையாயொழுகுங்கங்கை
யறற்குழல்பிரிவிஞற்ரு தன்பிஞலவளைக்காண்பான்
மறக்கயனெடுங்கணுளைவஞ்சித்துவடிவமாறிப்
புறப்படுவானைப்போலப்போதுவான்போதமூர்த்தி. (கரு)

கொச்சகக்கலிப்பா.

அழுக்கடைந்தபழந்துணியொன் றரைக்கசைத்துவிழுத்தொண்டர்
குழுக்கடந்தவிண்டைநிகர்சுமையடைமேற்கூடைகவிழ்த்
தெழுக்கடந்துதிசைகடந்திட்டிணைகடந்ததிருத்தோண்மேன்
மழுக்கடைந்துவிளங்கியவாய்மண்டொடுதிணபடையேந்தி. (கசு)

திடங்காதல்கொண்டறவோர்திருவேள்விதருமமுது
மிடங்காவல்கொண்டுறைவாளருத்தமுதுமினிதுண்டு
மடங்காதபசியினர்போலன்னைமுலைப்பாலருந்த
மடங்காதபெருவேட்கைமகவுபோற்புறப்பட்டார். (கஎ)

ஆலுமறைச்சிரமுடியாரடிக்கமலநிலஞ்சூடக்
கூலிகொடுத்தென்வேலைகொள்வாருண்டோவென்றென்
ருலமறைத்திருமொழிபோலுரைபரப்பிக்கலுழ்கண்ணீர்
வேலையிடைப்படிந்தயர்வாள்வீதியிடத்தணைகின்ருர். (கஅ)

---

(கச) ஆலி-மழைத்துளி. (கரு) போதம்-ஞானம்.

(கசு) இண்டை - கண்ணிமாலை. (கஎ) வேள்விதரு மமுது- அவியுணவு.

தந்தைதாய்பிறரின் றிவருகின் றதனிக்கூலி
மைந்தனூர்வாய்மலருங்குரல்கேட்டுவந்தியுந்தன்
சிந்தையாகுலமிழந் துநல்கூர்ந்தார்செல்வமகத்
தந்தபோதெழுமகிழ்ச்சிதலைக்கொள்ளப்புறம்போந்தாள். (கக)

அன்னை யெனத்தன்பாலின்னருள்சுரந் துவருகாளை
தன்னையழைத்தெனக்களந்தகரையடைத்துத்தருவாயோ
வென்னவிசைத்தனளாகவடைக்கின்றேனெனக்கன்னை
பின்னையதற்கிடுங்கூலியாதென்றான்பெருமுதியாள். (உஉ)

பிட்டிடுவேனுனக்கென்றாளதற்கிசைந்துபெரும்பசியாற்
சுட்டிடநான்மிகமெலிந்தேன்சுவைப்பிட்டிலுதிர்ந்தவெலா
மிட்டிடுவாயதுமுந்தத்தின்றுநாணிளைப்பாறிக்
கட்டிடுவேனின்னுடையகரையென்றான்கரையில்லான். (உக)

தெள்ளியடுசிற்றுண்டிசிக்கடைந்தபொதிநீக்கி
யள்ளியெடுத்தருந்தப்பாவென்றிட்டாளரைக்கசைத்த
புள்ளியுடைத்துகினீத்தான்புறத்தானைவிரித்தேந்தி
யொள்ளியதென்றவளன்புடன்கூட்டியமுதுசெய்தான். (உஉ)

அன்னைமுலைத்தீம்பாலினரியசுவைத்திறந்தந்தத்
தென்னவனுயுலகாண்டதிருவாலவாயுடைய
மன்னர்பிரான்றனக்கேயாமென்றென்றுவாய்மலர்ந்து
சென்னியசைத்தமுதுசெய்தார்தீவாய்நஞ்சமுதுசெய்தார். (உங)

தந்தையொடுதாயின்றித்தனிக்கூலியாளாக
வந்தவெனக்கொருதாயாயருள்சுரந்துமாறுத
விந்தவிளைப்பொழித்தனையேயினிவேலைத்தலைச்சென்றுன்
சிந்தைகளிப்பெழவேலை செய்வேனென்றிசைத்தெழுந்தார். (உச)

தந்திவாய்மருப்பிடறிவருங்குடிஞைத்தடங்கரையில்
வந்தியான்வந்தியாளென்றேட்டில்வரைவித்துப்
புந்தியாலுரையாலுற்பொருளினுலளப்பரிய
வந்திவான்மதிச்சடையார்கரையடைப்பாராயினர். (உரு)

வெட்டுவார்மண்ணைமுடிமேல்வைப்பார்பாரமெனக்
கொட்டுவார்குறைத்தெடுத்துக்கொடுபோவார்சுமடுவிழத்
தட்டுவார்சுமையிறக்கியெடுத்ததனைத்தலைபடியக்
கட்டுவாருடன்சுமந்துகொடுபோவார்கரைசொரிவார். (உசு)

(உக) கரையில்லார் என்றதில் கரை - அளவு.
(உஉ) சிக்கம் - உறி. இது ஈறுதொக்குநின்றது.

இவ்வண்ணமிவரொருகாலிருகான்மண்சுமந்திளைத்துக்
கைவ்வண்ணமலரகன்றக்கதிர்முடிமேல்வடுவெழுந்த
மைவ்வண்ணனறியாதமலரடிசெம்புனல்சுரந்து
செவ்வண்ணம்படைப்பவொருசெழுந்தருவின்மருங்கணைந்தார். ()

தருமேவுமலைமகளுஞ்சலமகளுமறியாமற்
றிருமேனிமுழுதுநிலமகடீண்டித்திளைப்பெய்தக்
குருமேவுமதிமுடியைக்கூடையணைமேற்கிடத்தி
வருமேருவனையார்தம்வடிவுணர்ந்துதுயில்கின்றார். (உஅ)

அத்தருவேயாலநெடுந்தருவாகவலைபுரட்டித்
தத்திவரும்புனலடைப்பார்சநகாதிமுழுதுணர்ந்த
மெய்த்தவராய்க்கண்களிப்பமெய்யுணர்ச்சிமோனமயச்
சுத்தவுருத்தெளிவிப்பாரெனத்துயிலுந்துயிலுணர்ந்தார். (உகூ)

ஆடுவார்சாமமெனத்தித்திக்குமமுதவிசைப்
பாடுவார்நகைசெய்வார்தொழில்செய்வார்பராக்கடையக்
கோடுவார்மணல்குவிப்பார்குதிப்பார்தூளெழவடிபாய்ந்
தோடுவாருடன்மீள்வாருன்மத்தரெனவிருப்பார். (௩௦)

வேலையினலறவருந்தியிளைத்தார்போன்மெய்வேர்வை
காலமிசைமூச்செறிந்துவாயொலியாற்காற்றழைத்துச்
சாலநெடும்பசியினர்போற்றளர்ந்தடியாளிடும்பிட்டின்
மேலடைந்தவிருப்பினராய்மீண்டுமவள்பாலணைவார். (௩க)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

இடும்பைநோய்வெள்ளநீந்தியின்பநீர்வெள்ளத்தாழ்ந்த
கொடும்புறமுதியாண்முன்போய்க்கூறுவார்கோலுக்கேற
விடம்படுகரைகளெல்லாமடைபடுகின்றவின்னங்
கடும்பசியுடையேனன்னேபிட்டிடுகடிதிதென்றார். (௩உ)

ஆங்கவளப்போதட்டசிற்றுணவளித்தாளையன்
வாங்கியங்கையுநாவுங்கனலெழவாயிற்பெய்து

(உஎ) செழுந்தரு என்றது - கொன்றைவிருட்சத்தை இதனை "நிறங்கிளர் கொன்றை நீழனிரைமண லணையதாக" என்னும் வாதவூரடிகள் புராணத்திற் காண்க.

(௩௦) கோடு — நீர்க்கரை. கோட்டுஎன்பது - கோடு எனதொகுத்தற்பெற்றது. அமுதம் — விட்டவாகுபெயராய் இனிமை மேல்நின்றது.

பாங்கிருகொடிறுமொற்றிப்பதமுறப்பருகிக்கொண்டு
நீங்கிமுன்போலப்போந்துநெடுங்கரையடைக்கலுற்றார். (௩௩)

பிட்டுவாய்மிதப்பவுண்பார்பெருவலியுடையார்போல
வெட்டுவாரெடுத்தமண்ணைக்கொண்டுபோய்வேற்றுப்பங்கிற்
கொட்டுவாருடைப்புமாறுங்கொள்கைகண்டார்த்துத்திண்டோ
டட்டுவாரயனின்றாரைத்தழுவுவார்களிப்புத்தாங்கி. (௩௪)

எடுத்தமண்கூடையோடுமிடறிவீழ்வார்போலாற்றின்
மடுத்திடவீழ்வர்நீந்திவல்லைபோய்க்கூடைதள்ளி
யெடுத்தகன்கரைமேலேறியடித்தடித்தீரம்போக்கித்
தொடுத்தகட்டவிழ்ப்பர்மீளத்துன்னுவர்தொடுவர்மண்ணை. (௩௫)

கொட்டுமண்சுமந்துசெல்வர்கூடையையுடைப்பில்வீழத்
தட்டுவரெடுப்பார்போலத்தாவிவீழ்ந்தலையிலோட
விட்டொருமரத்தைப்பற்றிமிதப்பர்திண்கரையிலேற
முட்டுவர்சுழியிலாழ்வர்சேட்சென்றுமுளைப்பர்மீள்வர். (௩௬)

கொட்டினைக்கழலப்பார்ப்பர்கோப்பர்கோலிடையாப்பிட்டுத்
தட்டுவருயிர்ப்புவீங்கித்தள்ளநின்றிளைப்பர்கச்சிற்
பிட்டினைநுகர்வர்வேலைவினைகெடப்பிறர்க்குமள்ளி
யிட்டுமாறோச்சநோக்கிநகைப்பர்கையிரண்டுந்தாங்கி. (௩௭)

வானத்தின்மண்ணிற்பெண்ணின்மைந்தரிற்பொருளிலாசை
தானற்றுத்தமையுநீத்துத்தத்துவமுணர்ந்தயோகர்
ஞானக்கண்கொண்டேயன்றிநாடருஞ்சோதிமண்ணோ
ரூனக்கண்கொண்டுங்காணவுடன்விளையாடல்செய்வான். (௩௮)

அருளினாலுலகமெல்லாமாக்கியுமளித்துநீத்தும்
பெருவிளையாடல்செய்யும்பிறைமுடிப்பெருமானிங்கு
னொருவிளையாடல்செய்யவோச்சுகோற்கையராகி
யருகுநின்றேவல்கொள்வாரடைகரைநோக்கப்புக்கார். (௩௯)

நெட்டலையொதுங்கியோடநிவப்புறவரைபோலிட்டுக்
கட்டியகரைகளெல்லாங்கண்டுகண்டொப்புநோக்கி

---

(௩௫) மண்கூடை - உருபும்பயனுந்தொக்க இரண்டாம் வேற்றுமைத்தொகைநிலைத்தொடராதலால். "சாதி குழூஉப்பரண்" என்னுஞ்சூத்திரத்தில், பிறஎன்ற மிகையால் நிலைமொழி யீறுதிரியாதுநின்றது. (௩௭) மாறுஒச்சஎன்றது - ஆளோட்டிகள்பிரம்பாற் புடைத்தோட்டுதலை. (௩௮) தமையுநீத்து என்றது-தற்போத மொழித்தமையை. தத்துவம் - உண்மைநிலை.

யட்டமேசெல்வார்திங்களாயிரந்தொழுதாள்பேரால்
விட்டபங்கடைபடாமைகண்டனர்வெருளிமூண்டார். (௪0)

வந்திக்குக்கூலியாளாய்வந்தவன்யாரென்றோடிக்
கந்தர்ப்பனென்னநேர்நின்றகாளையைநோக்கியேடா
வந்தப்பங்குள்ளவெல்லாமடைபட்டதெவனீயின்ன
மிந்தப்பங்கடையாய்வாளாதிருத்தியாறம்பீயென்றார். (௪௧)

வேறுரையாதுதம்மையுணர்ந்தவர்வீறுதோன்ற
வீறிலாநிறுமாப்பெய்தியிருந்தனநாகமேலிட்
டாறுவந்தடுத்தபங்கிலடைகரைகல்லிச்செல்ல
மாறுகொண்டோச்சவஞ்சிமயங்கினார்வலியகோலார். (௪௨)

பித்தனோவிவன்றானென்பாரல்லதுபேய்கோட்பட்ட
மத்தனோவிவன்றானென்பார்வந்தியையலைப்பான்வந்த
வெத்தனோவிவன்றானென்பாரிந்திரசாலங்காட்டுஞ்
சித்தனோவிவன்றானென்பாராரென்றுந்தெளியோமென்பார். (௪௩)

பாடல்விஞ்சையனோவென்பார்பண்ணினாற்பாணிக்கேற
வாடல்விஞ்சையனோவென்பாரரும்பெறற்செல்வத்தாழ்ந்து
வாடியமகனோவென்பாரிசைபடவாழ்ந்துகெட்ட
வேடவிழ்தாரினாருள்யார்மகனிவன்கொலென்பார். (௪௪)

கரும்பனும்விரும்பநின்றகட்டழகுடையனென்பா
ரரும்பெறலிவன்றான்கூலிக்காட்செய்ததெவனோவென்பா
ரிரும்பெருங்குரவரற்றதமியனோவென்பார்வேலை
புரிந்தவனல்லனென்பாரதுமேனிபுகலுமென்பார். (௪௫)

கூலியுங்கொண்டான்றானேகணக்கிலுங்குறிக்கச்சொன்னான்
வேலையுஞ்செய்யானின்சொல்விளம்பினுங்கேளான்கல்லின்
பாலறைமூளையேயாகிப்பராமுகம்பண்ணிநின்றா
னேலநாமிதனைவேந்தற்குணர்த்துதுமென்றுபோனார். (௪௬)

தலைமகனறிமுன்றாழ்ந்துசாற்றுவாரடிகேளிந்த
வலைபுனனகரார்தத்தம்பங்கெலாமளந்தவாற்றான்

---

(௪0) அட்டம் - குறுக்கு. இது திசைச்சொல். திங்களாயிரந் தொழுதா ளென்றது - ஆயுள்வரை யறைசெய்யும்நூலோருளொரு சாரார் பத்துமாதம் ஓராயுளாகக் கோடலின்.

(௪௧) கந்தர்ப்பன் - மன்மதன். (௪௨) வலியகோலார்என்றது- வேலைவாங்கும் அதிகாரிகளை. (௪௫) இரும்பெருங் குரவர் - தாய் தந்தையர்; இரும்பெரு - ஒருபொருட் பன்மொழி.

மலையினும்வலியவாகச்சுமந்தனர்வளைந்தசிற்றாண்
விலைநரையாட்டிதன்பங்கடைத்திலள்வென்றிவேலோய். (௪௭)

வேளையும்வனப்பினாலேவென்றவனொருவன்வந்தி
யாளெனவங்கேவந்துபதிந்தனனரசர்செல்வக்
காளைபோற்களிப்பன்பாடுமாடுவன்காலம்போக்கி
நீளுவன்வேலையொன்றுநெஞ்சினுநினைதல்செய்யான். (௪௮)

ஆண்டகைவனப்பைநோக்கியடிக்கவுங்கில்லேமஞ்சி
யீண்டினேமென்றுகூறவிம்மெனவமைச்சரோடும்
பாண்டியனெழுந்துநாம்போய்ப்பங்கடைபட்டவெல்லாங்
காண்டுமென்றெறிநீர்வையைக்குடிஞையங்கரையைச்சார்ந்தான்.()

எடுத்ததிண்கரைகளெல்லாமிறைமகனுள்ளத்தோகை
மடுத்தனனோக்கிச்செல்வான்வந்திபங்கடைப்பாரின்றி
யடுத்தநோன்கரையுங்கல்லியழித்தெழுவெள்ளநோக்கிக்
கடுத்துநின்றெங்குற்றானிக்கரைசுமந்தடைப்பானென்றான். (௫௦)

வள்ளறன்கோபங்கண்டமாறுகோற்கையரஞ்சித்
தள்ளருஞ்சினத்தராகித்தடக்கைதொட்டீர்த்துப்பற்றி
யுள்ளொடுபுறங்கீழ்மேலாயுயிர்தொறுமொளித்துநின்ற
கள்வனையிவன்றான்வந்தியாளெனக்காட்டிநின்றார். (௫௧)

கண்டனன்கனன்றுவேந்தன்கையிற்பொற்பிரம்புவாங்கி
யண்டமுமளவிலாதவுயிர்களுமாகமாகக்
கொண்டவன்முதுகில்வீசிப்புடைத்தனன்கூடையோடு
மண்டனையுடைப்பிற்கொட்டிமறைந்தனனிறைந்தசோதி. (௫௨)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

பாண்டியன் முதுகிற்பட்டது செழியன்பன்னியருடம்பினிற்
பட்ட, தாண்டகையமைச்சர்மேனிமேற்பட்டதரசிளங்குமரர்மேற்ப
ட்ட, தீண்டியகழற்கால்வீரர்மேற்பட்டிவுளிமேற்பட்டதுபருமம்,
பூண்டவெங்கரிமேற்பட்ட தெவ்வுயிர்க்கும்போதன்மேற்பட்டவத்த
ழும்பு. (௫௩)

பரிதியுமதியும்பாம்புமைங்கோளும்பன்னிறம்படைத்தநாண்மீனு
மிருநிலம்புனல்காலெரிகடுங்கனல் வானென்னுமைம்பூதமுங்காரு
சுருதியுமாறுசமயவானவருஞ்சுரர்களுமுனிவருந்தொண்டின் [ஞ்
மருவியமுனிவர்கணங்களும்பட்டமதுரைநாயகனடித்தழும்பு. (௫௪)

(௪௭) சுமத்தினரென்றவிடத்து - சுமந்தனரென்றும்பாடம்.
(௪௯) கில் எதிர்மறைப்பொருளையுணர்த்துமோரிடைச்சொல்.
(௫௦) சுமந்து - முதனிலைதிரியாதுவந்த பிறவினைவினையெச்சம்.

வானவர்மனிதர்நாகர்புள்விலங்குமாசுணஞ்சிதலெறும்பாதி
யானபல்சரமுமலைமரங்கொடிபுல்லாதியாமசரமும்பட்ட
வூனடைகருவும்பட்டனதழும்போடுதித்தனவுயிரிலோவியமுந்
தானடிபட்டசராசரசடங்கடமக்குயிராயினேன்றழும்பு. (ருரு)

துண்ணெனமாயோன் விழித்தனன்கமலச்சோதியும்யாதென
வியந்தான், விண்ணவர்பெருமான்வெருவினன்வானோர்வேறுளார்
மெய்ப்பனிப் படைந்தார், வண்ணயாழியக்கர் சித்தர்சாரணர்தம்
வடுப்படாவுடம்பினிற்பட்ட, புண்ணையாதென்று தத்தமிற்காட்டி
மயங்கினர் புகுந்தவாறறியார். (ருசு)

ஏகநாயக னெவ்வுயிர்களுந் தானேயென்பதுமன்பினுக்கெளி
ய, ஞகியதிறனுங் காட்டுவானடிபட் டங்கொரு கூடைமண்கொட்
டி, வேகநீர்சுருங்கக் கரையினையுயர்த்திமிகுத்துடன்வேலைநீத்தொ
ளித்துப், போகியவாறு கண்டுகோறகையர்போய்நரையாட்டியைத்
தொடர்ந்தார். (ருள)

வன்புதாழ்மனத்தோர் வலிசெயவின்ன மன்னனுன்மறுக்க
முண்டேயோ, முன்புபோகியவாளென்செய்தானென்னுய் முடியு
மோவினியெனத்திரங்கி, யென்புபோல்வெளுத்த குழலினள்கூட
லிறைவனை நோக்கிநின்றிரங்க. வன்புதேஞகவருத்தியசிற்றா ணமு
துசெய்தருளினரருளால். (ருஅ)

கண்ணுதனந்திகணத்தவர்விசும்பிக்கதிர்விடுதிப்பியவிமான
மண்ணிடயிழச்சியன்னைவாவென்றுவல்லைவைத்தமரர்பூமழையும்
கண்ணிறைகீதவோதையும்வேதப்பனுவலுந்துந்துபியைந்தும்
விண்ணிடைநிமிரச்சிவனருளடைந்தோர்மேவியசிவபுரத்துய்த்தார்.

மன்றுடையானேர்கூடைமண்கொட்டி மறைந்ததுமடைகரை
நீண்ட, குன்றெனவுயர்ந்ததன்மையுந்தம்மேற்கோலடிபட்டதுநோ
க்கி, யென்றன்மேற்பட்டதென்றன்மேற்பட்டதிதுவெனவதுவெ
னவமைச்சர், நின்றவருணர்த்துநிகழ்ச்சியும்பிறர்பாணிகழ்ச்சிபுநோ
க்கியந்நிருபன். (சு0)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

உள்ளத்தாசங்கைபூண்டாஞகமண்ணுடைப்பிற்கொட்டிக்
கள்ளத்தாராகிப்போனர்ககனத்தாராகிச்சேனை

---

(ருரு) ஓவியமுந் தானடிபட்ட என்றது - சித்திரங்களுயிரில்ல
னவாயினும் உடம்போடு கூடிநிற்றலின். (ருசு) வண்ணம்யாழ் என்
றது - பெருவண்ணமுதலிய பாடற்றெழிலமைந்த வீணையை.

(ருக) நந்திகணத்தவர்என்றது – நந்திநாயனரா லேவப்பட்ட
சிவகணத்தவரை. (சுக) ஆசங்கை - ஐயம். ககனத்தாராகிஎன்றது-
திருவுருவந்தோற்று து நின்றனராதலின்.

வெள்ளத்தார்பிறருங்கேட்பமீனவற்குவகைவெள்ளங்
கொள்ளத்தாமழைத்தாகாயவாணியாற்கூறலுற்றார். (சுக)

மறத்தாறுகடந்தசெங்கோல்வழுதிநின்பொருள்களெல்லா
மறத்தாற்றினீட்டப்பட்டவனையவைபுனிதமான
திறத்தாலேநமக்குநம்மைச்சேர்ந்தவர்தமக்குமார்வ
முறத்தாவில்வாதவூரனுதவினனதலாலே. (சுஉ)

அனையனைமறுக்கஞ்செய்தாயரும்பிணப்புலவுத்தீவாய்
வனநரித்திரளையீட்டிவாம்பரியாக்கித்தந்தேங்
கனையிருட்கங்குற்போதிற்கழிந்தனபின்னுந்தண்ட
வினையர்பால்விடுத்துத்துன்பம்விளைத்தனையதுபொறுத்தேம். (சுங)

வரும்புனல்பெருகப்பார்த்தேம்வந்திகைப்பிட்டுவாங்கிப்
பருகிவந்தாளாய்மாறுபட்டனமண்போகட்டுப்
பொருகரையுயரச்செய்துபோகியவ்வன்னைபோல்வான்
பெருகியவிடும்பைதீர்த்தெம்பேருலகடையச்செய்தேம். (சுச)

இத்தனையெல்லாஞ்செய்ததிவன்பொருட்டிந்தவேத
வித்தகன்றன்மையொன்றுமறிந்திலைவேட்கையென்பால்
வைத்துனக்கிம்மையோடுமறுமையுந்தேடித்தந்த
வுத்தமன்றொடைசந்தாதிப்புறப்பற்றுமொழிந்தநீரான். (சுரு)

நிறையுடையிவனையிச்சைவழியினனிறுத்தியான்ற
மறைவழிநின்றுநீதிமன்னவர்க்களந்தவாழ்நாள்
குறைபடாதானுச்செல்வவாரியுட்குளித்துவாழ்கென்
றிறையவன்மொழிந்தமாற்றமிருசெவிநிரப்பத்தென்னன். (சுசு)

அச்சமுற்றுவகைபீர்ப்பவதிசயவெள்ளத்தாழ்ந்து
பொச்சமிலன்பரெங்குற்றாரெனப்புகுந்துதேடி
நச்சரவசைத்தகூடலுநயகன்கோயினண்ணி
விச்சையிலிருக்கின்றாரைக்கண்டுபோயிறைஞ்சிவீழ்ந்தான். (சுஎ)

தொல்லைநீருலகமாண்டுசுடுதுயர்நரகத்தாழ
வல்லவென்னறிவுக்கேற்றவண்ணமேசெய்தேனீரென்
னெல்லைதீர்தவப்பேறாய்வந்திகபரவேதுவாகி
யல்லல்வெம்பிறவிநோய்க்குமருமருந்தானீரையா. (சுஅ)

---

(சுஉ) மறம் - பாவம். (சுச) மாறு - அடி. (சுசு) மறைவழி என்றது - வேதத்தின்வழிநூலாகிய மநுநூன்முறையை.

(சுஎ) பொச்சம் - பொய். விச்சை - சிவஞானம்.

செறுத்துநானும்மையெண்ணுதிழைத்தவித்தீங்குதன்னைப்
பொறுத்துநீர்முன்போலுங்கள்புவியெலாங்காவல்பூண்டு
மறுத்துடைத்தாள்வதாகென்றிரந்தனன்மண்ணிலாசை
வெறுத்தவர்நகையுட்டோன்றவேந்தனைநோக்கிச்சொல்வார். (௬௯)

பாய்திரைபுரளுமுந்நீர்ப்படுகடலுலகுக்கெல்லா
மாயிரஞ்செங்கணுன்போலரசுவீற்றிருப்பீருங்க
ணயகனருளிச்செய்தவண்ணமேநயந்துசெய்வீர்
தூயவரன்றேநுங்கள்சூழல்சேர்ந்தொழுகவல்லார். (௭௦)

உம்மைநானடுத்தநீராலுலகியல்வேதநீதி
செம்மையாலிரண்டுநன்றாய்த்தெளிந்ததுதெளிந்தநீரான்
மெய்ம்மையாஞ்சித்தசுத்திவிளைந்ததுவிளைந்தநீராற்
பொய்ம்மைவானவரினீங்கிப்போந்ததுசிவன்பாற்பத்தி. (௭௧)

வந்தவிப்பத்தியாலேமாயையின்விருத்தியான
பந்தமாம்பவஞ்சவாழ்க்கைவிளைவினுட்பட்டதுன்பம்
வெந்ததுகருணையாகிமெய்யுணர்வின்பந்தன்னைத்
தந்ததுபாதஞ்சூட்டித்தன்மயமாக்கிற்றன்றே. (௭௨)

சச்சிதானந்தமாமத்தனிப்பரசிவனேதன்ன
திச்சையாலகிலமெல்லாம்படைத்தளித்திறுசெய்யும்
விச்சைவானவரைத்தந்தமேலவன்பிறவித்துன்பத்
தச்சமுற்றடைந்தோர்க்காணுவின்பவீளளிக்குமன்னோன். (௭௩)

மந்தரங்கயிலைமேருப்பருப்பதம்வாரணாசி
யிந்தநல்லிடங்கடோறுமிகபரபோகம்யார்க்குந்
தந்தருள்செய்தெம்போல்வார்தம்மனம்புறம்போகாமற்
சிந்தனைதிருத்திஞானத்திருவுருவாகிமன்னும். (௭௪)

ஒப்பவர்மிக்கோர்வேறற்றொருவனுயெங்குந்தங்கு
மப்பரஞ்சுடரேயிந்தவாலவாயுறையுஞ்சோதி
கைப்படிகனிபோன்மேனட்கண்ணுவனுதியோர்க்கு
மெய்ப்பொருள்விளங்கித்தோன்றுவேதத்தைவிருத்திசெய்தான். ()

(௭௨) பவஞ்சம் - பிரபஞ்சமென்பதன்திரிபு. (௭௩) இச்சை என்றது – ஆன்மாக்களுக்குமலபாகம் வருவித்தற்பொருட்டு வைத்தநேயம். வானவர் என்றது-பிரமன், விஷ்ணு, உருத்திரனென்னுமிவர்களை. (௭௪) பருப்பதம்-ஸ்ரீபர்வதம். வாரணாசி-காசி.

(௭௫) வேறற்று என்றது-உயிர்கடோறும்விரவிநிற்றலை.

தன்னருளான ஞானத்தமனியமாருந்தில்லைப்
பொன்னகரிடத்திலென்னைப்போகெனப்பணித்தானீரு
மன்னதற்கிசைந்நீராகென்றாலவாயடிகடம்மைப்
பன்னருந்துதியாலேத்திவிடைகொடுபணிந்துபோவார். (எசு)

தன்றொடக்கறுத்தநாதன்றாட்டொடக்குண்டுபோவார்
பின்றொடர்ந்தரசன்செல்லப்பெருந்தவர்நின்மினின்மி
னென்றனர்செலவுங்கூப்பிடெல்லைசென்றணியனாகிச்
சென்றடிபணிந்தத்தென்னன்விடைகொடுதிரும்பினானே. (எஎ)

துறந்தவர்போகமீண்டுதொன்னகரடைந்துதென்ன
னறந்தருபங்கினுரையடைந்துதான்பிரம்புநீட்டப்
புறந்தருகருணைவெள்ளம்பூரிப்பத்தாழ்ந்துநெஞ்ச
நிறைந்ததுவாய்கொள்ளாமனின்றெதிர்துதிப்பதானான். (எஅ)

கொச்சகக்கலிப்பா.

அடையாளம்படவொருவனடித்தகொடுஞ்சிலைத்தழும்புந்
தொடையாகவொருதொண்டன்றொடுத்தெறிந்தகல்லும்போற்
கடையானேன்வெகுண்டடித்தகைப்பிரம்புமுலகமெல்லா
முடையானேபொறுத்ததோவுன்னருமைத்திருமேனி. (எகூ)

கடியேறுமலர்மகன்மான்முதலாயகடவுளரும்
படியேழுமளவிறந்தபல்லுயிருநீயேயோ
முடியேறமண்சுமந்தாய்முதுகுதனிலடிபட்ட
தடியேனும்பட்டேனின்றிருமேனியானேனே. (அ0)

கைக்குமருந்தின்சுவைபின்காட்டுமாறெனவினைக்கும்
பொய்க்குமருங்கலனாகிமண்ணுண்டுபுலைநரகந்
துய்க்குமருந்துயர்களைவான்மாறாய்நின்றுணையடிக்கே
யுய்க்குமருந்தவரிவரென்றறியாமையொறுத்தேனே. (அக)

பாதியுமையுருவானபரமேட்டியெனக்கிம்மை
யூதியமும்பரகதியுமுறுதியெனவிளைவிக்கும்
நீதியினான்மந்திரியாய்நின்னருளாயவதரித்த
வேதியரையறியாதேவெறுத்துநானொறுத்தேனே. (அஉ)

மாயாவிருத்தியினான்மாழாந்துமாதவரை
யாயாதொருத்தேனருநரகத்தாழ்ந்துநான்

---

(எஎ) தொடக்கு - பாசபந்தம். (அக) வினை - கன்ம மலம். பொய் - மாயாமலம். (அங) மாழாந்து - மயங்கி.

வீயாமலின் றனையார்மெய்ம்மையெலாந்தேற்றியவென்
ருயானுய்தண்ணளிக்கென் றமியேன்செய்கைம்மாறே. (அங)

நின்னையுணர்ந்தவர்வேதநெறிவேள்விசெய் தூட்டு
மின்னமுதிற்கழிசுவைத்தோவிவளிடும்பிட்டெவ்வுயிர்க்கு
மன்னவனேசெந் துவர்வாய்மலர்ந்தமுதுசெய்தனையா
லன்னையிலாவுனக்கிவளோரன்னையாய்வந்தாளோ. (அச)

அன் றுசிறுத்தொண்டரிடும்பிள்ளைக்கறியமுது
மென் றுசுவைதெரிந்தவேடனிட்டவூனும்போ
னன் றுநரையாட்டியிடுபிட்டுநயந்தருந்தி
யென் றுமடியார்க்கெளிவந்தாயெந்தாயே. (அரு)

நரியாவும்பரியாக்கிநடத்தியும்பரமன் றித்
தரியாயான்றருதுகிலைத்திருமுடிமேற்றரித்துமறைக்
கரியாய்நீயென்பாசமறுக்கவருந்திருமேனி
தெரியாதேபரியானைதிளைத்திறுமாந்திருந்தேனே. (அசு)

விண்சுமக்கும்புள்ளாய்விலங்காய்ச்சுழன்றுமனம்
புண்சுமக்குஞ்சூழ்ச்சிவலியுடையபுத்தேளிர்
மண்சுமக்குமள்ளராய்வந்திலரேவந்தக்காற்
பண்சுமக்குஞ்சொல்லிபங்கன்பாதமுடிகாண்பாரே. (அஎ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

என்றுபலமுறையாலே துதித்தடைந்தோர்க் கன்பரிவரிவரைத் தேறி, னன்றுமிகப்பரபோகம் வீடுபெறவெளிதென்று நகைத்தா ர்வேந்த, னன்றுதிருப்பணிபூசை பிறவுநனிவளம்பெருக்கி யழகார் வெள்ளி, மன்றுடையானடிக்கன்பு முயிர்க்கன்புஞ்சுரந்தொழுகி வாழுநாளில். (அஅ)

முன்புபெருந்துறையார்க்கு மடியார்க்குமறந்தெரிந்த முறையா லீட்டுந், தன்பொருள்போயுடன்பலவாய்த் தழைத்துவருபயனே போற்றலையுவாவி, னன்பனிகான்மதிகண்ட வுவரியெனப்பலசெல் வ நாளுமோங்க, வின்புறுவான்சகநாத னெனுமகப்பெற்றின்பத்து ளின்பத்தாழ்ந்தான். (அகூ)

அம்மகனைமுடிசூட்டி யரசாக்கிவாதவூ ரமைச்சர்சார்பான், மெய்ம்மைநெறிவிளங்கியிரு வினையொப்பிலான்கருணை விளைந்தநோக்

---

(அசு) அம்பரம் - ஆகாயம். (அஎ) புள்ளாய் விலங்காய் என்றது - அன்னமும்பன்றியுமாய்த்தேடிய பிரமவிஷ்ணுக்களை.
(கூ0) வினையொப்பு - கன்மசத்துவம்.

கான், மும்மைமலத்தொடர்நீந்திச் சிவானந்தக்கடற்படிந்து முக்க ண்மூர்த்தி, செம்மலர்த்தாணிழலடைந்தான் றிறலரிமர்த்தனனெ ன்னுந் தென்பார்வேந்தன். (கூ0)

மேற்படி - வேறு.

வழுதியால்விடுக்கப்பட்டவாதவூர்முனிகடம்மைப்
பழுதிலாப்பாடல்கொள்வார்பதிபலபணிந்துபோந்து
முழுதுணர்மறையோர்வேள்விப்புகையண்டமுடிகீண்டேழ்
யெழுவடவரைபோற்றோன்றுமெழிற்றில்லைமூதூர்சேர்ந்தார். (கூக)

மேற்படி - வேறு.

வீதிதொறும்வீழ்ந்துவீழ்ந்திறைஞ்சியாலயத்தெய்திமெய்மையான
சோதியறிவானந்தச்சுடருருவாஞ்சிவகங்கைதோய்ந்துமேனி
பாதிபகிர்ந்தவள்காணப்பரானந்தத்தனிக்கூத்துப்பயிலாநிற்கு
மாதியருளாகியவம்பலங்கண்டுகொந்தநேரயம்போற்சார்ந்தார். (கூஉ)

அன்றுகுருந் தடியிலடி வைத்தாண்டகோலமே யருளானந்த, மன்றினிடத் தெதிர்தோன்றி வாவென்பாரெனமூரன் மணிவாய் தோற்றி, நின்றதனிப்பெருங்கூத்தர் நிலைகண்டாரஞ்சலித்தார்நில மேல்வீழ்ந்தா, ரொன்றறியபுலன்கரண வழிநீந்திமெய்யன்பினுருவ மானார். (கூஙு)

வண்டுபோற்புண்டரிக மலரில்விளைசிவானந்த மதுவைவாரி, யுண்டுவாசகம்பாடி யாடியழல்வெண்ணெயெனவுருகுந்தொண்டர், விண்டுழா வியகுடுமி மன்றுடையான் றிருவாக்கான்மிகுந்தநேயங், கொண்டுபோய்க் குணதிசையி லருந்தவர்வாழ் தபோவனத்தைக் குறுகியங்கண். (கூச)

குறிகுணங்கள் கடந்ததனிக்கூத்தனுருவெழுத்தைந்தின்றொ டுவாளோச்சிப், பொறிகரணக்காடெறிந்துவீசிமனப்புலந்திருத்திப்

(கூஉ) வீதிதொறும்வீழ்ந்து வீழ்ந்திறைஞ்சிஎன்றது-திருவீதி களிலுள்ள அந்தணர் மூவாயிரவரும் சிவகணநாதர்களாதலின்.

(கூச) புண்டரிக மலர் என்றது - (பிரமாண்டமே பிரமபுரமெ னவும் இப்பிரமாண்டத்தி னுள்ளிருக்குந் தில்லைவனம் புண்டரிக மெனவும், சாந்தோக்கியவுபநிடதங்கூறலின்) தில்லைவனத்தை. வா சகம்பாடி என்றது-கண்டபத்து என்னுந்திருப்பதிகமருளிச்செய் தமையை. (கூரு) கூத்தனுரு வெழுத்தைந்து என்றதை—“ஆடும் படிகேணல்லம்பலத் தானையனே, நாடுர் திருவடியிலேநகரம், கூடு ம் - மகரமுதரம் வளர்தோள்சிகரம், பகருமுகம் வாமுடியபார்” என்னும் உண்மைவிளக்கச் செய்யுளானுணர்க. அருந்தாதருந்தல்- ஆன்மபோதவழிநின்று நுகர்தல்.

புனிதஞ்செய்து, நிறைசிவமாம் விதைவிதைத்துப் பசுபோதங்க ளைந்தருணன் னீர்கால்பாய, வறிவுருவாய் விளைந்ததனிப் பரானந் தவமுதருந்தா தருந்திநின்றார். (சுரு)

மானிரையுங்குயவரியும்வந்தொருங்குநின்றுரிஞ்சமயங்குகானத் தானிரைகன்றெனவிரங்கி மோந்துநக்கவானந்தவருட்கண்ணீரை க், கானிரைபுள்ளினம்பருகக் கருணைநெடுங்கடலிருக்குங் காட்சி போலப், பானிறவெண்ணீற்றன்ப ரசைவின்றிச் சிவயோகம் பயி லுநாளில். (சுசு)

புத்தர்சிலரிலங்கையினும்போந்துமூவாயிரமெய்ப்போதவேத
வித்தகரோடேழுநாள்வரையறுத்துச்சூளொட்டிவிவாதஞ்செய்வா
ரித்தகையநாளேழில்யாமிவரைவேறுமெனுமெண்ணம்பூண்ட
சித்தமுடையவராகவவர்கனவிலெழுந்தருளித்தேவதேவர். (சுஎ)

வாதவூரனைவிடுத்துவாதுசெய்வீரெனவிழித்துமறையோரந்தப்
போதவேதியரைவனம்புகுந்தழைத்தாரப்போதுபொதுவிலாடும்
வேதநாயகன்பணித்தவழிநின்றாரெதிர்மறுப்பமீண்டுபோந்து
காதராகுலமூழ்கியிருந்தார்முத்தழனிமிர்த்துக்கலியைக்காய்வார்.()

பின்னுமவர்கனவின்கண் மன்றுணடம்பிரியாதபெருமான்வந் து, முன்னவனைப்பெருந்துறையிற் குருந்தடியிலாட்கொண்ட மு றையினனு, மின்னிசைவண்டமிழ் மணிபோற் பாடுங்காரணத்தா லும் யாமன்றிட்ட, மன்னியபேர்மாணிக்கவாசகனென் றழைமின் கள்வருவனென்றான். (சுகூ)

உறக்கமொழிந்தறவோர்சென் றவர்நாமமொழிந்தழைப்பவுண ர்ந்துநாத, னறக்கருணையிதுவோவென்றவரோடெழுந்துநகரடை ந்துமண்ணுந், துறக்கமுநீத்தருவருத்தார்மன்றாடுந் துணைக்கமலந் தொழுது மீண்டோர், நிறக்கனகமண்டபத்திற் புக்கிருந்தாரறிஞர் குழா நெருங்கிச்சூழ. (௧௦௦)

மேற்படி - வேறு.

தத்துநீர்க்கலத்திற்போந்தசீவரப்போர்வைதாங்கும்
புத்தரைவேறுவைத்துப்புகன்மினும்மிறையுநூலு
மத்தலைநின்றேரெய்துங்கதியுமென்றாழ்ந்தகேள்வி
மெய்த்தவநெறிமாணிக்கவாசகர்வினவினரே. (௧௦௧)

(சுசு) குயவரி - அரிவாள்போலும் வரிகளையுடையபுலி. இது உவமைத்தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகை நி லைத்தொடர். (சுஅ) காதரம் – அச்சம். ஆகுலம் – துன்பம். வேத நாயகன் பணித்த வழிநின்றார் என்றது-தில்லையிலிருக்கவென மு ன்னருளியவழி நிற்பவராதலின். (௧௦௧) சீவரம் – கடுக்காயிற் றோ ய்த்த போர்வை ; (மரவுரி என்பதுமொன்று.)

கனவினுநீறுகாணுக்கைதவர்காட்சியானு
மனவனுமானத்தானும்வாசகப்பெருமான்றம்மை
வினவியமூன்றுமுத்தேசாதியின்விதித்தார்வேத
மனையவர்கேட்டமூன்றுமநுவாதஞ்செய்துட்கொள்ளா. (௧0௨)

இன்றிவர்க்கநுமானுதியெடுப்பதென்னென்றுகாட்சி
யொன்றுகொண்டவர்கடாமேயுடம்படன்மறுத்தார்காட்சி
யன்றியேதின்மையாலேயநுமானவளவையாலு
நின்றதன்றுங்கோளுதிநிறுத்தியமூன்றுமென்றார். (௧0௩)

பொன்றுதன்முத்தியென்பார்பூசுரர்பிரானைநோக்கி
யின்றமைக்காட்சியென்றால்வென்றனமென்றீரானு
னன்றுநுங்கடவுடன்னையளவையானுட்டியெம்மை
வென்றிடுமென்றாரைந்தும்வென்றவர்முறுவல்செய்யா. (௧0௪)

பிறவியந்தகர்க்குவெய்யோன்பேரொளிகாட்டலாமோ
மறைகளாலளவைதன்னுற்றேவரான்மனத்தால்வாக்கா
லறிவருஞ்சோதியெங்கோனவன்றிருநீற்றுத்தொண்டின்
குறிவழியன்றிக்காணுங்கொள்கையானல்லனென்றார். (௧0௫)

தேற்றமில்லாதாருங்கள்சிவனுக்குந்திருநீற்றுக்குந்
தோற்றமெப்படிதிட்டாந்தஞ்சொல்லுமினென்றார்தூயோர்
வேற்றுமையறாமின்னேவிளக்குதுமதனைநீங்க
டோற்றபிமனுக்குத்தண்டம்யாதுகொல்சொன்மினென்றார். ()

செக்குரலிடையிட்டெம்மைத்திரிப்பதுதண்டமென்னு
வெக்கராம்புத்தர்தாமேயிசைந்தனரெரிவாய்நாகங்
கொக்கிறகணிந்தாரன்பருலர்ந்தகோமயத்தைவாங்கிச்
செக்கரந்தழல்வாய்ப்பெய்துசிவந்திடவெதுப்பிவாங்கி. (௧0௭)

இவ்வண்ணமிருக்குமெங்களிறைவண்ணவடிவுமந்தச்
செவ்வண்ணமேனிபூத்ததிருவெண்ணீறதுவுமென்னு
மெய்வ்வண்ணமுணர்ந்தவேதவித்தகரவைமுன்காட்ட
வுய்வ்வண்ணமறியாமூடருள்ளமுமுயிருந்தோற்றார். (௧0௮)

---

(௧0௨) காட்சியானு மனவநுமானத்தானும் என்றது - புத்தசமயிகளுக்கு அளவைகளுள்காட்சியும் அநுமானமுமே யளவைகளாதலின். (அளவை-அளந்தறியப்படுவது) உத்தேசாதியின் என்றது-உத்தேசம், இலக்கணம் சோதனைகளை. (௧0௩) எது என்றது-சகச எது, காரிய எது, அநுபலத்தி எதுக்களை. (௧0௪) அளவையால் என்றது-காட்சியளவையை. (௧0௬) தோற்றம்-இயைபு.

(௧0௭) எக்கர்-பொருதற்றொழிலுடையவர்.

இங்கிவர்தோற்றவண்ணங்கேட்டவரிறப்பதின்பந்
தங்குவீடென்றுதேற்றுஞ்சமயத்திலாழ்ந்தவாத்திக்
கொங்கிவர்தாரான்மூங்கைக்குயிற்பெடையெனத்தானீன்ற
மங்கையைக்கொண்டுதில்லைமல்லன்மாநகரில்வந்தான். (க0கூ)

யாவரேயாகவின்றிங்கென்மகண்மூங்கைதீர்த்தோ
ராவரேவென்றேரென்றுனுற்றவுமானம்பூண்டு
சாவதேமுத்தியென்பார்மணிமுதன்மூன்றுந்தங்க
டேவரேயென்றென்றுள்கிச்செய்யவுந்தீராதாக. (கக0)

அந்தணர்பெருமான்முன்போயரசன்றன்மகளைப்போகட்
டிந்தநோய்நீரேதீர்க்கவேண்டுமென்றிரந்தானையன்
சுந்தரநாதன்மன்றுளாடியதுணைத்தாடன்னைச்
சிந்தைசெய்தருட்கணேக்காற்றிருந்திழையவளைநோக்கா. (ககக)

வேறுவேறிறைவன்கீர்த்திவினுவுரையாகப்பாடி
யீறிலானன்பர்கேட்கவிறைமொழிகொடுத்துமூங்கை
மாறினுள்வளவன்கன்னிமடவரல்வளவன்கண்டு
தேறினுன்சிவனேயெல்லாத்தேவர்க்குந்தேவனென்னு. (ககஉ)

பின்பரவாரம்பூண்டபிரானருள்விளையப்பாடு
மன்பரைமுனிவர்மூவாயிரவரையடியிற்றாழ்ந்து
முன்பவர்சொன்னவாறேமூர்க்கரைத்தடிந்துமன்று
ளின்பரைநடங்கண்டேத்தியிறைமகன்சைவனுனன். (ககங)

மாசறுபணிபோற்பன்னுள்வாசகமாலைசாத்திப்
பூசனைசெய்துபன்னுட்புண்ணியமன்றுளாடு
மீசனதடிக்கீழெய்தியீறிலாவறிவானந்த
தேசொடுகலந்துநின்றார்சிவனருள்விளக்கவந்தார். (ககச)

மண்சுமந்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் எ0 - க்கு - திருவிருத்தம் - ௩0கரு.

---

(க0கூ) இறப்பதின்பம்தங்குவீடு என்று தேற்றுசமயம் என்றது-பஞ்சகந்தங்கெடுதலே இன்பமிக்க முத்திநிலையென்று தேற்றிய புத்தசமயத்தை. (கக0) மூங்கை - ஊமை.

(ககஉ) இறைமொழி - விடை. மூர்க்கர் - அறிவிலிக ளாகிய புத்தர்கள்.

உ

சிவமயம்.

அறுபத்திரண்டாவது,

# பாண்டியன்சுரந்தீர்த்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வானலமுதமதிமுடிமேன்மதுரைப்பெருமான்மண்சுமந்து
தேனலமுதவாசகரைக்கதியில்விடுத்ததிறமிதுமேற்
பானன்மணிவாய்க்கவுணியனைவிடுத்துச்சமணர்படிற்றொழுகுங்
கூனல்வழுதிசுரந்தணித்தாட்கொண்டகொள்கைகூறுவாம். (க)

வாகுவலத்தான்சகநாதவழுதிவேந்தன்மகன்வீர
வாகுவவன்சேய்விக்கிரமவாகுவவன்சேய்பராக்கிரம
வாகுவனையான்மகன்சுரதமாறனனையான்றிருமைந்தன்
வாகுவலத்தான்மறங்கடிந்துமண்ணாளுங்குங்குமத்தென்னன். (உ)

அன்னான்குமரன்கருப்புரபாண்டியனுமவன்சேய்காருணிய
மன்னுமவன்றன்மகன்புருடோத்தமனுமவன்றன்மகனாகு
மின்னார்மௌலிச்சத்துருசாதனபாண்டியனும்விறல்வேந்த [ன்.
னின்னான்மகன்கூன்பாண்டியனு மிவன்றோள்வலியாலிசைமிக்கா

திண்டோள்வலியாற்குடநாடர்செம்மறனையுமாரலங்கல்
வண்டோலிடுதாரிரவிகுலமருமான்றனையுமலைந்துபுறங்
கண்டோர்குடைக்கீழ்நிலமூன்றுங்காவல்புரிந்துகோலோச்சிப்
புண்டோய்குருதிமறக்கன்னிப்புகழ்வேல்வழுதிநிகழ்நாளில். (ச)

விண்டுழாவுங்கைம்மாவும்வெறுக்கைக்குவையுமணிக்குவையும்
வண்டுவீழுந்தாரளகவல்லியாயமொடுநெல்கிக்
கண்டுகூடற்கோமகனைக்காலில்வீழ்ந்துதன்னாடு
பண்டுபோலக்கைக்கொண்டுபோனான்றேனார்பணந்தாரான். (ரு)

சென்னிக்கோனுந்தானீன்றதிலதப்பிடியையுலகமெலா
மின்னிக்கோதில்புகழொளிபால்விளக்குஞ்சைவமணிவிளக்கைக்

(க) அல்-இருள். பால்நல்மணிவாய்-பால் மணங்கமழும் மிகவு மழகிய திருவாய். கவுணியன்என்றது - கவுணியர் கோத்திரோற்ப வராகிய ஆளுடையபிள்ளையாரை. கூனல்வழுதி-கூன்பாண்டியன்.

(உ) வாகுவலம்-புயவலி. (ச) குடம்-மேற்கு. குடநாடர் செம்மல் என்றது—சேரனை. இரவிகுலமருமான் - சோழன். மறக்கன்னி-வீரவிலக்குமி. (ரு) ஆயம்-மகளிர்கூட்டம். (சு) திலதப்பிடி-இது இல் பொருளுவமையில்வந்த ஆகுபெயர். வன்னிக்கோ - தீக்கடவுள்.

கன்னிக்கோலமங்கையருக்கரசிதன்னைக்கௌரியர்க்கு
வன்னிக்கோமுன்மணம்புணர்த்திவாங்கினான்றன்வளநாடு. (சு)

மேற்படி - வேறு.

வளவர்கோன்செழியன்கற்பின்மங்கையர்க்கரசியாருக்
களவறுநிதியஞ்செம்பொற்கலிங்கமுமணியும்போகம்
விளைநிலமனையவாயவெள்ளமும்பிறவுந்தென்ன
னுளமகிழ்சிறப்பவேந்தர்வரிசையாலுதவிப்பின்னர். (எ)

கோதறுகுணத்தின்மிக்ககுலச்சிறையென்பானங்கோர்
மேதகுகேள்வியானைவிடுத்தனன்மீண்டுதென்னன்
காதலியோடுமாயக்கடவுள்செம்பதுமக்கோயின்
மாதரைமணந்துசெல்வான்போல்வந்துமதுரைசேர்ந்தான். (அ)

மலர்மகண்மார்பன்பொன்னிமன்னவன்பயந்ததெய்வக்
குலமகளுடனேவந்தகுலச்சிறைகுணனுங்கேள்வித்
தலைமையுமதியுமிக்கதன்மையுந்தூக்கிநோக்கி
நலமலியமைச்சனுக்கினானிலம்புரக்குநாளில். (கூ)

வல்வினைவலியான்மெய்யில்வலியகூனடைந்தான்போலக்
கொல்வினையிலராய்வஞ்சங்கொண்டுழன்றுடுத்தபாசம்
வெல்வினையறியாநக்கன்வேடர்சொல்வலையிற்பட்டு
நல்வினையுதவாத்தென்னனான்மறையொழுக்கநீத்தான். (க0)

போதவிழ்தாரானக்கர்புன்னெறியொழுக்கம்பூண்டோ
னாதலிற்கன்னிநாடுமமணிருண்மூழ்கிப்பூதி
சாதனநெறியாஞ்சைவசமயமுமுத்திச்செல்வ
மாதவநெறியுங்குன்றமறைந்ததுவேதநீதி. (கக)

பறிபடுதலையும்பாயினுடுக்கையும்பாசிப்பல்லு
முறிபொதிகலனுமத்திநாத்தியென்றுரைக்குநாவு
மறிவழியுளம்போ ணற்றழிந்தவெற்றரையுங்கொண்டு
குறிகெடுமணங்குசூழ்ந்தாங்கமணிறைகொண்டதெங்கும். (கஉ)

---

(எ) பொற்கலிங்கம்-பீதாம்பரம். (அ) மாயக்கடவுள் என்றது-திருமாலை. செம்பதுமக்கோயின் மாதர் - செந்தாமரை யென்னுங் கோயிலில் வசிக்குந் திருமகள்.

(கூ) மலர்மகண் மார்பன்-திருமாலையொத்த பாண்டியன்.

(க0) வெல்வினை என்றதில், வினை-சற்கருமங்களை யுணர்த்தி நின்றது. நக்கன்-அருகன். மாதவநெறி என்றது-சிவபுண்ணியவழியை. (கக) வேதநீதி-சிவாகமம்.

(கஉ) கலன் - கமண்டலம். அத்திநாத்தி - சுவர்க்கம், நரகம், கருத்தா இம்மூன்று பொருள்களையு மில்லையெனல். குறிகெடு மணங்கு - பொலிவழிந்த மூதேவி.

அருந்தமிழ்ப்பாண்டிவேந்தர்க்குறுதியாவாக்கஞ்செய்யு
மருந்தினிற்சிறந்தகற்பின்மங்கையர்க்கரசியாரும்
பெருந்தகையமைச்சுநீரிற்குழைத்தன்றிப்பிறங்கப்பேறு
தருந்திருநீறிடாராய்ச்சிவனடிச்சார்பினின்றார். (கங)

பொய்யுரைபிதற்றுமிந்தப்புன்சமண்களைகட்டீண்டு
மெய்யுரைவேதநீதிவியன்பயிர்தலைச்செய்தோங்கச்
செய்யுநரெவரேயென்றுசிந்தையிற்கவலைபூண்டு
னையுநராகிக்கூடனுதனைவணங்கப்போனார். (கச)

பேதுற்றமுனிவர்க்கன்றுபெருமறைவிளக்கஞ்செய்த
வேதத்தின்பொருளேயிந்தவெஞ்சமண்வலையிற்பட்டுப்
போதத்தையிழந்தவேந்தன்புந்தியைமீட்டிப்போதுன்
பாதத்திலடிமைகொள்வாயென்றடிபணியுமெல்லை. (கரு)

வேதியனொருவன்கண்டிவேடமும்பூண்டோன்மெய்யிற்
பூதியன்புண்டரீகபுரத்தினும்போந்தோன்கூட
லாதியைப்பணிவான்வந்தான்மங்கையர்க்கரசியாரு
நீதியவமைச்சரேறுநேர்படவவனைநோக்கா. (கசு)

எங்கிருந்தந்தணீர்வந்தனிரென்றாராய்ந்த
புங்கவன்சென்னிபொன்னிநாட்டினும்போந்தேனென்றா
னங்கவரங்குண்டானபுதுமையாதறைதிரென்றார்
சங்கரற்கன்புபூண்டோனுண்டென்றுசாற்றுகின்றான். (கஎ)

ஏழிசைமறைவல்லாளர்சிவபாதவிதயரென்னக்
காழியிலொருவருள்ளார்காரமண்கங்குல்சீப்ப
வாழியிலிரவியென்னவொருமகவளித்தியென்ன
வூழியிலொருவன்றாளையுள்கிநோற்றெழுகிநின்றார். (கஅ)

ஆயமாதவர்பாலீசனருளினுலுலகமுய்யச்
சேயிளங்கதிர்போல்வந்தான்செல்வனுக்கிரண்டாண்டெல்லை
போயபின்மூன்றுமாண்டிற்பொருகடன்மிதந்ததோணி
நாயகன்பிராட்டியோடும்விடையின்மேனடந்துநங்கை. (ககூ)

---

(கங) மருந்து - அமுது. குழைத்தன்றிப் பிறங்கப்பேறுதருந் திருநீரிடாராய் என்றது—பாண்டியனுக்கஞ்சி விதிப்படி நீரிற்குழைத்தணியாமல் மறைவுபட அணிந்துவந்தன ரென்பதை விளக்கி நின்றது.

(கஅ) ஊழியிலொருவன் என்றது - மஹாப்பிரளய காலத்தில், சராசரப்பொருள்களை. தன்சத்தியா லொடுக்கி நின்றவராதலின். காழி-இது காளி என்னும் நாகம் பூசித்ததால்வந்த காரணப்பெயர்.

(ககூ) பொருகடன்மிதந்த தோணி என்றது - மகாப்பிரளயகாலத்தில் சீகாழி தோணியாக மிதந்தமையை.

திருமுலைப்பாலினோடுஞானமுந்திரட்டிச்செம்பொற்
குருமணிவள்ளத்தேந்திக்கொடுப்பவப்பாலன்வாங்கிப்
பருகியெண்ணிறந்தவேதாகமமிவைபற்றிச்சார்வாய்
விரிகலைபிறவுமோதாதுணர்ந்தனன்விளைந்தஞானம். (௨0)

நம்பந்தமறுப்போன்ஞானநாயகன்ஞானத்தோடு
சம்பந்தஞ்செய்யுஞானசம்பந்தனுகநாவில்
வம்பந்தமுலைமெய்ஞ்ஞானவாணியுங்காணிகொள்ள
வம்பந்தமறைகளெல்லாமருந்தமிழாகக்கூறும். (௨௧)

கரும்பினிற்கோதுநீத்துச்சாறடுகட்டியேபோல்
வரம்பிலாமறையின்மாண்டபொருளெலாமாணத்தெள்ளிச்
சுரும்பிவர்கொன்றைவேணிப்பிரானிடந்தோறும்போகி
விரும்பியதென்சொன்மாலைசிவமணம்விளையச்சாத்தி. (௨௨)

பருமுத்தமுலையாள்பங்கனருளினற்பசும்பொற்றாளந்
திருமுத்தின்சிவிகைகாளந்தெண்முத்தின்பந்தரின்ன
நிருமித்தவகைபோற்பெற்றுப்பாலையைநெய்தலாக்கிப்
பொருமுத்தநதிசூழ்வீழிப்பொற்படிக்காசுபெற்று. (௨௩)

அருமறைவணங்குங்கோயிற்கதவினையடைக்கப்பாடிப்
பரனுறைபதிகளெங்குந்தொழுதனர்பாடிப்பாடி
வருமவர்நுங்கணுட்டுவணங்கவும்வருவரென்னுத்
தருமநூலணிந்ததெய்வத்தாபதன்சாற்றலோடும். (௨௪)

கற்பலர்கொடியனாருந்தென்னவன்கண்போல்வாரு
மற்புரையமண்பேயோட்டியன்றுதங்கோமான்மெய்யிற்
பொற்புறுநீறுகண்டுபூதிசாதனத்தாலெய்துஞ்
சிற்பரவீடுகண்டமகிழ்ச்சியுட்டிளைத்தோரானார். (௨௫)

தங்கள்பேர்தீட்டியோலைவிண்ணப்பஞ்சண்பைநாடர்
புங்கவர்க்குணர்த்தவந்தப்பூசுரன்கையிற்போக்கி

---

(௨0) சார்வாய்விரிகலை என்றது—காருடம், தக்கிணமுதலிய ஆகமாங்கங்களும், சிகிச்சை, கற்பசூத்திர முதலியவேதாங்கங்களும், வழிநூலாகிய உபாகமம், மிருதி, புராணங்களுமாகியவற்றை.

(௨௧) வம்பு அந்தம்-கச்சினழகு. அம் பந்தம் என்றதில்-பந்தம் வேதத்திேைருறுப்பு. (௨௪) மறைவணங்குங்கோயில் - வேதாரண்யம். தருமநூல் - வேதம்விதித்த தருமநெறியாற்பூண்ட உபவீதம்.

(௨௫) கொடியனார் என்றது-மங்கையர்க்கரசியாரை. தென்னவன் கண்போல்வார் - குலச்சிறையார். சிற்பரவீடு-ஞானமயமாகியபரமுத்தி. (௨௬) சண்பைநாடர் - ஆளுடைய பிள்ளையார். சண்பை-சீகாழி.

மங்கையர்க்கரசியாருமரசற்குமருந்தன்னானு
மங்கயற்கண்ணிகோனைப்பணிந்துதம்மகத்திற்புக்கார். (உசு)

பண்படுவேதச்செல்வன்வல்லைபோய்ப்பழனவேலிச்
சண்பையர்பிரானைக்கண்டுபெறியுண்டுதலைகளெல்லாம்
புண்படத்திரியுங்கையர்பொய்யிருள்கடந்தார்தந்த
வெண்படுமோலைகாட்டிப்பாசுரமெடுத்துச்சொன்னான் (உஎ)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

வெங்குருவேந்த ரடிபணிந்தடியேன் குலச்சிறைவிளம்பும் விண்ணப்ப, மிங்கெழுந்தருளிச் சமணிருளொதுக்கி யெம்மிறைமகற்குநீறளித்துப், பொங்கிரும்பணைசூழ் தென்றமிழ்நாட்டைப் பூதிசாதனவழிநிறுத்தி, யெங்களைக்காக்க வென்றபாசுரங்கேட் டெழுந்தனர் கவுணியர்க்கிறைவர். (உஅ)

ஆதகாதிதுவென் றேதுவார்நாவுக்கரையர்சீர்சிறியவரவரோ, பாதகமஞ்சார் தம்மொடும்பன்னாட் பழகியவெனையவர்செய்த, வேதனையளந்து கூறுவதென்னை விடுகதில்லம்மவோவுமக்கிப், போதுநாள்கோள்கள் வலியிலவென்னப் புகலியர்வேந்தரும் புகல்வார்.

எந்தையெம்பெருமா னருளிலார்போல வின்னணமிசைப்பதெனவர்செய், வெந்தவேதனையி னுய்ந்தசீர்நாள்கோள் விலங்குபுள்ளவுணர்பேய்பூத, மந்தமில்பலவு மம்மையோடப்ப னணையானடப்பனவவர்நஞ், சிந்தையேகோயில் கொண்டுவீற்றிருப்பத் தீங்கிழையாவென வெழுந்தார். (ஙo)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மாமுரசொலிப்பச்சங்கங்காகளம்வாய்விட்டேங்கச்
சாமரைபனிப்பமுத்தின்பந்தரிற்றரளத்தெய்வக்
காமருசிவிகைமேற்கொண்டமணிருள்கமுவுன்சோதி
யாமெனநெறிக்கொண்டீசனிடந்தொறுமடைந்துபாடி. (ஙக)

செம்பியனுடுநீங்கித்தென்னவனுடுநண்ணி
வெம்பியசுரமுமுல்லைப்புறவமுமேகவில்லைத்
தும்பிகைநீட்டிவாங்குமலைகளுந்துறந்துபாகத்
தம்பிகையுடையான்கூடனகர்ப்புறனணுகச்செல்வார். (ஙஉ)

புண்ணியநீற்றுத்தொண்டர்குழாத்தினுட்புகலிவேந்தர்
நண்ணியசிவிகைமீதுநகைவிடுதரளப்பந்தர்

(உஅ) வெங்குரு - சீகாழி.

கண்ணியதோற்றந்தீம்பாற்கடல்வயிறுதித்துந்தீர்ந்து
விண்ணியன்முழுவெண்டிங்கள்விளக்கமேயொத்ததன்றே. (டுடு)

தேம்படுகுமுதச்செவ்வாய்ச்சிரபுரச்செல்வர்முன்னம்
போம்பரிசனத்தார்தம்மிற்பொன்னெடுஞ்சின்னமார்ப்போர்
தாம்பரசமயசிங்கஞ்சமணிருள்கிழியப்பானு
வாம்படிவந்தானென்றென்றூர்த்தெழுமோசைகேளா. (டுச)

நின்றுண்டுதிரியுங்கையரெதிர்வந்துநீவிர்நுங்கள்
கொன்றறஞ்சொன்னதேவைக்கும்பிடவந்தாலிந்த
வென்றிகொள்சின்னமென்கொல்வீறென்கொல்யாரைவென்றீ
ரென்றனர்தடுத்தாரென்றுமீறிலானடியார்தம்மை. (டுரு)

மாமதமொழுகச்செல்லுந்திண்டிறன்மத்தவேழந்
தாமரைநூலாற்கட்டத்தடைபடவற்றேகொற்றக்
காமனைமுனிந்தார்மைந்தர்கயவர்தந்தடையைநீத்துக்
கோமணிமாடமூதூரடைந்தரன்கோயில்புக்கார். (டுசு)

கைம்மலைசாபந்தீர்த்தகருணையங்கடலைத்தாழ்ந்து
மும்முறைவளைந்துஞானமுகிழ்முலைப்பாலினோடு
செம்மணிவள்ளத்தீந்ததிருவொடுந்தொழுதானந்த
மெய்ம்மயவெள்ளத்தாழ்ந்துநின்றனர்வேதச்செல்வர். (டுஎ)

மறைவழிநின்றுநின்னைவந்திசெய்துய்யமாட்டா
நிறைவழிவஞ்சநெஞ்சச்சமணரைநெறிகளெல்லாஞ்
சிறைபடவாதுசெய்யத்திருவுள்ளஞ்செய்திகூற்றைக்
குறைபடவுதைத்தோயென்றுகுறித்துரைபதிகம்பாடி. (டுஅ)

வேண்டுகொண்டருளைப்பெற்றுமீளுமப்போதுகண்டு
மூண்டவைம்பொறியும்வென்றவாகீசமுனிகளென்ன
வாண்டுளாரொருவர்வேண்டவவர்திருமடத்திலன்பு
பூண்டெழுகாதலோடும்போயினர்புகலிவேந்தர். (டுகூ)

---

(டுடு) தீர்ந்து-நீங்கி. விளக்கம் - தோற்றம்.

(டுச) பரசமய சிங்கம் - பரசமயகோளரி. (டுரு) 'கொன்றறஞ் சொன்னதேவை என்றது - உயிர்களனைத்தையுங்கொன்று தருமங் கூறிய கடவுளென இழிவுபடுத்திக் கூறியபடி.

(டுசு) காமனைமுனிந்தார் மைந்தர் என்றது-சிவகுமாரராகிய இளையபிள்ளையாரே ஆளுடையபிள்ளையாராக வந்தமையின்.

(டுஎ கைம்மலை என்றது-வெள்ளையானையை. திரு என்றது உமாதேவியாரை.

(டுகூ) வாகீசமுனிகளென்றது-ஆளுடைய வரசினை.

அங்கெழுந்தருளியெல்லினமுதுசெய்திருப்பவற்றைக்
கங்குல்வாயமணர்செய்யுங்கருதருஞ்செயலுந்தங்கண்
மங்கலமரபின்வந்தாள்வருத்தமுங்காணவஞ்சிச்
செங்கதிரவன்போய்மேலைச்செழுங்கடல்வெள்ளத்தாழ்ந்தான். ()

மாறுகொளவுணர்செய்யும்வஞ்சனைக்கிடனுயொத்து
வேறறநட்புச்செய்வான்வந்தெனவிரிந்தகங்கு
லீறரமுளைத்தவான்மீனினமவர்பறித்தசென்னி
யூறுபட்டெழுந்தமொக்குளொத்தவக்கங்குலெல்லை. (சக)

கலிநிலைத்துறை.

வைதிகத்தனியிளஞ்சிறுமடங்கலேற்றடைந்த
செய்தியைத்தெரிந்தயன்மலையிடங்களிற்றிரண்ட
கைதவத்தவெண்ணுயிரங்கயவருமொருங்கே
யெய்திமுத்தமிழ்விரகர்மேற்பழித்தழலிழைத்தார். (சஉ)

மெய்யில்சிந்தையாரத்தழற்கடவுளைவிளித்தாங்
கெய்தியெம்பகையாயினேரிருக்கையையமுது
செய்துவாவெனப்பணித்தனர்சிறுவிதிமகத்துக்
கையிழந்தவன்செல்லுமோவஞ்சினன்கலங்கி. (சங)

ஈனர்தாஞ்சடத்தீயினையெடுத்தனரேகி
ஞானபோனகர்மடத்தினிற்செருகினூர்நந்தா
தானதீப்புகையெழுவதையடியவர்கண்டு
வானநாயகன்மைந்தருக்குணர்த்தினூர்வல்லை. (சச)

சிட்டர்நோக்கியத்தீயினைத்தென்றமிழ்க்கூட
லட்டமூர்த்தியையங்கிருந்தருமறைப்பதிகந்
துட்டர்பொய்யுரைமேற்கொண்டுதொன்முறைதுறந்து
விட்டவேந்தனைப்பற்றெனப்பாடினூர்விடுத்தார். (சரு)

---

(சO) மங்கலமரபின்வந்தாள் என்றது-பாண்டிமாதேவியாரை.

(சக) வான்மீன் - நட்சத்திரம். ஊறுபட்டெழுந்தமொக்குள்-புண்பட்டெழுந்த கொப்புளங்கள்.

(சஉ) கைதவம் - வஞ்சனை. பழித்தழல் - அபிசாரவேள்வி.

(சங) சிறுவிதி - தக்கன். (சச) சடத்தீ - கட்புலங்களுக்குத் தோன்றுந்தீ. ஞானபோனகர் - சிவஞானத் திருவமுதுசெய்தபிள்ளையார். (சரு) சிட்டர் - மேலானவர். தொன்முறை - தொன்றுதொட்டுவந்த மநுநூன்முறை.

அடுத்ததக்கணத்தரசனை வெப்புநோயாகித்
தொடுத்ததிட்டபல்கலன்களுந்துகளெழப்பனிநீர்
மடுத்தசாந்தமுங்கலவையுமாலையுங்கருகப்
படுத்தபாயலுஞ்சருகெழப்புரவலன்பதைத்தான். (௪௬)

வளவர்கோன்றிருமடந்தையுமந்திரரேறுந்
தளர்வடைந்துநன்மருத்துநூல்விஞ்சையர்தமைக்கூஉய்ப்
பளகில்பன்மருந்தருத்தவும்பார்வையினாலும்
விளைவதேயன்றிவெஞ்சுரந்தணிவதுகாணார். (௪௭)

சவலைநோன்புழக்திம்மையுமறுமையுஞ்சாரா
வவலமாசரைவிடுத்தனரனைவரும்பார்த்துத்
தவவலத்தினுமருந்தினுந்தணிந்திலதாகக்
கவலையெய்தினாிருந்தனர்விடிந்ததுகங்குல். (௪௮)

வட்டவாழியொன்றுடையதேர்ப்பரிதிதன்மருமான்
பெட்டகாதல்கூர்மருகனைப்பற்றியபிணிகேட்
டிட்டகாரிருளெழினியையெடுத்தெடுத்தங்கை
தொட்டுநோக்குவான்வந்தெனத்தொடுகடன்முளைத்தான். (௪௯)

வாலிதாகியசைவவான்பயிரினைவளர்ப்பான்
வேலிதாகியோரிருவரும்வேந்தனைநோக்கிக்
காலபாசமுஞ்சுடுமிநோயருமறைக்காழிப்
பாலராலன்றித்தீர்த்திடப்படாதெனப்பகர்ந்தார். (௫0)

பொய்யர்சார்பினைவிடாதவனீங்குநீர்புகன்ற
சைவர்நீறிட்டுப்பார்ப்பதுதருவதோவென்ன
வையநீயெனைத்திறத்தினாலாயினுநோய்தீர்ந்
துய்யவேண்டுமேயிதனில்யாதுறுதியென்றுரைத்தார். (௫௧)

அழைமினீண்டெனவரசனுமிசைந்தனனார்வந்
தழையுமந்திரத்தலைமகன்றனிநகரெங்கும்
விழவுதுங்கநன்மங்கலவினைகளால்விளக்கி
மழலையின்றமிழ்விரகர்தம்மடத்தில்வந்தெய்தா. (௫௨)

---

(௪௬) வெப்புநோய் - சுரநோய். (௪௭) மருத்துநூல் - ஆயுள் வேதம். பார்வை என்றது-உபசரிப்பினை.

(௪௮) சவலைநோன்பு - பயனில்லாத தவம். அவலம்-வலியின்மை. மாசு - குற்றம். (௪௯) பரிதிதன் மருமான்-சோழன். எழினி-திரை. (௫0) இருவராவார் - பாண்டிமாதேவியாரும், குலச்சிறையாரும். (௫௨) மந்திரம் - ஆலோசனை. தமிழ்விரகர் என்றது-ஓதாதே முத்தமிழிலும் பேரறிவுடையாராதலின்.

அன்றுகேள்வியாலருந்தியஞானவாரமுதை
யின்றுகண்களாலுண்டுகண்பெற்றபேறெய்திச்
சென்றிறைஞ்சினனெழுந்திருந்தீயமண்சூழ்ச்சி
வென்றசிந்தையீரென்றனர்பூந்தராய்வேந்தர். (ருஙு)

நன்றிருந்தனிரேயெனநகைமலர்த்தடந்தார்
வென்றிமீனவன்கற்பினார்தம்மையும்வினவ
வென்றுநும்மருளுடையவர்க்கெவன்குறையென்று
வொன்றுகேண்மைகூரன்பினுரிதனையுமுரைப்பார். (ருச)

கையர்மாளவுநீற்றினுற்கவுரியன்றேய
முய்வதாகவுமின்றுநும்மருளினுலொலிநீர்
வையைநாடன்மேல்வெப்புநோய்வந்ததாலதனை
யையதீர்த்திடல்வேண்டுமென்றடியில்வீழ்ந்திரந்தார். (ருரு)

இரந்தவன்பருக்கன்னதாகென்றருள்சுரந்து
பரந்தநித்திலயானமேற்பனிக்கதிர்மருமான்
சுரந்தணிப்பலென்றேகுவாஞைத்துமெய்ச்சுருதி
புரந்தளிப்பவர்பாண்டியன்கோயிலிற்புகுவார். (ருசு)

வாயிலெங்கணுந்தூபமுமங்கலவிளக்குந்
தோயகும்பமுங்கொடிகளுஞ்சுண்ணமுந்துவன்றிச்
சேயகாகளவொலிமன்னன்செவிப்புனல்சுவைப்பக்
கோயிலெய்தினூரமணர்தங்கோளரியனையார். (ருஎ)

காவலோன்மருங்கிட்டதோர்கதிர்மணித்தவிசின்
மேவினூரவர்நோக்கினன்மீனவன்றெளிந்து
வாவிதாழ்செழுந்தாமரையெனமுகமலர்ந்து
பாவியேன்பிணிதணித்தெனைப்பணிகொண்மினென்றான். (ருஅ)

புலைத்தொழிற்குவித்தாயினோர்கேட்டுளம்புழுங்கிக்
கலைத்தடங்கடனீந்தியகாவலோயுன்றன்
வலைப்புறத்துநோயிவரையுமற்றைநோயெமையுந்
தொலைத்திடப்பணியென்றனர்கைதவன்சொல்வான். (ருகு)

அனையசெய்திரென்றிசையுமுன்சமணருமசோகன்
றனைநினைந்துகைப்பீலியாற்றடவியுங்கரத்துக்

---

(ருங) பூந்தராய் - சீகாழி. (ருரு) கையர் - கீழ்மக்களாகியசமணர். (ருசு) யானம் - சிவிகை. பனிக்கதிர் - சந்திரன்.

(ருஎ) தோயம் - நீர். சேயகாகளம் - திருப்பொற் சின்னம்.

(ருகு) புலைத்தொழில்-இழிதொழில். (சுo) அசோகன்-அசோகமர நிழலில் வசிக்கும் அருகன். பீலி-மயிலிறகு.

கனைகொளாலிநீர்சிதறியுநெய்சொரிகனல்போற்
சினவிமேலிடக்கண்டனர்தீர்ந்திடக்காணார். (௬௰)

தீயர்மானமிக்குடையராய்ச்செருக்கழிந்திருப்ப
பாயகேள்வியோர்புண்ணியப்பையுணீறள்ளிக்
காயுநோயதுதணித்திடக்கருதினாரதனை
மாயநீறெனவிலக்கினார்மாயைசெய்தழிவார். (௬௧)

அண்டநாயகன்றிருமடைப்பள்ளிநீறள்ளிக்
கொண்டுவாருமென்றருமறைக்கவுணியர்கூறக்
கண்டுகோவலனேவலர்கைக்கொடுவந்தார்
வண்டுலாவுதார்வழுதிநோய்தணிப்பவர்வாங்கி. (௬௨)

மருந்துமந்திரம்யாவையுமறையுரைப்பதுவும்
பொருந்துமின்பவீடளிப்பதும்போகமும்பொருளுந்
திருந்துமாலவாயரன்றிருநீறெனச்செப்பி
யருந்துமின்னமுதனையசொற்பதிகமதறைந்து. (௬௩)

மெய்யிலிட்டனர்வருடலும்வெஞ்சுரந்துறந்த
மையில்சிந்தையோர்வெகுளியிற்றணிந்ததுவாசஞ்
செய்ததண்பனிநீர்விரைச்சந்தனந்திமிர்ந்தா
லெய்துதண்மையதாயினதிறைவலப்பாகம். (௬௪)

பொழிந்ததண்மதுத்தார்புனைபூழியர்கோனுக்
கிழிந்தசெய்கையர்கைதொடவெரியிடுசுரத்தாற்
கழிந்ததுன்பமுங்கவுணியர்கைதொடச்சுரந்தீர்ந்
தொழிந்தவின்பமுமிருவினையொத்தபோலொத்த. (௬௫)

ஐயவிச்சுரமாற்றரிதாற்றரிதென்றா
வையைநாடவன்வல்லமண்மாசுதீர்ந்தடியே
னுய்யவேண்டுமேலதனையுமடிகளேயொழித்தல்
செய்யவேண்டுமென்றிரந்தனன்சிரபுரக்கோனை. (௬௬)

பிள்ளையாரிடப்பாகமும்பண்டுபோற்பெருமான்
வெள்ளைநீறுதொட்டங்கையானீவுமுன்மேனா
ளுள்ளகூனொடுவெப்புநோயொழிந்துமீனுயர்த்த
வள்ளன்மாசறக்கடைந்தவிண்மணியெனப்பொலிந்தான். (௬௭)

---

(௬௧) பாயகேள்வியோர்-பிள்ளையார். புண்ணியப்பை - விபூதிப்பை. (௬௩) பதிகமென்றது-"மந்திரமாவதுநீறு" என்னுந்திருப்பதிகத்தை. (௬௪) மை-குற்றம். (௬௫) கழிந்த-மேலிட்ட; கழி - மிகுதி. (௬௭) உள்ளகூனொடுவென்றது - கூன் இடப்பாலுள்ளதாதலின்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அன்னதொருகாரணத்தாற் சவுந்தரியபாண்டியனென் றாகிய ன்ன, தென்னவர்கோன் கவுணியர்கோன்றிருநோக்காற் பரிசத்தா ற்றெருட்டும்வாக்காற், பொன்னடிதாழ்ந் தைந்தெழுத்து முபதே சப்பேறடைந்து பொலிவால்வஞ்சந், துன்னமணர்நெறியிகழ்ந்து தொல்வேத நெறியடைந்து தூயனானன்.

பாண்டியன்சுரந்தீர்த்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் எக - க்கு - திருவிருத்தம் - ஙகஎங.

அறுபத்துமூன்றாவது,

## சமணரைக்கழுவேற்றியபடலம்.



அறுசீரடியாசிரியவிருத்தம்.

பஞ்சவனடைந்தநோயைப்பாலறாவாயர்தீர்த்து
நஞ்சணிகண்டனீறுநல்கியவண்ணஞ்சொன்னே
மஞ்சலராகிப்பின்னும்வாதுசெய்தடங்கத்தோற்ற
வஞ்சரைக்கழுவேறிட்டவண்ணமுஞ்சிறிதுசொல்வாம். (க)

தென்னவன்றேவியாருமமைச்சருட்சிறந்தசிங்க
மன்னவன்றானுங்காழியந்தணரடியில்வீழ்ந்தெம்
மன்னவன்வெப்புங்கூனும்பாசமுமாற்றினீரே
யின்னமுமடியேம்வேண்டுங்குறைசெய்யத்தக்கதென்றார். (உ)

கன்னிநாடெங்குமிந்தக்காரமண்காடுமூடித்
துன்னினவிதனையின்னே துணித்திடல்வேண்டுமென்றா
ரன்னவராலவாயார்திருவுள்ளமறிவேனென்னா
வுன்னியமனத்தராகியொய்யெனக்கோயில்புக்கார். (ங)

அவ்விருவோருங்கூடவடைந்துபொற்கமலம்பூத்த
திவ்வியதீர்த்தந்தோய்ந்துசேணெடுங்கண்ணிபாக
னவ்வியங்கமலச்செங்கைநாதனைத்தாழ்ந்துவேந்தன்
வெவ்வியவெப்புநீத்தார்தொழுதிதுவினவுகின்றார். (ச)

---

(சூஅ) நோக்கு, பரிசம், வாக்கு என்றது - சட்சுதீட்சை, ஸ்ப ரிசதீட்சை, வாசக தீட்சைகளை. (க) பாலறாவாயர் - சிவஞானப் பாலி னறுமணங்கமழும் திருவாயினையுடைய பிள்ளையார்.

(ச) நவ்வி - மான்.

காயமேயொறுத்துநாளுங்கைதவம்பெருகநோற்கும்
பேயரையிம்மையோடுமெறுமையும்பேறற்றுரை
நீயுரைசெய்தவேதவேள்வியைநிந்தைசெய்யுந்
தீயரையொறுத்தல்செய்யத்திருவுளஞ்செய்தியென்றார். (ரு)

வெம்மதவேழங்காய்ந்தவிடையவர்விசும்பிற்சொல்வா
ரெம்மனோராவீர் நுங்கட்கிசைந்ததேயெமக்கும்வேண்டுஞ்
சம்மதமதனால்வெல்லத்தக்கவராகநீரே
யம்மதமுடையார்தோற்கத்தக்கவராகவென்றே. (சு)

எம்மொழிதேறினீர்போயிறைமகனவையத்தேறிச்
செம்மையிலாரைவாதுசெய்திர்நீரனையார்தோற்று
வெம்முனைக்கழுவிலேறிவிளிகுவரென்னக்கேட்டு
மைம்மலிகளத்தான்மைந்தர்தொழுதும்தம்மடத்திற்போனார். (எ)

இருவருமீண்டுதத்தமிருக்கையிற்போகியன்றைப்
பருவமங்ககலப்பின்னாட்பாண்டிமாதேவியாரும்
பெருமதியமைச்சரேறும்பிள்ளையார்மடத்திற்போகி
யருகரைவெல்லுஞ்சூழ்ச்சியாதெனவளந்துதேர்வார். (அ)

பேரருணிறைந்தகாழிப்பெருந்தகையுடன்போய்த்தங்கோன்
சீரவைகுறுகியீதுசெப்புவார்செய்யகோலாய்
காரமண்காடேயெங்குங்கழியவுமிடைந்தவின்ன
வேரொடுங்களைந்தாற்சைவவிளைபயிரோங்குமென்றார். (கூ)

அவ்வண்ணஞ்செய்வதேயென்றரசனுமனுச்சைசெய்யச்
செவ்வண்ணவெண்ணீற்றண்ணலனுச்சையுந்தெரிந்துதேய
முய்வண்ணமிதுவென்றங்ஙனுண்மகிழ்ந்திருந்தார்நீண்ட
பைவண்ணவாரம்பூண்டார்புகழெங்கும்பரப்பவல்லார். (கO)

கலிவிருத்தம்.

அந்தவேலையருகந்தக்கையரைக்
குந்தவேற்கட்குலமடமாதரு
மைந்தராகியமக்களுங்கண்ணழல்
சிந்தநோக்கியிகழ்ந்திவைசெப்புவார். (கக)

---

(எ) எம்மொழி என்றது - வேதாகமங்களை. விளிதல்-சாதல்.

(கO) பை வண்ண ஆரம் - படத்தையுடைய அழகிய சர்ப்பாபரணம். அனுச்சை - விடை. (கக) அருகந்தர்-அருகர்.

செழியர்கோமகன்மூழ்கியதீப்பணி
கழியமாற்றும்வலியின்றிக்கற்றிலா
மழலைவாயொருமைந்தற்குத்தோற்றுவெம்
பழிவிளைத்தீர்பகவன்றமர்க்கெலாம். (கஉ)

சாம்பராடுஞ்சமயம்புகுந்துவெம்
பாம்பணிந்தவனேபகவானென
வேம்பனுங்கள்விரதநெறியெலாஞ்
சோம்பலெய்தத்துறந்தானிகழ்ந்தரோ. (கங)

ஏதுமக்குநிலையினியென்றவப்
போதுமற்றவர்தம்மைப்புறகிட
வாதுசெய்தற்கெழுந்தனர்வஞ்சகர்
போதுமென்னத்தடுத்தனர்பூவைமார். (கச)

செல்லன்மின்கணுமக்கிதுசெவ்வியன்
றல்லல்கூரவருந்துன்பத்தாழநா
மெல்லிகண்டகனவுண்டிதனையாஞ்
சொல்லுகேமின்றுகேண்மெனச்சொல்லுவார். (கரு)

கலிநிலைத்துறை.

இடையறுதுநம்பாழியும்பள்ளியுமெங்குஞ்
சடையர்முஞ்சியர்சாம்பலர்தாங்கியசூலப்
படையர்தீவிழிப்புலவுவாய்ப்பாய்பெரும்புலித்தோ
லுடையராய்ச்சிலர்வந்துவந்துலாவுதல்கண்டேம். (கசு)

கன்னியிற்றுறவன்னங்கள்கணவனிற்றுறவின்
மன்னுமாரியாங்கனைகணூல்வாங்குமக்குசைக
ளென்னமூவகைப்பெண்டவப்பள்ளிகளெல்லாஞ்
சின்னவெண்பிறைக்கோட்டுமாசிதைக்கவுங்கண்டேம். (கஎ)

---

(கஉ) பகவன் என்றது - அருகக்கடவுளை. (கச) நிலை-ஆதரவு.
(கரு) செவ்வி - காலம். எல்லி - இரவு.

(கசு) பாழி-தேவர்கோயில். பள்ளி-முநிவரிருப்பிடம், முஞ்சி-ஓர் வகைப்புல். (கஎ) அன்னங்கள், ஆரியாங்கனைகள், அக்குசைகள் என்றது - கன்னிப்பருவத்தில் ஆசாரியனிடத் துபதேசம்பெற்றுத் துறவுபூண்டு தவமேற்கொண்டபெண்களுக்கு அம்சம்எனவும், இல்லறத்திற் கணவனோடு வாழுங்காலையில் துறவுபூண்டுஉபதேசம் பெற்றுத் தவம்நோற்கும் பெண்களுக்கு ஆரியாங்கனைஎன்றும், மங்கலமிழந்த பெண்களுள் அவ்வாறுநிற்பவர்க்கு அக்குசைஎனவும் சமணபரிபாஷையில் வழங்கலை.

முண்டிதஞ்செய்ததலையராய்முறுக்குறிதூங்கு
குண்டிகைத்தடங்கையராய்க்கோவணம்பிணித்த
தண்டுதாங்கியசுவலராய்ச்சடையன்பேர்நாவிற்
கொண்டசைத்தனராயெங்குங்குலாவவுங்கண்டேம். (௧அ)

காந்துவெங்கதமுடையதோர்கயந்தலைவந்து
சூழ்ந்துகொண்டுநம்மடிகண்மார்கணமெலாந்துரத்தி
யேய்ந்துபூஞ்சினையலைந்திடவிரங்கிவண்டிரியப்
பாய்ந்துபிண்டியைவேரொடும்பறிக்கவுங்கண்டேம். (௧௯)

அந்தமூவிலைவேலினுமயின்முனைக்கழுவின்
பந்திமீதுநீரேறவுங்கண்டுளம்பனிப்பச்
சந்தமார்பகஞ்சேப்பவந்தளிர்க்கரம்புடைத்துக்
கந்தவார்குழல்சோரவுங்கலுழவுங்கண்டேம். (௨௦)

தள்ளருந்திறலிந்திரசாலமோகாதி
யுள்ளவிஞ்சையிவ்வெல்லைவந்துதவிலவொன்றுங்
கள்ளராற்பறிபட்டவோகனவில்வெந்தனவோ
வெள்ளங்கொண்டவோசேமத்திற்கிடப்பவோவிளம்பீர். (௨௧)

தாவுதீவளர்த்தெழுகரிதன்னையாடரவை
யாவையேவிமுன்னம்மனோர்பட்டதுமறிந்தீர்
காவலன்பிணிதணித்திலீரினிச்செயுங்கருமம்
யாவதாகுமோவதனையுமெண்ணுமினென்றார். (௨௨)

இற்றவைகளுக்கேகன்மினென்றனரறத்தைச்
செற்றவஞ்சகர்செல்லுவார்திரும்பவுங்கையைப்
பற்றியீர்த்தனர்பெண்டிர்சொற்கேட்பதும்பழுதென்
றுற்றதீவினைவழிச்செல்வாரொளித்தனர்செல்வார். (௨௩)

கொங்கலர்க்குழல்சரிந்திடக்குரத்தியர்பின்னு
மெங்கள்சொற்கொளாதேகுவீர்பரிபவமெய்தி
யுங்களுக்கிடையூறுவந்துறுகெனச்சபித்தா
ரங்கதற்குமஞ்சார்செல்வாரழியுநாளடுத்தார். (௨௪)

---

(௧௯) காந்தல் - சுடுதல். கதம் - கோபம். கயந்தலை - யானைக் கன்று. பிண்டி - அசோகு. (௨௦) கலுழ்தல் - அழுதல்.

(௨௧) மோகாதிவிஞ்சை என்றது - மோகனம், ஆக்ருஷணம், வசியம், அதிரிச்சியம், அஞ்சனம், வயத்தம்பம், வாதங்களை.

(௨௪) குரத்தியர் - ஆசிரியன் மனைவிமார். பரிபவம்-துன்பம்.

புட்களும்பலவிரிச்சியும்போகவென்றெதிரே
தட்கவுங்கடந்தேகுவார்தடங்கயலுகைப்பக்
கட்கவிழ்ந்தலர்கிடங்கர்சூழ்கடிநகர்ப்புறம்போ
யுட்குநெஞ்சராயாவருமோரிடத்தீண்டி. (உரு)

யாதுசூழ்ச்சியென்றெண்ணுவாரிறைவனைக்கண்டே
தோதிநாமவனனுமதியுறுதிகொண்டனைய
வேதிலாளனைவாதினல்வேறுமென்றிசைந்து
போதுவார்நகர்புகுந்துவேத்தவைக்களம்புகுவார். (உசு)

ஆயபோதிளங்காலையிற்கவுணியராலவாயர்சேவடிபணிந்துதம்மடத்தினிற்செல்லக்
காயுமாதவச்செல்வனைக்கங்குல்சூழ்ந்தாங்கு
மாயவஞ்சகர்வந்திடைவழித்தலைமறித்தார். (உஎ)

மறித்தகையர்பின்செல்லமுன்மன்னவைகுறுகிக்
குறித்தவாளரித்தவிசின்மேற்கொச்சையர்பெருமா
னெறித்தசேயிளம்பரிதியினேறிவீற்றிருந்தார்
பறித்தசீத்தலைப்புலையர்கள்பொருதிவைபகர்வார். (உஅ)

மழலையின்னமுந்தெளிகிலாமைந்தகண்மணியொன்
றுழல்கருங்கொடியிருந்திடக்கனியுதிர்ந்தாங்குன்
சுழல்கொள்விஞ்சையினன்மையான்மன்னனைத்தொடுத்த
தழலவித்தனமென்றுநீதருக்குறத்தகுமோ. (உகூ)

நந்துநாகுநீர்வண்டுசென்னடைவழியெழுத்தாய்
வந்துவீழினும்வீழுமவ்வழக்கினின்கையிற்
சிந்துசாம்பருஞ்சிறுசொலுமருந்துமந்திரம்போற்
சந்துசூழ்மலையான்சுரந்தணித்தனகண்டாய். (ங0)

உங்கண்மந்திரமேடொன்றிற்றீட்டுகவோரேட்
டெங்கண்மந்திரந்தன்னையுந்தீட்டுகவிரண்டு

---

(உரு) விரிச்சி - சகுனம். தட்கல் - தடைசெய்தல். உட்கல்-வாடல். (உசு) வேறும் - வெல்லோம். ஏதிலாளன்என்றது - அயலவராகிய பிள்ளையாரை. வேத்தவை - வலிக்கும்வழி வலித்தல்.

(உஅ) கொச்சை — சீகாழி. (உகூ) சுழல்கொள்விஞ்சை - மயங்குதற்குரியவித்தை. தழல் என்றது - வெப்புநோயை.

(ங0) நடைவழி - ஒருபொருட்கிளவிகள். எழுத்தாய்வந்து வீழினும் வீழும் என்றது - சங்குமுதலியவை சேற்றிலுழுது சென்றவழி, அவ்வுழுதல் ஓர்காலத்தில் எழுத்தாய்க் காணப்படுதலை. சிறுசொல் என்றது - பாடலை.

மங்கிவாயிடின்வெந்ததுதோற்றதவ்வங்கி
நுங்கிடாததுவென்றதென்றெட்டியேநுவலா. (௩௧)

செக்கரஞ்சடையானுறைபதிகளிற்செய்யத்
தக்கதன்றவனடிநிலைபிழைத்துநுஞ்சார்வாய்
விக்கமெம்மனோர்க்கியற்றுவான்வேறொருதலத்திற்
புக்கமர்ந்துவாதஞ்செயப்போதுகமென்னு. (௩௨)

வென்றிமாமுரசுறங்கிடாவியனகர்ப்புறம்போய்
மன்றல்வேம்பன்முன்கதழெரிமடுத்திடிற்பிழைப்ப
தொன்றுவேவதொன்றீதுகொண்டுமர்களுமெமரு
மின்றுவெல்வதுந்தோற்பதுங்காண்டுமென்றெழுந்தார். (௩௩)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

ஈட்டுவஞ்சநெஞ்சரேயெழீஇநகர்ப்புறம்புபோய்க்
கீட்டிசைக்கணோரழற்கிடங்குதொட்டெழுந்துவா
னீட்டுகோடரங்குறைத்துநிறையவிட்டுநெட்டெரி
மூட்டினார்தமாதரார்வயிற்றுமிட்டுமூட்டினார். (௩௪)

ஞானமுண்டமுனிவர்தம்மையெள்ளியெள்ளிநாயினு
மீனரங்கியைத்தடுத்திருப்பவெண்ணிராயிர
ரானதொண்டருடனெழுந்துசண்பைவேந்துமரசனு
மானனாருமந்திரக்கிழானும்வந்துவைகினார். (௩௫)

உள்ளவிழ்ந்தமுலைசுரந்தொழுக்குபாலருந்தியே
துள்ளியோடுகன்றுபின்றொடர்ந்துசெல்லுமானென
வெள்ளியம்பலத்துளாடும்வேதகீதர்காதல்கூர்
பிள்ளைபோனவாறுதம்பிராட்டியோடுமெய்தினார். (௩௬)

ஆறிரேடிரண்டடுத்தவாயிரஞ்சமணரும்
வேறுவேறுதாமுயன்றமந்திரங்கள்வேறுவே
றூறுநீர்சுரந்தவோலையிற்பொருத்தொருங்குபோய்ச்
சீறிவானிமிர்ந்தெழுந்ததீயின்வாய்நிரப்பினார். (௩௭)

அக்கிவாய்மடுத்தவேடனைத்துமக்கணத்தினே
யிக்குவாயுலர்ந்ததோடெனக்கரிந்துசாம்பரா

---

(௩௧) நுங்கல் - நுகர்தல். (௩௨) வீக்கம்என்னுந் தொழிற்பெயர்விக்கம் எனநின்றது, குறுக்கும்வழிகுறுக்கல். வீ - கெடுதி.

(௩௪) கோடரம் - மரக்கொம்பு. (௩௫) தடுத்திருப்ப என்றது-தம்வழிப்படுத்தி நின்றமையை. (௩௬) பிள்ளை - ஆளுடைய பிள்ளையார். (௩௭) ஊறுநீர் சுரந்தவோலை-பச்சோலை. பொறித்து-எழுதி.

யுக்கவாறுகண்டுநீசருட்கிடந்துபொங்கவே
திக்குளார்கள்கண்டபேர்சிரித்துளார்களாயினர். (௩அ)

விரிந்தவேதநாவர்தாம்விரித்தவேதமெய்ப்பொருள்
வரைந்தபுத்தகத்தைவண்கயிற்றினல்வகிர்ந்துதா
மருந்தஞானவமுதளித்தவம்மைபேரகப்படத்
தெரிந்தவேடெடுத்தடுத்ததீயின்வாயிலிட்டனர். (௩௯)

மறைபுலப்படுத்தநூல்வரைந்தவேடநந்தநா
ளறைபுனற்கிடந்ததாமெனப்பசந்ததரசனு
நிறையமைச்சுமரசியாருநின்றபேருமந்தணர்க்
கிறைவரைப்புகழ்ந்தளப்பிலின்பவெள்ளமூழ்கினர். (௪0)

வெந்தசிந்தையமணர்வாதுவெல்வதற்குவேறிடம்
புந்திசெய்துவந்தவப்பொதுத்தலம்பொதுக்கடிந்
தந்தணாளர்வாதுவென்றவன்றுதொட்டுஞானசம்
பந்தனென்றநாமமேபடைத்துயர்ந்ததின்றுமே. (௪௧)

அன்னவேடுமுறையினேடிறுக்கியந்தணாளர்கோன்
மன்னைநோக்கவினையினேடுபோயுடுத்தமாசர்தாஞ்
சொன்னசூள்புலப்படத்துணிந்தும்வாய்மைநாணொரீஇக்
கன்னிநாடனவைசிரிப்பவாற்றலாதுகத்துவார். (௪௨)

ஏடநாங்களெழுதியிட்டபச்சையேடெணாயிரம்
வீடவந்தநீவரைந்துவிட்டவேடொன்றுமென்
வாடலின்றிநீரிலிட்டவண்ணமானதாலிதுன்
பாடவஞ்செய்விஞ்சைகொண்டுபாவகற்பிணித்ததே. (௪௩)

உங்களோடுமெங்களோடுமும்பர்வானளாய்விரைஇப்
பொங்கியோடும்வையைநீரிலிடுகவிட்டபோதுதா
னங்குநீரெதிர்க்குமோலைவெல்லுமோலையன்றியே
துங்கவேலைசெல்லுமோலைதோற்குமோலையாவதே. (௪௪)

(௩அ) அக்கினி என்பது - அக்கிஎன நின்றது கடைக்குறை. உக்கல் - அழிதல். (௩௯) அம்மைபேரகப்படஎன்றது - திருமுறையிற் கயிறுசாத்தியருளுகையில் "போகமார்த்த பூண்முலையாள்" என்னுந் திருப்பதிக முதயமானதை. (௪0) மறைபுலப் படுத்தநூல் என்றது - தேவாரத்திருமுறையை.

(௪௩) பாடவம் - களிப்பு. பாவகன் - அக்கினி. (௪௪) ஓலை என்றது - இங்கு சமயத்தினை.

வென்றுவீறடைந்தவர்க்குவீறழிந்துதோற்றபே
ரென்றுமேவலடிமையாவதென்றிசைந்துசைதவங்
குன்றுபோலுநின்றகுண்டர்கூறலோடுமீறிலா
மன்றுளாடுமடிகண்மைந்தர்வாய்மலர்ந்துபேசுவார். (சரு)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அடியார்பதிஞ்ஞூறுயிரவருள்ளார்சிவனையவமதித்த
கொடியார்நீவிருமக்கேற்றதண்டமிதுவோகொன்றைமதி
முடியாரருளாலுங்களைநாம்வென்றேமாயின்மூவிலைவேல்
வடிவாணிரைத்தகழுமுனையிலிடுவேமதுவேவழக்கென்றார். (சகூ)

ஊழின்வலியாலமணரதற்குடன்பட்டார்களஃதறிந்து
சூழியானைக்குலச்சிறையுந்தச்சர்பலரைத்தொகுவித்துக்
காழினெடியபழுமரத்திற்சூலவடிவாக்கழுநிறுவிப்
பாழிநெடியதோள்வேந்தன்முன்னேகொடுபோய்ப்பரப்பினார்.(சஎ)

தேறலாதார்தமைக்காழிச்செம்மலேக்கியினிவம்மி
னீறுபூசிக்கண்டிகையும்பூண்டுதிருத்தரெழுத்தைந்து
மூறவோதிப்பாசமொழித்துய்மினென்னுவறநோக்கிக்
கூறினார்மற்றதுகேட்டுக்குண்டரெரியிற்கொதித்துரைப்பார். (சஅ)

முன்புதீயில்வென்றனமேநீரில்யாதாய்முடியுமென
வன்புபேசியெமையிணக்கியகலநினைந்தாயல்லைநீ
பின்புவாதுசெயத்துணியும்பெற்றியுரைத்தாயல்லைபுலா
லென்புபூணியடியடைந்தவேழாய்போதியெனமறுத்தார். (சகூ)

ஆகந்தவழும்பழுமரத்தையுதைத்துக்கரைமாறிடவொதுக்கிப்
பூகந்தடவிவேர்கீண்டுபொருப்பைப்பறித்துப்புடைபரப்பி
மாகந்துழாவிக்கடுகிவரும்வையைப்புனலைமந்திரத்தால்
வேகந்தணிவித்தேடெழுதிவிடுத்தார்முன்போல்வெள்காதார். (ருo)

சிறையேய்புனல்சூழ்வேணுபுரச்செல்வர்யாருந்தெளிவெய்த
மறையேவாய்மையுரையாகின்மறைகண்முழுதுந்துணிபொருடா
பிறையேய்வேணிப்பிரானுகிற்பெருநீரெதிரேசெல்கவென
முறையேபதிகமெடுத்தெழுதிவிட்டார்முழங்கிவருபுனலில். (ருக)

---

(சஎ) சூழி - முகபடாம். பழுமரம் - ஆலமரம்.

(ருo) யூகம் - கருங்குரங்கு. மாகம் - ஆகாயம்.

(ருக) பதிகமெடுத்தெழுதிஎன்றது —"வாழ்கவந்தணர்வானவ ரானினம்" என்னுந் திருப்பதிகம் ஓதிவரைந்து விட்டமையை.

தேசம்பரவுங்கவுணியர்கோன் விடுத்தவேடுசெழுமதுரை
யீசனருளாங்கயிறுபிணித்தீர்ப்பநதியிலெதிரேற
நாசஞ்செய்யும்பொறிவழியேநடக்குமுள்ளமெனச்சென்று
நீசரேடெண்ணுயிரமுநீத்தவழியேயொழுகியவால். (ருஉ)

சிங்கமனையாரெழுதுமுறையெதிராற்றேறத்தெரிந்தமர (தார்
ரங்கணறும்பூமழைபொழிந்தா ரறவோர்துகில் விண்ணெறிந்
கங்கையணிந்தார்திருத்தொண்டர்கண்ணீர்க்கடலிலழுந்தினர்
வெங்கணமணர்நடுங்கியுடல்வெயர்வைக்கடலிலழுந்தினர். (ருங)

வேமேயென்பதறியாதேவெல்வேமென்றேகூஉளோட்டி
நாமேயிட்டவேடெரியில்வேவக்கண்டுநதிக்கெதிரே
போமேயின்னம்வெல்வேமென்றிட்டவேடும்புணரிபுகத்
தாமேதம்மைச்சுடநாணிநின்றாரமணர்தலைதூக்கி. (ருச)

பொருப்பேசிலையாப்புரங்கடந்தபுனிதனேயெத்தேவர்க்கும்
விருப்பேய்போகம்வீடுதருமேலாங்கடவுளெனநான்கு
மருப்பேய்களிற்றான்முடிதகர்த்தான் மருமானறியகுருமொழிபோ
னெருப்பேயன்றிவேகவதிநீரும்பின்னர்த்தேற்றியதால். (ருரு)

பொய்யின்மறையின்புறத்தமணர்புத்தர்க்கன்றிவாய்மையுரை
செய்யுமறைநூல்பலதெரிந்துஞ்சிவனேபரமென்றறியாதே
கையில்விளக்கினொடுங்கிடங்கில்வீழ்வார்போலக்கலங்கிமன
மையமடைந்தபேதையர்க்குமறிவித்ததுவேயதுவன்றே. (ருசு)

கண்டுகூடற்கோமகனுங்கற்புநிறைந்தபொற்புடைய
வண்டுகூடுந்தாரளகவளவன்மகளுமந்திரியுந்
தொண்டுகூடுமடியாருங்காழிக்கரசைத்தொழுதுதுதி
விண்டுகூடற்கரியமகிழ்வெள்ளத்தழுந்திவியந்தனரால். (ருஎ)

நன்றிதேரார்பின்புள்ளமானமிழந்துநாணழிந்து
குன்றுபோலுந்தோணிபுரக்கோமானெதிரேயாங்களுமக்

---

(ருங) அறவோர் - முனிவர்கள். (ருச) போம்-புகும் என்னும் வினைமுற்றின்றிரிபு. (ருரு) நான்குமருப்பேய்களிற்றான்முடிதகர்த்தான்மருமான் என்றது-ஐராவதத்தையுடைய இந்திரன் முடியைத்தகர்த்த உக்கிரகுமாரபாண்டியன் மரபில்வந்த சவுந்தரியபாண்டியனை. (ருசு) கிடங்கு-கிணறு. புறத்தமணர் புத்தர் என்றது - அவர்கள் புறப்புறச்சமயிகளாதலின்.

(ருஅ) குன்றுபோலும் தோணிபுரம் என்றது - மலைபோலத் தோணிபுரம் பலராலு மறியப்பட்டுகிற்றலின்.

இன்றுதோற்றேமெமையீண்டுநீரேவென்றீரெனநேர்ந்து
நின்றுகூறக்கவுணியர்கோனனையாருய்யுநெறிநோக்கா. (ருஅ)

இன்னமறத்தாறிசைக்கின்றேநீரேன்வாளாவிறக்கின்றீ
ரன்னையனையானெம்மிறைவனவனுக்காளாயும்மின்க
ளென்னவேடசிறியாய்நீயெவ்வாறெங்கட்கடாதமொழி
சொன்னதென்றுமானமுளார்கழுவிலேறத்தொடங்கினர். (ருகூ)

மேற்படி - வேறு.

மதத்தினின்மானமிக்கார்தாங்களேவலியவேறிப்
பதைத்திடவிருந்தாரேனைப்பறிதலையவரைச்சைவ
விதத்தினுலொழுக்கம்பூண்டவேடத்தார்பற்றிப்பற்றிச்
சிதைத்திடர்செய்தேறிட்டார்திரிதலைக்கழுக்கோறன்னில். (சுo)

வழிவழிவருமாணுக்கர்சாதற்குவருந்திநெஞ்ச
மழிபவர்திருநீறிட்டாரதுகிட்டாதயர்வாராவி
னிழிவில்கோமயத்தையள்ளிப்பூசினரிதுவுங்கிட்டா
தொழிபவராவின்கன்றைத்தோளிலிட்டுயிரைப்பெற்ருர். (சுக)

கூறிட்டமூன்றுங்கிட்டாதயர்பவர்குற்றந்தீர
நீறிட்டார்நெற்றியோடுநிருமலகோமயத்தின்
சேறிட்டார்நெற்றியோடுநெற்றியைச்செறியத்தாக்கி
மாறிட்டபாசந்தன்னைமறித்திட்டுப்பிறப்பைவெல்வார். (சுஉ)

மற்றிவர்தம்மையூற்றஞ்செய்திலர்மடிந்தோர்யாருஞ்
சுற்றியசேனங்காகநரிகளுய்தொடர்ந்துகௌவிப்
பற்றிநின்றீர்த்துத்தின்னக்கிடந்தனர்பருமயானை
வெற்றிகொள்வேந்தன்காழிவேந்தரைத்தொழுதுநோக்கா. (சுங)

இன்றுநீரிட்டவேடிங்கியாவருங்காணநேரே
சென்றதேயெங்கேயென்றனதனையாஞ்செம்பொற்கூடன்
மன்றவரருளாலின்னேவருவிப்பமென்றுவாது
வென்றவர்நதியின்மாடேமேற்றிசைநோக்கிச்செல்வார். (சுச)

செல்லுநர்காணவோலைகாவதஞ்செல்வதப்பா
லொல்லையங்கொளித்தலோடும்வியந்தவனொருங்குகூடிக்
கொல்லையான்மெய்த்துநின்றூர்சிலர்தமைக்குறித்துநீரிவ்
வெல்லையுள்விசேடமுண்டோவிவன்கண்டதிசையினென்றூர். ()

(ருகூ) எட - தோழன் முன்னிலைப்பெயர்.

(சுங) பருமம் - தவசம்.

அவ்விடைச்சிறுார்கள்யாங்களொன்றையுமறியேமென்ன
விவ்விடைவிசேடங்காணல்வேண்டுமெத்திறத்துமென்னாத்
தெவ்விடைவாதுசெய்யத்திருவுளக்கருணைசெய்த
வெவ்விடைக்கொடியினானைப்பாடினார்வேதநாவார். (௬௬)

பாட்டின்மேற்கருணைவைத்தார்சயம்புவாய்ப்பராரைவில்லக்
காட்டினுளிருப்பநேரேகண்டுதாழ்ந்தெழுந்துசண்பை
நாட்டினார்வலங்கொண்டேத்தியெதிர்நின்றார்நகைத்தார்நிம்பத்
தோட்டினனதுகேட்டங்கேதோன்றினான்றனையோடும். (௬௭)

அந்தமாவிலிங்கத்தீசனுயிரமதியங்கண்ட
முந்தைவேதியராய்த்தோன்றிமுத்தமிழ்க்கரசைநீயென்
மைந்தனுமிளையோனொப்பாய்வருகெனநீறுசாத்திச்
சிந்தைநீளார்வங்கூரத்திருவருள்சுரந்துநின்றார். (௬௮)

நின்றவந்தணரையன்றுநிருமலஞானமீந்தா
ரென்றுகண்டிறைஞ்சியையநீரில்யானிட்டவேடு
சென்றதிங்கெடுத்தீர்நீரேயஃதுநுஞ்செல்வர்க்கேற்ற
தன்றதைத்தருதிரென்றாராறுமுகச்செம்மலன்னார். (௬௯)

இன்னமும்பன்னாளெம்மையிடந்தொறும்பாடியெஞ்சும்
புன்னெறியொழுகுவாரைவென்றுநம்புனிதவீடு
பின்னர்நீபெறுதியென்னாவேடுதந்தாசிபேசி
மின்னெனமறைந்துநின்றார்வேதியராயவேடர். (௭௦)

தாதையார்கவர்ந்துமீளத்தந்தவேடதனைவாங்கிப்
போதையார்ஞானமுண்டார்புரிசடைப்பிரானார்வெளவி
யீதையாமிரந்துவேண்டத்தந்தனமென்றுகூறிக்
கோதையார்வேலினாற்குக்காட்டவக்கொற்கைவேந்தன். (௭௧)

கச்சானவரவமார்த்தகருணையங்கடலிற்றோன்று
விச்சானஞானமுண்டோராற்றலின்விளைவுதேறு
தச்சானவலியானும்மையளந்தனனடியேனிந்தத்
துச்சானபிழைதீர்த்தாள்கென்றிறைஞ்சினான்றுணர்த்தார்வேம்ப[ன்.

---

(௬௬) பாடினார் என்றது-"வன்னியுமத்தமு மதிபொதிசடையினன்" என்னுந் திருப்பதிகமருளினமையை.

(௬௮) மைந்தனுமிளையோனொப்பாய் என்றது – பிள்ளையார் முருகக்கடவுளமிசமாதலின் சிலேடைப்பொருள் விளங்கநின்றது.

(௭௨) விச்சானஞானம் – முத்திநிலைக்கு வித்தாகிய சிவஞான வமுதம். விச்சு-வித்து என்பதன்போலி-அச்சு என்றது - தற்போதத்தை. துச்சம்-இழிவு.

அந்நெடுமேருவாங்குமாடகச்சிலையினார்க்குப்
பொன்னெடுஞ்சிகரக்கோயின்மண்டபம்புயலைக்கீண்டு
மின்னெடுமதியஞ்சூடுங்கோபுரமேகந்தாவுங்
கன்னெடும்புரிசைவீதியாவையுங்களிப்பக்கண்டான். (எங)

அற்றைநாளாதியாகவேடகமென்னுநாமம்
பெற்றதாலேடகத்தின்மேவியபிரானைப்பாண்டிக்
கொற்றவன்சமணரோடுங்கூடியபாவமெல்லாம்
பற்றறப்பூசைசெய்துபாசமுங்கழியப்பெற்றான். (எச)

நறைகெழுதுழாயினானுங்கலுழனுநாகர்வேந்து
முறையினாலுகங்கண்மூன்றும்பூசித்துமுடியாவின்ப
நிறையருள்பெற்றாரன்னநிராமயவிலிங்கந்தன்னை
யிறுதியாமுகத்திற்பாண்டியிறைமகன்பூசைசெய்தான். (எரு)

அங்கண்மாநகர்கண்டாங்கோராண்டிறைகொண்டுகாழிப்
புங்கவரோடும்பின்னாட்பூழியர்பெருமான்மீண்டு
மங்கலமதுரைசேர்ந்துவைகுநாணீற்றுச்செல்வ
மெங்கணும்விளங்கச்சின்னாளிருந்துபின்ஞானச்செல்வர். (எசு)

வடபுலத்துள்ளவீசன்பதிகளும்வணங்கிப்பாடக்
கடவமென்றெழுந்துகூடற்கண்ணுதற்பெருமான்றன்னை
யிடனுறைகயற்கணாளையிறைஞ்சிப்பல்வரனும்பெற்று
விடைகொடுதமிழ்நாடெங்கும்பணிந்தனர்மீண்டுபோவார். (எஎ)

தன்பெருங்கற்பினாளுமமைச்சனுந்தமிழ்நர்கோனும்
பின்புமுனந்தண்காழிப்பிரானடிபிரிவாற்றாரா
யன்புதந்தவர்பானட்டவன்றுதொட்டாளுக்கேண்மை
யின்பமுந்துன்பமாகிவிளைந்துமுன்னீர்ப்பப்போனார். (எஅ)

சண்பையர்தலைவர்தாமுமனையராய்த்தம்பின்செல்லு
நண்புடையவரைநோக்கிநம்மிடத்தன்புநீங்காப்
பண்பினராகிநீறுபாதுகாத்தீசன்கீர்த்தி
மண்படவாழ்மினீதுமறுக்கன்மினின்மினென்றார். (எகூ)

ஆளுடைப்புகலிவேந்தருண்மொழிமறுக்கவஞ்சித்
தாளுடைப்பதுமச்செந்தாடலையுறப்பணிந்துமீண்டு

(எச) ஏடகம் - ஏடுதங்கிய இடம். (எரு) நாகர்வேந்து - ஆதி சேடன் (அ0) தாள்-தாமரைத்தண்டு. கஞ்சத்தோளுடைச் சிங்கம் என்றது-அந்தணர்குலத்துக்குரிய தாமரைமலர் மாலையணிந்த தோளினையுடைய சிங்கவேற்றையொத்த ஆளுடையபிள்ளையாரை.

வாளுடைத்தானைத்தென்னன்மதுரையில்வந்தான்கஞ்சத்
தோளுடைச்சிங்கமன்னார்சோழர்கோனுடுபுக்கார். (௮௦)

ஞானமாமதநீர்சோரஞானசம்பந்தரென்னு
மானமாயானைவந்துகடம்பமாவனத்திற்றுன்னு
மூனமாஞ்சமணரென்னுந்தருக்களையொடித்துவெண்ணீ
ருனமாப்பூழியள்ளித்தூற்றியதவனியெங்கும். (௮௧)

கலிநிலைத்துறை.

ஆதியாலயத்தடலைகொண்டாழிசூழ்காழிச்
சோதிவேதியர்பாண்டியன்சுரந்தணித்துடலிற்
பேதியாதகூனிமிர்த்தலாற்பிறங்குகற்பாதிப்
பூதியாவினுஞ்சிறந்ததவ்வட்டில்வாய்ப்பூதி. (௮௨)

சமணரைக்கழுவேற்றியபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௬௨ - க்கு - திருவிருத்தம் - ௩௨௫.

---

அறுபத்துநான்காவது,

## வன்னியுங்கிணறும்இலிங்கமுமழைத்தபடலம்.



எழுசீரடியாசிரியவிருத்தம்.

சென்னிவெண்டிங்கண் மிலைச்சியமதுரைச் சிவனருளடைந்த சம்பந்தர் துன்னிருஞ்சமணைக் கழுமுனையேற்றித் துணித்தவாறி சைத்தனம்வணிகக் கன்னிதன்மன்றற் கரியினைமாற்றுள் காணவ க்கண்ணுதலருளால், வன்னியுங்கிணறு மிலிங்கமுமாங்கு வந்தவா றெடுத்தினியுரைப்பாம். (௧)

பொன்மலர்க்கைதை வேலிசூழ்வேலைப் புறத்தொருபட்டின த்துள்ளான். மின்மணிக்கொடும்பூ ணொருகுலவணிகன் வேறுவே றும்பலசெல்வத், தன்மையிற்சிறந்தோன் மகவிலனாகித் தன்மனக் கினியதோர்காட்சி, நன்மனைக்கொடியோ டறம்பலபுரிந்தோர் ந கைமதிக் கொம்பையீன்றெடுத்தான். (௨)

அத்தனவணிகற் குரியநன்மருக னவன்முதற்கடிமண முடித் தோன், முத்தமிழ்மதுரைப் பதியுளானவற்கே முறையினுனேற்

---

(௮௨) ஆதி என்றது - சோமசுந்தரக்கடவுளை. கற்பாதிபூதி என்றது-கற்பம், அநுகற்பம், உகற்பம், அகற்பம் என்னும்நால்வகைப்பூதியினை. கற்பம்-இது கடைக்குறையாய் கற்பு எனநின்றது.

றுநான்பயந்த, வித்தகமயிலைக் கொடுப்பலென்றனைய வியற்குலவ ணிகர்கோன்றன்னோ, டொத்தபல்கிளைஞர் யாவருமறியவுணர்த்தி னன்சிலபகலொழிய. (ங)

ஊழ்வினைவலியா லாருயிரிழந்தா னுயிர்க்குடம் பனையதன்க ற்பின். சூழ்கதிர்மணிப்பூண் மனைவியுமிறப்பத் துணிந்தனளவரிரு வோர்க்கு, மாழ்கடற்கிளைஞர் செயத்தகுகடன்க ளாற்றியச்செய்தி யைமதுரை, வாழ்தருமருகற் குணர்த்துவானோலை விடுத்தனர்மரு மகன்வாங்கா. (ச)

த்ன்னருண்மாமன் றுஞ்சினன்கூடத் தாரமுந்துஞ்சியதிப் பா, லன்னவர்க்களவின் ருகியதனமுண் டவனனிநாண்மகவின்றி ப், பின்னொருபெண்ணைப் பெற்றனனவளைத் தனக்கெனப்பேசி னனைய, கன்னியைமணந்து செல்கெனமுடங்கற் கழறியபாசுர ந்தெரியா. (ரு)

வீழ்ந்தனன்றரைமேற் புரண்டனனுயிர்ப்பு வீங்கினன்விழிப் புனல்வெள்ளத். தாழ்ந்தனன்விம்முற் றம்மவோவென்றென் றரற் றினன் கிளைஞர்நட்படைந்து. வாழ்ந்தவர்கழுவத் தழீஇத்தழீஇக்க ரைந்தான் மற்றவர் தற்றிடத்தெளிந்து, சூழ்ந்தவெந்துயர்நீத்தொ ருதலைமாமன் றென்னகர்க்கேகுவான் றுணிந்தான். (சு)

அங்குளகிளைஞர்சிலரொடுங்கூடி யருங்கடிமதுரைநீத்தேகிப், பொங்கிருங்கழிசூழ் பட்டினங்குறுகிப் புகுதுவான்வரவறிந்தங்குத், தங்குதங்கிளைஞர் வினவநேர்வாரைத் தழீஇத்தழீஇச்செலவிடுத் தேகி,கொங்கிவர்தளவத்தாரினன்மாமன்கோயில்புக்கிருந்தனனாக.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நாள்சிலகழிந்தபின்னர்நாய்கரேறனையானன்ன
வாள்புரைகண்ணினளைமதுரையிற்கொடுபோயங்கென்
கேளிர்முன்வேட்பலென்றுகிளந்துதன்மாமனீட்டு
நீள்பெரும்பொருள்கண்மற்றுங்கைக்கொண்டுநெறியிற்செல்வான்.

வழிவிடவருவார்தம்மைநிறுத்திப்பின்மதுரைமூதூர்க்
கெழுதருசுற்றத்தாரைமுன்சென்மினென்றுபோக்கித்
தொழுபரிசனமுந்தானுந்தோகையும்வைகலொன்றிற்
கழிவழியரைமேற்பெய்தகாவதமாகப்போவான். (கூ)

(ரு) தனிநாள்-நெடுநாள். தன்என்பது - முன்னிலையில் வந்த இடவழுவமைதி. தாரம்என்றது - பொருளாலுயர்திணையாயினுஞ் சொல்லாலஃறிணையாதலின் துஞ்சியதுஎன அஃறிணைமுடிபுதந் தார்.

(சு) உயிர்ப்புவீங்கல் - நெட்டுயிர்ப்பெறிதல். ஒருதலை - ஒரு வாறு. (எ) தளவத்தார்-முல்லைமலர்மாலை. (அ) நாய்கர் - வணிகர்.

(கூ) அரமேற்பெய்த காவதம் - ஒன்றரைக்காதவழி.

வெங்கதிர்வேலைசெல்லும்வேலைவந்தணையுமுன்ன
மிங்கிருந்தொழிகமென்னுப்புறம்பியமூதூரெய்தி
யங்கிறைகோயின்முன்னிக்கூவனீராடியங்குத்
தங்கியவன்னிமாடேபோனகஞ்சமைத்துண்டெல்வாய். (௧௦)

மலைவைத்தசிலையான்கோயின்மருங்கொருபடியினும்பர்த்
தலைவைத்துத்துயிலுமெல்லைவிதிவழிச்சாரவந்தோர்
கொலைவைத்தவிடவாய்நாகங்கடித்ததுகொதித்துநீண்ட
விலைவைத்தகொடும்பூணுய்கன்விடந்தலைக்கொண்டுமாய்ந்தான். ()

அங்குளபரிசனங்களாவலித்திரங்கிச்சூழக்
கொங்கைகள்புடைத்துச்சேடிக்குற்றிடைமகளிரேங்கச்
சிங்கவேறனையானுகந்தீண்டிடாதொதுங்கிப்போந்த
பங்கயமலர்கொம்பன்னுள்பாவைபோற்புறம்புநின்றாள். (௧௨)

கலிநிலைத்துறை.

ஆளியேறன்னவனரவின்வாய்ப்பட்டதுமவித்தது
மீளிவேலுண்கணார்கைக்குலைத்தழுவதும்விழுவதுங்
கேளிர்சூழ்ந்தயர்வதுஞ்சோர்வதுங்கண்டிளங்கிளியனாள்
வாளியேறுண்டதோர்மயலின்வீழ்ந்துயங்கினாண்மயங்கினாள். (௧௩)

வடிக்கணுட்செருகினவருகினயுயிர்ப்பழல்வாய்ப்படுந்
தொடுத்தபூங்கோதைபோற்சோர்ந்ததாகங்கரஞ்சோர்ந்தன
வடித்களிர்சோர்ந்தனகன்னியன்னப்பெடையன்னவ
ளிடிக்கெதிர்ப்பட்டுவீழ்ந்தாளெனக்கிடந்தனளென்செய்வாள். (௧௪)

சாயும்பூங்கொம்பரிற்சூழ்ந்திறந்தான்புறஞ்சார்ந்தழூஉ
மாயமென்மகளிர்மீண்டன்பனேடெங்கைதன்னுவியும்
போயதேகொல்லெனமடியுறக்கொடுங்கையாற்புறந்தழீஇத்
தூயதூசெறிந்திளைப்பாற்றினார்சிறிதுயிர்தோற்றவே. (௧௫)

---

(௧௦) வேலை-மேற்றிசைக்கடல். வேலை-சமயம். கூவல்-கிணறு. போனகம்-சோறு. அல்-இரவு.

(௧௧) இலைவைத்த கொடும்பூண் - வளைந்த வெற்றிலைச் சரப்பணி என்னுமாபரணம். (௧௨) பரிசனங்கள்-ஏவலாளர்கள். ஆவலித்தல்-வாய்திறத்தல். (௧௩) மீளிவேலுண்கணார் என்றது-பெருமையிற்சிறந்த வேலினைவென்ற கண்களையுடைய தோழியரை.

(௧௪) வடி-மாவடுவின் பிளவு. அருகல்-ஒடுங்கல்.

(௧௫) கொடுங்கை-வளைந்தகை. தூசெறிந்து - வஸ்திரத்தால் விசிறி.

மெய்கழிந்தின்னுயிர்மீண்டுதென்யாக்கையின்மெல்லவே
கைகலந்தாங்கிருகாலியங்குற்றனகண்களும்
பொய்கைநீலஞ்சிறிதவிழ்ந்தெனவலர்ந்தெனபூவையை
மைகழிநாண்முதனுன்குநால்வேலியாய்வளைந்தவே. (கசு)

கையெறியுங்குழற்கற்றைசோருந்திரிகாறுளி
நெய்யெனக்கண்புனல்கொங்கைமுற்றற்றுகநெஞ்சுகும்
பையவாய்விடும்புறம்பார்க்குநாணெடுந்தளைப்படுஞ்சிறு
தெய்வந்தொட்டாளெனத்தேம்பிவிம்மாந்தொளிதேயுமால். (கஎ)

வணங்கில்செல்வந்தழீஇப்பிறந்தநாடொட்டொருவைகலு
மணங்கெனக்கனவிலுங்கண்டிலாளன்பன்மேலன்பென
மிணங்குதன்னுருவமாய்நிறைவரம்பிற்றெனவிருந்தொர்பெண்
ணணங்குவாய்விட்டழுதாளெனப்புலம்பலுற்றுளரோ. (கஅ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

என்னுயகனேயோவென்னிருகண்மணியேயோவென்னையீன்றான்
றன்னுவியன்னதனிமருகாவோமுருகாவோதாரார்முல்லை
மன்னுவோவணிகர்குலமணியேயோவிடவரவின்வாய்ப்பட்டாயோ
வுன்னுகநிழலானவென்னைவிடுத்தெவ்வண்ணமொளிப்பதேயோ.()

பொன்னாட்டின் மடவாரைப் புணர்வதற்கோ நம்மளகா புரத்துவேந்த, னன்னாட்டின்மடவாரை மணப்பதற்கோ வுனைக்கடித்த நாகர்வேந்தன், றன்னாட்டின் மடவாரைத் தழுவுதற்கோ வென்னுவித் தலைவாவென்னை, யிந்நாட்டி லிருத்தியெனை வஞ்சித்துப்போயினவா றென்னேயென்னே. (உo)

தென்னுலகிற் புகுந்தனையோ பணிந்தனையோ மாதுலனைத் தேவியோடுந், தன்னிருதோ ளுறவாரத் தழுவினனோநானுமுடன் சார்ந்தேனுகி, லென்னுரியகுரவரையுங் கண்ணாரக்காணேனேவெனையீங்கிட்டாய், பின்னுரிய பரிசனமுங் கைவிட்டாய் தனிப்போயென்பெற்றாயையா. (உக)

(கசு) நீலம்-நீலமலர். பூவையை என்றது—வைசியகுலக் கன்னியை. (கஎ) திரிகால் - திரியினின்றுஞ் சிந்துகிற. தளை - கட்டு. சிறுதெய்வம் என்றது—கன்னி, காட்டேரிமுதலிய தெய்வங்களை.

(கஅ) வணங்கு இல் செல்வம்-குறைவில்லாத பெருஞ்செல்வம். அணங்கு-துன்பம். வரம்பிற்று-அளவினையுடையது.

(ககூ) என்னுயகனே என்றது—தனது தந்தையால் நாட்டிய கணவனுதலின். முருகன்-கட்டிளமையுடையவன்.

(உக) தென்னுலகம்-பிதிரருலகம்.

வரிசைமருமகனரவால்விளிந்ததுநானறைபோயமனத்தோடிங்குப்
பரிவுறலுமெனைப்பயந்தார்நோற்றபயனன்றூஉப்பளித்ததேயோ
பெரிதவரிக்கட்கலக்கங்காணுமுனிறந்தன்றேபிழைத்தாரந்தோ
வரியதிலுமரியபயனிதுவன்றேயெவர்பெற்றாரவர்போலம்மா. ()

உன்காதன்மாமனெனைப் பயந்தவன்றேயுறவறியவுனக்கேபே
சிப், பின்காதன்மனைவியொடு முயிரிழந்தான்யானுமந்தப் பெற்றி
யாலே, யென்காதலுயிர்போக வெற்றுடம்போவிருக்குமுட னிறப்
பேனென்னுத், தன்காதற்றுணையிழந்த வன்றிலெனவிருந்தழுதா
டமியளானுள். (உரு)

மேற்படி — வேறு.

நன்னகருறக்கநீங்கிநடுக்கமுற்றழுங்கக்காழித்
தென்னகர்ஞானச்செல்வர்சிவனகர்தொறும்போய்ப்பாடி
யந்நகரடைந்தாரங்கோரணிமடத்திருந்தார்கேட்டீ
தென்னெனவாள்விட்டாய்ந்துகோயிலினிடைவந்தெய்தி. (உச)

கன்னிநீயரரையுற்றதென்னெனக்கன்னிதாழ்ந்து
தன்னருமரபுமீன்றார்தம்மையுமருகற்கென்றே
யுன்னினர்மன்றல்பேசியிறந்ததுமுயிரன்னுனே
டிந்நெறியடைந்தீங்குற்றநிகழ்ச்சியுமெடுத்துச்சொன்னுள். (உரு)

தந்தையுந்தாயுமன்னோர்தமியளாயிரங்கும்பேதைப்
பைந்தொடியாவிகாப்பான்பாம்புகோட்பட்டான்மாடே
வந்தவனுகமெல்லாமருந்துருவாகும்வண்ணஞ்
சிந்தைசெய்தருட்கண்வைத்தார்குதித்ததுநீவாய்நஞ்சம். (உசு)

எழுந்தனனுறங்கினுன்போலிறந்தவன்யாருங்கண்டு
தொழுந்தகைஞானவேந்தைத்தொழுதனர்துதிசெய்தார்வத்
தழுந்தினர்கன்னியன்னமனையவளின்பத்தீந்தேன்
பொழிந்தொருபுறத்தேகஞ்சம்பூத்ததோர்கொம்பினின்றாள். (உஎ)

தலைவனையிறந்தபோதுந்தனியுயிர்பெற்றபோதுஞ்
சிலைநுதல்காதன்மாமன்செல்வியாயிருந்துநீண்டா
நிலைமையுமன்புங்கற்பினீர்மையும்வியந்துநோக்கி
மலைமகண்ஞானமுண்டார்வணிகனைநோக்கிச்சொல்வார். (உஅ)

வருதிநின்மரபுக்கெல்லாமணியனுயுன்றன்மாமன்
றருதிருவனையாளின்பஞ்சாருநாடென்பம்வந்து

(உஉ) அறைபோதல்-ஒட்டைபோதல். பரிவு-துன்பம்.
(உரு) உறவு-சுற்றம். (உசு) மருந்து-அமுதம்.
(உஎ) ஆர்வம்-இன்பம்.

பெருகுநாளன்றியென்றுன்மெய்தொடப்பெறுவளீண்டே
திருமணமுடித்துக்கொண்டுபோகெனச்செப்பலோடும். (உ௯)

செங்கணேறனையானையன்றிருமொழிதலைமேற்கொண்டு
பங்கயன்படைத்தசாதிநான்கையும்பாதுகாப்பீ
ரெங்குலவணிகரின்றிக்கரிகளுமின்றியீங்கே
மங்கலமுடிக்கும்வண்ணம்யாதெனவணங்கிச்சொன்னான். (௩0)

கன்னியையீன்றஞான்றேயுனக்கென்றுன்காதன்மாம
னுன்னியதுறவினுள்ளாரறிவரேயுனக்கீதன்றி
வன்னியுங்கிணறுமிந்தவிலிங்கமுங்கரிகண்மைந்தா
விந்நிலைவதுவைசெய்தியெம்முரைகடவாதென்றார். (௩௧)

மாசறுமணத்தான்காழிவள்ளலைப்பணிந்துநீரே
தேசிகர்குரவர்நட்டோர்தெய்வமுங்கிளையுமென்னாப்
பேசியவாறேவேள்விப்பெற்றியாணிநீஇத்தான்வேட்ட
பாசிழையோடுந்தாழ்ந்துவிடைகொடுபெரவிப்போனான். (௩உ)

ஏவல்செய்யாயத்தாருமடியருமீண்டவீண்டிக்
காவல்செய்மதுரைமூதூர்குறுகித்தன்காதன்மாமன்
பூவையைமணந்தவண்ணங்கேட்டங்குப்புடைசூழ்சுற்றம்
யாவருமுவப்பவின்புற்றிருந்தனனிளங்கோமன்னன். (௩௩)

தன்பெருந்தனமுமாமனீட்டியதனமுமீட்டி
மன்பெருநிதிக்கோனென்னவாணிபம்பெருக்கிநாய்க
னின்புறுகாதலார்களிருவருமீன்றகாத
னன்பொருண்மகிழ்ச்சிசெய்யநலம்பெறவாழுநாளில். (௩௪)

மூத்தவள்சிறுவர்சாலமூர்க்கராயுள்ளாரேனை
மாத்தளிரியலிஞட்கோர்மைந்தனுண்டிவனுமன்ன
தீத்தொழிலுகமன்னசிறார்களுமல்லற்செல்வம்
பூத்தநீணியமத்தூடுபோய்விளையாடல்செய்வார். (௩௫)

முந்தியமணாட்டிமைந்தர்முகிழ்முலையிளையபாவை
மைந்தனையொருநாட்சீறியடித்தனர்வருந்தியீன்ற

(௩உ) வேள்வி-மணவினை. (௩௩) இளங்கோமன்னன் - வைசியகுலத் தலைவன். (௩௪) இருவரும் ஈன்றகாதல் நன்பொருள் என்றது—இம்மை மறுமை இன்பங்களைத்தரும்புதல்வர்களை. பொருள்-பிள்ளை. இதனைத் "தம்பொருளென்ப தம்மக்கள்" என்னுந் திருக்குறளா லுணர்க. (௩௫) மல்லல்-செல்வவளம். நியமம்-வீதி.

சந்தணிமுலேயாண்மாற்ருடநயரைவைதாளீன்ற
பைந்தொடிதானுஞ்சீறியிளேயளேப்பழித்துவைவாள். (ருசு)

எந்தவூரெந்தச்சாதியார்மகள்யாவர்காணச்
செந்தழல்சான்ருவெங்கோன்கடிமணஞ்செய்துவந்த
கொந்தவிழ்கோதைநீயென்கொழுநனுக்காசைப்பட்டு
வந்தவளானகாமக்கிழத்திக்கேன்வாயும்வீறும். (ருஎ)

உரியவன்நீமுன் ஒருகவுன்னேவேட்டதற்குவேறு
கரியுளதாகிற்கூறிக்காட்டெனக்கழறலோடு
மெரிசுடவாடிச்சாய்ந்தவிணர்மலர்க்கொம்பிற்சாம்பித்
தெரியிழைநாணஞ்சாய்ப்பநின்றிதுசெப்புகின்ருள். (ருஅ)

அரவின்வாய்ப்பட்டவைகலாருயிரளித்தஞானப்
புரவலரருளாலெங்கோன்புறம்பியநாதன்வன்னித்
தருவொடுகிணறுங்காணச்செய்தனன்சாறம்மூன்று
கரிகளுமுள்ளவென்ருள்கற்பினுலொப்பிலாதாள். (ருகூ)

மாற்றவணைகைத்துநன்றுநன்றுநின்மன்றல்வேள்விக்
கேற்றனகரியேசொன்ஞயிங்குமக்கரிகண்மூன்றுந்
தோற்றுமேலதுவுமெய்யேயென்றனடோகையோடும்
வேற்றுமையிலாதசாயலிளேயவள்விழுமங்கூரா. (சுo)

வெவ்வுயிர்ப்பெரியவில்போய்மெல்விரனெரிக்குங்கையா
லவ்வயிறதுக்கும்வீழுங்கண்புனல்வெள்ளத்தாழுங்
கொவ்வைவாய்துடிக்குநாணந்தலேக்கொளுங்கூசுமன்னே
தெய்வமேயாவாவென்னுமென்செய்கேன்சிறியேனென்னும். (சுக)

தாதைதாயிறந்தவன்றேதமியளாயிங்குப்போந்த
பேதையேற்காருண்டையபேதுறும்வணிகற்கன்று
மாதுலனுகிஞாதிவழக்கறுத்துரிமையீந்த
நாதனேயேதிலாள்வாய்நவையினிற்காத்தியென்னு. (சுஉ)

அன்றிரவுண்டியின்றித்துயிலின்றியழுங்கிப்பின்னுட்
பொன்றிணிகமலவாவிப்புண்ணியப்புனறேய்ந்தண்ட
நின்றிழிவிமானக்கோயினிரம்பியவழகர்முன்னுச்
சென்றிருதாளில்வீழ்ந்துதன்குறைசெப்பிவேண்டும். (சுரு)

(ருஅ) சாம்பி-புலர்ந்து. (ருகூ) சாறு-கலியாணம்.
(சுo) தோகை - மயில். (சுக) அதுக்கும் - பிசையும். ஆவா-ஐயோ. இது வியப்புக் குறிப்பிடைச்சொல்.
(சுஉ) ஏதிலாள் - மாற்ருள். நவை - பழிமொழி.

அன்றெனக்கணவன்வேட்டவிடத்தினிலதற்குச்சான்றாய்
நின்றவைந்தருவுநீயுங்கிணறுமந்நிலையேயிங்கு
மின்றுவந்தேதிலாள்வாய்நகைதுடைத்தெனைக்காவாயேற்
பொன்றுவலென்றாள்கற்பின்புகழினைநிறுத்தவந்தாள். (௪௪)

அல்லலுற்றழுங்கிநின்றாள்பரிவுகண்டந்தண்கூட
லெல்லையில்கருணைமூர்த்தியருளினாலெவருங்காணத்
தொல்லையின்படியேயன்னாள்சொல்லியகரிகண்மூன்று
மொல்லைவந்திறுத்தகோயிலுத்தரகுணபாலெல்லை. (௪௫)

அன்னபோதிளையாண்மூத்தாட்கொண்டுபோயாலவாயெம்
முன்னவன்றிருமுன்றாழ்ந்துகாட்டுவாண்முகிறோய்சென்னி
வன்னியீதிலிங்கமீதுகிணறிதென்மன்றற்சான்றாத்
துன்னியவென்றாள்கண்டாண்முடித்தலைதூக்கிநின்றாள். (௪௬)

அவ்விடைத்தருவுநீருமன்றுபோலின்றுசான்றா
யிவ்விடைப்பட்டவென்னவதிசயமெவர்க்குந்தேறாத்
தெய்வமுமெளிவந்தங்கைக்கனியினித்திருவினன்னாள்
கைவசப்பட்டதென்றாற்கற்பினுக்கரிதேதம்ம. (௪௭)

மங்கைதன்கற்புமீசனிடத்தவள்வைத்தவன்பு
மங்கணனவட்குச்செய்தவருளையும்வியந்துநோக்கி
மங்கலநகரரெல்லாமகிழ்ச்சியுளாழ்ந்தார்முல்லைத்
தொங்கலான்முதுமணாட்டியொருத்தியுந்துன்பத்தாழ்ந்தாள். (௪௮)

மேதகுவணிகர்மூத்தவினைக்கொடியாளைப்பொல்லாப்
பாதகியிவளாமென்றுபழித்தனர்படிறுபேசிக்
கோதறுகுணத்தினாளைக்குடிப்பழுதுரைத்தாயநீயென்
காதலியாகாயென்றுகணவனுந்தள்ளிவிட்டான். (௪௯)

அந்நிலையிளையாள்கேள்வனடியில்வீழ்ந்திரப்பாளைய
வென்னதுகற்பையின்றுநிறுத்தினாளிவண்மாற்றாளன்
றன்னையிலாதேற்கன்னையாயினாளிவளும்யானு
மின்னுயிருடல்போல்வாழ்வேமெனத்தழீஇத்தம்மினட்டார். (௫௦)

உடம்பினாலிரண்டேயன்றியுயிர்பொருளிரண்டற்றுள்ள
மடம்படுமெழுக்காறற்றுமைந்தருமனையராக
விடம்படுமைவாய்நாகம்விழுங்கிரையொத்துத்தம்மி
லிடம்படுமென்புற்றின்புற்றிருவருமிருந்தார்மன்னோ. (௫௧)

---

(௪௬) தூக்கி - கவிழ்த்து. (௫௧) இடம்படும் - மிகுந்த.

அருந்ததியனையாள்கேள்வற்காயுளுமானுச்செல்வப்
பெருந்தனநிறைவுஞ்சீருமொழுக்கமும்பீடும்பேறு
தருந்தவநெறியுங்குன்றாத்தருமமும்புகழும்பல்க
விருந்தனள்கமலச்செல்வியென்னவீற்றிருந்துமன்னோ. (௫௨)

பொன்னவிர்கமலம்பூத்தபொய்கைசூழாலவாயெம்
முன்னவன்விளையாட்டெல்லைகண்டியார்மொழியவல்லா
ரின்னமுமளவின்றென்பவென்குருநாதசாமி
சொன்னவாறுங்கட்கெண்ணெண்காதையுஞ்சொன்னேனம்ம. ()

எழுசீரடியாசிரியவிருத்தம்.

என்றுதென்மலைமே லிருந்தமாதவத்தோ னின்னருட்குருப ரன்றனையு, மன்றவன்றிருவாய்மலர்ந்தவாசகமு மருள்கனிந்தொழுகவுள்ளடக்கித், தென்றமிழால வாய்த்தனிப்பதியைச் சென்னிமேற் பன்னிரண்டும்ப, ரொன்றவைத்திமையா வங்கயற்கண்ணியுடனுறை யொருவனை நினைந்தான். (௫௪)

பரவசமடைந்து வழிகவர்ந்துண்ணும் பழிப்புலவேடர்போயொளிப்ப, விருள்வெளிகடந்து திருவருள்வழிச்சென் றெண்ணிலாச் சராசரமனைத்தும், புரைவறநிறைந்து காட்சிகண்காண்பான் புதைபடத் தனித்தபூரணமா, யுரையுணர்விறந்த வுண்மையானந்த வுணர்வினை யுணர்வறவுணர்ந்தான். (௫௫)

வன்னியுங்கிணறுமிலிங்கமுமழைத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௭௩ - க்கு - திருவிருத்தம் - ௩௩௫௦.

---

(௫௩) குருநாதசாமி என்றது - முருகக்கடவுளை.

(௫௪) தென்மலை-பொதியமலை. சென்னி என்றது - பிரமரந்திரத்தை. பன்னிரண்டும்பர் என்றது - துவாதசாந்தமாகிய நிராமயத்தானத்தை.

(௫௫) பரவசமடைந்து என்றது - பசுகரணங்கெட்டுச் சிவகரணமாய் நிற்றலை. புலம் - பஞ்சேந்திரியம். இருள்வெளி என்றது - கேவல சகலங்களை; கேவலம் ஆன்மா இச்சாஞானக் கிரியைகளின்றி ஆணவமலத்தோடொன்றிநிற்பது, சகலம்-மாயாமலத்தால்போகபோக்கியங்களைப்பொருந்தி எல்லாயோனிகளிலும்புக்குழல்வது. காட்சி கண்காண்பான் புதைபட என்றது - ஞாதுரு ஞானநேயங்களாகிய சங்கற்பனைகளை. (௫௫) உரை என்றது-விந்துவின் காரியமாகிய சொற்பிரபஞ்சத்தை உணர்வு என்றது - கருவிகளைப்பற்றியுணரும் சுட்டுணர்வை.

சிவமயம்.

அறுபத்தைந்தாவது,

# அருச்சனைப்படலம்.



எழுசீரடியாசிரியவிருத்தம்.

கன்னிதன்வதுவைக்கரிகளாயிலிங்கக் கடவுளுங்கவைக்கருங் கோட்டு, வன்னியும்படுநீர்க்கூவலும்வந்தவழியிதுமதுரைநாயகனைச், சென்னியில்வைத்த முனிவனைப்பூசை செய்துமாதவரொருங் கெய்தி, பன்னிறமலர்தூஉயாலவாயானைப்பரவியபரிசதுபகர்வாம்.

போதவானந்தத்தனிக்கடல்பருகும்புயல்புரைமுனிவனைவசிட்ட மாதவனுதிமுனிவருமுலோபாமுத்திரைதன்னொடும்வரித்துப் போதொடுசாந்தமான்மதந்தீபம்புகைமுதற்கருவிகைக்கொண்டு மேதகுசிறப்பாலருச்சனைசெய்துபின்னுமோர்வினவுரைசெய்வார்.

கொச்சகக்கலிப்பா.

கோட்டஞ்சிலைகுனித்தகூடற்பிரானுடல்
கேட்டஞ்செவிபடைத்தபேறடைந்தேங்கேட்டபடி
நாட்டங்களிப்பநறுமலர்தூஉய்க்கண்டிறைஞ்ச
வேட்டங்கள்யாங்களெனவோதினர்மெய்த்தவரே. (௩)

என்றவரவோரெதிரேமுகமலர்ந்து
குன்றமடக்குங்குறுமுனிவன்கூறுவா
னன்றுமுனிகாளிதனைநானுள்ளத்தெண்ணியாங்
கொன்றமொழிந்தீரென்றன்பின்னும்வியந்தோதுவான். (௪)

பண்ணுன்மறைமுடியுந்தேருப்பரசிவனை
யெண்ணலளவிறந்தவெக்கலையாற்கண்டுமுளக்
கண்ணலறியாதார்வீட்டின்பங்காண்பரோ
மண்ணுதியாறாறுநீத்ததனிமாதவரே. (௫)

அஞ்செவியிலூறுபடக்கேட்டபடியாலவாய்ப்
பஞ்சமுகச்சோதிப்பரனைப்போயர்ச்சித்து

(க) வதுவை-கலியாணம். (உ) வரித்தல்-அழைத்தல். கருவி என்றது - பூஜோபகரணங்களை. (௩) கோடு - சிகரம். இது சினையாகுபெயராய் முதலைவிளக்கிநிற்றலின் மேருவென்பது பொருள்.

(௪) குன்றம் - விந்தமலை. (௫) மண்ணுதியாறாறும் என்றது-முப்பத்தாறுதத்துவங்களை. (௬) பஞ்சம்-ஐந்து. நினையாவழி நினைதலாவது - தற்போத வழியாலன்றி அருட்போதவழியால் நினைத்தல். வஞ்சவினை - ஆகாமியம்.

நெஞ்சநெகக்கண்டுநினையாவழிநினைந்து
வஞ்சவினைவேர்களைவான்வம்மின்களென்றானே. (௬)

மங்கலவோரைவருதினத்தில்வானிழிந்த
கங்கைபடிந்துலகநாயகனைக்கைதொழுது
புங்கவர்முன்சங்கற்பஞ்செய்தனுச்சைபூண்டொழுகி
யங்கவர்வாயாசிமொழிகேட்டகமகிழ்ந்தே. (எ)

ஐம்புலனுங்கூடற்பெருமானடியொதுக்கி
நம்பனுருவைந்தெழுத்துநாவாடக்கைகூப்பித்
தம்புனிதசைவதவத்தெய்வத்தேர்மேற்கொண்
டும்பர்வழிநடக்கலுற்றார்கணற்றவரே. (அ)

செய்யசடையர்திருநீறுசண்ணித்த
மெய்யர்தவநோற்றிளைத்தமேனியினருட்புறம்புந்
துய்யரணிகண்டிகையர்தோலுமருங்குடைய
ரையதவத்துக்கணிகலம்போற்போதுவார். (௯)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

புண்ணியந்தழைக்குந்தெய்வத்தலங்களும்புலன்கள்வென்றோர்
நண்ணியமனமுந்தீர்த்தநதிகளுந்தவத்தோர்நோற்கும்
வண்ணமுநோக்கிநோக்கிமலயமாமுனிவன்காட்டக்
கண்ணிணைகளிப்பநோக்கிக்கைதொழுதிறைஞ்சிச்செல்வார். (௧௦)

சீறுகொளிலங்கைவேந்தைச்செகுத்திடவிராமன்பூசித்
தாறணிவிருபக்கண்ணனருள்பெறுதலமீதும்ப
ரேறிவீழ்ந்திறந்தோர்முன்னமெண்ணியதெண்ணியாங்கே
மாறியபிறப்பினல்குமலையிதுகாண்மின்காண்மின். (௧௧)

சுரபிநீள்செவியிலிங்கச்சுடருருவாயினுன்ற
னிரவினிற்றிருத்தேர்மன்றனடக்குமூரிவ்வூர்மேலை

---

(எ) மங்கலவோரை - சுபவிலக்கினம். உலகநாயகன்-விச்சுவநாதர். உலகம் - விச்சுவம். அனுச்சை - உடன்பாடு. (௯) சண்ணித்தல் - பூசல். (௧௦) மலயம் - பொதியமலை. (௧௧) செகுத்தல்-கொல்லல். விருபக்கண்ணன் - விரூபாக்ஷராகிய சிவபெருமான். அருள்பெறுதலம்-ஏமகூடம். உம்பரென்றது-மலையினுச்சியை மாறியபிறப்பு-மறுமை. மலை - திருப்பருப்பதம். (௧௨) சுரபி பசு இரவு-சிவராத்திரி. இவ்வூர் என்றது-கோகருணத்தை. தேள்மாதம்-கார்த்திகைமாதம். வேள்வி - திருவிழா. அவ்வூர் - திருவஞ்சைக்களம்.

யுரவுநீர்க்கரைத்தேண்மாதத் துயர்ந்தகார்த்திகையிற்றேரூர்ந்
தரவுநீர்ச்சடையான்வேள்விநடக்குமூரவ்வூர்காண்மின். (௧௨)

விற்பயிரடக்கைவேடன்மென்றவூன்பாகம்பார்த்தோன்
பொற்புறுகிரியீதண்டம்புழைபடவிடத்தாணீட்டி
யற்புதன்காளிதோற்பவாடியதிதுமாநீழற்
கற்புடையொருத்திநோற்கும்பிலமிதுகாண்மின்காண்மின். (௧௩)

திருமறுமார்பன்காவற்செயல்பெறவரனைப்பூசித்
திருகரமுகிழ்த்துநேர்நின்றேத்திடமிதுவாமோத்தி
னுரைவரம்பகன்றமுக்கணுத்தமன்சந்தைகூட்டி
யருமறையறவோர்க்கோதுவித்திடமதனைக்காண்மின். (௧௪)

அடிமுடிவிலங்கும்புள்ளுமளந்திடாதண்டங்கீண்டு
நெடுகியநெருப்புநின்றநிலையிதுமுள்வாய்க்கங்க
வடிவெடுத்திருவர்நோற்குமலையிதுபலவேறாழி
யிடையுறமுன்னும்பின்னுமிருக்குமிக்குன்றைக்காண்மின். (௧௫)

அவுணரிற்கள்வனனவந்தகற்காய்ந்துமூன்று
புவனமுங்கவலைதீர்த்தபுண்ணியன்புறமீதாகும்
தவலரும்புரங்கண்மூன்றுந்தழனுதற்றிருக்கண்சாத்திப்
பவமறுமூவரன்பிற்பட்டவன்பதியைக்காண்மின். (௧௬)

சத்தியஞானானந்தத்தத்துவமசைவற்றாடு
நித்தியபரமானந்தநிறையருண்மன்றமீது
முத்தியங்குதித்தோரெய்தும்பதியிதுமுதனானென்கும்
பத்தியிற்பூசித்தேத்தும்பதியிதுவாகும்பார்மின். (௧௭)

பிரமன்மான்முதலாந்தேவர்பிரளயத்திறவாவண்ணம்
பரமனார்தோணியேற்றும்பன்னிருநாமம்பெற்ற

---

(௧௩) வேடன்-கண்ணப்பர். கிரி-திருக்காளத்திமலை. ஆடியது என்றது-திருவாலங்காட்டை. ஒருத்திஎன்றது - உமாதேவியை. பிலம்-காமக்கோட்டிபீடம். (௧௪) திருமறுமார்பன்-திருமால். இடம்-திருமாற்பேறு. ஓத்து-வேதம். ஓதுவித்திடம் - திருவோத்தூர்.

(௧௫) விலங்கும்புள்ளுமென்றது-பன்றியுமன்னமுமாகிய விஷ்ணுவையும் பிரமனையும். (௧௬) புரம் என்றது - திருக்கோவலூரை. பவம்-பிறப்பு மூவராவர் - வித்துன்மாலி, தாருகாக்கன், கமலாக்கனென்னுந் திருபுரத்தவரை. பதிஎன்றது - திருவதிகையை.

(௧௭) சத்திய ஞானானந்தம் – உண்மையறிவானந்தம். மன்றம் திருவம்பலமாகிய சிதம்பரம். பதிஎன்றது - திருவாரூரை. ஏத்தும் பதி - வேதாரணியம். (௧௮) பன்னிருநாமம்பெற்றபுரம் - பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சை, கழுமலம் என்னும் பன்னிருநாமங்களையுடைய சீகாழி. மருந்துறைபதி என்றது - வயித்தீசரெழுந்தருளியபுள்ளிருக்கும் வேளூரை.

புரமிதுசடாயுசம்பாதிகள்பெரும்பூசைசெய்ய
வரமளித்திருணோய்தீர்க்குமருந்துறைபதியீதாகும். (கஅ)

மதிநுதலிமயச்செல்விமஞ்ஞையாய்வழிபட்டேத்து
மிதுதுலாப்பொன்னித்தானமெம்மனோர்மூன்றுகோடி
மதிபெறுமுனிவர்வந்துவழிபடுமூதூரீதிப்
பதியறக்கடவுள்பூசைபண்ணியதானங்காண்மின். (ககூ)

கோடுநான்குடையவேழந்தாருகன்குறைத்தகோட்டைப்
பாடறநோற்றுப்பெற்றபதியிதுமாலைசாத்துந்
தாடகைமானங்காப்பான்றாழ்ந்துபூங்கச்சிட்டீர்க்கும்
பீடுறுகலையனன்பினிமிர்ந்தவெம்பிரானூரீதால். (உ0)

கரிமுகத்தவுணற்காய்ந்துகரிமுகத்தண்ணல்பூசை
புரிசிவநகரமீதுதாருகற்பொருதுசெவ்வே
ளரனையர்ச்சித்ததார்க்கீழ்மணற்குறியான்பாலாட்டிப்
பரன்முடிமாலைசூடுஞ்சேய்வளம்பதியீதாகும். (உக)

---

(ககூ) மஞ்ஞை - மயில். துலாப்பொன்னித் தானம்-துலாரவியில் தன்னில் மூழ்குவோர்க்கு முத்திதரும் காவிரி தீர்த்தத்தையுடையதிருமாயூரம். மூதூர் என்றது-திருக்கோடிகாவென்னுந்திருப்பதியை. அறக்கடவுள் - இயமன். தானம் என்றது - திருத்தருமபுரத்தை.

(உ0) தாபதன் என்றது-முற்கலமுனிவர்குமாரராகிய சிவப்பிரிய முனிவரை. தாரகன் எனவும் பாடம். பதி - திருவெண்காடு. தாடகை மானங்காப்பான் றாழ்ந்துபூங் கச்சிட்டீர்க்கும் பீடுறுகலையனன்பி னிமிர்ந்த வெம்பிரான் என்றது - தாடகையென்னு மோரரக்கி சிவபெருமானை வழிபட்டுப்பூசித்துவருங்காலோர்நாள் திருப்பள்ளித்தாமஞ்சாத்தக்கைகளைத்தூக்கியகாலத்து இடையிற் புனைந்த கலை நழுவ அதை அவள்கண்டு கவலையுறும்போது சிவபெருமான் தலைவணங்கி பூசனையையேற்று அவ்வாறேநின்றருள, அதைக் கண்டசோழர்பிரான் வளைந்திருந்த பெருமானை நேர் நிறுத்தி தரிசிக்க முயன்றும் அதுகைகூடாமையால் மனம் வருந்துவதைக் குங்கிலிக்கலயநாயனாரறிந்து அங்குச்சென்று சிவலிங்கப்பெருமானுக்கும் தங்கழுத்துக்கும் கயிறுபூட்டித் தமது சிவநேயவலியால் வலித்து நேர்நிறுத்திய திருப்பனந்தாளென்னுந் திருப்பதியை.

(உக) கரிமுகத்தவுணன்-கயமுகாசுரன். கரிமுகத்தண்ணல்-விநாயகர். சிவநகரம்-திருச்செங்காட்டிலுள்ளகணபதீச்சரம். சேய்வளம்பதி - திருச்சேய்ஞலூர்.

கறுவிவீழ்காலன்மார்பிற்சேவடிக்கமலஞ்சாத்திச்
சிறுவனுக்காயுளீந்தசேவகப்பெருமான்மேய
வரைபுனற்பழனமூதூரதுவிதுவானைதந்த
குறையுடற்போர்வைபோர்த்தகொற்றவன்கோயில்காண்மின். ()

பங்கயக்கடவுளீந்தபரிகலம்வாங்கிக்கொண்ட
வங்கணனிடமீதாடலனங்கனையமுதுசெய்த
செங்கணனிருக்கையீதுமேழகச்சென்னிதன்னை
மங்கலமாமற்கீந்தமருகனிருக்கைகாண்மின். (௨௩)

திண்டிறலவுணன்றன்னைப்பெருவிரற்றீட்டுநேமி
யுண்டிடவிருந்தாக்கொண்டோனுறையதாமொருத்திமன்றல்
கண்டிடுகரியாய்க்கூவல்கண்ணுதலிலிங்கம்வன்னி
யெண்டிசையறியக்காட்டநின்றிடமிதனைக்காண்மின். (௨௪)

சாமகண்டத்தன்றன்னைத்தானருச்சித்ததென்னர்
கோமகன்பிரமசாயைகுறைத்ததிப்பதியாங்கங்கை
மாமகந்தோறும்வந்துவந்துதற்படிந்தோர்விட்டுப்
போமகம்போகமூழ்கும்புனிதநீர்ப்பதியைக்காண்மின். (௨௫)

குருமொழிதந்தைக்கீந்தெங்குருவுறைமலையீதெங்கோன்
கருமுகில்வண்ணத்தண்ணல்கண்ணிடந்தடியிற்சாத்தப்
பொருவிறலாழியீந்தபுரமிதுநந்தியெந்தை
திருவுருவடையநோற்றதலமிதுதெரிந்துகாண்மின். (௨௬)

(௨௨) சிறுவன் - மார்க்கண்டேயர். சேவகம் — வீரம். மூதூர் என்றது-திருக்கடவூரை. யானை என்றது-தாருகா வனத்து முனிவர்கள்விடுத்தயானையை. கோயில் என்றது - திருவழுவூரை.

(௨௩) பங்கயக்கடவுளீந்தபரிகலம் என்றது-பிரமகபாலத்தை. இடம் என்றது-திருக்கண்டியூரை. அனங்கன்-மன்மதன். இருக்கை என்றது-திருக்குறுக்கையை. மேழகம்—ஆடு. மாமன் என்றது-தக்கனை. மருகனிருக்கை என்றது - திருப்பறியலூரை.

(௨௪) அவுணன் - சலந்தரன். நேமி - சக்கரம். உறையிது என்றது - திருவிற்குடியை. இடம் என்றது-திருப்புறம்பயத்தை.

(௨௫) தென்னர்கோமகன் - வரகுணபாண்டியன். பதி என்றது - திருவிடைமருதூரை. அகம்-பாவம். நீர்ப்பதி என்றது-கும்பகோணத்தை. (௨௬) குரு என்றது-முருகக்கடவுளை. மலை என்றது-திருவேரகமென்னும் சாமிமலையை. அண்ணல்-திருமால். புரம் என்றது-திருவீழிமிழலையை. எந்தை என்றது-சிவபெருமானை. தலம் என்றது - திருவையாற்றை.

முடங்குகாற்சிலந்தியானைமலைமகண்முளரிநாட்டத்
தடங்கடல்வண்ணனேற்றதவநகரிதுமுச்சென்னி
மடங்கலேறனையானுமவரையிதுகுடைந்தோர்பாவ
மடங்கலும்பருகும்பொன்னியாறிதுகாண்மின்காண்மின். (உஎ)

இந்நிவெண்முத்தாரமெனக்கிடந்திலங்குஞ்சென்னி
மன்னவனுடைதென்பதமிழறிவையைப்பேர்யா
றந்நிதுறக்கமண்மேல்வழுக்கிவீழ்ந்தாங்குத்தோற்றித்
தென்னவனுடசெய்த்தாத்தெரிவதேகாண்மினென்றான். (உஅ)

பொங்கர்மென்புதல்களென்னப்பொருநதிசிறுகாலென்னக்
கொங்கலர்தடஞ்சிற்றூறற்குழியெனப்பழனஞ்சில்லி
தங்குமென்பாத்தியென்னத்தாழைதாழ்சிறுபுல்லென்னப்
பைங்குலைக்கதலிமஞ்சட்பாத்திபோற்றோற்றக்கண்டார். (உகூ)

பன்னிறமாடமாலையுபரிகைப்பந்திசெய்குன்
றன்னம்வெண்குருகுசெம்போத்தழகுபைங்கிள்ளைமஞ்ஞை
யின்னைபுள்வேறுவேறாயொழுங்குபட்டிருப்பதொப்ப
மின்னுபூங்கொடியபுட்கள்சிறகெனவிதிர்ப்பக்கண்டார். (௩0)

மேற்படி - வேறு.

கண்டநாட்டநகர்வளங்கணடந்துநடந்துகண்கள்விருந்
துண்டமீளவகல்விசும்பாறேழுகிவலமாவருமுனிவர்
விண்டுழாவுங்கொடுங்குன்றுந்தளிப்புத்தூரும்விரிபொழில்வாய்
வண்டுபாடன்மயிலாடல்பயிலாடானைவளநகரும். (௩க)

சுரதவேதம்பரவுபுனவாயினகருந்தவசித்த
ரிரதவாதஞ்செய்துசிவனுருவங்கண்டவெழினகரும்

(௩உ) சரதம்-உண்மை. எழில்நகர் என்றது - திருப்பூவணத்தை. வரதன்-அடியார் வேண்டும் வரத்தைக்கொடுப்பவன். கானப்பேர் - கானையார்கோயில். சுழியல் - திருச்சுழியல்.

(உஎ) மலைமகள் - உமாதேவி. கடல்வண்ணன்-திருமால். தவநகர் என்றது - திருவானைக்காவை. முச்சென்னி-திரிசிரா வென்னும் அரக்கன். வரை - திரிசிராமலை. பொன்னி - காவிரிநதி.

(உஅ) தமிழறிவையை என்றது-ஆளுடைய பிள்ளையார் விடுத்ததேவாரத்தமிழ்வேதச்சுவையையறிந்தவையைநதியை. துறக்கம்-விண்ணுலகம் சேய்த்து - தூரம். (உகூ) பொங்கர் - சோலை. புதல்-புதர். ஊறல்குழி-ஊற்றுக்குழி. பழனம் - வயல். சில்லி-சிறுகீரை.

(௩0) மாலை - வரிசை. குருகு - நாரை. விதிர்த்தல்-அசைதல்.

(௩க) கொடுங்குன்று - திருக்கொடுங்குன்றம். தளி-கோவில்.

வரதனுகியரனுறையுங்கானப்பேருமலைமகளை
விரதயோகநெறிநின்றுமணந்தார்சுழியல்வியனகரும். (நூஉ)

மறவாளிலங்கையிறைமகனைவதைத்தபழியான்மருண்டரியன்
றறவாணேமியளித்தவனையர்ச்சித்தகன்றவணிநகரும்
நிறவாண்முத்தும்வயியேநிரையும்பொன்னும்விளைபொருநைத்
துறைவாய்ப்பிறவாக்கடவுள்வேய்வயிற்றிற்பிறந்ததொன்னகரும்()

துளபக்குன்றைக்கொன்றைமுடிக்குன்றமாக்குந்தொன்னகரும்
அளகைப்பொறித்தகொடியிளையோன்மானேர்நோக்கினானைமகள்
புளகக்குன்றைமணர்ந்துமுதலிருந்தபொருப்பும்போர்விசயன்
வளைவிற்றூக்கவடுக்கிடந்தமுடியோன்மேயவளநகரும். (நூச)

கொண்டல்படியுந்திருவாப்பனூருந்தொழுதுகுளிர்திரைக்கை
வண்டுபடியுநகமலமுகைவையைப்பிராட்டியெதிர்வணங்கிக்
கண்டுபணிந்துதிசையெட்டும்விழுங்கியண்டங்கடந்துலக
முண்டநெடியோனெனவுயர்கோபுரமுன்னிறைஞ்சியுள்புகுதா. ()

மறுகுதோறும்பணிந்தெழுந்துவளைந்துவளைந்துபொற்கோயில்
குறுகிவிதியாற்பொற்கமலங்குடைந்துசெய்யுங்குறைநிறுவி
யுறுதிபெறவைந்தெழுத்தெண்ணீயூற்றுமதத்துநாற்றடந்தோட்
சிறுகண்ணவைங்கரத்துச்சித்தியானையடிவணங்கா. (நூசு)

மும்மையுலகுநான்மறையுமுறையாலீன்றவங்கயற்க
ணம்மையடிகண்முடியுறத்தாழ்ந்தன்புகொடுத்தின்னருள்வாங்கி
வெம்மையொளிகான்மணிக்கனகவிமானத்தமர்ந்ததனிச்சுடரின்
செம்மையடித்தாமரைவேணிச்சிரமேன்மலரப்பணிந்தேத்தா. (நூஎ)

---

(நூநூ) மறம் - கொலைத்தொழில். அரி-இராமமூர்த்தி. வாள்-ஒளி. அணிநகர்என்றது - திருவிராமேச்சுரத்தை. வேய்-மூங்கில். தென்னகர் என்றது - திருநெல்வேலியை.

(நூச) துளபக்குன்று-திருமால். கொன்றைமுடிக் குன்றம்-சிவபெருமான். தொன்னகர்-திருக்குற்றாலம். அளகு-கோழி. பொறித்தல் - எழுதல். இளையோன்-முருகக்கடவுள். ஆனைமகள்-தெய்வயானை. முதல் - இடம். பொருப்பு-திருப்பரங்குன்றம். விசயன்-அருச்சுனன். வளநகர் என்றது - திருவேடகத்தை.

(நூரு) நெடியோன்-திருமால்.

(நூசு) மறுகு-வீதி.

மேற்படி - வேறு.

அன்றிருபோதுமுண்டிதுறந்திராவறுக்குந்தீவா
ளென்றெழுமுன்னீராடிகியதிகளியற்றியைந்தும்
வென்றுளத்தன்புபாயவிளைமுழுமுகலைப்பார்மேன்
மின்றிரண்டென்னநின்றவிமானமீதிருப்பக்கண்டார். (ருஅ)

வாசமஞ்சனந்தேன்கன்னற்பைங்கனிமறுவிலானைந்
தாசறுமமுதமைந்துதென்மலையாரம்வாசம்
வீசுதண்பனிநீர்வெள்ளமான்மதம்விரைமென்போது
தூசணிமணிப்பூணல்லசுவையமுதின்னதாங்கா. (ருகூ)

சதவுருத்திரத்தாலாட்டிமட்டித்துச்சாத்திப்பூட்டிப்
பதமுறமனுவாலட்டபாலமுதருத்திப்பஞ்ச
விதமுறுவாசம்பாகுவெள்ளிலையளித்துப்போக
முதவுறுதூபதீபாதிகள்பலவுவப்பநல்கா. (சு0)

ஐம்முகச்சைவச்செந்தீயகத்தினுந்துடுவையார
நெய்ம்முகந்தருத்திப்பூசைநிரப்பிநால்வேதஞ்சொன்ன
மெய்ம்மனுநூற்றுப்பத்தான்மூவிலைவில்லநீலங்
கைம்மலரேந்திச்சாத்திக்கடவுளையுவப்பச்செய்து. (சுக)

வாசமஞ்சனநீரோடுமந்திரமலர்கைக்கொண்டு
பூசையின்பயனைமுக்கட்புண்ணியன்கையினல்கி
நேசநெஞ்சுறக்கண்கணிறையநீருறிச்சோர
வீசனையிறைஞ்சியாருமஞ்சலித்தேத்தல்செய்வார். (சுஉ)

---

(ருஅ) என்று-சூரியன். ஐந்தும்என்றது - பஞ்சேந்திரியங்களை.

(ருகூ) மஞ்சனம்-நீர். கன்னல் - கருப்பஞ்சாறு. ஆனைந்து- பஞ்சகௌவியம். அமுதம்ஐந்து-பஞ்சாமிர்தம். தென்மலை-பொதியமலை. ஆரம் - சந்தனம். மான்மதம் - கஸ்தூரி. விரை - வாசனை. போது - மலர். தூசு — வஸ்திரம்.

(சு0) சதஉருத்திரமாவது - யசுர்வேதம் பிரமன்முதல் சதாசிவமீறாக முறையே யேற்றங்கூறுதலால், அதனுள் நடுக்கண்டமாகிய சதவுருத்திர மநுக்களை யோகநாமத்தால் உருத்திரகணங்களைச் சங்காக்கிரமத்தில்வைத்து அதீத சிவபரியந்தம் வரைப்படுத்திக்கூறுதல். மட்டித்து - பூசி. மநு என்றது - சுவாகாந்த மூலமந்திரத்தை; அல்லது பஞ்சவாயு மந்திரம் என்பதுமொன்று.

(சுக) ஐம்முகச் சைவச்செந்தீ என்றது - பஞ்சப்பிரமமந்திரங்களாற் செய்யும் சிவாக்கினியை துடுவை - நெய்த்துடுப்பு. மெய்ம்மனு நூற்றும்பத்து என்றது - சகஸ்திரநாமங்களை. மூவிலைவில்லம்-மூன்று தளம்வாய்ந்த வில்வம். நீலம்-நீலோற்பலம். கைமலர்-கைகளாகிய மலர்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

பழியொடுபாசமாறுகெடவாசவன் செய்பணிகொண்டவண்ட சரணம், வழிபடுதொண்டர்கொண்ட நிலைகண்டுவெள்ளிமணிமன் றுளாடிசரணஞ், செழியன்விளிந்திடாதபடிமாறியாட றெளிவித்த சோதிசரண, மெழுகடல்கூவிமாமியுடன்மாமனூட விசைவித்தவா திசரணம். (சஙு)

வெங்கரியாவிசோரநரசிங்கவாளிவிடுவேடரேறுசரணம்
புங்கவர்தேறவாதிமறையுட்கிடந்தபொருளோதுபோதசரணம்
வங்கமதேறிவேலைமகரம்பிடித்தவலையாண்மணாளசரணங்
கங்கணநாகம்வீசிநகரெல்லைகண்டகறைகொண்டகண்டசரணம். ()

மைந்தனிலாழிமேருமகவானகந்தைமடிவித்தசித்தசரணஞ், சுந்தர நாமவாளிபணிகொண்டுகிள்ளிதொகைவென்றவீரசரணம், வெந்தி

---

(சஙு) பழி என்றது-விருத்திராசுரனைக் கொன்ற பிரமஹத்தி யை. பாசமென்றது-ஆணவம், மாயை, கன்மம், திரோதானம், மா யேயம் என்னும் பஞ்சமலங்களை. இவற்றுள் கன்மமலமாவது, நெ ல்லின்கண் முளை, முளைத்தற் சத்தியைத் தோற்றுவிப்பதுபோல, உயிரின்கணுள்ள சுகதுக்கங்களை முதற்காரணமாய் நின்று தோற் றுவித்தல். மாயாமலமாவது-முளைப்பதற்கு அநுகூலஞ்செய்து உட னிற்குந் தவிடுபோல அச் சுகதுக்கங்கள் அவ்விடத்துத் தோன்று தற்குத்துணைக்காரணமாய் நின்று தன்காரியமாகிய தநுகரணமுத லியவற்றையும்.உயிரையும்இயைவித்துநிற்றல். ஆணவமலமாவது- அம்முளை அவ்விடத்துத் தோன்றுதற்கு நிமித்தகாரணமாகிய உமி யைப்போலவற்றை முறுகுவித்து, அச்சுகதுக்கங்களை யுயிர் நுகரு ம்வண்ணம் நிலைபெறுத்துதல். மாயேயமலமாவது-அச் சுகதுக்கவி ளைவுகளுக்கெல்லாம் இடனாய்நின்று, ஆன்மாவின் அறிவு, இச்சை, செயல்களையேகதேசப்படுத்தி நிற்றல். திரோதானமலமாவது - அ ம்மலங்கட்கு அநுகூலமாய் நின்று பக்குவம்வருங்காறும் அவ்வாண் மாவை மறைத்துப் பாகம்வருவித்து நிற்றல். தொண்டராவார்-பத ஞ்சலிவியாக்கிரபாதர். நிலை என்றது - திருநடந் தரிசித்துண்ணும் நியமத்தை.

(சச) கரிஎன்றது-சமணரால் விடுக்கப்பட்ட யானையை. புங்க வர்என்றது-கண்ணுவர்முதலிய முநிவர்களை. கறை-கருநிறம்.

(சரு) மைந்தன் என்றது - உக்கிரகுமார பாண்டியனை. ஆழி- கடல்; ஆழத்தையுடையதென்னும் பொருளது. மகவான் - இந்திர ன். கிள்ளி - (விக்கிரமச்) சோழன். தொகை என்றது - சேனைகளி ன்கூட்டத்தை. மாறன்என்றது - அபிடேகபாண்டியனை. கல்லின் மாதர் என்றது-பட்டமங்கையென்னுந் திருப்பதியில் மூற்பட்டபா றை வடிவமைந்த இயக்கமாதரறுவரை.

றன்மாறன்முன்கலுருவானைகன்னன்மிசைவித்தசித்தசரண, மூந்
தியகல்லின்மாதர்பெறவட்டசித்திமுயல்வித்தயோகிசரணம். (சரு)

திருமணிமைந்தன்மைந்தன்முடிசூடவிற்றதிருமல்குசெல்வசரண
மருமகனென்றுமாமனுருவாய்வழக்குவலிபேசுமைந்தசரணங்
குருமொழிதந்துநாரைகுருவிக்குவீடுகுடிதந்தவெந்தைசரணம்
வருபழியஞ்சிவேடமகனுக்கிரங்குமதுராபுரேசசரணம். (சசு)

விருத்தகுமாரபாலவருண்மேனிகொண்டுவிளையாடுமெண்ணல்சரண
குரத்தியைநச்சுபாவியுயிருண்டுசோரிகுடைவாகைவேலசரணங்[ந்
கருத்திசைபாணனுளினிசைபாடிமாறுகளைவேதகீதசரண
நரித்திரண்மாவைமீளநகரங்கலங்கநரிசெய்தநம்பசரணம். (சஎ)

முற்பகலாறிரண்டுசிறுபன்றியுண்ணமுலைதந்தவன்னைசரணம்
பொற்புறுமாயவாவையடலேறுகொண்டுபொருதட்டசிட்டசரணம்
பற்பலஞாலமெங்குமடையப்பிரம்புபடுமெட்டமூர்த்திசரணங்
கற்பினொருத்திமன்றலறிவிக்கமூன்றுகரிதந்தவள்ளல்சரணம்.(சஅ)

அளவைகளாலும்வேத முதனூல்களாலு மயன்மாயனாலுமளவா
க், களவையுனக்குநாம குணசின்னசாதி கதிசெய்தியில்லையவையு,
முளவெனயாமறிந்து துதிசெய்யவேகொலுலகஞ் செயன்பினெளி
தாய், விளையருண்மேனிகொண்டிவ் வறுபத்துநாலுவிளை யாடல்
செய்தபடியே. (சகூ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

எனத்துதித்தவசிட்டாதி யிருடிகளைக்குறுமுனியை யெறிதே
னீப, வனத்துறையுஞ்சிவபெருமா னிலிங்கத்தின் மூர்த்தியாய் வந்
துநோக்கிச். சினத்தினைவென்றகந்தெளிந்தீர் நீர்செய்த பூசைதுதி

---

(சசு) மைந்தன்மைந்தன் என்றது - உக்கிரகுமார பாண்டியன் பேரனாகிய அபிடேகபாண்டியனை. (சஎ) சோரி-உதிரம். வாகை-வெற்றிமாலை. மாறு என்றது - பகைவனாகிய ஏமநாதனை.

(சஅ) ஒருத்தி என்றது - வைசியப்பெண்ணை. மன்றல்-கலியாணம். கரி - சாட்சி. (சகூ) அளவை என்றது - காட்சி, அநுமான முதலியபிரமாணங்களை. வேதமுதனூல்களென்றது-வேதமுதலிய முதனூல், வழிநூல், சார்புநூல்களை. வேதமுதலியநூல்களும் ஓரளவையேயாதலின் வேறுபிரித்துக்கூற லென்றுக்கெனின், எனைக் காட்சியனுமானங்கள் போலாது, அறியக்கூடாத பொருளை ஆத்த வாக்கியமாக்கொண்டுணரநிற்றலின்.

(சகூ) சின்னம் - குறி. கதி - பிறப்பு. செய்தி - தொழில்.

தெய்வத்தான, மனைத்தினுக்குமனைத்துயிர்க்கு நிறைந்துநமக்கான ந்தமாயிற்றென்று. (ருo)

சிறந்தவருள்சுரந்துகுரு முனியைவருகென்றுகரஞ் சிரமேல் வைத்துப், புறந்தடவியெமையொப்பாய் நீயேநின்கற்புடைய பொ லங்கொம்பன்று, எறந்தழையு முமையொப்பா ளாதலினு லுமை யொப்பா ரகிலத்தியாரே, நிறைந்ததவம் புரிந்தோனுந் தவத்துறுதி பெற்றோனுநீயேயன்றோ. (ருக)

உனக்கரிய வரமினியாந் தருவதெவனுனக்கரிதா வொன்றுங் காணே, மெனக்கருணைசெய்திலிங்கத் திடையிச்சைவடிவாய்ச்செ ன்றிருந்தானாகத், தனக்கரியவரால்குஞ் சிவலிங்கந்தன் பெயராற் ருபித்தான்றன், னினக்கருணைவசிட்டாதி முனிவர்களுந் தம்பெய ரா லிலிங்கங்கண்டார். (ருஉ)

எத்தியருச்சனைசெய்து நினைவிலரிதாயன்பி லெளியவட்ட, மூர்த்தியையங்கயற்கண்ணி யன்பனைமுப்போதும்போய் முடிதாழ் ந்தின்பம், பூத்தமனத்தினராகிக் கருவித்தேன்பொதிந்தசிறு புட் போலந்த, மாத்தலனில்வசிட்டாதி முனிவர்தபோ வனஞ்செய்து வதிந்தார்மன்னோ. (ருந)

அருச்சனைப்படலம் முற்றிற்று.

ஆ படலம் எச - க்கு - திருவிருத்தம் - ௩௩சுந.

---

## திருவிளையாடற்புராணம்

முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

---

(ருஉ) இச்சைவடிவாய்என்றது - இயல்பாகவே பாசங்களினீ ங்கிய சுதந்திரராதலின்.

(ருந) கருவித்தேன்-மிக்கதேன்; கருவி—கூட்டம். இது தா னியாகுபெயராய்த் தேனடைமேல் நின்றது. நினைவில் அன்பில் என்றதில் நான்கனுருபு நிற்குமிடத்து ஏழனுருபு நிற்றல் உருபும யக்கம். உம்மை - முற்றும்மை.

உ

சிவமயம்.

சுத்தசைவராகிய

**பரஞ்சோதிமாமுனிவர்**

அருளிச்செய்த

# மதுரைப்

# பதிற்றுப்பத்தந்தாதி.



காப்பு.

பைந்தொடிபாற் சொக்கர் பதிற்றுப்பத் தந்தாதிச்
செந்தமிழைப் பாடச் செயலளிக்குஞ் - சந்ததமுஞ்
சிந்தாவளமதுரைச் சித்தி விநாயகனுந்
தந்தா வளமதுரை தந்து.



## நூல்.

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

மேகம்வரக்கண்டுளங்களித்துவிரிக்குந்தோகைமயிலாடப்
பூகமனைத்தும்வெண்டரளம்பொழியுமதுரைக்கயற்கண்ணுள்
பாகமிருக்குஞ்சொக்கர்பசுபதியாயண்டப்பரப்பாகி
ஏகமெனக்கொண்டிருப்பாரென்னிதயத்தலத்துமிருப்பாரே. (க)

இருக்குந்திருக்கோலமுமுமையாளிடப்பாகமுநூலிலங்குகின்ற
மருக்குங்குமமார்பமும்புயமும்வரதாபயமுமான்மழுவுந்
திருக்குண்டலமுமதுரேசர்சின்மூரலுமென்கன்மனத்தை
யுருக்கும்வதனம்புயமுமெனக்குவகைவிளைக்குமுயிராமே. (உ)

விளைக்குமுயிரிற்பிறந்தொடுங்கிமேவுமவத்தைதனைப்போலக்
கிளைக்குமுலகநின்பால்வந்தடங்கக்கிடந்தகீர்த்தியெல்லாம்
வளைக்குமிடமோசிற்றகிலமதுரைக்கயற்கண்மடந்தைமுலை
திளைக்குமணியேதெவிட்டாததேனேமுக்கட்செழுங்கனியே. (௩)

---

(காப்பு) சிந்தா என்னும் ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்கெடாத என்னும்பொருளதாய் நித்தியத்தையுணர்த்திநின்றது. தந்தாவளம்-யானை. அது-பகுதிப்பொருள்விகுதி. (க) அண்டப்பரப்பு-அண்டகோடிகள். ஏகம்-விராட்டுருவரும். (உ) வரதம்-விரும்பியவற்றைத்தருங்கரம். அபயம் - பயந்தீர்க்குங் கரம். வதனம்புயம்-முகமாகியதாமரைமலர். (௩) அவத்தை - துன்பம்; பஞ்சாவஸ்தைகளென்பதுமொன்று.

கனியுங்கிழங்குநகருக்காயுங்காற்றுஞ்சருகுமருந்தியிரு
பனியுமழையும்வெயிலுநின்றுபடிவந்திரிந்துபுலனைந்தும்
முனியும்படிவீணருந்தவஞ்செய்முனிகாண்மதுரைபுகுவீரேல்
இனியுங்களுக்குமதுரேசரெல்லாப்பதமுந்தருவாரே. (ச)

தருவேவறிஞர்க்கிருநிதியேசனகாதியர்க்குப்பொருளுரைத்த
குருவேகுருமாமணிச்சுடரேகோதிலாதசெழுந்தேனே
யருவேயுருவேயருவுருவேயகிலாண்டமும்வந்தடங்குதற்கோர்
கருவேமதுரைவருகடப்பங்காட்டாயுனைநீகாட்டாயோ. (ரு)

காட்டத்தெரிபோற்கலந்தநெறிகாட்டத்தெரியுமேங்குமனக்
கோட்டத்தெனதுசிற்றறிவாற்குறிக்கப்படுமோகூறாய்நீ
ஈட்டக்களிவண்டடைகிடக்குமிதழிக்கினம்போல்வேப்பலங்கல்
சூட்டப்பசும்பொன்முடிசூடுஞ்சொக்கேமதுரைத்தூயோனே. (சு)

தூயகயற்கண்மடக்கொடிசேர்சொக்கேமுக்கட்சுடர்க்கொழுந்தே
சேயபவளக்கிரியேயென்சிந்தாமணியேதெள்ளமுதே
காயமுதலாங்கடைசரக்குன்கருவூலத்திலிருந்துவரும்
மாயமறியேனிச்சரக்குமாறாச்சரக்கோகூறாயே. (எ)

கூறென்றுளதாஞ்சத்தியொருகூறுஞ்சிவமேகூறுங்கால்
வேறென்றுளதோமெய்யுனக்குமெய்கண்டவர்க்குவெளியாமால்
ஏறென்றுடையபசுபதியேயெழுவாரிதியுமழைத்துவையை
ஆறென்றழைத்தவருட்கடலேயாலவாயிலமர்ந்தானே. (அ)

அமரர்க்கிறைவாமும்முலைப்பெண்ணனகுமரிக்கழகாதென்
குமரித்துறைவாவென்றுநித்தங்கூடற்சிவனைப்பாடாமல்
தமருக்கெனினும்பசிதணிக்கத்தறுகட்கொடியர்தமைப்பாடிக்
கமருக்கிறைப்பார்க்கினமானகலைவாணருநெஞ்சுலைவாரே. (கூ)

---

(ச) இருபனி-முன்பனிபின்பனிகள். பனியும் மழையும்வெயிலும் என்றவற்று ளேழனுருபு தொக்குநின்றது. (ரு) இருநிதி-சங்கநிதி, பதுமநிதிகள். பொருள்-பதிப்பொருள்.

(சு) காட்டம்-விறகு. கலந்தநெறி என்றது-சகலான்மாக்களிடத்தும் அந்தரான்மாவாகவிரவிநிற்றலை. கோட்டம்-இடம். வேம்பு-வேப்பென வலிந்துநின்றது. (எ) காயமுதலாங் கடைசரக்கு என்றது-தனுகரண புவனபோகங்களை. கருவூலம்-பண்டசாலை. மாறா-அழியாத. (அ) மெய்கண்டவர் – சித்தாந்த உண்மையுணர்ந்த பெரியோர்கள்.

(கூ) மும்முலைப்பெண்-தடாதகைப்பிராட்டியார். குமரித்துறைவாஎன்றது-சோமசுந்தரபாண்டியனை. தமர்-சுற்றம். கமர்-வெடிப்பு.

உலைமேன்மெழுகொத்துறுபிணியாலுருகவிதிசற்றுருகாதென்
தலைமேலெழுதுந்தீயெழுத்தைத்தண்ணீரெழுத்தாத்தணிப்பாயோ
முலைமேல்விளங்குமுத்தெனவெண்முறுவலரும்புமோட்டிமய
மலைமேன்மருந்துகலந்தமுக்கண்மருந்தேயாலவாயானே. (கO)

வேறு.

வாயினும்புலையுடம்பினுமனத்தினுமறத்துறைபடிந்தாடு
நாயினுங்கடையேன்கிடைநோயொடுநல்குரவொழிக்காயோ
தீயினுங்கொடியார்புரம்பொருதனிச்சிங்கமேயென்கோவே
தாயினுந்துணையேமதுரேசனேதத்துவங்கடந்தோனே. (கக)

தத்துவப்பெருநாடகசாலையுஞ்சமைத்தலிநயங்காட்டி
அத்தலத்தெனையாட்டுவிப்பானுமென்னுடலைக்காண்பானும்
எய்த்திடப்பெருதெழுதிரைநீக்கிவந்தெடுத்தெனதிளைப்பாற
வைத்துமெய்ப்பதந்தருள்வள்ளலுமதுரைவெள்விடையானே. ()

வெள்விடைக்கொடியுயர்த்தசொக்கேயைந்துவிடயமென்றெடுத்தோதுங், கள்வருக்கெனதறிவறைபோனதென் கருத்தைநீயறியாயோ, உள்வருத்தமும்பிறவுமேகண்டிருந்தொளித்தனையெனையுய்யக், கொள்வதற்கிதுபருவமென்றேயினிக்கூப்பிடக்கடவேனே.

கடவதொன்றிலையுரைசெயமனமுதற்கரணமுஞ்செயலாதி
அடவருந்துயரின்பமுநீயெனையருத்துதலறியேனுன்
மடவனம்பெடைக்குருகொடுமணஞ்செயமணஞ்செறிமலர்க்காவிற்
குடவலம்புரிமுழங்கவான்முழவதிர்கூடலம்பதியானே. (கச)

கூடலாதியையணங்கொருபாகனைக்குணங்குறியில்லானை
வீடலாவெளிவீட்டிருந்திமையிலாவிழியினுற்கண்டோர்கள் [ப்
ஓடலாதுபொற்கலத்துண்டு பெண்ணலாரொண்ணலத்துறையாடி
பாடலாடலிற்பயிலினுமிருவயிற்பற்றறுத்திருப்பாரே. (கரு)

---

(கO) விதி-பிரமன். தீயெழுத்து - போகூழ். இமயமலை மேல் மருந்து உமாதேவி. (கக) மறத்துறை-தீநெறி. கிடை-படுக்கை.

(கஉ) தத்துவம்-தேகேந்திரியப்பிராணந்தக்கரணசமூகங்களை. அவிநயம்-நாடகாங்கம். எழுதிரை-எழுபிறவிக்கடல். தீயினுங்கொடியார்-திரிபுராதிகள். இளைப்பாறவைத்து என்றது-சங்காரநிலையை.

(கரு) அறைபோதல் - ஒட்டைபோதல். (கச) மனமுதற் கரணம்-அந்தக்கரணங்கள். செயலாதி என்றது-இச்சாஞானக்கிரியைகளை துயர் இன்பம் என்றது-இருவினைப்போகங்களை. குருகு என்னும் பறவைப் பொதுப்பெயர் பெட்டையன்னத்தை யுணர்த்தி நின்றது. வான்முழவு - மங்கலவாத்தியம்

(கரு) வெளிவீடு-சிதாகாசம். இமையிலாவிழி - அகநாட்டம். இருவயிற்பற்று-அகப்பற்றுப்புறப்பற்றுகள்.

பற்றுக்கோடுநின்பதமன்றி யிலைநெடும்பாய்மரக் கொடிபோல ச், சுற்றுக்கோடியுஞ் சுழன்றுமெய்த்தேனினித் துன்புறுந்தகை யென்னுேனே, கற்றுக்கோதறத் தெளிந்தவர்க்கமுதமே கயற்கண் மாதிடப்பாகம், பெற்றுக்கோயில்கொண் டமர்ந்தருளாலவாய்ப் பி றையணிசடையா. (கசு)

சடைக்கிசைந்தவெண் டிங்களுங்கங்கையுஞ்சங்கவெண்குழை க்காதும், படைக்கணிச்சியுஞ் சூலமுஞ்செங்கையும் பங்கயத்திருத் தாளுங். கடைக்கணித்தருள் சுரந்தகண்களுமணிக் கண்டமுமது ரேசர், அடைக்கலப்பொருள் காக்குநன்னெறியும்யா னயர்ப்பனே வயரேனே. (கஎ)

அயர்க்கிலேனுனைநினைக்கிலேன் பிறரைநின்னலவாயகம்விட் டுப், பெயர்க்கிலேன்பதமென்னவும்பெறுவனேற்பெறற்கரும்பொ ருள்யாதோ. துயர்க்கிலேசமற்றுனதுபொன் னலயஞ்சூழ்ந்துகை தொழுதேமெய், வெயர்க்கிலேனையும் புரந்தருள்வள்ளலே வெள்ளி யம்பலத்தானே. (கஅ)

வெள்ளியம்பலவாணனைப்பாணனல்விறகுவிற்றுழல்வானைப்
புள்ளியம்புலித்தோலுடையாளனைப்புந்தியாற்றொழுதோர்கள்
பள்ளியந்துலாவேறுவர்மணிமுடிபரிப்பர்பார்முழுதாள்வர்
தெள்ளிருங்கலைநன்மகப்பெறுவர்பின்சிவகதியடைவாரே. (கசு)

அடைந்தவர்க்கருள்வெள்ளிமன்றுடல்செயானந்தக்கடலூடு
குடைந்தவர்க்கமுதெழுமதிலெழுபவக்குரைகடற்கரைகாண்பார்
மிடைந்தவர்க்கவெண்குடைவாளைமுழக்கருவிரிகடல்கிடந்தார்ப்பக்
கடைந்தவர்க்கமுதெழுமதிற்பவக்கடல்கடப்பரோகடவாரே. (உ௦)

வேறு.

கடவரையுரிவைபோர்த்துக்கதம்பகாந்தாரத்தாடும்
வடவரைவளைத்தசெந்தேன்வான்மகன்முடிக்குமேலாந்
தடவரைச்சென்னிதாங்குதண்ணறுக்கரையின்வேட்ட
முடவரைநிகர்ப்பநானுமுகந்துணத்தொடங்கினேனே. (உக)

---

(கசு) பற்றுக்கோடு-ஆதரவு. கோது-குற்றம்.

(கஎ) கணிச்சி-மழு. மணிக்கண்டம்-நீலகண்டம். அயர்ப்பு-மற தி. (கஅ) பெறற்கரும் பொருள்-கிடைத்தற்கரியபொருள். துயர்க் கிலேசம்-ஒருபொருட்பன்மொழி; மிகு துன்பம் என்பதுபொருள். (கசு) வாணன்-வாழ்நன் என்பதன்றிரிபு. பள்ளியந்துலா-சயன த ண்டிகை. கலை-சாமுத்திரிக நூல்.

(உ௦) ஆனந்தக்கடல்-சொக்கநாதப்பெருமான். அமுது - சிவா னந்தவமுது. பவம்-பிறப்பு. வர்க்கம்-கூட்டம்.

(உக) கடவரை-யானை. கதம்பம்-கடப்பமரம். காந்தாரம் - வன ம். வடவரை-மேருமலை. வான்மகன்-இந்திரன். நறு-தேன்.

தொடங்குமைந்தொழிலுமோயப்பெயர்த்துமோதொடங்குவாயீ
தடங்குவதெந்தக்காலமாருனக்கயிக்கமையா
முடங்குபைங்குலேயிற்பூந்தேன்முரிதிரைப்பரவைக்கேழு
மடங்குதண்கதலிசாய்க்குமதுரையிற்சிவபிரானே. (உஉ)

சிவமொடுசத்தியாகிச்செகமெலாநிறைந்தநீயே
நவவடிவெடுத்தாயிந்த்ரஞாலமோகோலமேயோ
பவமறத்தவஞ்செயாதபழவினைக்கொடியேற்கின்று
தவவெனப்பொலியுங்கூடற்சயம்புவேயியம்புவாயே. (உங)

இயம்பிடுமிருளைநீக்கியெனைவெளிப்படுத்தல்வேண்டும்
கயம்படுதுறையில்வீழ்ந்தகண்ணிலிக்குதவுவான்போற்
பயம்படவெண்பொற்சோதிபடருமன்றத்தினூடு
நயம்படுமறைகள்பாடநாடகநவிற்றுவோனே. (உச)

நாடகத்தொழில்வராதநட்டுவக்குறையோநாளும்
பாடகப்பதுமம்பூத்தபாத்திரக்குறையோசொல்லாய்
சூடகத்தளிர்க்கைபாகாசோமசுந்தரனேகூடல்
ஆடகக்குன்றேயென்னையாட்டுவித்தனைநன்றாயே. (உரு)

நன்றுளேனல்லேன்யார்க்குநல்லறம்புரியேனன்றிக்
கொன்றுளேனற்றம்பார்க்குங்கூற்றுவன்விடுவானல்லன்
இன்றுளேனுளையில்லேன்யமன்வரும்போதுன்வெள்ளி
மன்றுளேயிருந்தசொக்கேவழக்குநீயென்சொல்வாயே. (உசு)

என்சொல்வேனென்சொல்வேனென்னேழைமையிருந்தபாவம்
புன்சொலாற்பாடிப்பாடிப்புகழ்பெறவிரும்பாநின்றேன்
வன்சொலார்முன்செலாதமதுரையிற்சொக்கேவேதம்
உன்சொலாலுன்னைவாழ்த்தியுன்னையுமுணராதன்றே. (உஎ)

உன்னையேபொருளென்பார்மற்றெருவரைப்பொருளென்பா
ரோ, பொன்னையேபொதியப்பார்ப்பார்புழுதியைப்பொதிவார்கொ

---

(உஉ) ஐந்தொழில் என்றது-பஞ்சகிருத்தியங்களை. பரவை-கடல். கதலி வாழை. (உங) நவவடிவாவன-சிவம்,சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுரன், உருத்திரன், மால், பிரமன்என்னுமநவபேதங்கள். பழவினை—ஆணவமலம்.

(உச) இருள்-ஆணவமலம். கயம்-யானை.

(உரு) பாடகப்பதுமம் என்றது - பாடகமணிந்த தாமரைமலர்போன்ற பாதங்களை. பாத்திரம் என்றது-நடியை. சூடகம் - வளை. ஆடகம்-பொன். (உசு) அற்றம் - சமயம். கூற்றுவன்-உடலுயிரினைக்கூறுபடுத்துவோன்; யமன். (உஎ) ஏழமை-பேதமை. வன்சொலார்-சொடுஞ்சொலுடையவர். (உஅ) பொதிதல்-அணிதல்.

ல்லோ, அன்னையேதந்தையேதென்னாலவாய்ச்சொக்கேதஞ்சம், பி
ன்னையேதுனையலாமற்பிறந்திறந்துழலுவோர்க்கே. (உ௮)

பிறந்திறந்துழல்வீர்நீங்கள்பிறதெய்வந்தொழுதோவுய்வீர்
கறந்தருந்தினருமுண்டோகற்பசுமுலையைக்கையால்
அறந்துறந்தவர்க்கெய்தாதவாலவாய்ச்சொக்கர்தாளை
மறந்திருந்தினிக்கெடாமல்வணங்குவீர்வணங்குவீரே. (உ௯)

வணங்கினர்க்கிதஞ்செய்யாமல்மறலிவாய்க்கிரையாய்வாழும்
பிணங்களைப்பின்செல்வீர்நும்பேதைமைதவிரவேண்டில்
அணங்கினுக்கணங்குகூடலங்கயற்கண்ணாள்பாகன்
குணங்களைப்பரவியன்னோன்கோயிலைவலஞ்செய்வீரே. (௩௦)

வேறு.

செய்வானுஞ்செய்விப்பவனுஞ்செயும்பொருளும்
பைவாளரவப்பணிதரித்தசொக்கேநீ
யுய்வாரஃதறிவாருன்னருளென்றுன்னியவர்
வைவாரைநோவார்மதிப்பாரைவாழ்த்தாரே. (௩௧)

வாழ்வார்க்கியற்கைமதுரேசர்கோயில்வலஞ்
சூழ்வார்க்குத்தொண்டுசெயுந்துன்பமிலாப்பேர்வாழ்க்கை
வீழ்வார்க்கடையாளம்வீணரொடுங்கூடிவெறுங்
கூழ்வார்ப்பவர்தமக்குக்குற்றேவல்செய்வதுவே. (௩௨)

குற்றேவல்செய்பவரைக்கும்பிடேன்கோயில்வலஞ்
சுற்றேன்மெழுகேன்சுடர்த்திரியுந்தூண்டுகிலேன்
கற்றேனுமல்லேன்கடம்பவனச்சொக்கேநான்
மற்றேதினியுரைக்கேன்வன்கூற்றுக்கென்கூற்றே. (௩௩)

கூற்றுக்கோல்கோடான்கொடியவனென்றென்னையனல்
ஆற்றுக்கோகீழ்ப்படுத்தியண்ணுத்தல்செய்யாத
சேற்றுக்கோவீழ்த்தத்திரிகின்றான்வீழாமல்
ஊற்றுக்கோல்சொக்கேயுனதருளென்றுன்னேனே. (௩௪)

---

(உ௯) அறந்துறந்தவர்-தருமவிரோதிகள். (௩௦) இதம் - நன்மை. அணங்கு-தெய்வப்பெண்.

(௩௧) பை-படம். வைதல் - இகழ்தல். (௩௨) வீழ்வார் என்றது-நரகத்திலழுந்துவோரை. (௩௩) கூற்று-யமன். என்கூற்று-என்சொல். (௩௪) கோல்கோடான்-நீதிதவறான். கோல் - நடுநிலை. ஊன்று கோலென்பது-ஊற்றுக்கோலென வலிந்துநின்றது.

உன்னார்பிறப்பருடையாய்கயற்கணமு
தன்னாளுநீயுமகலாதவீற்றிருப்புந்
தென்னாலவாயுந்திருமதிலுங்கோபுரமும்
பொன்னாலயச்சிறப்பும்பொற்கமலவாவியுமே. (ருரு)

வாவியார்கூடன்மணிகண்டத்தானையின்னே
சேவியாநாட்குறித்துச்சேவிப்போமென்பதென்னே
ஆவியார்போம்போதவரைமறித்தாணையிட்டுக்
கூவியார்மீட்பார்குடிபோனவீட்டேடே. (ருசு)

வீடுகட்டிமாடுகட்டிமெய்யிறுகக்கட்டும்வினைப்
பூடுகட்டிவிட்டுப்புறப்படமாட்டாதுலண்டு
கூடுகட்டியாங்கேயென்கோட்டைகட்டினேன்கடப்பங்
காடுகட்டியாளுமுக்கட்கட்டித்திரவியமே. (ருஎ)

கட்டுக்கிடையாமென்கன்மவித்திலேகுருத்து
விட்டுப்படருமிந்தவேலிகட்டாவேளாண்மை
தட்டுப்படாதாய்த்தலையானடப்பதென்று
மட்டுப்படுமோமதுரைச்சிவக்கொழுந்தே. (ருஅ)

கொழுந்துமதியணியுங்கூடலிலெங்கோவே
யுழுந்துருளும்போதெனினுமுள்ளுவகையுள்ளூறச்
செழுந்துளவநாறுந்திருவடிக்கீழ்நெஞ்சம்
அழுந்துவதொன்றல்லாலமருலகும்வேண்டேனே. (ருகூ)

வேண்டார்புரமெரியவில்வளைத்தசேவகனே
தாண்டாமணிவிளக்கேசொக்கப்பெருமானே

(ருரு) உன்னார் - நினையாதவர். (ருசு) வாவி - நடைக்கிணறு. ஆவியார் - பிராணன். இது, "உயர்திணையிறுபோ லஃறிணைவருதலும் அஃறிணையிறுபோ லுயர்திணைவருதலு, மருகல்விதியெனவறைந்தனர் புலவரென்னுஞ் சூத்திரத்தால் ஆர் என்னும் உயர்திணைப்பலர்பால் விகுதிபெற்றது. குடிபோன வீடென்றது - உயிர்நீங்கியஉடலை.

(ருஎ) பூட்டு என்றது - பூடென நின்றது. இடைக்குறை உலண்டுகூடுகட்டியாங்கு என்றது - உலண்டாகிய கோற்புழுவானது அச்சமின்றி வசிக்கவெண்ணி வெளியிடஞ் சிறிதுமின்றிக் கட்டிய கூண்டுக்கு ளகப்பட்டிறத்தலை. கோட்டை என்றது - தேகத்தை.

(ருஅ) கட்டு - பந்தம். கன்மம்-காமியவினை. குருத்து - முளை. வேலி - வரம்பு. வேளாண்மை என்றது - பிறவியை.

(ருகூ) செழுந்துளவநாறுந் திருவடி என்றது - எண்ணிறந்தவிஷ்ணுக்கள் வணங்குந்தோறும் அவர்களணிந்த துளவமாலையின் மணந்தோயப்பெற்ற வடிகளாதலின். (சுo) வேண்டார்-பகைவர். புரம்-திரிபுரம். அடிச்சேரி - திருவடியைச்சேர்ந்தவன்.

ஆண்டார்பெருமையடிச்சேரிக்காகாதோ
நீண்டாவினையேன்சிறுமையென்றுதீர்ப்பாயே. (சO)

வே று.

பாயிருக்கத்தரைகிடத்தும் வினையின்பான்மை பழமிருக்கக் காயுதிர்க்கும்பழுத்திடாத, காயிருக்கப்பழமுதிர்க்கு மெனவொண்ணுத கழிமடனுமடுபிணியுங்கலியுநீக்காய், சேயிருக்குங்கொன்றையணிசொக்கேமிக்க திலகநுதற்கயற்கணெனுமுலகமீன்ற, தாயிருக்கநீயிருக்கத்துணையிலார்போற் றளர்ந்திருக்கநீதியுண்டோ சரண்புக்கேனே. (சக)

சரணமலர்கண்டிறைஞ்சு மெதிகள்யோகர் தவமுனிவர்முதலோர்க்குச்சகளமாகி, அரணமலிதமிழ்க்கூடலாலவாயிலம்மையொடுமூலலிங்கத்தமர்ந்தகோவே, கரணமறியாதுயிருமறியாதென்று கடவுளருட்கண்காட்டக் காண்கின்றோர்க்கு, மரணமுதல்வன்பிணிகள்வரவொட்டாதவயித்தியனீயுனதருளேமருந்துதானே. (சஉ)

தான்விளக்குங்கருஞ்சேற்றைக்கழுவிநீக்குந் தண்புனல்போலிருவினைக்குந் தனுவாய்நின்ற, ஊன்விளக்கு மொழிக்குமெனுமுறையாலிந்த வுடலிருந்தன்றோவுறுதிபயக்கவேண்டும், நான்விளக்குமிதன்றொழிலுக் கெனையுங்காட்டி நடத்துவிக்குமதிகாரிநானன்றேசெந், தேன்விளக்குங்கடம்பவனநாதாதெய்வத் திருவாலவாயமர்ந்ததேவதேவே. (சங)

தேவியரைத்திருக்கழுத்திலமரர்பூட்டுந் திருநாண்மங்கலநிலையிற்றிரியாவண்ணம், மேவியமைக் கடல்விடத்தை மிடற்றேவைத்துவிரிஞ்சன்மாலாதியந்த விண்ணோர்க்கெல்லாம், ஆவியுறச்செய்தருளென்னப்பாகூட லாலவாயருமருந்தேயடியனேனைப், பாவியெனத்திருவுளத்தி லடைத்தன்றோவென் பழவினையைத் தீர்த்தருட்கண்பார்க்கிலாயே. (சச)

பாரறியு மறிவினுமிப்பார்மேனின்ற பசுஞானத்தாலு மெட்டிப்பார்க்கொணுத, பேரறிவேசிற்றறிவேற்கிருளைநீக்கும் பேரொளி

---

(சக) மடன் - அறியாமை. கலி - துன்பம். சே-இடபம். அல்லது பசுமைநிறம். சரண் - அடைக்கலம்.

(சஉ) எதிகள் - முற்றத்துறந்தவர். சகளம் - உருவத்திருக்கோலம். அரணம்-காவல். கரணம் என்றது - பாசவறிவினை.

(சங) தனுவாய் - இருப்பிடமாய். ஊன் என்றது - உடலையுணர்த்திநின்றது. உறுதி - முத்திசாதனம்.

(சச) மை-கருமை. மிடறு-கண்டம். விரிஞ்சன்-பிரமன்.

யேயங்கயற்கண் பிரியாதரனே,யாரறிவார் தமிழருமையென்கின்றே னென்னறிவீனமன்றோ வுன்மதுரைமூதூர், நீரறியுநெருப்பறியும றிவுண்டாக்கி நீயறிவித்தாலறியுநிலமுந்தானே. (சரு)

நிலத்தூடுநிலத்தினுயிர்ப்பயிர்களூடு நெடுவிறகிற்றீயூடுமபொலின்பத், திலத்தூடுதயிலமெனவுறைவாயிந்தச் சீவன்முத்திபுரமென்னுந்துவாதசாந்தத், தலத்தூடுன்றிருவருளென் னிடத்தேவைத்துத்தருவாகிப்புதலாகித் தரியென்றூலும், மலத்தூடுபுழுவடிவாய்ப்பிறவென்றூலு மறித்துமொழியேன்செனன மனக்கொள்வேனே.

கொள்ளிவட்டங்கறங்குதிரை சகடக்கால்வெண் குறுந்தொடியார்தயிர்மத்து நெடுந்தாளூஞ்சல், எள்ளிவிட்டதொழிற்பிறவித்தண்டல்போக்கி யிறைவாங்குநமன்குடிகாளின்றுநீர்தாந், தெள்ளியிட்டவெள்ளைநிலாத்தெளித்தல்போலுந் திருவாலவாயிறைவன் திருவெண்ணீற்றை, அள்ளியிட்டாற்புள்ளியிட்டகணக்குமாற்றி யமருலகிற்கணக்கனெழுத்தழிக்கலாமே. (சஎ)

அழித்தபடிபடைத்துவிளையாடுவானையாலவாயானையடலரிமானேற்றைக், கிழித்தவதளுடுத்துவள்ளிமன்று ளாடுங்கேடிலியைத் தொழுதிருக்கக்கிடைத்தமேலோர், பழித்தலும்வாழ்த்தலுமெறிவாட்படையுஞ்சாந்தும் பாத்திரப்பாலடிசிலுங்கை வார்த்தகூழும், மழித்தலுநீட்டலுந்தமர்சூழ்வளமைநாடும் வறுங்காடுமொருபடித்தாய்மதிப்பர்தாமே. (சஅ)

---

(சரு) பாரறியுமறிவு-பாசஞானம். பசுஞானம்-ஆத்மஞானம். இருள் - ஆணவமலம். (சசு) அடுதல் - காய்ச்சுதல். திலம்-எள். சீவன்முத்திபுரம் என்றது-யான், எனது என்னும் விகற்பத்தாற் பசுகரணமாய்ப்பயிலாது, சிவகரணமாய் உடையானுடைமைப்பொருளுமாய்த்தன் செயலற்றுச் சாக்கிரத்தே யதீதத்தைப்புரிந்து நிற்குந்தன்மையைத் தன்னில் வசிப்பவர்க்கருளுந் தலமாதலின். துவாதசாந்தத்தலம் என்றது-பிரமரந்திரத்துக்குமேல் உன்மனி சத்திக்கதீதமாய் விளங்கும் நிராமயஸ்தானமாதலின்.

(சஎ) கொள்ளிவட்டம்-கொள்ளிக்கட்டையைச் சுழற்றுவதாலுண்டாகும் வட்டவடிவம். கறங்கு - காற்றூடி. திரை-அலை. சகடக்கால்-சக்கரம். குருந்தொடியார்-சிறியவளையணிந்த கரத்தையுடையமகளிர். இது அன்மொழித்தொகை. எள்ளல்-இகழ்தல். போக்கி-செலுத்தி. இறை - உயிராகிய (கப்பம்.) புள்ளியிடல்-எழுதல். கணக்கன்என்றது - பிரமனை; அவனுக்கு லிபிமான் என்பதோர்நாமமாதலின். (சஅ) அரிமான் என்றது-நரசிங்கத்தை. அதள்-தோல். வெள்ளிமன்று-இரசிதசபை. கேடிலி-நித்தியன்.

மதியிலேனிதுவரையும்வரையாதீட்டும் வன்பாவச்சரக்கனைத்துமனவாக்காயப், பொதியிலேகொடுதிரிந்தும்பழுதுபோகாப்பொழுதுபோகாதுசிலபுசித்தேனெங்குங், கதியிலேபழவடியார்தம்மைக்கூட்டுங் கயற்கணுமைகலந்துறையுங்கடவுள்கூடற், பதியிலேபுகுந்தளவில்வறிதேதீய பழஞ்சரக்கும்புதுச்சரக்கும்பணியற்றேனே.()

பணிவிடைசெய்பவர்க்கருள்கூர்பரனேசெங்கைப் பசுங்கிளியுந்தவளநகைப்பவளவாயுந், தணிவிடையும்பணைமுலையுமுடையாள்பங்கிற் சங்கரனேதென்கூடற்சயம்புவேகேள், அணிவிடயம்பொறிகலங்கியைம்மேலுந்து மன்றையில்விண்ணப்பமின்றே யடியிட்டேனுன், மணிவிடையின்மணியோசைமறலியூர்தி மணிநாவையடக்கும்வகைவருதிநீயே. (ரு0)

வேறு.

நீயும்பசுபதியாகுஞ்சிவமயநின்பாலனுதினமன்பான, தாயுந்திருவருளுகளந்தருமொருசகளம்பொலிவதுதனைநாடேன், வாயுண்டுரைசெயமனமுண்டுருகிடமயல்கொண்டவரெனமருள்வேனே, தேயும்பிறைநதிதோயுஞ்சடைபுனைதென்கூடலில்வருமெங்கோவே. ()

கோவேதமிழ்புனைதேவேவளமலிகூடற்பதிபொலிகுளிர்நீழற்
காவேயுயரியமலையேயருணிறைகடலேயிமையவரடலேறே
நீவேறுயிர்களுமூவேறியல்பெனநின்றாய்விதிமுறைநில்லாவென்
நாவேமுதலியகரணங்களுமுனைநன்றாய்வழிபடநல்காயே. (ருஉ)

நல்குஞ்சுழுமுனையிடைபிங்கலையெனுநாடித்திரியமதைநாடாமே
மல்குங்கனலியில்வளிசென்றுருகியமதிவெண்கலையமுதயிலாமே

(சகூ) வரையாது-நீக்காது. மனவாக்காயப்பொதி என்றது-மனோவாக்குக் காயங்களாகிய பைகளை. பழஞ்சரக்கு என்றது-பிராரத்தவினையை. புதுச்சரக்கு என்றது - ஆகாமிய வினையை. பணி-தொழில். (ரு0) தணிவிடை-தணிவுஇடை—நுடங்கிய இடை. விடயம்-ஐம்புலன்கள். பொறி-பஞ்சேந்திரியம். ஐ-சிலேட்டுமம். அடியிட்டேன்-திருவடிக் கறிவித்தேன். மறலியூர்தி-யமன் வாகனமாகிய கடா. (ருக) திருவருள்-அருட்சத்தி. உகளம்-இரண்டு.

(ருஉ) கா-சோலை. உயிர்கள்மூவேறு என்றது-பிரளயாகலர், விஞ்ஞானகலர், சகலர்என்னும் மூவகை ஆன்மாக்களை. கரணங்கள்-உறுப்புகள்.

(ருங) இடை-இடைகலை. திரியம்-மூன்று. கனலி - மூலாக்கினி. வளி-பிராணவாயு. கனலியில்என்பதில்-மூன்றனுருபுநிற்கவேண்டியவிடத்து ஏழனுருபுநிற்றல் உருபுமயக்கம். கலையமுது என்றது-சந்திரமண்டலத்திலெழும் சிவானந்தவமுதை. அவம்-வீண்.

பல்குந்திருவருள்விழிகொண்டுனைதிருபதபங்கயமலர்பாராமே
யல்கும்பொழுதவம்விடுவேனருள்புரியாயேமதுரையிலையாவே. ()

ஐயப்படுபொருளையப்படுமெவரறியத்தகும்வகையறிவித்தே
குய்யப்பிறவியைவிடுவித்தருள்புரிகூடற்பதிவருமுமைபாகா
பையத்திருவருள்செய்யப்பெறிலதிபாவப்பிணிதணிபான்மைத்தே,
யுய்யப்புகலிடமினிவேறிலையெனையுடையாயுறுவினைதுடையாயே.

துடையா விழைபுரை யிடையா லிடைபுனை துகிலால் வனி தையர் நகிலான்மைப், படையான் மடவன நடையா லினியிடர் படவேசிலமிசை கடவேனோ, விடையார் பிறையணி சடையார் மதுரையில் வினையேன்வழிபட விலையோலை, யுடையா ரடியரொ டெனையாள் பவரென துள்ளேயுறைபவர் தள்ளாரே. (ருரு)

தள்ளுண்டவரொடுதெள்ளுண்டறிவழிதமியற்குறுகதிதருவானைத்
தெள்ளுந்தமிழுயர்மதுராபுரிவருதிரிசூலப்படையுடையானை
யுள்ளும்புறமுமொரொளியென்றுணர்பவரூனந்தவிர்பரமானந்தக்
கள்ளுண்டுருகுவருணரார்நமன்வலைகட்டுண்டுழலுவர்கருவூடே. ()

கருவி தளர்ந்தொரு விகிர்தி பிறந்திரு கால்கை குறைந்திரு கண்பஞ்சிட், டிருவினை யின்பய னெனவுயர் கொம்பிலி சைத்தகுடம்பை தனித்தொழியக், குருவிபறந்தென வுயிர்செலு மன்றிகல் கொடியநமன்றமர் கொடுபோமுன், வருவிகணங்களையடிகளைநம்பினன் மறையோய் மதுரையி லிறையோயே. (ருஎ)

இறைவர் பராம்பரர் மதுரை யுகந்தவ ரிருகரை வெண்டிரை பொருவையைத், துறைவரசஞ்சலர் நிமலர்நிரஞ்சனர்சொக்கர்பத

---

(ருச) குய்யப்பிறவி - யோனிசம்பவம்.

(ருரு) நகில் - முலை. மைப்படை - மைதீட்டிய கண்களாகிய அம்பு. விலையோலை - முறிச்சீட்டு.

(ருசு) ஒளி என்றது - சடவொளிக் காதாரமாகிய சிவவொளி யை. ஊனம்-குற்றம். கரு என்றது-பிறவியை.

(ருஎ) கருவி-தத்துவங்கள். விகிர்தி-விகாரம் அல்லது முடிவு. குடம்பை தனித்தொழியக் குருவி பறந்தென என்றதை- "குடம்பைதனித் தொழியப் புட்பறந்தாங்கே-உடம்பொ டுயிருடைநட்பு" என்பதனுலுணர்க. நமன் தமர்-யமபடாள். கணங்கள் - சிவகணங்கள். (ருஅ) பரம்பரர்-மேலானபரமர். அசஞ்சலர் - சஞ்சலமில்லாதவர். நிமலர்-மலரகிதர். நிரஞ்சனர்-களங்கமற்றவர். உறை என்றது - அதர்வணவேதங் கூறும் அதிஷ்டான பட்சம், ஆவேசபட்சமென்னு மிரண்டனுள் ஆவேசபட்சத்தை. மந்திரம் - காருடமந்திரம். நஞ்சு - விஷம்.

த்துனே துதிசெய்தாற், பிறைநுதல்வஞ்சிய ரனுபவமுண்டு பிழைப்பினு மங்கது பிழையன்றே, உறையொடு மந்திர முடையவர் நஞ்செசன லொழிவது கண்டன முலகூடே. (ருஅ)

உலகமடக்கொடி மங்கலநாணென வோலைக் குழைபொரு நயனமெனத், திலகமெனப்பொலி கூடலினுண்டொரு மாமணிசெப்புமதோ, பலகலைகற்றவர் தாமறியாதொரு பச்சைபழுத்த புரத்தோடே, இலகொளிவிட்டொரு கோடிதிவாகர ரென்ன விளங்கியிருப்பதுவே. (ருக)

இருவரு மன்றுவெ ளெகினமும் வன்றெழி லேனமு மாகியுமெய்தாத, திருவடி யும்புரி சடைமுடி யுங்கொடு தென்கூடலில்வரு சிவனேகேள், ஒருவரும் வந்துனே யறிகில ரென்கினு முடல்பொருவேண்டிரை யுலகெல்லாம், வெருவரு மன்பர்கள் வழிபடுபெண்பினில் வெளிபட நின்றனே யொளியாயே. (சுO)

வே று.

ஒளிமணிச் சுடிகை யணேகொள் பாற்கடலு மூற்றிருந் திளநறு வொழுகு, நளினமண் டபமுங் கற்பகநாடு நாடரும் பொருளென நாடேன், தெளிதமிழ்க்கூட லாலவா யமர்ந்ததெய்வமே புகலெனச்சேர்ந்த, எளியனே னுனதின் னருளேயே பொருளென் றென்னுளே யெழுதிவைத் தனனே. (சுக)

எழுநதி யடைத்திங் கிருநில மிருத்திட் டென்பெலாம் வெள்ளெனத் தெரியக், கழுவினுங் கழுவாத் தகைத்தலா லகத்திற் களங்கம்விட் டொழியுமோ கருதீர், முழுமதிற் கூடற் சொக்கர்பொற்

(ருக) உலகமடக்கொடி-பூதேவி. பச்சைபழுத்தபுரம்என்றது-உமாதேவியாரையிடதுபாகத்திலுடைய வடிவினே. திவாகரர்-சூரியர்; பகலைச்செய்பவர் என்பதுபொருள்.

(சுO) இருவர் – பிரமவிஷ்ணுக்கள். எகினம்-அன்னம். ஏனம்-பன்றி.

(சுக) பாற்கடல், நளினமண்டபம், கற்பகநாடு இவைகளே நாடேன் என்றவற்றிற்கு விஷ்ணு, பிரமன், இந்திரன் முதலியோரது வாழ்வையும் விரும்பேனென்பது பொருள்.

(சுஉ) எழுநதி - கங்கைமுதலிய எழு புண்ணியநதிகள். மிருத்து என்றது-மலையருகு, ஆற்றங்கரை, புண்ணியபூமி, பிரமவிருட்சத்தினடி, தருப்பையினடிமுதலிய சுத்தஸ்தானத்திலே எட்டங்குலவளவின்கீழே அஸ்திரமந்திரத்தினல் எடுத்தமண்ணினே. முண்டகம்-தாமரை. அமலர்-பரிசுத்தர்.

சரணமுண்டகங் கண்டகண் வழியே, யழுதழுதுருகு மானந்தவெள்ளத் தாடினே ரமலராகுவரே. (௬உ)

ஆகமப்பொருளே யாரணத்தெளிவே யாலவாய்ச் சூலவேலரசே, நாகணைக்கணையா யுனதருளன்றோ நாரையைக் கதியிலுய்த்ததுவுஞ், சூகரக்குழவிக் கன்னையாய்முலைப்பால் சுரந்தளித்தது முபதேசம், காகம்விட்டிரியச் சிறைபுடைத்தலைக்குங் கரிக்குருவிக்கும் வைத்ததுமே. (௬௩)

வைத்ததென் னிடத்தோர் வைப்புள ததனை மதுரையிற்கண்டனன்மாதோ, கைத்தலத் திலங்கு முத்தலை வேற்றுக் கயல்விழிக் கரும்பொரு பாற்றுப், பைத்தலைப் பூட்டுப் பணைத்தவெண் டோட்டென் பாட்டினுக் கிரங்குபூந் தாட்டு, முத்தரை யளந்த விடையுயர்கொடித்து மூன்றுகட் டிளம்பிறை முடித்தே. (௬௪)

முடித்தலை யிமையோர் வடித்தமிழ்க்கூடன் முதல்வர் பொன்னடித்தலத் திறைஞ்சப், படித்தலத்தடைய நெருக்கலுந் திருக்கண் பார்த்திட நந்திசென் றடித்த, தொடித்தலைப் பிரம்பு கமழ்வன கமலத் தொடையலுஞ் சுரும்புணுதரும்பு. பிடித்தலர் துளவுங் கற்பகம்பூத்த பெருவிரைக் குழங்கன்மாலையுமே. (௬௫)

மாலையம் பொழுது மாலைகண் டரவின்வடிவெனமயங்குவோன்மயக்காய், வேலையம் புவனமாயவாழ் வனைத்துமெய்யெனவினையனேன் மெலிகோ, காலையம் புயம்போன் முகத்தொளிர் கயற்கட் கரும்பொடு மதுரைமூதூரில், ஆலயங் குடிகொ ளமுதவா ரிதியே யாரணங் கடந்தபூ ரணனே. (௬௬)

பூரணமழியாமதியமேபிறையைப்புரையுமீராயிரமருப்பு
வாரணமிசையூர்மாணிக்கமலையேமதுரையம்பதியில்வாழ்வரதா

---

(௬௩) ஆரணம் - வேத வுறுப்புக்களிலொன்று. நாகணைக்கணை என்றது - விஷ்ணுவாகிய பாணத்தை. சூகரம் - பன்றி.

(௬௪) வைப்பு - நிட்சேபம். வேற்று, பாற்று, தோட்டு, தாட்டு, கொடித்து, கட்டு, முடித்து என்பன குறிப்புவினை முற்றுகள். கயல்விழிக் கரும்பு என்றது - அங்கயற்கண்ணியை. பை - படம். முத்தரையளந்தவிடை-மூன்றுலகத்தையும் மூவடியாலளந்த திருமாலாகியவிடபம். (௬௫) படித்தலம் - ஒருபொருட் கிளவிகள்; பூமி. தொடித்தலைப்பிரம்பு-பூண்கட்டிய பிரம்பு.

(௬௬) மாலைகண்டு-பூமாலையைக்கண்டு. (௬௭) பூரணம்-நிறைவு. ஈராயிரமருப்பு வாரணம்-இரண்டாயிரங்கொம்புகளையுடைய ஐராவணம். வரதன்-வரத்தைக்கொடுப்பவன். தீட்டு-எழுத்து.

காரணமுலகுக்குதவுநின்னடியார்கையெழுத்திட்டதீட்டன்றே
நாரணன்முதலோர்தோரணமசைத்துநகரெலாமுறைநடத்துவதே.

நடம்புரிமதுரைநம்பநீசிலர்க்குநல்கியஞானநற்பயனுங்,குடம்புரைசெருத்தலா னினம்பரந்துகொண் டிடுமெண்டுநீம்புனல்போல்,மடம்படுசிலர்க்குத்தீவினைப்பயனும் வாளராப்பருகு பானியம்போல், கடம்பமா வனத்தா யினையவா வினையேன் கடவுளை நோவதென் கருத்தே. (சுஅ)

கருத்தனேபாச விருத்தனே துரியங் கடந்துநின் றுலகெலாங் கலந்த ஒருத்தனேகயற்க ணொருத்தி பங்கினனே யுயரியவெள்ளி மன்றுடு, நிருத்தனேயெனக்கெந் நேரமுமுதர நெருப்பவித்திருக் கநேரமுங்கண், பொருத்தநேரமுநோய் வருத்தநேரமுமேற் புகழ்ந் துனைத் தொழுவதெப்பொழுதே. (சுக)

பொழுதறிந்தேத்து முழுவலன்புடையோர் புந்தியங்கோயில் வீற்றிருப்போன், முழுதொருங்குணர்ந்தோ னகண்டிதனகம்பன் முத்தமிழ்மதுரைவாழ் முதல்வன், எழுதருங்கடவு ளனைத்தையுங் காட்டி யெவற்றினுந் தோய்வதொன் றில்லான், பழுதகன் றடுத்த துணர்த்துவெண்படிகம் பத்திபாயாதவாறெனவே. (எ0)

வே று.

எனக்குன்சேவையைநல்கிடவென்மனம்
உனக்கிடுந்திறையுன்வசங்கைவிடேல்
கனக்கும்வஞ்சமுங்கள்ளமுமுள்ளவன்
மனக்குறும்பெறிவாய்மதுரேசனே. (எக)

மதுரையாளும்வழுதிக்கிகலனைக்
குதிரையாகக்கொடுவந்தகொற்றவா
அதிருநான்மறையந்தணனேயுனக்
கெதிரிலாயெனக்கென்னிரங்காததே. (எஉ)

இரங்குநீயினியென்னுடைச்சுற்றமுன்
பரங்கள்கூடற்பழியஞ்சியப்பனே
வரங்கண்மூன்றுளவாக்குனைவாழ்த்தவென்
கரங்கள்கூப்பிடக்கட்புலன்காணவே. (எந)

---

(சுஅ) செருத்தல்-மடி. பானியம்-பாற்சோறு. துரியம்-ஓரவஸ்தை. கண்பொருத்தல் - நித்திரைசெய்தல்.

(எ0) உழுவலன்பு-சிறந்த அன்பு. அகண்டிதன்-எங்கும் நிறைந்தவன். அகம்பன்-அசைக்கப்படாதவன். எழுதருங்கடவுள்-இன்னதன்மையனென் றெழுதிக் காட்டொணாத விறைவன். (எக) திறை-இறை. (எஉ) இகலன்-நரி. (எந) பரம்-வசம்.

காணவந்தகடம்பவனேசர்தாள்
பூணவந்ததுபுந்தியென்றுலெமை
யாணவந்தொடுத்தஞ்சுமிங்கஞ்சுமே
நாணவந்தநமன்சினமாறுமே. (எச)

ஆறடைத்தவழகியசொக்கரை
மாறெடுத்துவழுதியடித்தநாள்
ஊறுபட்டவுடம்புமக்கில்லையோ
வேறினித்தெய்வமென்கின்றவீணரே. (எரு)

வீணளந்தவிரதமில்லாமலெண்
சாணளந்தசரீரந்தளர்வனே
சேணளந்தவெண்டிங்களைச்செம்மணித்
தூணளந்தமதுரையிற்சோதியே. (எசு)

சோதிவெண்பிறைசூடியகூடலான்
ஆதியந்தமிலானெழுத்தஞ்சுடன்
பூதிகண்டிகையைப்பொருட்கொண்டிடாச்
சாதியன்றியுண்டோப்புலைச்சாதியே. (எஎ)

சாதிக்கின்றசமாதிவிட்டப்புறம்
போதிக்கின்றபொருளையெங்கேயெனப்
பேதிக்கின்றனைபேதைநெஞ்சேயினிச்
சோதிக்கின்றதென்சொக்கரிருக்கவே. (எஅ)

சொக்கருண்டுதுணையென்றிராயவர்
பக்கமன்புபழுத்ததென்றோர்கிலாய்
மக்களென்றும்மனையென்றும்வாழ்வென்றும்
ஒக்கலென்றுமுருகுமென்னெஞ்சமே. (எகூ)

நெஞ்சமாலயநெல்லிருநாழிநந்
தஞ்சமானதமிழ்ச்சொக்கர்தங்கொடை
கஞ்சமாதுகயற்கட்பிராட்டிக்கு
மஞ்சமார்புமணவறைவாமமே. (அ௦)

---

(எரு) மாறு - பிரம்பு. (எசு) வீணளந்தவிரதம் இல்லாமல் என்றது-சாமானிய தேவர்களை முன்னிட்டுச் செய்யும் விரதங்களி லல்லாமல்; எனவே சிவவிரதங்களில் என்பதை விளக்கிநின்றது.

(எஅ) சமாதி-சுட்டி நிற்கும்நிலை. அப்புறம்போதிக்கின்ற பொருள்-சுட்டற்றுத் தானதுவாய்நிற்கும்நிலை. (எகூ) ஒக்கல்-சுற்றம்.

(அ௦) கஞ்சமாது என்றது-பொற்றாமரைதீர்த்தத்தெழுந்த த டாதகையை. இச்செய்யுளை கயற்கட் பிராட்டிக்கு தமிழ்ச்சொக்கர். நெஞ்சம் ஆலயம், மார்பு மஞ்சம், மணவறை-வாமம். கொடை-இரு நாழிநெல். எனக் கூட்டுக.

வேறு.

வாமாவுயர்நரவாகனமதமாவொடுதிண்டேர்
தாமாமவைகொடுவந்திவைதாமென்பவர்தம்போற்
போமாகமுநாமென்றுரைபொய்யேயினிமெய்யே
ஆமாறருண்மதுராபுரியணிமால்விடையானே. (அக)

ஆனென்பதுதருமைந்தையுமாடும்பெருமானை
வானென்பதுமுதலாகியமதுரேசனைவாழ்த்தி
யானென்பதுமெனதென்பதுமிபமுண்டவிளாநேர்
தானென்பதுகுறியானதுதவமென்பதுமவமே. (அஉ)

அவமேபொழுதொழியாதினியழியாநிலைவரவும்
பவமேமுதல்வினைநீடியபாசத்தளைவிடவும்
உவமேயமுமுவமானமுமொன்றாகியமதுரைச்
சிவமேயருள்செயுநீயொருசெயலற்றிருமனமே. (அங)

மனவூசலிலுழல்வேனையுமதுராபுரியீசன்
நனவூடொருபொருளாயிருநயனங்களுநின்றூன்
கனவூடுமெனினைவூடுகலந்தானெனிலிதன்மே
லினவூதியமுளதோகொடுவினைசூழ்வதுமிலையே. (அச)

இலையென்றுரைமனவஞ்சகரிடமன்பொடுசெலுமா
புலையன்றவர்புகலும்பொருள்பொருளென்றறிவேனோ
கலையென்றிலகருகொண்டிருள்கடிகின்றவெணிலவே
மலையென்பதுசிலைகொண்டருண்மதுராபுரியரனே. (அரு)

அரவம்புலிபணியும்பதமருளுஞ்சடையுடையாய்
குரவங்கமழ்குழல்பங்கமர்கூடற்பெருமானே
பரவஞ்சியர்கமனங்கொலைபழிவஞ்சமொருருவாய்
வரவந்தவென்வினைதீரவரந்தந்தருளினியே. (அசு)

(அக) வாவும் என்பது - வாம்எனநின்றது இடைக்குறை; தாவும் என்பதுபொருள். மா - குதிரை நரவாகனம்-தண்டிகை. மதமா - யானை. இவைதாம் என்பவர் - இவற்றைத்தமது என்று கருதுவோர். ஆகம் - உடல். (அஉ) ஆனைந்து - பஞ்சகௌவியம்வான் என்பது முதலாகிய என்றது பஞ்சபூதங்களை. யான்என்பது-அகங்காரம். எனதென்பது-மமகாரம். இபம்-யானை. (அங) அவம்-வீண். அழியாநிலை-முத்தி. தளை-விலங்கு. (அச) நனவு-சாக்கிரம். கனவு-சொப்பனம் ஊதியம்-இலாபம். (அரு) தவர்-சிவஞானிகள். மலை-மேருமலை. (அசு) அரவம்புலி என்றது - பதஞ்சலி வியாக்கிரபாதர்களை. குரவம் - குராமலர். குரவங்கமழ்குழல் என்றது-அங்கயற்கண்ணம்மையை. கமனம்-கலவி. தெறுசுடர்-வருத்தும்சூரியன். கடையனல் - ஊழித்தீ.

இனிக்குந்தமிழ்மதுரேசனையிருபோதினுநினைவீர்
பனிக்குந்திரைகடற்கும்யமபடர்க்குந்தெறுசுடர்க்குந்
தொனிக்கும்புயலிடிக்கும்புவிதொலைக்குங்கடையனற்குந்
தனிக்குந்தனிவழிக்கும்பிணிதனக்குந்தளரீரே. (அஎ)

தளவத்திருநகைபங்கினர்தக்கோர்பணிசொக்கர்
துளவைப்பொதியிருசேவடிதுதியாரருள்பதியார்
களவைப்புரிநயனத்தியர்கலவித்தொழில்பொருளின்
அளவைக்களவெனவிற்பவரழகைப்புகழ்வாரே. (அஅ)

புகழுந்தமிழ்மதுரேசர்பொலன்சேவடிபணியத்
திகழுங்கடல்வையந்தொழுதெய்வந்தனைநிகர்வார்
நிகழுங்குலமிலராயினுநிலைகோடினரெனினும்
இகழுந்தொழிலினராயினுமெவராயினுமவரே. (அகூ)

ஏகத்திருவுருவத்தினனெங்கோனுமைபங்கன்
பாகத்தமிழ்பகரும்பசுபதிமேவியகோயில்
பூகக்குலைமேகத்திரள்பொரவிண்டபசுந்தேன்
மாகப்பெருநதிபோல்வருமதுரைத்திருநகரே. (கூ0)

வேறு.

நகைகொண்டதுட்டர்புரமன்றுசுட்டநடனேசர்நாதமுடியோர்
பகைகொண்டசித்தசனைவென்றசொக்கர்பவளம்பழுத்தசடையார்
முகைகொண்டவட்டமுலையங்கயற்கண்முத்தானகேள்வரொருநால்
வகைகொண்டிருக்குமறைநம்பர்பெற்றிவறியேனைநாளுநெறியே. ()

நெறிநின்றடங்கிநிலையானஞானநேயத்தழுந்தவருநாள்
அறிவென்றறிந்தமதுரேசர்தம்மையாராயவல்லருளரோ
பொறியெங்குமுந்துபுலனுங்கடந்துபுவியுங்கடந்துபுவிமேற்
குறியுங்கடந்துகுணமுங்கடந்துகுறியாதுநின்றகுறியே. (கூஉ)

ஏழைக்குகந்தபாகத்துநண்பரிளநீர்சுமந்தகுலைசூழ்
தாழைப்பொதும்பர்மதுரைக்குளாடுசரணாரவிந்தநினைவார்
பேழைத்தனங்கண்மூடித்திறந்துபெருமைத்தனங்கள்சிறிதாம்
வாழைக்குறங்கின்மாழைக்கருங்கண்மடவார்தமாயமிலரே. (கூங)

---

(அஅ) தளவம்-முல்லை. களவு-வஞ்சம். பொருளின் அளவைக் களவெனவிற்பவரென்பது-வாங்கும்பொருளளவுக்குத்தகுந்தநலம் காட்டுவோராதலின். (அகூ) நிலைகோடினர்-அசத்தியவாதிகள்.

(கூ0) ஏகத்திருவுருவம் என்றது-விராட்டுருவத்தை. தமிழ்பகரும்பசுபதிஎன்றது-தமிழ்மொழியைத்தந்த சிவபெருமானை. பூகம்-கமுகமரம். மாகம்-ஆகாயம். (கூக) துட்டர்என்றது - திரிபுராதிகளை. நாதம்-நாதத்துவம். சித்தசன் - மன்மதன்; சித்தத்திற்றோன்றுவோனென்பதுபொருள். பெற்றி-தன்மை. (கூஉ) ஞானநேயம் என்றது - காட்சிப்பொருள், காணும்பொருள்களை.

(கூங) தாழைப்பொதும்பர் - தென்னஞ்சோலை. பேழ் ஐதனங்கள் - பெருமைதங்கிய அழகியமுலைகள். மாழை-அழகு.

மாயாவிகாரிபூபாரமானமாபாவிமூடன்வறிஞோர்க்
கீயாதலோபிநோயாளனனவெளியேனுமுய்வதுளதோ
பாயாடைமூடுசமணக்குறும்பர்பகைவாதுவென்றகனிவாய்ச்
சேயானவர்க்கொர்தாயாயளித்ததிருவாலவாயிலரசே. (௯௪)

திருவாலவாயர்திருநீலகண்டர்திருவாதவூரின்முனிவர்
குருவாகிவந்தசிவஞானபோதர்குடியாகிவாழுமடியார்
உருவானமாயவடிவோடுகூடியுடைபாய்கழிப்பமுடைபாய்
கருவாசலூடுவருவார்களல்லர்காணுதுபாவகதியே. (௯௫)

கதியேதுமின்றியுனைவந்தடைந்தகடன்ஞாலமீதுபிறரை
மதியேனைமூடமிருளோத்துரக்கில்வசமாய்மறித்துவருமோ
துதியேதுமின்றிநீரிற்பிரித்ததொய்யிற்குழம்பதலவோ
நதியேடெதிர்ந்தபுகழ்மேவுகூடனகர்வாழுஞானமுதலே. (௯௬)

முதலைக்கொடுங்குசிறுமீனிகர்ப்பமுடியக்கிடந்துனடியேன் [நாள்
விதலைக்கிடங்கொள் பிணியாலொடுங்கு மெலிவைத்தவிர்ப்பதெது
மதலைப்பசும்பொன்மலர்வேணிநம்பர்மார்பிற்கரும்புவளர்பூங்
குதலைக்கரும்பினிடமேவிநின்றகூடற்பதிக்குளமுதே. (௯௭)

தேடித்திரிந்துமகிலாகமங்கள்சிந்தித்துமன்புதிரியா
தாடித்திரிந்துமாடாதபாவையசையாதிருக்குமணிநா
நீடித்திரிந்தநிலைபெற்றிரிந்துநினைபோதிலன்றிமறைநூல்
பாடித்திரிந்துண்மதுரேசர்தாள்கள்பதியக்கிடப்பதரிதே. (௯௮)

அரியாசனத்தினடுவேகயற்கணருள்சேர்துரைப்பெண்ணொருபாற்
பிரியாதிருக்குமதுரேசர்சித்தர்பிறைவேணிமுத்தர்புகழைப்
புரியாதிருக்கினுயர்சீவன்முத்திபுரமேவுதற்கெளியதோ
முரியாதகற்பதருவானிடத்தர்முனிவோர்முதற்பிறருமே. (௯௯)

பிறவாததெய்வமிறவாதவாழ்வுபேரின்பவெள்ளமுனிவோர்
துறவாதஞானமுமைமாதுபாகர்சொக்கேசர்முக்கண்முதல்வர்
நறவார்கடம்பவனநாதர்நீதிஞாலம்புரக்குமதனுன்
மறவாதுதிங்கண்மும்மாரிபெய்யமலிகின்றமேகம்வருமே. (௪௦௦)

மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி
முற்றுப்பெற்றது.

---

(௯௪) சேய-ஆளுடையபிள்ளையார். (௯௫) முனிவர் - வாதவூரடிகள். முடை-நாற்றம். (௯௬) தொய்யிற்குழம்பு - கலவைச்சாந்து.

(௯௭) விதலை-துன்பம். மதலை-கொன்றை. மார்பிற்கரும்புவளர்பூங்குதலைக்கரும்பு-மன்மதனுக்குரிய கருப்புவில் வடிவைச்சந்தனக்குழம்பாற்றீட்டிய அழகிய மதலைச்சொல்லையுடைய உமாதேவியார்.

(௯௯) அரியாசனம் - சிங்காதனம். கற்பதருவானிடத்தர் என்றது - இந்திரன்முதலிய தேவர்களை.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

அருளிச்செய்த

# திருவாலவாய்த்தேவாரம்.

பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

மங்கையர்க்கரசிவளவர்கோன்பாவைவரிவளைக்கைமடமானி
பங்கயச்செல்விபாண்டிமாதேவிபணிசெய்துநாடொறும்பரவப்
பொங்கழலுருவன்பூதநாயகனல்வேதமும்பொருள்களுமருளி
யங்கயற்கண்ணிதன்னொடுமமர்ந்தவாலவாயாவதுமிதுவே. (க)

வெற்றவேயடியாரடிமிசைவீழும்விருப்பினன்வெள்ளைநீறணியுங்,
கொற்றவன்றனக்குமந்திரியாயகுலச்சிறைகுலாவிநின்றேத்து,மொ
ற்றைவெள்விடையனும்பரார்தலைவனுலகினிலியற்கையையொழிந்
திட், டற்றவர்க்கற்றசிவனுறைகின்றவாலவாயாவதுமிதுவே. (உ)

செந்துவர்வாயாள்சேலனகண்ணாள்சிவன்றிருநீற்றினைவளர்க்கும்
பந்தணைவிரலாள்பாண்டிமாதேவிபணிசெயப்பாரிடைநிலவுஞ்
சந்தமார்தரளம்பாம்புநீர்மத்தந்தண்ணெருக்கம்மலர்வன்னி
யந்திவான்மதிசேர்சடைமுடியண்ணலாலவாயாவதுமிதுவே. (ங)

கணங்களாய்வரினுந்தமியராய்வரினுமடியவர்தங்களைக்கண்டாற்
குணங்கொடுபணியுங்குலச்சிறைகுலாவுங் கோபுரஞ்சூழ்மணிக்கோ
மணங்கமழ்கொன்றைவாளராமதியம்வன்னிவண்கூவிளமாலை[யின்
யணங்குவீற்றிருந்தசடைமுடியண்ணலாலவாயாவதுமிதுவே. (ச)

செய்யதாமரைமேலன்னமேயனையசேயிழைதிருநுதற்செல்வி
பையரவல்குற்பாண்டிமாதேவிநாடொறும்பணிந்தினிதேத்த
வெய்யவேற்சூலம்பாசமங்குசமான்விரிகதிர்மழுவுடன்றரித்த
வையனுருமையோடின்புறுகின்றவாலவாயாவதுமிதுவே. (ரு)

நலமிலராகநலமதுண்டாகநாடவர்நாடறிகின்ற
குலமிலராகக்குலமதுண்டாகத்தவம்பணிகுலச்சிறைபரவுங்
கலைமலிகரத்தன்மூவிலைவேலன்கரியுரிமூடியகண்ட
னலைமலிபுனல்சேர்சடைமுடியண்ணலாலவாயாவதுமிதுவே. (சு)

முத்தின்றாழ்வடமுஞ்சந்தனக்குழம்புநீறுந்தன்மார்பினின்முயங்கப்
பத்தியார்கின்றபாண்டிமாதேவிபாங்கொடுபணிசெயநின்ற

சுத்தமார்பளிங்கின்பெருமலையுடனேசுரர்மரகதமடுத்தாற்போ
லத்தனுருமையோடின்புறுகின்றவாலவாயாவதுமிதுவே. (எ)

நாவணங்கியல்பாமஞ்செழுத்தோதிநல்லராய்நல்லியல்பாகுங்
கோவணம்பூதிசாதனங்கண்டாற்றொழுதெழுகுலச்சிறைபோற்ற
வேவணங்கியல்பாமிராவணன்றிண்டோளிருபதுநெரிதரவூன்றி
யாவணங்கொண்டசடைமுடியண்ணலாலவாயாவதுமிதுவே. (அ)

மண்ணெலாநிகழமன்னனாய்மன்னுமணிமுடிசோழன்றன்மகளாம்
பண்ணினேர்மொழியாள்பாண்டிமாதேவிபாங்கினாற்பணிசெய்துப
விண்ணுளாரிருவர்கீழொடுமேலுமளப்பரிதாம்வகைநின்ற [ரவ
வண்ணலாருமையோடின்புறுகின்றவாலவாயாவதுமிதுவே. (௯)

தொண்டராயுள்ளார் திசைதிசைதோறுந் தொழுதுதன்குண
த்தினைக்குலாவக், கண்டநாடோறு மின்புறுகின்ற குலச்சிறைகரு
திநின்றேத்தக், குண்டராயுள்ளார் சாக்கியர்தங்கள் குறியின்கணெ
றியிடைவாரா, வண்டநாயகன்றா னமர்ந்துவீற்றிருந்த வாலவாயா
வதுமிதுவே. (௧0)

பன்னலம்புணரும்பாண்டிமாதேவிகுலச்சிறையெனுமிவர்பணியு
மந்நலம்பெறுசீராலவாயீசன்றிருவடியாங்கவைபோற்றிக்
கன்னலம்பெரியகாழியுண்ஞானசம்பந்தன்செந்தமிழிவைகொண்
டின்னலம்பாடவல்லவரிமையோரேத்தவீற்றிருப்பவரினிதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிருக்குக்குறள்.

பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

நீலமாமிடற்
றாலவாயிலான்
பாலதாயினார்
ஞாலமாள்வரே. (௧)

ஞாலமேழுமா
மாலவாயிலார்
சீலமேசொலீர்
காலன்வீடவே. (௨)

ஆலநீழலா
ராலவாயிலார்
காலகாலனார்
பாலதாமினே. (௩)

அந்தமில்புக
ழெந்தையாலவாய்
பந்தியார்கழல்
சிந்தைசெய்ம்மினே. (௪)

ஆடலேற்றினான்
கூடலாலவாய்
பாடியேமன
நாடிவாழ்மினே. (௫)

அண்ணலாலவாய்
நண்ணினான்றனை
யெண்ணியேதொழத்
திண்ணமின்பமே. (௬)

அம்பொனாலவாய்
நம்பனார்கழல்
நம்பிவாழ்பவர்
துன்பம்வீடுமே. (எ)

அரக்கனார்வலி
நெருக்கனாலவா
யுரைக்குமுள்ளத்தார்க்
கிரக்கமுண்மையே. (அ)

அருவனாலவாய்
மருவினான்றனை
யிருவரேத்தநின்
றுருவமோங்குமே. (கூ)

ஆரநாகமாஞ்
சீரனாலவாய்த்
தேரமண்செற்ற
வீரனென்பரே. (க0)

அடிகளாலவாய்ப் - படிகொள்சம்பந்தன்
முடிவிலின்றமிழ் - * செடிகணீக்குமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

செய்யனே திருவாலவாய்மேவிய
வையனேயஞ்சலென்றருள்செய்யெனைப்
பொய்யராமமணர்கொளுவுஞ்சுடர்
பையவேசென்றுபாண்டியற்காகவே. (க)

சித்தனே திருவாலவாய்மேவிய
வத்தனேயஞ்சலென்றருள்செய்யெனை
யெத்தராமமணர்கொளுவுஞ்சுடர்ப்
பத்திமன்றென்னன்பாண்டியற்காகவே. (உ)

தக்கன்வேள்விதகர்த்தருளாலவாய்ச்
சொக்கனேயஞ்சலென்றருள்செய்யெனை
யெக்கராமமணர்கொளுவுஞ்சுடர்
பக்கமேசென்றுபாண்டியற்காகவே. (௩)

சிட்டனே திருவாலவாய்மேவிய
வட்டமூர்த்தியனேயஞ்சலென்றரு
ளெட்டராமமணர்கொளுவுஞ்சுடர்
பட்டிமன்றென்னன்பாண்டியற்காகவே. (௪)

நண்ணலார்புரமூன்றெரியாலவா
யண்ணலேயஞ்சலென்றருள்செய்யெனை
யெண்ணிலாவமணர்கொளுவுஞ்சுடர்
பண்ணியற்றமிழ்ப்பாண்டியற்காகவே. (௫)

தஞ்சமென்றுன்சரண்புகுந்தேனையு
மஞ்சலென்றருளாலவாயண்ணலே

---

* செடிகள்-பழிபாவங்கள்.

வஞ்சஞ்செய்தமணர்கொளுவுஞ்சுடர்
பஞ்சவன்றென்னன்பாணடியற்காகவே. (௬)

செங்கண்வெள்விடையாய்திருவாலவா
யங்கணவஞ்சலென் றருள்செய்யெனக்
கங்குலாரமண்கையரிடுங்கனல்
பங்கமிறென்னன்பாண்டியற்காகவே. (எ)

தூர்த்தன்வீரந்தொலைத்தருளாலவா
யாத்தனேயஞ்சலென் றருள்செய்யெனை
யேத்திலாவமணர்கொளுவுஞ்சுடர்
பார்த்திபன்றென்னன்பாண்டியற்காகவே. (அ)

தாவினனயன்றானறியாவகை
மேவினய்திருவாலவாயாயரு
ளேவிலாவமணர்கொளுவுஞ்சுடர்
பாவினன்றென்னன்பாண்டியற்காகவே. (௯)

எண்டிசைக்கெழிலாலவாய்மேவிய
வண்டனேயஞ்சலென் றருள்செய்யெனக்
குண்டராமமணர்கொளுவுஞ்சுடர்
பண்டிமன்றென்னன்பாண்டியற்காகவே. (௧௦)

அப்பனாலவாயாதியருளினல்
வெப்பந்தென்னவன்மேலுறமேதினிக்
கொப்பஞானசம்பந்தனுரைபத்துஞ்
செப்பவல்லவர்தீதிலாச்செல்வரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

காட்டுமாவதுரித்துரிபோர்த்துட
ணுட்டமூன்றுடையாயுரைசெய்வனன்
வேட்டுவேள்விசெய்யாவமண்கையரை
யோட்டிவாதுசெயத்திருவுள்ளமே. (௧)

மத்தயானையினீருரிமூடிய
வத்தனேயணியாலவாய்பணி
பொய்த்தவன்றவவேடத்தராஞ்சமண்
சித்தரையழிக்கத்திருவுள்ளமே. (௨)

மண்ணகத்திலும்வானிலுமெங்குமாந்
திண்ணகத்திருவாலவாயாயருள்
பெண்ணகத்தெழிற்சாக்கியப்பேயமண்
டெண்ணர்கற்பழிக்கத்திருவுள்ளமே. (௩)

ஓதியோத்தறியாவமணாதரை
வாதில்வென்றழிக்கத்திருவுள்ளமே
யாதியேதிருவாலவாயண்ணலே
நீதியாகநினைந்தருள்செய்திடே. (௪)

வையமார்புகழாயடியார்தொழுஞ்
செய்கையார்திருவாலவாயாய்செப்பாய்
கையிலுண்டுழலுமமண்கையரைப்
பையவாதுசெயத்திருவுள்ளமே. (௫)

நாறுசேர்வயற்றண்டலைமிண்டிய
தேறலார்திருவாலவாயாய்செப்பாய்
வீறிலாத்தவமோட்டமண்வேடரைச்
சீறிவாதுசெயத்திருவுள்ளமே. (௬)

பண்டிடத்தவத்தார்பயில்வாற்றொழுந்
தொண்டருக்கெளியாய்திருவாலவா
யண்டனேயமண்கையரைவாதினிற்
செண்டடித்துளறத்திருவுள்ளமே. (௭)

அரக்கன்றான்கிரியேற்றவன்றன்முடிச்
செருக்கினைத்தவிர்த்தாய்திருவாலவாய்ப்
பரக்குமாண்புடையாயமண்பாவரைக்
கரக்கவாதுசெயத்திருவுள்ளமே. (௮)

மாலுநான்முகனும்மறியாநெறி
யாலவாயுறையுமண்ணலேபணி
மேலைவீடுணராவெற்றரையரைச்
சாலவாதுசெயத்திருவுள்ளமே. (௯)

கழிக்கரைப்படுமீன்கவர்வாரம
ணழிப்பரையழிக்கத்திருவுள்ளமே
தெழிக்கும்பூம்புனல்சூழ்திருவாலவாய்
மழுப்படையுடைமைந்தனேநல்கிடே. (௧௦)

செந்தெனாமுரலுந்திருவாலவாய்
மைந்தனேயென்றுவல்லமணாசறச்
சந்தமார்தமிழ்கேட்டமெய்ஞ்ஞானசம்
பந்தன்சொற்பகரும்பழிநீங்கவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## நாலடி மேல்வைப்பு.

திருச்சிற்றம்பலம்.

வேதவேள்வியைநிந்தனைசெய்துழ
லாதமில்லியமணொடுதேரரை

வாதில்வென்றழிக்கதிருவுள்ளமே
பாதிமாதுடனாயபரமனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
னாலவாயிலுறையுமெம்மாதியே. (க)

வைதிகத்தின்வழியொழுகாதவக்
கைதவமுடைக்காரமணரேரை
யெய்திவாதுசெயத்திருவுள்ளமே
மைதிகழ்தருமாமணிகண்டனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
னாலவாயிலுறையுமெம்மாதியே. (உ)

மறைவழக்கமிலாதமாபாவிகள்
பறிதலைக்கையர்பாயுடுப்பார்களை
முறியவாதுசெயத்திருவுள்ளமே
மறியுலாங்கையின்மாமழுவாளனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
னாலவாயிலுறையுமெம்மாதியே. (ங)

அறுத்தவங்கமாறாயினநீர்மையைக்
கறுத்தவாழமண்கையர்கடம்மொடுஞ்
செறுத்தவாதுசெயத்திருவுள்ளமே
முறித்தவாண்மதிக்கண்ணிமுதல்வனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
னாலவாயிலுறையுமெம்மாதியே. (ச)

அந்தணாளர்புரியுமருமறை
சிந்தைசெய்யாவருகர்திறங்களைச்
சிந்தவாதுசெயத்திருவுள்ளமே
வெந்தநீறதணியும்விகிர்தனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
னாலவாயிலுறையுமெம்மாதியே. (ரு)

வேண்டுவேள்விசெயும்பொருளைவிளி
மூட்டுசிந்தைமுருட்டமண்குண்டரை
யோட்டிவாதுசெயத்திருவுள்ளமே
காட்டிலானையுரித்தவெங்கள்வனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
னாலவாயிலுறையுமெம்மாதியே. (சு)

அழலதோம்புமருமறையோர்திறம்
விழலதென்னுமருகர்திறத்திறங்
கழலவாதுசெயத்திருவுள்ளமே
தழலிலங்குதிருவுருச்சைவனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
னாலவாயிலுறையுமெம்மாதியே. (எ)

நீற்றுமேனியராயினர்மேலுற்ற
காற்றுக்கொள்ளவுநில்லாவமணரைத்
தேற்றிவாதுசெயத்திருவுள்ளமே
யாற்றவாளரக்கர்க்குமருளினாய்
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
னாலவாயிலுறையுமெம்மாதியே. (அ)

நீலமேனியமணர்திறத்துநின்
சீலம்வாதுசெயத்திருவுள்ளமே
மாலுநான்முகனுங்காண்பரியதோர்
கோலமேனியதாகியகுன்றமே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
னாலவாயிலுறையுமெம்மாதியே. (கூ)

அன்றுமுப்புரஞ்செற்றவழகநின்
றுன்றுபொற்கழல்பேணுவருகரைத்
தென்றவாதுசெயத்திருவுள்ளமே
கன்றுசாக்கியர்காணுத்தலைவனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
னாலவாயிலுறையுமெம்மாதியே. (கo)

கூடலாலவாய்க்கோனைவிடைகொண்டு
வாடன்மேனியமணரைவாட்டிட
மாடக்காழிச்சம்பந்தன்மதித்தவிப்
பாடல்வல்லவர்பாக்கியவாளரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

மானினேர்விழிமாதராய்வழுதிக்குமாபெருந்தேவிகேள்
பானல்வாயொருபாலனீங்கிவனென்றுநீபரிவெய்திடே
லானைமாமலையாதியாயவிடங்களிற்பலவல்லல்சே
ரீனர்கட்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (க)

ஆகமத்தொடுமந்திரங்களமைந்தசங்கதபங்கமாப்
பாகதத்தொடிரைந்துரைத்தசனங்கள்வெட்குறுபக்கமா
மாகதக்கரிபோற்றிரிந்துபுரிந்துநின்றுணுமாசுசே
ராகதர்க்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (உ)

அத்தகுபொருளுண்டுமில்லையுமென்றுநின்றவர்க்கச்சமா
வொத்தொவ்வாமைமொழிந்துவாதிலழிந்தெழுந்தகவிப்பெயர்ச்
சத்திரத்தின்மடிந்தொடிந்துசனங்கள்வெட்குறநக்கமே
சித்திரர்க்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (ங)

சந்துசேனனுமிந்துசேனனுந்தருமசேனனுங்கருமைசேர்
கந்துசேனனுங்கனகசேனனுமுதலதாகியபெயர்கொளா
மந்திபோற்றிரிந்தாரியத்தொடுசெந்தமிழ்ப்பயனறிகிலா
வந்தகர்க்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (ச)

கூட்டினார்கிளியின்விருத்தமுரைத்ததோரொலியின்றொழிற்
பாட்டுமெய்சொலிப்பக்கமேசெலுமெக்கர்தங்களைப்பல்லறங்
காட்டியேவருமாடெலாங்கவர்கையரைக்கசிவொன்றிலாச்
சேட்டைகட்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (ரு)

கனகநந்தியும்புட்பநந்தியும்பவணநந்தியுங்குமணமா
சுனகநந்தியுங்குனகநந்தியுந்திவணநந்தியுமொழிகொளா
வனகநந்தியர்மதுவொழிந்தவமேதவம்புரிவோமெனுஞ்
சினகருக்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (சு)

பந்தணம்மவையொன்றிலம்பரிவொன்றிலம்மெனவாசக
மந்தணம்பலபேசிமாசறுசீர்மையின்றியநாயமே
யந்தணம்மருகந்தணம்மதுபுத்தணம்மதுசித்தணச்
சிந்தணர்க்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (எ)

மேலெனக்கெதிரில்லையென்றவரக்கனார்மிகைசெற்றதீப்
போலியைப்பணியக்கிலாதொருபொய்த்தவங்கொடுகுண்டிகை
பீலிகைக்கொடுபாயிடுக்கிநடுக்கியேபிறர்பின்செலுஞ்
சீலிகட்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (அ)

பூமகற்குமரிக்குமோர்வருபுண்ணியன்னடிபோற்றிலார்
சாமவத்தையினார்கள்போறலையைப்பறித்தொருபொய்த்தவம்
வேமவத்தைசெலுத்திமெய்ப்பொடியட்டிவாய்சகதிக்குநே
ராமவர்க்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (கூ)

தங்களுக்குமச்சாக்கியர்க்குந்தரிப்பொணாதநற்சேவடி
யெங்கணாயகனேத்தொழிந்திடுக்கேமடுத்தொருபொய்த்தவம்
பொங்குநூல்வழியன்றியேபுலவோர்களைப்பழிக்கும்பொலா
வங்கதர்க்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (க0)

எக்கராமமண்கையருக்கெளியேனலேன்றிருவாலவாய்ச்
சொக்கனென்னு ளிருக்கவே துளங்கும்முடித் தென்னன்முன்னி
தக்கசீர்ப்புகலிக்குமன்றமிழ்நாதன்ஞானசம்பந்தன்வா [வை
யொக்கவேயுரைசெய்தபத்துமுரைப்பவர்க்கிடரில்லையே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநீற்றுப்பதிகம்.

பண்-கர்ந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மந்திரமாவதுநீறு வானவர்மேலதுநீறு
சுந்தரமாவதுநீறு துதிக்கப்படுவதுநீறு

தந்திரமாவதுநீறு சமயத்திலுள்ளதுநீறு
செந்துவர்வாயுமைபங்கன்றிரு வாலவாயான்றிருநீறே. (க)

வேதத்திலுள்ளதுநீறு வெந்துயர்தீர்ப்பதுநீறு
போதந்தருவதுநீறு புன்மைதவிர்ப்பதுநீறு
வோதத்தகுவதுநீறு வுண்மையிலுள்ளதுநீறு
சீதப்புனல்வயல்சூழ்ந்ததிரு வாலவாயான்றிருநீறே. (உ)

முத்திதருவதுநீறு முனிவரணிவதுநீறு
சத்தியமாவதுநீறு தக்கோர்புகழ்வதுநீறு
பத்திதருவதுநீறு பரவவினியதுநீறு
சித்திதருவதுநீறு திருவாலவாயான்றிருநீறே. (ங)

காணவினியதுநீறு கவினைத்தருவதுநீறு
பேணியணிபவர்க்கெல்லாம் பெருமைகொடுப்பதுநீறு
மாணந்தகைவதுநீறு மதியைத்தருவதுநீறு
சேணந்தருவதுநீறு திருவாலவாயான்றிருநீறே. (ச)

பூசவினியதுநீறு புண்ணியமாவதுநீறு
பேசவினியதுநீறு பெருந்தவத்தோர்களுக்கெல்லா
மாசைகெடுப்பதுநீறு வந்தமதாவதுநீறு
தேசம்புகழ்வதுநீறுதிரு வாலவாயான்றிருநீறே. (ரு)

அருத்தமதாவதுநீறு வவலமறுப்பதுநீறு
வருத்தந்தணிப்பதுநீறு வானமளிப்பதுநீறு
பொருத்தமதாவதுநீறு புண்ணியர்பூசும்வெண்ணீறு
திருத்தகுமாளிகைசூழ்ந்த திருவாலவாயான்றிருநீறே. (சு)

எயிலதுவட்டதுநீறு விருமைக்குமுள்ளதுநீறு
பயிலப்படுவதுநீறு பாக்கியமாவதுநீறு
துயிலைத்தடுப்பதுநீறு சுத்தமதாவதுநீறு
வயிலைப்பொலிதருசூலத் தாலவாயான்றிருநீறே. (எ)

இராவணன்மேலதுநீறு வெண்ணத்தகுவதுநீறு
பராவணமாவதுநீறு பாவமறுப்பதுநீறு
தராவணமாவதுநீறு தத்துவமாவதுநீறு
வராவணங்குந்திருமேனி யாலவாயான்றிருநீறே. (அ)

மாலொடயனறியாத வண்ணமுமுள்ளதுநீறு
மேலுறைதேவர்கடங்கண் மெய்யதுவெண்பொடிநீறு
வேலவுடம்பிடர்தீர்க்கு மின்பந்தருவதுநீறு
வாலமதுண்டமிடற்றெம் மாலவாயான்றிருநீறே. (கூ)

குண்டிகைக்கையர்களோடு சாக்கியர்கூட்டமுங்கூடக்
கண்டிகைப்பிப்பதுநீறு கருதவினியதுநீறு
வெண்டிசைப்பட்டபொருளா ரேத்துந்தகையதுநீறு
வண்டத்தவர்பணிந்தேத்து மாலவாயான்றிருநீறே. (க0)

ஆற்றலடல்விடையேறு மாலவாயான்றிருநீற்றைப்
போற்றிப்புகலிநிலாவும் பூசுரன்ஞானசம்பந்தன்
றேற்றித்தென்னனுடலுற்ற தீப்பிணியாயினதீரச்
சாற்றியபாடல்கள்பத்தும் வல்லவர்நல்லவர்தாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பாசுரம்-பண்-கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

வாழ்கவந்தணர்வானவரானினம்
வீழ்கதண்புனல்வேந்தனுமோங்குக
ஆழ்கதீயதெல்லாமரனாமமே
சூழ்கவையகமுந் துயர்தீர்கவே. (க)

அரியகாட்சியராய்த்தமதங்கைசேர்
எரியரேறுகந்தேறுவர்கண்டமுங்
கரியர்காடுறைவாழ்க்கையராயினும்
பெரியராரறிவாரவர்பெற்றியே. (உ)

வெந்தசாம்பல்விரையெனப்பூசியே
தந்தையாரொடுதாயிலார்தம்மையே
சிந்தியாவெழுவார்வினைதீர்ப்பரால்
எந்தையாரவரெவ்வகையார்கொலோ. (ங)

ஆட்பாலவர்க்கருளும்வண்ணமுமாதிமாண்புங்
கேட்பான்புகிலளவில்லைகிளக்கவேண்டா
கோட்பாலனவும்வினையுங்குறுகாமையெந்தை
தாட்பால்வணங்கித்தலைநின்றவைகேட்கதக்கார். (ச)

எதுக்களாலுமெடுத்தமொழியாலுமிக்குச்
சோதிக்கவேண்டாசுடர்விட்டுளனெங்கள்சோதி
மாதுக்கநீங்கலுறுவீர்மனம்பற்றிவாழ்மின்
சாதுக்கண்மிக்கீரிறையேவந்துசார்மின்களே. (ரு)

ஆடும்மெனவுமருங்கூற்றமுதைத்துவேதம்
பாடும்மெனவும்புகழல்லதுபாவநீங்கக்
கேடும்பிறப்பும்மறுக்கும்மெனக்கேட்டீராகில்
நாடுந்திறத்தார்க்கருளல்லதுநாட்டலாமே. (சு)

கடிசேர்ந்தபோதுமலரானகைக் கொண்டுநல்ல
படிசேர்ந்தபால்கொண்டங்காட்டிடத்தாதைபண்டு
முடிசேர்ந்தகாலையறவெட்டிடமுக்கண்மூர்த்தி
அடிசேர்ந்தவண்ணமறிந்தார்சொலக்கேட்டுமன்றே. (எ)

வேதம்முதல்வன்முதலாகவிளங்கிவையம்
ஏதம்படாமேயுலகத்தவரேத்தல்செய்யப்

பூதம்முதல்வன்முதலேமுதலாப்பொலிந்த
சூதன்ஒலிமாலையென்றேகலிக்கோவைசொல்லே. (அ)

பாராழிவட்டம்பகையானலிந்தாட்டவாடிப்
பேராழியானதிடர்கண்டருள்செய்தல்பேணி
நீராழிவிட்டேறிநெஞ்சிடங்கொண்டவற்குப்
பேராழியீந்தபுகழும்புகழுற்றதன்றே. (கூ)

மாலாயவனுமறைவல்லநான்முகனும்
பாலாயதேவர்பகரில்லமுதூட்டல்பேணிக்
காலாயமுந்நீர்க்கடைந்தார்க்கரிதாவெழுந்த
ஆலாலமுண்டங்கமரர்க்கருள்செய்ததாமே. (கo)

அற்றன்றியந்தண்மதுரைத்தொகையாக்கினனும்
தெற்றென்றுசெய்வந்தெளியார்க்கரைக்கோலைதெண்ணீர்
பற்றின்றிப்பாங்கெதிர்விரவும்பண்புநோக்கிற்
பெற்றொன்றுயர்த்தபெருமான்பெருமானுமன்றே. (கக)

நல்லார்கள்சேர்புகலிஞானசம்பந்தனல்ல
எல்லார்களும்பரவுமீசனையேத்துபாடல்
பல்லார்களுமதிப்பப்பாசுரஞ்சொன்னபத்தும்
வல்லார்கள்வானோருலகாளவும்வல்லரன்றே. (கஉ)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிராகம்-பண்-கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

வீடலாலவாயிலாய்விழுமியார்கணின்கழற்
பாடலாலவாயிலாய்பரவநின்றபண்பனே
காடலாலவாயிலாய்கபாலிநீள்கடிம்மதிற்
கூடலாலவாயிலாய்குலாயதென்னகொள்கையே. (க)

பட்டிசைந்தவல்குளாள்பாவையாளோர்பாகமா
வொட்டிசைந்ததன்றியும்முச்சியாளொருத்தியாக்
கொட்டிசைந்தவாடலாய்கூடலாலவாயிலா
யெட்டிசைந்தமூர்த்தியாயிருந்தவாறிதென்னையே. (உ)

குற்றநீகுணங்கணீகூடலாலவாயிலாய்
சுற்றநீபிரானுநீதொடர்ந்திலங்குசோதிநீ
கற்றநூற்கருத்துநீயருத்தமின்பமென்றிவை
முற்றநீபுகழ்ந்துமுன்னுரைப்பதென்முகம்மனே. (ங)

முதிருநீர்ச்சடைமுடிமுதல்வனீமுழங்கழ
லதிரவீசியாடுவாயழகனீபுயங்கனீ

மதுரனீமணுளனீமதுரையாலவாயிலாய்
சதுரனீசதுமுகன்கபாலமேந்துசம்புவே. (௫)

கோலமாயநீண்மதிற்கூடலாலவாயிலாய்
பாலனுயதொண்டுசெய்துபண்டுமின்றுமுன்னையே
நீலமாயகண்டனேநின்னையன்றிநித்தலுஞ்
சீலமாயசிந்தையிற்றேர்வதில்லைதேவரே. (௬)

பொன்றயங்கிலங்கொளிர்நலங்குளிர்ந்தபுன்சடை
பின்றயங்கவாடவாய்பிஞ்ஞகாபிறப்பிலீ
கொன்றையம்முடியினுய்கூடலாலவாயிலாய்
நின்றயங்கியாடலேநினைப்பதேநியமமே. (௭)

ஆதியந்தமாயினுயாலவாயிலண்ணலே
சோதியந்தமாயினுய்சோதியுள்ளோர்சோதியாய்
கீதம்வந்தவாய்மையாற்கிளர்தருக்கினுர்க்கலா
லோதிவந்தவாய்மையாலுணர்ந்துரைக்கலாகுமே. (எ)

கறையிலங்குகண்டனேகருத்திலாக்கருங்கடற்
றுறையிலங்கைமன்னனைத்தோளடரவூன்றினுய்
மறையிலங்குபாடலாயமதுரையாலவாயிலாய்
நிறையிலங்குநெஞ்சினுனினைப்பதேநியமமே. (அ)

தாவணவ்விடையினுய்தலைமையாகநாடொறுங்
கோவணவ்வுடையினுய்கூடலாலவாயிலாய்
தீவணம்மலர்மிசைத்திசைமுகனுமாலுநின்
றூவணமளக்கிலார்துளக்கமெய்துவார்களே. (௯)

தேற்றமில்வினைத்தொழிற்றேரருஞ்சமணரும்
போற்றிசைத்துநின்கழற்புகழ்ந்துபுண்ணியங்கொளார்
கூற்றுதைத்ததாளினுய்கூடலாலவாயிலாய்
நாற்றிசைக்குமூர்த்தியாகிநின்றதென்னநன்மையே. (௧0)

போயநீர்வளங்கொளும்பொருபுனற்புகலியான்
பாயகேள்விஞானசம்பந்தனல்லபண்பினு
லாயசொல்லின்மாலைகொண்டாலவாயிலண்ணலைத்
தீயதீரவெண்ணுவார்கள்சிந்தையாவர்தேவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவியமகம்.

திருச்சிற்றம்பலம்.

ஆலநீழலுகந்ததிருக்கையேயானபாடலுகந்ததிருக்கையே
பாலினேர்மொழியாளொருபங்கனேபாதமோதலர்சேர்புரபங்கனே
கோலநீறணிமேதகுபூதனேகோதிலார்மனமேவியபூதனே
யாலநஞ்சமுதுண்டகளத்தனேயாலவாயுறையண்டர்களத்தனே. ()

பாதியாயுடன் கொண்டதுமாலையே பாம்புதார்மலர்க் கொன்றைநன்மாலையே, கோதினீறதுபூசிடுமாகனே கொண்டநற்கையின் மானிடமாகனே, நாதனுடொரு மாடுவதானையே நாடியன் றுரிசெய்ததுமானையே, வேதநூல்பயில் கின்றதுவாயிலே விகிர்தனூர்திருவாலநல்வாயிலே. (உ)

காடுநீடதுறப்பலகத்தனேகாதலாளினைவார்தமகத்தனே
பாடுபேயொடுபூதமசிக்கவேபல்பிணத்தசைநாடியசிக்கவே
நீடுமாநடமாடவிருப்பனேநின்னடித்தொழநாளுமிருப்பனே
யாடனீள்சடைமேவியவப்பனேயாலவாயினின்மேவியவப்பனே. ()

பண்டயன்றலை யொன்றுமறுத்தியே பாதமோதினர் பாவமறுத்தியே, துண்டவெண்பிறை சென்னியிருத்தியே தூயவெள்ளெருதேறியிருத்தியே, கண்டுகாமனை வேவவிழித்தியே காதலில்லவர் தம்மை * விழித்தியே, யண்டநாயகனேமிகுகண்டனே யாலவாயினின் மேவியகண்டனே. (௩)

சென்றுதாதை யுகுத்தனன்பாலையே சீறியன்புசெகுத்தனன் பாலையே, வென்றிசேர்மழுக்கொண்டுமுன்காலையே வீடவெட்டிடக்கண்டுமுன்காலையே, நின்றமாணியை யோடினகங்கையா னிலவமல்கியுதித்தனகங்கையா, லன்றுநின்னுரு வாகத்தடவியே யாலவாயரனுகத்தடவியே. (௪)

நக்கமேகுவர் நாடுமோரூருமே நாதன்மேனியின் மாசுணமூருமே, தக்கபூமனைச் சுற்றகருளொடே தாரமுய்த்ததுபாணற் கருளொடே, மிக்கதென்னவன் றேவிக்கணியையே மெல்லநல்கிய தொண்டர்க்கணியையே, யக்கினாரமு துண்கலனோடுமே யாலவாயரனாருமையோடுமே. (௫)

வெய்யவன்பல் லுகுத்ததுகுட்டியே வெங்கண்மாசுணங் கையதுகுட்டியே, மையனேயன லாடியமெய்யனே யன்பினானினைவார்க்கருண்மெய்யனே, வையமுய்யவன் றுண்டதுகாளமே வள்ளல் கையது மேவுகங்காளமே, மையமேற்ப துரைப்பதுவீணையே யாலவாயரன் கையதுவீணையே. (எ)

தோள்கள்பத்தொடு பத்துமயக்கியே தொக்கதேவர் செருக்கைமயக்கியே, வாளரக்க னிலத்துக்களித்துமே வந்தமால்வரை கண்டுகளித்துமே, நீள்பொருப்பை யெடுத்தவுன்மத்தனே நின்விர

* யிழித்தியே என்றும் பாடம்.

51

ற்றலையான்மதமத்தனே, யாளுமாதி முறித்ததுமெய்கொலோவா லவாயர னுய்த்ததுமெய்கொலோ. (அ)

பங்கயத்துள நான்முகன்மாலொடே பாதநீண்முடி நேடிடமா லொடே, துங்கநற்றழ லின்னுருவாயுமே தூயபாடல் பயின்றது வாயுமே, செங்கயற்கணி னரிடுபிச்சையே சென்றுகொண்டுறை செய்வதுபிச்சையே, யங்கியைத்திகழ் விப்பதிடக்கையே யாலவா யர னாரதிடக்கையே. (கூ)

தேரரோடமணர்க்கு நல்கானையே தேவர்நாடொறுஞ் சேர்வ துகானையே, கோரமட்டது புண்டரிகத்தையே கொண்டநீள்கழல் புண்டரிகத்தையே, நேரிலூர்களழித்ததுநாகமேநீள்சடைத்திகழ்கி ன்றதுநாகமே, யாரமாகவுகந்ததுமென்பதே யாலவாயரனாரிடமெ ன்பதே. (கO)

ஈனஞானிக டம்மொடுவிரகனே யேறுபல்பொருண் முத்தமி ழ்விரகனே, யானகாழியுண் ஞானசம்பந்தனே யாலவாயினின் மே யசம்பந்தனே, யானவானவர் வாயினுளத்தனே யன்பரானவர் வா யினுளத்தனே, நானுரைத்தன செந்தமிழ்பத்துமே வல்லவர்க்கி வை நற்றமிழ்பத்துமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசு நாயனார்

### திருநேரிசை.

வேதியாவேதகீதாவிண்ணவரண்ணவென்றென்
ஞேதியேமலர்கவேவியொருங்குநின்கழல்கள்காணப்
பாதியோர்பெண்ணைவைத்தாய்படர்சடைமதியஞ்சூடு
மாதியேயாலவாயிலப்பனேயருள்செயாயே. (க)

நம்பனேநான்முகத்தாய்நாதனேஞானமூர்த்தி
யென்பொனேயீசாவென்றென்றேத்திநானேசற்றென்றும்
பின்பினேதிரிந்துநாயேன்பேர்த்தினிப்பிறவாவண்ண
மன்பனேயாலவாயிலப்பனேயருள்செயாயே. (உ)

ஒருமருந்தாகியுள்ளாயும்பரோடுலகுக்கெல்லாம்
பெருமருந்தாகிநின்றாய்பேரமுதின்சுவையாய்க்
கருமருந்தாகியுள்ளாயாளும்வல்வினைகடீர்க்கு
மருமருந்தாலவாயிலப்பனேயருள்செயாயே. (௫)

செய்யநின்கமலபாதஞ்சேருமாதேவர்தேவே
மையணிகண்டத்தானேமான்மறிமழுவொன்றேந்துஞ்
சைவனேசாலஞானங்கற்றறிவிலாதநாயே
னையனேயாலவாயிலப்பனேயருள்செயாயே. (௬)

வெண்டலைகையிலேந்திமிகவுமூர்பலிகொண்டென்று
முண்டதுமில்லைசொல்லிலுண்டதுநஞ்சுதன்னைப்
பண்டுனைநினையமாட்டாப்பளகனேனுளமதார
வண்டனேயாலவாயிலப்பனேயருள்செயாயே. (௭)

எஞ்சலில்புகலிதென்றென்றேத்தினானேசற்றென்றும்
வஞ்சகமொன்றுமின்றிமலரடிகாணும்வண்ண
நஞ்சினைமிடற்றில்வைத்தநற்பொருட்பதமேநாயேற்
கஞ்சலென்றாலவாயிலப்பனேயருள்செயாயே. (௮)

வழுவிலாதுன்னைவாழ்த்திவழிபடுந்தொண்டனேனுன்
செழுமலர்ப்பாதங்காணத்தெண்டிரைநஞ்சமுண்ட
குழகனேகோலவில்லீகூத்தனேமாத்தாயுள்ள
வழகனேயாலவாயிலப்பனேயருள்செயாயே. (௯)

நறுமலர்நீருங்கொண்டுநாடொறுமேத்திவாழ்த்திச்
செறிவனசித்தம்வைத்துத்திருவடிசேரும்வண்ண
மறிகடல்வண்ணன்பாகாமாமறையங்கமாறு
மறிவனேயாலவாயிலப்பனேயருள்செயாயே. (அ)

நலந்திகழ்வாயினூலாற்சருகிலைப்பந்தர்செய்த
சிலந்தியையரசதாளவருளினையென்றுதிண்ணங்
கலந்துடன்வந்துநின்றாள்கருதிநான்காண்பதாக
வலந்தனாலவாயிலப்பனேயருள்செயாயே. (கூ)

பொடிக்கொடுபூசிப்பொல்லாக்குரம்பையிற்புந்தியொன்றிப்
பிடித்துநின்றாள்களென்றும்பிதற்றிநானிருக்கமாட்டே
னெடுப்பனென்றிலங்கைக்கோன்வந்தெடுத்தலுமிருபதுதோ
ளடர்த்தனேயாலவாயிலப்பனேயருள்செயாயே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

# திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

முளைத்தானை யெல்லார்க்கு முன்னேதோன்றி முதிருஞ் சடைமுடிமேன் முகிழ்வெண்டிங்கள், வளைத்தானை வல்லசுரர்புரங் கண்மூன்றும், வரைசிலையா வாசுகிமா நாணுக்கோத்துத், துளைத்தானைச் சுடுசரத்தாற் றுவளநீறாத், தூமுத்த வெண்முறுவ லுமையோடாடித், திளைத்தானைத் தென்கூடற் றிருவாலவாய்ச், சிவனடியே சிந்திக்கப் பெற்றேனானே. (க)

விண்ணுலகின் மேலார்கண் மேலான்றன்னை, மேலாடுபுரமூன்றும் பொடிசெய்தானைப், பண்ணிலவு பைம்பொழில்சூழ் பழனத்தானைப், பசும்பொன்னி னிறத்தானைப் பானீற்றானை. யுண்ணிலவு சடைக்கற்றைக் கங்கையானைக், கரந்துமையோ டேனுகியிருந்தான் றன்னைத், தெண்ணிலவு தென்கூடற் றிருவாலவாய்ச், சிவனடியே சிந்திக்கப் பெற்றேனானே. (உ)

நீர்த்திரளை நீள்சடைமே னிறைவித்தானை, நிலமருவி நீரோடக் கண்டான்றன்னைப், பாற்றிரளைப் பயின்றாட வல்லான்றன்னைப், பதைத்தெழுந்த வெங்கூற்றைப் பாய்ந்தான்றன்னைக், காற்றிரளாய் மேகத்தினுள்ளேநின்று, கடுங்குரலா யிடிப்பானைக் கண்ணார்நெற்றித், தீத்திரளைத் தென்கூடற் றிருவாலவாய்ச், சிவனடியே சிந்திக்கப் பெற்றேனானே. (ந)

வானமிதுவெல்லா முடையான்றன்னை, வரியரவக் கச்சானை வன்பேய்சூழக், கானமதினடமாட வல்லான்றன்னைக், கடைக்கண்ணான் மங்கையுமை நோக்காவென்மே, லூனமதுவெல்லாமொழித்தான்றன்னை, யுணர்வாகி யடியேன துள்ளேநின்ற, தேனமுதைத் தென்கூடற்றிருவாலவாய்ச், சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே.

ஊரானை யுலகேழாய் நின்றான்றன்னை, யொற்றைவெண் பிறையானை யுமையோடென்றும், பேரானைப் பிறர்க்கென்று மரியான்றன்னைப், பிணக்காட்டி னடமாடல் பேயோடென்று, மாரானையமரர்களுக் கமுதீந்தானை, யருமறையா னான்முகனுமாலும் போற்றுஞ், சீரானைத்தென்கூடற் றிருவாலவாய்ச், சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே. (ரு)

மூவனைமூர்த்தியைமூவாமேனியுடையானை, மூவுலகுந்தானேயெங்கும் பாவனைப்பாவ மறுப்பான்றன்னைப், படியெழுதலாகாதம

ங்கையோடு, மேவனை விண்ணோர்நடுங்கக்கண்டு,விரிகடலினஞ்சுண்டமுதமீந்த, தேவனைத்தென்கூடற்றிருவாலவாய்ச், சிவனடியேசிந்திக்கப்பெற்றேனனே. (சு)

துறந்தார்க்குத்தூநெறியாய் நின்றான் றன்னைத், துன்பந்துடைத்தாளவல்லான்றன்னை, யிறந்தார்களென்பே யணிந்தான்றன்னை, யெல்வினடமாடவல்லான்றன்னை, மறந்தார்மதின்மூன்று மாய்த்தான்றன்னை, மற்றொருபற்றில்லாவடியேற்கென்றுஞ், சிறந்தானைத்தென்கூடற்றிருவாலவாய்ச், சிவனடியேசிந்திக்கப்பெற்றேனனே.

வாயானைமனத்தானைமனத்துணின்ற, கருத்தானைக்கருத்தறிந்துமுடிப்பான்றன்னைத், தூயானைத்தூவெள்ளை யேற்றான்றன்னைச், சுடர்த்திங்கட் சடையானைத் தொடர்ந்துநின்ற, தாயானைத்தவமாய தன்மையானைத், தலையாயதேவாதி தேவர்க்கென்றுஞ், சேயானைத் தென்கூடற்றிருவாலவாய்ச், சிவனடியேசிந்திக்கப்பெற்றேனனே. (அ)

பகைச்சுடராய்ப்பாவ மறுப்பான்றன்னைப், பழியிலியாய்நஞ்சமுண்டமிர்தீந்தானை, வகைச்சுடராய்வல்லசுரர்புரமட்டானை, வளைவிலியா யெல்லார்க்குமருள்செய்வானை,மிகைச்சுடரை விண்ணவர்கண்மேலப்பாலை, மேலாயதேவாதிதேவர்க்கென்றுந், திகைச்சுடரைத்தென்கூடற் றிருவாலவாய்ச், சிவனடியே சிந்திக்கப்பெற்றேனனே. (கூ)

மலையானைமாமேருமன்னினானை, வளர்புன்சடையானைவானோர்தங்க, டலையானையென் றலையினுச்சியென்றுந், தாபித்திருந்தானைத்தானேயெங்குந், துலையாகவொருவரையு மில்லாதானைத், தோன்றாதார் மதின்மூன்றுந் துவளவெய்த, சிலையானைத்தென்கூடற்றிருவாலவாய்ச், சிவனடியேசிந்திக்கப்பெற்றேனனே. (க0)

தூர்த்தனைத்தோண்முடிபத் திறுத்தான்றன்னைத், தொன்னரம்பினின்னிசை கேட்டருள்செய்தானைப், பார்த்தனைப்பணிகண்டுபரிந்தான்றன்னைப், பரிந்தவற்குப் பாசுபதமீந்தான்றன்னை, யாத்தனையடியேனுக் கன்பன்றன்னை, யளவிலாப்பல்லூழிகண்டுநின்ற, தீர்த்தனைத்தென்கூடற்றிருவாலவாய்ச், சிவனடியே சிந்திக்கப்பெற்றேனனே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருவாலவாய்த் திருப்புகழ்.

தனத்த தாத்தன தனதன தனதன
தனத்த தாத்தன தனதன தனதன
தனத்த தாத்தன தனதன தனதன-தனதனத்தனதான.

பழிப்பர் வாழ்த்துவர் சிலசில பெயர்தமை
யொருத்தர் வாய்ச்சுரு ளொருவர்கை யுதவுவர்
பணத்தைநோக்குவர் பிணமது தழுவுவ—ளவளப் பதனாலே

படுக்கை வீட்டினு ளழுதழு தணைவர்பின்
னணைப்பர் கார்த்திகை வருகென வுறுபொருள்
பறிப்பர் மாத்தையி லொருவிசைவருகென-வவரவர்க்குறவாயே

யழைப்ப ராஸ்திகள் கருதுவ ரொருவரை
முடிக்கி யோட்டுவ ரிழிகுடி யரிவைய
ரலட்டி னாற்புணர் மயலெனு நரகமு—மிடையிடைப்புகநாளு

மவத்த மாய்ச்சில படுகுழி தனில்விழும்
விபத்தை நீக்கியுன் னடியவ ருடனெனை [யே
யமர்த்தி யாட்கொள மனதினி லருள்செய்து-கதிதனைத் தருவா

தழைத்த சாத்திர மறைபொரு ளறிவுள
குருக்கள் போற்செயல் தவநெறி யடைவொடு [ளே
தகப்ப னார்க்கொரு செவிதனி லுரைசெய்த—முருகவிக்ரமவே

சமத்தி னாற்புகழ் சனகியை நலிவுசெய்
திருட்டி ராக்கத னுடலது துணிசெய்து
திருத்த யோத்தியில் வருபவ னரிதிரு—மருமகக் கனகோவே

செழித்த வேற்றனை யசுரர்க ளுடலது
பிளக்க வோச்சிய பிறகம ரர்கள்பதி
செலுத்தி யீட்டிய சுரர்பதி மகடனை—மணமதுற் றிடுவோனே

திறத்தி னாற்பல சமணரை யெதிரெதிர்
கழுக்க ளேற்றிய புதுமையை யினிதொடு
திருத்த மாய்ப்புகழ் மதுரையிலுறைதரு-மறுமுகப் பெருமாளே.

தானதனதத்த தானதனதத்த தானதனதத்த—தனதான.

ஆனைமுகவற்கு நேரிளையசுத்த
வாறுமுகமுற்ற வழகோனே
ஆதியரனுக்கும் வேதமுதலுக்கு
மாரணமுரைத்த வடிவேலா
தானவர்குலத்தை வேல்கொடுதுணித்த
சாரசதுர்மிக்க திரடோளா
தாளிணைவழுத்த மேவினர்மனத்தில்
தாழ்வுகெடநித்த மருள்வோனே
வானெழுபுவிக்கு மாலுமயனுக்கும்
யாவரொருவற்கு மறியாத
மாமதுரையுற்று வாழுமொருசொக்கர்
வாமமயில்பெற்ற குமரேசா
தேனெழுபுனத்தில் மான்விழிகுறத்தி
சேரமகிழ்வுற்ற திறன்மார்பா
தேவர்கள்கருத்தில் மேவியபயத்தை
தீரவிடுவித்த பெருமாளே.

---

தனனதன தானதத்த தனனதன தானதத்த
தனனதன தானதத்த—தனதான.

நடையுடையி லேயரிக்கி
நெடியதெரு வீதிபுக்கு
நடனமிடு மாதரைப்போல் வருவாரை
நணுகிமய லேவிளைத்து
முலையைவிலை கூறிவிற்று
நயனமுட னேபசப்பி யுறவாடி
வடிவுதிகழ் வீடுபுக்கு
மலரணையின் மீதிருத்தி
மதன * னுடை காவியத்தை யடைவாக
மருவியுள மேயுருக்கி
நிதியுளதே லாம்பறிக்கும்
வனிதையர்க ளாசைபற்றி யுழல்வேனோ

---

* உடையஎன்னும் குறிப்புபெயரெச்சத்தின் அகரஈறு தொக்கி நின்றது கடைக்குறை.

